த.பா.நி. (க.வெ.) வரிசை எண்—341

# ஆசிய நாடுகளின் அரசாங்கங்கள்

(பட்டப்படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

ஆசிரியர்
**சோ. சுப்பிரமணியன், எம்.ஏ.,**
அரசியல்துறை இணைப் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி
சென்னை






தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—July, 1972

T.N.T.B.S. (C.P.) No. 341



ASIAN GOVERNMENTS

S. SUBRAMANIAN

Price Rs. 8-85

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of Books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Dept. of Culture), New Delhi.'

Printed by:
M/s. Pahalavan Publications Private Limited,
438, Poonamallee High Road,
Madras-10.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி — உள்ளாட்சித் துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்களை அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப்படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **'ஆசிய நாடுகளின் அரசாங்கங்கள்'** என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **341**ஆவது வெளியீடாகும். இதுவரை **376** நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்

## பகுதி 1—பொது அம்சங்கள்



## பகுதி 2—இந்திய அரசாங்கம்



## பகுதி 3—ஜப்பானிய அரசாங்கம்

பக்கம்

## பகுதி 4—சீன அரசாங்கம்



## பகுதி 5—பிலிப்பைன் அரசாங்கம்



## பகுதி 6—மலேசிய அரசாங்கம்

# 1. முன்னுரை

'ஆசிய அரசாங்கங்கள்' என்னும் இந் நூலில் ஆசிய நாடுகள் அனைத்தையும் பற்றிய செய்திகள் இடம் பெற்றிருக்கக் கூடும் என்று எதிர்பார்ப்பதில் வியப்பில்லை. ஆனால், இந் நூலில் இந்தியா, சீனா, ஜப்பான், மலேசியா, பிலிப்பைன்ஸ் ஆகிய ஐந்து நாடுகளே இடம்பெற்றுள்ளன. இவற்றின் அரசியலமைப்பும், அரசாங்கங்களும் எவ்வாறு இயங்கி வருகின்றன என்பதோடு மட்டுமன்றி, இந் நாட்டுக் குடிமக்களின் அரசியலறிவு, சமூக, பொருளாதார முன்னேற்றம் ஆகியவை பற்றியும் இயன்ற அளவு எடுத்துரைக்க முயற்சி செய்யப்பட்டிருக்கிறது.

'ஆசியாவைப் பலர் பலவிதங்களில் புரிந்துகொள்கின்றனர்—சிலருக்கு இது ஒரு சாதாரண பூகோள அமைப்பாகவும், உலகிலுள்ள கண்டங்களில் மிகப்பெரியதாகவும் மற்றவைகளைவிட அதிகமான மக்கட்தொகை உடையதாகவும் விளங்குகிறது. அதாவது, இக்கண்டம் 17 மிலியன் சதுர மைல்கள் பரப்பளவும், உலக மக்கள் தொகையாகிய 3561 மிலியனில் 2009 மிலியன் மக்களையும், மொத்த நிலப்பரப்பில் மூன்றில் ஒரு பகுதியையும் கொண்டுள்ளதாக விளங்குகிறது. இன்னும் சிலருக்கு இக்கண்டம் பல சமயங்களின் பிறப்பிடமாகவும், பல இனத்தையும், நிறத்தையும் சார்ந்த மக்கள் வாழுமிடமாகவும் இருக்கிறது. கிறித்துவம், இஸ்லாம், இந்து, புத்தம், கன்பூசியன் ஆகிய பெருஞ்சமயங்கள் தோன்றிய கண்டம் ஆசியா. ஆரியர்கள், திராவிடர்கள், மங்கோலியர்கள், நீக்ரோக்கள் போன்ற இனத்தவரும்,[1] வெள்ளை, கறுப்பு, பழுப்பு, மஞ்சள் நிறமுடைய மக்களும் வாழுமிடம் ஆசியா.[2]

---

[1] United Nations Statistical Year Book, 1970.

[2] The New States Of Asia—A Political Analysis by Michael Brecher. Introduction–P. F.

இக்கண்டத்தில் சோவியத் யூனியன், சீனு, அரேபியா, ஈரான், இராக், பாரசீகம், ஆப்கானிஸ்தானம், இந்தியா, பாகிஸ்தான், பர்மா, மலேசியா, இந்தோனேசியா, இலங்கை, சிங்கப்பூர், தென் வட வியட்நாம், இலாவோஸ், பிலிப்பைன்ஸ் போன்ற பல நாடுகள் இருக்கின்றன. இங்கு செல்வச் சிறப்பும் உண்டு; வறுமையின் வாட்டமும் உண்டு. பல்வகைப் பட்ட பண்பாடும், பழக்கவழக்கங்களுமுடைய மக்கள் வாழ் கின்றனர். இயற்கையமைப்பும், தட்பவெட்ப நிலைகளும் எங்கும் ஒரேவிதமாயல்லாது வெவ்வேருகக் காணப்படுகிறது. இவைகளையும், ஏனையவற்றையும் இங்கு விவரிப்பதெனின் மிக நீளும். ஒன்றை மட்டும் நாம் இங்கு வற்புறுத்திக் கூற லாம்—ஆசியா ஒரு பரந்து விரிந்த கண்டம்; இது உலகின் தொன்மையான பகுதிகளுக்கிணையானது; இங்கு மூத்த குடி மக்கள் வாழ்ந்திருந்தார்கள்; அரசாங்கம் ஏற்படுத்தி ஆட்சி செய்திருக்கிருர்கள்; பல சிறப்புகளோடு திகழ்ந்திருக்கிருர் கள்; ஆனுல், காலப் போக்கில் இவர்களில் பலர் இதர நாட்டினருக்கு அடிமைப்பட்டு அல்லலடைந்திருக்கிருர்கள்; பிறகு விழிப்புற்று, எழுச்சியுடன் போராடி உரிமை பெற்று உயர் வாழ்வு வாழ விரும்பி உழைக்கிருர்கள்.

இத்தகைய ஆசியநாடுகள் இருபதாம் நூற்ருண்டின் மையக்காலம் வரையிலும், அதாவது 1945ஆம் ஆண்டு வரை, இதர கண்டங்களிலுள்ள நாடுகளுக்குச் சமமாகக் கருதப் படாமலிருந்து வந்தன. இதற்குக் காரணங்கள் பல. அவற்றில் சிலவற்றை இங்கு காண்போம். பெரும்பாலான ஆசியநாடு கள், ஐரோப்பிய அல்லது அமெரிக்க அரசுகளின் குடியேற்ற நாடுகளாக இருந்தன. பொருளாதார, அரசியல் துறைகளில் தங்களுக்கெனக் குறிக்கோள்களை வகுத்துக் கொள்ளவோ அல்லது அவைகளை அடைய முடியாமலோ இருந்தன. இரண்டாவதாக, இந்நாடுகளின் பண்பாடுகள் பலவாகவும், ஐரோப்பிய நாடுகளின் பண்பாடுகட்கு ஒவ்வாதவைகளாகவும் இருந்து வந்தன. தெற்கு, கிழக்கு ஆசிய நாடுகளின் சமயங் கள் மேற்கத்திய சிந்தனைக்கும் அனுபவத்திற்கும் பொருந் தாதவைகளாக இருந்தன. மூன்ருவதாக இந்த நாடுகளின் மொழிகள் மேலை நாட்டாருக்கு அவசியமற்றவைகளாகவும், எளிதில் கற்றறிய முடியாதபடியும் இருந்தன. மேலும் இப்பகுதி மக்களின் பழக்க வழக்கங்கள் மேலை நாட்டவரின் வாழ்க்கை முறைகளுக்கு முரண்பாடாக அமைந்தன. இறுதி யாக, இப்பகுதி நாடுகளுக்கும் இதர நாடுகளுக்கும் தொடர்புச்

சாதனங்கள் தேவையான அளவு இல்லாமலிருந்ததையும் ஒரு காரணமாகச் சொல்லலாம்,

அரசியல் கொள்கையின் அடிப்படையிலும், நடைமுறை அரசியலின் அடிப்படையிலும் குடியேற்ற நாடுகளாயிருந்து, ஐரோப்பிய நாடுகட்குத் தேவையான வாழ்க்கை வளங்களை வழங்கும் நாடுகள்தாம் என்ற இந்த நிலை ஏற்கெனவே கூறியதுபோல் இந்த நூற்றுண்டின் மையம் வரை நீடித்தது. ஆனல், ஆசியாவைப் பற்றிய உணர்வு இரண்டாம் உலகப் பெரும் போருக்குப் பிறகு பல நிகழ்ச்சிகள் காரணமாக ஏற்பட்டு, விரைவாக வளர்ந்தது. இன்று ஆசிய நாடுகள் எண்ணிக்கை உலக அரங்கில் பன்மடங்காகிவிட்டது. இந் நாடுகளின் நடப்பு, உணர்வு, முன்னேற்றம் ஆகியவை இதர நாடுகளின் இயக்கத்தோடு பிணைக்கப்பட்டிருப்பதால் இவை களின் சிந்தனை, செயல், இவற்றின் விளைவுகள் அந்நாடுகளால் கூர்ந்து நோக்கப்படுகின்ற அளவுக்கு வளர்ந்து சிறப்பிடம் பெற்றிருக்கின்றன.

ஆசிய நாடுகளின் அரசியல், வரலாறு இப்போது இதர நாடுகளால் உன்னிப்பாக கவனிக்கப்பட்டு விமர்சிக்கப் படுகின்றன. இதற்கு முக்கிய காரணம் இந்நாடுகளின் அரசியலமைப்பும், அரசாங்கமும், அறிவாற்றலும் ஆகும் எனலாம். ஆசியா இல்லாமல் பன்னாட்டு அரசியல் இல்லை என்ற அளவிற்கு ஆசியா இப்போது முன்னேறி வருகிறது. இத்தகைய ஆசியாவில் 1939-க்கு முன்பு நான்கே நான்கு நாடு கள் தாம் இறைமை அதிகாரம் பெற்ற முழு உரிமை நாடு களாக இருந்தன. இந்நான்கில் ஆப்கானிஸ்தானமும், தாய்லாந்தும் சக்தி வாய்ந்த பேரரசுகளுக்கிடையிலுள்ள நாடுகளாக இருந்ததால் தங்கள் அரசியல் சுதந்திரத்தை முழுவதும் அனுபவிக்க முடியாதவைகளாக இருந்தன. மூன்ருவதான சீனமோ அயல்நாடுகளின் தாக்குதல்களாலும், உள்நாட்டுக் குழப்பத்தாலும் ஒற்றுமைக்காகப் போராடி வந்தது. நான்காவதான ஜப்பான் நாடு ஒன்றுதான் உண்மையான உரிமை பெற்ற நாடாக தனிச்சிறப்பு பெற் றிருந்தது. இந்நிலை இரண்டாம் உலகப் பெரும் போருக்குப் பிறகு புரட்சிகரமான மாறுதலையடைந்தது.

பிலிப்பைன்சு 1946-லும், உலகின் மிகப் பெரிய குடியாட்சி யாகத் திகழும் இந்தியா 1947-லும், பாகிஸ்தானம் 1947-லும், இலங்கை, பர்மா 1948-லும், இந்தோனேசியா 1949-லும்,

இந்தோ சீன நாடுகள் 1954-லும், சுதந்திரம் பெற்றன. மலேசியா 1957-ல் உரிமை பெற்றது. இதர தென் கிழக்கு பகுதிகளில் இருந்த நாடுகள் 1963ஆம் ஆண்டுக்குள் சுதந்திரம் பெற்ற தனித்தனி நாடுகளாகவோ அல்லது இதர சுதந்திர நாடுகளோடு இணைக்கப்பட்டோ சுதந்திரம் பெற்றன. இவ்வாறு ஆசிய நாடுகள் குடியேற்ற நாடுகளெனும் நிலையினின்று விடுபட்டன எனலாம். அடுத்த அத்தியாயத்தில் இந்நாடுகளுக்குப் பொதுவான சில அரசியலமைப்பு பற்றிய குறிப்புகளைக் காணலாம்.

# 2. ஆசிய அரசியலமைப்புகளின் குறிப்புகள்

இந்தியா, இந்தோனேசியா, பர்மா, பாகிஸ்தானம், மலேசியா ஆகிய ஆசிய நாடுகளின் அரசியலமைப்புகளில் சில பொது அம்சங்கள் இருக்கின்றன. அவ்வம்சங்களை இப்போது காணலாம்.

மேற்கூறப்பட்ட நாடுகளெல்லாம் இரண்டாம் உலகப் பெரும் போருக்குப் பிறகு சுதந்திரமடைந்தவை. இவைகளினுடைய அரசியலமைப்புகள் மேலை நாடுகளின் மக்களாட்சி அரசியலமைப்புகளை ஒத்தவை. எனினும் ஒரு சில அரசியலமைப்புகள் அந்நாடுகளின் மரபுகளுக்கேற்பவும் அமைக்கப் பட்டிருக்கின்றன. சான்றாக குறிக்கோள், சமயச்சார்பு முதலிய அம்சங்களில் அவ்வரசியலமைப்புக்கள் சுயதன்மையுடையவைகளாக இருக்கின்றன. ஆனால், அந்நாடுகள் சிலவற்றில் குறிப்பாக, பாகிஸ்தானம், இந்தோனேசியா, பர்மா ஆகியவற்றில் மக்களாட்சி முறை இப்போது பின்பற்றப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதைப்பற்றி அறிஞர்கள் பல கருத்துகளைக் கூறுகின்றனர்கள். சிலர் புதியனவற்றைப் படைக்கும் அறிவு இல்லாமையால் இங்கிலாந்து நாட்டு அல்லது அமெரிக்க, அயர்லாந்து, பிரான்ஸ் நாட்டு அரசியலமைப்பு முறைகளை இந்நாடுகள் பின்பற்றுகின்றன என்கின்றனர். இதை ஆதரிப்பதுபோல சர் ஐவர் ஜென்னிங்ஸ் என்பார் 'காமன்வெல்திலுள்ள ஆசிய நாடு எதுவும் சிலகாலம் வரையிலும் புதிய அரசியல் முறையை உருவாக்குவதற்கில்லை. இந்நாடுகளினுடைய திறமை அதிகமானதாக இருப்பினும் தற்போது அவைகள் புதியனவற்றை எந்தத் துறையிலும் ஏற்படுத்தவல்ல திறமையற்றவைகளாக இருக்

இன்றன'[1] என்று கூறுகிறார். இந்தோனேசியா பாகிஸ்தானம், பர்மா போன்ற நாடுகளில் பாராளுமன்றமுறை அரசாங்கம் கைவிடப்பட்டுவிட்டது. இவ்வாறு மேற்கத்திய வகை அரசியலமைப்புகளை பல ஆசிய நாடுகள் ஏற்றுக்கொண்டிருப்பதையும், இங்கிலாந்து, அமெரிக்கா, அயர்லாந்து, பிரான்சு, ஆஸ்திரேலிய வழக்குகள் பெரும்பாலானவற்றை அந்நாடுகள் ஏற்றுக் கொண்டிருப்பதையும் அவைகளுக்குப் புதியனவற்றைக் காணும் திறன் இல்லாமைக்கு ஆதாரமாகக் கருதுகின்றனர்.

மேலை நாடுகளிலும் பெரும்பாலானவை அரசியலமைப்புத் துறையில் புதியனவற்றைப் படைக்குந்திறன் அற்றவைகளாய் அமைச்சரவைமுறை அல்லது தலைவர்முறை என்றே மாறுதல்களை ஏற்படுத்திக் கொள்கின்றன. சில சமயங்களில் டிகால் பிரான்சைப்போல இவை இரண்டையும் கொண்ட அரசியலமைப்பு முறையையும் பின்பற்றுகின்றன. இத்துறையில் அமெரிக்கக் கூட்டாட்சி முறைதான் உண்மையான புதிய முறையாகத் தோன்றுகிறது. இதுவும் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்டதேயாம். அதற்குப் பிறகு பிறிதெதுவுமில்லை. இங்ஙனமே ஆசிய நாடுகளும் தங்கள் அரசியலமைப்புகளை வகுத்துக் கொண்டிருக்கின்றன எனலாம்.

மேலை நாட்டுமுறை அரசியலமைப்புகள் பின்பற்றப்படுவதற்கு வேறு காரணங்களும் இருக்கின்றன. அக்காரணங்களை ஜென்னிங்ஸ் என்பவர் விளக்கிக் கூறியிருக்கின்றார். இந்நாடுகளைச் சேர்ந்த அரசியலமைப்பு பிதாக்களில் பலர் மேலை நாடுகளில் கல்வி பயின்றவர்கள். அல்லாமலும் தேசிய அல்லது புரட்சி இயக்கங்கள் இயல்பாகவே அரசியலமைப்பைப்பற்றித் திட்டவட்டமாகச் சிந்திக்கவும், இயற்றவும் முடியாதவைகளாக இருந்தன. உதாரணமாக அவைகள் சில கூக்குரல்களை—உதாரணமாக 'ஆதார உரிமைகள்', 'அரசு வழிகாட்டு விதிகள்' போன்ற பரந்த அடிப்படைக் கொள்கைகளையே தரவல்லவையாகி இருந்தன. ஆனால், கண்கூடான முறையில் அரசியலமைப்பை வகுக்குந்திறன் பெற்றிருந்தவர்களில் மிகப் பெரும்பாலோர் மேற்கத்திய முறையோடு நெருங்கிய தொடர்புடையவர்களாக இருந்தனர். மேலும் பூரண சுதந்திரம் பெறுவதற்கு முன்பு இந்நாடுகளில்

[1] Jennings The Common Wealth in Asia, page 57.

தன்னாட்சி' அடிப்படையுடன் கூடிய அமைப்புகள் இருந்தன. இவை மேலைநாட்டு முறையைப் பின்பற்றியவை. உதாரண மாக 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தைக் கூறலாம்.

மேலும், மேலை நாடுகளின் சாதனைகளைப் போற்றி அவை களைப் பின்பற்ற வேண்டுமென்ற எண்ணமும் இவர்களிடம் இருந்தது. ஆனால், அதே நேரத்தில் மேலை நாட்டு அமைப்பு கள் இந்நாடுகளுக்குப் பொருந்தா என்று கூறும் வழக்கம் மேலை நாட்டினரிடையே இருந்து வந்தது. இதற்குச் சான்று கூறுவது போல இந்தோனேசியாவில் கட்சிச் சார்புடைய மேலைநாட்டு அரசாங்க முறையினின்றும் மாறுபட்ட, அதே சமயத்தில் பலவகைப்பட்டோரையும் ஈர்த்து பிணைக்கக் கூடிய அரசாங்க முறையாக டாக்டர் சுகர்ணோவால் ஏற் படுத்தப்பட்ட முறை அமைந்ததெனலாம்.

அரசியலமைப்பு என்பது ஓர் அரசில் வாழும் மக்கள் தாங்கள் எவ்வகையான அரசியல் அதிகார முறைமைக்கு உட்படுகிறார்கள் என்பதைத் தெரிவிக்கும் சட்டங்களின் தொகுப்பு ஆகும். இச்சட்டத் தொகுப்பு மக்களின் உரிமை கள் பற்றியும் அரசாங்கத்தின் அதிகாரங்கள் பற்றியும் முறை யாக விளக்குகிறது. அரசாங்கம் மக்களிடமிருந்து பெற்ற அதிகாரங்களைத் தவறான முறையில் பயன்படுத்தி, மக்களின் உரிமைகளைப் பறிக்க முற்படலாம். இதைத் தவிர்க்கவும் வேண்டி மக்களுக்குப் பலவிதமான பாதுகாப்புகளையும் அரசிய லமைப்பு கொடுக்கின்றது.

இவ்விடத்தில் அரசியலமைப்பைப்பற்றி இதற்கு முன் நிலவிய கருத்தையும் கவனிக்க வேண்டும். அதாவது அரசிய லமைப்பென்பது எந்த மக்களுக்காக எழுதப்பட்டதோ அந்த மக்களின் வாழ்க்கைத் திட்டத்தையும், அத்திட்டத்தின் கீழ் ஒற்றுமையாக அவர்கள் வாழ்வதையும் குறிக்கும் திட்டம் என்பதாகும் அக்கருத்து. இதுவே கிரேக்கர்களின் கருத்து மாகும். 'குறிப்பிட்ட ஒரு நோக்கத்தையடையச் செய்யும் முயற்சியே வாழ்க்கையென்பது. ஆனால், அந்நோக்கத்தை யடைய சமூகம் நன்கமைக்கப்பட்டிருக்க வேண்டும் தூண்டப் படவேண்டும்.'

ஆசிய அரசியலமைப்புத் திட்ட ஆக்கத்தில் இக்கருத்து பிரதிபலிக்கிறது. உதாரணமாக இந்தோனேசிய, பாகிஸ்

தானிய அரசியலமைப்புகளைக் கூறலாம். பாகிஸ்தான் அரசியலமைப்பில் இஸ்லாமிய அரசு என்னும் தத்துவம் ஆதாரமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. இத்தகைய ஆர்வம் இதர அரசியலமைப்புகளிலும் காணப்படுகிறது. ஒரு முறையில் இந்திய அரசியலமைப்புகூட ஒழுக்கத்திற்கு வழி காட்டியாக விளங்கும் விதிகளால் ஆனதெனலாம். உதாரண மாக அரசியலமைப்பின் நான்காவது பகுதியில் அரசு நெறி செய்க் கொள்கைகள் என்ற தலைப்பின் கீழ் இந்திய அரசு பின்பற்ற வேண்டிய சமுதாய, பொருளாதாரக் கொள்கைகள் விளக்கப்பட்டுள்ளன. இதிலுள்ள இடர்பாடு யாதெனில், அக்கருத்துகளை உருப்படியான அரசியலமைப்புப் பிரேரணை களாக நடைமுறைக்குக் கொண்டு வருவதேயாகும்.

# 3. கொள்கைகளும் நடப்பும்

இவ்வத்தியாயத்தில் மேலை நாட்டு மக்களாட்சிக் கொள்கைகள் ஆசிய நாடுகளின் அரசியலமைப்புகளில் எந்த அளவிற்குப் பின்பற்றப்பட்டிருக்கின்றன என்பதையும் எந்த அளவிற்குப் புதுமை கையாளப்பட்டிருக்கிறதென்பதையும் விவரிக்கக் காணலாம்.

**அமைச்சரவை—தலைவர் முறை அரசாங்கம்**

சாதாரணமாக ஆசிய நாடுகள் பலவற்றிலும் தலைவர் முறை அரசாங்கத்திற்குப் பதிலாக அமைச்சரவை அரசாங்க முறையே பின்பற்றப்படுகிறதெனலாம். இம்முறை அரசாங்கத்தில் நாட்டுத்தலைவர் சட்டப்பூர்வமான தலைவராகக் கருதப்படுகிறார். அவர் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடைய அமைச்சர்கள் ஆலோசனையின் பேரில் பணியாற்றுகிறார். குடியரசுகளில் அவர் பெரும்பாலும் பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். கூட்டாட்சி அரசுகளில் மாநில சட்டமன்றங்களும் தலைவரைத் தேர்வு செய்வதில் பங்கு கொள்கின்றன.

மலேசியா கூட்டாட்சியின் தலைவர் ராஜ்யங்களின் தலைவர்களான அரசர்களில் ஒருவராவார். அவர் மற்றவர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இம்முறை பெரும்பாலும் இங்கிலாந்து நாட்டு வழக்கத்திற்கியல்பானதெனினும் நாட்டுத் தலைவரின் பணி அந்தந்த நாட்டின் மரபையொட்டியே அமைந்திருக்கிறதெனலாம்.

இந்திய அரசியலமைப்பில் நியாயமாக எதிர்பார்க்கத்தக்க ஒவ்வொரு பிரச்சினைக்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதென்று தோன்றினும் குடியரசு தலைவரது பணி மரபடிப்

படையில்தான் தீர்மானிக்கப்பட வேண்டியிருக்கிறது. நிர்வாக அதிகாரம் குடியரசு தலைவரிடமும் பிரதம மந்திரியிடமும், 'உதவியும் ஆலோசனையும்' அளிக்கும் அமைச்சரவைக் குழுவிடமும் அளிக்கப்பட்டிருக்கிறது. குடியரசு தலைவர் பிரதமரின் ஆலோசனையின் பேரில் இதர அமைச்சர்களை நியமனம் செய்ய வேண்டுமென்றாலும், அவருடைய உசித அதிகாரம் பற்றி (discretionary power) ஒன்றும் சொல்லப்படவில்லை. ஒரு சில அரசியலமைப்புகள் தலைவருக்கு இவ்வதிகாரத்தை வெளிப்படையாக வழங்குகின்றன. வேறு சில மறுக்கின்றன. சான்றாக 1956ஆம் ஆண்டு பாகிஸ்தான் அரசியலமைப்பு குடியரசுத் தலைவரே பிரதமரைத் தன் உசிதப்படி நியமனம் செய்கிறார் என்றும், பர்மிய அரசியலமைப்பு பிரதிநிதிகள் மன்றத்தால் (Chamber of Deputies) அமர்த்தப்படுகிறார் என்றும் குறிப்பிட்டன. ஆனால், இவ்விரு விதிகளடிப்படையிலும் பாராளுமன்றத்தில் எந்தவொரு கட்சிக்கும் பெரும்பான்மை இல்லாதபோது, குடியரசுத் தலைவர் தன் உசிதம் போல் நடப்பதற்கு வழியிருக்கிறது. இதேபோல பாராளுமன்றத்தைக் கலைப்பதிலும் உசிதம் போல் நடக்க பர்மாவில் வழி இருக்கிறது. பெரும்பாலான அரசியலமைப்புகளில் பாராளுமன்றத்தைக் கலைப்பதற்கான ஜனாதிபதியின் அதிகாரம் நிபந்தனையற்றதாகும். இந்தியாவிலுள்ளது போல ஜனாதிபதிக்கு 'நெருக்கடி கால அதிகாரங்களும்' (Emergency Powers) தரப்படலாம்.

கைவிடப்பட்டுவிட்ட 1950ஆம் ஆண்டின் இந்தோனேசிய அரசியலமைப்பிலும், 1956ஆம் ஆண்டின் பாகிஸ்தான் அரசியலமைப்பிலும் குடியரசுத் தலைவர் சட்டப்பூர்வமான தலைவர் என்பதும் மிஞ்சிய ஓரளவிற்கு மாறுபட்ட பணியை தலைவருக்குத் தந்திருப்பதாகவும் தோன்றுகிறது. இந்தோனேசியாவில் அரசாங்கத்தின் எல்லாக் கொள்கைகளுக்கும் அமைச்சர்கள் பொறுப்புடையவர்களென்றாலும், பாராளுமன்றத்தைக் கலைக்கும் உரிமை ஜனாதிபதிக்கே தரப்பட்டிருக்கிறது. சட்டமியற்றலில் சுகர்ணோ தலைவராக இருந்தபோது சொந்த முறை தடுப்பாணை (Veto) உண்டு என்று கூறி அவ்வாறு செய்ததோடல்லாது இராணுவத்துறைக்கான நியமனங்களில் ராணுவ மந்திரியை மீறி நடக்கும் உரிமையும் உண்டெனக் கூறிவந்தார். அமெரிக்க ஜனாதிபதி போன்று பாகிஸ்தான் ஜனாதிபதிக்கு மறுப்பாணை இருந்தது. உதாரணமாக ஜனாதிபதி மறுப்பாணையைப் பயன்படுத்தி விடுவாரானால் அதை உடைக்க தேசிய அசெம்பிளி மூன்றிலிரு பங்கு பெரும்

பான்மையோடு மீண்டும் மசோதாவை இயற்ற வேண்டும். இது முரண்டு செய்யும் சட்டசபையினின்றும் அமைச்சரவை யைக் காப்பாற்றும் சாதனமாக ஏற்படுத்தப்பட்டதென்று தோன்றுகிறது. ஆனால், சாதாரணமாக அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் நடக்கவேண்டுமென்றே எதிர்பார்க்கப் பட்டது.

எனினும் ஜனாதிபதி முக்கியமான பணியாற்ற வேண்டு மென்பதை பாகிஸ்தானின் கடந்த கால வரலாறு உணர்த்து கிறது. இந்நாடு சுதந்திரம் பெற்றது முதலாக 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டப்படி இயங்கி வந்திருக்கிற தென்பதோடு சாதாரணமான அமைச்சரவை அரசாங்க மரபுகள் வேறூன்ற உதவவில்லையென்றும் குறிப்பிட வேண்டும். முதலாவது கவர்னர் ஜெனரலான டாக்டர் ஜின்னு சம்பிரதாயப் பூர்வமான தலைவரல்ல என்பது தெளிவு. அவருக்குப் பிறகு வந்தவர்கள் அவர்களுடைய அதிகாரங்களைப் பரவலாகப் பயன்படுத்தி பிரதம மந்திரிகளைப் பதவி நீக்கம் செய்ததோடன்றி அரசியல் நிர்ணய சபையையும் (1954) கூடக் கலைத்தார்கள். இச்செயல் அந்நாட்டு உச்ச நீதிமன்றத் தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. எனவே, ஜெனரல் அயூப்கான் இறுதியாக தலைமைப் பதவியையேற்றது அசாதாரணமானதன்று. அப்பொழுது இஸ்லாமிய மரபு களுக்கு ஏற்ப பலம் மிக்க ஜனாதிபதியொருவர் இருக்கலாம் என்று குழுவொன்று சிபாரிசு செய்ததெனினும் அடிப்படைக் கொள்கைகள் குழு அதை ஏற்றுக் கொள்ளவில்லை.

பாராளுமன்றத்தில் எந்தக் கட்சிக்கும் பெரும்பான்மை யில்லாமல் பல கட்சிகள் இருக்கின்ற சூழ்நிலைகளில் அரசாங்கங்களை ஏற்படுத்துவதிலும் அவைகளுடன் கொள் கின்ற தொடர்பிலும் ஜனாதிபதிக்கு முக்கிய இடம் இருக்கிற தென்பது தெளிவாகும். இந்தியாவில் கூட குடியரசுத் தலைவர் பணித்த இடத்தில் கையெழுத்திடும் (Rubber Stamp) ஒரு தலைவரல்ல என்று டாக்டர் இராஜேந்திர பிரசாத் எதிர்த்து வந்தார். 1958ஆம் ஆண்டில் ஏற்பட்ட நெருக்கடி யின் போது இலங்கையின் கவர்னர் ஜெனரல் ஒரு முக்கிய புள்ளியாகச் செயலாற்றினர். இத்தகைய நிலை மீண்டும் அங்கு ஏற்படலாம். ஜனாதிபதி முறையரசாங்கம் ஆசிய நாடுகளுக்கு அமைச்சரவை அரசாங்க முறையைவிட பொருந்தக்கூடியது என்பதற்கு ஆதாரமான நல்ல அம்சங்கள் இருக்கிறதென சொல்லவியலாது. எங்கு போட்டிக் குழுக்கள் இருக்கின்

றனவோ, அங்கு ஒருகால் இம்முறை ஏற்படக்கூடும். இதற்கு உதாரணமாக, பர்மாவில் ஜனாதிபதிமுறை பின்பற்றப் படலாம் என்று சிபாரிசு செய்யப்பட்டதைக் கூறலாம். ஆனால், இது மேலெழுந்தவாரியாகச் சொல்லப்படுவது, ஜனாதிபதியின் ஆளுமைச் சிறப்பை அடிப்படையாகக் கொண்டு மட்டும் அம்முறையைக் கொண்டு வரமுடியாது. அப்படியானால் பிரதம மந்திரி பதவி வகிப்பவரும் சிறந்தவராக இருப்பாரானால் அமைச்சரவை முறையும் மேலானதேயாகும். எனவே, ஜனாதிபதி முறை ஏற்பட வேண்டுமானால் அதற் கேற்ப, தகுந்த மாறுதல்களும் ஏற்படவேண்டும். இத்தகைய மாறுதல்கள் பாகிஸ்தானில் ஏற்பட்டு வருகின்றனவென கருத இடமிருக்கிறது.

**கூட்டாட்சித் தத்துவம்**

ஆசிய அரசியலமைப்புகளில் இந்தியா, மலேசியா, பாகிஸ் தான் (1956) நாடுகளின் அரசியலமைப்புக்கள் கூட்டாட்சி அரசியலமைப்புக்களாகும். பர்மிய அரசியலமைப்பு கூட்டாட் சித் தன்மையை சற்றே உடையதாகவிருக்கிறது. இந்தோ னேசியாவில் சிறிது காலத்திற்கு கூட்டாட்சி இருந்த தெனினும் இப்போது அங்கு ஒருமுக அரசியலமைப்பே யுள்ளது. 1956ஆம் ஆண்டின் அரசியலமைப்பு அங்கு 'பிரதேசங்களுக்கு (Regions) இயன்றவரை தன்னாட்சி தர' உறுதியளித்ததெனினும் அவ்வாறு ஏற்படவில்லை.

இந்தியாவில் கூட்டாட்சி அதிகாரப் பங்கீடு 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். இச்சட்டம் அதிகாரப் பங்கீட்டை மிக விபரமாக எடுத்துக் கூறியதால் அரசியலமைப்பும் அவ்வாறே அதனை ஏற்படுத்துகிறது. ஆனால், அதே சமயத்தில் அரசிய லமைப்பில் மத்திய சார்பு அதிகாரங்கள் உள்ளன. அவற்றில் முக்கியமாகப் பொது அதிகாரப்பட்டியலிலுள்ளவற்றையும், பொருளாதார சமூகத் திட்டம், வர்த்தக, தொழில் ஏகபோக நிலைமைக் கம்பெனிகள், டிரஸ்டுகளையும் கூறலாம். மலேசியா விலும் தேசிய திட்டங்களின் நிறைவேற்றம், வியாபாரம், வர்த்தகம், தொழில், உழைப்பு போன்றவைகளையும் சமூக பாதுகாப்பையும் கூட்டாட்சி அதிகாரங்களாக மத்திய அரசாங்கம் பெற்றிருக்கிறது. மலேசியாவில் இராஜ்ய அரசு கள் ஒதுக்கப்பெற்ற சில வருவாய் இனங்களை பெற்றிருந் தாலும் வரிவிதிப்பதற்கு மத்திய அரசாங்கம் மட்டுமே அதி

காரம் பெற்றிருக்கிறது. இந்தியாவில் மத்திய அரசாங்கத்தினால் விவசாய வரி, சொத்து வரி, விற்பனை வரி, மது வரி, வருமான வரி போன்ற இன்னோரன்ன வரிகளில் ராஜ்யங்களுக்கு ஒரு பகுதி ஒதுக்கீடு செய்யப்படுவதோடு, இவற்றில் ராஜ்யங்களுக்கான பங்கு கிடைக்க விரிவான ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கின்றன. நடைமுறையில் இந்திய மத்திய அரசாங்கம் பண வருவாய்த் துறையில் மேலோங்கியிருக்கிறது. அது வெளி நாடுகளில் கடன் வாங்குவதில் ஏகபோக அதிகாரம் பெற்றிருக்கிறது. நாட்டினுள் பெறப்படும் கடன்களின் நிபந்தனைகளையும், காலவரையறையையும் கட்டுப்படுத்துகிறது. வரிகளில் இராஜ்யங்களுக்குக் கிடைக்க வேண்டிய பங்கு நிரந்தரமான ஏற்பாடாக இல்லாமல் ஜனாதிபதியால் அவ்வப்போது நியமிக்கப்படும் நிதிக்குழு (Finance Commission) வால் நிர்ணயிக்கப்படுகிறது. இறுதியாக, மத்திய அரசாங்கம் தன் விருப்பம் போல் மான்யங்களை (Grants in aid) வழங்கலாம். நிபந்தனைகளுக்குட்பட்டதும் குறிப்பானதுமான மான்யங்கள் வழங்கப்படுவது இப்போது மிக முக்கியமானதாக இருக்கிறது.

இந்திய அரசியலமைப்பும், மத்திய அரசாங்கத்திற்கு மிகப்பெரிய உசித அதிகாரத்தையும் நெருக்கடிகால அதிகாரங்களையும் வழங்குகிறது. இராஜ்யங்களிலும் மத்தியிலும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த அரசாங்கங்கள் இருந்தமையால் மொழியடிப்படையில் இராஜ்யங்களின் எல்லைகளை மாற்றியமைக்கும் இராஜ்யங்களின் சீரமைப்பு (States Reorganisation) போன்ற பெரும் மாறுதல்கள் எளிதில் சாத்தியமாயின. இந்தியாவில் யூனியன் அரசாங்கம் இராச்சிய அரசாங்கங்களுக்கு பாராளுமன்ற சட்டங்களுக்குகந்த முறையில் செயல்பட வேண்டுமென்று கட்டளைகளைப் பிறப்பிக்குமளவிற்கு அதிகாரம் பெற்றிருப்பதாலும் இந்திய ஆட்சித்துறைப் பணியைச் சேர்ந்த அலுவலர்கள் இராச்சியங்களில் பெரும்பாலானவர்களாக இருப்பதாலும் 'இந்தியா கூட்டாட்சி அரசு' என்பது தயக்கத்துடன் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டியதாக இருக்கிறது.

மேற்கூறப்பட்டவைகளிலிருந்து கூட்டாட்சி ஆசிய நாடுகளைப் பொருத்தமட்டில் அவ்வளவு முக்கியமானதாக எடுத்துக் கொள்ளப்படவில்லை என்று கருதுவதற்கு இடமிருக்கிறது. எனவே இந்தியாவிலும், மலேசியாவிலும் கூட்டாட்சி நடப்பு முறையில் எவ்வாறு பின்பற்றப்படுகிறது என்பதை

தெரிந்து கொள்வது பயனுடையதாகவிருக்கும். கூட்டாட்சி அமைப்பு முறைகளில் நடப்பைப் பொருத்தமட்டில் மாறு பாடு இருக்கிறதென்று உறுதியாகச் சொல்லலாம். சான்றாக, கூட்டாட்சி அரசாங்கமொன்று கூட்டாட்சித் தத்துவத்திற் கேற்ப நடந்து கொள்ளாமல் அதைக் கெடுக்க அதிகாரம் பெற்றிருக்கிறதெனினும் அந்த முயற்சியிலேயே கூட்டாட்சி நிலையங்கள் தொடர்ந்தியங்குவதற்கு வாய்ப்பு இருக்கிற தென்பதும் ஒருமுக அடிப்படையிலெழும் நடவடிக்கைக்கு தீவிர எதிர்ப்புகள் இருக்குமென்பதையும் அறியலாம். ஆனால், ஒருமைப்பாட்டை பொறுத்தவரையில் அரசிய லமைப்பு ஏற்பாடுகளால் ஏற்படக்கூடிய எதிர்ப்புகளைக் காட்டிலும் அரசியல் எதிர்ப்புகளே மேலோங்கியிருக்கின் றன என்பது இந்நாடுகளின் அரசாங்கங்களைப்பற்றி அறிகின்றபோது தெளிவாகும்.

### ஆதார உரிமைகளும் நீதிப்புனராய்வும்

ஆசிய நாடுகளின் அரசியலமைப்புகளெல்லாம், குறிப் பாக இந்தியா, பர்மா, பாகிஸ்தான் அரசியலமைப்புகள், பலவகைப்பட்ட பெயர்களோடு தனிமனிதனின் உரிமைகளில் கவனம் செலுத்துகின்றன. மலேசியாவில் 'ஆதாரச் சுதந்திரங்கள்' என்றும் இந்தோனேசியாவில் 'ஆதார மனித உரிமைகளும் சுதந்திரங்களும்' என்றும் இந்தியாவில் 'ஆதார உரிமைகள்' என்றும் அழைக்கப்படுகின்றன. இவ்வாறு ஆதார உரிமைகள் அரசியலமைப்பில் எழுதப்படுகின்றமுறை பெரும்பாலும் மேற்கத்திய நாடுகளின் உதாரணத்தை ஆதார மாகக் கொண்டதெனலாம். எனினும் அந்நாடுகளிலுள்ள வாறு அல்லாமல் இங்கு இந்தியாவிலும், 1956ஆம் ஆண்டின் பாகிஸ்தானிய அரசியலமைப்பிலும் பாராளுமன்றத்தின் மேம்பட்ட நிலைமையைக் காப்பாற்றும் நோக்கத்தில் இவ்வா தார உரிமைகள் சில நிபந்தனைகளுக்குக் கட்டுப்படுத்தப்பட்டு அளிக்கப்பட்டுள்ளன. சிறப்பாகப் பாராளுமன்றத்திற்கும் ஆதார உரிமைகளுக்குமிடையே மோதல்கள் ஏற்படும்போது நீதிப்பரிகாரம் வரையறை செய்யப்பட்டிருக்கிறது. இந்தியா வில் 'நியாயமான வரம்புகளுக்குட்பட்டு இவை தரப்பட்டிருக் கின்றன. நீதிப்புனராய்வில் சில வரையறைகளை இது திணிக் கிறது என்றாலும் இந்திய உச்சநீதிமன்றம் அதை ஏற்றுக் கொண்டிருக்கிறது.' இந்நீதிமன்றம், 'இந்தியாவின் குடி யாட்சி முறைக்கு ஏற்பட்டகளங்கம்' என்று பைலியால் வர்ணிக்கப்பட்ட 1650ஆம் ஆண்டின் தடுப்புப் பாதுகாப்புச்

சட்டத் (Preventive Detention Act of 1950) தை, நியாயமான தென்று தீர்ப்பளித்திருக்கிறது. எனினும், மத, இன, சாதி அடிப்படைகளில் எவரும் உரிமைகளைப் பெறுவதினின்றும் தடுக்கப்படக் கூடாதெனும் சில உரிமைகள் நிபந்தனையற்ற முறையில் இந்தியாவில் வழங்கப்பட்டிருக்கின்றன. பாகிஸ்தான் ஒன்றுதான் உத்தியோக நியமனங்களில் இத்தகைய உரிமைத் தடைகளை ஏற்படுத்தியிருக்கிறது. மலேசியாவில் கூட உரிமைகளைப் பெறுவதற்கு சில தகுதிகள் வற்புறுத்தப் படுகின்றன. இதர நாடுகளுடனான நட்புறவுகள் அல்லது பொது அமைதியும் ஒழுக்கமும் அல்லது கூட்டரசின் பாது காப்பு சம்மந்தப்பட்ட ஊக்கிகள் அல்லது பாராளுமன்றம் அவசியமெனக்கருதி இயற்றும் சட்டங்களுக்குட்பட்டுதான் பேச்சு சுதந்திரம் அளிக்கப்படுகிறது. அத்தகைய சட்ட மொன்று செல்லத்தகுந்ததா என்பதைத் தீர்மானிக்க நீதிமன்றங்கள் தகுதியற்றவைகளாகும்.

அடுத்ததாக, பர்மா, இந்தியா போன்ற நாடுகளில் அயர் லாந்து நாட்டின் உதாரணத்தைப் பின்பற்றி 'அரசு வழி காட்டு நெறிகள்' (Directive Principles of State policy) சேர்க்கப் பட்டிருக்கின்றன. அவைகள் செயல்படுத்தப்பட வேண்டு மென நீதிமன்றங்களை அணுகவியலாது. அவை ஆதார உரிமைகளை நசுக்கவியலாது. ஆனால், இரண்டிற்குமிடையே முரண்பாடு இருக்குமானால் அரசு வழிகாட்டு நெறிகள் ஆதார உரிமைகளையும் புறக்கணிக்க வேண்டுமென்னும் கருத்து நிலவு கிறது. இந்தியாவில் மக்களது அடிப்படை உரிமைகள், அரசு நெறி செய்க்கொள்கைகள் ஆகியவைகளில் எது அரசால் முக்கியமானதென மதிக்கப்பட வேண்டும் என்பது பற்றி சமீப காலம்வரை சர்ச்சை நிலவி வந்தது. இந்திய அரசியலமைப்பின் 25ஆவது திருத்தம் வாயிலாக, இவையிரண் டில் அரசு நெறி செய்க்கொள்கைகளை அடிப்படை உரிமை களைவிட உயர்ந்த நிலையில் வைக்க வழி செய்யப்பட்டது. இந்நெறிகள் பெரும்பாலும் இலவசக்கல்வி, சமூகப் பாது காப்பு, வாழ்க்கைக்குத் தேவையான ஊதியம் போன்றவை களைப் பற்றியவைகளாக இருக்கின்றன. குடிசைத் தொழில் களை ஊக்குவித்தல், கிராமப் பஞ்சாயத்துகளை ஊக்குவித்தல், மதுவிலக்கு, பசுவதைத்தடை ஆகியவைகள் இந்தியாவில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. உரிமைகளைப் பொறுத்தவரை யிலும் இந்நாடுகளில் பெரும்பாலும் எல்லாம் ஒரே மாதிரி யாக இருப்பதாகச் சொல்லலாம் என்றாலும் ஒவ்வொரு நாடும் ஒரு சிலவற்றை வற்புறுத்திக் கூறுகின்றன.

உதாரணமாக, மொழி, மதம் ஆகியவைகளைப் பேணி பாது காப்பதும், பர்மாவில் ஒரே மாதிரியான வேலைக்கு ஆண்களுக் குச் சமமாகப் பெண்களுக்கு ஊதியம் தரப்பட வேண்டு மென்பதும் சிறப்பாக வற்புறுத்தப்படுவனவாகும். ஆனால் சொத்துரிமையைப் பொருத்தவரை இவ்வரசியலமைப்புக் களிடையே ஒரே மாதிரியான கருத்து வற்புறுத்தப்படவில்லை யென்பது தெளிவாகிறது. பர்மாவில் சட்ட அடிப்படையில் நிலங்களை எடுத்துக்கொள்வதற்கும் நட்டஈடு கொடுப் பதற்கும் வகை செய்யப்பட்டிருந்தாலும், எதற்கு, எந்த அள விற்கு நட்டஈடு கொடுக்கப்பட வேண்டுமென்பதை சட்டம் நிர்ணயம் செய்யவேண்டுமென அறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவில், அரசால் எடுத்துக்கொள்ளப்படும் தனிநபர் சொத்துக்களுக்கு நட்ட ஈடு தரப்பட வேண்டுமென்பது ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. நாலாம் அரசியலமைப்புத் திருத்தத்தின்படி நட்ட ஈட்டுத் தொகை பாராளுமன்றத்தால் நிர்ணயம் செய்ய வேண்டும் என்று தெரிவிக்கப்படுகிறது.

இது நீதிமன்றங்களின் பங்கு பணி பற்றிய சில பிரச்சினை களை எழுப்புகிறது. எழுதப்பட்ட அரசியலமைப்பையுடைய பெரும்பாலான நாடுகளில் அரசியலமைப்பை விளக்கவும் சட்டமன்றங்களால் இயற்றப்பட்ட சட்டங்கள் அரசிய லமைப்பு விதிகளுக்கொவ்வாதவை என்று தீர்மானிக்கவும் நீதிமன்றங்கள் அதிகாரம் பெற்றிருக்கின்றன. பெரும்பாலான ஆசிய நாடுகளில் ஏதாவதொரு வகையில் நீதிப்புனராய்வு காணப்படுகிறது. சிலவகைகளில் இது வரையறை செய்யப் பட்டிருக்கிறது. இருப்பினும் சட்ட ஆட்சியை (Rule of Law) நிலைநாட்டும் வகையில் நீதிமன்றங்கள் பணியாற்றியிருக் கின்றன என்பதும், சில சமயங்களில் அப்பணி அரசாங்கங் களுக்கு எரிச்சலை ஏற்படுத்துவதாக இருந்திருக்கிறது என்பதும் தெரியவருகிறது.

இது, எங்கு அரசியலமைப்புத்துவம் (Constitutionalism) ஊசலாடிக் கொண்டிருக்கிறதோ அங்கு குறிப்பாக முக்கியத் துவம் பெறுகிறது. தடுப்பு அடிப்படையில் செய்யப்படும் கைதுகள், பொதுவாக மானிட உரிமைகள் ஆகியவற்றைப் பொருத்தமட்டில் பர்மிய நீதிமன்றங்கள் வலுவான கருத்துக் களை உடையவைகளாக இருப்பதை இங்கு உதாரணமாகக் கூறலாம். பொது ஒழுங்கு சட்ட அடிப்படையில் சந்தேகப் பட்ட ஒருவரை இரண்டு மாத காலத்திற்கோர் அல்லது குறிப்பிட்ட சில சந்தர்ப்பங்களில் காலவரையறையின்றியோ

கைது செய்து சிறை வைப்பதற்குச் சாத்தியமாயிற்று. அச் சட்டத்தின் 9 (1) பிரிவு அது தரும் அதிகாரமெதையும் செலுத்துவதினின்றே அல்லது அதை நீதிமன்றத்தால் விவாதிப்பதற்கோ அதிகாரம் கிடையாது என்று கூறுகிறது. நீதிமன்றத்தின் தீர்ப்புகளைக் குறிப்பாக அச்சட்டத்தின் நியாயத்தைப் பற்றிய தீர்ப்புகளை விலக்கும் வகையில் யூனியனின் சட்டமெதுவும் இயற்ற முடியாது என்று கூறி இப்பிரிவை நீதிமன்றம் செல்லாததெனை விலக்கியது. பர்மா வின் சிறந்த சட்ட நிபுணரான டாக்டர் மாங் மாங் (Dr. Maung Maung) என்பவர் நீதித்துறையின் சுதந்திரத் தன்மையையும், பர்மாவில் ஆட்சிச் சட்டம் மாறி மாறி வரும் சூழ்நிலையில் பிரகாசமிக்கச் சுடரொளியாகத் திகழ்வதையும் எடுத்துக் கூறியிருக்கிறார்.

ஆனால், இதற்கு மாறாக அரசியலமைப்புத் துறையில் நீதி மன்றங்கள் மிகச் சிறிய அளவிலேயே தங்கள் பணியைச் செய்யக்கூடிய நிலையில் ஒரு சில ஆசிய நாடுகள் இருக்கின்றன. குறிப்பாக, சாதாரண நீதிமன்றங்கள் நீதிப்புனராய்வு செய்ய முடியாதபடியான நாடுகளில் இந்நிலைமை ஏற்பட்டிருக்கிற தெனலாம். இது தென் வியட்நாம், இந்தோனேசியா நாடு களைப் பொருத்தமட்டில் உண்மையானதாகும். இந்தோனேசி யாவில் அரசியல் சட்டப் பிரச்சினைகளில் நீதித்துறைக்குத் தொடர்பே இருந்ததில்லை. ஆனால், ஒருசில சமயங்களில் தான் மேற்கொண்ட நடவடிக்கைகளின் முறை சட்ட சம்மத மானவையா என்பதைப்பற்றி ஆலோசனை கூறுமாறு அந் நாட்டு உச்ச நீதிமன்றத்தின் தலைவர் ஜனாதிபதியால் கடந்த காலத்தில் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார். இத்தகைய ஆலோசனை கூறும் வரம்பு நீதிமன்றத்திற்கு எந்த அளவிற்குத் தரப்பட்டிருக்கிறது என்பது அந்தந்த நாடுகளின் அரசிய லமைப்பைப் பற்றிப் படிக்கும்போது தெரிந்துகொள்ள லாம்.

**சமயமும் அரசும்** (Church and State)

ஆசிய நாடுகள் சிலவற்றில் சமயம் சிறப்பிடத்தைப் பெற் றிருக்கிறதெனலாம். எடுத்துக்காட்டாக பிலிப்பைனில் கிறிஸ்துவமும், மலேசியாவில் இஸ்லாமிய சமயமும், பர்மா இலங்கையில் பௌத்த மதமும் இருப்பதைச் சுட்டிக் காட்ட லாம். இந்தியா சமயச் சார்பற்ற நாடு. இந்தோனேசியாவில் இப்பிரச்சினை தீர்மானமாக முடிவு செய்யப்படவில்லை.

பாகிஸ்தானின் 1956ஆம் ஆண்டு அரசியலமைப்புச் சட்டம் அரசால் இயற்றப்படும் சட்டங்கள் இஸ்லாமிய மதக்கட்டளை களுக்கேற்றவைகளாக இருக்கவேண்டுமெனக் கூறுகிறது. பாகிஸ்தான் ஒரு இஸ்லாமியக் குடியரசாகப் பறைசாற்றப் பட்டது. எனினும் இஸ்லாமிய தத்துவங்களைப் பிரதிபலிக்கும் உண்மையான அரசியலமைப்பு எதுவாக இருக்கக் கூடும் என்பதில் இன்றும் அங்கு விவாதம் இருந்து வருகிறது. இதில் முடிவான கருத்து விரைவில் ஏற்படும் என்று சொல் வதற்கில்லை.

இந்த மதச் சார்பும் அரசிற்கும் மதத்திற்குமிடையிலான தொடர்புகளும் பின்வரும் காரணங்களால் ஏற்படுகிறதெனக் கூறலாம்.

(அ) முதலாவது சமூக நிலையங்களும் சட்டமும் மதத்தை ஆதாரமாகக் கொண்டவை என்னும் நம்பிக்கை; குறிப்பிட்ட சில நிலையங்களும் சட்டங்களும் குறிப்பிட்ட மதத்திலிருந்தும் பிரிக்க முடியாதவாறு இணைந்து இருக் கின்றன என்னும் நம்பிக்கை.

(ஆ) இரண்டாவதாக, சமய நிலையங்களோடு தொடர் புடையவர்கள் அரசியலில் தங்களுடைய செல்வாக்கைப் பாது காத்துக் கொள்ளும்வகையில் செல்வாக்குக் குழுக்களாக (Pressure Groups) செயலாற்றுவது அல்லது தங்களுடைய கொள்கைகளையும் கருத்துகளையும் அரசியலில் திணிப்பது, இவ்வம்சத்தில் இதர மதங்களைப் போல் இந்துமதம் அமைந் திருக்கவில்லை என்பதை இங்கு கருதவேண்டும். எந்த ஒரு ஸ்தாபனத்தோடோ அல்லது மதத் தலைவரோடோ ஒப்பந்தம் செய்து கொள்ளக் கூடியவாறு இந்துமதம் அமைக்கப் பட்டிருக்கவில்லை.

(இ) கடைசியாக, சமூக ஒற்றுமைக்கும், ஸ்திரத் தன்மைக்கும் மதம் ஆதாரம் என்னும் பரவலான கருத்து. இக்கருத்தை ஏற்காத ஆனால் அதே சமயத்தில் வலிமைமிக்க சிறுபான்மைக் குழுக்களும் சில இடங்களில் இருக்கக்கூடும்.

**அரசியல் சட்டமும் சமுதாய அமைப்பும்**

அடிக்கடிக் கேட்கப்படும் ஒரு கேள்வி, ஆசிய சமூகங்களுக்கு மேற்கத்திய அரசியலமைப்புச் சட்டங்களும் வழக்காறுகளும் பொருந்துமா என்பது. சில சமயங்களில் இவ்விவாதம் 'சமூக

அமைப்போடு' தொடர்புடையதாக இருக்கிறது. இச் சமூகங்களில் அரசியல் பெரும்பாலும் சமூக வகுப்பு வாதங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. இத்தகைய சமூகங்களில் அரசியலில் கலந்துகொள்பவர்களிடம் ஒற்றுமை இருப்பதில்லை. நியாயமான அரசியல் சாதனங்களிலும் நோக்கங்களிலும் பொதுக்கருத்து கிடையாது. ஆகையால், மேற்கத்திய அரசியல் முறைகளுக்குச் சாதகமான சூழ்நிலைகள் இங்கு கிடையாது. சில சமயங்களில் இப்பிரச்சினையானது 'சமூகத்தேவைகளை'ப் பின்னணியாகக் கொண்டு ஆராயப்படுவதால் மேற்கத்தியவகை நிலையங்கள் சமூக பொருளாதாரத் துறைகளில் எதிர்பார்க்கின்ற அளவிற்கு முன்னேற்றமடைய உதவுமா என்ற ஐயப்பாட்டை ஏற்படுத்துகிறது. இத்தகைய விவாதங்கள் மிகத் தீவிரமாக இப்போது காணப்படுகின்றன. சமீபகாலம் வரையிலும் சாதாரண நிலைமைகளில் கூட அரசியல் சட்டப்பூர்வமான குடியாட்சி ஏற்படும் வாய்ப்பு இருந்ததென்பது இங்கு கவனிக்கத் தக்கதாகும்.

பத்தாண்டுகளுக்கு முன்பு இலங்கையைப்பற்றி திரு. ஐவர் ஜென்னிங்ஸ் என்பார் குறிப்பிட்டதை இவ்விடத்தில் நினைவு கூறலாம். 'இலங்கை நாட்டினரது பொறுப்பு இந்திய, பாகிஸ்தானியர்களுடைய பொறுப்புகளைவிட மிக எளிதாக இருக்கிறது. அவர்கள் இந்த மூன்று நாடுகளினுடைய பிரச்சினைகளுக்கும் பரிகாரம் காணும் வழியைக் காட்டக்கூடும்.'

ஜென்னிங்ஸ் இதை பழைய காரணங்களைக் கருத்திற்கொண்டு கூறினார். இலங்கை நெடுங்காலமாக மேற்கத்திய உந்தல்களுக்கு ஆட்பட்டிருந்தது. அதனுடைய மக்கள் தொகையில் ஆண்களில் சுமார் எழுபது விழுக்காட்டினர் கல்வியறிவு உடையவர்களாக இருந்தனர். வயது வந்தோர் வாக்குரிமை 1931ஆம் ஆண்டிலேயே ஏற்படுத்தப்பட்டது. அதனுடைய சுதந்திர இயக்கம் அமைதியானதாகவும் சட்டபூர்வமானதாகவும் இருந்தது. அதோடு சிறு குழுவால் ஆக்கப்பட்ட சிறிய எளிமையான, பாராளுமன்றத்தின் சம்மதத்திற்குத் தாக்கல் செய்யப்பட்டதால் எதிர்ப்பில்லாத ஒரு அரசியலமைப்பைப் பெற்றிருந்தது. அவ்வரசியலமைப்பு நெகிழுந்தன்மையதாகவும், ஆங்கில நாட்டுப் பாணியிலும் இருந்தது. அது ஆடம்பரமில்லாமல் (Fuss) கொண்டுவரப்பட்டது. இவ்வகையில் இந்திய அரசியலமைப்பும் இந்தியக் கல்வியறிவும் இலங்கையோடு ஒப்புநோக்க வல்லதாக இருக்கவில்லை. இந்திய அரசியலமைப்பு குறிப்பிட்ட சில திருத்திப்

படுத்தும் வகையில், சிக்கல் மிக்கதாக, நீளமானதாக அரசியல் நிர்ணய சபையால் எழுதப்பட்டது என்பது கவனிக்கத் தக்கது.

ஜென்னிங்ஸ் குறிப்பிட்டது சரியானதாகவும் இருக்க லாம். ஆனால், இந்தியா இன்று வரையிலும் இதர நாடுகளை விட இத்துறையில் நல்லமுறையில் செய்திருக்கிறது. இலங்கையோவெனில் அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக ஏமாற்றத்தையே ஏற்படுத்தியிருக்கிறது. இந்த ஏமாற்றம் இயற்கையே. இம்முறையைச் செயல்படுத்தும் ஆங்கிலம் பேசும் தலைவர்களுக்கு அங்கு மக்கள் ஆதரவு கிடையாது. அத்தலைவர்களுக்குக் கீழுள்ள இதர உள்நாட்டுக் குழுக்கள் சரியானபடி இம்முறையில் ஏற்றுக் கொள்ளப்படாததால் அவ்வப்போது தோன்றும் கோரிக்கைகளை எவரும் சட்டபூர்வ மான முறையில் சமாளிக்க முடியவில்லை.

ஆசியாவில் மேற்கத்திய முறை அரசாங்கங்கள் பின்பற்றப் படுவதால் சமூக அமைப்பு சமூகத் தேவைகளோடு தொடர் புடையதாக இரண்டு வகையான குறைகள் இருப்பதாக மேலே கண்டோம். காலஞ்சென்ற திரு. பண்டாரநாயகாவின் அரசாங்கம் இவ்விரு குறைகளுக்கும் எடுத்துக் காட்டாக அமைந்திருந்ததெனலாம். 'முன்னேற்ற வகையைச்' சேர்ந்த பொருளாதாரத் தேவைகளை ஏற்கும் 'முன்னேற்ற அரசியல் வாதியாக' அவர் தோன்றினார். ஆனால் அவர், பரம்பரை வகையையும் நாட்டுப்புறத் தன்மையையும் உடைய சிங்களர் களாலும், பௌத்தத் துறவிகளாலும், ஆயுர்வேத வைத்தியர் களாலும் ஆதரிக்கப்பட்டார். ஆனால், இந்திய தேசிய காங் கிரசோவெனில் சிக்கல் மிக்க, ஒன்றிற்கு ஒன்று முரணான கோரிக்கைகளைச் சமாளிக்கத் தக்க வகையில் திரு. பண்டார நாயகாவினுடைய ஐக்கிய முன்னணியை விடச் சிறந்த முறை யில் பயிற்சி பெற்றிருந்தது.

மேற்கூறியவாறு ஒவ்வொரு நாடும் தங்கள் சமூக அமைப்பு, சமூகத்தேவை இவைகளை ஒட்டி எவ்வாறு அரசிய லமைப்புப் பெற்றுள்ளன; எவ்வாறு அவற்றின் அரசாங்கங் கள் இயங்கி வருகின்றன; அவற்றிலுள்ள சிறப்புகளும் பிரச்சினைகளும் யாவை என்பதை இனி நாம் காணலாம்.

# 1. அரசியலமைப்புத் தோற்றம்

## முன்னுரை

இந்திய நாட்டு வரலாற்றில் 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் நாள் சிறப்புமிக்கதும் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியதுமாகும். அன்றுதான் சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்தது. அந்நாள் பல நூற்றாண்டுகளாக இன்னல்கள் பலவற்றிற்கு ஆளாகித்தவித்த பழம் பெருமை வாய்ந்த, தாய்த் திருநாட்டின் மறுபிறப்பைப் பறைசாற்றி உலகுக்கு அறிவித்த நன்னாள். எனவே அந்நாளை பாரதமக்கள் ஆண்டுதோறும் நினைவு கூர்ந்து போற்றி வருகிறார்கள். ஆனால், அதற்கு முன்பு பல ஆண்டுகளாக இந்தியர்கள் பல போராட்டங்களை நடத்தித் தங்கள் உயிரையும் தியாகம் செய்ய நேர்ந்ததை மறந்து விட முடியாது. சுதந்திரத்திற்கான அப்போராட்டங்கள் இறுதியாக 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதியோடு முடிவு பெற்றன. அரசியலதிகாரம் இந்தியர்களின் கைகளுக்கு மாற்றப்பட்டது. அதனால் இருநூறு ஆண்டுகாலமாக இந்நாட்டில் நடைபெற்ற ஆங்கிலேயர்களது ஆட்சி முடிவுற்று இந்தியர்கள் சுயாட்சி பெற்றனர்.

சுய ஆட்சி பெற்றதோடு இந்தியர்களின் கடமைகள் முடிந்து விடவில்லை. புதியதொரு சோதனையின் தொடக்கமாக அது விளங்கிற்று. தன்னாட்சி பெற்ற நாடாக வாழ வேண்டிய நிலையோடு, நியாயம், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றின் அடிப்படையில் மக்களாட்சியொன்றை ஏற்படுத்த வேண்டிய பொறுப்பும் ஏற்பட்டது. இத்தகைய உயர் இலட்சியங்களை நிறைவேற்றுவதற்கு உரியதொரு சாதனமாக, நாட்டின் அடிப்படைச் சட்டமாக விளங்

கக்கூடிய அரசியல் திட்டமொன்றை உருவாக்கத் தலைப் பட்டது. இன்று அமுலிலிருந்துவரும் அரசியல் திட்டம் அதன் விளைவாக எழுந்தது. இத்தலைமுறையின் பெரும் பான்மையான இந்திய மக்களின் அரசியல், பொருளாதார, சமுதாய இலட்சியங்கள் மற்றும் வேட்கைகளின் சின்னமாக அது விளங்குகிறது.

**அரசியல் நிர்ணய சபை**

இத்தன்மைகளைக் கொண்ட அரசியலமைப்பை இயற்றும் பணி இந்திய அரசியல் நிர்ணய சபையிடம் ஒப்படைக்கப் பட்டது. இந்த அரசியல் நிர்ணய சபை 1946ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 9ஆம் தேதி திரு. சச்சிதானந்த சின்கா என்பவரைத் தற்காலிகத் தலைவராகக்கொண்டு ஆரம்ப மாயிற்று. அதன் பிறகு டிசம்பர் மாதம் 11ஆம் தேதி சபை டாக்டர் இராஜேந்திரப்பிரசாத்தைத் தன் நிரந்தரத் தலை வராகத் தேர்ந்தெடுத்தது. சபை பல துணை குழுக்களாகப் பிரிக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கார் தலைமையில் தனி யான வரை குழுவொன்றும் அமைக்கப்பட்டது. சிறுபான்மை யினர், அடிப்படை உரிமைகள், பழங்குடி, விலக்கப்பட்ட பிரதேசங்கள் ஆகியவற்றிற்காவும், இதர பலவற்றிற்காகவும் அமைக்கப்பட்ட துணைக்குழுக்களின் அறிக்கைகளை ஆதார மாகக் கொண்டு வரைகுழு, வரை அரசியலமைப்பு (Draft constitution) ஒன்றைத் தயாரித்து 1948ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 21ஆம் தேதி சபைக்கு அளித்தது. அவ்வரசியலமைப் பினுடைய ஒவ்வொரு அம்சமும் விரிவாகவும் முழுவதுமாகவும் ஆராயப்பட்டு அவசியமான இடங்களில் மாற்றியமைக்கப் பட்டது. இறுதியாக அது 1949ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 26ஆம் தேதி ஒருமனதாக அரசியல் நிர்ணய சபையால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இவ்வாறு ஏற்றுக் கொள்ளப் பட்ட அந்த அரசியலமைப்பே இன்று இந்திய அரசியலமைப் பாகத் திகழ்கிறது. அரசியல் நிர்ணய சபை மொத்தம் பதி னொரு தொடர்களில் இரண்டாண்டுகள், பதினொரு மாதங்கள் பதினெட்டு நாள்கள் கூடி இந்த மிகக் கடினமான வேலையைச் செய்து முடித்தது. உண்மையிலேயே மிகப்பெரிய சாதனை யாகும். 1950ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் 24ஆம் தேதி அரசியல் நிர்ணய சபையின் பன்னிரண்டாவது இறுதித் தொடர் கூட்டத்தில் டாக்டர் இராஜேந்திரப்பிரசாத் இந்தியக் குடியரசின் முதல் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

# 2. அரசியலமைப்பின் முக்கிய அம்சங்கள்

அரசியலமைப்பு என்பது ஒரு நாட்டை ஆளுவதற்கெனத் தொகுக்கப்பட்ட சட்டங்களையும் முறைகளையும் குறிக்கும். இது அரசாங்கத்தின் பல்வேறு பகுதிகளுக்கு இடையேயுள்ள உறவையும், மக்களின் உரிமைகளையும் விளக்கி வரையறுத்துக் கூறுகிறது. இந்தியாவின் அரசியலமைப்பு இந்தியாவின் அரசியல் நிர்ணய சபையினால் 1949ஆம் வருடம் நவம்பர் மாதம் 26ஆம் தேதி பூர்த்தி செய்யப்பட்டு, 1950ஆம் வருடம் ஜனவரி மாதம் 26ஆம் தேதி முதல் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. மாறி மாறி வந்த இந்திய வரலாற்றில் இந்நாள் சரித்திரப் புகழ்பெற்ற தினமாகும்.

## 1. அரசியலமைப்பின் முகவுரை

மற்ற அரசியலமைப்புகள் போல் நமது அரசியலமைப்பும் ஒரு முகவுரையுடன் தொடங்குகிறது. இம்முகவுரையானது அரசியலமைப்பின் குறிக்கோள், நோக்கம், அடிப்படை எண்ணங்களைக் கொண்டதாக உள்ளது. இந்த முகவுரை நீதிமன்றங்களுக்கு அப்பாற்பட்டது. அதாவது அதன் ஷரத்துகளை நீதிமன்றங்கள் மூலம் செயல்படுத்த முடியாது. இம்முகவுரை மீறப்படுமானால் தண்டனை அளிக்கப்படமுடியாது. அரசியல நிர்ணயசபையின் முதலாவது கூட்டத்தில் ஜவஹர்லால் நேரு அவர்களால் அறிமுகப்படுத்தப்பட்ட 'குறிக்கோள் தீர்மானத்தை' அடிப்படையாகக் கொண்டு முகவுரை வகுக்கப்பட்டு ஒருமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. அரசியலமைப்பின் முகவுரை பின்வருமாறு கூறுகின்றது.

'இந்தியாவின் மக்களாகிய நாங்கள் சர்வ அதிகாரமுள்ள ஜனநாயகக் குடியரசாக இந்தியாவை நிர்மாணித்து அதனுடைய குடிமக்களுக்கு, சமுதாய, பொருளாதார, அரசியல் நீதி கிடைக்கவும், எண்ணம், பேச்சு, நம்பிக்கை, சமயப்பற்று, கடவுள் வழிபாடு முதலியவற்றில் உரிமை வழங்கிடவும், சமூக அந்தஸ்திலும், வாய்ப்புகளிலும் அனைவரிடத்திலும் அதைப் பரப்புதலிலும் சமத்துவம் வழங்கிடவும் தேசத்தின் ஒற்றுமையையும் தனிமனிதனின் தன்மானத்தைக் காக்கும் வகையில் சகோதரத்துவம் அமைத்திடவும் உறுதிமொழி கொண்டு, அரசியல் நிர்ணய சபை மூலமாக 1949ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 26ஆம் நாளன்று அரசியல் சாஸனத்தைச் சட்டமாக்கி ஏற்றுக்கொண்டு எங்களுக்கு உரியதாக ஆக்கிக்கொள்கிறோம்.

இந்திய அரசாங்க அமைப்பில் குடியரசுத் தன்மை, ஜனநாயகம், நாட்டின் இறைமை, நீதி, உரிமை, சமத்துவம் சகோதரத்துவம் என்பன அதன் தூண்கள் போல் நிற்பன' என்பது முகவுரையின் மூலம் நன்கு தெளிவாகிறது. இவை கீழ்க்கண்டவாறு சற்று விரிவாகக் கூறப்படலாம்.

### 2. குடியரசுத் தன்மை

குடியரசு என்ற சொல் ஒரு இராச்சியத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரைக் குறிக்கிறது. முடியாட்சியில் வாரிசுரிமைக் காரணமாகப் பதவிக்கு வருவது போலல்லாது இந்த முறையான அரசாங்கத்தில் முக்கிய ஆளுநரை மக்கள் நேரிடையாகவோ மறைமுகமாகவோ குறிப்பிட்ட காலத்திற்கு எனத் தேர்ந்தெடுக்கிறார்கள். இந்தியாவின் ஜனாதிபதி 5 வருட காலம் பதவி வகிக்க இந்திய அரசியலமைப்பு இடமளிக்கிறது.

### 3. ஜனநாயகம்

ஜனநாயகம் என்பது அரசாங்க அதிகாரமெல்லாம் மக்களிடமிருந்து பெறப்பட்டு வயது வந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால் ஏற்படுத்தப்பட்ட அரசாங்கத்தால் அம்மக்களுடைய அதிகாரம் செலுத்தப்படுவது என்றாகும். சுருங்கக் கூறின் ஜனநாயகம் என்பது அரசாங்கம் செயல்பட வேண்டிய முறையைக் குறிக்கும். அதாவது வாக்காளர்களால் தேர்ந் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர்களுக்குப் பொறுப்பான நிர்வாகத்

தினரால் நடைபெறும் பிரதிநிதித்துவ அரசியல் முறையைக் குறிக்கும். விரிவாக நோக்கின் ஜனநாயகம் என்பது அரசியல் மட்டுமல்லாது சமுதாய, பொருளாதார ஜனநாயகத்தையும் தழுவும். பின்னதாகச் சொல்லப்பட்ட பொருளில்தான் ஜனநாயகம் என்ற சொல் முகவுரையில் குறிக்கப்பட்டுள்ளது.

### 4. தேசீய இறைமை

1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் 15ஆம் தேதிக்கு முன்பு வரை இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஒரு அங்கமாக இருந்து வந்தது. அதன் பின்னர் இந்தியா ஒரு சுதந்திரமான இறைமைத் தன்மையுடைய தேசீய அரசாக அமைந்தது. இந்தியாவிற்கு வெளியேயுள்ள எவருக்கும் அல்லது எந்த நாட்டிற்கும் நாம் கடப்பாடுடையவர்களல்ல. அரசியலமைப்பு இந்தியாவை இறைமையுடைய அரசாக அறிவிக்கிறது. அதாவது உள்நாட்டு விவகாரங்களிலோ அல்லது வெளிநாட்டு உறவுகளிலோ, தொடர்புகளிலோ வேறு எந்த ஆதிக்கத்திற்கும் கட்டுப்படுவதில்லை. உள்நாட்டில் அதன் எல்லைக்குட்பட்டப் பகுதிகளில் அதன் அதிகாரம் முழுமையானதும் கட்டுப்பாடற்றதுமானதாகும்.

### 5. நீதி

முகவுரை மக்களுக்கு நீதியினை உறுதியளிக்கிறது. நீதி என்று கூறுமிடத்து தனிநபர் நடத்தையானது சமுதாய நலத்துடன் இணைந்ததெனப் பொருள்படும். இங்ஙனமாக இது தனிமனிதனின் சமூக, பொருளாதார அரசியல் வாழ்க்கையினைச் சார்ந்து நிற்கிறது. இதைக் கருத்தில் கொண்டு அரசு சமதர்ம சமுதாயத்தைத் தனது குறிக்கோளாக அறிவித்துள்ளது.

### 6. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்

சுதந்திரம் என்ற சொல் மனிதனின் ஆளுமை முழுமை பெறத் தேவையான சூழ்நிலைகளைத் தோற்றுவிப்பதைக் குறிக்கிறது. சமுதாய வளர்ச்சி தனிமனிதனைச் சார்ந்திருக்கிறது. சமுதாயத்திற்கு மிகுந்த அளவு தன் பங்கை அளிக்க வசதி அளிக்கும் வகையில் தனி மனிதனுக்கு மிகுந்த அளவு எண்ணம், பேச்சு, நம்பிக்கை இவற்றில் சுதந்திரம் வழங்க வேண்டியது அவசியமாகிறது. சுதந்திரமும், சமத்துவமும் ஒன்றையொன்று தழுவியவை. சமத்துவம் என்றால் யாவரும்

உடல்வலிமை, அறிவுத்திறன் இவற்றில் சமமானவர் என்பதாகாது. அது சமூக அந்தஸ்து, தனிநபர் சுதந்திரம், சமமான வாய்ப்புகள் இவற்றையே குறிக்கும். வாய்ப்புகளில் சமத்துவம் என்பது, ஒவ்வொருவரின் தனித்திறமை வெளிப்படத்தக்க வாய்ப்புகள் அளிக்கப்படுதல் வேண்டும் என்பதனைக் குறிக்கும். தனிமனிதனின் கௌரவத்திற்கும் தேசத்தின் ஒற்றுமைக்கும் உத்திரவாதமளிக்கும் நோக்குடன் சகோதரத்துவம் என்ற குறிக்கோளுக்கு முகவுரையில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. ஐக்கிய நாடுகள் சாஸனத்தில் சகோதரத்துவம் என்ற இலட்சியம் உயர்த்திக் கூறப்பட்டுள்ளது. ஐக்கிய நாடுகள் கழகம் அதனுடைய மனித உரிமைப் பிரகடனத்தில் அறிவிப்பதாவது:

'எல்லா மக்களும் சுதந்திரமாகப் பிறக்கிறார்கள். கௌரவத்திலும் உரிமையிலும் சமமாகவே உள்ளார்கள். அவர்கள் யாவருக்கும் நியாயமும் மனசாட்சியும் உள்ளது. அவர்கள் யாவரும் மற்றவரிடம் சகோதரர் என்ற முறையில் பழகுதல் வேண்டும்.'

மதம், கொள்கை, மொழி, பண்பாடு இவற்றால் எழும் வேறுபாட்டினைத் தமக்குள் கருதாது, இந்தியர் அனைவரும் சகோதரர் என்பதனை வலியுறுத்துவதன் மூலமாக இந்திய அரசியலமைப்பின் முன்னுரை தேச ஒற்றுமையை உறுதிப்படுத்துகிறது. தேசிய ஒருமைப்பாட்டையும், பொது மக்களின் நலனையும் பெருக்குவதே அரசியலமைப்பின் குறிக்கோள் என்பதையும், இந்திய மக்களின் இலட்சியம் என்பதனையும் முன்னுரையானது விளக்குகிறது. பண்டித தாகூர்தாஸ் பார்கவா என்ற அரசியல் நிர்ணய சபை உறுப்பினர் முகவுரையைப் புகழ்ந்து கூறியுள்ளதாவது: 'முகவுரை அரசியலமைப்பின் மதிப்பீடு செய்யமுடியாத அளவிற்குச் சிறப்புடைய பகுதியாகும். இதுவே அரசியலமைப்பின் ஜீவநாடி. இதுவே அரசியலமைப்பின் திறவுகோலாகும். இது அரசியலமைப்பில் பதிக்கப்பட்டுள்ள ஆபரணமாகும். இது சிறந்த உரைநடைக் கவிதையாகும், இல்லை, இல்லை, அது தன்னுள்ளே தன்னிறைவு பெற்றதாகும்'.

**இந்திய அரசியலமைப்பின் முக்கிய அம்சங்கள்**

இந்தியாவின் புதிய அரசியலமைப்பு 1949ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 26ஆம் தேதி ஏற்கப்பட்டு, 1950ஆம் ஆண்டு

ஜனவரி மாதம் 26ஆம் தேதி அமுலுக்கு வந்தது. இவ்வரசியலமைப்பின் தனிச் சிறப்புகள் பின்வருமாறு:

**1. எழுதப்பட்டதும் நீளமானதும்**

நமது அரசியலமைப்பு எழுத்து வடிவமாகத் தெளிவுற இருப்பதால் அதைப் பற்றித் தனிக் கவனம் ஈர்க்க வேண்டியது அவசியமில்லை. அமெரிக்கா, ஸ்விட்சர்லாந்து, கனடா, பிரான்ஸ், இலங்கை போன்ற நாடுகள்போல் நம் இந்திய நாடும் எழுத்து வடிவாக்கப்பட்டுள்ள அரசியலமைப்பைப் பெற்றுள்ளது. இது 395 ஷரத்துகளும் 9 அனுபந்தங்களும் கொண்டது. உலகத்திலுள்ள அரசியலமைப்புகளுள் இது மிகவும் நீண்டதாகும். அரசியலமைப்பு மிகப் பெரியதாக இருப்பதற்குக் கீழ்க்கண்ட காரணங்களைக் கூறலாம்.

(அ) அரசியலமைப்பைத் தீர்மானித்தப் பெரியோர்கள் விரிவான கொள்கைகளை மட்டுமல்லாது நிர்வாகம் செயல்படத் தேவையான விவரங்களையும் இதில் தொகுத்தார்கள். அரசியலமைப்பு செயல்படுவதில் ஏற்படக்கூடிய குறைபாடுகளையும், இடர்களையும் தவிர்க்கும் நோக்கத்தோடு இங்ஙனம் தொகுக்கப்பட்டுள்ளது.

(ஆ) அரசியலமைப்பு அமைக்கப்பட்டபோது இந்திய நாட்டு அரசியலில் தனித்தன்மை வாய்ந்த பல்வேறு பகுதிகள் இருந்தன. ஜனநாயக அமைப்பு பெற்ற ஆங்கில மாநிலங்கள் இருந்தன. அரச பரம்பரையினர் வாரிசு முறையில் ஆண்டு வந்த தனி சமஸ்தான நாடுகளும், மத்திய அரசின் ஆதிக்கத்தின் கீழிருந்த தலைமை ஆணையாளர்களால் பரிபாலிக்கப்பட்டு வந்த பகுதிகளுமிருந்தன. இத்தகைய பிரிவுகள் யாவும் மாறுபட்ட வளர்ச்சியடைந்த நிலையில் இருந்தமையால் ஒரே முறையிலான நிர்வாகம் சாத்தியப்படவில்லை. அமைப்பு நீண்டுள்ளமைக்கு இதுவும் ஒரு காரணமாகும். மத்திய அரசு பற்றி மட்டும் கூறும் அமெரிக்க அரசியலமைப்புப் போலல்லாது இந்திய அரசியலமைப்பு மாநிலங்களைப் பற்றியும் கூறுகின்றது.

(இ) அடிப்படை உரிமைகள், நெறிசெய் நியதிகள் ஆகியவை இதில் சேர்க்கப்பட்டுள்ளதும் அமைப்பு நீண்டுள்ளமைக்கு உரிய காரணமாகும்.

(ஈ) பட்டியலில் சேர்க்கப்பட்ட ஜாதியினருக்கும், வகுப்பினருக்கும் பாதுகாப்பிற்கெனப் பிரத்யேகமான ஷரத்

துகள் சேர்க்கப்பட்டு இருப்பதும் அமைப்பு நீண்டுள்ளமைக்குக் காரணங்களாகும்.

(உ) இந்தியா ஓர் துணைக் கண்டமாக இருப்பதால் எண்ணற்ற பல சிக்கலான பிரச்சினைகளை எதிர்நோக்க வேண்டியிருப்பதும் அமைப்பு நீண்டுள்ளமைக்குக் காரணமாகும்.

**2. இறைமையதிகாரமுடைய ஜனநாயகக் குடியரசு**

நமது இந்திய அரசியலமைப்பில் குறிப்பிடத்தக்கதாக உள்ள மற்றுமோர் அம்சம் யாதெனில், இந்திய மக்களின் தனித்தியங்கும் இறைமைத் தன்மையை அது உறுதிப்படுத்துவதேயாகும். இந்தியா ஒரு பூரணக் குடியரசு நாடு. தனது உள்நாட்டு விவகாரங்களிலோ, வெளிநாட்டு உறவுகளிலோ வேறு எந்த அதிகாரத்திற்கும் கட்டுப்படாத ஜனநாயகக் குடியரசாக இந்தியா பிரகடனப்படுத்தப்பட்டுள்ளது. வாரிசு முறையில் ஆளும் முடியாட்சிக்கு இதில் இடமில்லை. உண்மையான அதிகாரம் மக்களிடமிருந்து பெறப்படுகிறது. அவர்கள் மன்னரால் ஆளப்படவில்லை, ஆனால் 5 ஆண்டு காலம் பணிபுரியவெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனாதிபதியால் ஆளப்படுகின்றனர். அரசியலமைப்பின் ஜனநாயகத் தன்மை வயதுக்கு வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டிருப்பதாலும் தனிப்பிரிவினர் வாக்குரிமை ஒழிக்கப்பட்டிருப்பதாலும் உறுதி செய்யப்படுகிறது.

**3. நெகிழாத, நெகிழுந் தன்மைகள் இணைந்திருக்கும் தனிச்சிறப்பு**

இந்திய அரசியல் சட்டமானது, மாறுதல்களுக்கு உட்படாத தன்மையும், உட்படும் தன்மையும் இணைந்த தனிச் சிறப்புடன் விளங்குகிறது. இதில் ஒரு பாகம் மட்டும் நெகிழாத தன்மையையுடையதாகவும் ஒரு பாகம் நெகிழும் தன்மையையுடையதாகவும் உள்ளது. அரசியல் சட்டத்தில் கூறப்பட்டுள்ள திருத்தமுறை இங்கிலாந்து நாட்டைப்போல வெகு எளிதானதாகவோ அமெரிக்காவைப்போல வெகு கடினமானதாகவோ இல்லை. அரசியலமைப்பைத் திருத்தம் செய்ய மூன்று வெவ்வேறுபட்ட முறைகள் உள்ளன. பெரும்பாலான ஷரத்துகள் இந்திய நாடாளுமன்றத்தின் சாதாரணப் பெரும்பான்மை கொண்டு திருத்தப்படலாம். அவற்றிற்குக் கீழ்க்கூறியவை உதாரணங்களாகும். (i) புதிய மாநிலம் உருவாக்குதல், இருக்கின்ற இராஜ்யத்தை மாற்றி

யமைத்தல், மாநிலங்களில் மேல் சபையை ஏற்படுத்தல் அல்லது ஒழித்தல், மத்திய அரசு நிர்வாகம் புரியும் பகுதிகளை அமைத்தல், பட்டியலில் சேர்க்கப்பட்ட வகுப்பினருக்கும் பகுதிகளுக்கும் நிர்வாகம் அமைத்தல்.

(ii) பாராளுமன்றத்திலுள்ள இரு சபைகளிலும் மூன்றி லிரண்டு பங்கு உறுப்பினர்களின் ஆதரவோடு நிறைவேற்றப் படும் திருத்த மசோதா மொத்தமுள்ள இராச்சியங்களில் குறைந்தது பாதி இராச்சியங்களால் ஆமோதிக்கப்பட வேண்டுமென்பது அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள திருத்த முறைகளில் இரண்டாவதாகும். இந்த முறை ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கவும், மத்திய மாநில நிர்வாக அதிகாரங்களை வழங்குவதற்கும், உச்ச நீதிமன்றம் உயர்நீதிமன்ற அதிகாரங் களை நிர்ணயிப்பதற்கும் மத்திய, மாநில நிர்வாக அதிகாரங் களைப் பிரிப்பதற்கும் பின்பற்றப்பட வேண்டும்.

(iii) அரசியலமைப்பின் ஏனைய ஷரத்துகள் கூட்டத் திற்கு வருகை தந்து வாக்கெடுப்பில் கலந்து கொள்ளும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை அங்கத்தினர் ஆதரவைப் பெறுவதன் மூலம் திருத்தப் படலாம். இந்த அடிப்படையில் கொண்டு வரப்படும் திருத் தங்களுக்கு மாநில சட்டசபைகளின் ஒப்புதல் அவசியமில்லை. கனடா, ஆஸ்திரேலியா நாடுகள் போல இந்திய இராஜ்யங் கள் தம்முடைய அரசியல் சட்டத்தைத் திருத்தும் அதிகாரம் பெறவில்லை.

**4. கூட்டாட்சி அமைப்பு முறை**

கூட்டாட்சித் தன்மையையுடைய பலம் மிக்க மத்திய அரசாங்கத்தைக் கொண்ட அரசொன்றை அரசியலமைப்பு ஏற்படுத்துகிறது. 'இந்திய அரசியல் அமைப்பு கூட்டாட்சி அமைப்பாகும். எனினும் அதில் ஒற்றையாட்சி அம்சங்கள் மேலோங்கியிருக்கின்றன' என்று பேராசிரியர் டி. என். பானர்ஜி அவர்கள் கூறுகின்றார். அரசியல் சட்டத்தில் ஓரிடத்தில் கூடக் கூட்டாட்சி என்ற சொல் பயன்படுத்தப்பட வில்லை. வேண்டுமென்றே இந்தச் சொல் தவிர்க்கப்பட்டிருப்ப தாகத் தோன்றுகிறது. அதற்குப் பதிலாக 'பல மாநிலங் களின் ஐக்கியம் இந்தியா' என அரசியலமைப்பு பறை சாற்று கின்றது. இந்திய அரசியலமைப்பு, யூனியன் அரசாங்கம், இராச்சிய அரசாங்கங்கள் என்ற இருவகை அரசாங்கங் களுக்கு வகை செய்கிறது. எல்லா இனங்களும் இவ்விரு

அரசாங்கங்களுக்கிடையே பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளன. இவை தனித்தனியே மூன்று பட்டியலில் இடம் பெற்றுள்ளன. (i) யூனியன் பட்டியல்; இப்பட்டியலில் யூனியன் பாராளு மன்றம் சட்டம் இயற்றக் கூடிய இனங்கள் எடுத்துத் தரப் பட்டிருக்கின்றன. (ii) இராச்சியப் பட்டியல்; இதில் மாநில சட்டசபைகள் எவை குறித்துச் சட்டங்கள் இயற்றலாம் என்பது குறிப்பிடப்பெற்றிருக்கும். (iii) பொதுப் பட்டியல்; இதன்கண் மத்தியப் பாராளுமன்றமும் இராச்சிய சட்ட சபைகளும் சட்டமியற்றக் கூடிய இனங்கள் தரப்பட்டிருக்கின் றன. எஞ்சியுள்ள ஏனைய அதிகாரங்கள் மத்திய அரசாங்கத் திடம் இருக்கும். மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கங் களும் அவ்வவற்றின் துறைகளில் தனித்தனியே செயல்படும் சுதந்திரம் பெற்றவைகளாகும். ஒற்றை அரசாங்க நாடுகளி லுள்ளவாறு, இராச்சியங்கள் யூனியன் அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்ட நிறுவனங்களல்ல.

## 5. மதச் சார்பு அற்ற அரசு

சமயச் சார்பு அற்ற அரசினை அளித்துள்ளமை அரசியல் சட்டத்தின் மற்றொரு அம்சமாகும். ‘இந்திய நாடு சமயச் சார்பு உள்ளதோ, அற்றதோ, சமயத்தை எதிர்ப்பதோ அல்ல. சமயக்கோட்பாடுகளின் நடவடிக்கைகளினின்றும் விலகி நிற்கின்றது. இங்ஙனமாக சமயம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் நடுநிலைமை வகிக்கின்றது.’ ஒவ்வொரு குடி மகனுக்கும் தான் விரும்பும் எம்முறையிலும் வழிபாடு செய்ய உரிமை அளிக்கப்பட்டுள்ளது. மத, நிற, கொள்கை காரண மான வேறுபாடுகள் அடிப்படையில் வித்தியாசம் பாராட்டப் படமாட்டாது. சமயங்களுக்கிடையே பாகுபாடில்லாமல் எல்லாவற்றையும் ஒன்றாகக் கருதுகிறது. சமயச் சார்பற்றத் தன்மையென்பது சமய நம்பிக்கைகள் எதையும் அரசு ஏற் காமல் நடுநிலைமை வகிப்பதைக் குறிக்கும்.

## 6. பாராளுமன்ற முறை அரசாங்கம்

நம்முடைய அரசியலமைப்பின் மற்றுமொரு முக்கியமான அம்சம், தேசிய மட்டத்திலும் இராச்சியங்கள் மட்டத்திலும் அது பாராளுமன்ற முறை அரசாங்கத்தை ஏற்படுத்து வதாகும். அது அமெரிக்க ஜனாதிபதி முறையைப்போலல் லாமல் ஆங்கிலேய அமைச்சரவை முறையைப் பின்பற்று கிறது. இங்கிலாந்து நாட்டு அரசியாரைப்போல இந்தியக் குடியரசுத் தலைவர் சட்ட பூர்வமான தலைவரேயாவார். ஜனாதி

பதிக்கு அவருடைய பணிகளைச் செய்வதற்கு ஆலோசனை கூற வும் உதவி செய்யவும் ஒரு அமைச்சர் கழகத்திற்கு அது ஏற் பாடு செய்கிறது. ஜனாதிபதி பிரதம மந்திரியையும், பிரதம மந்திரியின் ஆலோசனையின் பேரில் இதர மந்திரிகளையும் நிய மிக்கிறார். அமைச்சரவை கூட்டாக லோக்சபைக்குப் பொறுப் புடையதாக இருக்கிறது. பாராளுமன்றமுறை அரசாங்கத் தில் அமைச்சர் கழகந்தான் உண்மையான நிர்வாகமாகும். அக்கழகம் லோக் சபையின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கும்வரையில்தான் பதவியில் இருக்கும். ஜனாதிபதி அரசியல் விவகாரங்களில் பங்கெடுத்துக் கொள்வதில்லை. அங்ஙனமே, இராச்சியங்களிலுள்ள கவர்னர்களும் பெய ரளவுத் தலைவர்களாக இருக்கிறார்கள்.

### 7. அடிப்படை உரிமைகள்

ஒவ்வொரு குடிமகனுக்கும் உத்திரவாதமளிக்கப் பட்டுள்ள பல அடிப்படை உரிமைகளை அரசியலமைப்பு வழங்குகிறது. இந்த அடிப்படை உரிமைகள் அரசியலமைப் பின் மூன்றாம் பகுதியில் 12 முதல் 35 முடிய உள்ள விதிகளில் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளை, பரந்த அடிப் படையில் ஏழுவகைகளாகப் பிரிக்கலாம். அவைகளாவன: (அ) சமத்துவ உரிமை (ஆ) சுதந்திர உரிமை (இ) சுரண்டலை எதிர்க்கும் உரிமை (ஈ) சொத்துரிமை (உ) பண்பாட்டு, கல்வி உரிமை (ஊ) சமய உரிமை (எ) சட்டப்பூர்வமான தீர்வு களுக்கான உரிமை ஆகியவைகளாகும். இந்த உரிமைகள் மறுக்கப்பட்டாலோ அல்லது சரியானபடி வழங்கப்படாமல் போனாலோ அவைகளின் பரிகாரத்திற்கு நீதி மன்றங்களின் தலையீட்டைக் கோர அரசியலமைப்பு வகைசெய்கிறது. அடிப்படை உரிமைகளின்காப்பு உச்சநீதிமன்றத்தின் பொறுப்பில் விடப்பட்டிருக்கிறது. அரசியலமைப்பில் இவ் வுரிமைகள் சேர்க்கப்பட்டிருப்பது அரசியல் சட்ட வரலாற் றில் முக்கியமானதொரு சாதனையாகக் கருதப்படுகிறது.

### 8. அரசுக் கொள்கை பற்றிய நெறிசெய் நியதிகள் அல்லது வழிகாட்டு நெறிகள்

அரசியலமைப்பின் சிறப்பான அம்சம் அதன் நான்காம் பகுதியிலுள்ள வழிகாட்டு நெறிகள். இந்நெறிகள் அரசிய லமையில் சேர்க்கப்படுவதற்கு மூலாதாரமாக இருந்தது அயர்லாந்து நாட்டு அரசியலமைப்பில் காணப்படும் நெறி களாகும். இந்நெறிகள் மக்களினுடைய நலனைக் கருத்தில்

கொண்டு, முடிந்தவரையில் தகுந்த நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதை உணர்த்துவதற்காக, இந்நெறிகள் அரசாங்கத்தால் நிறைவேற்றப்பட வேண்டுமென்று எவரும் வற்புறுத்தவோ அல்லது நீதிமன்றத்தின் தலையீட்டைக் கோரவோ முடியாது. இந்நெறிகள் பற்றிய விளக்கத்தைப் பிறிதோரிடத்தில் காணலாம்.

**9. ஒரே குடிமையுரிமை**

அமெரிக்க அரசியலமைப்பைப் போலன்றி இந்திய அரசியலமைப்பு ஒரே குடிமையுரிமையைத்தான் மக்களுக்கு வழங்குகிறது. இமயம் முதல் குமரி வரை உள்ள அனைவரும் இந்தியக் குடிமக்களேயன்றி அவர்கள் வாழுகின்ற இராச்சியங்களின் குடிமையுரிமை பெற்றவர்களாகக் கருதப்படுவதில்லை.

**10. நீதித்துறைச் சுதந்திரம்**

நம் அரசியலமைப்பின் முக்கியமானதும், மதிக்கத்தக்கதுமான மற்றுமொரு அம்சம் நீதித்துறைக்கு அளிக்கப்பட்டிருக்கும் சுதந்திரம். அரசாங்கத்தின் சர்வாதிகாரத்திலிருந்து தனிநபரின் சுதந்திரத்தைக் காக்கவும், பாதுகாப்பளிக்கவும் நிர்வாகம் அல்லது அரசியல் கட்டுப்பாடுகளுக்கு அப்பாற்பட்ட உச்சநீதிமன்றம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உச்சநீதிமன்றத்தின் மற்றுமொரு பணி அரசியலமைப்பை விளக்குவதும் அதை நிலை நாட்டுவதுமாகும். அரசாங்கத்தின் ஒவ்வொரு உறுப்புக்கும் சில எல்லைகளை அரசியலமைப்பு நிச்சயமாக ஏற்படுத்துகிறது. அந்த எல்லைகளைத்தாண்டி அவை செயற்படுமானால் அவைகளின் எல்லைகளைக் கோடிட்டுக் காட்டுவதும், பாராளுமன்றம் இயற்றும் சட்டங்கள் அரசியல் சட்ட சம்மதமானவையல்ல என்று அறிவிப்பதும் உச்சநீதிமன்றத்தின் பொறுப்புகளாகும்

# 3. அரசியலமைப்பைத் திருத்தும் முறை

பொதுவாகக் கூட்டாட்சி அரசியலமைப்புகளெல்லாம் நெகிழாத வகையைச் சேர்ந்தவைகளாகவும் எளிதில் மாற்ற முடியாதவைகளாக இருப்பதும் இயல்பு. அத்தகைய அரசியலமைப்புகளில் தீவிரமானவகையில் நெகிழாதத் தன்மையையுடையது அமெரிக்க நாட்டு அரசியலமைப்பாகும். அதற்கு மாறாக இந்திய அரசியலமைப்பு நெகிழாத் தன்மையில் சற்று குறைவாகவுள்ளது. அதாவது அரசியலமைப்பை மாற்றுவதற்காகக் குறிப்பிடப்பட்டுள்ள முறை இங்கிலாந்து நாட்டிலுள்ளது போல நெகிழ்ச்சியுடையதாகவோ அல்லது அமெரிக்காவிலுள்ளதுபோல கடினமானதாகவோ இல்லை. இந்திய அரசிலமைப்பை மாற்றுவற்கான முறை அதன் 368ஆம் விதியில் தரப்பட்டிருக்கிறது. மொத்தத்தில் மூன்று முறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் பின் வருமாறு :

அரசியலமைப்பின் சில பகுதிகள் கடினமான முறையைப் பின்பற்றித்தான் மாற்ற முடியும். இதன்படி, மாற்ற மசோதாவொன்று பாராளுமன்றத்தின் எந்த சபையில் வேண்டுமானாலும் தாக்கல் செய்யப்படலாம். அத்தகைய மசோதா பாராளுமன்றத்தின் ஒவ்வொரு சபையிலும் மொத்தமுள்ள உறுப்பினர்களில் பெரும்பான்மையோராலும், வாக்கெடுப்பில் கலந்து கொள்பவர்களின் மொத்த எண்ணிக்கையில் மூன்றிலிரண்டு பங்கு உறுப்பினர்களின் ஆதரவோடும் நிறைவேற்றப்படவேண்டும். இவ்வாறு நிறைவேற்றப்படும் மசோதா, இந்திய யூனியனிலுள்ள இராச்சியங்களில் குறைந்தது சரிபாதி இராச்சிய சட்டசபைகளால் ஏற்றுக் கொள்ளப்படவேண்டும். அதன் பிறகு அது ஜனாதிபதிக்கு அனுப்பப்பட்டு அவரது இசைவு கிடைத்தவுடன்

சட்டமாகிவிடும். இந்த அடிப்படையில் மாற்றப்படக்கூடிய அரசியலமைப்பின் பகுதிகள் வருமாறு :

(அ) ஜனாதிபதித் தேர்தல்,

(ஆ) யூனியன் நிர்வாக அதிகாரத்தின் வரம்பு,

(இ) இராச்சியங்களின் நிர்வாக அதிகாரத்தின் வரம்பு,

(ஈ) யூனியன் பிரதேசங்களுக்கான உயர்நீதி மன்றங்கள் பற்றியவை,

(உ) யூனியன் நீதித்துறை,

(ஊ) இராச்சியங்களிலுள்ள உயர்நீதி மன்றங்கள்.

(எ) யூனியன் இராச்சியங்களுக்கிடையிலான சட்ட சம்பந்தமான உறவு,

(ஏ) பாராளுமன்றத்தில் இராச்சியங்களின் பிரதிநிதித்துவம்,

(ஒ) அரசியலமைப்பு மாற்றம் பற்றிய ஷரத்துக்கள், மேற்சொல்லப்பட்ட முறையைப் பின்பற்றி 1971இல் அரசியலமைப்பிற்கான இருபத்திநான்காவது மாற்றச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இச்சட்டம், சொத்துரிமையுள்பட அரசியலமைப்பின் எந்தப் பகுதியை வேண்டுமானாலும் மாற்றுவதற்குப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் வழங்குகிறது.

(2) இரண்டாவது முறைப்படி, சில பகுதிகளை பாராளுமன்றத்தின் இருசபைகளிலும் சாதாரண பெரும்பான்மை ஆதரவுடன் நிறைவேற்றப்படலாம். இதற்கு இராச்சியங்களின் சம்மதம் தேவையில்லை. ஆனால் இந்த அடிப்படையில் மாற்றப்படக் கூடியப் பகுதிகள் மிகச்சிலவேயாகும். அவை கீளாவன:

(அ) புது இராச்சியங்களின் அமைப்பு.

(ஆ) இருக்கின்ற இராச்சியங்களை மாற்றியமைத்தல்,

(இ) இராச்சியங்களில் மேல் சபைகளை ஏற்படுத்தல் அல்லது ஒழித்தல்,

(ஈ) இந்தியக் குடிமகனுக்கானத் தகுதிகள்.

(உ) பட்டியலிலுள்ளப் பகுதிகள், பழங்குடியினர், நிர்வாகம் சம்பந்தப்பட்ட ஏற்பாடுகள்.

(3) அரசியலமைப்பிலுள்ள இதர பகுதிகளெல்லாம் பாராளுமன்றத்திலுள்ள ஒவ்வொரு சபையிலுமுள்ள மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையோராலும் கூட்டத்தில் கலந்து கொண்டு வாக்களிப்பவர்களின் எண்ணிக்கையில் மூன்றிலிரண்டுபங்கு உறுப்பினர்களின் ஆதரவோடும் மாற்றப்படலாம்.

மாற்ற மசோதா நிறைவேற்றம் பற்றிய நடைமுறைகளைப் பற்றிய சில கருத்துகளை இங்கு கவனத்தில் கொள்வது நல்லதாகும். முதலாவதாக, எல்லா மாற்றங்களும் யூனியன் பாராளுமன்றத்தால்தான் கொண்டுவரப்பட வேண்டுமென்பதைக் கவனிக்க வேண்டும். இராச்சிய சட்டசபைகள் மாற்ற மசோதாக்களைக் கொண்டுவர முடியாது. இரண்டாவதாக, இராச்சியங்கள் சம்பந்தப்பட்ட அரசியலமைப்புப் பகுதிகளைக்கூட இராச்சியங்கள் மாற்றுவதற்கு அதிகாரம் பெற்றிருக்கவில்லை. மூன்றாவதாக பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட மாற்ற மசோதாக்களை, இராச்சிய சட்ட சபைகள் நிறைவேற்றுவதற்கோ அல்லது நிராகரிப்பதற்கோ காலவரையறை எதுவும் நிச்சயிக்கப்படவில்லை. கடைசியாக, இருபத்திநான்காவது மாற்றம் கொண்டுவரப்படுவதற்கு முன்பாக, ஒவ்வொரு மாற்ற மசோதாவிற்கும் ஜனாதிபதியின் இசைவு பெறப்பட வேண்டுமென்பதும் ஒரு நிபந்தனையாகும். ஜனாதிபதி இசைவு தரலாம் அல்லது மறுக்கலாம். ஆனால், தற்போது இசைவு மறுக்கப்பட முடியாது.

மேற்கூறப்பட்டவைகளிலிருந்து இந்திய அரசியலமைப்பை மாற்றுவது இரண்டாவது முறையடிப்படையில் எளிதெனத் தோன்றினாலும் அந்த முறையடிப்படையில் மாற்றக்கூடியப் பகுதிகள் மிகக் குறைவென்பது தெளிவாகும். பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் குறிப்பிட்ட எந்தவொரு கட்சிக்காவது மேற்சொல்லப்பட்டவாறு பெரும்பான்மை பலமிருந்தால்தான் அரசியலமைப்பு மாற்றங்கள் சாத்தியமாகும். எனவே, இந்திய அரசியலமைப்பு நெகிழாத வகையைச் சேர்ந்ததென்பதே சரியான கருத்தாகும்.

# 4. ஆதார உரிமைகள்

அவற்றின் பொருளும் முக்கியமும்: உரிமைகள் என்பவை மனிதன் மனிதனாக சமூகத்தில் வாழ்வதற்குத் தேவைப் படுகின்ற சில வாய்ப்புகள் என்பது அரசியல் மூதறிஞர் களின் கருத்தாகும். இவைகள் காலப் போக்கில் பல போராட்டங்களின் விளைவாக மக்களுக்குக் கிடைத்தவை களாகும். மக்கள் சில சமயங்களில் வல்லாட்சியையும், கொடுங்கோலாட்சியையும் எதிர்த்துப் போராடியதன் விளை வாகவோ அல்லது சமூகத்திலிருந்த கொடுமைகளைத் தாங்க முடியாமல் அவைகளை அகற்ற வேண்டுமென்று கிளர்ச்சிகள் செய்து வெற்றி பெற்றதன் காரணமாகவோ அவர்களுக்கு அளிக்கப்பட்டவையாகும். எடுத்துக் காட்டாக இங்கிலாந்து நாட்டில் அரசர்களுக்கும் பொதுமக்களுக்குமிடையில் 13ஆம் நூற்றாண்டிலிருந்தும் பிரான்சில் 18ஆம் நூற்றாண்டிலிருந்தும் நடைபெற்ற போராட்டங்களையும், புரட்சிகளையும் சொல்ல லாம். இங்கிலாந்தில் 1215ஆம் ஆண்டில் ஜான் மன்னர் பிரபுக்களுக்கு வழங்கிய பெருஞ்சாசனத்தையும், இரத்தம் சிந்தாப் புரட்சிக்குப் பிறகு 1691இல் அளிக்கப்பட்ட உரிமை கள் மசோதாவையும் குறிப்பிடலாம். அங்ஙனமே பிரெஞ்சுப் புரட்சியின்போது அறிவிக்கப்பட்ட 'மனித உரிமைகள்' பிரகடனத்தையும் சொல்லலாம். அமெரிக்க ஐக்கிய நாடு களிலும் அரசியலமைப்பிற்குப் பிற்சேர்க்கையாக உரிமைகள் மசோதா சேர்க்கப்பட்டதையும் அறியலாம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளையும், ஐரோப்பிய நாடுகளையும் பின்பற்றி இருபதாம் நூற்றாண்டில் குறிப்பாக 1945ஆம் ஆண்டிற்குப் பிறகு சுதந்திரம் பெற்ற ஆசிய, ஆப்பிரிக்க நாடு களும் அரசியலமைப்பொன்றைத் தங்களுக்கென எழுத ஆரம் பித்த காலத்தில் இந்த உரிமைகளைத் தங்களுக்குத் தோன்றிய

பெயர்களில் அரசியலமைப்பில் சேர்த்துக் கொண்டன. இவ்வாறு சேர்க்கப்பட்ட உரிமைகளில் சிலவற்றின் தன்மையையும் அவசியத்தையும் பொறுத்து சில சமயங்களில் சில நாடுகளில் ஆதார உரிமைகள் என்றழைக்கப்பட்டன. பொதுவாக ஆதார உரிமைகள் எனப்படுபவை மககளுக்கு மிகவும் இன்றியமையாத உரிமைகளாகக் கருதப்படுபவைகளாகும். உதாரணமாக, வாழ்வதற்கும் சுதந்திரமாக இருப்பதற்கும், சொத்துகளைப் பெறுவதற்கும், அனுபவிப்பதற்கும் தரப்படும் உரிமையை ஆதார உரிமை எனலாம்.

இந்த உரிமைகளெல்லாம், எழுதப்படுகின்ற அரசியலமைப்புகளின் ஒரு பகுதியாகச் சேர்க்கப்படுவது இந்தக் காலத்தில் வழக்கமாகக் கருதப்படுகிறது. இவ்வாறு உரிமைகள் அரசியலமைப்பின் பகுதியாகச் சேர்க்கப்படுவதன் முக்கிய நோக்கம், சாதாரண முறைகளைப் பின்பற்றி அரசாங்கங்கள் இவைகள் மக்களுக்குக் கிடைக்காதவாறு செய்யமுடியாமல் செய்யவேண்டுமென்பதேயாகும். குறிப்பாக, ஜனநாயக முறை அரசாங்கம் நடைபெறும் இக்காலத்தில், ஆட்சி பெரும்பான்மையோரால் நடத்தப்படுவதால், அவர்களால் சிறுபான்மையோர் உரிமைகள் கட்டுப்படுத்தப்படலாம் அல்லது பறிக்கப்படலாம். இத்தகைய உரிமை மறுப்பு தடுக்கப்பட வேண்டுமென்றுதான் உரிமைகள் அரசியலமைப்புச் சட்டத்திலேயே சேர்க்கப்படுகின்றன.

அரசாங்கத்தாலும் அதிகாரத்திலிருப்பவர்களாலும் உரிமைகள் மறுக்கப்படலாமென்பது போலவே, தனிப்பட்டவர்களும் இந்த உரிமைகளைத் தவருகப் பயன்படுத்தலாம். இத்தகைய உபயோகத்தைத் தடை செய்வதற்காக, அவைகளின் உபயோகம் பற்றி சில கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டியது அவசியமாகிறது. முக்கியமாக நாட்டின் நன்மை, பாதுகாப்பு, முன்னேற்றம் ஆகியவைகளைக் குறிக்கோள்களாகக்கொண்டு அவசியமேற்படும்போது சில கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டியது நியாயமானதாகத் தோன்றுகிறது. பொதுவாக நாம் இவ்விடத்தில் அறியத்தக்கது அளவிற்கு மீறிய கட்டுப்பாடு அல்லது தளையற்ற உரிமை தனி நபருக்குஞ்சரி, சமூகத்திற்குஞ்சரி நன்மை பயக்காதென்பதேயாகும். இந்த முன்னுரையோடு இந்திய அரசியலமைப்பில் எந்த அளவிற்கு இந்த உரிமைகள் உத்திரவாதமளிக்கப்படுகின்றன என்பதைக் காணலாம்.

**இந்திய மக்களுக்கு உத்திரவாதமளிக்கப்பட்டுள்ள ஆதார உரிமைகள் வருமாறு:** சமத்துவம், சுதந்திரம், சமயம், பண்பாடு, கல்வி, சொத்து ஆகியவற்றிற்கான உரிமைகளும் சுரண்டலுக்கெதிரான உரிமையும், சட்டபூர்வமான முறையில் தீர்வுகள் காணும் உரிமை ஆகியவைகளுமாகும்.

**1. சமத்துவ உரிமை:** அரசியலமைப்பின் 14ஆம் விதி சட்டத்தின் முன் எல்லா நபர்களும் சம உரிமையுடையவர் களெனக் கூறுகிறது. அது சமயம், இனம், சாதி, பால் அல்லது இடம் ஆகிய அடிப்படைகளில் வித்தியாசமாக நடத்தப்படுவதைத் தடை செய்கிறது. அது தீண்டாமையை ஒழித்து எல்லோருக்கும் உத்தியோகம் கிடைப்பதில் சம உரிமை வழங்குகிறது.

**2. சுதந்திரத்திற்கான உரிமை:** அரசியலமைப்பு விதி 19 (I) ஒவ்வொரு குடிமகனுக்கும் (அ) பேச்சு, சொல் சுதந்திரம் (ஆ) ஆயுதங்கள் இல்லாமல் அமைதியாகக் கூடுதல் (இ) கழகங்கள் அமைத்தல் (ஈ) நாட்டின் எப் பகுதிக்கும் சுதந்திரமாகச் செல்லுதல் (உ) இந்தியாவின் எந்தப் பகுதியில் வாழும் அல்லது குடியேறும் (ஊ) சட்ட பூர்வமான எந்தத் தொழில் அல்லது வியாபாரம் செய்யும் உரிமைகளை வழங்குகிறது.

எனினும் 19ஆம் விதியின் இரண்டாம் பகுதி பேச்சுச் சுதந்திரத்திற்கும், நாடு முழுவதிலும் எங்கு வேண்டுமானாலும் நடமாடும் சுதந்திரத்திற்கும் சில தடைகளை அவசியமான போது விதிப்பதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம் வழங்கு கிறது. இது நாட்டின் பாதுகாப்பு, அயல்நாடுகளுடனான இந்தியாவின் உறவுகள் ஆகியவை பாதிக்கப்படாமலிருப்பதற் காகவெனச் சொல்லப்படுகிறது.

**3. சமயச்சுதந்திரம்:** 25ஆம் விதி கூறுவதாவது. (அ) எல்லா நபர்களும் அவர்கள் விருப்பப்படியான சமயத்தைப் பின்பற்றுவதற்கும், சமயத்தைப் பிரச்சாரம் செய்வதற்கும் உரிமை தரப்படுகிறார்கள். (ஆ) சீக்கியர்கள், கிர்பான்களை அணிவதற்கும் எடுத்துச் செல்வதற்கும் உரிமையுடைய வர்கள். (இ) சமூக சீர்திருத்தங்களை நோக்கமாகக் கொண்ட சட்டங்களை அரசாங்கம் இயற்றுவதற்கும், இந்து சமய, சீக்கியர்கள், பௌத்தர்கள், ஜைனர்கள் நிலையங்களை இந்து சமயத்தைச் சேர்ந்த எல்லா பிரிவினர்களுக்கும் திறந்து

விடவும் அரசாங்கத்திற்கு அதிகாரம் வழங்குகிறது. முற்றிலும் அரசாங்க உதவி கொண்டு நடத்தப்படும் கல்வி நிலையங்களில் சமயக் கல்வி புகட்டப்படுவது 28ஆம் விதிப்படித் தடுக்கப்பட்டாலும், 26ஆம் விதி ஒவ்வொரு சமயத்தையும் சேர்ந்த நிலையங்கள் தர்ம சொத்துகளைக்கொண்டு மதப் பிரசாரம் செய்வதைத் தடை செய்யவில்லை. மேற் சொல்லப் பட்ட உரிமைகளிலிருந்து இந்தியா எந்த சமயத்தையும் சாராத அரசு என்பதைத் தெளிவாக உணரலாம்.

**4. பண்பாட்டு கல்வி உரிமைகள்:** இந்தியக் குடிமக்கள் அனைவரும் பெரும்பான்மை, சிறுபான்மை என்ற வேறு பாடில்லாமல் தங்களுடைய கலாச்சாரத்தைப் பரப்பவும், கல்வி பெறவும் உரிமை வழங்கப்பட்டிருக்கிறார்கள். 29ஆம் விதி அவரவர் மொழி, எழுத்து ஆகியவற்றைக் கற்கவும் உரிமை வழங்குகிறது.

**5. சுரண்டலுக்கெதிரான உரிமை:** நமது அரசியலமைப்பு தனி நபரின் கண்ணியத்தைப் போற்றி அரசாலோ அல்லது தனிப் பட்டவர்களாலோ எவரும் சுரண்டப்படுவதினின்றும் காப் பாற்றுகிறது. 23ஆம் விதி விபச்சாரத்தையும், பிச்சையெடுப் பதையும், கட்டாயமாக வேலை வாங்குவதையும் தடை செய் கிறது. அது அடிமைத்தனத்தையும் பெண்களை விபசாரத் திற்கோ அல்லது இதரத் தகாத காரியங்களுக்கோ பயன் படுத்துவதைத் தண்டனைக்குரிய குற்றங்களாக அறிவிக்கிறது. அது பதினான்கு வயதிற்குட்பட்டக் குழந்தைகளைத் தொழிற் சாலைகளிலோ அல்லது சுரங்கங்களிலோ வேலைக்கமர்த்து வதைத் தடை செய்கிறது. எனினும், பொதுக்காரியங் களுக்கு, சிறப்பாக இராணுவப் பயிற்சிக்கு ஆட்கள் அரசால் கட்டாயமாகச் சேவைக்கு அழைக்கப்படுவதை அரசுக்கு வழங்குகிறது.

**6. சொத்துரிமை:** விதிகள் 31, 31எ, 31பி தனிப்பட்ட வர்களும், டிரஸ்டுகளும் சொத்துகளைப் பெற்றிருப்பதற்கும் நிர் வகிப்பதற்கும் உரிமையளிக்கின்றன. சட்டபூர்வமான முறை யாலல்லாமல், எந்தவொரு நபரும் சொத்தையிழக்குமாறு செய்யப்படக்கூடாதென்று அரசியலமைப்புக் கூறுகிறது. பொதுக்காரியத்திற்காக, எந்தச் சொத்தையும் தகுந்த நஷ்ட ஈட்டின் பேரில் அரசு கட்டாயமாக எடுத்துக் கொள்ளலா மென்றும் அது கூறுகிறது. அரசுக்குத் தரப்பட்டுள்ள இந்த அதிகாரம் பல ஐயப்பாடுகளுக்கும், வாக்குவாதங்களுக்கும்

இடம் தந்திருக்கிறது. எனவே, இதுபற்றி அரசியலமைப்பிலுள்ள சம்பந்தப்பட்ட விதிகள் அரசியலமைப்புக்குக் கொண்டு வரப்பட்ட சில மாற்றங்களால் இப்போது திருத்தியமைக்கப்பட்டிருக்கின்றன.

**7. சட்டபூர்வமான முறையிலான தீர்வுகளுக்கு உரிமை:** 32ஆம் விதி, ஆதார உரிமைகளின் நிறைவேற்றத்திற்கு உச்ச நீதிமன்றத்திற்கு அதிகாரம் வழங்குகின்றது. அரசு, மக்களுடைய உரிமைகளைப் பறிக்கும்போதோ அல்லது அவைகளை மீறி நடக்கும்போதோ உச்ச நீதிமன்றத்திடம் நீதி கோரி மக்கள் வழக்குத் தொடர அது அவர்களுக்கு உரிமையளிக்கிறது. இந்த நீதித்தீர்வுக்கு வகை செய்யப்படாமலிருந்தால், ஆதார உரிமைகள் மக்களுக்கு வழங்கப்பட்டதனால் பலனேதுமில்லை. இத்தகைய சட்டபூர்வமான தீர்வுகள் ‘அரசியலமைப்பின் உயிரும் உள்ளமும் போன்றவை’ என்று டாக்டர் அம்பேத்கரினால் விளக்கப்பட்டிருக்கின்றன. இந்த ஆதாரஉரிமைகளைக் காப்பதற்கும் அவைகளை மக்கள் அனுபவிக்குமாறு செய்வதற்கும் உச்சநீதிமன்றத்திற்கு நம் அரசியலமைப்பு ‘நீதிப்புனராய்வு’ அதிகாரத்தை வழங்கியிருக்கிறது. அது ஹேபியஸ் கார்ப்பஸ் (Habeus Corpus) மாண்டமஸ் (Mandamus), புரொகிபிஷன் (Prohibition), குவோ வாரண்டோ (Quo Warranto), செர்சியோரரி (Certiorari) போன்ற ஆணைகளைப் (Writs) பிறப்பிக்க முடியும்.

**8. ஆதார உரிமைகள் பற்றிய ஆய்வு**

நம் அரசியலமைப்பில் எல்லா ஆதார உரிமைகளும் சேர்க்கப்படவில்லையென்பது முதல் குறையாகும். அதோடு, சோவியத் அரசியலமைப்பைப்போன்று கடமைகளும் சேர்க்கப்பட்டிருக்க வேண்டுமென்று திறனாய்வாளர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர்கள். இரண்டாவதாக, அரசியலமைப்பு மக்களை ஏமாற்றுவதாக இருக்கிறது என்பதாகும். அது ஒரு கையால் கொடுப்பதை பிறிதொரு கையால் எடுத்துக் கொண்டு விடுகிறது. ஆதார உரிமைகளை அனுபவிப்பதற்குப் பல தடைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அமைதிக் காலத்தில்கூட பாதுகாப்புச் சட்டத்தைப் பயன்படுத்தி மக்களுடைய உரிமைகள் மறுக்கப்படலாம். மூன்றாவதாக, ஜனாதிபதிக்குத் தரப்பட்டிருக்கின்ற அவசர காலப் பிரகடன அதிகாரங்கள் ஆதார உரிமைகளை நிறுத்தி சர்வாதிகாரத்தை ஏற்படுத்தக் கூடுமென்று சொல்லப்படுகிறது. கடைசியாக,

எடுத்துக் கொள்ளப்பட்ட சொத்துக்களுக்குத் தரப்பட வேண்டிய நஷ்ட ஈட்டை சட்டத்துறை நிர்ணயஞ் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டிருப்பது மக்களுடையச் சொத்துரிமையைப் பறிப்பதாக இருக்கிறதென்றும் கருதப் படுகிறது. இதனால் மக்கள், நஷ்டஈட்டைப் பொறுத்தவரை யிலும் அரசின் தயவை நம்பியிருக்க வேண்டியவர்களாயிருக் கிறார்கள். ஜனநாயகத்தில் கட்சி ஆட்சியே நடைபெறுவதால், அரசாங்கத்திற்கெதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்களுடைய சொத்துக்கள் பாதிக்கப்பட்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை யென்றும் வாதிக்கப்படுகிறது. ஆனால் இத்தகைய வாதங்கள் சமூகநலஅரசின் நோக்கத்திற்கு எதிரானவை என்று எளிதில் சொல்லி விடலாம். பலர் நலன் கருதி சிலரது உரிமைகள் பாதிக்கப்பட்டால் பரவாயில்லை என்னுங் கருத்து இப் போது மேலோங்கியிருக்கிறது.

# 5. வழிகாட்டி நெறிகள்

## Directive Principles of State Policy

அரசுக்கு வழி காட்டுவதாக அமைந்திருக்கும் நெறிகள் அரசியலமைப்பின் நான்காம் பகுதியில் காணப்படுகின்றன. வழிகாட்டி நெறிகள் அரசால் பின்பற்றப்படவில்லையென்று நீதிமன்றங்களில் வழக்காட முடியாதென்றாலும், அவைகளை இயன்ற அளவிற்கு அரசு செயலுக்குக் கொண்டு வர வேண்டும் என்று 37ஆம் விதி குறிப்பிடுவதிலிருந்து அவை எத்தனை முக்கியம் வாய்ந்தவை என்பது புலனாகும். இந்த நெறிகள் அரசியலமைப்பின் முகவுரையில் சொல்லப்பட்டிருக்கும் நோக்கங்களேயாகும் என்றால் தவறாகாது. இவைகள், மத்தியிலுள்ள அரசாங்கமும், மாநிலங்களிலுள்ள அரசாங்கங்களும் சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும் நீதியையும் ஏற்படுத்துவதற்கு உதவியாகவும் வழிகாட்டியாகவுமுள்ள போதனைகளைப் போன்றவையெனலாம்.

இந்த வழிகாட்டி நெறிகள் அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டதுபற்றி டாக்டர் அம்பேத்கார் குறிப்பிட்டதாவது, 'வழிகாட்டிநெறிகள் பயனற்றவை என்று சொல்வதால் பயனில்லை என்ற கருத்துப்படி அவைகள் பொருளாதார ஜனநாயகத்தை ஏற்படுத்தும் நமது நோக்கத்தை வலியுறுத்துகின்றன. அவைகள் 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டப்படி கவர்னர்—ஜெனரலுக்கும் குடியேற்ற நாடுகளிலிருந்த கவர்னர்களுக்கும் அவர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறைபற்றி பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளைப் போன்றவை. அவைகளுக்கும் வழிகாட்டி நெறிகளுக்குமுள்ள வித்தியாசம், அவைகள் நிருவாகத்திற்கும், சட்டத்துறைக்கும் பிறப்பிக்கப்பட்டவைகளாகும். ஆனால், வழிகாட்டி நெறிகள் இங்கு அரசுக்கே பிறப்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்த

நெறிகள் இல்லாமல் போகுமானால் நம்முடைய பொருளாதார நோக்கங்கள் என்ன? நாம் எத்தகைய சமூகஅமைப்பை விரும்புகிறோம்? என்பது தெளிவாகத் தெரியாமல் போகக் கூடும்.' இத்துறையில் நாம் அயர்லாந்து அரசியலமைப்புக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். ஏனெனில், அயர்லாந்து அரசியலமைப்பைப் பார்த்துத்தான் வழிகாட்டி நெறிகளை நாம் அமைத்துக் கொண்டிருக்கிறோம். இத்தகைய நெறிகள் ஆஸ்திரிய, ஸ்பானிய, பிரெஞ்சு ஜெர்மானிய அரசியலமைப்பு களிலும் காணப்படுகின்றன.

### வழிகாட்டி நெறிகளும் ஆதார உரிமைகளும்

வழிகாட்டி நெறிகளுக்கும் ஆதார உரிமைகளுக்கு மிடையே பெரிய வேறுபாடிருக்கிறது. கிளெட்கில் (Gledhill) என்பாருடைய கருத்துப்படி, 'ஆதார உரிமைகள் எனப்படு பவை அரசாங்கம் ஒரு சிலவற்றைச் செய்வதைத் தடை செய்பவை. ஆனால், வழிகாட்டி நெறிகள் ஒரு சிலவற்றைச் செய்ய வேண்டுமென்று சொல்பவை.' பிறிதொரு முக்கிய மான வித்தியாசம், ஆதார உரிமைகளுக்குக் காப்பாக நீதித் துறையிருக்கிறது. ஆனால், வழிகாட்டி நெறிகளுக்கு ஒழுக்க உணர்ச்சிதான் ஆதாரமாகும். முன்னால் சொல்லப்பட்டவை நீதித்துறை தீர்ப்பிற்குட்பட்டவை. பின்னால் சொல்லப் பட்டவை நீதித்துறைக்கு அப்பாற்பட்டவை.

### வழிகாட்டி நெறிகளின் வகைகள் :

வழிகாட்டி நெறிகள் (அ) சோசலிசக் கொள்கைகள் அல்லது பொதுநல அரசை ஏற்படுத்துவதற்குத் துணை நிற்பவை (ஆ) காந்தியக் கொள்கைகள் அல்லது சிந்தனை களுக்கேற்றவை (இ) உலக அமைதியை வளர்ப்பதற்கு உதவுபவை என்று மூன்று வகைகளாகப் பிரிக்கப்படலாம்.

(அ) பொதுநல அரசை அடைவதற்கான வழிகளாவன: (1) வாழ்க்கைக்குத் தேவையான வழி வகைகளை அளிப்பது; (2) ஏகபோகத்தை ஏற்படுத்தாத வகையில் மூலப்பொருள் களை விநியோகஞ் செய்தல் (3) செல்வம் சிலரிடம் குவிந்து விடாமல் பொருளாதார முறையைச் சீர்திருத்தியமைத்தல் (4) ஆண்களுக்கும், பெண்களுக்கும் அவர்கள் செய்யும் வேலைக்குத் தக்க கூலியளித்தல் (5) ஆண், பெண்கள், குழந்தைகள் சுகாதாரம் கெட்டுப் போகாதபடி பொருத்த மான உத்தியோகம் கிடைக்குமாறு செய்தல் (6) குழந்தை

களும் இளைஞர்களும் சுரண்டப்பட்டு மனநலங்குன்றுதவாறு காப்பளித்தல் (7) தொழில், கல்வி, வேலையில்லாதிருக்கும்போது உதவி அளித்தல், வயதானவர்களுக்கும் நோய் வாய்ப்பட்டவர்களுக்கும் அங்கஹீனமுற்றவர்களுக்கும் உதவியளித்தல் (8) தொழிலாளர்களுக்கு அவர்கள் செய்யும் வேலைக்குத் தகுந்த ஊதியமளித்தல், எவரும் விரும்பத்தக்க வாழ்க்கைத்தரத்தை ஏற்படுத்தித் தருதல், அவசியமான ஓய்வும் கலாச்சார வாய்ப்புகளும் கிடைக்கச் செய்தல் (9) அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்ததிலிருந்து 10 ஆண்டுகளுக்குள் 14 வயதிற்குட்பட்ட குழந்தைகளுக்குக் கட்டாயக் கல்வி அளித்தல் (10) பொது சுகாதாரத்தையும், பொது வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கும் முடிந்த எல்லாவற்றையும் செய்தல் முதலியனவாகும்.

(ஆ) காந்திய நோக்கங்களை அடைய உதவும் நெறிகளாகப் பின் வருவனவற்றைச் சொல்லலாம் (1) அரசு கிராமப் பஞ்சாயத்துகளை அமைத்து அவைகள் தன்னாட்சி உறுப்புகளாகச் செயலாற்றுவதற்குத் தேவையான அதிகாரங்களை அளித்தல் (2) கிராமங்களில் தனிப்பட்டவர்களும், பலர் கூட்டாகவும் குடிசைத் தொழில்களை ஆரம்பித்து நடத்த ஊக்கமளித்தல் (3) கல்வி புகட்டுவதன் மூலமாகவும் பொருளாதார நலன்களைப் பாதுகாப்பதன் மூலமாகவும் தாழ்த்தப்பட்ட சாதியினரும், இனத்தவரும் முன்னுக்கு வருவதற்கு உழைத்தல் (4) மருந்தாகப் பயன்படுத்துவதைத் தவிர இதர உணர்ச்சியூட்டும் குடிவகைகளைத் தடுப்பதை அரசு அதன் தலையாயப் பொறுப்பாகக் கருத வேண்டும் (5) தரமான மாடுகளின் உற்பத்திக்கும், பசுக்களும், கன்றுகளும் கொல்லப்படுவதைத் தடுக்கவும் நடவடிக்கை எடுத்தல் (6) வரலாற்றுப் புகழ் பெற்ற, கலைத்திறன் மிக்க தொல் பொருள்களையும், சின்னங்களையும், இடங்களையும் காப்பாற்றி, பராமரித்தல் (7) நீதித்துறையை நிர்வாகத் துறையினின்றும் பிரிப்பதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளுதல்.

(இ) அரசியலமைப்பின் 51ஆம் விதி (1) பன்னாட்டு அமைதியையும், பாதுகாப்பையும் பெறுவதற்கும் (2) நாடுகளுக்கிடையே கண்ணியமான நல்லுறவை ஏற்படுத்துவதற்கும் (3) பன்னாட்டுச் சட்டத்தையும் உடன்படிக்கைகளையும் மதித்து நடக்கும் உணர்வை வளர்க்கவும், (4) பன்னாட்டுச் **சச்சரவு**களை நடுவர் தீர்ப்புக்கு விடுவதன் மூலமாக அல்லது இதர அமைதியான வழிகளின் மூலமாகத் தீர்த்துக்

கொள்வதற்கு ஊக்கமளித்தல் ஆகியவற்றிற்கான முயற்சிகளை அரசு மேற்கொள்ள வேண்டுமென வலியுறுத்துகிறது.

**வழிகாட்டு நெறிகள் பற்றிய திறனாய்வு**

டாக்டர் வியர் என்பவரது கருத்துப்படி 'வழிகாட்டு நெறிகள், நோக்கங்கள், எண்ணங்களடங்கிய அறிக்கைகளை விட சற்று மேலானவை' யாகும். ஏனெனில், அவைகள் நீதி மன்றங்களால் செயற்படுத்தப்படவேண்டுமென்று வற்புறுத்தப்பட முடியாதவை. அரசியல் நிர்ணய சட்டசபையில் உறுப்பினராகவிருந்த திரு. நாசிருத்தின் அவைகளைப் 'புத்தாண்டு வாழ்த்துகள்' என்றழைத்தார். அவைகள் பொருளாழமுடையவைகளாக இருப்பினும், வெறும் விளம்பரச் சாதனங்களேயாகும். பொதுநல அரசொன்றை அமைப்பது அல்லது குடிமக்களுக்கு நீதி, சுதந்திரம், சமத்துவம் ஆகியவைகளைப் பெற்றுத் தருவதென்பதெல்லாம் புதிதாகச் சுதந்திரம் பெறும் நாடுகளின் வெறும் கூச்சல்களாகி விட்டன. '19ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்துக்கு ஏற்றவை யென்று கருதப்பட்ட சில கொள்கைகளின் கூட்டு 20ஆம் நூற்றாண்டில் இந்தியாவுக்குப் பொருத்தமானவையென்று தவறாகக் கருதப்பட்டது வேடிக்கையாக இருக்கிறதென்று' திரு. ஜென்னிங்ஸ் என்பார் குறிப்பிட்டுள்ளார். இவைகளில் சொல்லப்பட்டுள்ள கருத்துகள் ஒரு தலைமுறைக்கு நீடிக்கும். இன்னும் சில இதைவிட சற்று அதிகமான காலத்திற்கும் நீடிக்கக்கூடும். இது சம்பந்தமாக எழுகின்ற முக்கியமான வினா, 21ஆம் நூற்றாண்டிலும் இந்த வழிகாட்டு நெறிகள் பொருத்தமுடையவைகளாக இருக்குமா என்பதேயாகும்.

திரு. சீனிவாசன் 'வழிகாட்டு நெறிகளின் தொகுப்பு எழுச்சியூட்டுவதாக இல்லை. அவை பொதுப்படையாவும், திரும்பத் திரும்ப வருகின்றவையாகவுமிருக்கின்றன. அவைகள் சரியான முறைப்படி பிரிக்கப்பட்டு, வகையாக அமைக்கப் படவில்லை. இந்தப் பிரகடனம், மிக முக்கியமான பொருளாதார சமூகப் பிரச்சினைகளோடு, முக்கியமற்ற சாதாரணப் பிரச்சினைகளையும் இணைத்திருக்கிறது. அப்பிரகடனம் பழமையையும் புதுமையையும் இணைப்பதோடு அறிவு செறிந்த ஏற்பாடுகளோடு அறிவிற்குப்புறம்பான தப்பெண்ணத்தோடு கூடிய ஏற்பாடுகளையும் சேர்த்து வைக்கிறது,' என்று கூறுகிறார்.

வழிகாட்டு நெறிகள் பற்றிய கடுமையான குற்றச்சாட்டு, அவைகள் புனிதத்தன்மையுடைய நல்லெண்ணங்களே தவிர

சட்ட ஆதாரமற்றவையென்பதாகும். அவைகளை எந்த அரசாங்கமும் உண்மையாக நிறைவேற்றாதாகையால் அவசியமற்றவை. அவைகளில் சொல்லப்பட்டிருக்கின்ற பொருளாதாரக் கொள்கைகள் நிலையான தன்மையையுடையவையல்ல. குற்றங் கூறுபவர்கள் சொல்வதென்னவென்றால் 'அவைகள் அரசியல் தத்துவங்களேயல்லாமல் நடைமுறை அரசியலுக்குகந்தவையல்ல' என்பதாகும்.

**வழிகாட்டி நெறிகளின் முக்கியமும் நன்மைகளும்**

வழிகாட்டி நெறிகள் அறநெறி போன்றவை. அவைகள் அடியோடு உபயோகமற்றவை எனக்கூறமுடியாது. காலத்திற்கேற்றவையல்ல என்றும் சொல்ல முடியாது. குறை கூறுபவர்கள் எல்லாக் காலத்திற்கும் பொருத்தமான ஏற்பாடுகள் தான் இருக்க வேண்டுமென்ற கருத்தில் குறை கூறுகிறார்கள். அப்படியிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. அரசியலமைப்பு அதன் முக்கியத்திற்கேற்ப உடனடியான எதிர்காலத்திற்குத் தேவையான அம்சங்களையுடையதாக இருப்பதில் தவறில்லை.

இரண்டாவதாக, வழிகாட்டிநெறிகள் பொதுநல அரசொன்றை ஏற்படுத்துவதற்கான அடிப்படையை ஏற்படுத்துகின்றன. அரசியலடிப்படையில் ஜனநாயக முறை அரசாங்கத்தை ஏற்படுத்தும் அரசியலமைப்பு, சமூக, பொருளாதார ஜனநாயகம் தழைக்கும் பொதுநல அரசை ஏற்படுத்துவதையும் நோக்கமாகக் கொண்டிருக்கிறதென டாக்டர் அம்பேத்கார் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். நீதிமன்றத்தின் கவனத்திற்கு இக்கொள்கைகள் கொண்டு வரப்பட முடியாதென்பது ஒரு பெரிய குறையாகாது. இக்கொள்கைகளெல்லாம் மாற்ற முடியாதவைகளாக அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டிருந்தால் அவைகளை ஏற்காத அரசியல் கட்சிகள் பதவிக்கு வருகின்றபொழுது அரசியலமைப்பிற்கு மாற்றங்களைக் கொண்டுவந்து திருத்த வேண்டிய அவசியமேற்படும். இதை முன்கூட்டியுணர்ந்திருந்த அரசியலமைப்புப் பிதாக்கள் பரந்த அடிப்படைகளைத் தந்தார்கள். அதற்குமேல் தேவையானவற்றை ஏற்படுத்திக் கொள்ளவேண்டியது அவ்வப்போது ஆட்சிக்கு வரும் கட்சியரசாங்கங்களின் பொறுப்பாகும்.

மூன்றாவதாக, வழிகாட்டி நெறிகள் நீதிமன்றங்களால் கொண்டுசெலுத்தப்பட முடியாதென்றாலும், சட்டங்களை

விளங்குகின்றபோது அவைகளுக்கு இக்கொள்கைகள் குறிக்கோள்களாகவும் ஊக்கந்தருபவைகளாகவுமிருக்கின்றன. இவைகள், நேரிடையாக இல்லாவிட்டாலும், மறைமுகமாகவாவது நீதிபதிகளினுடைய கருத்துகளை, சட்டங்கள் பற்றி அவர்கள் மதிப்பீடு செய்கின்றபோது ஊக்குவிக்கும். முன்னாள் தலைமை நீதிபதி கனியா குறிப்பிட்டதாவது: 'வழிகாட்டி நெறிகள் சட்டமன்றத்திலுள்ள பெருபான்மையோரின் எண்ணத்தைப் பிரதிபலிக்காமல், நாட்டின் மிக உயர்ந்ததும் நிரந்தரமானதுமான சட்டத்தை ஏற்படுத்தியபொழுது காட்டப்பட்ட நாட்டின் ஞானத்தைப் பிரதிபலிக்கின்றன.'

நான்காவதாக, இந்திய அரசியலமைப்பில் காணப்படும் இந்த பரந்த நெறிகள் அந்நியர்களுக்கு முக்கியத்துவம் வாய்ந்ததாகத் தோன்றாவிட்டாலும், இந்தியர்களுக்குப்பெரும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். அரசின் நடவடிக்கைகளுக்கு அவைகள் அவசியமான ஆதாரமாகும். நீதிமன்றங்களால் செயல்படுத்த முடியாதிருப்பதாலேயே அவைகள் அர்த்தமற்றவைகளாகி விடமாட்டா. வழிகாட்டி நெறிகளுக்கு மாறுபட்ட அரசின் நடவடிக்கைகள் ஆதார உரிமைகளுக்குப் புறம்பான நடவடிக்கைகள், எந்த அளவிற்கு அரசியல் சட்ட சம்மதமற்றவையென்று அறிவிக்கப்படலாமோ அந்த அளவிற்கு அரசியலமைப்பிற்குப் புறம்பானதென்று கருதப்படும். எந்தவொரு அரசாங்கமும் இக்கொள்கைகளுக்கெதிராக செயல்படத் துணிவு கொள்ளும் என்று பொதுவாகச் சொல்ல முடியாது.

கடைசியாக, இந்த நெறிகள் பொது மக்களின் கருத்துகளையும் எண்ணங்களையும் பளிங்கென எடுத்துக் காட்டும் கண்ணாடிகளெனலாம். சட்டத்திற்குள்ள அளவிற்கு இந்த நெறிகளுக்குக் கட்டுப்படுத்தும் சக்தியில்லையென்றாலும், ஆட்சியிலிருப்பவர்கள், அவர்களைத் தெரிந்திருப்பவர்களுக்குப் பொறுப்புடையவர்களாக இருப்பதால், பொதுக்கருத்து ஒன்றை அரசாங்கம் நிறைவேற்ற வேண்டுமென்பதற்குச் சாதகமாக இருக்கும்போது அதை அவர்கள் நிறைவேற்றாவிட்டால் பதவிக்கு மீண்டும் வர முடியாதென்று அறியலாம்.

வழிகாட்டி நெறிகளின் பயனும் முக்கியமும் காங்கிரஸ் அரசாங்கம் அவைகளை எந்த அளவிற்கு நடைமுறைப்படுத்தியிருக்கின்றது என்பதிலிருந்து தெரிகிறது. அரசாங்கம் முதலில் ஜமீன்தாரி முறையை ஒழித்தது. இரண்டாவதாக

நிலத்திற்கு உச்சவரம்பைக் கொண்டு வந்தது. பல தொழில்களும் துறைகளும் தேசியமயமாக்கப்பட்டன. ஐந்தாண்டுத் திட்டங்களைக் கொண்டுவந்து நாட்டைத் தொழிற் துறையில் முன்னேறச் செய்து வாழ்க்கைத்தரம் உயருமாறு செய்யப்பட்டது. தீண்டப்படாத வகுப்பினருக்கும், இனத்தவருக்கும் கல்விச் சலுகைகளையும், உத்தியோகத்தில் சலுகைகளையும் அளித்து அவர்களையும் முன்னேற்றத்திற்குக் கொண்டுவர அரசாங்கம் முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறது. பல சமூக நலத்திட்டங்கள் (Community Development Schemes) கொண்டு வரப்பட்டு கிராமங்களும் சிறப்புற வழிகள் செய்யப்பட்டிருக்கின்றன. உலக அமைதிக்கும் இந்திய அரசு ஐக்கிய நாடுகள் கழகத்தின் மூலம் பாடுபட்டு வருகிறது. ஜனநாயக சோஷலிசம், சோஷலிச சமுதாயம் போன்ற குறிக்கோள்களை ஏற்றுக்கொண்டு அவைகளையடைய அரசு பாடுபட்டு வருகிறது. இதுவரையிலும் நிறைய செய்யப்பட்டிருக்கின்றன. இன்னும் நிறைய செய்ய நோக்கமிருக்கிறது.

# 6. அதிகாரப் பங்கீடு

கூட்டாட்சி அரசாங்க முறையில் இருவகைப்பட்ட அரசாங்கங்கள் இருக்கின்றன. அவை மத்திய அரசாங்கம், மாநில அரசாங்கங்கள் என்பன. இந்த இருவகைப்பட்ட அரசாங்கங்களுக்கிடையே, ஒவ்வொரு வகை அரசாங்கமும் அதிகாரம் செலுத்தக்கூடிய வகையில் அதிகாரங்கள் பங்கீடு செய்யப்பட்டிருக்கும். இந்த அதிகாரப் பங்கீட்டின் தன்மை கூட்டாட்சிக்குக் கூட்டாட்சி வேறுபடும். இவ்வாறு அதிகாரம் பங்கீடு செய்யப்படுவதால் ஒவ்வொருவகை அரசாங்கமும் அதன் அதிகார எல்லையைப் பொறுத்தவரையிலும் கூடுமான வரை சுதந்திரமாகச் செயல்பட முடியுமென்பதோடு பொறுப்பையும் சரிவர நிறைவேற்ற வாய்ப்புக் கிட்டும். மேலும் இந்த அதிகாரப்பங்கீடு இருவகைப்பட்ட அரசாங்கங்களுக்கிடையே எத்தன்மையதான உறவுகள் நிலவுகின்றன என்பதை நிர்ணயம் செய்யவும் உதவுகின்றது. இந்திய அரசியலமைப்பு, கூட்டாட்சி வகையைச் சேர்ந்ததென்பது முன்னரே சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வரசியலமைப்பில் அதிகாரப் பங்கீடு எவ்வாறு செய்யப்பட்டிருக்கிறதென்பதையும், மத்திய அரசிற்கும், மாநில அரசுகளுக்குமிடையேயுள்ள உறவுகள் எத்தன்மையதானவை என்பதையும் இப்போது காணலாம்.

இந்திய அரசியலமைப்பு, சட்டமியற்றும் அதிகாரத்தைப் பொறுத்த மட்டில் மூன்று பட்டியல்களையுடையதாக இருக்கிறது. அவை யூனியன் பட்டியல், இராச்சியப் பட்டியல், இரு அரசுகளுக்கும் பொதுவானப் பட்டியல் என்பவை. யூனியன் பட்டியலிலுள்ள இனங்களில் மத்திய அரசாங்கம் சட்டம் இயற்றுவதற்குப் பூரண அதிகாரம் பெற்றிருக்கிறது. அங்ஙனமே, இராச்சியப் பட்டியலிலுள்ள இனங்களில் சட்டம் செய்யுமதிகாரம் இராச்சியங்களுக்குத் தரப்பட்

டுள்ளது. பொதுப்பட்டியலிலுள்ள துறைகளில் இரண்டு அரசாங்கங்களும் சட்டமியற்ற அதிகாரம் பெற்றிருக்கின்றன இப்பட்டியலிலுள்ள துறைகளில் இரு அரசாங்கங்களாலும் இயற்றப்படுகின்ற சட்டங்கள் ஒன்றுக்கொன்று முரணாக இருக்குமானால் யூனியன் பாராளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டமே மேலோங்கி நிற்கும். மேற் சொல்லப்பட்ட பட்டியல் களில் இடம் பெறாத வேறு இனங்கள் இருக்குமானால் அவை கனடா அரசியலமைப்பிலுள்ளது போல, மத்திய அரசாங் கத்தைச் சேரும்.

யூனியன் பட்டியலில் மொத்தம் 97 இனங்கள் இருக் கின்றன. அவைகளில் மிக முக்கியமானவை வருமாறு: பாதுகாப்பு, கடல், தரை, ஆகாய விமானப்படை, வெளி நாட்டு விவகாரங்கள், போர், சமாதானம், வெளிநாடு களுடனான வியாபாரமும் வர்த்தகமும், மக்கள் குடியேற்றமும் இறக்கமும், தபால்தந்தி, கடல்வணிகம், இரயில்வேக்கள், நாணயமும் நாணயமாற்றும், மக்கள் தொகைக்கணிதி, தொழில்கள், உள்நாட்டு வர்த்தகம் முதலியனவும், பிறவும்.

இராச்சியப் பட்டியலில் மொத்தம் 66 இனங்கள் இருக் கின்றன. அவைகளில் சில வருமாறு: பொது அமைதி, உச்சநீதிமன்றம் நீங்கலாக நீதிப்பரிபாலனம், காவல்துறை, சிறைகள், நூல்நிலையங்கள், வட்டார அரசாங்கம், பொது சுகாதாரம், கல்வி, செய்திப் போக்குவரத்து, வேளாண்மை, இராச்சியத்திற்குள் வியாபாரமும் வர்த்தகமும், தொழில் களின் அபிவிருத்தியும் மற்றவைகளும்.

பொதுப்பட்டியலில் 47 இனங்கள் இருக்கின்றன. அவை களில், குற்றவியல் சட்டமும் நடைமுறையும், சிவில் நடை முறை, திருமணமும் திருமண ரத்தும், செய்தித்தாள்கள், தொழிற்சாலைகள், தொழிலாளர் நலன், தொழிலாளர் சங்கங்கள், தொழில் தகராறுகளும் தொழிலாளர் தகராறு களும், பொருளாதார சமூகத்திட்டமிடுதலும் முக்கிய மானவைகளாகும்.

இராச்சியப் பட்டியலில் சேர்க்கப்பட்[illegible] மத்திய அரசாங்கம் சாதாரணமா[illegible] தெனினும் (1) இராச்சிய சபா[illegible] இருபங்கு [illegible] பான்மை அடிப்படையில் இராச்[illegible]டியலிலுள்ள ஏதாவ தொரு இனம் அல்லது இனங்க[illegible] (நாட்[illegible]தி)



மத்திய அரசாங்கம் சட்டமியற்ற வேண்டுமென்று பரிந்துரைக்குமானுலோ (2) இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட இராச்சியங்கள் கேட்டுக் கொள்ளுமானுல் அவைகளுக்காகவோ (3) உடன்படிக்கைகள் அல்லது பன்னுட்டு முடிவுகளை நிறைவேற்றுவதற்காகவோ சட்டமியற்றலாம். இராச்சியப்பட்டியலிலுள்ளத் துறைகளில் யூனியன் பிரதேசங்களுக்காக மத்திய அரசாங்கம் சாதாரணமாகச் சட்டமியற்றலாம் என்பதை இங்கு குறிப்பிடுவது அவசியமாகும். மேலும், நாட்டில் நெருக்கடிகாலப் பிரகடனம் செய்யப்பட்டிருக்குமானுல், மத்தியஅரசாங்கம் இராச்சியப் பட்டியலிலுள்ள எந்தவொரு பொருள் பற்றியும் தடையேதுமில்லாமல் சட்டம் செய்யும் உரிமையைப் பெறுகிறது.

**ஆட்சித்துறை உறவுகள்** (Administrative Relations)

யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையே நல்லுறவை ஏற்படுத்த அரசியலமைப்பு விழைகிறது. இராச்சிய நிர்வாக அதிகாரம், யூனியன் சட்டங்களுக்கு இணக்கமாக இருக்குமாறு செலுத்தப்பட வேண்டும். தேசிய அல்லது இராணுவ முக்கியம் வாய்ந்த செய்திப் போக்குவரத்து சாதனங்களை ஏற்படுத்தி நிர்வகிக்க வேண்டுமென இராச்சிய அரசுக்கு மத்திய அரசு கட்டளைகளைப் பிறப்பிக்க முடியும்.

இராச்சிய அரசாங்கமொன்றின் சம்மதத்தின் பேரில் அதன் அதிகார எல்லையின் கீழ் வராத விஷயங்களில் அதற்கு அல்லது அதன் அதிகாரிகளுக்கு அதிகாரம் வழங்கவோ அல்லது கடமைகளைச் செய்யவேண்டுமென்று வற்புறுத்தவோ குடியரசு தலைவருக்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. அத்தகைய விஷயங்களில் இந்த அதிகாரங்களைச் செலுத்துவதாலோ அல்லது கடமைகளை நிறைவேற்றுவதாலோ ஏற்படும் அதிகப்படி செலவை மத்திய அரசாங்கம் ஏற்றுக் கொள்கிறது. அரசியலமைப்பு ஏழாவது மாற்றத்தின் ஆதாரத்தில் மத்திய அரசாங்க இசைவின் பேரில் மத்திய அரசாங்கம் அல்லது அதன் அதிகாரிகளின் பொறுப்பில் இராச்சியப் பணிகளை இராச்சியமொன்றின் கவர்னரும் விடலாம்.

**இராச்சியங்களிடையே கூட்டிணைப்பு** (Co-Ordination between States)

இராச்சியங்களிடையே கூட்டிணைப்பை ஏற்படுத்துவதற்கு இராச்சியங்கள் மன்ற (Inter State Council) மொன்றை

நியமிப்பதற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. இம்மன்றத்தின் பணிகளாவன :

(அ) இராச்சியங்களுக்கிடையே ஏற்படும் சச்சரவுகள் பற்றி விசாரிப்பதும் ஆலோசனை வழங்குவதும்.

(ஆ) இராச்சியங்கள் அல்லது யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையே எந்தவொரு பொருள் பற்றியும் பொது அக்கறை இருக்குமானுல் அப்பொருள் பற்றியக் கொள்கை அதன் நடவடிக்கை கூட்டிணைப்பிற்குத் தேவையான வழிவகைகளை ஏற்படுத்துவது ஆகிய இரண்டுமாம்.

**பிராந்திய மன்றங்கள்** (Zonal Councils)

1956ஆம் ஆண்டு இராச்சியங்களின் புனரமைப்புச் சட்ட அடிப்படையில், இராச்சியங்களுக்கிடையிலான ஒத்துழைப்பிற்கும், சச்சரவுகளைத் தீர்த்து வைப்பதற்கும், அபிவிருத்தித் திட்டங்களை ஊக்குவிப்பதற்கும், இவ்விஷயங்களில் சம்பந்தப்பட்ட அரசாங்கங்களுக்கு ஆலோசனை வழங்குவதற்கும் ஐந்து பிராந்திய மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன.

**நிதி உறவுகள்** (Financial Relations)

பிரிவினைக்கு முன்பு மாநிலங்களின் வருவாய் ஆதாரங்கள் குறைவாக இருந்தன. இந்தக் குறையை அரசியலமைப்பு அகற்ற முயன்றது. மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்குமிடையே வருவாய்த்துறைகளை பகிர்ந்தளிப்பதற்கு விரிவானத் திட்டமொன்றை அது ஏற்படுத்தியது. ஆனுல், நுணுக்கமான அம்சங்களை ஆராய்ந்து பகிர்ந்தளிக்கும் பொறுப்பை முதலில் அரசியலமைப்பு நடைமுறைக்குவந்த இரண்டாண்டுகளுக்குள்ளும், அதற்குப் பிறகு ஐந்தாண்டுகளுக்கொரு முறையோ அல்லது அவசியமானுல் அதற்கு முன்னரோ குடியரசு தலைவரால் அமைக்கப்படும் நிதிக்கழகத்திற்கு (Finance Commission) விட்டது. அதன்படி, 1951, 1956, 1960, 1964 ஆகிய ஆண்டுகளில் கழகங்கள் அமைக்கப்பட்டன.

**அவசர கால அதிகாரங்கள்** (Emergency Powers)

பல பளுமிக்க கடமைகளுக்கும் பொறுப்புகளுக்குமிடையே யூனியன் அரசாங்கம் (அ) வழிகாட்டு நெறிகளுக்கிணங்க அதன் சட்டத்தின் தரத்தையும் ஆட்சித்தரத்தையு' உயர்த்துவதற்கும் (ஆ) சமூகநலப் பணிகளுக்கா

திட்டங்களைத் தீட்டி, இணைத்து நாட்டின் வளர்ச்சியை ஏற்படுத்துவதற்கும் (இ) எல்லாக் குடிமக்களும் மக்களாட்சியின் பலன்களை அனுபவிக்க உத்திரவாதமளிக்கவும் பொறுப்பேற்கிறது. இவையெல்லாவற்றிற்கும் மேலாக, உட்குழப்பம், வெளிநாட்டுப் படையெடுப்பிலிருந்து ஒவ்வொரு இராச்சியத்தையும் காப்பாற்றவும், அரசியலமைப்பின் ஏற்பாடுகளுக்கிணங்க ஒவ்வொரு இராச்சியத்திலும் அரசாங்கம் நடைபெறுமாறு பார்த்துக் கொள்ளவும் வேண்டும்.

இவ்வாறு நெருக்கடி காலத்தில் இராச்சியங்களைச் சேர்ந்த நிர்வாக, சட்டத்துறை அதிகாரங்களனைத்தையும் மத்திய அரசாங்கம் எடுத்துக் கொள்வதற்கு அதற்கு அதிகாரமிருக்கிறது. மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் வருவாய்த்துறைகளைப் பகிர்ந்தளிப்பதற்காக அரசியலமைப்பிலுள்ள ஏற்பாடுகளையும்கூட ஜனாதிபதி மாற்றியமைக்கலாம். பொருளாதார நெருக்கடியொன்று நாட்டில் அறிவிக்கப்பட்டிருந்தால் இராச்சியங்கள் சில விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டுமென்று மத்திய அரசாங்கம் ஆணைகளைப் பிறப்பிக்க முடியும்.

இராச்சியமொன்றில் நிர்வாகம் சீர்குலையுமானால், அதனுடைய முழு நிர்வாகப் பொறுப்புகளையோ அல்லது ஏதாவது சில பொறுப்புகளையோ மத்திய அரசாங்கம் ஏற்று நடத்துவதற்கு வசதியாக ஜனாதிபதி பிரகடனமொன்றை வெளியிடலாம்.

அரசியமைப்பிலுள்ள இந்த நெருக்கடிகால ஏற்பாடுகளின் முக்கியத்தை மிகைப்படுத்த வேண்டிய அவசியம் கிடையாது. அமைதிக்காலத்தில் இவைகளைப் பயன்படுத்த வேண்டிய அவசியமே எழாது என்பது திண்ணம்.

# 7. யூனியன் நிர்வாகம்

## (1) ஜனாதிபதி

யூனியன் நிர்வாகத்துறை ஜனாதிபதியையும் அமைச்சரவையையும் கொண்டது.

**ஜனாதிபதி :** இந்திய ஜனாதிபதி சட்டபூர்வமான அரசுத் தலைவரும், தலைமை நிர்வாகியுமாவார். எனினும் இந்தியா, தலைவர் அரசாங்க முறையைச் சேர்ந்ததல்ல என்பதும் ஆனால் பாராளுமன்ற முறை அரசாங்கத்தை யுடையதென்பதும் தெளிவாகும்.

ஜனாதிபதி, யூனியன் பாராளுமன்றம், இராச்சிய சட்ட சபைகளிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட தேர்தல் மன்றத்தினால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஜனாதிபதியாகப் போட்டியிட விரும்புபவர் 35 வயதானவராக வும், இந்தியக் குடிமகனாகவும் லோக்சபாவுக்குத் தேர்ந்தெடுக் கப்படக்கூடியத் தகுதி உடையவராகவும் இருக்க வேண்டும். அவர் இலாபம் தரும் வேறு எந்த பதவியையும் வகிப்பவராக இருக்கக் கூடாது. ஜனாதிபதியாக இருப்பவர் பாராளுமன்றத் தின் எந்த சபையிலும் அங்கத்தினராக இருக்க முடியாது. அவருடைய பதவிக்காலம் ஐந்தாண்டுகளாகும். மீண்டும் அவர் தேர்ந்தடுக்கப்படலாம். அவருடைய மாத ஊதியம் படிகள் நீங்கலாக பத்தாயிரம் ரூபாய்களாகும்.

மூன்றிலிரண்டு பங்கு உறுப்பினர்களின் ஆதரவில் பாராளுமன்றத்தின் இரு சபைகளில் ஏதாவதொன்று அரசுத் துரோகக் குற்றச்சாட்டொன்றை நிறைவேற்றினால் ஜனாதிபதி பதவியிலிருந்து நீக்கப்படுவார். ஏதாவதொரு சபை அக் குற்றச்சாட்டைக் கொண்டு வருமானால் அடுத்த சபை அதைப்

பற்றி விசாரிக்கும். ஜனாதிபதி தாளுகவும் பதவியை இராஜீநாமா செய்யலாம். குற்றச்சாட்டை விசாரணைக்கு எடுத்துக் கொள்வதற்குச் சபையில் மொத்தமுள்ள உறுப்பினர்களில் கால் பகுதியினர் ஆதரவுடன் தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும். மேலும், அத்தகைய தீர்மானம் கொண்டு வருவதற்குப் பதினுன்கு நாட்களுக்கு முன்பே அதுபற்றி அறிவிக்க வேண்டும். எந்த சபை விசாரணை செய்கிறதோ, அந்த சபையில் தீர்மானம், விசாரணைக்குப் பிறகு மொத்தமுள்ள உறுப்பினர்களில் மூன்றிலிரண்டு பங்கு உறுப்பினர்கள் ஆதரவுடன் நிறைவேற்றப்படுமானுல், ஜனுதிபதி பதவி நீக்கம் செய்யப்படுவர்.

**ஜனுதிபதியின் அதிகாரங்கள் :** அவருடைய அதிகாரங்கள் நிர்வாகம், சட்டம், நீதித்துறை சம்பந்தப்பட்டவையென்று பிரிக்கப்படலாம். இவைகள் அல்லாமல், அவருக்கு ராஜதந்திரம், அவசரகாலம் சம்பந்தப்பட்ட அதிகாரங்களுமிருக்கின்றன.

**நிர்வாக அதிகாரம் :** அரசியலமைப்பின் 53ஆம் விதி இந்திய யூனியன் நிர்வாகம் ஜனுதிபதியால் பல அலுவலர்களின் உதவி கொண்டு செலுத்தப்படும் என்று கூறினுலும், நடைமுறையில் பிரதம மந்திரியாலும் அமைச்சரவையாலும் செலுத்தப்படுகிறதென்பதே உண்மை நிலையாகும். ஜனுதிபதி நாட்டின் தலைவரேயன்றி அரசாங்கத்தின் தலைவரல்ல. எனவே, நிர்வாகத்தில் அவர் பெயரளவு அதிகாரந்தான் பெற்றிருக்கிருர். எனினும் இந்திய யூனியன் அலுவல்கள் யாவும் ஜனுதிபதியின் பெயரால் செய்யப்படுகின்றன. பல உயர் உத்தியோகங்களுக்கான நியமனங்கள் அவரால் செய்யப்படுகின்றன. அவரே, முப்படைகளுக்கும் தளபதியாவார். அவர் மாநில கவர்னர்களையும், அட்டர்னி ஜெனரலையும், கணக்கு ஆய்வுத்துறைத் தலைவரையும், யூனியன் பணியாளர் தேர்வுக்கழக உறுப்பினர்களையும், நிதிக் கழகத்தின் தலைவரையும், தேர்தல் கழகத்தின் தலைவரையும் நியமிக்கிருர். மத்திய அரசாங்கத்தின் நேரிடைக் கட்டுப்பாட்டிலுள்ள பகுதிகளின் நிர்வாகத்தையும் அவரே செய்கிருர்.

**சட்டத்துறை அதிகாரங்கள் :** இங்கிலாந்து நாட்டு அரசியாரைப்போல, இந்திய பாராளுமன்றத்தின் ஓர் அங்கமாக ஜனுதிபதி இருக்கிருர். அவர் பாராளுமன்றத்தின் தொடரைக் கூட்டவும், ஒத்திவைக்கவும் லோக்சபாவைக்

கலைக்கவும் அதிகாரம் பெற்றிருக்கிறார். பாராளுமன்றத்தின் இரு சபைகளின் கூட்டுக் கூட்டத்தையும் அவர் அழைக்கலாம். பாராளுமன்றம் முதன் முதலாகக் கூடும்போதும் பிறகும் அவர் துவக்கவுரை நிகழ்த்துவார். பாராளுமன்றத்திற்கு நேரில் செல்லாமல் செய்திகளையும் அனுப்பலாம். பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட மசோதா ஒவ்வொன்றிற்கும் ஜனாதிபதியின் இசைவு தேவை. அவர் தன் இசைவை நிறுத்தி வைக்கலாம் அல்லது பாராளுமன்றம் மசோதாவை மறுபடியும் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கோரலாம். அவருடைய அனுமதியின்றி பணத்தேவை பற்றிய கோரிக்கைகள் பாராளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட முடியாது. பாராளுமன்றம் தொடரில் இல்லாதிருக்கும் போது அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கலாம். ஆனால், அவ்வாறு பிறப்பிக்கப்பட்ட சட்டங்கள், தொடர் ஆரம்பமான தேதி முதல் ஆறு வாரங்களுக்குள் பாராளுமன்றத்தால் ஏற்றுக் கொள்ளப்படவில்லையானால் செயற்படுத்தப் படமுடியா. ஆண்டு வரவு-செலவுத் திட்டம், தணிக்கைக் கணக்குத் துறைத் தலைவர் அறிக்கை, யூனியன் பணியாளர் தேர்வுக் கழக அறிக்கை போன்றவைகளெல்லாம் ஜனாதிபதியின் சம்மதம் பெற்ற பிறகே பாராளுமன்றத்திற்குத் தாக்கல் செய்யப்பட முடியும். அவர், கல்வி, கலை, ஆகிய துறைகளில் சிறந்த பன்னிரண்டு பேர்களை இராச்சிய சபாவிற்கு நியமிக்கிறார்.

**நீதித்துறை அதிகாரங்கள் :** இந்தியத் தலைமை நீதிபதியும், இதர உச்ச நீதிமன்ற, உயர்நீதி மன்றங்களின் நீதிபதிகளும் ஜனாதிபதியால் நியமிக்கப்படுகிறார்கள். அவர் குற்றங்களுக்காகத் தரப்பட்ட தண்டனைகளைக் குறைக்கலாம் அல்லது அவைகள் நிறைவேற்றப்படுவதை ஒத்திவைக்கலாம் அல்லது தண்டனைகளை நீக்கி மன்னிப்பும் அளிக்கலாம்.

**இராஜ தந்திர அதிகாரங்கள் :** இந்திய அரசின் தலைவர் என்ற முறையில் பன்னாட்டு உறவுகளில் அவர் இந்தியாவின் பிரதிநிதியாக விளங்குகிறார். அயல்நாடுகளுக்கான இந்தியாவின் தூதுவர்களை நியமிப்பதோடு, இந்தியாவுக்குப் பிறநாடுகளிலிருந்து வரும் தூதுவர்களை வரவேற்கிறார்.

**அவசரகால அதிகாரங்கள் :** இந்தியா முழுவதிற்குமோ அல்லது ஏதாவது ஒரு பகுதிக்கோ வெளிநாட்டுப் படையெடுப்பாலோ அல்லது உள்நாட்டுக் குழப்பத்தாலோ

ஆபத்து ஏற்படக் கூடுமென்றாலோ அல்லது ஆபத்து ஏற்பட்டாலோ ஜனாதிபதி நெருக்கடி நிலைமையைப் பிரகடனம் செய்ய அதிகாரம் பெற்றிருக்கிறார். ஆனால், அப்பிரகடனம் பாராளுமன்றத்தால் இரண்டு மாத காலத்திற்குள் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். நெருக்கடி நிலைமைப் பிரகடனம் செய்யப்பட்டிருக்கும்போது இராச்சிய அரசாங்கங்களைச் சேர்ந்த துறைகளில் கூட மத்திய பாராளுமன்றம் சட்டம் செய்யலாம். ஆதார உரிமைகள் நிறுத்தி வைக்கப்படும். நீதிமன்றங்கள் ஆதார உரிமைகளின் நிறைவேற்றத்தை வற்புறுத்த முடியாது. அச்சமயத்தில் இந்தியக் கூட்டாட்சி அதன் அத்தன்மையினின்றும் மாறி தற்காலிகமாக ஒற்றை யாட்சியாகிறது.

அரசியலமைப்பின் 356ஆம் விதிப்படி ஜனாதிபதி, ஏதாவதொரு இராச்சியத்தில் அரசியல் சட்ட பூர்வமான அரசாங்கம் இயங்க முடியாத நிலைமை அல்லது சூழ்நிலை இருப்பதாக, மாநில ஆளுநர் அறிக்கையொன்றை அனுப்பி, ஜனாதிபதி ஆட்சி அங்கு ஏற்படுத்தப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்வாரானால், அங்கு ஜனாதிபதி ஆட்சியை ஏற்படுத்தும் பிரகடனத்தை வெளியிட அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டுவரும் பிரகடனமும் பாராளுமன்றத்தால் இரண்டு மாதங்களுக்குள் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும். ஜனாதிபதி ஆட்சி மீண்டும் மீண்டும் புதுப்பிக்கப்படாதவரையிலும் ஆறு மாத காலத்திற்கு நடைமுறையில் இருக்கும். சம்பந்தப்பட்ட இராச்சிய சட்டமன்றம் கலைக்கப்படலாம். அல்லது கலைக்கப்படாமல் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்படலாம்.

**அதிகாரங்கள் பற்றி ஆய்வு :** அரசியலமைப்புப்படி, கொள்கையளவில் ஜனாதிபதி பல அதிகாரங்களைப் பெற்றிருக்கிறாரெனினும், நடைமுறையில் அவ்வதிகாரங்கள் பிரதம மந்திரியைத் தலைமையாகக் கொண்ட அமைச்சரவையின் உதவி, ஆலோசனையின் பேரில்தான் செலுத்தப்பட வேண்டும். அவராக எதையும் மனம் போனபோக்கில் சர்வாதிகார முறையில் செய்ய முடியாது. எனினும் இக்கருத்துக்கு மாறுபட்ட கருத்தை ஆவன்கிளட்ஹில் என்பார் தெரிவித்திருக்கிறார். பிரதம மந்திரியைத் தலைமையாகக் கொண்ட அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்று அதன்படி அவர் நடக்க வேண்டுமென்று அரசியலமைப்பின் எப்பகுதியிலும் தெளிவாகச் சொல்லப்படவில்லை. ஆகையால், அவர் சர்வாதி

காரியாக முடியும் என்பது கிளட்ஹில்லின் வாதம். எனினும் இந்திய அரசியலமைப்பு பாராளுமன்ற முறை அரசாங்கத்தை ஏற்படுத்துகிறதென்பது தெளிவாக்கப்பட்டிருப்பதால், ஜனாதிபதி, பாராளுமன்றம் மூலமாக மக்களுக்குப் பொறுப் பேற்கும் அமைச்சரவை விருப்பப்படியே நடக்க வேண்டிய வராவர். அவ்வாறில்லாமல், சர்வாதிகாரம் செலுத்த விரும்பி ஞல் அதை மக்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்பது திண்ணம். மேலும், இந்தியா போன்று பரப்பளவிலும், மக்கள் தொகையிலும் பெரியதாக இருக்கின்ற நாடுகளில் தனி நபர் ஆட்சி, அது எத்தகையதாக இருந்தாலும் எடுபடா தென்று உறுதியாகச் சொல்லலாம்.

மேற்கூறப்பட்டவைகளிலிருந்து, இந்திய ஜனாதிபதி பெயரளவுக்குத்தான் நிருவாகத் தலைவரென்பதும், ஜனாதிபதி சர்வாதிகாரம் நாடு முழுவதும் ஏற்படக் கூடிய வாய்ப்பில்லை என்பதும் தெளிவாகும்.

(2) உதவி ஜனாதிபதி

**உதவி ஜனாதிபதிக்கு இருக்க வேண்டிய தகுதிகள் :** அரசிய லமைப்பின் 63ஆம் விதி ஜனாதிபதிக்கு அடுத்தபடியாக ஒரு உதவி ஜனாதிபதி இருப்பார் என்று கூறுகிறது. உதவி ஜனாதிபதியாக விரும்புபவருக்கு இருக்க வேண்டிய தகுதிகள் பின்வருமாறு.

(1) அவர் இந்தியக் குடிமகனாக இருத்தல் வேண்டும்.

(2) முப்பத்தைந்து வயதானவராக இருத்தல்வேண்டும்.

(3) இராச்சிய சபாவிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற் கான தகுதிகள் உடையவராக இருத்தல் வேண்டும்.

(4) அரசாங்கத்தில் இலாபம் தரும் எந்தப் பதவியிலும் இருக்கக் கூடாது.

(5) உதவி ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு பாராளுமன்றத்திலோ அல்லது இராச்சிய சட்டசபை களிலோ உறுப்பினராக இருக்கக் கூடாது.

**உதவி ஜனாதிபதியின் தேர்தலும் பதவிக்காலமும் :** பாராளு மன்றத்தின் இரு சபைகளின் கூட்டுக் கூட்டத்தில் பாராளு மன்ற உறுப்பினர்களால் அவர் தேர்ந்தெடுக்கப்படுகிருர். அவருடைய பதவிக்காலம் ஐந்தாண்டுகளாகும். அவர்,

இராச்சிய சபாவினால் நிறைவேற்றப்படும் தீர்மானமென்று லோக் சபாவினாலும் ஏற்றுக்கொள்ளப்படுமானால் பதவியிலிருந்து விலக்கப்படுவார்.

**உதவி ஜனாதிபதியின் பணிகள்:** உதவி ஜனாதிபதி அவர் வகிக்கும் பதவி காரணமாக, இராச்சிய சபாவின் தலைவராவார். இராச்சிய சபாவின் கூட்டங்களுக்கு அவர் தலைமை வகிக்கிறார். தலைவர் என்ற முறையில் அவருடைய அதிகாரங்களும், பணிகளும் லோக்சபா சபாநாயகர் பணிகளுக்குச் சமமானவை. இராச்சிய சபாவின் சுமுகமானப் பணிக்கு அவர் வகை செய்கிறார்.

ஜனாதிபதி இறந்துவிட்டாலோ அல்லது ராஜினாமா செய்து விட்டாலோ அல்லது நோய்வாய்ப் பட்டிருந்தாலோ அல்லது வெளி நாடுகளுக்குச் சென்றாலோ, ஜனாதிபதியின் பணிகளை அவர் செய்கின்றார். ஜனாதிபதியாகப் பணியாற்றுங் காலத்தில் இராச்சிய சபாவின் தலைவரென்ற முறையில் அவர் செய்ய வேண்டிய பணிகளையும் கடமைகளையும் அவர் செய்வதில்லை. அந்தக்காலத்தில் அவருக்கு ஜனாதிபதிக்குத் தரப்படும் ஊதியம், படிகள் ஆகியவைகள் தரப்படுகின்றன. ஜனாதிபதிப் பதவி நிரந்தரமாகக் காலியாகுமானால் புதிய ஜனாதிபதியொருவர் ஆறு மாத காலத்திற்குள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். எனவே உதவி ஜனாதிபதி, ஜனாதிபதியாக அதிகப்பட்சமாக ஆறு மாத காலத்திற்குத்தான் பணியாற்ற முடியும்.

**(3) அமைச்சர்கள் கழகம்** (Council of Ministers)

இந்திய அரசியலமைப்பு, இங்கிலாந்து நாட்டிலுள்ளது போல இந்தியாவிலும் அமைச்சரவை அரசாங்கத்திற்கு வகை செய்கிறது. ஏட்டளவில் ஜனாதிபதி இந்தியக் குடியரசின் தலைவரானாலும் உண்மையான அதிகாரம் பிரதம மந்திரியைத் தலைமையாகக் கொண்ட அமைச்சரவையினால் தான் செலுத்தப்படுகிறது. அரசியலமைப்பின் 74 (1)ஆம் விதி ஜனாதிபதிக்கு உதவியும் ஆலோசனையும் வழங்குவதற்கு பிரதமரைத் தலைமையாகக் கொண்ட அமைச்சரவைக் கழகமொன்று இருக்குமெனக் கூறுகிறது. அமைச்சர்கள் கழக உறுப்பினர்களெல்லாம் பிரதமரின் ஆலோசனையின் பேரில் ஜனாதிபதியால் நியமிக்கப்படுகிறார்கள். அவர்கள் அனைவரும் ஜனாதிபதியின் நல்லெண்ணத்தைப் பெற்றிருக்கும் வரையில் தான் பதவியிலிருக்க முடியும். அவர்கள் லோக் சபாவிற்கு கூட்டுப் பொறுப்புடையவர்களாவர்.

அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் எந்தச் சபையைச் சேர்ந்தவர்களாகவும் இருக்கலாம். அமைச்சராக நியமிக்கப் படும் ஒருவர் அச்சமயத்தில் பாராளுமன்றத்தில் உறுப் பினராக இல்லாவிட்டால், ஆறுமாத காலத்திற்குள் உறுப் பினராகி விடவேண்டும். இல்லாவிட்டால் அமைச்சர் பதவி யைத் துறந்துவிட வேண்டும். அமைச்சர்கள், ஜனாதிபதிக்கு வழங்கும் ஆலோசனைகளுக்காக, நீதிமன்றங்களில் வழக்குத் தொடர முடியாது.

**அமைச்சர்கள் கழக அமைப்பு:** பாராளுமன்றத்திற்குத் தேர்தல்கள் முடிந்ததும், எந்தக் கட்சி பெரும்பான்மை பலமுடையக் கட்சியாக (குறிப்பாக லோக் சபாவில்) வருகிறதோ அந்தக் கட்சியின் தலைவரை மந்திரிசபை அமைக்குமாறு ஜனாதிபதி கேட்டுக் கொள்வார். எந்தவொரு கட்சியும் லோக் சபாவில் பெரும்பான்மை பலம் பெறுமல் போகுமானல், எந்தக் கட்சியின் தலைவர் தனக்குப் பெரும் பான்மை உறுப்பினர்களின் ஆதரவு இருக்கிறதென்கிருரோ அவரைப் பிரதம மந்திரியாக ஜனாதிபதி நியமிக்கலாம். இத்தகைய சந்தர்ப்பங்களில் ஜனாதிபதி தனக்குச் சரியென்று தோன்றும் வகையில் நடப்பதற்கு இடமிருக்கிறது. ஆனல், இதர அமைச்சர்களை நியமிக்கும் விஷயத்தில் ஜனாதிபதி பிரதம மந்திரியின் பரிந்துரையைப் புறக்கணிக்க முடியாதென்று அரசியலறிஞர்கள் கருத்துத் தெரிவிக்கின்றுர்கள்.

**அமைச்சரவையும் அமைச்சர்கள் கழகமும்:** இந்திய அரசிய லமைப்பின் எப்பகுதியிலும் அமைச்சரவை (Cabinet) என்ற சொல் காணப்படவில்லை. அது பிரதம மந்திரியைத் தலைமை யாகக் கொண்ட அமைச்சர்கள் கழகமொன்றின் அமைப் பிற்குத்தான் வகை செய்கிறது. அமைச்சர்கள் கழகத்தில் மூன்று வகைப்பட்ட அமைச்சர்கள் இருக்கிருர்கள். (1) அமைச்சரவைத் தகுதி பெற்ற அமைச்சர்கள்; (2) இராச்சிய அமைச்சர்கள் (Ministers of State) துணை அமைச்சர்கள் (Deputy Ministers).

அமைச்சரவைத் தகுதியுடைய அமைச்சர்கள் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்டத் துறைகளின் தலைவராவார். அவர்கள் கூட்டாகக் கூடி அரசாங்கத்தின் கொள்கைகளை உருவாக்குகிருர்கள். அத்தகுதிபெருத இதர இராச்சிய அமைச்சர்களுக்கும், துணை அமைச்சர்களுக்கும் அதில் பங்கு கிடையாது. அவர்கள் அழைக்கப்பட்டாலல்லாது அமைச்

சரவைக் கூட்டங்களில் கலந்து கொள்ள முடியாது. இராச்சிய அமைச்சர் என்பவர் அமைச்சருக்குக் கீழும் துணை அமைச்சருக்கு மேலானதுமானத் தரத்தைப் பெறுகிறார். அவர்களோடு பாராளுமன்றச் செயலாளர்கள் என்ற பிறிதொரு வகையினர் இருக்கிறார்கள். இவர்கள் அமைச்சர்களுமல்ல; துறைத் தலைவர்களுமல்ல. ஆனால், அமைச்சர்களுக்கு அரசாங்க அலுவல்களில் உதவி புரிபவர்களாக இவர்கள் இருக்கிறார்கள். எனவே, அமைச்சரவையென்பது அமைச்சர்கள் கழகத்தின் ஒரு சிறியஉட்குழு என்று தெரிகிறது.

1950ஆம் ஆண்டுச் சட்டப்படி அமைச்சரவைத் தகுதி பெற்ற அமைச்சரொருவர் மாதம் ரூ 3000 ஊதியமாகவும் ரூ 500 கூட்டுப்படியாகவும், இராச்சிய அமைச்சர் ரூ 3000மும், துணை அமைச்சர் ரூ 2000மும் பெறுகின்றனர்.

**அமைச்சரவைக் கொள்கைகள்**

அமைச்சர்கள் பொறுப்புடையவர்களாக இருக்க வேண்டுமெனும் கொள்கை இங்கிலாந்து நாட்டில் பின்பற்றப்படுவதாகும், அதைப் பார்த்து இந்தியாவிலும் அக்கொள்கை பின்பற்றப்படுகிறது. இந்திய அமைச்சரவை கீழே சொல்லப்பட்டுள்ள வழக்காறுகள், கொள்கைகள் அடிப்படையில் இயங்குகிறது.

**(அ) ஜனாதிபதி அரசியல் சட்டப்படியான தலைவர்**

பாராளுமன்ற அரசாங்கத்திற்கேயுரிய கொள்கை நாட்டுத் தலைவர் பெயரளவில் அதிகாரமுடையவராக இருக்கிறார் என்பதாகும். நாட்டு நிர்வாகம் அரசாங்கத்தின் தலைவரான பிரதம மந்திரியால் நடத்தப்படுகிறது. அரசியலமைப்புப்படி பார்த்தால் ஜனாதிபதிதான் நிர்வாகத்திற்குத் தலைவர். எனினும், அரசியலமைப்பு அமைச்சர்கள் மன்றம் மக்கள் சபைக்குக் கூட்டாகப் பொறுப்புடையதென்றும் கூறுவதால், ஜனாதிபதியின் பெயரால் பிரதமமந்திரி நாட்டை ஆள்கிறாரெனலாம். ஜனாதிபதி பொதுநலன் சம்பந்தப்பட்ட எந்த விஷயமானாலும் அமைச்சர்கள் கழகத்தின் கவனத்திற்குக் கொண்டுவர முடியுமேயல்லாது அவராகவே செய்யமுடியாது. 78ஆம் விதிப்படி எல்லா முக்கியமான முடிவுகளும் அமைச்சர்கள் கழகத்தாலேயே செய்யப்பட வேண்டும். ஜனாதிபதி அமைச்சரவைக் கூட்டங்களில் கலந்து கொள்வதில்லையென்பதும், பிரதம மந்திரியே கூட்டங்களுக்குத் தலைமையேற்று பங்கு கொள்கிறாரென்பதும் குறிப்பிடத்தக்கது.

## (ஆ) அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் பிரதிநிதிகள்

அமைச்சர்கள் அனைவரும் பாராளுமன்றத்தில் உறுப்பினர்களாக இருத்தல் வேண்டும். அமைச்சர்களாக நியமிக்கப்படும் பொழுது உறுப்பினர்களாக இல்லாவிட்டாலும் பிறகு ஆறுமாத காலத்திற்குள் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட வேண்டும். அவர்கள் பாராளுமன்றத்திற்கு, முக்கியமாக மக்கள் சபைக்குக் கூட்டுப் பொறுப்புடையவர்கள். அவர்கள் பாராளுமன்றத்தின் நடவடிக்கைகளில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். எனவே, பாராளுமன்ற முறை அரசாங்கத்தின் அடிப்படை பலமாக இருக்கிறது. அவர்கள் பெரும்பான்மைக் கட்சியிலிருந்து எடுக்கப்படுகிறார்கள். சில சமயங்களில் சிறுபான்மை குழுக்களிலிருந்து சிலர் நியமிக்கப்பட்டாலும் அனைவரும் ஒரே குழுவாகச் செயலாற்றுவதால் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை உறுப்பினர்களின் பிரதிநிதிகளாக இருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

## (இ) அமைச்சர்களின் கூட்டுப்பொறுப்பு

இங்கிலாந்து நாட்டு வழக்காறு அடிப்படையில் இந்தியாவிலும் அமைச்சர்கள் லோக் சபாவிற்குக் கூட்டுப் பொறுப்புடையவர்களாவர். இக்கூட்டுப் பொறுப்பு பிரதம மந்திரிக்குத் தரப்படும் அதிகாரத்தின் அடிப்படையில் வெற்றிகரமாகச் செயற்படுத்த முடியுமென்பது பரவலாக கருதப்படுவதாகும். இதைப்பற்றி டாக்டர் அம்பேத்கார் அரசியல் நிர்ணய சபையில் பேசும்போது தெளிவாகச் சொல்லியிருக்கிறார். அவர் சொல்லியிருப்பதாவது, 'கூட்டுப்பொறுப்பு பிரதம மந்திரி மூலமாகத்தான் நிலைநாட்டப்படமுடியும். இரண்டு கொள்கையடிப்படையில் இக்கூட்டுப்பொறுப்பு நடைமுறைப் படுத்த முடியும். ஒன்று பிரதம மந்திரியின் ஆலோசனையும் சம்மதமும் இல்லாமல் எவரும் அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ளப்படக்கூடாது என்பது. பிறிதொன்று, அமைச்சரொருவர் பதவி நீக்கம் செய்யப்பட வேண்டும் என்ற பிறகு அவரை அமைச்சரவையில் தக்கவைக்காமல் நீக்கிவிடுவதாகும். அமைச்சரவை உறுப்பினர்கள் பிரதம மந்திரியால் நியமிக்கப்பட்டு, நீக்கப்பட்டால்தான் கூட்டுப் பொறுப்பென்னும் குறிக்கோளை அடைய முடியும், எனக்கு இதைத் தவிர வேறு எந்த வழியும் தெரியவில்லை.'

இவ்வாறு, ஒவ்வொரு மந்திரியும் நடைமுறையில் தன் சகாக்களின் குறைகளுக்கும் பொறுப்புடையவராகிறார். ஒரு அமைச்சர்மேல் கொண்டுவரப்படும் குற்றச்சாட்டு இதர அமைச்சர்கள் மேலும் கொண்டுவரப்படும் குற்றச்சாட்டாகக் கருதப்பட வேண்டும். ஒரு மந்திரிமீது கொண்டுவரப்படும் நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்படுமானால், அது இதர மந்திரிகள் மேலும் நம்பிக்கையில்லாததாகக் கருதப்பட்டு மந்திரிசபை முழுவதுமாகப் பதவியிலிருந்து விலக வேண்டும்.

**(ஈ) இரகசியங்களை வெளியிடாதிருத்தல்**

பதவியேற்கும்பொழுது ஒவ்வொரு அமைச்சரும் இரகசியக் காப்பு உறுதியொன்றை எடுத்துக்கொள்வார். அதன்படி அமைச்சர்கள் அமைச்சரவை இரகசியங்களை வெளியில் சொல்லாதிருக்கவேண்டும். அமைச்சரவைக் கூட்டங்களில் விவாதிக்கப்படும் பொருள்கள்பற்றிய தங்கள் கருத்துக்களைத் தாராளமாக எடுத்துச்சொல்லலாம். அவை மாறுபட்டக் கருத்துடையவர்கள் பெரும்பான்மையோர் முடிவை ஏற்றுக்கொண்டு, அம்முடிவை பின்பற்றி நடக்க வேண்டும். ஏற்றுக்கொள்ள முடியாதவர்கள் அமைச்சரவையிலிருந்து விலகிவிட வேண்டும்.

**(உ) அரசியற் கொள்கையால் ஒன்றுபட்டத்தன்மை**

வழக்கமாக அமைச்சர்களெல்லாம் ஒரே அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருப்பதால், தாங்கள் சார்ந்துள்ள கட்சியின் தேர்தல் அறிக்கையில் வற்புறுத்தப்பட்ட விஷயங்களை நடைமுறைக்குக் கொண்டு வந்து நிறைவேற்றுவதில் ஒற்றுமை காணப்படும். இதற்கு மாறாக, பல கட்சிகள் சேர்ந்த கூட்டு மந்திரிசபையொன்று அமைக்கப்படுமானால், கூட்டு சேர்ந்த கட்சிகள் தாங்கள் நிறைவேற்றக்கூடிய பொதுத்திட்டத்தை வகுத்துக் கொள்ளும். இத்தகைய அமைப்பில், பெரும்பான்மை முடிவை ஏற்றுக்கொள்ளாத அமைச்சர்கள் பதவியிலிருந்து விலகிவிடுவதுதான் முறை.

**(ஊ) பிரதம மந்திரியின் தலைமை**

இந்தியாவில் அரசியலமைப்பில் சொல்லப்பட்டுள்ளவாறு பிரதம மந்திரியால் பரிந்துரைக்கப்பட்டவர்களே அமைச்சர்களாக நியமிக்கப்பட வேண்டுமென்பதிலிருந்து, பிரதம மந்திரியே அமைச்சரவையின் தலைவரென்பதும், அதனால்

மற்ற அமைச்சர்கள் அவர் தலைமையை ஏற்று நடக்க வேண்டு மென்பதும் தெளிவு. அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமை வகிப்பதும் பிரதம மந்திரியே. அவரே, அமைச்சர்களுக்குத் துறைப் பொறுப்புகளைப் பகிர்ந்தளிக்கிருர். எந்த அமைச்சரும் பிரதம மந்திரியின் அனுமதியில்லாமல் ஜனுதிபதியிடம் முறையிட்டுக் கொள்ளமுடியாது. இவ்வாறு அமைச்சர்களனைவரும் பிரதம மந்திரியின் தயவை நம்பியிருக்கிருர்களென்ருல் அது மிகையாகாது.

## (4) அமைச்சரவையின் பணிகள்

அமைச்சரவையின் பணிகள் பலதரப்பட்டவை. அவைகளில் முக்கியமானப் பணி அரசாங்கம் பின்பற்ற வேண்டிய கொள்கைகளை உருவாக்குவதாகும். அதுவே, வெளிநாட்டுக் கொள்கையையும் முடிவு செய்கிறது. முக்கியமான முடிவுகளெல்லாம் அமைச்சரவைக் கூட்டங்களில் முடிவு செய்யப் படுகின்றன. சான்ருக இந்தியாவின் கூட்டுச் சேராக் கொள்கையும், காலனி ஆதிக்கத் தத்துவம், பேரரசுத் தத்துவம், இனவெறி, இராணுவக் கூட்டு ஒப்பந்தங்கள் ஆகியவை சம்பந்தப்பட்ட எதிர்ப்புக் கொள்கை யாவும் அமைச்சர்களின் ஆதரவு பெற்றவை என்று விவரிக்கவும் வேண்டுமோ! கொள்கையை உருவாக்குவது மிகவும் கடினமானதென் பதோடு கவனமாகச் செய்ய வேண்டியதுமாகும்.

இரண்டாவதாக, அமைச்சரவைதான் அரசாங்கத்தின் அச்சாணி போன்றது. ஆட்சி, நிர்வாகமெல்லாம் அதன் பொறுப்புகளாகும். பல துறைகளையும் சார்ந்த அமைச்சர்கள் செயல்திறன் மிக்கவர்களாக இருந்து அரசாங்க நிர்வாகம் திறமையாக நடக்க உதவி செய்தல் வேண்டும்.

கடைசியாக, மசோதாக்களைத் தயார் செய்து அவைகளைப் பாராளுமன்றத்தில் வெற்றிகரமாக நடத்திச் செல்வதும் அமைச்சர்களின் பொறுப்பாகும். பாராளுமன்றத்தில் ஜனுதிபதி நிகழ்த்தும் துவக்க உரையைத் தயார் செய்வதும் அமைச்சரவையேயாகும். அரசியல், வணிக பொருளாதார இராணுவ ஒப்பந்தங்கள் பலவும் அமைச்சரவையின் ஆமோதிப்பிற்கிணங்கச் செய்து கொள்ளப்படுகின்றன.

## (5) பிரதம மந்திரி

பாராளுமன்றத்திற்கான தேர்தல்கள் முடிவுபெற்றதும், லோக் சபாவில் எந்தக்கட்சி பெரும்பான்மை பலமுடைய

கட்சியாக இருக்கின்றதோ அந்தக் கட்சியின் தலைவர் ஜனாதிபதியால் பிரதம மந்திரியாக நியமிக்கப்படுவார். அவ்வாறு எந்தவொரு கட்சியும் பெரும்பான்மை பலம் பெறுமல் போகுமானல் ஜனாதிபதி தன் உசிதப்படி, யார் பெரும்பான்மை பலத்தைப் பெறச் சக்தி அல்லது திறமையுடையவர் என்று கருதுகிருரோ அவரை அல்லது ஒன்றுக்கும் மேற்பட்டக் கட்சிகள் கூட்டுச் சேர்ந்து தங்களுக்குள் தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, அமைச்சரவை அமைக்க முடியுமென்று தெரிவித்தால் அக்கூட்டணியின் தலைவரைப் பிரதம மந்திரியாக நியமிக்கலாம். இத்தகைய நிலை இந்தியாவின் மத்திய மட்டத்தில் இதுகாறும் ஏற்படவில்லையென்பது குறிப்பிடத்தக்கது.

**பிரதம மந்திரியின் அதிகாரங்களும் பணிகளும்**

பிரதம மந்திரி அமைச்சரவையின் அச்சாணி அல்லது ஆணிவேர் போன்றவர். அவரே அமைச்சரவையில் யார் யார் அங்கம் வகிக்க வேண்டும், என்னென்ன துறைப் பொறுப்புகளைத் தரவேண்டுமென்பதையெல்லாம் முடிவு செய்கிருர். இத்தகைய விஷயங்களில் பிரதம மந்திரியின் விருப்பத்திற்கு மாருக ஜனாதிபதி ஒருபோதும் நடக்க முடியாது. பிரதம மந்திரியின் பேச்சுக்கும் முடிவிற்கும் அளவு கடந்த மதிப்புத் தரப்படுகிறது. அமைச்சர்கள் பிரதம மந்திரியின் தலைமையை ஏற்று, அவர் நல்லெண்ணத்தைப் பெற்றிருக்கும் வரையில் தான் பதவியிலிருக்க முடியும். இத்தன்மை, இந்தியாவில் இப்போது சந்தேகத்திற்கிடமில்லாதவாறு ஏற்படுத்தப்பட்டு விட்டது.

அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமை வகிப்பதும், கொள்கைகள், திட்டங்களை உருவாக்குவதில் முன்னணியிலிருந்து செய்வதும் பிரதம மந்திரியேயாவார். ஜனாதிபதிக்கு அவ்வப்போது அமைச்சரவையின் முடிவுகளைத் தெரிவிப்பதும் ஜனாதிபதியின் ஆலோசனைகளைப் பெறுவதும் பிரதம மந்திரி தான். மத்திய அரசாங்கம் சம்பந்தப்பட்ட எல்லா அரசியல் தன்மை வாய்ந்த உத்தியோக நியமனங்களும் ஜனாதிபதியால் செய்யப்பட்டாலும் அவற்றைப் பின்னிருந்து முடிவு செய்வது பிரதமரேயாகும். உதாரணமாக, மாநிலக் கவர்னர்கள், தூதுவர்கள் போன்றவர்கள் நியமனம் பிரதமர் முடிவுப்படி நடைபெறுகிறது.

பிரதம மந்திரி ஈடு இணையற்ற செல்வாக்கும் அதிகாரமும் உடையவராக இருக்கிருர். உள்நாட்டு வெளிநாட்டுக்

கொள்கைகளை உருவாக்கும் சிற்பியும் அவரேயாவார். எனினும் அவர் தான் செய்யும் காரியங்களுக்கு லோக் சபைக்கு பதில் சொல்ல வேண்டியவராவார். பாராளுமன்றத்தில் கேட்கப்படும் கேள்விகளுக்கும் கொண்டு வரப்படுகின்ற ஒத்தி வைப்பு அல்லது வெட்டுப் பிரேரணைகளுக்கும் அவர் தகுந்த பதில்களைத் தரவேண்டியவராவார். பாராளுமன்றத்தில் அரசாங்கத்தின் கொள்கைகள் பற்றி அறிக்கைகளை வெளியிட வேண்டியதும் அவர் பொறுப்பேயாகும். வரவு - செலவுத் திட்டம் தயாரிக்கப்படுவதில் அவருக்கு முக்கிய பங்குண்டு என்பதோடு, அவரது சம்மதமில்லாமல் அதில் மாற்றங்களைச் செய்யவும் முடியாது. இவ்வாறு பிரதமர் பல முக்கியமான கடமைப் பொறுப்புகளை நிறைவேற்ற வேண்டியவராக இருப்பதோடு நிறைந்த செல்வாக்கையும் உடையவராக இருக்கிறார்.

# 8. யூனியன் பாராளுமன்றம்

யூனியன் சட்டமன்றம் அல்லது இந்தியப் பாராளுமன்றம் இரு மன்றங்களையும், ஜனாதிபதியையும் கொண்டதாக அமைக்கப்பட்டிருக்கிறது. ஜனாதிபதி பாராளுமன்றத்தில் உறுப்பினராக இல்லாவிட்டாலும் அவர், அதன் ஓர் அங்கமாகக் கருதப்படுகிறாரெனில், அவரது இசைவு பெறாமல் மசோதாக்கள் சட்டமாக முடியாதென்பதால் ஆகும். இவ் விஷயத்தில் நாம் ஆங்கில முறையைப் பின்பற்றுகிறோம். இந்தியப் பாராளுமன்றத்திலுள்ள இரு மன்றங்களில் ஒன்று இராச்சியசபா (Council of States) என்றும் மற்றொன்று லோக் சபா (House of the People) என்றும் அழைக்கப்படுகின்றன.

## (1) இராச்சிய சபா

இராச்சிய சபா அல்லது இராச்சியங்களின் மன்றம் இந்தியப் பாராளுமன்றத்தின் மேல் சபையாகும். இதனுடைய அதிகபட்ச உறுப்பினர்களின் எண்ணிக்கை அரசியலமைப்பின்படி 250 ஆகும். அதிலுள்ள உறுப்பினர்களின் தற்போதைய எண்ணிக்கை 238. இவர்களில் 226 பேர்கள் இராச்சியங்களிலிருந்து சட்டசபைகளால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். மிச்சமுள்ள பன்னிரண்டு பேர்கள், கல்வி, கலை, விஞ்ஞானம் ஆகிய துறைகளில் சிறந்தவர்களாக இருப்பவர்களுக்குப் பிரதிநிதிகளாக ஜனாதிபதியால் நியமிக்கப்படுகின்றனர். தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்கள் அந்தந்த இராச்சியங்களிலுள்ள மக்கட்தொகை எண்ணிக்கையடிப்படையில் பிரதிநிதிகளாக சம்பந்தப்பட்ட இராச்சிய சட்டசபைகளால் தேர்ந்தெடுக்கப்படுவர்களாவார்கள்.

**இராச்சிய சபா உறுப்பினராவதற்கு வேண்டிய தகுதிகளாவன :** வேட்பாளர் இந்தியக் குடிமகனுகவும், முப்பது வயதான வராகவும், எந்த இராச்சியத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட விரும்புகிருரோ அந்த இராச்சியத்தில் வாக்காளர் பட்டியலில் பெயர் சேர்க்கப்பட்டு வாக்களிக்கும் தகுதியுடையவராக இருக்க வேண்டும்.

இராச்சிய சபா நிரந்தரமானதாகும். ஏனெனில் லோக் சபையைப் போல அது கலைக்கப்பட முடியாது. ஆனுல், இச் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களின் பதவிக் காலம் ஆருண்டுகளாகும். இரண்டாண்டுகளுக்கொரு முறை உறுப்பினர்களில் மூன்றிலொரு பங்கினர் பதவி ஒய்வு பெற்று அந்த இடங்களுக்குத் தேர்தல் நடைபெறும். பதவியிலிருந்து விலகுபவர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படலாம்.

இராச்சிய சபாவின் தலைவர் உதவி ஜனுதிபதி. அவரது மாதச்சம்பளம் ரூபாய் 2,500 ஆகும். இவரைத்தவிர, இராச்சியசபா உதவித் தலைவர் ஒருவரையும் அதன் கூட்டங் களுக்குத் தலைமை வகிக்கத் தேர்ந்தெடுக்கும். அவரது மாதச் சம்பளம் ரூ. 2,000 ஆகும். தலைவர், உதவித் தலைவர்களின் முக்கியமான அலுவல்கள் இராச்சிய சபாவின் அலுவல்கள் சரியானபடி நடைபெற உதவுவதும், சபையில் ஒழுங்கையும் அமைதியையும் ஏற்படுத்தி உறுப்பினர்கள் விவாதங்களில் பங்கெடுத்துக்கொள்ளுமாறு செய்வதும், வாக்கு எடுக்கப் பட்ட பிறகு முடிவை அறிவிப்பதுமாகும். இராச்சிய சபாவின் கூட்டம் நடைபெறுவதற்குக் குறைந்தது மொத்த உறுப்பினர் களில் பத்தில் ஒரு பங்கினராவது கூட்டத்திற்கு வருகை தந்திருக்க வேண்டும்.

இராச்சிய சபாவின் தலைவரும், உதவித் தலைவரும் லோக் சபாவின் சபாநாயகருக்கும், உதவி சபாநாயகருக்கும் என்னென்ன சலுகைகளும் சிறப்புகளும் வழங்கப்படு கின்றனவோ அதே சலுகைகளையும், சிறப்புகளையும் பெறு கின்றனர். இராச்சியசபாவின் உறுப்பினர்கள் பரிபூரண பேச்சுச் சுதந்திரம் கொடுக்கப்பட்டிருக்கிருர்கள். சபையில் நிகழ்த்திய பேச்சுக்களுக்காக அவர்கள் கைது செய்யப்பட முடியாது. அங்ஙனமே சபை கூட்டப்படுவதற்கு 40 நாட்கள் முன்னும் கூட்டத்தின் கடைசி நாளிலிருந்து 40 நாட்கள் பின்னும் அவர்கள் கைது செய்யப்பட முடியாது.

**(2) லோக் சபா**

இந்தியப் பாராளுமன்றத்தின் கீழ்சபை லோக் சபா அல்லது மக்கள்சபை என்றழைக்கப்படுகிறது. அதில் அதிக பட்சமாக 525 உறுப்பினர்கள் இருக்கலாம்.

**லோக்சபா உறுப்பினராவதற்கு வேண்டிய தகுதிகளாவன:** வேட்பாளர் இந்தியக் குடிமகனுகவும், இருபத்தொரு வய தானவராகவும், பாராளுமன்றத்தால் வரையறை செய்யப் பட்டிருக்கும் இதரத் தகுதிகளையும் உடையவராக இருக்க வேண்டும். மேலும் யூனியன் அல்லது இராச்சிய அரசாங் கத்தின் கீழ் இலாபந்தரும் உத்தியோகம், மனநலமற்றவர் என நீதி மன்றங்களால் அறிவிக்கப்பட்டவர், திவாலானவர், அயல் நாடொன்றின் குடிமையுரிமை பெற்றவர், சட்ட அடிப் படையில் தகுதியற்றவரென அறிவிக்கப்பட்ட எவரும் தேர்தலுக்கு நிற்க முடியாது.

லோக் சபாவின் ஆயுட் காலம் சாதாரணமாக ஐந்தாண்டு களாகும். ஆனுல், அவசரப் பிரகடனமொன்று அமுலில் இருக்கும்போது பாராளுமன்றம் இயற்றும் சட்ட ஆதாரத் தில் அதன் ஆயுட் காலம் ஒரே சமயத்தில் ஓர் ஆண்டு காலத் திற்கு நீடிக்கப் படலாம். அவ்வாறு அதிகபட்சமாக மூன்ருண்டு காலத்திற்குத்தான் நீடிக்கப்படலாம். லோக் சபா அதன் ஐந்தாண்டு ஆயுட் காலம் முடிவதற்கு முன்பே பிரதம மந்திரியின் சிபாரிசின் பேரில் முன்னதாகவும் கலைக்கப் படலாம். இத்தகைய சந்தர்ப்பம் பிரதம மந்திரிக்கு மன்றத் தில் தேவையான பெரும்பான்மை பலம் இல்லாமற் போனுலோ அல்லது தேர்தல் நடைபெற்ருல் அதில் அதிக மான இடங்கள் கிடைக்கும் என்பதினுலோ ஏற்படக் கூடிய தாகும். இந்தியாவின் நான்காவது பாராளுமன்றம் 1970ஆம் ஆண்டில் ஐந்தாண்டு முடிவதற்கு முன்பாகக் கலைக்கப் பட்டதைக் குறிப்பிடலாம். நடைபெற்ற தேர்தலில் பிரதம மந்திரிக்கு மூன்றிலிரு பங்கு பெரும்பான்மைக்கும் அதிகமான பலம் கிடைத்ததென்பது சிறப்பான அம்சமாகும். லோக் சபாவின் கூட்டம் நடைபெறுவதற்குக் குறைந்த பட்சமாக மொத்த உறுப்பினர்களில் பத்திலொரு பங்கினராவது வருகை தந்திருக்க வேண்டும். ஐம்பது பேருக்கும் குறைவான வர்களே வருகை தந்த கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட எந்த தீர்மானமும் சட்டபூர்வமாகச் செல்லுபடியாகாததாகும். லோக்சபா உறுப்பினர்களும், ராஜ்ய சபா உறுப்பினர்

களுக்குத் தரப்பட்டிருக்கும் சலுகைகளையும், விலக்குகளையும் பெற்றிருக்கிறார்கள். உறுப்பினர்களின் சலுகைகள் புறக்கணிக்கப்படாமல் சபாநாயகர் பாதுகாக்கிறார்.

**(3) சபாநாயகரும், உதவி சபாநாயகரும்**

லோக்சபாவில் சபாநாயகர், உதவி சபாநாயகர் ஆகிய இரண்டு அலுவலர்கள் இருக்கிறார்கள். அவர்கள், உறுப்பினர்களால் அவர்களுக்குள்ளிருந்தே தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அவர்கள் தலைமை அலுவலர்களாகப் பணியாற்றுகிறார்கள். சாதாரணமாக அவர்களின் தேர்தல் எதிர்க்கட்சித் தலைவர்களுடன் பிரதம மந்திரி பேச்சுவார்த்தை நடத்தி ஒருமனதாக நடக்க வழி செய்கிறார். பொதுவாக சபாநாயகர் ஆட்சியிலிருக்கும் கட்சியையும், உதவி சபாநாயகர் எதிர்தரப்புக் கட்சிகளில் ஏதாவதொன்றைச் சேர்ந்தவராகவும் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். பாராளுமன்றமுறை அரசாங்கத்தில் சபாநாயகர் ஒப்பற்ற இடத்தைப் பெறுகிறார். சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதும் அவர் முதலில் எந்தக் கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாரோ அந்தக் கட்சியிலிருந்து தற்காலிகமாக விலகி, சபாநாயகர் கட்சி சார்பில்லாமல், நடுநிலையில் நின்று செயலாற்ற வேண்டுமெனும் வழக்காற்றை நிலைநாட்டுகிறார். இத்தன்மையுடையவரொருவர், மீண்டும் பொதுத் தேர்தலில் நிற்கும்போது போட்டியில்லாமல் தேர்ந்தெடுக்கப்படும் வாய்ப்பைப் பெறுகிறார்.

சபாநாயகரும் உதவி சபாநாயகரும் பாராளுமன்றத்தின் ஆயுட் காலத்திற்கு பதவியிலிருப்பார்கள். அவர்கள் தாங்களாகப் பதவியை ராஜினாமா செய்யலாம். அல்லது சபை அவர்களிடம் நம்பிக்கையில்லையென்னும் தீர்மானமொன்றை நிறைவேற்றினாலும், அவர்கள் பதவியிலிருந்து விலக வேண்டும். சபாநாயகருக்கு ரூபாய் 3,000மும் உதவி சபாநாயகருக்கு ரூபாய் 1,500ம் மாதச்சம்பளமாகத் தரப்படுகிறது. லோக்சபா கலைக்கப்பட்டு மீண்டும் தேர்தல் முடிந்து புதிய லோக்சபாவின் சபாநாயகர் தேர்ந்தெடுக்கப்படும் வரை முந்தைய லோக் சபாவின் சபாநாயகர் பதவியில் தொடர்ந்திருந்து வருவார்.

**சபாநாயகரின் அதிகாரங்களும் பணிகளும்**

சபாநாயகர் லோக்சபையின் கூட்டங்களுக்குத் தலைமை வகித்து அதன் நடவடிக்கைகளை நடத்தி வைக்கிறார். சபை

யின் அலுவல்கள் என்னென்ன, உறுப்பினர்கள் எவ்வளவு நேரம் பேச வேண்டுமென்பதையெல்லாம் அவரே முடிவு செய்வார். சபையில் அமைதியையும் ஒழுங்கையும் பராமரிப்பதும், உறுப்பினர்கள் பேசும் பேச்சுக்களில் பேசத்தகாத சொற்கள் பயன் படுத்தப்படாமல் பார்த்துக் கொள்வதும் அவர் பணிகளுள் ஒன்றாகும். உறுப்பினர் எவராவது அவருடைய தீர்ப்பை ஏற்க மறுத்தால் அவரைச் சபையின் நடவடிக்கைகளில் கலந்து கொள்வதினின்றும் தற்காலிகமாக விலக்கி வைக்கவும் அவருக்கு அதிகாரம் உண்டு. அங்ஙனமே, சபை நடவடிக்கைகள் சீராக நடைபெறுவதற்கு முடியாதவாறு உறுப்பினர்கள் முரட்டுத்தனமாகவும் ஆத்திரத்துடனும் நடந்து கொள்வார்களானால் சபையின் நடவடிக்கைகளை தற்காலிகமாக ரத்து செய்து, சபையை அமைதியான சூழ்நிலையில் மீண்டும் நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு ஏதுவாக ஒத்தி வைக்கவும் அவர் அதிகாரம் பெற்றிருக்கிறார். மசோதாவொன்று இறுதியாக நிறைவேற்றப்படுமானால் அதற்கு அவர் தன்னுடைய கையெழுத்தையிட்டு முடித்து வைக்கிறார். மசோதாக்கள் அல்லது தீர்மானங்கள் அல்லது வெட்டுப் பிரேரணைகள் அல்லது ஒத்திவைப்புத் தீர்மானங்கள் ஆகியவைகளை அனுமதிப்பதோ அல்லது அனுமதிக்க மறுப்பதோ அவருடைய அதிகார எல்லையில் அடங்கும். அவரது தீர்ப்புக்கு எதிர்ப்பு அனுமதிக்கப்பட முடியாததாகும். பாராளுமன்றத்தின் இரு சபைகளின் கூட்டுக் கூட்டம் நடைபெறும்போது சபாநாயகரே அக்கூட்டத்திற்குத் தலைமை வகிப்பார். உறுப்பினர்களின் உரிமைகளையும் சுதந்திரத்தையும் காப்பாற்றுவது அவர் பொறுப்பிலடங்கும். ஏதேனுமொரு பொருள் அல்லது மசோதாபற்றி நடைபெறும் வாக்கெடுப்பில் வெற்றி அல்லது தோல்வி ஏற்படாமல் வாக்குகள் சமமாகப் பதிவாகுமானால் சபாநாயகர் அவரது வாக்கைத்தந்து தேக்க நிலையை முடிவுக்குக் கொண்டு வருவார்.

இவ்வாறு, சபாநாயகர், லோக்சபாவின் எல்லா நடவடிக்கைகளுக்கும் பணிகளுக்கும் பொறுப்பேற்கிறார். இதனால் அவரது அதிகாரமும் அந்தஸ்தும் மிகச் சிறப்பானவை. அறிவாற்றலும், நடுநிலைமைத் தன்மையும், சபை நடவடிக்கைகள் பற்றிய முறைகளில் நல்ல ஞானமும் தந்திரமும், சூழ்நிலைக்குத் தகுந்தவாறு விரைவாகச் செயலாற்றும் சுறுசுறுப்புமுடைய சபாநாயகர் எவரும் பெயரும் புகழும் எளிதில் பெற்று விடுவார் என்பது மட்டும் திண்ணம்.

## (4) பாராளுமன்றத்தின் பணிகளும் அதிகாரங்களும்

இந்தியப் பாராளுமன்றம் இறைமைத்தன்மையுடையதன்று. அத்தன்மை இந்தியாவில் அரசியலமைப்பிற்குத் தரப்பட்டிருக்கிறது. எனவே, பாராளுமன்றம் இயற்றும் சட்டங்களெல்லாம் அரசியலமைப்பிற்குட்பட்டவைகளாக இருக்க வேண்டும். அதற்கு மாறுபட்ட சட்டங்கள் நீதிமன்றங்களால் செல்லத் தகாதவை என அறிவிக்கப்படலாம். மேலும், பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரம் யூனியனுக்கும் இராச்சியங்களுக்குமிடையே அதிகாரத்தைப் பிரித்து வழங்கும் அதிகாரப் பங்கீட்டால் கணிசமான அளவிற்குக் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. கூட்டாட்சி நாடொன்றின் பாராளுமன்றம் என்னும் தன்மையில் அது யூனியன் பட்டியலில் காணப்படும் இனங்களில்தான் சாதாரணமாக சட்டமியற்றும் அதிகாரம் பெற்றிருக்கிறது. அவ்வாறே பொதுப் பட்டியலில் காணப்படும் பொருள்கள் பற்றியும் அது சட்டமியற்றலாம்.

பாராளுமன்றம் அமைச்சர்கள் கழகத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரமுடையது. அது அரசியலமைப்பைத் திருத்துவதற்கும், ஜனாதிபதியை அரசுத் துரோகக் குற்றச்சாட்டடிப்படையில் விசாரிப்பதற்கும், உச்ச, உயர் நீதிமன்ற நீதிபதிகளையும் இந்தியக் கணக்குத் தணிக்கைத் தலைமை அதிகாரியையும், தலைமைத் தேர்தல் அலுவலரையும் பதவியிலிருந்து அகற்றுவதற்கும் அதிகாரம் பெற்றிருக்கிறது. அதாவது இருமன்றங்களும் இத்துறைகளில் சமமான அதிகாரம் பெற்றிருக்கின்றன. ஜனாதிபதி, உதவி ஜனாதிபதி தேர்தல்களில் இரு மன்றங்களும் பங்கெடுத்துக் கொள்கின்றன.

### சாதாரண மசோதாக்களும் பாராளுமன்றமும்

பணம் அல்லது நிதி சம்பந்தமான மசோதாக்கள் தவிர இதர மசோதாக்கள் விஷயத்தில் இரு மன்றங்களும் சரிசமமான அதிகாரங்களுடையவை. இம்மசோதாக்கள் இரு மன்றங்களில் எதில் வேண்டுமானாலும் முதலில் தாக்கல் செய்யப்பட்டு, விவாதிக்கப்பட்டு நிறைவேற்றப்படலாம். எனினும் சாதாரண மசோதாக்களிலும் முக்கியமானவை என்று கருதப்படுபவை லோக் சபாவில் முதலில் நிறைவேற்றப்பட்ட பிறகே இராச்சிய சபாவுக்கு அனுப்பப்படுவது குடியாட்சிக் கொள்கைகளடிப்படையில் ஒரு மரபாகக் கருதப்

படுகிறது. எனவே சர்ச்சைக்கு அப்பாற்பட்ட மசோதாக்கள் இராச்சிய சபாவினுல் விவாதிக்கப்பட்டு பிறகு லோக் சபாவின் இசைவிற்கு அனுப்பப்படுகின்றன எனலாம். சாதாரண மசோதாக்கள் நிறைவேற்றத்தில் இரு சபைகளுக்குமிடையே தீராத கருத்து வேற்றுமை காரணமாக முட்டுக்கட்டை ஏற்படுமாறுல் அதை அகற்ற அவற்றின் கூட்டுக் கூட்ட மொன்றை ஜனுதிபதி கூட்டலாம். அக்கூட்டுக் கூட்டத்திற்கு லோக் சபாவின் சபாநாயகரே தலைமை வகிப்பார். அக் கூட்டத்தில் பெரும்பான்மை உறுப்பினர்களின் ஆதரவு பெற்ற மசோதாக்கள் நிறைவேற்றப்படும். இங்கு கவனிக்க வேண்டிய முக்கியமான அம்சம் என்னவெனில் இரு மன்றங் களின் கூட்டுக் கூட்டத்தில் லோக் சபாவின் உறுப்பினர்களின் எண்ணிக்கை இராச்சிய சபா உறுப்பினர்களின் எண்ணிக் கையை விட அதிகமாக அதாவது இருமடங்காக இருப்பதால், லோக்சபாவினுல் ஆதரிக்கப்படும் மசோதாக்கள் தடங்கலின்றி நிறைவேற்றப்படுமென்பதேயாகும்.

**நிதி மசோதாக்களும் பாராளுமன்றமும்**

நிதி அல்லது பண மசோதாக்களைப் பொறுத்த மட்டில் இரு மன்றங்களின் அதிகாரங்களும் ஒரே மாதிரியானவை யல்ல. லோக்சபா, இராச்சிய சபாவைவிட உண்மையான, மேலான, இறுதியான அதிகாரங்களைப் பெற்றிருக்கிறது. நிதி அல்லது பண மசோதாக்கள் லோக் சபாவில்தான் முதலில் தாக்கல் செய்யப்பட்டு பரிசிலனை செய்யப்பட்டு, நிறைவேற்றப் பட்டு இராச்சியசபாவுக்கு அனுப்பப்பட வேண்டுமென் பதற்கு அரசியலமைப்பில் வகை செய்யப்பட்டிருக்கிறது. பண மசோதாக்கள் பாராளுமன்ற முறை அரசாங்கம் நடை பெறுமிடங்களில் நிதி அமைச்சரால், நிதி அமைச்சரில்லாத போது வேறொரு அமைச்சரால் சபையில் தாக்கல் செய்யப் படுகிறது. பண மசோதாக்கள், சாதாரணமாக புதிய வரி விதிப்பு, விலக்கு, திருத்தம், கட்டுப்பாடுகள் சம்பந்தப் பட்டவைகளாக இருக்கும். லோக்சபாவினுல் நிறைவேற்றப் பட்ட பிறகு அவை இராச்சிய சபாவின் பரிந்துறைகளைப் பெறுவதற்கு அனுப்பப்படும். அவ்வாறு அனுப்பப்படும் மசோதாக்கள் இராச்சிய சபையினுல் பதினுன்கு நாட் களுக்குள் மீண்டும் லோக்சபாவிற்கு அனுப்பப்பட வேண்டும். லோக் சபா இராச்சிய சபாவினுல் பரிந்துரைக்கப்பட்ட திருத் தங்கள் எல்லாவற்றையுமோ அல்லது சிலவற்றை மட்டுமோ ஏற்கலாம் அல்லது எல்லாவற்றையுமே நிராகரிக்கலாம்.

எப்படியிருப்பினும், அம்மசோதாக்கள் பாராளுமன்றத்தின் இருசபைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்பட்டு, பிறகு சட்டங்களாகிவிடும். எனவே, பண மசோதாக்களைப் பொறுத்தவரையிலும் இராச்சிய சபாவிற்குள்ள அதிகாரங்கள் பெயரளவிலானவையே என்பது தெளிவாகும்.

## (5) இராச்சிய சபாவின் பயன்

மேற் சொல்லப்பட்டவைகளிலிருந்து இராச்சியசபாவினால் பயனேதுங் கிடையாதெனை யாரும் எளிதில் கருதக் கூடும். எனினும், அச்சபா இதர நாடுகளிலுள்ள மேற்சபைகளைப் போல தொடர்ந்திருந்து வருவதற்குக் காரணங்கள் சில உண்டு. முக்கியமாக, பொதுமக்களின் கருத்துகளைப் பிரதிபலிப்பதாகக் கருதப்படும் லோக்சபா சில சமயங்களில், அரசியல் சூழல்கள் அல்லது சிக்கல்கள் காரணமாக அவசரப்பட்டுத் தேவையற்ற மசோதாக்கள் நிறைவேற்றுமானால் அவைகளை இராச்சிய சபா நிராகரித்து மீண்டும் லோக்சபா அவைகளை அவசியமானால் பரிசீலனை செய்து நிறைவேற்றுமாறு செய்யலாம். மக்களாட்சியால் சில சமயங்களில் அறிவாற்றல் மிக்க அறிஞர்கள் தேர்தலில் நின்று வெற்றி பெறும் வாய்ப்பில்லாமல் போகக்கூடும். அதனால், அரசாங்கத் துறைகள் திறமையாகப் பணியாற்றுவது பாதிக்கப்படலாம். இத்தகைய 'போக்கை' சமாளிப்பதற்கு மேற்சபை அவசியப் படுகிறது. ஏனெனில், மேற்சபைக்கு எவரும் மிகச் சிரமமில்லாமல் தேர்ந்தெடுக்கப்படக்கூடிய வாய்ப்புகள் இருக்கின்றன.

இராச்சிய சபாவைப் பொறுத்தவரையிலும் சில சிறப்பான அதிகாரங்கள் இருப்பதை மறுக்க முடியாது. சான்றாக, லோக் சபை கலைக்கப்பட்டிருக்கும்போது, ஜனாதிபதியின் சில அவசரச் சட்டங்கள் இராச்சிய சபாவினால் ஏற்றுக் கொள்ளப் படவேண்டும். அங்ஙனமே, தேசிய நலன் கருதி பாராளுமன்றம் இராச்சியத் துறைகளிலுள்ள பொருள்கள் பற்றி சட்டமியற்ற விரும்பினால், இராச்சிய சபா அதற்காதரவாகத் தீர்மானமொன்றை இயற்றுமானால் அவ்வாறு செய்வது சட்ட பூர்வமானதாகும். மேலும், இராச்சிய சபா, அமைச்சர்களை கேள்விகள் கேட்டு பெறும் பதில்கள் வாயிலாகப் பொது மக்களின் ஆதரவைத் திரட்டி, அமைச்சரவை சில காரியங்களைச் செய்வதினின்றும் தடை செய்யலாம். கவன ஈர்ப்புத் தீர்மானங்கள் கொண்டுவந்து பயனுடைய நல்ல காரியங்களை

அரசாங்கம் மேற்கொள்ளுமாறு செய்யலாம். இந்தியாவைப் பொறுத்தவரை, இராச்சிய சபா அவசியமற்றதெனக் கருத முடியாது.

**(6) பாராளுமன்றத்தில் சட்டமியற்று முறை**

பாராளுமன்றத்தின் முக்கியபணி நாட்டுக்குத் தேவையான சட்டங்களை இயற்றுவதாகும். பாராளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டு நிறைவேற்றப்படுகின்ற மசோதாக்கள் பண மசோதாக்கள், பண மசோதாக்களல்லாத சாதாரண மசோதாக்கள் என இரு வகைப்படும். பண மசோதாக்கள் சாதாரண மசோதாக்களைப் போலவல்லாமல், வேறு நடைமுறைகளைப் பின்பற்றி நிறைவேற்றப்படுகின்றன.

**வரவு - செலவுத்திட்டம் அல்லது பண மசோதாக்கள் இயற்றப்படுவது பற்றிய நடைமுறை:** பண மசோதாவொன்று மக்கள்சபை அல்லது லோக் சபாவில்தான் முதலில் தாக்கல் செய்யப்பட முடியும். ஒவ்வொரு நிதியாண்டுத் துவக்கத்திலும் எதிர்பார்க்கப்படும் வரவினங்கள் செலவினங்கள் பற்றிய மதிப்பீடுகள் அடங்கிய வரவு - செலவுத் திட்டம் பாராளுமன்றத்திற்குத் தாக்கல் செய்யப்பட வேண்டுமென்று அரசியலமைப்பு விதிக்கிறது. இந்த வரவு - செலவு அறிக்கையைத் தயாரிப்பதற்கு இதரத் துறைகளுக்குப் பொறுப்பேற்றிருக்கும் அமைச்சர்களிடமிருந்து நிதியமைச்சர் புள்ளி விபரங்களைச் சேகரிக்கிறார். யூனியன் வரவு - செலவுத் திட்டம் இரு பகுதிகளாக அதாவது இரயில்வே வரவு - செலவுத்திட்டம், பொது வரவு - செலவுத் திட்டமென்று சமர்ப்பிக்கப்படுகிறது. முதலாவதாகச் சொல்லப்பட்டது இரயில்வே அமைச்சராலும் இரண்டாவதாகச் சொல்லப்பட்டது நிதியமைச்சராலும் தாக்கல் செய்யப்படுகின்றன. இந்த இரண்டு வரவு - செலவுத் திட்டங்கள் நிறைவேற்றப் படுவதற்குப் பின்பற்றப்படும் நடைமுறை ஒரே மாதிரியானவை.

வரவு - செலவுத் திட்டத்தில் அடங்கியுள்ள செலவுத் தொகைகளை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். இந்தியக் குவிப்பு நிதியிலிருந்து செலவிடப்பட வேண்டியவை இவற்றுள் ஒரு பகுதியாகும். அவைகளைப்பற்றி பாராளுமன்றம் விவாதிக்கலாமேயொழிய வாக்கெடுப்பு நடத்த முடியாது. இவை நீங்கலாக உள்ள செலவினங்களுக்குக் குவிப்பு நிதியிலிருந்து நிதி பெறுவதற்கு வாக்கெடுப்புத் தேவையாகும்.

**இந்தியக் குவிப்பு நிதியிலிருந்து செலவிடப்பட வேண்டிய இனங்களாவன :**

(அ) ஜனாதிபதியின் சம்பளம், மற்றும் படிகள் முதலியன.

(ஆ) பாராளுமன்ற சபைகளின் தலைவர்களுக்கான சம்பளம், படிகள் முதலியன.

(இ) இந்திய அரசாங்கத்தின் கடன் பொறுப்புகள்.

(ஈ) உச்ச நீதிமன்றம், உயர் நீதிமன்றங்கள் ஆகியவற்றின் நீதிபதிகள், ஆடிட்டர் ஜெனரல் போன்றவர்களின் ஒய்வூதியத் தொகை.

(உ) ஏதாவதொரு நீதிமன்றத்தின் வாயிலாக வழங்கப்பெற்ற தொகை அல்லது தீர்ப்பு ஆகியவற்றின் தொகை, மற்றும் பாராளுமன்றம் அரசியலமைப்புச் சட்டம் ஆகியவை ஏற்று அறிவிக்கின்ற செலவினங்கள்.

செலவினங்களின் இரண்டாவது பகுதியைப் பொறுத்த மட்டில், தேவையான நிதியொதுக்க வேண்டுமென்ற கோரிக்கை உரிய மதிப்பீடுகளுடன் லோக்சபையில் சமர்ப்பிக்கப்படும். அக்கோரிக்கைகளுக்கு இணங்குவதற்கோ அல்லது மதிப்பீட்டைக் குறைப்பதற்கோ அல்லது மறுதலித்துத் தள்ளிவிடுவதற்கோ லோக் சபையினருக்கு அதிகாரமுண்டு. மானியத்தேவையைப் பொறுத்த ஒவ்வொரு கோரிக்கையும் ஜனாதிபதியின் சிபாரிசைப் பெற்றிருக்க வேண்டும்.

கோரிக்கைகளெல்லாம் லோக்சபாவினுல் ஏற்றுக் கொள்ளப்பட்ட பிறகு மேற்கூறப்பட்ட இரு பகுதி செலவினங்களும் ஒன்று சேர்க்கப்பட்டு ஆண்டு செலவின மசோதா (Annual Appropriation Bill) வாக லோக்சபாவில் தாக்கல் செய்யப்பட்டு இதர மசோதாக்களைப் போல நிறைவேற்றப் படுகின்றன. அதன் பிறகு, அது லோக்சபா சபாநாயகரால் 'நிதி மசோதா' என்று சான்றிதழ் தரப்பட்டு இராச்சியசபாவின் சிபாரிசுகளுக்கு அனுப்பப்படுகிறது. இராச்சியசபா அம்மசோதாவை நிராகரிக்கவோ அல்லது திருத்தியமைக்கவோ முடியாது. மசோதா இராச்சிய சபாவினுல் பதினுன்கு நாட்களுக்குள் அனுப்பப்பட வேண்டும். அவ்வாறு திருப்பி அனுப்பப்பட்டதும் மசோதா ஜனாதிபதியின் இசைவுக்கு அனுப்பப்பட்டு, இசைவு கிடைத்ததும் சட்டமாகிவிடும்.

இதே போல, வரவினங்கள் பற்றிய மசோதா, நிதி மசோதா (Finance Bill) வும் நிறைவேற்றப்பட்டு சட்டமாகிறது.

**சாதாரண மசோதாக்கள் நிறைவேற்றப்படுவதற்குப் பின்பற்றப் படும் நடைமுறை:** பண மசோதாக்கள் அல்லாத இதர மசோதாக்களெல்லாம் சாதாரண மசோதாக்களாகும். இப்போது சாதாரண மசோதாக்கள் எவ்வாறு நிறைவேற்றப் படுகின்றன என்பதைப் பார்க்கலாம். சாதாரண மசோதாக்கள் பாராளுமன்றத்தின் இரு சபைகளில் எந்த சபையில் வேண்டுமானாலும் முதலில் தாக்கல் செய்யப்படலாம். அவை, பண மசோதாக்களைப் போலவல்லாமல் அமைச்சரவையில் அங்கம் பெறாத தனி உறுப்பினர்களாலும் கொண்டு வரப் படலாம். சாதாரண மசோதாக்கள், அரசாங்க மசோதாக்கள் (Government Bills), தனி உறுப்பினர் மசோதாக்கள் (Private Member's Bills), என இருவகைப்படும். இவ்விரு வகை மசோதாக்களும் ஒரே மாதிரியான நடைமுறை களாலேயே நிறைவேற்றப்பட்டு சட்டங்களாகின்றன.

பெரும்பாலான சாதாரண மசோதாக்கள் அமைச்சர் களாலேயே தாக்கல் செய்யப்படுகின்றன. ஒவ்வொரு சாதாரண மசோதாவும் பின்வரும் நிலைகளைத் தாண்டிய பிறகே சட்டமாகும்.

முதல் நிலையில் சாதாரண மசோதாவின் நகல், அது எந்த சபையில் தாக்கல் செய்யப்படவேண்டுமோ அந்த சபையின் செயலகத்திற்கு அனுப்பப்படுகிறது. சபாநாயகர் அல்லது தலைவர் சபை அலுவல்கள் பட்டியலில் அம்மசோ தாவைச் சேர்த்துக் கொண்டு, அது முறைப்படியாகத் தாக்கல் செய்யப்படுவதற்கானத் தேதியை அறிவிப்பார். அத்தேதியில், மசோதா யார் பெயரில் தாக்கல் செய்யப் பட்டதோ, அவர், அதைச் சபையில் முறைப்படி அறிமுகப் படுத்துவதற்கு சபையின் அனுமதியைக் கோருவார். அனுமதி கிடைத்து அறிமுகப்படுத்திய பிறகு மசோதா, இந்திய அரசிதழில் (Gazettee of India) வெளியிடப்படும். சில சமயங்களில் மசோதா முறைப்படி அறிமுகப்படுத்துவதற்கு முன்பே கூட அரசிதழில் வெளியிடப்பட்டுவிடலாம். அவ் வாறு வெளியிடப்பட்டால், சபையில் அது முறைப்படியாக அறிமுகப்படுத்தப்படவேண்டிய அவசியமில்லை. முதல் நிலையில் மசோதாவின் முதல் வாசிப்பு முடிவு பெற்றதாகக் கருதப் படும்.

இரண்டாவது நிலையில், மசோதாவின் இரண்டாம் வாசிப்பு நடைபெறும். சாதாரணமாக, மசோதாவின் அறிமுகத்திற்கும் இரண்டாம் வாசிப்பிற்குமிடையே இரண்டு நாள் இடைவெளி இருக்கும். இந்த இரண்டாம் வாசிப்பின் போது மசோதாவைக் கொண்டு வருபவர் பின் சொல்லப்படும் மூன்று வழிகளில் ஏதாவதொன்றைப் பின்பற்றலாம். (அ) சபை மசோதாவை உடனே பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம் (ஆ) மசோதாவைப் பொறுக்குக்குழு வொன்றின் பரிசீலனைக்கு அனுப்பலாம் (இ) பொதுமக்கள் கருத்தை அறிவதற்கு அது அனுப்பப்படலாம். விசேஷமான சந்தர்ப்பங்களில் மசோதா சபையினால் உடனேயே பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படலாம். மசோதாவை அறிமுகப்படுத்துபவரின் யோசனையை சபை உறுப்பினர்கள் எதிர்க்கலாம். அதன் பிறகு மசோதாவைப் பற்றிய விவாதம் நடைபெறும். ஆதரவாளர்கள் மசோதாவை வரவேற்றுப் பேசுவார்கள். எதிர்ப்பாளர்கள் மசோதாவைக் குறை கூறி அல்லது தாக்கிப் பேசுவார்கள்.

**குழுநிலை :** மசோதா, பொறுக்குக் குழுவொன்றின் பரிசீலனைக்கு அனுப்பப்படுவதை சபை ஏற்குமானால் அவ்வாறே செய்யப்படுகிறது. பொறுக்குக் குழு உறுப்பினர்களின் பெயர்களை மசோதாவைக் கொண்டு வருபவர் எடுத்துச் சொல்வார். சபாநாயகர் அந்த உறுப்பினர்களில் ஒருவரைக் குழுத் தலைவராக நியமிப்பார். உதவி சபாநாயகர் குழுவிலொரு உறுப்பினராக இருந்தால், அவரே அதன் தலைவராகவும் இருப்பார். குழுவில் சாதாரணமாக 20 முதல் 30 உறுப்பினர்கள் இருப்பார்கள். குழு மசோதாவை நன்றாகப் பரிசீலனை செய்து அவசியமான மாற்றங்களை சிபாரிசு செய்யும். பரிசீலனை முடிந்ததும் குழுவின் தலைவர் அதில் தன் கையொப்பத்தையிடுவார்.

**அறிக்கை நிலை :** அறிக்கை நிலை, மசோதா சட்டமாவதில் நான்காம் கட்டமாகும். இந்நிலையில் மசோதாவின் ஒவ்வொரு வரியும் நுணுக்கமான ஆராய்ச்சிக்குட்படுத்தப்படும். ஒவ்வொரு ஷரத்தையும் சபை பரிசீலிக்கின்றபோது, தேவையான திருத்தங்களும் பிரேரேபிக்கப்படுகின்றன. திருத்தங்கள், மசோதாவை ஒட்டியவைகளாகவும், அதன் வரம்பிற்குட்பட்டவைகளாகவும் இருக்கின்றனவா என்ற பரிசீலனைக்குப் பிறகு தேவையான மாற்றங்கள் செய்யப்பட்டு

வாக்கெடுப்பு நடைபெறும். இவ்வாறு மசோதாவின் இரண்டாம் பரிசீலனை நடைபெறுகிறது.

இதையடுத்து மசோதாவை அறிமுகப்படுத்தியவர் 'மசோதா சட்டமாக ஏற்கப்பட வேண்டும்' என்று கோருவார். இவ்வாறு மசோதாவின் மூன்ருவது பரிசீலனை தொடங்கு கிறது. மசோதா மூன்ருவது முறையாகப் பரிசீலிக்கப்படும் போது, பொதுவாக வாசகங்களைப் பற்றிய சாதாரண சிறு திருத்தங்களே பிரேரேபிக்கப்படுகின்றன. இதனுல் விவாதம் குறுகிய அளவில் நடைபெறுகிறது; அலுவல்கள் விரைவாக நடைபெறுகின்றன. திருத்தங்கள் குறித்து முடிவுக்கு வந்த பிறகு இறுதியாக மசோதா முழுவதும் நிறைவேற்றப்படுகிறது. இங்ஙனம், ஒரு சபையில் மசோதாவைப் பொறுத்துள்ள சடங்குகள் யாவும் மேற்கொள்ளப்பட்டபின், மறுசபையின் பரிசீலனைக்கென்று மசோதா அனுப்பி வைக்கப்படும்.

மறுசபையில் மசோதா பரிசீலனை செய்யப்படும்போது, முதல் சபையில் அது எவ்வாறு பரிசீலனை செய்யப்பட்டதோ அதே முறைகள் இங்கும் மேற்கொள்ளப்பட்டு மசோதா நிறைவேற்றப்படும். அதன் பின் அது ஜனுதிபதியின் இசைவு கிடைத்ததும் சட்டமாக சட்டப் புத்தகத்தில் இடம் பெற்றுவிடும்.

# 9. நீதித்துறை அமைப்பு

## (1) நீதித்துறையின் முக்கியம்

நிர்வாகத்துறை, சட்டத்துறை, நீதித்துறை ஆகிய மூன்றும் அரசாங்கத்தின் மூன்று அங்கங்களாகும். சட்டத் துறை சட்டங்களை இயற்றுகிறது. நிர்வாகத்துறை சட்டங் களை நடைமுறைக்குக் கொண்டு வருவதுடன், ஆட்சியையும் நடத்துகிறது. நீதித்துறை சட்டங்களை மீறுகின்றவர்களைத் தண்டித்து, அரசியலமைப்பின் காப்பாளராகவுந் திகழ் கிறது. நீதித்துறை நேர்மையையும், நீதியையும் நிலைநாட்டி அரசாங்கத்தின் சர்வாதிகாரத்திலிருந்து தனி நபரைக் காப்பாற்றுகிறது. எனவே, நீதித்துறையொன்றில்லாத நாகரீக அரசைக் கற்பனை செய்வதும் கடினமாகும். சட்டம், மக்களை சட்டமில்லாத நிலை அல்லது குழப்ப நிலையிலிருந்து மீட்கிறது. நடுநிலை தவறாத நீதித்துறையொன்று இல்லை யெனில், குடிமக்கள், அரசாங்க ஊழியர்களாலும், சட்டத்தை மீறுபவர்களாலும் கொடுமைப்படுத்தப்படும் அபாயத்திற் குள்ளாக நேரிடும் என்பது விவரிக்கத் தேவையில்லை. இக் காரணங்களால்தான் இந்திய அரசியலமைப்புச் சட்டம், இந்தியக் கூட்டாட்சி முழுவதற்குமாக ஒருங்கிணைக்கப்பட்ட, நடுநிலைமையில் செயலாற்றக்கூடிய, சுதந்திரமான நீதித் துறையை ஏற்படுத்தியிருக்கிறது. இந்த நீதித்துறையின் தலைமைப் பொறுப்பு உச்சநீதிமன்றத்திடம் விடப்பட்டிருக் கியது. உச்ச நீதிமன்றத்தின் கீழ் இராச்சியங்கள் மட்டத்தில் உயர்நீதிமன்றங்களும் இதர கீழ்மட்ட நீதிமன்றங்களும் அமைக்கப்பட்டு, நீதி பரிபாலனம் சரிவர நடைபெற வகை செய்யப்பட்டிருக்கிறது. இந்த நீதிமன்றங்கள் அனைத்தும் மத்திய, மாநில அரசுகளால் இயற்றப்படும் சட்டங்களை நிர்வகிக்கின்றன. இனி இந்நீதிமன்றங்கள் எவ்வாறு

அமைக்கப்பட்டிருக்கின்றனவென்பதையும் எவ்வாறு செயலாற்றுகின்றன என்பதையும் சுருக்கமாகக் காணலாம்.

**(2) உச்ச நீதிமன்றமும் அதன் அமைப்பும்**

உச்ச நீதிமன்றம் ஒரு தலைமை நீதிபதியையும், பதின்மூன்றுக்கு அதிகப்படாத இதர நீதிபதிகளையும் கொண்டதாக அமைக்கப்பட்டிருக்கிறது. உச்ச நீதிமன்றத்தின் மொத்த நீதிபதிகளின் எண்ணிக்கை பாராளுமன்றம் இயற்றும் சட்டமொன்றினால் அதிகரிக்க அல்லது குறைக்கப்படலாம். ஆரம்பத்தில் அரசியலமைப்பு தலைமை நீதிபதியொருவருக்கும், ஏழு இதர நீதிபதிகளுக்கும் வகை செய்திருந்தது. பிறகு, அவ்வெண்ணிக்கை 1956ஆம் ஆண்டு 10ஆகவும், 1960இல் 13 ஆகவும் உயர்த்தப்பட்டது. மேலும் அவசியமெனத் தோன்றினால் தனி நீதிபதிகளை (Ad-hoc Judges) நியமிக்கவும் ஜனாதிபதிக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது.

உச்சநீதி மன்றத் தலைமை நீதிபதி ஜனாதிபதியால், உச்ச நீதிமன்றம், உயர்நீதி மன்றங்களிலுள்ள நீதிபதிகளைக் கலந்து கொண்டு நியமிக்கப்படுகிறார். இதர நீதிபதிகள் தலைமை நீதிபதியின் ஆலோசனையின்பேரில் ஜனாதிபதியால் நியமிக்கப்படுகின்றனர்.

**தகுதிகள் :** உச்சநீதி மன்ற நீதிபதியாவதற்கு ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டியத் தகுதிகள் வருமாறு :

(அ) அவர் இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும்,

(ஆ) உயர்நீதி மன்றமொன்றில் நீதிபதியாக ஐந்தாண்டுக் காலத்திற்குப் பணியாற்றியிருக்க வேண்டும்,

(இ) உயர்நீதிமன்றமொன்றில் பத்தாண்டுக் காலம் வழக்கறிஞராகப் பணியாற்றியிருக்க வேண்டும் அல்லது

(ஈ) ஜனாதிபதி அவரை மிகச் சிறந்த சட்ட நிபுணராகக் கருதவேண்டும்.

**பதவிக்காலம் :** ஆயுட்காலம் முடியும் வரை பதவியிலிருப்பதை அரசியலமைப்புச் சட்டம் அனுமதிக்கவில்லையென்றாலும், நியமனம் பெற்ற ஒருவர் நெடுநாட்களுக்குப் பதவியிலிருக்கக் கூடும். ஏனெனில், நீதிபதிகளாக நியமனம் பெற்ற

வர்கள் அறுபத்தைந்து வயதைக் கடக்கும் வரையில் பதவியி லிருக்கலாம்.

**ஊதியம்:** அரசியலமைப்புத் தலைமை நீதிபதிக்கு மாதச் சம்பளமாக ரூபாய் 5000மும், இதர நீதிபதிகள் ஒவ்வொரு வருக்கும் ரூபாய் 4000மும் தருவதற்கு வகை செய்திருக்கிறது. இதையல்லாமல், அவர்களுக்கு இலவசக் குடியிருப்பு வசதியும், அவர்கள் பணியாற்றுவதற்குத் தேவையான இதரப் படி களும் தரப்படுகின்றன.

**உச்சநீதி மன்றத்தின் இருப்பிடம்:** உச்சநீதி மன்றம் நாட்டின் தலைநகரான டெல்லி நகரத்தில் இருக்கிறது. எனினும் தலைமை நீதிபதி விரும்பினால் ஜனாதிபதியின் இசைவுடன் அதன் கூட்டங்களை டெல்லிக்கு வெளியே எங்கு வேண்டு மானாலும் நடத்தலாம்.

**உச்சநீதி மன்றத்தின் அதிகார எல்லை:** இந்திய உச்சநீதி மன்றம் இதர நாடுகளிலுள்ள உச்சநீதிமன்றங்களைக் காட்டிலும் அதிகமான அதிகாரங்களைப் பெற்றிருக்கிறது. உச்சநீதி மன்றத்தின் அதிகாரங்கள் பின்வருமாறு சௌகரியம் கருதிப் பரிசீலனை செய்யப்படலாம்.

**(அ) மூல அதிகாரம்**

இந்திய அரசாங்கத்திற்கும் ஒன்று அல்லது அதற்கு மேற் பட்ட இராச்சியங்களுக்குமிடையே எழுகின்ற வழக்குகள்; அல்லது மத்திய, இராச்சிய அரசுகளுக்கும், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இராச்சிய அரசுகளுக்குமிடையே எழுகின்ற வழக்குகள்; அல்லது இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட இராச்சியங்களுக்கு இடையிலுள்ள வழக்குகள் ஆகியவற்றை முதன்முறையாக அனுமதித்து, விசாரணை செய்வதற்கு பிரத்தியேகச் சலுகைகளை உச்சநீதி மன்றம் பெறுகிறது.

**(ஆ) மேல் முறையீடு மூலமாக வரும் வழக்கு விசாரணை அதிகாரம்**

இத்துறையில் உச்சநீதி மன்றந்தான் இறுதி அதிகாரம் பெற்றிருக்கும் நீதி மன்றமாகும். மேல் முறையீடு அடிப்படை யில் உச்சநீதி மன்றத்திற்கு வரும் வழக்குகள் அதனால் விசாரிக்கப்படும் தகுதியுடையவை என்னும் சான்றிதழை அரசியலமைப்பு விதி 132 (1) இன் படி சம்பந்தப்பட்ட உயர்

நீதி மன்றம் அளிக்க வேண்டும். இவ்வாறு வரக்கூடியவை, அரசியலமைப்பு அல்லது சிவில் அல்லது கிரிமினல் சம்பந்தப் பட்ட வழக்குகளாக இருக்கலாம். சிவில் வழக்குகள் உச்சநீதி மன்ற விசாரணைக்குச் செல்ல வேண்டுமானால் அவை ஒவ்வொன்றும் ரூபாய் 20,000 தொகை சம்பந்தப்பட்டதாக இருக்க வேண்டும்.

### (இ) ஆலோசனை வழங்குமதிகாரம்

உச்சநீதி மன்றம் சில ஆலோசனைகளை வழங்கும் அதிகாரத்தையும் பெற்றிருக்கிறது. அரசியலமைப்பின் 143ஆம் விதிப்படி ஜனாதிபதி சில சட்ட சம்பந்தமான பிரச்சினைகளில் உச்சநீதி மன்றத்தின் ஆலோசனையை நாட லாம். ஆனால், அந்த ஆலோசனையின்படி ஜனாதிபதி நடக்க வேண்டுமென்ற கட்டாயம் கிடையாது.

### (ஈ) இதர சில்லறை அதிகாரங்கள்

இவற்றில் முக்கியமாக உச்சநீதி மன்றம் அரசியலமைப்பின் காப்பாளன் என்ற முறையில் எழும் வழக்குகளைக் குறிப்பிட லாம். குறிப்பாக, குடிகளின் உரிமைகள் பாதிக்கப்படும் போது, அவர்கள் உச்சநீதி மன்றத்தை அணுகினால், அது அவைகளைப்பற்றி விசாரணை செய்யலாம். சட்டமன்றங்கள் நிறைவேற்றியிருக்கும் சட்டங்களை மறுபரிசீலனை செய்யலாம். பரிசீலனையில் அவை அரசியலமைப்பிற்கு மாறுபட்டவை களாகத் தோன்றுமானால் அவைகளை அரசியலமைப்புக்கு விரோதமானவையெனத் தீர்ப்பளிக்கலாம்.

அடுத்தபடியாக, ஜனாதிபதி, உதவி ஜனாதிபதி தேர்தல்கள் பற்றியெழும் வழக்குகளையும், யூனியன் பணியாளர் தேர்வுக் கழகத் தலைவர், இதர உறுப்பினர்கள் பதவி நீக்கம் செய்யப் படவேண்டுமென்பதற்கான குற்றச் சாட்டுகளையும் உச்சநீதி மன்றம் விசாரணை செய்து தீர்ப்பு வழங்குகிறது.

**மதிப்புரை:** தனது முடிவுகளையும், உத்தரவுகளையும், புனராய்வு செய்கின்ற அதிகாரத்தையும் மிக எச்சரிக்கையாக அரசியலமைப்புச் சட்டத் தயாரிப்பாளர்கள் உச்சநீதி மன்றத் திற்கு வழங்கியுள்ளனர். சாதாரண மன்றமொன்று உண்மை களைக் கண்டறிய முற்படுகிறது; உயர்நீதிமன்றம், கீழ் நீதி மன்றங்களின் தவறுகளை ஆராய்ந்தறிவதற்கு முற்படுகிறது. ஆனால், உச்சநீதி மன்றமோ அறிவொளியொன்றையே குறிக் கோளாகக் கொண்டிருக்கிறதெனச் சாதாரணமாகச் சொல்

வதுண்டு. இருந்தபோதிலும், தவறிழைப்பதில் உச்சநீதி மன்றம் ஒரு விலக்கல்ல. எனவே, அத்தகையத் தவறுகளைத் திருத்திக் கொள்வதற்கு உச்சநீதி மன்றத்திற்குத் தகுந்த வாய்ப்புகள் வேண்டும். அரசியலமைப்புச் சட்டவிதி 137 இதற்கு வகை செய்கிறது. தனது தீர்ப்புகளையும், உத்தரவுகளையும் புனராய்வு செய்வதற்கு உச்சநீதி மன்றத்திற்கு அதிகாரம் வழங்குகிறது. இவ்வாறு, வழங்கப்பெற்றுள்ள சலுகையைப் பயன்படுத்துவதற்கு இப்பெருநீதிமன்றத்திற்கு இதுகாறும் அதிக வாய்ப்புகள் கிட்டவில்லை.

### (3) பதிவு நீதிமன்றம்

உச்சநீதிமன்றத்தை, முடிவுகளைப் பதிவு செய்து கொள்ளும் ஒரு மன்றமாக அரசியலமைப்பு விதி 129 செய்து விடுகிறது. அத்தகையப் பதிவு செய்து கொள்ளும் மன்றமொன்றின் முக்கியத்துவம் இருவகைப்படும். அத்தகைய மன்றங்களிலுள்ள பதிவுகளைச் சாட்சியங்களாகக் கருதி, எந்த மன்றத்திலும் அவைகளைத் தாக்கல் செய்யலாமென்பதை முதலாவதாகக் குறிப்பிட வேண்டும். இரண்டாவதாக, நீதிமன்றமொன்றைச் சட்ட அடிப்படையில் பதிவு செய்து கொள்ளும் மன்றமாகச் செய்துவிட்டால், மன்றத்தை அவமதித்தவரைத் தண்டிப்பதற்கு, அம்மன்றத்திற்குள்ள உரிமையையும் நாம் மறுக்கமுடியாது. இத்தகைய அதிகாரம் உச்சநீதிமன்றத்திற்கு இயற்கையாக ஏற்பட்டுவிட்டபோதிலும், அவமதிப்புக் குற்றத்திற்காகத் தன்னைத்தானே தண்டித்துக் கொள்ளும் உரிமையையும் உச்சநீதி மன்றத்திற்கு அரசியலமைப்புச் சட்டம் தனிப்பட வழங்கியிருக்கின்றது.

இவ்வாறாக இந்திய நாட்டு உச்சநீதி மன்றம் பெற்றிருக்கும் அதிகாரங்கள் பலவகைப்பட்டவைகளாகவும், ஏராளமானவைகளாகவும் இருக்கின்றன. இத்தனையையும் பெற்றிருக்கும் காரணத்தால், இம்மன்றம் நீதித்துறையில் நிகரற்ற மன்றமாகத் திகழ்வதோடு, நாட்டின் சட்டங்களையும் அரசியலமைப்புச் சட்டத்தையும் போற்றிப் பாதுகாக்கும் காவலனாகவும் விளங்குகிறது.

# 10. அரசியல் கட்சிகள்

**அரசியல் கட்சிகளின் பொருளும் முக்கியமும் :** ஒரே மாதிரி யானக் கொள்கைகளையுடைய பல குடிமக்கள் ஒன்று சேர்ந்து அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தவும் அமைக்கவும் ஏற்படுத்தும் அமைப்பை அரசியல்கட்சி என்று சொல்லலாம். எனவே, அரசியல் கட்சியொன்றை ஏற்படுத்துவதற்கு—அமைப்பு, நெறிகள், கொள்கைகள், திட்டங்கள், அதிகாரத்தில் ஆசை, தேசிய நன்மை ஆகியவை முக்கியமானவையாகும். குடியாட்சி நாடொன்றில் அரசியல் கட்சிகள் தங்களுடைய கொள்கை களையும், திட்டங்களையும் அமைதியான, சட்டபூர்வமான முறைகளைப் பின்பற்றி அடைய முயற்சி செய்கின்றன.

மனிதனுக்கு இரத்தம் தேவைப்படுவதுபோல அரசியல் கட்சிகள் ஜனநாயகத்திற்கு இன்றியமையாதவையாகும். ஜனநாயகத் தத்துவம் மக்களுடைய நன்மைக்காக மக்களால் நடத்தப்படும் அரசு என்பதாகும். ஆனால், நாடு பெரிய தாகவும் மக்கள் தொகை அதிகமாகவும் இருக்கும்போது வாக்காளர் ஒவ்வொருவரும் அரசியல் பிரச்சினைகள் பற்றிய தன்னுடைய கருத்துகளை வெளிப்படையாகச் சொல்வதற்கு வாய்ப்பில்லை. மேலும் சாதாரண அறிவுடைய வாக்காளர்கள் அப்பிரச்சினைகளைப் புரிந்து கொண்டு அவைகளைப் பற்றிய தங்களுடைய கருத்துரைகளைச் சொல்லுமளவுக்கு அறிவுடை யவர்களாக இருப்பார்கள் என்றும் எதிர்பார்க்க முடியாது. முக்கியமாகத் தனிப்பட்ட வாக்காளர்கள் அரசாங்கத்தைத் திருத்துமளவிற்குத் திறம் பெற்றிருப்பார்களென்றும் எண்ண முடியாது. எனவே, இத்தன்மைகளையுடைய வாக்காளர் களுடைய கருத்துகளைத் திரட்டுவதிலும், அவைகளை ஒருமுகப் படுத்துவதிலும் அரசியல் கட்சிகள் சிறப்பான பணியாற்ற முடியும். பெரும்பாலும் அரசியல் கட்சிகள் தங்களுடைய

கொள்கைகளை அவைகளைச் சார்ந்த மக்கள் ஏற்றுக்கொள்ளு மாறு செய்கின்றன. இவ்வாறு மக்களுடைய ஆதரவுக்குத் தகுந்தாற் போல அவைகள் ஆட்சியைக் கைப்பற்றவோ அல்லது எதிர்க்கட்சிகளாகவோ அமைகின்றன. எனினும், சில சமயங்களில் மக்கள் அரசியல் கட்சிகளை வெறுக்கின்ற நிலைமைகள் ஏற்படுவதைப்பார்க்கிறோம். இந்த வெறுப்பு காரணமாக அரசியல் கட்சிகள் அவசியமற்றவை என்ற முடிவிற்கு மக்கள் வந்து விடுவார்களானால், அவர்கள் ஜனநாயக முறையைப் புரிந்துகொண்டவர்களாகமாட்டார் கள். அரசியல் கட்சிகள் இல்லாமல் மக்கள் தங்களுடைய குறிக்கோள்களை அல்லது விருப்பங்களை அடையமுடியாதென் பதைத் திட்டவட்டமாகச் சொல்லலாம். எனவே, அரசியல் கட்சிகள் இக்கால மக்களாட்சி முறை அரசாங்கத்திற்கு இன்றியமையாதவை என்பதை வற்புறுத்த வேண்டிய தில்லை.

கட்சிமுறை பொதுவாக ஒரு கட்சிமுறை, இரு கட்சி முறை, பல கட்சி முறையென்று மூன்று வகையாகப் பிரிக்கப் படலாம். ஒரு கட்சி முறை மக்களாட்சித்தத்துவத்தைப் பலப்படுத்துவதற்கு மாறாகத் தனிநபர் சர்வாதிகாரத்தையோ அல்லது தனியொரு கட்சியின் சர்வாதிகாரத்தையோ ஏற் படுத்தும். அத்தகைய சர்வாதிகாரம் மக்களுடைய உரிமை களை எளிதில் பறித்துவிட முடியும். உதாரணமாக சோவியத் யூனியன், சீனா போன்ற கம்யூனிஸ்டு நாடுகளில் ஒரு கட்சி முறை இருந்துவருவதையும், அதனால் அந்நாடுகளில் மாறு பட்ட கருத்துடையவர்கள் தங்களுடைய கருத்துகளை வெளிப் படையாகச் சொல்ல முடியாத நிலைமை இருப்பதையும் காண லாம். அங்கெல்லாம் அரசாங்கம் கட்சியின் கருவியாக அமைந்து அது விரும்புமாறெல்லாம் செயற்பட வேண்டியிருப் பதையும் கண்கூடாகக் காண்கிறோம். இத்தகைய முறையில், அரசாங்கம் செய்யும் தவறுகள் எடுத்துக்காட்டப்படு வதற்கும், அத்தவறுகளை அரசாங்கம் திருத்திக்கொள்வதற் கும் வாய்ப்பில்லாமல் போய் விடுகிறது. எனவே, ஒரு கட்சி முறை அவ்வளவாக விரும்பத்தக்கதல்ல.

அடுத்தபடியாக, மக்களாட்சிமுறை அரசாங்கம் சீரிய முறையில் நடைபெறுவதற்குக் குறைந்தது இரு கட்சி களாவது இருத்தல் வேண்டும். சற்றேறக்குறைய சமபல முடைய இருகட்சிகள் ஒரு நாட்டில் இருக்குமானால் அங்கு, ஒரு கட்சி ஆட்சியிலிருக்கும். பிறிதொரு கட்சி எதிர் தரப்பில்

இருக்கும். ஆட்சியிலிருக்கும் கட்சி தவறு செய்கின்றபோது அல்லது குறைபாடுடையதாக இருக்கும்போது எதிர்க்கட்சி அவைகளை எடுத்துக்காட்டி, அவசியமானால் இடித்துரைக்கும் போது தவறுகள் திருத்திக் கொள்ளப்படுகின்றன. அவ்வாறு தவறுகள் திருத்திக்கொள்ளப்படவில்லையானால், மக்களிடம் அத்தவறுகளை எடுத்துக்காட்டி அவர்களுடைய ஆதரவுபெற்று எதிர்க்கட்சி அரசாங்கம் அமைக்கக்கூடும். இவ்வாறு ஆளுங் கட்சி எதிர்கட்சியாகவும், எதிர்கட்சி ஆளுங்கட்சியாகவும் அமரக்கூடிய நிலைமை இருக்குமானால் அரசாங்கம் சிறப்பாகப் பணியாற்ற முடியும். மக்களுடைய நலன்கள் காக்கப்படும். சர்வாதிகாரம் ஏற்படும் சாத்தியக்கூறு இருக்காது. எனவே, இருகட்சி முறையே சிறந்ததெனலாம். மேற்றிசை நாடுகளில் இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் இருகட்சிமுறை வேரூன்றி இருக்கிறது. ஆகையால் அந்நாடுகளில் ஜனநாயகமும் தனிச் சிறப்புப் பெற்று விளங்குகிறது.

கடைசியாக, பல கட்சி முறையிலுள்ள நன்மை தீமை களைப்பற்றியும் சில கருத்துகளைத் தெரிந்துகொள்வது நலம். ஒரு கட்சிமுறை அல்லது இரு கட்சிமுறையில் ஆர்வ மில்லாதவர்கள் பல கட்சிமுறையை ஆதரிக்க வாய்ப்பிருக் கிறது. இனத்தாலும், பழக்க வழக்கங்களாலும் இதர காரணங்களாலும் பல பிரிவினர்களாகவுள்ள மக்கள் தத்தம் தனித்தன்மைகளை நிலைநாட்டிக் கொள்வதற்காக வெவ்வேறு கட்சிகளில் சேரலாம். தாங்கள் சேர்ந்துள்ள கட்சிகளின் உதவியைக்கொண்டு தங்களுடைய நோக்கங்களை நிறை வேற்றிக் கொள்ளலாம். அவற்றில் அவர்கள் பெயரும் புகழுமுடையத் தலைவர்களாகவும் வரலாம். குறிப்பாக, சமூகத்தில் சிறுபான்மையினராக இருப்பவர்கள் தங்களு டைய சுதந்திரத்தையும், உரிமைகளையும் வற்புறுத்திப் பெறு வதற்குப் பல கட்சி முறையில் வாய்ப்பிருக்கிறது. ஆனால், அதே சமயத்தில் பல கட்சி முறையிலுள்ள தீமைகள் என்று பார்க்கும்போது முக்கியமாக நாம் உணரத்தக்கது நிலையான, சக்தி வாய்ந்த, திறமையான அரசாங்கம் அவ்வமைப்பில் சாத்தியமாகாது என்பதாகும். அரசாங்கத்தில் ஐக்கியத் தன்மையும், காரியங்களை உத்வேகத்தோடு உறுதியாக நிறை வேற்றும் தன்மையும் இருக்காது. மாறாக கருத்து வேற்றுமை களும், பிளவும், குறைவான செயல் திறனும் மலிந்து காணப் படும். அதனால் இறுதியாகப் பாதிக்கப்படுபவர்கள் மக்களே யாவர். பல கட்சி முறைக்குச் சிறந்த உதாரணமாக பிரான்ஸ் நாட்டைக் குறிப்பிடலாம். இந்தியாவிலும் பல கட்சிகள்

உள்ளன. எனினும் சுதந்திரம் கிடைத்ததிலிருந்து தேசிய நிலையில் இந்தியாவில் அரசாங்கம் அமைப்பதைப் பொருத்து மட்டிலுமாவது ஒரு கட்சி முறை இருந்து வருவதை மறுப்பதற்கில்லை. ஆனால், பிராந்திய நிலையில், வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு கட்சிகள் பலமிக்கவைகளாக இருந்து அரசாங்கம் அமைத்திருக்கின்றன. சில பகுதிகளில் பல கட்சிகள் கூட்டுச்சேர்ந்து அரசாங்கம் அமைத்திருக்கின்றன. ஆனால், அக்கூட்டுகள் நீடித்திருப்பதில்லையென்பதையும் நாம் உணர்ந்திருக்கிறோம். இக்காரணங்களால் பல கட்சி முறை விரும்பத்தக்கதல்ல என்று சொல்லலாம். இனி இந்தியாவிலுள்ள சில முக்கியமான அரசியல் கட்சிகளின் அமைப்புகளைப்பற்றியும், அவற்றின் கொள்கைகள், அவற்றுக்குள்ள வாய்ப்புகளைப் பற்றியும் அடுத்தாற்போல பார்க்கலாம்.

**(1) இந்திய தேசிய காங்கிரஸ்**

இந்தியாவிலுள்ள அரசியல் கட்சிகளில் மிக முக்கியமானதும் முதலாவதுமானது இந்திய தேசிய காங்கிரஸ் என்பதாகும். அக்கட்சியின் வரலாறு இரு பிரிவுகளாக—சுதந்திரத்திற்கு முந்திய பகுதி, சுதந்திரத்திற்குப் பிந்திய பகுதி என்று பிரிக்கப்படலாம்.

இந்திய அரசாங்கத்தில் செயலாளராக இருந்து பதவி ஓய்வு பெற்ற ஏ. ஓ. ஹ்யூம் என்பவரால் 1885ஆம் ஆண்டு இந்திய தேசிய காங்கிரஸ் ஆரம்பிக்கப்பட்டது. அக்கட்சியில், இனம், சமயம், வகுப்பு ஆகிய பாகுபாடுகள் இல்லாமல் யாவரும் சேர்ந்தனர். எனவே அக்கட்சி உண்மையிலேயே தேசியக் கட்சியாக விளங்கியது.

ஆரம்பகாலத்தில் 1885ஆம் ஆண்டுமுதல் 1905ஆம் ஆண்டு வரையில் அதன் முக்கியமான நோக்கம் சட்ட சம்பந்தமான சீர்திருத்தங்களைப் பெறுவதாகும். அடுத்த பதினான்கு ஆண்டுக் காலத்தில் இந்தியா டொமினியன் அந்தஸ்தைப் பெறவேண்டுமென்பது அதன் நோக்கம். என்றாலும், அதற்காக அக்கட்சி போராட்டமெதுவையும் நடத்தவில்லை. ஆனால், 1919-1929ஆகிய ஆண்டுகளில் அதன் போராட்டம் மூன்றாவது கட்டமாக அமைந்தது. அக்காலத்தில் காங்கிரஸ்கட்சி தீவிரமானக் கொள்கைகளைப் பின்பற்றி ஒத்துழையாமை, சாத்வீக மறுப்பு, அடிபணியாமை போன்ற பல இயக்கங்களை நடத்தியது. 1929ஆம் ஆண்டிலிருந்து 1947இல் சுதந்-

திரம் பெறும் வரை அக்கட்சியின் நோக்கம் சுதந்திரத்தைப் பெறுவதாகும். அதற்காக அது பல போராட்டங்களை நடத்தியதன் விளைவாக நாடு விடுதலை பெற்றது. அக்கட்சி தோற்றுவிக்கப்பட்டதுமுதல் அதில் பண்டித மதன் மோகன் மாளவியா, அன்னிபெசன்ட், சர்தார் வல்லபாய் படேல், சி. இராஜகோபாலாச்சாரி, புருஷோத்தம்தாஸ் தாண்டன், டாக்டர் இராஜேந்திரப் பிரசாத், மகாத்மா காந்தி, பண்டித ஜவஹர்லால் நேரு போன்ற பெருந்தலைவர்கள் இருந்து தங்களுடைய உன்னத, சக்திமிக்க, உணர்ச்சியூட்டும் தலைமையை வழங்கினர். அதனால், காங்கிரஸ் கட்சி மக்களின் பேராதரவுபெற்றக் கட்சியாக விளங்கியது. இந்திய சுதந்திரப் போராட்டத்தில் காங்கிரஸ் கட்சியின் பணி மிகப் பெரியது. அதன் சாதனைகளும் மிகப் பல.

சுதந்திரத்திற்குமுன் நிறுவப்பட்ட இடைக்கால அரசாங்கத்திலும் அதற்குப் பிறகு 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி நாடு விடுதலை பெற்றவுடன் ஏற்படுத்தப்பட்ட அரசாங்கத்திலும் காங்கிரஸ் கட்சி பங்கு கொண்டது. அப்பொழுது முதல் இன்று வரையிலும் இராச்சியங்களில் எல்லாவற்றிலுமில்லாவிட்டாலும் மத்திய அரசாங்க மட்டத்தில் காங்கிரஸ் கட்சியே அரசாங்கம் அமைத்து வருகிறது. இவ்விடத்தில் 1969இல் திருமதி இந்திராகாந்தி, திரு கே. காமராஜ், திரு. நிஜலிங்கப்பா, திரு. மொரார்ஜி தேசாய் போன்றத் தலைவர்களிடையே ஏற்பட்ட தீராத கருத்து வேற்றுமைகள் காரணமாக இந்திய தேசிய காங்கிரஸ் இரண்டாகப் பிளவுபட்டதைக் குறிப்பிட வேண்டியது அவசியமாகும். அதைத் தொடர்ந்து எந்தப் பிரிவு இந்திய தேசிய காங்கிரஸ் என்று அழைக்கப்படவேண்டுமென்பது பற்றியும், எது, கட்சியின் தேர்தல் சின்னமான நுகத்தடி பூட்டிய இரு காளை மாடுகளைப் பெறவேண்டுமென்பது பற்றியும் உச்ச நீதிமன்றத்தில் நடைபெற்ற வழக்கில், உச்சநீதிமன்றம் திருமதி இந்திராகாந்தியைத் தலைமையாகக்கொண்ட பிரிவே இந்திய தேசிய காங்கிரசென்றும், அதுவே, காளை மாட்டுச் சின்னத்தைப் பெறவேண்டுமென்று தீர்ப்பளித்ததையும் அறிதல் வேண்டும். இவ்வழக்கிற்குப் பிறகு மற்றொரு பிரிவு இந்திய தேசிய காங்கிரஸ் ஸ்தாபனம் என்றழைக்கப்படுகிறது. காங்கிரஸ் கட்சியில் ஏற்பட்டப் பிளவுக்குப் பிறகு 1970இல் நடைபெற்ற இடைத்தேர்தலில் திருமதி இந்திராகாந்தியைத் தலைமையாகக்கொண்ட காங்கிரஸ் லோக்சபாவில் மூன்றி

விரண்டு பங்கு பெரும்பான்மைக்கும் அதிகமான இடங்களைப் பிடித்ததும், அதற்கு எதிரான பிரிவு பிளவின்பொழுது இருந்ததையும்விட மிகக் குறைவான இடங்களையே பெற முடிந்ததென்பதும் சிறப்பம்சங்களாகும்.

இந்திய தேசியக் காங்கிரசின் நோக்கம் இந்நாட்டில் சோஷலிச சமுதாயமொன்றை உருவாக்க வேண்டுமென்ப தாகும். இந்நோக்கத்தை அடைவதற்கு வழிகோலும் பொருட்டு, 1955ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சென்னைக்கு அருகேயுள்ள ஆவடியில் நடைபெற்ற அதனுடைய ஆண்டுக் கூட்டத்தில் வகுப்பற்ற ஜனநாயக சமுதாயம் அமைக்க வேண்டுமென்னும் தீர்மானத்தை அக்கட்சி நிறைவேற்றியது. சோஷலிச சமுதாயம் திரு ஜே. பி. நாராயணன் அவர்கள் கருத்துப்படி பின்வருமாறு பொருள்படும்.

(அ) சமூக, பொருளாதார, அரசியல் துறைகளில் நீதியையும், சமவாய்ப்புகளையும் ஆதாரமாகக்கொண்ட சமூக, பொருளாதார, அரசியல் சமூகத்தை ஏற்படுத்துவது.

(ஆ) சாதி, சமய, பால் அல்லது சமூக அல்லது பொருளாதார அடிப்படைகளைக் கொண்ட வேற்றுமை யுணர்வுகளை அகற்றி, உடல் வலிமையுடைய அனைவருக்கும் உழைக்கும் உரிமையையும் உயிர் வாழ்வதற்குத் தேவையான ஊதியத்தையும் தருதல்.

(இ) வாழ்விற்குத் தேவையான மூலப்பொருள்கள், பொருள் உற்பத்தித் துறைகளைக் கட்டுப்படுத்தல்.

(ஈ) செல்வமும், பொருள் உற்பத்திச் சாதனங்களும் ஒரு சிலரிடம் குவிந்துவிடாதபடி பொருளாதார முறையைச் சீர்திருத்தியமைத்தல்.

(உ) நாட்டின் செல்வவளத்தை அதிகரிக்கும் நோக்கத் துடன் உற்பத்தியை விரைவுபடுத்தல்.

(ஊ) தற்போதுள்ள ஏற்றத்தாழ்வுகளை எந்த அள விற்கு முடியுமோ அந்த அளவிற்குக் குறைத்தல்.

(எ) மேலே சொல்லப்பட்டுள்ள சீர்திருத்தங்களையும், முன்னேற்றங்களையும் அமைதியான, ஜனநாயக முறையில் ஏற்படுத்துவது.

(ஏ) பொருளாதார, அரசியல் அதிகாரங்களை பன்முகப் படுத்தல்.

மேலே சொல்லப்பட்டவைகளிலிருந்து காங்கிரஸ் கட்சி சர்வோதயக் கொள்கைகள் அடிப்படையிலான சமுதாயத்தை இந்தியாவில் ஏற்படுத்த விரும்புகிறது என்பது தெளிவாகும்.

தொழில்துறையில் காங்கிரஸ் கட்சியின் குறிக்கோள், அதிகமான அளவில் உற்பத்தியையும் முழுவேலை வாய்ப்பையும் ஏற்படுத்தி சமூக, பொருளாதார நீதியை மக்களுக்கு வழங்கவேண்டுமென்பதாகும். இரும்பு, இயந்திரங்கள், கருவிகள், மின்சக்தி ஆகிய ஆதாரத் தொழில்கள் பெருகவும், சாலைப் போக்குவரத்தும், செய்திப்போக்குவரத்தும் வளர்ச்சி பெறவும் அக்கட்சி விரும்புகிறது. இந்நோக்கங்களை அடைவதற்குத் தனியார் பொதுத்துறைகளை ஊக்குவிப்பதும் அவைகள் திறமையுடன் இயங்குவதும் முக்கியமெனக் கருதுகிறது.

அயல்நாட்டுக்கொள்கையைப் பொருத்தவரையிலும் உலக அமைதியையும், சகோதரத்துவத்தையும் அது விரும்புகிறது. அயல்நாட்டுக் கொள்கை முக்கியமாக பஞ்சசீலக் கொள்கை அடிப்படையில் அமைக்கப்பட்டிருக்கிறது. அதாவது இதர நாடுகள் சம்பந்தப்பட்ட விவகாரங்களில் தலையிடாக் கொள்கையையும், நடுநிலைமையையும் பின்பற்றுகிறது. எனினும் காலனி ஆதிக்கம், சர்வாதிகாரம் அல்லது கொடுங்கோன்மையை எதிர்த்து மக்களாட்சிக் கொள்கைகள் உலக நாடுகளால் ஏற்கப்படுவதற்குப் பாடுபடுகிறது.

**(2) கம்யூனிஸ்டுக் கட்சி**

1970ஆம் ஆண்டில் நடைபெற்ற இடைத்தேர்தல்கள் வரையிலும் கம்யூனிஸ்டுக்கட்சி இந்திய தேசிய காங்கிரசுக்கு அடுத்த இரண்டாவது பெரிய கட்சியாக இருந்தது. அக்கட்சி 1924ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது முதல் இன்று வரையிலும் பல காரணங்களால் சிறப்பான கட்சியாக இருந்திருக்கிறது. 1924இல் அக்கட்சி ஏற்படுத்தப்பட்டவுடனேயே, இந்திய அரசாங்கம் அதைத் தடை செய்து விட்டது. அப்போதுமுதல் 1943ஆம் ஆண்டு காங்கிரஸ் கட்சி சட்டபூர்வமான கட்சியல்லவென்று ஆங்கிலேய ஆட்சியாளர்களால் அறிவிக்கப்படும்வரை அதன் உறுப்பினர்கள் காங்கிரஸ் கட்சியில் இருந்தனர். சிலர் தலைமறைவாகி விட்டனர். 1943இல் அக்கட்சி, காங்கிரஸ் கட்சியால் 1942இல் நடத்தப்பட்ட 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற இயக்கத்தை எதிர்த்துக் கண்டித்தது. இரண்டாவது உலகப் பெரும் போரை 'மக்கள் போர்' என்பதாக வர்ணித்து சோவியத்

யூனியன், பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளை ஆதரித்தது. எனவே, அக்கட்சியின் மீதிருந்த தடை அகற்றப்பட்டது. அதுமுதல் அக்கட்சி சுதந்திரமாக இயங்கி வருகிறது. பாராளுமன்ற, இராச்சிய சட்டசபைகளுக்கு அவ்வப்போது நடைபெறும் தேர்தல்களில் போட்டியிட்டுக் கணிசமான இடங்களைப்பெற்று வருகிறது. 1957இல் நடைபெற்றத் தேர்தலில் அக்கட்சி கேரளாவில் தனிப் பெரும்பான்மைப் பலம் பெற்ற கட்சியாக வந்ததால் திரு. நம்பூதிரிப்பாட்டை முதல் மந்திரியாகக் கொண்ட அமைச்சரவை அமைக்க முடிந்ததையும், அதுமுதல் கேரளாவில் அதன் செல்வாக்கு நிலையாக இருந்து வருவதையும் குறிப்பிடலாம். இக்கம்யூனிஸ்டுக் கட்சியும் வலதுசாரி கம்யூனிஸ்டுக்கட்சி, இடதுசாரி கம்யூனிஸ்டுக்கட்சி என்று கொள்கைகள் அடிப்படையில் இரண்டாகப் பிளவு பட்டது. இவைகளைத்தவிர, நக்சல்பாரிகள் என்றழைக்கப்படும் குழப்பவாதிகளையும், கலகக்காரர்களையும் கொண்ட அதிதீவிரப்பிரிவினர் அவ்வப்போது ஆங்காங்கு பொது மக்களுக்கு ஊறு விளைவித்து வருகிறார்கள்.

கம்யூனிஸ்டுக்கட்சியின் நோக்கம் வகுப்பற்ற உழைப்பாளர் வர்க்கம் ஆட்சியதிகாரத்தைப் பெறவேண்டுமென்பதாகும். சோஷலிசத்தையும் கம்யூனிசத்தையும் பரப்பி தொழிலாளர்கள், குடியானவர்கள் எல்லோரும் முன்னுக்கு வருமாறு செய்யவேண்டுமென்பதாகும். முதலாளித்துவத்தை ஒழிக்கவேண்டுமென்பதும் அதன் கொள்கைகளில் ஒன்றாகும். பொதுவுடைமை நாடுகளோடு இந்தியா நெருக்கமான உறவை ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதும் அதன் விருப்பமாகும்.

### (3) சுதந்திரக்கட்சி

1959ஆம் ஆண்டு காங்கிரஸ்கட்சி அதனுடைய நாகபுரி மாநாட்டில் 'கூட்டுப்பண்ணை'த் தீர்மானத்தை நிறைவேற்றியதை எதிர்த்து காங்கிரசிலிருந்து வெளியேறியவர்களால் சுதந்திரக்கட்சி நிறுவப்பட்டதெனலாம். அக்கட்சியைத் தோற்றுவித்தவர்களில் சிறந்த அரசியல் ஞானிகளான திரு. சி. இராஜகோபாலாச்சாரியும், திரு கே. எம். முன்ஷியும் குறிப்பிடத்தக்கவர்கள். திரு. மசானி, திரு. கூப்பர் போன்றவர்கள் மற்றவர்களாவர்.

சுதந்திரக்கட்சி, காங்கிரஸ் கட்சியின் பொருளாதாரக் கொள்கைகளுக்கு மாறுபட்டக் கொள்கையைப் பின்பற்று

வதாகக் கருதப்படுகிறது. அது கம்யூனிசத்தந்திரங்களை வெறுக்கிறது. தர்மத்தின் அடிப்படையில் மக்களுக்கு நீதி வழங்கப்பட வேண்டுமென்கிறது. தொழில்கள் தேசியமய மாக்கப்படுவதால் தொழிற்துறையில் முன்னேற்றம் ஏற்படு வதற்குப் பதிலாக குந்தகம் ஏற்படுகிறது. எனவே, தனியார் துறைக்கு ஊக்கம் அளிக்கப்பட வேண்டும். கட்டுப்பாடு களும் பர்மிட்டுகளும் அகற்றப்பட்டு, தொழில்துறை சுயேச்சையாக முன்னேற அனுமதிக்கப்பட வேண்டுமென் பதும் அதன் கொள்கைகளாகும். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் மார்க்சீய சோஷலிசத்திற்குப் பதிலாக காந்திய சோஷலிசத்தை அது ஆதரிக்கிறது. தனி மனிதன் சுதந்திரத்தையும், உரிமைகளையும் குறிப்பாகச் சொத்துரிமை யையும் அது போற்றுகிறது. அரசியலமைப்பில் உத்திர வாதம் செய்யப்பட்டுள்ள ஆதார உரிமைகள் மக்களுக்கு மறுக்கப்படுவதை எதிர்ப்பதோடு, அதற்கு ஆதாரமாக அரசியலமைப்பின் விதிகளைத் திருத்தியமைப்பதைக் கண்டிக் கிறது.

அரசியல் துறையில் குறிப்பாகப் பன்னாட்டுக் கொள்கை யில் இந்தியா ஜனநாயக முறைகளைப் பின்பற்றும் நாடுகளோடு நெருக்கமான உறவை ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினாலும், சகவாழ்வு, உலக சமாதானம் போன்ற கொள்கைகளை இந்தியா பின்பற்றுவதையும், அதற்காகப் பாடுபடுவதையும் வரவேற்கிறது. இந்தியாவின் எல்லையோரப் பகுதிகளில் சிலவற்றைப் பிடித்துக்கொண்டிருக்கும் சீனாவை விரட்டுவதற்கும், இழந்த பகுதிகளை மீண்டும் பிடிப்பதற்கும் மேற்கத்திய வல்லரசுகளோடு கூட்டுச் சேர்வதை அக்கட்சி விரும்புகிறது. ஆனால், இக்கொள்கை எந்த அளவிற்கு இந்தி யாவிற்கு வெற்றியைத் தேடித்தருமென்று சொல்ல முடி யாது. கம்யூனிசக் கொள்கைகளையும், கம்யூனிஸ்டு நாடுகளை யும் புறக்கணிக்கும் சுதந்திரக்கட்சி, இந்தியா எந்தச் சமயத் திலும் தாக்கப்படலாம் என்ற நிலையில் பாகிஸ்தானுக்கு எதி ராகவும், அதே சமயத்தில் பங்களா தேசத்திற்கு ஆதரவாக வும் இந்தியா சோவியத்யூனியனோடு நட்புறவு ஒப்பந்த மொன்றைச் செய்து கொண்டதை வரவேற்கவும் தவறவில்லை என்பதை நினைவு கூர்வது அவசியமாகும்.

அக்கட்சி இரண்டாவது பொதுத்தேர்தலுக்குப் பிறகு தான் ஆரம்பிக்கப்பட்டதென்றாலும், 1962ஆம் ஆண்டில் நடைபெற்ற மூன்றாவது பொதுத் தேர்தலின்போது லோக்

சபையில் 18 இடங்களேயும், இராச்சிய சட்டசபைகளில் 166 இடங்களேயும் பிடித்ததிலிருந்து, விரைவாக வளரக்கூடிய கட்சியென்னும் எண்ணம் அரசியல் துறையில் ஈடுபட்டிருந்தவர்களிடம் தோன்றியது. இராஜஸ்தான், மத்தியப் பிரதேசம் போன்ற இராச்சியங்களில் அதற்கு ஆதரவு அதிகமாக இருக்கிறதெனக் கருதப்பட்டாலும் பொதுவாக அது ஒரு அகில இந்தியக் கட்சியேயாகும்.

## (4) பாரதீய ஜனசங்கம்

பாரதீய ஜனசங்கம் இதர தேசீய கட்சிகளேப் போன்றதென்ருலும், அது விறுவிறுப்பும், ஆற்றல்மிக்கதுமான கட்சியென்பதாகப் பலராலும் பொதுவாகக் கருதப்படுகிறது. அக்கட்சி முதல் பொதுத் தேர்தல்கள் நடைபெறவிருந்த சமயத்தில் 1951ஆம் ஆண்டு டாக்டர் சியாம் பிரசாத் முகர்ஜி என்பவரால் தோற்றுவிக்கப்பட்டதாகும். 1953ஆம் ஆண்டில் காஷ்மீரில் புதிரெனச் சொல்லக்கூடிய சந்தர்ப்பத்தில் அவர் இறந்தது கட்சிக்கு ஒரு பேரிடியாகும். எனினும்,விரைவிலேயே அது தன்னுடைய அதிர்ச்சியினின்றும் விடுபட்டு செயல்பட ஆரம்பித்தது. 1951 முதல் நடைபெற்ற தேர்தல்களில் அது படிப்படியாக வளர்ந்து வந்திருக்கிறது. அதன் கணிசமான வளர்ச்சிக்கு இராஷ்டிரீய சுயம் சேவக் சங்கம் காரணமெனக் கருதப்படுகிறது. ஜனசங்கத்தின் குறிக்கோள் 'ஒரு நாடு, ஒரு பண்பாடு, ஓர் இனம்' என்பதாகும். அதனுடையக் கொள்கைகள், திட்டங்கள் என்று கீழ்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

(அ) எல்லேகளில் பாதுகாப்பும், தேசிய ஒற்றுமையும் மிக்க இந்தியாவில், பாகிஸ்தானும், சீனுவும் எல்லேகளே மீறி வந்து, சில இடங்களேப் பிடித்துக் கொண்டிருக்கின்றன. காங்கிரஸ் கட்சி,அந்த இடங்களே அந்த நாடுகள் பலப்படுத்திக் கொள்வதற்குச் சாதகமாக நடவடிக்கை எடுக்காமல் காலந் தாழ்த்தி வந்திருக்கிறது. மக்களது தைரியம் குன்றிப்போய் இருக்கிறது. அந்த இழந்த இடங்களேயெல்லாம் மீண்டும் பிடிக்கவேண்டும். அவ்வாறு செய்வதற்கு இந்தியாவிஞல் முடியும். எந்த நாட்டோடும் இதற்கெனக் கூட்டுச்சேர வேண்டியதில்லே. படைகளின் ஆற்றலேயும், மனத் திட்பத்தையும் ஊக்குவித்து, வீரர்களது ஊதியங்களே அதிகரிப்பது அந்நோக்கத்தையடைவதற்கு உதவியாக இருக்குமென அது கருதுகிறது.

(ஆ) கல்வியும் வேலை வாய்ப்பும்: கல்வியும் வேலை வாய்ப்பும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. இப்போது ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தன்னுடைய ஆளுமையைப் போதுமான அளவிற்கு வளர்த்துக் கொள்வதற்கும், அதனால் வேலை தேடிக் கொள்வதற்கும் போதுமான கல்வி பெறுவதற்கு வாய்ப்புகள் கிடையாது. எனவே, மேலே சொல்லப்பட்ட நோக்கத்தையடையும் வகையில் ஜனசங்கம் முயற்சிகள் மேற்கொள்ளும். மேலும், புராதனப் பண்பாடு, மரபுகள் ஆகியவற்றின் அடிப்படையில் இந்தியாவில் அரசியல், பொருளாதார, சமூக அரசொன்றை ஏற்படுத்துவதோடு, அவ்வரசு முன்னேற்ற நோக்கங் கொண்டதாகவும், பலம் பொருந்தியதாகவும் இருப்பதற்குப் பாடுபடும். இதுவரையிலும், பொருளாதாரத் துறையில் இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் வளர்ச்சி போதுமானதாக இல்லையென ஜனசங்கம் கருதுகிறது. அதிகப்படியான வரிகளாலும் பொருள்களின் விலையேற்றத்தாலும் மக்கள் துன்பத்திற்களாகியிருக்கிறார்கள் என்றும் அது கூறுகிறது.

அக்கட்சி, சிற்றூர், நகர், மாநகராட்சி போன்ற வட்டார நிறுவனங்களுக்கு அதிகமான அதிகாரம் தரப்பட வேண்டுமென்கிறது. இந்நிறுவனங்கள் சம்பந்தப்பட்ட இராச்சிய அரசாங்கங்களால், பதவிக்காலம் முடிவதற்கு முன்பு பணிகளைச் செய்யவொட்டாமல் தற்காலிகமாக நிறுத்தி வைக்கவோ அல்லது கலைத்துவிடவோ முடியாதவாறு தேவையான ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்கிறது. அநேகமாக நாட்டோடு சம்பந்தப்பட்ட எல்லா பிரச்சினைகளிலும் அக்கட்சி உறுதியான, திட்டவட்டமான கொள்கைகளைக் கொண்டிருக்கிறது.

பொதுவாக ஜனசங்கம், பிற்போக்கான கொள்கைகளையும் நோக்கங்களையும் கொண்டதென ஒரு சிலர் குற்றஞ் சாட்டுகிறார்கள். மின்வேகத்தில் புரட்சிகரமான சோஷலிச முறையிலான மாறுதல்கள் கொண்டுவந்து நிறைவேற்ற வேண்டுமென்பவர்களுக்கு அக்கட்சி பிற்போக்காளர்களின் கோட்டை எனத் தோன்றினாலும், ஜனசங்கம் இப்போது காலத்திற்குத் தகுந்தாற்போல முன்னேற்றக் கருத்துகளையும் நோக்கங்களையும் ஏற்றுக் கொண்டு, அதற்கேற்ப தன்னை மாற்றிக் கொண்டு வருகிறது.

மேற்கூறப்பட்ட அரசியல் கட்சிகளோடு இந்தியாவில் மேலும் பல தேசியக் கட்சிகளும், பிராந்தியக் கட்சிகளும் இருக்கின்றன. அவைகளில், பிரஜா சோஷலிஸ்டுக் கட்சியையும், சோஷலிஸ்ட்டுக் கட்சியையும், இந்து மகா சபைக் கட்சியையும், முஸ்லிம் லீகையும், திராவிட முன்னேற்றக் கழகத்தையும், அகாலி கட்சியையும் முக்கியமானவைகளாகக் கூறலாம்.

# மேலும் படிக்க வேண்டிய நூல்கள்


| | | |
|---|---|---|
| D. N. Banerjee | : | Our Fundamental Rights |
| D. D. Basu | : | Commentary on the Constitution of India |
| R. Kothari | : | Politics in India |
| S. C. Das | : | The Constitution of India : A Comparetive Study |
| A. Gledhil | : | Republic of India |
| Morris Jones | : | Government and Politics in India |
| ,, | : | Parliament in India |
| Park | : | India's Political System |
| M. V. Pylee | : | India's Constitutions |
| P. Sharan | : | Political Organisation and Comparative Government |

# 1. ஜப்பான் நாட்டு அரசியலமைப்பு

## முன்னுரை

ஜப்பான் தூரகிழக்கில் (Far East) உள்ள ஒரு சிறிய நாடு. அது ஹாக்கைடோ, கொன்ஷு, கையுஷு, ஷிக்கியு என்னும் நான்கு முக்கியமான தீவுகளையும், பல சிறிய தீவுகளையும் கொண்டது. அதன் பரப்பளவு சுமார் 1,41,529 சதுர மைல்களாகும். அதாவது இந்தியாவின் பரப்பளவில் எட்டில் ஒரு பங்கு அல்லது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் (U. S. A) பரப்பளவில் இருபதில் ஒரு பங்கு எனலாம். அது அழகும் இயற்கை வளமும் கொழிக்கும் நாடு. அது கடலால் சூழப்பட்ட பதினேழாயிரம் மைல் கடற்கரையை உடையது. நாட்டின் பெரும்பகுதி மலைப்பாங்கான பகுதியாக இருப்பதால் சுமார் 16 விழுக்காட்டு பகுதியே சாகுபடிக்கு ஏற்றதாக இருக்கிறது. இருப்பினும் ஜப்பானியர்கள் ரசாயன உரங்களையும், தீவிர சாகுபடி முறை (Intensive Farming) களையும் கையாண்டு வேளாண்மையை வளமிக்கதாக்கியிருக்கிறார்கள். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் அது ஒரு இயற்கையழகு மிக்க நாடாகவிருப்பினும், பூகோள அமைப்பில் நிலம் திடத்தன்மையற்றதாக இருப்பதால் தொழில், இராணுவத் துறைகளில் விசேஷமான தன்மைகளைப் பின்பற்ற வேண்டியிருக்கிறது. அங்கு ஆண்டொன்றுக்குச் சுமார் 500 தடவை மலைகள் கக்கும் எரிகுழம்பும் ஆயிரத்தைனூறு பூகம்பங்களும் ஏற்படுகின்றன.

ஜப்பானுடைய இப்போதைய மக்கள் தொகை 9 கோடிக்கும் மேல் ஆகும். இந்த அடிப்படையில் அது உலகில் ஐந்தாவது இடத்தைப் பெறுகிறது. இரண்டாம் உலகப் பெரும் போருக்குப் பிறகு ஜப்பானின் மக்கட் தொகை அதி

விரைவில் அதிகரித்திருக்கிறது. அந்நாட்டினுடைய மிக நெருக்கடியான பிரச்சினைகள் தேவையான அளவிற்கு நிலமில்லாததும் உணவு பற்றுக்குறையுமேயாகும். யானகா என்பாரது கருத்துப்படி 'அங்கு அதிகமான மக்களும் மிகக் குறைவான நிலமும்' உள்ளன எனலாம்.[1]

ஜப்பானியர்களது மதம் பேரரசரையும் மூதாதையர்களையும் வழிபாடு செய்யும் ஷிண்டோயிசம் (Shintoism) என்பதாகும். பௌத்தம், கன்பூஷியன் போன்ற சமயங்கள் கி. பி. ஆறும் நூற்றுண்டிலும், கிறித்துவ சமயம் 16ஆம் நூற்றுண்டிலும் அங்கு பரவலாயின. ஜப்பானியர் சமயத்தை மதிக்கிறுர்களெனினும் சமயத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கிடையாது. சமயத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியல் கட்சிகள் அங்கு கிடையாது. ஜப்பானியர்களுக்கெனத் தனிப் பண்பாடு இருப்பினும், அவர்கள் தங்களுடையதாக்கிக் கொண்ட பலவகைப்பட்ட அந்நியப் பண்பாடுகளையும் காணலாம். ஒரு வகையில் ஜப்பான் ஒரு தேசிய அரசாகத் (National State) தோன்றுகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளாக அது ஒரே இனமக்களைக் கொண்டதாகவிருக்கிறது. ஐரோப்பாவிலோ அல்லது ஆசியாவிலோ ஏற்பட்டது போன்ற இனக்கலகங்களோ உட்பூசல்களோ அங்கு ஏற்பட்டதில்லை. இந்நாடு பழம்பெருமை வாய்ந்ததெனினும் முன்னேற்றமடைந்துவரும் நவீன அரசு எனலாம்.

ஜப்பானின் பேரரசர் நாட்டின் தந்தை என்றழைக்கப்படும் தகுதி பெற்ற தலைவர். அவருக்கு மக்கள் அடங்கி நடந்து, கடமையுணர்வோடு வாழ்த்தஞ்சலி செலுத்துகிறுர்கள். அதனுல் அவர்கள் அரசுக்குத் தரும் ஆதரவு உண்மையானதாக இருக்கிறது. ஜப்பானின் அரசியல் வரலாற்றில் புரட்சிகள் ஏற்பட்டதில்லையெனினும் அரண்மனைப் புரட்சிகளைப்பற்றி கேள்விப்படுகிறேம். அரசாங்கம் சமயச் சார்புடையது என்னும் கருத்து அங்கு வேருன்றியிருந்ததால் இன்றும் அது தொடர்ந்திருந்து வருகிறது. புதிய ஜப்பான் புத்தம் புதுக் கருத்துகளை வரவேற்கின்றபோதே பழைய பழக்கங்களையும் போற்றுகின்றது. அது அரசியல் ஜனநாயகத்தை நிலப்பிரபுத்துவத்தோடும், தலையில்லா வணிகத்தை (Free Enterprise) ஏகபோக முறையோடும் மார்க்சிய தத்துவங்களைப் புராதன முறைகளோடும் இணைக்கிறது. ஜப்பானியர்

[1] Janaga : Japanese people and politics, Page 20.

கள் மேற்கத்தியர்களைப் போல் அரசையும் சமூகத்தையும் பிரித்துத் தனித்தனியாகக் காண்பதில்லை. மக்கள் நல்வாழ்வுக்கு அரசாங்கம் இன்றியமையாதது என்று கருதி அது பல்லாற்றானும் செயல்பட வேண்டும் என்று விரும்புகிறார்கள். மேலை நாட்டாரைப்போல ஜப்பானியர்கள் அரசியல் பிரச்சினைகளை விவாதிப்பது கிடையாது. சாதாரணமாக, சாதாரண மக்கள் அரசியல் பற்றிய தங்கள் கருத்துகளை வெளியில் சொல்வதுகூட கிடையாது. எனினும் இப்போது அங்கு அரசியல் விழிப்புணர்ச்சி ஏற்பட்டு வருகிறது. சமீபத்தில் தான் அங்கு பெண்களுக்கு வாக்குரிமை தரப்பட்டது. இது அங்கு ஏற்பட்டுவரும் விழிப்புணர்ச்சிக்கு எடுத்துக் காட்டாகும்.

ஜப்பானிய அரசாங்க முறை பின்வரும் காரணங்களால் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். முதலாவதாக ஜப்பானில் தான் மேலைநாட்டு நவீன அறிவியலும், தொழில் நுணுக்கமும் தோற்றுவிக்கப்பட்டது. சிறிய நாடாக இருந்தாலும் இதற்கு முன்பு எப்போதும் இல்லாத அளவிற்குத் தொழில் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டது. இதனால், அது மேற்கத்திய நாடுகளுடன் தொழிற்துறையில் போட்டியிடக்கூடிய அளவிற்கு வளர்ந்தது. இரண்டாவதாக, ஆசிய நாடுகளில் பாராளுமன்ற அரசாங்க முறையை முதன் முதலில் ஏற்றுக் கொண்ட நாடும் அதுவே. 'ஆசியா முழுவதிலும் ஜப்பானில் தான் பாராளுமன்றமுறை பன்னெடுங்காலமாகப் பின்பற்றப்பட்டு வருகிறது. பாராளுமன்றமுறை அரசாங்கம் ஏற்படுத்த வேண்டுமென்னும் மக்கள் இயக்கத்திற்கேற்ப 1890இல் பேரரசு சட்டமன்றம் (Imperial Diet) ஏற்பட்டது.'[1]

மூன்றாவதாக இதர மேற்கத்திய நாடுகளின் முறைகளும் ஜப்பானில் பின்பற்றப்பட்டன. இரண்டாவது உலகப் போருக்கு முன்பு நீதித்துறையிலும் வட்டார அரசாங்கத் துறையிலும் (Local Government) ஜெர்மானிய, பிரெஞ்சு அமைப்பு முறைகள் ஊடுருவி இருந்ததைக் காணலாம். போரில் ஏற்பட்ட தோல்விக்குப் பிறகு ஜப்பான் அமெரிக்கப் போர்ப்படைகளின் ஆதிக்கத்திலிருந்தது. எனவே, இப்போதைய அரசியலமைப்பை இயற்றுவதில் அமெரிக்க அதிகாரிகளின் பங்கு கணிசமாக இருந்தது. நான்காவதாக சோவியத்து யூனியன், சீனா ஆகிய நாடுகளின் நிர்ப்பந்தங்களுக்கும்

---

[1] G. M. Kahin. Major Governments of Asia. Page 170.

ஜப்பான்ஆளாகியது. இதனால்தான் அந்நாட்டில் சோஷ லிஸ்டு, கம்யூனிஸ்டு கட்சிகள் செல்வாக்கு மிக்கவைகளாக இருந்தன. இக்கட்சிகளினுடைய ஆதரவாளர்கள், ஜப்பானும் அமெரிக்காவும் செய்து கொண்டிருந்த ஒப்பந்தம் காரணமாக, ஜப்பான் பூரண சுதந்திரம் பெறவில்லை என்று சுட்டிக் காட்டினார்கள். ஆனால், ஜப்பானிய முதலாளிகளும் (Capitalists), கன்சர்வேட்டிவ்களும் அமெரிக்காவை ஆதரிப்ப வர்கள். ஐந்தாவதாக இதர வேறு சில காரணங்களுக்காகவும் ஜப்பானிய அரசாங்கமுறை, குறிப்பாக இந்திய மாணவர் களுக்கு மிகவும் முக்கியமானதாகும். (அ) இந்தியாவுக்கும் ஜப்பானுக்கும் மிக நெடுங்காலமாகவே பௌத்தமதக் கொள்கைகளையொட்டி மிக நெருக்கமான தொடர்புகள் இருந்து வந்திருக்கின்றன. (ஆ) இரண்டு நாடுகளும் மக்கள் தொகைப் பெருக்கமெனும் மிக முக்கியமான பிரச்சினையை சமாளிக்க வேண்டியிருக்கிறது. (இ) அமைதி, அகிம்சை ஆகிய மரபுகளுக்கு இந்தியா பிரசித்தி பெற்றிருப்பதுபோல முற்றிலும் மாறுபட்ட மரபுகளையுடைய ஜப்பானும், அமைதி யிலும் போரை வெறுப்பதிலும் தன் நம்பிக்கையைப் பறை சாற்றி வருகிறது.

# 2. அரசியலமைப்பு வளர்ச்சி

## Constitutional Development

'பத்தொன்பதாம் நூற்றுண்டின் மையக்காலம் வரை அதாவது சுமார் 1850ஆம் ஆண்டு வரை ஜப்பான் ஒதுக்கி வைக்கப்பட்டு, சிந்துவாரற்று புரிந்துகொள்ள முடியாத தாக-இதர நாடுகளோடு தொடர்பற்றதாக இருந்தது.'[1] 1853இல்தான் அமெரிக்காவைச் சேர்ந்த தளபதி பெரி (Commodore Perry) போர்க்கப்பலொன்ருேடு ஜப்பானிய கடற்கரையை வந்தடைந்து, சீனுவைப்போல ஜப்பானும் பன்னுட்டு வாணிபத்திற்கு அதனுடைய துறைமுக நகரங்களைத் திறந்து விடவேண்டும் என்று வற்புறுத்தினுர். இதனுல் இதர நாடுகளோடு ஜப்பான் தொடர்பு கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. எனினும் நவீன ஜப்பானின் அரசியலமைப்பு முன்னேற்றம் 1603ஆம் ஆண்டிலிருந்தே படிப்படியாக வளர்ந்து வந்ததெனலாம். அரசியலமைப்பு வளர்ச்சியில் முக்கியமான சில அம்சங்கள் கீழே விவரிக்கப்படுகின்றன.

**டோக்குகவா காலம்** (Tokugawa Era): ஜப்பானின் அரசியல் வரலாற்றில் 1603முதல் 1867 வரையிலான காலம் முக்கியமான இடத்தை வகிக்கிறது. கொள்கையளவில் ஜப்பானிய அரசாங்கம் பேரரசர் மட்டத்தில் அதிகாரங்களை யெல்லாம் குவிக்கப்பட்டதாகக் காணப்படினும் நிகழ்முறையில் நிலபிரபுத்துவமே மேலோங்கியிருந்தது. பேரரசர் இந்நிலபிரபுத்துவத்தின் தலைவராக இருந்தாரேயல்லாது உண்மையான ஆட்சித்தலைவராக இருக்கவில்லை. டோக்குகவா ஆட்சி அமைப்புமுறை மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்பொழுது எளிதானதாகத் தெரிகிறது. மத்திய அரசாங்கத்

[1] Ian Thompson: The Rice of Modern Asia, p. 43.

தின் கொள்கை, பேரரசரின் பிரதிநிதியாக டோக்குகவா ஆட்சிக் குடும்பத்தலைவராகவும் விளங்கிய 'ஷோகுன்' (Shogun) என்பவரால் நிர்ணயிக்கப்பட்டது. 'கோராசு' (Goraju) என்றழைக்கப்பட்ட அரசுக் கவுன்சிலைச் சேர்ந்த (Council of State) நான்கு முதல் ஆறு பேர்களைக் கொண்ட கவுன்சிலர்களால் ஆட்சி நடத்தப்பட்டது. ஷோகுன் அரசாங்கத்தின் சிறப்பு அம்சங்கள் பின்வருமாறு:

(அ) பேரரசரின் அதிகாரங்களனைத்தும் பரம்பரையாக வந்த ஷோகுன் என்பவரால் செலுத்தப்பட்டது. பேரரசர் பெயரளவில் ஆள்பவராக இருந்தார். (ஆ) நாடு பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றினுடைய பரிபாலனத்திற்கும் ஒரு பிரபுத்துவமுறைத் தலைவர் இருந்தார். ஷோகுன் அரசாங்கம் அதிகாரப் பகுப்பு (decentralization) டையதாக இருந்தது. ஷோகுன், படைமான்யத் தலைவர்களிடம் அதிகாரம் செலுத்தினரேயல்லாமல் மக்களிடம் நேரிடையாகவல்ல. நாணயங்கள், போக்குவரத்து, வெளிநாட்டு உறவுகள் போன்ற துறைகளில்தான் மத்திய அரசாங்கம் அதிகாரம் செலுத்தும் உரிமை பெற்றிருந்தது. மூன்றுவதாக நில உடைமையும், தனிப்பட்டவர்களின் விசுவாசமும் அரசாங்கத்தின் அஸ்திவாரங்களாக அமைந்திருந்தன. பேரரசருக்குட்பட்டு ஷோகுன் நாட்டிலுள்ள நிலம் முழுவதற்கும் மேலுரிமையாளராக இருந்தார். அவர் நாட்டின் பல பாகங்களிலுமிருந்த பிரபுக்களுக்கு நில உடைமையை அளித்தார். இந்த பிரபுக்களின் கீழ் பல தலைமை நிலக்குத்தகைதாரர்கள் இருந்தனர். கடைசியாக வகுப்புரிமைகள் (Classprivileges) அரசாங்கத்தின் முக்கிய அம்சமாக இருந்தன. மக்கள் உயர் குடியினர் (Nobles), நிலபிரபுக்கள் (Farmers),போர் வீரர்கள், பொதுமக்கள் என்று பல பிரிவினர்களாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். 'இத்தகைய படைமான்ய முறை முடியாட்சியை 1867ஆம் ஆண்டின் மீட்சி (Restoration of 1867) சாய்த்து அரசியல் சட்ட சம்மதமான நவீன அரசாங்கத்தை ஏற்படுத்தியது.'

**புதிய ஜப்பானின் தோற்றம்:** 1867ஆம் ஆண்டின் மீட்சியும் அதற்கு அடுத்த ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட புதிய ஆட்சியும் இளவயதினரான பேரரசரின் ஆதரவாளர்களான சக்தி வாய்ந்த படைமான்யத் தலைவர்களாலும், அவர்களுடைய ஆலோசகர்களாலும் ஏற்பட்டது. மீட்சிக்குப்பிறகு எடுக்கப்பட்ட சிறப்பான நடவடிக்கைகளாவன: (அ) ஷோகுன்

அரசாங்கம் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது. (ஆ) படை மான்யமுறை கைவிடப்பட்டது. (இ) வகுப்பு அடிப் படைச்சலுகைகள் ஒழிக்கப்பட்டு சட்டத்தின்முன் எல் லோரும் சமம் என்னும் கொள்கை ஏற்கப்பட்டது. ஆனால், 1889ஆம் ஆண்டின் மெய்ஜி (Meiji) அரசியலமைப்புக்குப் பிறகு தான் அரசியல் சட்டப்படியான அரசாங்கம் 1890ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது.

**மெய்ஜி அரசியலமைப்பு:** அரசாங்கத்தின் முக்கிய அம்சங் களாவன: (1) அரசியல் சட்டப்படியான முடியாட்சியில் பேரரசர் நடுநாயகமானவராகவும் புனிதத்தன்மையை மீற முடியாத தன்மை உடையவராகவும் ஆக்கப்பட்டார். அவர் பேரரசின் தலைவராக இருந்ததோடு இறைமை அதிகாரம் அனைத்தையும் செலுத்தினார். அரசின் ஆட்சித்துறை, சட்டத் துறை அதிகாரங்கள் யாவும் அவருக்கு வழங்கப்பட்டன. டையட் (Diet) ஆலோசனை கூறும் மன்றமாக இருந்ததால் சட்டமியற்றுவதில் அவர் கட்டுபாடிருந்தது. சட்டத்துறை நீதித்துறைகளின் அதிகாரங்கள் கட்டுப்படுத்தப்பட்டு நிர்வாகத்துறைக்கு விரிவான அதிகாரங்கள் வழங்கப்பட்டன. அரசாங்கத்தின் ஆதாரம் பேரரசரின் மேலாண்மையேயன்றி பாராளுமன்றத்தின் உச்சமல்ல. (2) ஆட்சித்துறையில் அமைச்சரவை மேலோங்கியிருந்தது. முக்கியமாக அது பேரரசருக்கும், அவருடைய ஆலோசகர்களுக்கும் பொறுப் புடையதாக இருந்தது. அதற்கு அடுத்தபடியாக அது டையட்டுக்குப் பொறுப்புடையதாக இருந்தது. ஆனால், நிகழ் முறையில் சட்டமன்றம் (Diet) அமைச்சரவைக்குக் கீழ்ப் படிந்து நடப்பதாக இருந்தது. சட்டமியற்றுவதில் நிர்வாகத் துறைக்கு மறுப்பாணை அதிகாரமும் (Veto Power) வரவு செலவுத்திட்டத் தயாரிப்பில் கட்டுப்பாடும் இருந்தது. அமைச்சரவையில் அரண்மனை அலுவல் சம்பந்தப்பட்ட அமைச்சரும் அரண்மனை அந்தரங்கங்களைக் காப்பாற்றும் பிரபுவும் முக்கியமானவர்கள். இருவரும் பேரரசரால் பெரும் பாலும் ஆயுட்காலத்திற்கு நியமிக்கப்பட்டனர். அவர்கள் யாரைப் பிரதமராக நியமிக்கலாம் என்றும் பேரரசருக்கு ஆலோசனை கூறுவர். அவர்கள் அமைச்சரவையின் கட்டுப் பாட்டிற்குட்பட்டவர்கள் அல்ல. எனவே, அவர்கள் ஆரம்பத் தில் அரசியல் மூதறிஞர்களாகக் கருதப்பட்டனர். பின்னர் அவர்கள் லூஷின் (Lushin) என அழைக்கப்பட்டனர். (3) டையட் இருமன்றங்களை (Bi-cameral)க் கொண்டது. ஆரம்பத் தில் பிரபுக்கள் சபை (House of Peers) 292 உறுப்பினர்களைக்

கொண்டிருந்தது. பிறகு அது 400 ஆக உயர்ந்தது. அதன் உறுப்பினர்கள் அனைவரும் பிரபுக்கள். அவர்கள் ஆறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். பிரதிநிதிகள் சபை (House of Representatives) தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களை மாத்திரமே கொண்டிருந்தது. ஆனால், அவர்கள் வரையறை செய்யப்பட்ட வாக்குரிமை அடிப்படையில்தான் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். 1923ஆம் ஆண்டில் அதன் உறுப்பினர்களின் எண்ணிக்கை 466 ஆக இருந்தது. ஜப்பானிய நாட்டில் உழவர்களின் எண்ணிக்கை மிக அதிகமானதாக இருந்தாலும் 1925ஆம் ஆண்டிற்குப்பிறகு நடைபெற்ற தேர்தலில் அவர்களுடைய பிரதிநிதிகளின் தொகை பத்துவிழுக்காட்டிற்கும் குறைவாகவே இருந்தது.

**இதர அங்கங்கள்** (Other Organs): இதர உறுப்புக்களில் குறிப்பிடத்தக்கதாக ஒரு பிரிவி கவுன்சில் இருந்தது. அதனுடைய முக்கியமான அலுவல் அமைப்புச்சட்டங்கள் பற்றி (Organic Law) பேரரசருக்கு ஆலோசனை கூறுவதாகும். அதன் தலைவர் பேரரசரால் ஆயுட் காலத்திற்கு நியமிக்கப்பட்டார். அமைச்சரவையின் உறுப்பினர்கள் அனைவரும் அதன் பதவிகாரணமான (Exofficio) உறுப்பினர்களாக இருந்தனர். அம்மன்றம், சட்ட சம்பந்தமான பிரச்சினைகளை ஆராய்வதற்கு ஒரு விசேஷக் குழுவை நியமிக்கவும், அமைச்சரவை அதிகாரிகளை விசாரணை செய்யவும் அதிகாரம் பெற்றிருந்தது. இந்தக்காரணத்தாலேயே அம்மன்றம் மூன்றும் சட்டமன்றம் (Third House) என அழைக்கப்பட்டது. மத்திய அரசாங்கத்தின் மிக முக்கியமான நிறுவனம் பேரரசு மாநாடாகும். (ImperialConference)அத்தகையமாநாடொன்றை அழைப்பது பேரரசரின் நிர்வாகச் சிறப்பதிகாரம் (Executive Prerogative) ஆகும். அம்மாநாட்டிற்கு அரசகுமாரர்களும், உயர் ராணுவ அதிகாரிகளும், அரசியல் மூதறிஞர்களும் (Elder Statesmen), பிரதமரும், இதர அமைச்சர்களும் அழைக்கப்பட்டனர். அரசுக்கொள்கை பற்றிய முக்கியமான விஷயங்களை பேரரசர் முன்னிலையில் அம்மாநாடு தீர்மானித்தது. பேரரசரின் அரண்மனை அலுவல்களை பேரரசுக் குடும்பக் கழகம் (Imperial Family Council) நிர்வகித்தது. அது பேரரசரது குடும்பத்தைச் சேர்ந்த ஆண்களையும், அரசகுமாரர்கள் குடும்பங்களைச் சேர்ந்த வயது முதிர்ந்த ஆண்களையும் கொண்டது. அது 1889ஆம் ஆண்டு பேரரசு அரண்மனைச் சட்ட (Imperial House Hold Law) அடிப்படையில் செயற்பட்டது.

ஜென்ரோ (Genro) எனும் நிறுவனம் அரசியலறிஞர்களைக் கொண்ட உயர் குடிக்கூட்டுச் சர்வாதிகார அமைப்பாகும். ஆனால், இது அரசியலமைப்பிற்கு முற்றிலும் அப்பாற்பட்ட ஓர் உறுப்பாகும். 1889ஆம் ஆண்டு அரசியலமைப்பு ஏற்படுத்தப்பட்டு நடைமுறைக்கு வந்த பிறகும், சாதாரண ஜப்பானிய மக்கள் அரசாங்க அலுவல்களைப்பற்றிய ஞானமும் அரசியல் தகுதியும் இல்லாதவர்களாக இருந்தார்களெனத் தெரிகிறது. எனவே, இந்தக் காலத்தில் உண்மையான ஆட்சி அதிகாரம் அதிகாரவர்க்கக் குழுவினரிடம் இருந்ததில் ஆச்சரியமெதுவுமில்லை. இதன் காரணமாக டையட்டும் அரசியல் கட்சிகளும் அதிகாரவர்க்க அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த முடியாதவைகளாக இருந்தன.

**இராணுவ அதிகார வளர்ச்சி** (Growth of Military Power)

1904-1905இல் ருஷ்யாவை ஜப்பான் தோற்கடித்தது முதல் கிழக்காசியாவில் ஜப்பானிய இராணுவத்தின் அதிகாரம் மேலோங்கியிருந்தது. முதலாம் உலகப்போர் நடைபெற்றபோது ஜப்பான் நேச நாடுகளை ஆதரித்தது. அதனால் தூரக்கிழக்காசியாவில் ஜப்பான் சக்தி வாய்ந்த நாடாகியது. 1931இல் ஜப்பான் மஞ்சூரியா மீது படையெடுத்து அதைத் தோற்கடித்து மஞ்சுக்னோ (Manchukno) வை ஏற்படுத்தியது. ஆனால், இரண்டாம் உலகப்போரின்போது ஜப்பான் எதிர்க் கூட்டணி (Axis Powers) நாடுகளான ஜெர்மனி, இத்தாலிய நாடுகளோடு கூட்டுச் சேர்ந்தது. 1940இல் ஜப்பான் தூரக் கிழக்காசியாவில் ஆதிக்கம் செலுத்தும் தன்னுடைய கொள்கையை அறிவித்தது. 1941இல் பேர்ல் ஹார்பர் (Pearl Harbour) நிகழ்ச்சிக்குப் பிறகு ஜப்பானுக்கும் அமெரிக்காவிற்குமிடையே போர் மூண்டது. இரண்டாண்டுகளுக்குள் அதன் படைகள் கிழக்கு, தென் ஆசியாவின் பெரும் பகுதிகளைத் தன்வசமாக்கிக் கொண்டன. ஆனால், ஆப்பிரிக்காவிலும், ஐரோப்பாவிலும் இத்தாலியும் ஜெர்மனியும் தோல்வியைத் தழுவியபோது, கிழக்குப்பகுதியில் ஜப்பானுக்கெதிரான நேச நாடுகளின் பலம் அதிகரித்தது. 1945இல் நாகசகி, ஹிரோஷிமா நகரங்களின் மேல் அமெரிக்கா அணுகுண்டுகளை வீசிப் பெரும் நாசம் விளைவிக்கும் வரை ஜப்பான் போரைத் தொடர்ந்து நடத்தியது.

**ஜப்பானில் ஜனநாயக வளர்ச்சி**
(Attempts at Democratization of Japan)

பேரரசர் மெய்ஜி பட்டத்திற்கு வந்தது முதல் அவரது பேரன் 1945ஆம் ஆண்டு ஜெனரல் மக் ஆர்தரிடம் சரணாகதி

அடைந்தவரை சர்வாதிகார அரசாங்கமே ஜப்பானில் இருந்தது. இது பழமை வாதமும் பிடிவாதமும் இணைந்த பலமான அரசாங்கமாக விளங்கியது.

**ஜப்பானில் ஜனநாயக வளர்ச்சி :** மேற்கூறியவாறு அதிகாரங்கள் அனைத்தும் ஓரிடத்தில் குவிக்கப்பட்டுக் கொடுங்கோன்மை அரசியல் தத்துவங்களே ஜப்பானிய அரசாங்கத்தின் வழி காட்டி நெறிகளாக அமைந்திருந்தன. 1945ஆம் வருடம் ஜுலைத் திங்கள் 26ஆம் நாள் வெளியிடப்பட்ட பாட்ஸ்டாம் பிரகடனம் (Potsdam Declaration) ஜப்பானின் சரணுகதிக்கு அடிப்படையாகும். அப்பிரகடனம், தளையற்ற சுதந்திரமானத் தேர்தலில் ஜப்பானிய மக்கள் விருப்பத்திற்கேற்ப அமைதியில் நாட்டமுடைய பொறுப்புள்ள அரசாங்கமொன்று ஏற்படும் வரை வெற்றிவாகை சூடிய படையின் ஆக்கிரமிப்பு தொடர்ந்திருக்கும் என்றுரைத்தது. இவ்வாறு ஆக்கிரமிப்பு அதிகாரிகளின் அரசாங்கத்தின் இருமுக்கிய நோக்கங்களாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்.

(1) மீண்டும் ஜப்பான் ராணுவ அபாயத்தைத் தோற்றுவிக்காமல் இருப்பதற்கான சூழ்நிலைகளைத் தோற்றுவித்தல் (2) எந்த அளவிற்குச் சாத்தியமோ அந்த அளவிற்கு ஜனநாயக நிறுவனங்களை ஏற்படுத்துதல்.

நேச நாடுகள் கூட்டுத்தலைமைத் தளபதியின் கீழ் இயங்கிய அரசாங்கம் மக்களாட்சி ஏற்படுத்தும் நோக்கத்தில் பல கட்டளைகளைப் பிறப்பித்தது. ஒரு பக்கம் ஜப்பானியத் தரைப் படையும் விமானப்படையும் தலைதூக்க முடியாதவாறு செய்யப்பட்ட அதே நேரத்தில் மறுபக்கம் மக்களுடைய உரிமைகள் தலைமைத் தளபதியின் உத்தரவால் பாதுகாக்கப் பட்டன. அப்போதிருந்த அரசாங்கத்தைப் பற்றிக் குறை கூறுவது தடை செய்யப்பட்டதென்ருலும் செய்தித்தாள்கள், வானொலிகள் சுதந்திரமாக இயங்கத்தடையாக இருந்த எல்லாக் கட்டுப்பாடுகளும் அகற்றப்பட்டன. அரசியல் சமூக, சமயச் சுதந்திரங்கள் சட்டபூர்வமானவைகளாக்கப்பட்டன. இன, தேசிய, சமய, அரசியலடிப்படையிலான பாகுபாடுகள் அறவே ஒழிக்கப்பட்டன. இறுதியாக மக்களாட்சிக் கொள்கைகளை ஆதாரமாகக் கொண்ட அரசியலமைப்பொன்றும் 1946ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது.

# 3. அரசியலமைப்பின் முக்கிய அம்சங்கள்

ஜப்பானில் தற்போது நடைமுறையில் பின்பற்றப்படும் அரசியலமைப்பின் முக்கிய அம்சங்களைப் பின்வரும் தலைப்புகளின் கீழ் சுருக்கமாகக் காணலாம்.

**முகவுரை :** (The Preamble) முகவுரையின் சில முக்கியமான பகுதிகள் வருமாறு : 'ஜப்பானிய மக்களாகிய நாங்கள் தேசிய டையட்டிற்கு முறைப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் வாயிலாக, நாடுகள் பலவற்றுடனும் ஏற்படுத்திக் கொள்ளும் அமைதியான ஒத்துழைப்பினுல் கிடைக்கும் பயன்களை நாங்களும், எங்களுக்குப்பின் சந்ததியினரும் அடையவும், இந்நாடு முழுவதும் சுதந்திரத்தினுல் கிடைக்கும் நன்மைகளையடையவும், அரசாங்கத்தின் நடவடிக்கைகளால் மீண்டும் போர் அபாயமோ துன்பங்களோ ஏற்படாதிருக்கவும் உறுதி எடுத்துக்கொள்வதோடு, இறைமை அதிகாரம் மக்களிடம் இருக்கிறதென்றும் அரசியலமைப்பை ஏற்படுத்திக் கொள்கிறேமென்றும் பிரகடனம் செய்கிறேம். ஜப்பானிய மக்களாகிய நாங்கள் எக்காலத்திலும் அமைதியை விரும்புகிறேமென்றும் மானிட உறவுகளை ஒழுங்குபடுத்தும் உயர்ந்த குறிக்கோள்களை உணர்கிறேமென்றும் அறிவிப்பதோடு, அமைதியை விரும்பும் உலகமக்களின் நீதியுணர்வையும், உண்மைப் பண்பையும் நம்பி ஏற்றுக்கொண்டு, எங்கள் வாழ்க்கையையும் பாதுகாப்பையும் காப்பாற்றுவதற்கு உறுதியெடுத்துக் கொண்டிருக்கிறேம். அமைதியைப் பாதுகாக்க விரும்பும், கொடுங்கோன்மை, அடிமைத்தனம், அடக்குமுறை, சகிப்பின்மை ஆகியவைகளை வெறுத்தொழிக்கும் பண்பட்டுச் சமுதாயமொன்றில் கண்ணியமான இடத்தைப்பெற நாங்கள்

விரும்புகிறோம். உலக மக்களனைவரும் அச்சமில்லாமல் குறை யேதுமில்லாமல் அமைதியான வாழ்க்கையை நடத்த உரிமை யுடையவர்கள் என்பதை நாங்கள் உணர்கிறோம்.'

**அரசியலமைப்பு** (The Constitution)

அரசியலமைப்பு பதினொரு அத்தியாயங்களாகப் பிரிக்கப் பட்ட 103 விதிகளையுடைய சிறியதோர் ஆவணமாகும். அது ஒரு மணி நேரத்தில் படிக்கக்கூடியதாக இருபது பக்கங்களில் அச்சடிக்கப்பட்டிருக்கிறது. நுணுக்கமானவையும் சட்ட சம்பந்தப்பட்டவையுமான சொற்கள் கூடுமானவரையிலும் தவிர்க்கப்பட்டு, சுலபமான மொழியில் அது எளிதாக எழுதப் பட்டிருக்கிறது. இத்தகைய எளிய மொழியில் அது எழுதப் பட்டிருப்பதால் ஜனநாயகம் வளர்ச்சியடைவதற்கு உதவு வதாக இருக்கிறது. ஏனெனில், அது சாதாரண மக்களும் படித்தறிந்து கொள்ளும் வகையிலிருக்கிறது.

**போர் புறக்கணிக்கப்படல்** (Renunciation of War)

போர் புறக்கணிக்கப்பட வேண்டுமென்பது அரசிய லமைப்பில் வற்புறுத்தப்படுகிறது. அது நியாயமானதும் ஆகும். ஏனெனில் ஜப்பானியர்கள் இரண்டாம் உலகப் பெரும்போரினால் ஏற்பட்ட நாசகரமான விளைவுகளை மறப் பதற்கில்லை. அரசியலமைப்பின் முகவுரையில் எப்போதும் அமைதி நிலவ வேண்டுமென்பதை ஜப்பானியர்கள் விரும்பு கிறார்கள் என்றும், அமைதியை விழையும் பன்னாட்டுச் சமூகத் தில் ஓர் உயர்இடத்தை ஜப்பான் பெற வேண்டுமென விழைவதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் அரசியலமைப்பின் இரண்டாம் பகுதியில் 9ஆம் விதி குறிப்பிடு வதைக் கவனத்தில் கொள்ளலாம். 'நீதி, ஒழுங்கு இவற்றின் அடிப்படையில் உலக அமைதியை ஜப்பான் உண்மையில் விரும்புவதால் நாட்டின் இறைமைத் தன்மைக்கு இலக்கண மாக விளங்கும் போரை ஜப்பானியர்கள் எப்போதுமே விரும்புவதில்லை. அங்ஙனமே பன்னாட்டுச் சச்சரவுகளைத் தீர்த்துக் கொள்வதிலும் பயமுறுத்தலையும் பலாத்காரத்தை யும் ஒருவழியாகக் கைக்கொள்வதையும் வெறுக்கிறார்கள்' என்று அது குறிப்பிடுகிறது.

இந்நோக்கத்தையடைவதற்காக நில, கடல், விமானப் படைகளையும் போர் செய்வதற்கு ஆதாரமாக இருக்கும் இதர சக்திகளையும் ஏற்படுத்திப் [பராமரிப்பதில்லை எனவும் அது

அறிவிக்கிறது. போரைக் கைவிடும் இந்த விதி, அமைதியையும் சமாதானத்தையும் மனமாரவிரும்பும் மக்களின் உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் உயர்ந்த விதி எனக் கருதலாம். இதை இதர நாடுகளும் பின்பற்றுமானால் உலக அமைதியை அச்செய்கை வலுப்படுத்தும் என்பதில் ஐயமில்லை. ஒருவகையில் இத்தகைய அரசியலமைப்பு ஏற்பாடு, வரலாற்றில் காணப்படாததென்பதோடு நடைமுறையில் பின்பற்றக்கூடிய சாத்தியமற்றதாகவும் தோன்றுகிறது. ஏனெனில் உலக நாடுகள், பன்னாட்டு, உள்நாட்டு மட்டங்களில் இன்னும் பலாத்காரத்தைக் கைவிடாமல் இருக்கின்றன. நம்மைப் பொருத்த வரை இக்கொள்கை உண்மையில் போற்றப்பட வேண்டியதுதான் என்றாலும் இப்போதே இத்தகைய கொள்கைக்கு அந்நாட்டு மக்களிடையே எதிர்ப்பு இருக்கிறதென்பது அவர்கள் இராணுவ மயமாக்குவதையும், ஆயுதத் தயாரிப்பையும் அதன் குவிப்பையும் வற்புறுத்துவதிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம்.

**மக்களாட்சித் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது**
(Inspired by Democratic Philosophy)

இப்போதுள்ள அரசியலமைப்பிற்கு முன்பே ஜப்பானில் மக்களாட்சித் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியலமைப்பு இருந்ததெனினும் அதனடிப்படையில் உண்மையான ஜனநாயக அரசாங்கம் ஏற்படுத்தப்படவில்லை. தற்போதைய அரசியலமைப்பை ஆக்கியவர்கள் ஜனநாயகக் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டிருந்தார்கள்.

அரசியலமைப்பின் முகவுரையில் இறைமை மக்களிடமேயுள்ளது என்பது தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விறைமை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால் மக்கள் நலன் கருதி செலுத்தப்படும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அரசியலமைப்பின்படி பேரரசின் உண்மையான அதிகாரங்கள் யாவும் தேசிய பாராளுமன்றத்திற்குத் தரப்பட்டிருப்பதால் அதுவே நாட்டில் உச்ச அதிகாரமுடைய நிலையமாக விளங்குகிறது. இப்போதுள்ள பாராளுமன்றத்தில் (Diet) முன்பிருந்த பிரபுக்கள் சபையின் ஸ்தானத்தை கவுன்சிலர்கள் சபை வகிக்கிறது. பிரபுக்கள் சபையைக் காட்டிலும் கவுன்சிலர்கள் சபை ஜனநாயக ரீதியில் அமைக்கப்பட்டிருக்கிறது. கீழ்ச்சபை (Lower House) மேல்சபையைவிட உண்மையானதும் மிக அதிகமானதுமான அதிகாரங்களைப் பெற்றிருக்கிறது. அமைச்சரவையும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்

புடையதாக்கப்பட்டிருக்கிறது. அரசியலமைப்பு வயது வந்த ஆண்கள் அனைவருக்கும் வாக்குரிமை வழங்குவதோடு அவ்வுரிமையை முதன்முறையாகப் பெண்களுக்கும் வழங்குகிறது. கடைசியாக மக்களது உரிமைகளும் சுதந்திரங்களும் அரசியலமைப்பிலேயே சேர்க்கப்பட்டிருக்கின்றன.

**பாராளுமன்றமுறை அரசாங்கம்**

மேலே சொல்லப்பட்டிருப்பதிலிருந்து ஜப்பான் பாராளுமன்ற முறை அரசாங்கத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறதென்பது புலனாகும். அரசியலமைப்பின்படி சட்டத்துறை மேலாதிக்கம், ஏற்படுத்தப்பட்டிருப்பதோடு அமைச்சரவை டயட்டிற்கு பொறுப்புடையதாகவும் ஆக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு அரசாங்கத்தின் பிரிவுகளான சட்டத்துறைக்கும் நிர்வாகத்துறைக்குமிடையேயான தொடர்பு, ஆங்கில நாட்டு அரசியல் சம்பிரதாய முறைக்கொப்பானதாகக் கொண்டுவரப் பட்டிருக்கிறது.

'போருக்கு முன்பு அமைச்சரவையையும், அதிகாரவர்க்கத்தையும் டயட்டு கட்டுப்படுத்த முடியாததாக இருந்தது. புது அரசியலமைப்பு ஆட்சி அதிகாரத்தைச் செலுத்தும் இறுதி நிலையமாக டயட்டு இருக்குமெனக் குறிப்பிடுகிறது.'[1]

**ஒற்றையாட்சி முறை அரசாங்கம்**
(Unitary System of Government)

இப்போதைய அரசியலமைப்பின்படியும் ஜப்பானிய அரசாங்கமுறை ஒற்றையாட்சி முறையைச் சேர்ந்ததாக இருக்கிறது. இவ்வரசியலமைப்பின்படி ஆட்சி பன்முகப்படுத்தலுக்கு (Decentralization of Administration) வகை செய்யப்பட்டிருந்தாலும் அது ஒற்றையாட்சி முறையைப் பாதிப்பதாக அமையவில்லை. இங்கிலாந்தைப் போன்று ஜப்பான் முழுவதற்கும் ஒரேயொரு பாராளுமன்றந்தானிருக்கிறது. ஜப்பான் போன்ற சிறிய நாட்டிற்கு ஒற்றையாட்சிமுறை அரசாங்கம் பொருத்தமாக இருக்குமெனச் சொல்லலாம்.

**நீதித்துறைச் சுதந்திரம்** (Independence of Judiciary)

முதலிலிருந்த அரசியலமைப்பு அடிப்படையில் நீதித்துறை நிர்வாகத்துறையின் ஓர் அங்கமாக சுதந்திரமற்றதாக

---

[1]B. R. Chatterjie: The Last Hundred Years in the Far East-Japan—P. 79

இருந்தது. ஆனால், இப்போதுள்ள அரசியலமைப்பு நீதித் துறையின் சுதந்திரத்தை ஏற்றுக்கொண்டு, நீதித்துறை அதிகாரத்தை உச்சநீதிமன்றத்திற்கும், அதற்கடுத்த மட்டங்களிலுள்ள நீதிமன்றங்களுக்கும் அளிக்கிறது. எல்லா நீதிபதிகளும் தங்கள் அதிகாரங்களைச் செலுத்துவதில் சுதந்திரம் பெற்றிருக்கிறார்கள். நீதிபதிகளை நியமித்தல் அவர்களது பணி பற்றிய விதிகள், ஊதியங்கள் பற்றிய ஏற்பாடுகள் அவர்களது சுதந்திரத்தை நிலை நாட்டுபவைகளாக இருக்கின்றன. அவர்கள் இப்போது இராஜத்துரோகக் குற்றச்சாட்டு அடிப்படையில்தான் பதவியிலிருந்து விலக்கப்பட முடியும். இந்த நீதித்துறை சுதந்திரத்திற்கு ஏற்றாற்போல இங்கிலாந்து நாட்டிலுள்ள அதிகாரப் பிரிவினைத் தத்துவம் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

# 4. நிர்வாகத்துறையமைப்பும், அதன் பணிகளும், அதிகாரமும்.

ஜப்பானில் நிர்வாகத்துறை, பேரரசரையும் அமைச்சரவையையும் கொண்டது. இப்போதுள்ள அரசியலமைப்பின் படி பேரரசரைக்காட்டிலும் அமைச்சரவையே உண்மையான அதிகாரமுடையதாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இப்போது நாம் பேரரசரது நிலைமை அதிகாரம் ஆகியவற்றைக் காண்போம்.

**ஜப்பானியப் பேரரசர்** (Japanese Emperor)

முதலிலிருந்த அரசியலமைப்பின்படி பேரரசர் பேரரசின் தலைவராவார். இறைமை அதிகாரங்களனைத்தும் பேரரசரிடம் குவிக்கப்பட்டிருந்தன. ஆனால், அவைகளை அவர் அரசியலமைப்பின்படிதான் செலுத்தலாம். எல்லாவகைப்பட்ட சட்ட நிர்வாக அதிகாரங்களனைத்தும் பேரரசரிடம் குவித்து வழங்கப்பட்டு அந்த ஆதாரத்தில் அவர் ஆட்சி செய்தார். மனித உடம்பிற்கு மூளை எங்ஙனம் இன்றியமையாததாகவும், எல்லாவற்றையும் இயக்கி வைப்பதாகவும் இருக்கிறதோ அவ்வாறு பேரரசர் நாட்டின் அரசியல் வாழ்க்கையையும் நடவடிக்கைகளையும் நடத்தும் உயரிடத்தைப் பெற்றிருந்தார். சட்டத்துறையில் டையட் பேரரசருக்கு ஆலோசனை மட்டுமே வழங்கக்கூடியதாக இருந்தது.

ஜப்பானிய மரபுகளின்படி ஜப்பானிய பேரரசர் இங்கிலாந்து நாட்டு அரசரைவிட தார்மீக அதிகாரம் (Moral Power) உடையவராக இருந்தாரெனினும் அரசாங்கம் பிரதமராலும் அமைச்சரவையாலும் நடத்தப்பட்டது. பேரரசரின் அதிகாரங்கள் ஐந்து வகைகளாகப் பிரிக்கப்படலாம். அவை

யாவன: (1) அரண்மனை சம்பந்தப்பட்டவை (2) ஆகாய கடற்படை சம்பந்தப்பட்டவை (3) விருதுகள் வழங்கல் (4) சமயம், சமய விழாக்கள் தொடர்புடைய காரியங்கள் சம்பந்தப்பட்டவை (5) அரசாங்கம் சம்பந்தப்பட்டவை.

(அ) பேரரசர் மட்டுமே டையட்டை அழைக்கவும், துவக்கிவைக்கவும், பிரதிநிதிகள் சபையைக் கலைக்கவும் முடியும். (ஆ) சட்டமியற்றலில் மசோதாக்கள் கொண்டு வரவும் அவற்றிற்கு இசைவு தரவும் அதிகாரம் (இ) அவசரச் சட்டங்கள் பிரகடனப்படுத்துதல் (ஈ) படையமைப்பு, போர் பிரகடனம் செய்தல், அமைதி உடன்படிக்கை இதர உடன்படிக்கை செய்து கொள்ளல் பற்றிய அதிகாரம் (உ) நிர்வாகத்துறையில் ஆட்சித்துறை பிரிவுகள்பற்றி உயர் அதிகாரிகளை நியமித்தல், அவர்களின் சம்பளங்களை நிர்ணயஞ் செய்தல். பேரரசர் பெயரிலேயே எல்லா நீதிமன்றங்களும் நீதி வழங்கின.

**தற்போதைய அரசியலமைப்பில் பேரரசரின் நிலைமை**
**(Position of the Emperor under the present Constitution)**

முன்னிருந்த அரசியலமைப்பின்படி பேரரசர் புனிதமானவராகவும் மீறப்படமுடியாதவராகவுமிருந்தார். சட்டபூர்வமானதும் அரசியல் நீதியிலானதுமான அதிகாரத்தின் பிறப்பிடமாக இருந்தார். ஆனல், இப்போது அவருடைய நிலைமை முற்றிலும் மாறுபட்டதாகும். அரசியலமைப்பின் முதலாம் விதிப்படி பேரரசர் மக்களுடைய ஒற்றுமைக்கும் அரசுக்கும் சின்னமாக இருக்கிறார். இறைமையதிகாரத்தின் உறைவிடமாகத்திகழும் மக்களின் விருப்பத்திலிருந்து அவரது நிலைமை பெறப்படுகிறது. மூன்றும் விதி குறிப்பிடுவதாவது: “அரசு விவகாரங்களில் பேரரசரது எல்லா நடவடிக்கைகளுக்கும் அமைச்சரவையின் ஆலோசனையும் சம்மதமும் தேவையாகும். அமைச்சரவையே இவையாவற்றிற்கும் பொறுப்புடையதாகும்.’ இவ்வாறு பேரரசரது நிலைமை இங்கிலாந்து நாட்டின் முடியினது (Crown) தன்மையதாக அரசியல் சட்டப்பூர்வமானதாகும். ஆருவது விதியின்படி டையட் குறிப்பிடும் வகையில் பிரதம மந்திரியை பேரரசர் நியமனம் செய்கின்றார். அமைச்சரவையின் விருப்பத்திற்கிணங்க அவர் உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதியை நியமிக்கின்றார். அமைச்சரவையின் ஆலோசனைக்கும் ஒப்புதலுக்குமிணங்க மக்கள் சார்பாக அரசு சம்பந்தப்பட்ட விவகாரங்களில் பேரரசர் பின் குறிப்பிட்ப்

படும் கடமைகளைச் செய்கிறார். அரசியலமைப்பு, சட்டங்கள், அமைச்சரவை உத்திரவுகள், உடன்படிக்கைகள் ஆகியவற்றையொட்டிய திருத்தங்களைப் (Amendments) பிரகடனப்படுத்துதல், டையட்டைக் கூட்டுதல், பிரதிநிதிகள் மன்றத்தைக் கலைத்தல், டையட் உறுப்பினர்களின் தேர்வுக்கான பிரகடனத்தைச் செய்தல், அமைச்சர்களது நியமனம் அல்லது பதவி நீக்கம் ஆகியவற்றை உறுதிப்படுத்துவது (Attestation), பொதுமன்னிப்பளித்தல் (Amnesty) தண்டனைகளைக் குறைத்தல் ஆகியவற்றை சரியென அறிவித்தல், பொது விருதுகளை வழங்கல், ராஜதந்திரம் சம்பந்தப்பட்ட ஆவணங்களை உறுதிப்படுத்தல், அயல் நாட்டிலிருந்து வரும் தூதுவர்கள் அமைச்சர்களை வரவேற்றல், அரசு விழாக்களில் பங்கெடுத்துக் கொள்ளல்.

மேற்கூறப்பட்டுள்ள பேரரசரது பொறுப்புகளை ஆழ்ந்து நோக்குவோர் எவரும் அவரது கடமைகள் நாட்டுத் தலைவர் என்ற முறையில் அவர் சட்டபூர்வமாக நிறைவேற்ற வேண்டிய பெயரளவுத் தன்மையானவை என்பதை அறிவர். தற்போதைய அரசியலமைப்பின்படி அரசாங்கத்தில் அவருக்கு உண்மையான அதிகாரங்கள் கிடையாதென்பது தெளிவாகும். யானகா என்பார் 'பேரரசர் முன்பு போல தற்போது ஆட்சி செய்யும் அதிகாரம் பெற்றில்லாவிட்டாலும் அரியாசனத்தில் அலங்காரக் கொலு வீற்றிருக்கிறார். அரசாங்கத்துறையில் திட்டவட்டமானதொரு பங்கேற்கும் இங்கிலாந்து முடிமன்னரோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஜப்பானியப் பேரரசர் செலுத்தும் அதிகாரம் பூஜ்யம் ஆகும். இங்கிலாந்து நாட்டு முடிமன்னர் பிரதம மந்திரியார் தம்மை ஆலோசனை கலக்கவும், பிரதம மந்திரியை சில நடவடிக்கைகளில் ஊக்குவிக்கவும், வேறு சிலவற்றில் எச்சரிக்கை செய்யவும் உரிமை பெற்றிருக்கும்போது ஜப்பானியப் பேரரசர் இவைகளில் எதையுமே பெற்றிருக்கவில்லை' என்று குறிப்பிடுவது அறியத்தக்கதாகும்.[1]

இவ்விடத்தில் இங்கிலாந்து நாட்டுப் பிரதம மந்திரியை முடியரசர் நியமிக்கிறாரென்பதும், அவ்வாறு நியமனம் செய்யும்போது சில சூழ்நிலைகளில் சமயோசிதம் போல நடக்க அவருக்கு வாய்ப்புகள் இருக்கின்றன என்பதையும் கவனிக்க

---

[1] C. Yanaga: Japanese People of Politics, page 141.

வேண்டும். ஆனால், ஜப்பானில் பிரதம மந்திரி டையட்டினால் நியமிக்கப்படுகிறார்.

எனினும் ஆட்சியதிகார இழப்பு பேரரசரது மதிப்பை எள்ளளவும் குறைத்துவிடவில்லை என்றும் தெரிகிறது. புதிய அரசியலமைப்பு நடைமுறையில் பின்பற்றப்படுகின்ற இந்த சமயத்திலும் பொதுக்கருத்து என்று எடுத்துக் கொள்ளும்போது பேரரசர்தான் அரசு (State) என்று கருதப் படும் நிலைமை மேலோங்கியிருக்கிறது. ஆயினும் பேரரசரது அரசியல் சட்டபூர்வமான அதிகார மாற்றத்தினால் குறைந்தது இரு முக்கிய மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றனவெனலாம். முதலாவது பேரரச பதவியைச் (Imperial Institution) சூழ்ந் திருந்த இரும்புத்திரை சிறிதளவாவது விலக்கப்பட்டிருக் கிறது. பேரரசரது ஆளுமையையும் அப்பதவியையும் பற்றி விவாதம் செய்வது முறையற்றது என்றிருந்த முன்னிருந்த நிலைமைமாறி, இப்போது அவைகளை விவாதிக்கலாம் என்ப தோடு திறனாய்வு செய்யவும் முடிகிறது. இரண்டாவது, பேரரசரும் மனிதரே என்று கருதப்படக்கூடிய நிலைமை இப் போது ஏற்பட்டிருக்கிறது. ஆனால், முன்னரோ, பேரரசர் இறைவனாகக் கருதப்பட்டதோடு, அவர் அரண்மனையை விட்டு வெளியில் சென்றபோதெல்லாம் மக்கள் சிரம் தாழ்த்தி வணங்கியதோடு, அவரது உடலைப் பார்த்தலுமாகாதெனக் கருதப்பட்டது. இரண்டாம் உலகப் பெரும் போர் நடை பெற்றபோது பள்ளிக்கூடங்களுக்கும், தொழிற்சாலைகளுக் கும், கழனிகளுக்கும், படக்கொட்டகைகளுக்கும் (Picture Houses) பேரரசர் அரண்மனையை விட்டுச்சென்று போய்ப் பார்த்தார். செய்தித்தாள்களும், வார இதழ்களும் அவரது வாழ்க்கை, வாழ்க்கைமுறை பற்றிய செய்திகளையும் கட்டுரைகளையும் பிரசுரிக்க ஆரம்பித்துள்ளன.

**பேரரசர் பணி** (Role of the Emperor)

தியோடார் மக்நெல்லி என்பார் 'ஜப்பானிய பேரரசர் அரசின் சின்னமாக (Symbol of the State) விளங்குகிறார் என்பது இங்கிலாந்து நாட்டு முடிமன்னர் பிரித்தானிய பேரரசரின் சின்னமாக விளங்குகின்றார் என்று குறிப்பிடும் அடிப்படையில் எழுந்ததாகும்' என்கிறார்.[1] எனினும்

[1] Theodore Mcnelly: Contemporary Government of Japan, Page 59.

அத்தகையப் பதப்பிரயோகம் இறைமை அதிகாரமுடைய ஜப்பானிய நாட்டைப் பொருத்தவரை பொருந்தாததாகும் எனலாம்.

டையட்டினுல் நிறைவேற்றப்பட்ட சட்டங்களின் செல்லு படியாகும் தன்மைக்கு பேரரசரின் இசைவு தேவையில்லை. இங்கிலாந்து நாட்டு அரசர் பாராளுமன்றத்தால் இயற்றப் பட்ட சட்டங்களுக்கு தமது இசைவை அளிக்கவேண்டும். இசைவுதர மறுக்கவும் அதிகாரமுண்டு. இவ்வதிகாரம் 1707க்குப் பிறகு பயன்படுத்தப்படவில்லையென்பது குறிப் பிடத் தக்கது. ஜப்பானிய பேரரசர் இத்தகைய மறுப்பாணை அதிகாரத்தைக் கொள்கையளவில்கூடப் பெற்றிருக்கவில்லை. டையட்டினுல் நிறைவேற்றப்பட்ட மசோதா இயல்பாகவே சட்டமாகிவிடுகிறது. பேரரசர் அம்மசோதாவைப் பிரகடனப் படுத்துகிருர்.

பாராளுமன்றமுறை அரசாங்கத்தில் இங்கிலாந்து நாட்டு முடியரசரைப்போன்று மாண்புமிக்கவரும பட்சபாதமற்ற வருமான ஒருவருடைய பணி இன்றியமையாததாக இருக்கிற தென்ற அடிப்படையில் ஜப்பானியப் பேரரசர் விளங்கு கிருர்.

# 5. அமைச்சரவை

'அமைச்சரவை முறை ஜப்பானில் 1885ஆம் ஆண்டின் பேரரசுச் சட்டம் (Imperial Ordinance) வெளியிடப்பட்டதிலிருந்து தோன்றியதெனலாம். ஆனல், அது இங்கிலாந்திலுள்ளதுபோன்ற அமைச்சரவை முறை அரசாங்கத்தை தோற்றுவிக்கவில்லை. உண்மையில் சொல்லவேண்டுமானல் அமைச்சரவை, அரசாங்க வளர்ச்சி வரலாற்றில் கடைசியாகத் தோன்றிய ஓர் உறுப்பாக இல்லாமல் அரசியலமைப்புப் பிரகடனத்திற்கு நான்காண்டுகள் முன்பாகவும் பாராளுமன்றத் துவக்கத்திற்கு ஐந்தாண்டுகள் முன்பாகவும் ஏற்பட்டதெனலாம்'.[1] எனினும் 1889ஆம் ஆண்டின் அரசியலமைப்பில் 'அமைச்சரவை' (Cabinet) 'பிரதம மந்திரி' (Prime Minister) என்ற சொற்கள் எவ்விடத்திலும் காணப்படவில்லை. 55ஆம் விதி 'அரசு அமைச்சர்கள் (Ministers of State) பேரரசருக்கு ஆலோசனை வழங்கவும், வழங்கப்பட்ட ஆலோசனைகளுக்கு பொறுப்பாளிகளாகவும் இருப்பார்கள்' என்று சாதாரணமாகக் குறிப்பிட்டது. இதனல் மெய்ஜி அரசியலமைப்பு பேரரசருக்கு ஆலோசனை சொல்லவும் அவ்வாலோசனைக்குப் பொறுப்பேற்கவும் ஏதோவொரு வகையான அமைச்சரவைக்கு வழி செய்ததென யூகித்தறியலாம்.

அரசு அமைச்சர்கள், அமைச்சர்கள் குழுவாக (Council of Ministers) அமையாததாலும் அவர்கள் ஒவ்வொருவரும் தனிப்பட்ட முறையில் பேரரசருக்கு மாத்திரமே பொறுப்புடையவர்களாக இருந்ததாலும், அவர்கள் டையட்டில் உறுப்பினர்களாகவோ பெரும்பான்மைக் கட்சியைச் சேர்ந்தவர்களாகவோ அல்லது கூட்டரசாங்கம் அமைக்க ஒப்புக்கொண்ட

---

[1] Kahim : Japanese people and Politics, Page 144.

பாராளுமன்றக் குழுக்கள் பலவற்றில் ஏதாவதொன்றைச் சேர்ந்தவர்களாகவோ இருந்திருக்க வேண்டிய அவசியமில்லை. ஆரம்பத்தில் முதிய ராஜதந்திரிகளும், அரண்மனை அமைச்சரும் கொண்ட ஆலோசகர்களது சிபாரிசின் பேரில் பேரரசரே பிரதம மந்திரியைத் தேர்ந்தெடுத்தார். அதன் பிறகு பிரதம மந்திரி பேரரசரைக் கலந்து கொண்டு இதர மந்திரிகளைத் தெரிந்தெடுப்பார். 1910க்குப் பிறகு டையட்டில் பெரும் பான்மைக் கட்சித் தலைவராக இருந்தவரை பெரும்பாலும் பிரதம மந்திரியாக நியமித்து இதர மந்திரிகளை அவருக்குச் சிபாரிசு செய்யும்படி பணிப்பார். ஆனால், பிரதம மந்திரி தன் கட்சியைச் சேர்ந்தவர்களை மந்திரிகளாகத் தேர்ந்தெடுப்பதன் வாயிலாக ஒரு குழுவை அமைத்தார் என்று சொல்லமுடியாது. மந்திரிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் பல அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்களாக இருந்ததோடு இதர காரணங் களும் பிரதம மந்திரியின் பரிசீலனையில் இருந்தன. அவர், பணக்காரர்கள், இராணுவத்தினர் ஆகியோரின் விருப்பங்களை யும் கருத்துகளையும் கவனத்தில் கொள்ள வேண்டியிருந்தது. இதனால் அமைச்சரவை பல உந்தல் சக்திகளுக்கும் நிர்ப்பந்தங் களுக்கும் வளைந்து கொடுத்துப் பணியாற்றி பலமற்றதாய் இருந்தது. முதல் உலகப் பெரும் போருக்கு முந்திய இவ்வமைச்சரவை மிகப் பெருமளவிற்கு பல தளைகளால் கட்டுண்டதாக இருந்தது. இருப்பினும் இதர எல்லா அரசாங்க அங்கங்களிலும் அமைச்சரவையே மக்கள் பெரும் பாலோரது கவனத்தை ஈர்ப்பதாகவும், அதில் பிரதமராகவோ அல்லது உறுப்பினராகவோ இருப்பதை அரசியல் வாழ்வில் பெரும்புள்ளிகளாக இருந்தவர்கள் தங்கள் வாழ்வின் பேறாகக் கருதினார்கள். இக்கருத்தை காகின் என்பாரும் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

## 1947ஆம் ஆண்டு அரசியலமைப்பின்படி அமைச்சரவை முறை

'அமைச்சரவை' 'பிரதம மந்திரி' போன்ற சொற்கள் அரசியலமைப்பில் இப்போது இடம் பெற்றுள்ளன. இவ்வரசியலமைப்பு அமைச்சரவை அரசாங்கத்தின் எல்லா முக்கியக் கொள்கைகளையும் ஏற்றுக்கொண்டுள்ளது. நிர்வாக அதிகாரம் அமைச்சரவையிடம் கொடுக்கப்பட்டுப் பேரரசர் மக்கள் ஒருமைப்பாட்டிற்கும், அரசுக்கும் சின்னமாகத் திகழ் கிறார் (அ. விதி 1). அமைச்சரவை அதன் தலைவரான பிரதம மந்திரியையும் அவரால் நியமிக்கப்படும் இதர அரசு மந்திரி களையும் கொண்டது (அ. விதி. 66). டையட் உறுப்பினர் களில் ஒருவர் டையட்டின் தீர்மானம் ஒன்றினால் பிரதம மந்திரி

யாக அறிவிக்கப்படுவார் (அ. விதி 67). பிரதம மந்திரி பதவி பெரும்பாலும் டையட்டின் கீழ் மன்றப் பெரும்பான்மைக் கட்சித் தலைவர் அல்லது பல கட்சிக் கூட்டின் தலைவருக்கே செல்லும். பிரதம மந்திரியும் இதர அமைச்சர்களும் சிவிலியன்களாகவும் (அ. விதி 66), அவர்களில் பெரும்பாலானோர் டையட்டில் அங்கம் வகிப்பவர்களாகவுமிருக்க வேண்டும் (அ. விதி 68). நிர்வாக அதிகாரங்களைச் செலுத்தும்போது அமைச்சரவை டையட்டிற்கு கூட்டுப் பொறுப்பேற்க வேண்டும் (அ. விதி 66). மந்திரிகளை நியமிப்பதுபோல அவர்களை விலக்கவும் பிரதமருக்கு அதிகாரமுண்டு (அ. விதி 68). கீழ் சபை நம்பிக்கையில்லாத் தீர்மானமொன்றை நிறைவேற்றும் போதோ அல்லது நம்பிக்கைத் தீர்மானத்தை நிராகரிக்கும் போதோ அமைச்சரவை பதவியைத் துறக்க வேண்டும் (அ. விதி 69). இவ்வாறு பிரதிநிதிகள் மன்றத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக உள்ளவரையில்தான் அமைச்சரவை பதவியிலிருக்கலாம். பிரதிநிதிகள் மன்றத்திற்கு அமைச்சர்கள் கூட்டுப் பொறுப்புடையவர்களாக இருக்கும்போது அவர்கள் பிரதம மந்திரிக்கு தனிப்பட்ட முறையிலும் பொறுப்புடையவர்களாவர். அவர்கள் பிரதம மந்திரியின் விருப்பத்திற்கிணங்க பதவி நீக்கம் செய்யப்படலாம். அவர்களை ஆக்கிய கையே அழிக்கவும் செய்யலாம்.

### அமைச்சரவை அமைப்பு

அமைச்சரவை உறுப்பினர்களின் எண்ணிக்கை அவ்வப்போது மாறுபடுகிறதென்றாலும் வழக்கமாக பதினாறு பேர்கள் அரசு அமைச்சர்களாக நியமிக்கப்படுகிறார்கள். எல்லா அமைச்சர்களும் பொதுவாக சம தரமும், அந்தஸ்தும் உடையவர்கள். நடைமுறையில் பன்னிரண்டு பேர்களே இலாக்கா பொறுப்பும் தலைமையும் உடையவர்கள். இதரர்கள் இலாக்கா பொறுப்பில்லாதவர்கள்.

அமைச்சரவை செவ்வாய், வியாழக்கிழமைகளில் வாரம் இருமுறை பிரதம மந்திரியின் அதிகாரப்பூர்வ இருப்பிடத்தில் கூடுகிறது. அமைச்சரவைக் கூட்டத்திற்கு பிரதமரும், அவர் இல்லாதபோது உதவிப் பிரதமரும் (Vice Premier) தலைமை வகிப்பார். அமைச்சரவை முடிவுகள் ஏகோபித்த முடிவுகள் எனும் வழக்கம் இப்போது நிலையானதாகி விட்டது. அமைச்சரவை முடிவையோ கொள்கையையோ ஏற்காத அமைச்சர் பதவியைத் துறத்தல் வேண்டும். அமைச்சரவை கூட்ட

நடைமுறைகள் முற்றிலும் இரகசியமானவை. கூட்ட நட வடிக்கைகள் பதியப்படுவதில்லை. அமைச்சரவைக் கூட்டங் களில் நடைபெறுபவற்றை வெளியே சொல்லக் கூடாதென அமைச்சர்கள் திட்டவட்டமாக அறிவுறுத்தப்பட்டிருக்கிறார் கள். அமைச்சரவைக் காரியாலயம் இயக்குநர் ஒருவரைத் தலைவராகவும், இரு உதவி இயக்குநர்களை உதவியாளர்களாக வும் கொண்டதாக அமைக்கப்பட்டு, அமைச்சரவைக்கு நிகழ்ச்சிநிரலைத் தயாரிப்பதற்கும், இதர ஆவணங்களைக் கையாள்வதற்கும், பராமரிப்பதற்கும் உதவி செய்கிறது. அமைச்சரவைக் காரியாலய இயக்குநரும், சட்டக்கழகத் (Bureaue of Legislation) தின் இயக்குநரும், துணை இயக்குநரும் அமைச்சரவைக் கூட்டம் நடைபெறும்போது அதில் கலந்து கொள்வது வழக்காறாக நிலைபெற்றுவிட்டதெனினும் அவர்கள் வாக்களிக்க முடியாது.

பிரதம மந்திரி அலுவலகம் நீங்கலாக பதினாறு அமைச்சர கங்கள் (Ministeries) அல்லது துறைகள் (Departments) ஏற் படுத்தப்பட்டுள்ளன. பிரதமர் அவரது அலுவலகத்திற்குத் தலைவர். அவ்வலுவலகம் இதரவற்றிற்குக் கேந்திரமாகவும் அவற்றையெல்லாம் அரசாங்க மட்டத்தில் இயக்கி வைப்ப தாகவும் இருக்கிறது. அமைச்சரவைக் காரியாலயமும், சட்டக் கழகமும் அமைச்சரவையின் துணை உறுப்புக்களாகும். முன் னால் சொல்லப்பட்டது அமைச்சரவைக் கூட்டங்களுக்கான நிகழ்ச்சி நிரல்களைத் தயாரித்தலிலும், இதர அலுவல்களைப் பராமரிப்பதிலும், பொறுப்புப் பெறுகிறது. இரண்டா வதாகச் சொல்லப்பட்ட சட்டக்கழகம் அரசாங்க மசோதாக் களைத் தயாரிப்பதிலும் அமைச்சரவை உத்திரவுகளை உருப் படுத்துவதிலும், உடன்படிக்கைகள் இன்னும் முக்கியமான இதர விஷயங்களைப்பரிசிலனை செய்வதிலும் பங்கு பெறுகிறது. இவையல்லாமல் அங்கு மூன்று அதிகப்படியான நிறுவனங் கள் இருக்கின்றன. அவைகளாவன: தேசிய பணியாளர் கழகம் (National Personnel Agency), அரசியலமைப்புத் திட்டக் குழு (Commission on Constitution), பொருளாதாரத் திட்டக் கழகம் (Economic Planning Agency). அரசின் வரவு செலவு இனங்களில் கணக்குகளைத் தணிக்கை செய்வதற்கென தணிக்கைக் கழகம் (Board of Audit) ஒன்றும் இருக்கிறது. இது அமைச்சரவையோடு பிணைக்கப்படாதது. சுதந்திரமாக இயங்குகிறது.

அமைச்சரவையின் இரு முக்கியக் குழுக்களாவன: அமைச்சரவை பாதுகாப்புக் கழகம் (Ministerial Defence

Council), தேசிய பாதுகாப்புக் கழகம் (National Defence Council), அமைச்சரவைப் பாதுகாப்புக் கழகம்; பிரதமர், அயல் விவகார அமைச்சர், நிதியமைச்சர், வேளாண்மை அமைச்சர், பன்னாட்டு வர்த்தகத் தொழில் அமைச்சர், போக்குவரத்து அமைச்சர், பொருளாதாரத் திட்டக் கழகத்தின் இயக்குநராகப் பணியாற்றும் ராஜாங்க மந்திரி ஆகியோரைக் கொண்டது. தேசிய பாதுகாப்புக் கழகம் பிரதமர், அயல் விவகார அமைச்சர், நிதியமைச்சர், பாதுகாப்புக் கழகத்தின் இயக்குநராகப் பணியாற்றும் ராஜாங்க அமைச்சர், பொருளாதாரத் திட்டக்கழகத்தின் இயக்குநராகப் பணியாற்றும் அமைச்சர்களைக் கொண்டது. இவை இரண்டிற்கும் பிரதமரே தலைவராவார். அமைச்சரவையின் சராசரி ஆயுட்காலம் பத்து மாதங்களாகும். முற்றிலும் மாறுபட்டதென்று தோன்றினாலும் அமைச்சரவைகளைக் காட்டிலும் பிரதம மந்திரிகள் நிலையானவர்களாக இருந்திருக்கிறார்கள். பிரதம மந்திரியொருவரின் சராசரி பதவிக்காலம் 25 மாதங்களாகும். அமைச்சரவைகளின் இக்குறைவான பதவிக்காலத்திற்கு முக்கியமான காரணங்கள் கட்சிக்குள் பூசல்களும், கொள்கை பற்றிய கருத்து வேறுபாடுகளும், அமைச்சரவையில் எவரெவர் இருக்கவேண்டுமென்னும் சச்சரவுகளுமாகும். 'அங்கு எல்லா அமைச்சரவைகளிலும் இதர தகுதி வாய்ந்த தோழர்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பதற்கு ஆதரவாக அடிக்கடி கட்சிப் பூசல்களும், குமுறல்களும் இருக்கிறது. இந்த அடிப்படையில் அவ்வப்போது செய்யப்படும் அமைச்சரவை மாற்றங்கள் தன்னுடைய பிரதம மந்திரி பதவியைத் தக்க வைத்துக்கொள்வதற்கு அவர் தரவேண்டிய அரசியல் வெகுமதியாகும்' என்று கூறுகின்றனர்.[1]

**அமைச்சரவையின் பணிகள்** (Functions of the Cabinet)

1889ஆம் ஆண்டு அரசியலமைப்பின்படி நிர்வாக அதிகாரம் பேரரசருக்குத் தரப்பட்டிருந்தது. அரசு அமைச்சர்கள் அவருக்கு ஆலோசனை தந்தார்கள். பேரரசர்தான் முடிவுகள் எடுத்தார். பேரரசர் விரும்பியளித்த பணிகளை மட்டுமே அமைச்சர்கள் செய்து வந்தார்கள். 1947ஆம் ஆண்டு அரசியலமைப்பு இந்த நிர்வாக அதிகாரத்தை அமைச்சரவைக்கு (அ. விதி. 65) அளிக்கிறது. பேரரசருக்கு அரசாங்கம்

---

[1] Robert E. Ward and R. Macridis: Editors, Modern Political Systems.

சம்பந்தப்பட்ட அதிகாரமெதுவும் கிடையாது (அ. விதி 2). அரசியலமைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள அலுவல்களை பேரரசர் செய்கின்றபோது அவருக்கு அமைச்சரவையின் ஆலோசனையும் அனுமதியும் தேவை (அ. விதி. 7). தம் உசிதப்படி பேரரசர் செலுத்தக்கூடிய அதிகாரம் எதுவும் அவருக்குக் கிடையாது. இவ்வாறு அமைச்சரவை கொள்கைகளை உருவாக்கியும், தீர்மானித்தும், அமைச்சரகங்களையும் இதர ஏஜென்சிகளையும் கட்டுபடுத்தியும் ஒருங்கிணைத்தும் ஆட்சித்துறை நடவடிக்கைகளை இயக்கி வருகிறது.

கொள்கைகளை நிறைவேற்றுவதற்கு ஆதாரமாக அவசியமான சட்டங்கள் வேண்டும். நடைமுறையிலிருக்கும் சட்டக் கோப்பு அதற்குத் தேவையான ஆதாரத்தை அளிக்கவில்லையெனில் பழைய சட்டங்கள் மாற்றப்படலாம். புதிய சட்டங்கள் ஆக்கப்படலாம். நிர்வாகமும் சட்டமும் ஒன்றேடொன்று இணைந்து செல்பவையாகும். எங்கெந்தச் சட்டங்கள் திருத்தப்பட வேண்டும், என்னென்ன புதுச்சட்டங்கள் கொண்டு வரப்படவேண்டும் என்பதை அமைச்சரவைதான் தீர்மானிக்க வேண்டும். இவ்வாறு அமைச்சரவைக் கொள்கைகளை உருவாக்கும் கர்த்தாவாக இருந்து, சட்டத்துறைக்கு அதன் அலுவல்களைச் செய்வதற்கும், ஒருங்கிணைப்பதற்கும் வழிகாட்டியாகத் திகழ்கிறது. இந்த அடிப்படையில்தான் சட்டத்துறையோடு அரசாங்கத்தின் நிர்வாகப்பிரிவு இணைக்கப்பட்டிருக்கிறது.

ஆனால், நிர்வாகம் பதினன்கு அல்லது அதற்கு மேற்பட்ட அமைச்சரகங்களாக நெகிழ்ச்சியற்றதாக வகுக்கப்படமுடியாது. ஒரு மந்திராலயத்தின் நடவடிக்கை பிரிதொன்றைப் பாதிக்கிறது. இவ்வாறாக ஒவ்வொரு நடவடிக்கையும் எல்லாத்துறைகளையும் ஊடுருவிச் சென்று, ஒரே துறையில் கட்டுப்படுத்த முடியாததாக பலதுறைகளையும் தழுவிநிற்கிறது. எனவே, பல அமைச்சரகங்கள் அல்லது துறைகளின் அலுவல்களை ஒருமைப்படுத்தி செவ்வனே இயங்குமாறு அமைச்சரவை செய்து வருகிறது. இறுதியாக அரசின் முழுச்செலவிற்கும் அதைச் சரிகட்டுவதற்குத் தேவையான வருவாயைத் திரட்டவேண்டியதும் அமைச்சரவையின் பொறுப்பாகும்.

மேற்சொல்லப்பட்ட பணிகளெல்லாம் அமைச்சரவை பொதுவாக எங்கும் எப்போதும் இயல்பாகவே செய்யவேண்

டிய பணிகளாகும். ஜப்பானிய அரசியலமைப்பு அபரிமித மான எச்சரிக்கைக் காரணமாக அமைச்சரவை என்னென்ன பணிகளை மேற்கொள்ள வேண்டும் என்று கூறுகிறது. அப் பணிகளில் முக்கியமானவைகள் அரசியலமைப்பின் ஐந்தாம் பகுதியில் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. 72ஆம் விதிப் படி அமைச்சரவையின் பிரதிநிதி என்ற முறையில் பிரதமர்: (1) டையட்டிற்கு மசோதாக்களை தாக்கல் செய்கிறார். (2) பொதுவான தேசிய அயல்நாட்டு விவகாரங்கள் பற்றி டயட்டிற்குத் தெரிவிக்கிறார். (3) பல்வேறு ஆட்சித்துறைப் பிரிவுகளை மேற்பார்வை செய்வதுடன் கட்டுப்படுத்தியும் வரு கிறார். இதர ஆட்சித்துறைப் பணிகளுடன் பின்வரும் பணி களையும் அமைச்சரவை செய்யவேண்டுமென 73ஆம் விதி விதிக்கிறது.

(1) சட்டத்தை உண்மையாகப் பரிப்பாலிப்பதும், அரசு அலுவல்களை நடத்துவதும்,

(2) அயல்நாட்டு விவகாரங்களை நிர்வகிப்பதும் உடன் படிக்கைகளைச் செய்துகொள்வதும்,

(3) சட்டத்தினால் ஏற்படுத்தப்படுகிற தரங்கள் மட்டத் தில் சிவில் பணித்துறையை (Civil Service) நிர்வகித்தல்,

(4) வரவு செலவுத் (Budget) திட்டத்தைத் தயாரித்து டையட்டிற்குச் சமர்ப்பித்தல்,

(5) அரசியலமைப்புச் சட்ட ஏற்பாடுகளைச் (Provisions) செயற்படுத்தும்வகையில் அமைச்சரவை ஆணைகளை இயற்றல்,

(6) பொது மன்னிப்பு, தனி மன்னிப்பு தண்டனையைக் குறைத்தல், தண்டனை நிறைவேற்றத்தை நிறுத்தி வைத்தல், உரிமைகளை மீட்டல் ஆகியவை பற்றி முடிவு செய்தல்,

(7) எல்லாச் சட்டங்களும் அமைச்சரவை ஆணைகளும் சம்பந்தப்பட்ட அரசு அமைச்சரால் கையெழுத்திடப்பட்டு பிரதம மந்திரியாலும் கையெழுத்திடப்பட்டு (Counter signed) இருத்தல் வேண்டும் (அ. விதி. 74).

அமைச்சரவை அரசாங்கத்தின் இதர உறுப்புகள் சம்பந் தப்பட்ட பணிகளையும் செய்கிறது.

(1) அரசு அலுவல்கள் சம்பந்தப்பட்ட நடவடிக்கை களில் பேரரசருக்கு ஆலோசனை சொல்கிறது (அ. விதி. 3).

(2) உச்சநீதிமன்ற தலைமை நீதிபதியின் பெயரை அறிவிக்கிறது (அ. விதி. 6),

(3) தலைமை நீதிபதி நீங்கலாக உச்சநீதிமன்றத்தின் நீதிபதிகளையும் (அ. விதி. 79), உச்சநீதிமன்றத்தால் தயாரித் தளிக்கப்பட்ட பெயர்ப்பட்டியலிலிருந்து இதர கீழ்மட்ட (Subordinate) நீதிமன்ற நீதிபதிகளையும் நியமிக்கிறது (அ. விதி. 80),

(4) டையட்டின் விசேஷக் கூட்டம் அழைக்கப்படு வதைத் தீர்மானிக்கிறது (அ. விதி. 53),

(5) பிரதிநிதிகள் மன்றம் (House of Representatives) கலைக்கப்பட்டிருக்கும்போது கவுன்சிலர்கள் மன்றத்தை அவசரக் கூட்டத்திற்கு அழைக்கிறது (அ. விதி. 54),

(6) பிரதிநிதிகள் மன்றக் கலைப்பிற்குப் பேரரசரிடம் (அ. விதி. 7) சிபாரிசு செய்கிறது,

(7) டையட்டின் உறுப்பினர்கள் பொதுத்தேர்தலுக்குப் பிரகடனம் வெளியிட ஆலோசனை சொல்கிறது (அ. விதி. 7),

(8) டையட்டின் கூட்டத்திற்கு ஆலோசனை சொல்கிறது (அ. விதி. 7),

(9) எதிர்பாராத வரவு-செலவுத் திட்டத் துண்டுகளை ரிசர்வ் நிதியிலிருந்து சரிக்கட்டிக்கொண்டு பின்னர் டையட்டின் ஒப்புதலைப் பெறுகிறது (அ. விதி. 87),

(10) அரசின் வரவுகள், செலவுகள் பற்றிய கணக்கு களையும் தணிக்கைக் கழகத்தின் (Board of Audit) தணிக்கை அறிக்கையையும் ஆண்டுதோறும் டையட்டிற்கு சமர்ப்பிக் கிறது (அ. விதி. 90),

(11) தேசிய நிதி நிலைமைகள்பற்றி அவ்வப்போதோ அல்லது குறைந்தது ஆண்டிற்கொருமுறையேனும் மக்களுக் கும் பாராளுமன்றத்திற்கும் அறிவிக்கிறது (அ. விதி. 91).

# 6. பிரதம மந்திரி
## (Prime Minister)

**பிரதம மந்திரி நியமனம்**

இங்கிலாந்து நாட்டில் பிரதம மந்திரியார் நியமனம் பற்றிய சட்டமெதுவுமில்லாவிட்டாலும் ஜப்பானில் பிரதம மந்திரியார் நியமனம், அவரது அந்தஸ்து பற்றி அந்நாட்டு அரசியலமைப்பு வகை செய்கிறது. அரசியலமைப்பின் 6ஆம் விதிப்படி டையட்டினல் சிபாரிசு செய்யப்படுகிறமாதிரி பேரரசர் நியமிக்கவேண்டும். இது 67ஆம் விதியில் மறுமுறையும் சொல்லப்பட்டிருக்கிறது. அதன்படி டையட்டின் தீர்மானமொன்றினல் அதன் உறுப்பினர்களுள் ஒருவர் பிரதம மந்திரியாக நியமிக்கப்படவேண்டும். அதே சமயத்தில் பிரதம மந்திரியும் இதர அமைச்சர்களும் சிவிலியன்களாக இருக்க வேண்டுமென்று 66ஆம் விதி கூறுகிறது. இருப்பினும் பிரதம மந்திரி டையட்டின் கீழ்ச்சபையைச் சேர்ந்தவராகத்தான் இருக்கவேண்டுமென விதிக்கவில்லை. எனவே, பிரதம மந்திரி மேல்சபையைச் சேர்ந்தவராக இருக்கக்கூடாதென்பதற்கு அரசியல் சட்ட ரீதியாகத் தடையேதுமில்லை. என்றாலும் 1947இல் அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்ததிலிருந்து பிரதம மந்திரி கீழ்ச்சபையைச் சேர்ந்தவராக இருந்திருக்கிறார் என்பது இப்போது உறுதியாக ஏற்றுக்கொள்ளப்பட்ட வழக்காறாகியிருக்கிறது. பிரதம மந்திரி, பிரதிநிதிகள் சபையைச் சேர்ந்தவராக இருக்கவேண்டுமென்பது 67ஆம் விதிக்கான பிற்சேர்க்கை ஒன்றினல் சூசகமாகத் தெரிகிறது. அது கூறுவதாவது: பிரதிநிதிகள்சபையும், கவுன்சிலர்கள் சபையும் ஒன்றுபடாமலிருக்குமானல் அல்லது இருசபைகளின் கூட்டுக் குழுவொன்றினல் ஒன்றுபட்ட தீர்மானத்திற்கு வரமுடியாமல் போகுமானல் அல்லது பிரதிநிதிகள் சபை பிரதமர் நியமனம்

பற்றிய பரிந்துரை வெளியிட்ட பத்து நாட்களுக்குள் மேல் சபை பரிந்துரையொன்றைச் செய்யத் தவறுமானல் பிரதிநிதிகள் சபையின் தீர்மானம் டையட்டின் தீர்மானமாகும். இதனையொட்டி அமைச்சரவை பிரதிநிதிகள் சபைக்குப் பொறுப்புடையதாக இருக்கிறது. அமைச்சரவையின் முன்னணியில் பிரதமர் இருப்பதனல் எந்தச் சபைக்கு அமைச்சரவை பொறுப்புடையதாக இருக்கிறதோ அந்த சபையைச் சேர்ந்தவராக பிரதமர் இருக்கக்கூடும் என்று வாதிப்பது நியாயமாகும் எனலாம்.

பிரதமர் நியமனஞ் செய்யப்படுவதற்குப் பின்பற்றப்படும் நடைமுறை இரண்டு சபைகளிலும் ஒரேமாதிரியாகவே இருக்கிறது. தெளிவை முன்னிட்டு அம்முறை இரண்டு கட்டங்களாகப் பிரிக்கப்படலாம். முதலாவது கட்டம் வேட்பாளர்கள் (Candidates) நியமிக்கப்படுதல் பற்றியது. ஒரு கட்சி பெரும்பான்மை பலம்மிக்க கட்சியாக இருக்குமானல் அக்கட்சியின் தலைவரைப் பிரதமராக நியமிப்பதற்குத் தேவையான பெரும்பான்மை உறுப்பினர்கள் ஆஜராகி இருந்து, அவர்களில் பெரும்பான்மையினர் ஆதரிக்க வேண்டும் என்னும் விதிப்படி தேர்ந்தெடுக்கப்பட்டவர் பிரதமராக சிரமமின்றி அறிவிக்கப்படுவார். அவ்வாறில்லாமல் பல கட்சிகள் சேர்ந்த கூட்டுக்கட்சியாக இருந்தாலும் அதன் தலைவர் நியமிக்கப்படலாம். இது சாத்தியமில்லாமற்போனல் கட்சிகள் அவற்றின் வேட்பாளர்களை நிறுத்தும். வாக்கெடுப்பு கடுமையான கட்சி அடிப்படையிலிருப்பதால் எவருக்கும் தேவையான அறுதிப் பெரும்பான்மை கிடைக்காது. அச்சமயத்தில் மிக அதிகமான வாக்குகளைப்பெறும் இருவர் மீண்டும் தேர்தலுக்கு நிற்பர். அந்த இருவரில் பெரும்பான்மை வாக்குகளை எவர் பெறுகின்றரோ அவரே பிரதம மந்திரிப் பதவிக்கு நியமிக்கப்படும் வாய்ப்பைப் பெறுகின்றர். இருவருக்கும் சமமான வாக்குகள் கிடைக்குமானல் திருவுளச்சீட்டு (Lot) குலுக்கப்பட்டு இருவரில் ஒருவர் நியமனம் பெறுவார். இவ்வாருக முதல் கட்டம் முடிவு பெறுகிறது. பிறகு, முறைப்படியான தீர்மானமொன்று தாக்கல் செய்யப்பட்டு வாக்களிக்கப்படுகிறது. இருமன்றங்களுக்குமிடையே கருத்து வேறுபாடு இருக்குமானல் அவ்வேறுபாட்டைத் தீர்க்கக்கூட்டுக்குழு நியமிக்கப்படுகிறது. கூட்டுக்குழுவினலும் வேறுபாடு அகற்றப்பட முடியாமல் தொடரும்பொழுது பிரதிநிதிகள் மன்றத்தீர்மானம் டையட்டின் தீர்மானமாகக் கருதப்படுகிறது. இது 1948ஆம் ஆண்டில் ஆஷிடா (Ashida) ஜோஷிடாவை வெற்றிகண்ட

போது நிகழ்ந்தது. டையட்டினால் அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்பட்ட ஒருவர் பேரரசரால் நியமிக்கப்படும்போது பிரதம மந்திரியாகிறார். பேரரசரால் நியமிக்கப்படுவதென்பது சம்பிரதாயப் பூர்வமான நிகழ்ச்சி. பேரரசர் சட்டபூர்வமாக யாருடைய நியமனத்தையும் நிராகரிக்க முடியாது.

**பிரதம மந்திரியின் அதிகாரங்கள்**

பிரதமமந்திரியின் அதிகாரங்கள் அரசியலமைப்பின் அடிப் படையிலெழும் அவரது தன்மையினாலும் ஆட்சித்துறைத் தலைவர் என்ற முறையினாலும் கிடைப்பதாகும். அரசிய லமைப்பின் 66ஆம் விதி அமைச்சரவையின் தலைவர் பிரதம மந்திரி என்று அறிவிக்கிறது. அவர் மந்திரிகளை நியமனம் செய்வதோடு அவர்களைத் தன் விருப்பம் இருக்கும்வரை பதவியில் நீடிப்பதற்கான, சர்ச்சைக்கிடமில்லாத உரிமையை யும் பெற்றிருக்கிறாரென 68ஆம் விதி உரைக்கிறது. அவர் டையட்டிற்கு மசோதாக்களை தாக்கல் செய்வதிலும், பொது தேசிய விவகாரங்களை அறிவிப்பதிலும் பல்வகை ஆட்சித் துறைப் பிரிவுகளைக் கட்டுப்படுத்தி மேற்பார்வை செய்வதிலும் அமைச்சரவையின் பிரதிநிதியாகத் திகழ்கிறார் (அ. விதி. 72). எல்லா சட்டங்களும், அமைச்சரவை ஆணைகளும், சம்பந்தப் பட்ட மந்திரிகளால் கையெழுத்திடப்படுவதோடு பிரதம மந்திரியாலும் மறு ஒப்பமிடப்படுகிறது (Counter signed) (அ. விதி. 74). பிரதம மந்திரி அமைச்சரவைக் கூட்டங்களுக்கு தலைமை தாங்குவதோடு, அமைச்சர்களுக்கிடையே அதிகார எல்லைபற்றிய சர்ச்சைகள் ஏற்படுங்கால் அவைகளைப்பற்றி முடிவும் செய்கிறார். அமைச்சரவை நடவடிக்கையெடுக்கும் முன்பாக அதிகாரபூர்வமானதொரு நடவடிக்கையையோ அல்லது ஆட்சித்துறை அலுவலகமொன்றின் ஆணையையோ தற்காலிகமாக நிறுத்திவைக்க அவருக்கு அதிகாரமுண்டு,

பிரதம மந்திரியற்ற நிலையில் மந்திரிகள் சட்டத்தின்முன் அநாமதேயங்கள் ஆவர். பிரதம மந்திரி பதவி காலியாகும் போது முழு அமைச்சரவையும் பதவி துறக்க வேண்டுமென 70ஆம் விதி அறிவிக்கிறது. டையட்டிற்கான தேர்தல்கள், தேதி நிர்ணயம், டையட்டைக் கூட்டுதல், பன்னாட்டு ஒப்பந் தங்களைச் செய்துகொள்ளல், உறுதிப்படுத்தல் ஆகியவெல் லாம் பிரதமரின் தனி அதிகாரங்களாகும். இத்தகைய மிகப் பெரிய அதிகாரங்களைப் பெற்றிருக்கும் பிரதம மந்திரி இங்கிலாந்துநாட்டு பிரதம மந்திரிக்கு எள்ளளவும் அந்தஸ்தில் குறைந்தவரல்லர். மெய்ஜி அரசியலமைப்பின்படி பிரதம

மந்திரி சம தகுதியுடையவர்களில் முதல்வர் என்ற நிலைமை தான் இருந்தது. 1889ஆம் ஆண்டு அரசியலமைப்பின்படி, அவரது நியமனம் பேரரசரின் விசேஷச் சலுகையாகும். சிவில், இராணுவ அலுவலர்களும், மந்திரிகளும் பேரரசரால் நியமிக்கப்பட்டார்கள்; பதவிநீக்கம் செய்யப்பட்டார்கள்.

இப்போது பிரதம மந்திரி டையட்டின் உறுப்பினரும் பெரும்பான்மைக் கட்சியின் தலைவரும் ஆவார். அமைச்சரவை டையட்டிற்கு பொறுப்புடையதென்னும் நிலையிருந்தாலும், அவருக்கு அமைச்சர்களை நியமிக்கவும் தன் நம்பிக்கைக்குகந்தவர்களாக இருக்கும்வரை பதவியில் வைத்துக்கொள்ளவும் அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. மந்திரிகள் நியமனத்தில் தான் விரும்புமாறு ஒரு குழுவை, அரசாங்கத்தின் நிலையான தன்மை, ஒற்றுமை கருதி தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உரிமை அவருக்கு இருக்கிறது. குறிப்பிட்ட சில அரசியல் காரணங்கள், சந்தர்ப்பங்கள் காரணமாக அவருடைய தேர்வு செய்யப்பட்டிருந்தாலும், இறுதி முடிவு அவரையே சாரும். அவருடைய முடிவு, விருப்பம், தேர்வுகளைத்தான் பேரரசர் ஏற்கவேண்டும். இத்துறையில் பேரரசரின் பணி சம்பிரதாயமானதேயாகும்.

இவ்வாறு தன் கூட்டாளியைப் பதவி துறக்குமாறு கேட்பதும் அவர் மறுத்தால் பதவியிலிருந்து நீக்குவதுமான பிரதம மந்திரியின் அரசியல் சாசன சம்மதமான இந்த அதிகாரம் மிகச் சிறப்பானதாகும். சான்ருக, கடயாமா (Katayama), யோஷிடா (Yoshida) என்ற பிரதமர்கள் இத்தகைய தங்கள் அதிகாரத்தைச் செலுத்தியதைக் கூறலாம். பிரதமர் தம் அமைச்சரவையைத் தன் விருப்பம்போல் அவ்வப்போது மாற்றியமைக்கலாம். இது ஜப்பானில் அடிக்கடி நடைபெறுவதாகும். மிக அதிகமான எண்ணிக்கையில் மந்திரிகளை நியமித்த வகையில் சிறப்புப் பெற்றவர் யோஷிடா என்ற பிரதம மந்திரியாவர். திரு. கிஷியும், திரு. ஐகேடாவும் தலைக்கு இருமுறை தங்களுடைய மந்திரிசபைகளை மாற்றியமைத்தபோது, மாற்றியமைத்த மந்திரிசபை கிட்டத்தட்ட புதிய மந்திரிசபை போன்று இருந்ததாக தியோடர் மக்நெல்லி என்பவர் எழுதுகிருர். அரசியலமைப்பு, பிரதமருக்கு வழங்கும் வேறு இரு அதிகாரங்களுமுள்ளன. முதலாவதாக, பிரதம மந்திரி பதவி காலியாகும்போது அமைச்சரவை முழுவதுமாக ராஜிநாமா செய்ய வேண்டும். இரண்டாவதாக, பிரதம மந்திரியின் அனுமதியில்லாமல் மந்திரிகள் மீது

அவர்கள் பதவியிலிருக்குங்காலத்தில் சட்ட சம்பந்தமான நடவடிக்கைகள் (Legal action) எடுக்க முடியாது. அமைச்சரவைக்குத் தலைவர் என்ற முறையில் பிரதமர் அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமை வகித்து நடைமுறைகளை ஒழுங்குபடுத்துவதோடு அமைச்சர்களையும் தன் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வருகிறார்.

அமைச்சரவைக் கூட்டங்களில் அலுவல்கள் எவ்வாறு நடத்தப்பட வேண்டுமென்பதற்கு விதிகளோ, வழக்கங்களோ முன் உதாரணங்களோ கிடையாது. கூட்டத்திற்குக் குறைந்தது எத்தனை பேர் வந்திருக்கவேண்டுமென்பதோ முடிவுகள் பற்றி வாக்கெடுப்பதோ கிடையாது. முடிவுகள் எப்போதும் ஒருமனதான முடிவுகளாக இருக்க வேண்டும். விவாதிக்கப்படும் பொருள்கள்பற்றி தங்களுடைய கருத்துகளை உறுப்பினர்கள் எடுத்துக்கூறி அவற்றின் பலாபலன்கள், நன்மை தீமைபற்றி அலசி ஆராய்ந்து முடிவுக்கு வர முயற்சிக்கிறார்கள். பிரதமர், உறுப்பினர்களின் பெருவாரியானவர்களின் கருத்துகளை எடுத்துக்கூறி முடிவுகளை தொகுத்துரைக்கிறார். அமைச்சரவைத் தலைவர், பதவியிலிருக்கும் கட்சியின் தலைவர் என்னும் முறையில் பிரதமர் தனக்குள்ள செல்வாக்குக் காரணமாகத் தன் முடிவை மற்றவர்கள் ஏற்குமாறு செய்ய இயலுகிறது. அவசரக்காலங்களில் அவருக்கிருக்கும் செல்வாக்கு அபரிமிதமானது. தேசிய அல்லது வட்டார நெருக்கடி காலப்பிரகடனங்களை வெளியிடுவதற்கு பிரதமருக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. அவசரப் பிரகடனம் வெளியிடப்பட்டிருக்கும் பகுதிகளிலுள்ள அரசாங்க அதிகாரிகளுக்கும், ஸ்தாபனங்களுக்கும் நேரிடை உத்திரவுகளைப் பிறப்பிக்கும் அதிகாரமும் பிரதமருக்குண்டு. பிரதம மந்திரியின் குரலே பாராளுமன்றத்தில் அமைச்சரவையின் குரலாகும். இதற்கு முன்னால் பிரதமருக்குள்ளதாகச் சொல்லப்பட்ட அதிகாரங்களை இவ்விடத்தில் நினைவு கூறுங்கால் அவருடைய நிலைமை தெளிவாகும். உண்மையாகச் சொல்லுமிடத்து அரசாங்கத்தின் எஜமானர் பிரதமரே ஆவார். ஏனெனில் அரசாங்கத்தை ஆக்குவதும் அழிப்பதும் அவர்தான். ஜப்பானிய பிரதம மந்திரியின் தன்மையையும் அதிகாரத்தையும் பொருத்தமாக உணரவேண்டுமானால் இங்கிலாந்து நாட்டுப் பிரதமரைப்பற்றி திரு. ஐவர் ஜென்னிங்ஸ் என்பார் கூறியதை இங்கு நினைவு கூர்வது பொருத்தமானதாகும். அவர் கூறுவதாவது: 'அவர் உண்மையில் கிரகங்கள் பலவும் சுற்றி வரும் சூரியனுக்கு ஒப்பானவர்.'

# 7. டையட்
(Diet)

ஜப்பானிய பாராளுமன்றம் டையட் என்று அழைக்கப் படுகிறது. இது இருமன்றக் கொள்கையை (Bicameralism) அடிப்படையாகக் கொண்டது. 1890ஆம் ஆண்டிலிருந்தே பாராளுமன்றம் அங்கு செயலாற்றி வந்திருக்கிறது. எனவே, இதர ஆசியநாடுகளில் ஏற்படுவதற்கு முன்பே இங்கு பாராளு மன்றமுறை அரசாங்கம் தோன்றியது என்று குறிப்பிடுதல் பொருந்தும். இந்தப் பாராளுமன்ற அமைப்பு 1889ஆம் ஆண்டின் மெய்ஜி அரசியலமைப்பின்படி தோற்றுவிக்கப் பட்டு, இரண்டாம் உலகப் பெரும்போரில் நேசப்படையினர் ஜப்பானைக் கைப்பற்றி ஆட்சி செய்யும்வரை அதாவது 1945ஆம் ஆண்டுவரை நடைமுறையிலிருந்தது. 1947இல் இப்போதுள்ள அரசியலமைப்பு இயங்க ஆரம்பித்தபோது இவ்வமைப்பு சற்றே மாற்றியமைக்கப்பட்டது. இப்போதுள்ள பாராளுமன்ற அமைப்பைப்பற்றி விவரிக்குமுன்பாக மெய்ஜி அரசியலமைப்பின்படி பாராளுமன்றத்தைப்பற்றிய சில முக்கியமான அம்சங்களைப் பார்ப்போம்.

### 1947க்கு முன்பு பாராளுமன்றம்

1947ஆம் ஆண்டுக்கு முன்பும் பாராளுமன்றம் டையட் (Diet) என்றே அழைக்கப்பட்டது. அது பிரபுக்கள் சபை (House of Peers) என்றும், கவுன்சிலர்கள் சபை (House of the Councillors) என்றும் இருசபைகளைக் கொண்டிருந்தது. முன்னது மேல்சபை; பின்னது கீழ்சபை. மேல்சபை பழமை வாதக் கொள்கையில் பற்றுடையவர்களது புகலிடமாக இருந்ததென அறிகிறோம். இதனில் சுமார் 416 உறுப்பினர்

இருந்தனர். அவர்கள் ஆறுவகையினராகப் பிரிக்கப்பட்டிருந்தனர்.

அப்பிரிவுகளாவன: (1) பேரரசு குடும்பத்தைச் சேர்ந்த வயதுக்கு வந்தவர்கள் (2) முப்பது வயதான அரசகுமாரர்களும் பிரபுக்களும் (3) அந்தந்த பிரிவைச் சேர்ந்தவர்களால் ஏழாண்டு பதவிக்காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கவுண்டுகள் (Counts), வைக்கவுண்டுகள் (Viscounts), பேரன்கள் (Barons) (4) நாட்டுப்பணிக்காகவும், கல்வி ஞானத்திற்காகவும் ஆயுட்காலத்திற்கு பேரரசரால் நியமிக்கப்பட்டவர்கள் (5) மிக அதிக அளவில் நேரிடை தேசிய நில, தொழில் வர்த்தகவரி செலுத்தியவர்களால் அவர்களுக்குள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். இந்தக் காரணத்தால் பிரபுக்கள் சபை 'அதனுடைய வேஷம் கலைந்த பிறகு பழமைவாதிகள் நிரம்பியதாகவும், கீழ்ச்சபைக்குச் சமமான அதிகாரமுடையதாக இருந்ததால் மக்கள் ஆதரவுபெற்ற அரசாங்கமொன்று ஏற்படுவதை பல ஆண்டுக்காலத்திற்குத் தடை செய்வதாகவும்' இருந்தது என்று ஜார்ஜ்காகின் என்பார் அவரது 'ஆசிய அரசாங்கங்கள்' என்ற புத்தகத்தில் எழுதுகிறார் (பக்கம் 189). ஜப்பானில் பிரபுக்கள் சபையின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதற்கு இங்கிலாந்தைப்போல வழியெதுவும் இல்லாதிருந்தது. கீழ்ச்சபை அதாவது கவுன்சிலர்கள் சபை, அதிக வரி செலுத்திய குறுகிய வாக்காளர் தொகுதியால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைக் கொண்டு அமைக்கப்பட்டது. இதனில் ஆரம்பத்தில் 300 உறுப்பினர் இருந்தனர். 1925க்குப் பிறகு இது 466 ஆக உயர்ந்தது. இதற்கு முக்கியக் காரணம் எல்லோருக்கும் வாக்குரிமை என்ற அடிப்படையில் 25 வயதான எல்லா ஆண்களுக்கும் வாக்குரிமை என்பதாகும். இதன் பதவிக்காலம் நான்காண்டுகளாக இருந்தது. எனினும் இச்சபைக்கு குறிப்பாக நிதி விவகாரங்களில் அதிக அதிகாரங்கள் இல்லாதிருந்தது.

இந்த இருமன்ற பாராளுமன்ற அமைப்பு முறையை மாற்றி ஓரே மன்ற அமைப்பாக ஏற்படுத்த ஆக்கிரமிப்புப் படை அதிகாரிகளால் முக்கியமாக ஜெனரல் மக்கார்தரால் முயற்சி செய்யப்பட்டது. எனினும் ஜப்பானிய மக்களிடையே மிகப்பரவலான எதிர்ப்பு இருந்தபடியால் இந்த முயற்சி கைவிடப்பட்டு, இரு மன்றமுறை ஏற்றுக்கொள்ளப்பட்டது. இருப்பினும் மேல்சபை அமைப்பில் அதுகாறும் குழுக்கள் அல்லது பிரிவுகளுக்கு மட்டும் பிரதிநிதித்துவம் என்று இருந்த

முறை கைவிடப்பட்டு எல்லோருக்கும் பிரதிநிதித்துவம் என்ற முறையில் அமைக்கப்பட்டது.

### டையட்டின் அதிகாரங்கள்

கொள்கையளவில் அவசரச்சட்டங்கள் உடன்படிக்கைகள் தவிர, எல்லா சட்டங்களும் டையட்டின் சம்மதத்தின் பேரிலேயே இயற்றப்பட்டன. மசோதாக்கள் டையட்டின் எந்தச் சபையில் வேண்டுமானாலும் அரசாங்கத்தினால் துவக்கி வைக்கப்படலாம். ஆனால், அரசியல் அமைப்பு சம்பந்தப்பட்ட மசோதாக்கள் பேரரசரால் மட்டுமே தாக்கல் செய்யப் பட்டன. டையட்டினால் நிறைவேற்றப்பட்ட எல்லாச் சட்டங் களும் அரசாங்கத்தினால் கொண்டுவரப்பட்டவைகளேயாம். டையட்டின் அதிகாரங்கள் போதுமான அளவுக்கு இல்லா விட்டாலும் அது அமைச்சரவையை முடிந்த அளவுக்கு அவ்வப் போது கட்டுக்குள் வைக்க முயன்றது. 'போருக்கு முன்னால் இருந்த சாம்ராஜ்ய டையட் (Imperial Diet) ஆலோசனை வழங்கும் சபையாகவே இருந்தது. நிர்வாகத்தைப் பரவலாக கட்டுப்படுத்த முயன்றது எனினும் அதனில் அதற்கு அவ்வள வாக வெற்றி கிட்டவில்லை. பொதுக் கருத்தை அறிவதற்கு உதவும் கருவியாகப் பணியாற்றியதுதான் அதனுடைய பணி களுள் முக்கியமானதாகும்.'

### 1947ஆம் ஆண்டு அரசியலமைப்புப்படியான டையட்

அரசியலமைப்பின் 41ஆம் விதி டையட் அல்லது பாராளு மன்றம்தான் அரசு அதிகாரத்தின் இறுதி உறுப்பாகவும், அரசிற்கான சட்டங்களை இயற்றும் ஓரே நிறுவனமாகவும் இருக்கிறது என்று கூறுகிறது. அது, இருமன்றங்களை அதாவது கீழ்ச்சபை என்றழைக்கப்படும் பிரதிநிதிகள் சபை யையும், மேல்சபையான கவுன்சிலர்கள் சபையையும் உடைய தாக அமைக்கப்பட்டிருக்கிறதென உரைக்கிறது. இந்த டையட் மெய்ஜி அரசியலமைப்பின்கீழ் ஏற்படுத்தப்பட்ட டையட்டைக் காட்டிலும் பலவகைகளிலும் சக்தியும், அதிகார மும் மிக்கதாக இருக்கிறது என்பது அதன் உறுப்பினர்கள் அனைவரும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்பதாலும், மக்க ளுக்குப் பிரதிநிதித்துவம் வகிப்பவர்கள் என்பதாலும் தெரிய வரும். இப்போதுள்ள அரசியலமைப்பு இறைமையை மக்களுக்கு அளிக்கிறது. அம்மக்கள் இறைமையை அவர் களுடைய எண்ணத்தின் சின்னமான டையட்டிற்கு அளிக் கிறார்கள். 'இவ்வாறு அரசாங்கம் பேரரசர் ஆதிக்கத்தி

விருந்து விடுவிக்கப்பட்டு பாராளுமன்றத்தை மையமாகக் கொண்டதாக மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது' என்று கூறு கிறார்கள்.[1] மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்தப் பிரதிநிதி கள் அமைச்சரவையால் உருவாக்கப்படும் தேசிய கொள்கை களை விவாதித்து ஏற்றுக்கொண்டு, அவைகள் நடைமுறையில் பின்பற்றப்படுவதற்குத் தேவையான சட்டங்களை இயற்றித் தருகிறார்கள்.

மக்கள் எண்ணத்தை டையட் பிரதிபலிக்கிறதென்றாலும் அவ்வெண்ணத்தை உருவாக்குவதாகவும், அதற்கு வழிக்காட்டு வதாகவும் இருக்கிறது. இங்குதான் பிரதிநிதிகள் தங்களுடைய குறைகளை எடுத்துக்கூறி அதற்குப் பரிகாரம் தேடுகிறார்கள். எதிர்த்தரப்புக் கட்சிகள் அரசாங்கத்தின் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் குறைகூறும்போது, ஆளுங்கட்சியைச் சேர்ந்தவர்கள் மக்களுக்கு நன்றாகப்புரியும்வண்ணம் கொள்கை களையும், பிரச்சினைகளையும் விளக்கிக்கூறுகிறார்கள். அரசாங்கம் விளம்பரத்தினால் செயலாற்றும் அரசாங்கமாக (Government by Publicity) இருப்பதால் தினமும் அவ்வப்போதும் பொது மக்கள் மதிப்பீட்டிற்கு ஆளாக்கப்பட்டிருக்கிறதெனச் சொல் லப்படுகிறது. இத்தன்மை பொதுவாக இதர நாடுகளில் காணப்படாதவொரு புதுமை எனலாம். அதாவது, டையட் ஒரு தேசிய நிறுவனம். அது பலவகைப்பட்ட விஷயங்களையும் விவாதிக்கிறது. மக்கள் எத்தகைய அரசியலையும் கொள்கை களையும் தங்களுடையதாகக் கொள்ளலாம் என்பதற்கான ஞானம் ஏற்படப் போதுமானவகையில் உதவுகிறது. டையட்டின் அதிகாரங்கள் அரசாங்கத்தின் பல்வேறு நடவடிக்கைகளைத் தழுவியதாக இருப்பதால் அதனுடைய ஆதிக்கம் எல்லாவற்றையும் ஊடுருவிச் செல்வதாக இருக் கிறது. அது தேசிய பொருளாதாரத்தையும், நிதியையும் கட்டுப்பாடு செய்கிறது. பிரதம மந்திரியை நியமிக்கிறது. அரசாங்கம் டையட்டின் கண்காணிப்பிலிருக்கிறது. அரசிய லமைப்பின் 62ஆம் விதி விசாரணை செய்யும் அதிகாரத்தை அதற்குத் தருகிறது. இவ்வதிகாரம் இம்பீரியல் டையட் டிற்குக் கிடையாதென்பது இங்கு அறியத்தக்கதாகும்.

இருசபைகளினுடைய உறுப்பினர்கள் எண்ணிக்கை இப்போது சட்டத்தினால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அவர் களுக்கு இருக்கவேண்டிய தகுதிகளையும் சட்டமே நிர்ணயிக்

---

[1] Ward and Macridis, Editors: Modern political Systems, Asia, Page 92.

கிறது. அத்தகுதிகளையும் இதர விஷயங்களையும் பிறிதோரிடத்தில் விவரிப்போம்.

**உறுப்பினர்களின் சலுகைகளும் ஊதியமும்:** டையட் உறுப்பினர் ஒவ்வொருவரும் மாதமொன்றிற்குச் சம்பளமாக 78,000 யென் (Yen) அதாவது ரூபாய் 1000 பெறுகின்றனர். இது தவிர அவர்களுக்கு டையட், தொடரில் இருக்கும்போது நாளொன்றிற்கு 1000 யென்கள்; கடிதத் தொடர்பிற்காக மாதமொன்றிற்கு 10,000 யென்கள்; தனிப்பட்ட முறையில் செயலாளர், அலுவலகம் முதலியன வைத்துக்கொள்வதற்கு 20,000 யென்கள் என்று இதரப்படிகளும் தரப்படுகின்றன. மேலும், அவர்களுக்கு இலவச ரயில் பாஸ்களும் தரப்படுகின்றன. பதவியிலிருந்து ஓய்வுபெற்ற உறுப்பினர்களுக்கு ஓய்வூதியம் தருவதற்கும் வகைசெய்யப்பட்டிருக்கிறது. உறுப்பினர்களுக்குப் பேச்சு சுதந்திரம் தரப்பட்டிருப்பதால் டையட்டில் அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவுகள் அடிப்படையில் அவர்கள் மேல் எந்த சட்ட நடவடிக்கைகளும் எடுக்க முடியாது. குற்றவியல் சம்பந்தப்பட்ட வழக்குகள் தவிர இதர குற்றங்களுக்காக டையட் கூட்டம் நடைபெறும்போது உறுப்பினர்கள் கைது செய்யப்படக்கூடாது. கூட்டத்தொடர் ஆரம்பிப்பதற்கு முன்பாக உறுப்பினர் எவரேனும் கைது செய்யப்படுவாராஞல் பாராளுமன்றம் கோருமாஞல் கூட்டம் நடைபெறும் காலம் வரையிலும் அவ்வுறுப்பினர் விடுதலை செய்யப்படலாம். சபையில் அவர்களுடைய நடத்தைக்காக உறுப்பினர்கள்மேல் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படலாம்.

**டையட்டின் நிறுவன அமைப்பு**

**டையட் கூட்டப்படலும் திறப்பு விழாவும்:** பேரரசு குறிப்பொன்றின் மூலமாக டையட்டின் கூட்டத்தொடருக்கான தேதி அறிவிக்கப்படுகிறது. சாதாரண கூட்ட அழைப்பிற்கான குறிப்பு குறைந்தது 20 நாட்கள் முன்பாகப் பிறப்பிக்கப்படவேண்டும். ஆஞல், அசாதாரண அல்லது தனிக் கூட்டத்தொடருக்கான அழைப்பிற்கு இந்நிபந்தனை கிடையாது. சாதாரணக்கூட்டம் பொதுவாக ஒவ்வோர் ஆண்டும் டிசம்பர் மாதத்தில் அழைக்கப்பட்டு, சுமார் 150 நாட்களுக்கு நடக்கிறது. டையட்டின் தனிதொடரொன்று, உறுப்பினர்களின் பதவிக்காலம் எந்தத் தேதியிலிருந்து ஆரம்பமாக வேண்டுமோ அந்தத் தேதியிலிருந்து முப்பது நாட்களுக்குள்ளாகவும்

அழைக்கப்படலாம். இது தவிர எந்தச் சபையானாலும் அந்தச்சபையின் குறைந்தது நான்கில் ஒரு பங்கு உறுப்பினர்கள் எழுத்து மூலமாக சபையின் சிறப்புக்கூட்டமொன்று அழைக்கப்படவேண்டுமென்று அச்சபையின் தலைவர் மூலமாக அமைச்சரவைக்கு வேண்டுகோள் விடுப்பார்களானாலும் சபை கூட்டப்படவேண்டும். இத்தகைய வேண்டுகோளை அரசாங்கம் புறக்கணிக்க முடியாது. அடுத்த சாதாரணக் கூட்டம் தொடங்கும்வரை சில அவசர விஷயங்களின் பரிசீலனையை ஒத்திவைக்க முடியாதென்று அவசியப்படும் போதெல்லாம் அரசாங்கமும் டையட்டின் அவசரக் கூட்டமொன்றை அழைக்கலாம். கவுன்சிலர்கள் சபையின் சிறப்புக்கூட்டத்திற்கு எப்போது கூட்டம் தொடங்கவேண்டுமென்னும் தேதியடங்கிய வேண்டுகோளை பிரதம மந்திரி அச்சபைத்தலைவருக்கு அனுப்புவார். அதன் பேரில் தலைவர் கூட்டத்திற்கான அறிக்கையை வெளியிடுவார். அவ்வறிக்கையின்படி குறித்த தேதியில் கூட்டம் ஆரம்பமாகும்.

**பேரரசு குறிப்பில்** (Imperial rescript) கொடுக்கப்பட்டுள்ள தேதிப்படி அவரவர்களுடைய சபைகளில் இரு சபை உறுப்பினர்களும் கூடுவார்கள். தலைவர், உப தலைவர் பதவிகள் காலியாக இருக்குமானால் முதல் நாளன்றே ஒவ்வொரு சபையும் அப்பதவிகளுக்குத் தேர்தலை நடத்தும். தேர்தல் முடியும் வரை பொதுச்செயலர் (Secretary General) சபைக் கூட்டத்திற்குத் தலைமை வகிப்பார். டையட்டின் ஒவ்வொரு கூட்டத்தொடர் ஆரம்பமாகும்போது தொடர், முறைப்படியாகத் துவக்கி வைக்கப்படும். அத்துவக்கக் கூட்டத்திற்கு கீழ்ச்சபையின் தலைவரும் (சபாநாயகர்), அவர் வராதிருந்தால் மேல்சபையின் தலைவரும் தலைமை வகிப்பார். போர்க்காலத்திற்கு முன்பெல்லாம் இத்துவக்க விழா ஆடம்பரத்தோடும், கோலாகலத்தோடும் நடத்தப்பட்டது. ஆனால், இப்போது ஜனநாயக மரபையொட்டியே விழா நடைபெறுகிறது. அச்சமயத்தில் நேரில் பேரரசர் வந்திருந்து தன்னுடைய செய்தியை வாசிப்பார்.

**டையட்டின் தலைவர்கள்**

ஒவ்வொரு சபைக்கும் தலைவரொருவர் இருப்பார். தலைவர் கூட்ட நடவடிக்கைகளை நடத்தி அமைதி ஒழுங்கைப் பராமரிப்பார். கூட்ட அலுவல்கள் எவ்வாறு எப்போது நடைபெற வேண்டுமென்பதையெல்லாம் தலைவர் தீர்மானிப்பார். கீழே தரப்படும் அவருடைய கடமைகளிலிருந்து

அவருடைய முக்கியமான அதிகாரங்கள் அறியப்படும். அவை களாவன :

(1) சபை அலுவல்களின் வரிசை ஒழுங்கை தீர்மானித்தல் (2) சம்பந்தப்பட்ட குழுக்களுக்கு (Committees) மசோதாக்களை அனுப்புதல் (3) வினுக்கள், விவாதங்களுக்கு ஒதுக்கப்படும் நேரத்தை நிர்ணயித்தல் (4) டையட்டில் அமைச்சரவை அமைச்சர்களுக்கு உதவி செய்யும் அரசாங்க உறுப்பினர்களின் நியமனத்தை ஆமோதித்தல் (5) தன் கருத்தைத் தெரிவிப்பதற்காக எந்தவொரு குழு முன்னும் தோன்றுதல் (6) டையட் தொடரில் இல்லாமல் இருக்கும்போது டையட் உறுப்பினரின் ராஜிஞமாவை ஏற்றுக்கொள்ளுதல். உறுப்பினர்கள் இடையிடையே குறுக்கிட்டு கேள்விகள் கேட்க விரும்பிஞல் அவைகளை அனுமதிப்பதோ அல்லது மறுப்பதோ அவருடைய அதிகாரமாகும். சபை சம்பந்தப்பட்ட அலுவல்கள் நடத்தப்படும் முறைகளை மேற்பார்வை செய்வதும், அவசியமாகும்போது சபையின் பிரதிநிதியாகத் தோன்றுவதும் சபாநாயகரே.

இங்கிலாந்து நாட்டு மக்கள் சபையின் சபாநாயகரோடு இணைத்து சொல்லப்படும் மரபுகள் ஜப்பானில் பின்பற்றப் படவில்லை. ஒருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டதும் பொது மக்கள் சபை சபாநாயகர் ஆரம்பத்தில் எந்த நாற்காலியில் அமர்ந்தாரோ அதே நாற்காலியில் கடைசிவரை அமருவதும் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் கட்சி அரசியலுக்கு முழுக்குப் போட்டு விடுவதும் இங்கிலாந்தில் வழக்கமாகும். இவைகள் அவருடைய கடமைகளைப் பூரண நடுநிலைமையோடும், பட்சபாதமற்ற முறையிலும் நிறைவேற்றவேண்டுமெனும் உணர்வால் தோன்றும் எதிரொலிகளாகும். ஜப்பானில் பிரதிநிதிகள் சபையின் தலைவர் அப்பதவிக்கு தேர்ந்தெடுக்கப் பட்டவுடன் கட்சியிலிருந்து ராஜிஞமா செய்யவேண்டிய தில்லை. அவர் பெரும்பான்மை பலம்கொண்ட கட்சியின் உறுப்பினராகத் தொடர்ந்து இருந்து வருகிருர். பிரதிநிதிகள் சபையின் சபாநாயகரது பணி அமெரிக்கப் பிரதிநிதிகள் சபையின் தலைவருடைய பணிகளைப் போன்றுள்ளது. நாட்டின் மிகவுயர்ந்த சட்டமியற்றும் மன்றத்தின் தலைவர் நடு நாயகமாக இருக்கவேண்டுமென்பது விரும்பப்படுவ தெனினும் கட்சியின் நலன்களைக் காப்பதும், அரசாங்கத்தின் சட்டமியற்றுவதற்கான நிகழ்ச்சி நிரலுக்கு உதவியாக இருப்பதும் அவரது முக்கிய அலுவலாகக் கருதப்படுகிறது.

இனி, இந்த இரு சபைகள் சம்பந்தப்பட்ட வேறு சில அம்சங்களைத் தனித்தனியாக சற்று விரிவாகக் காண்போம்.

**கவுன்சிலர்கள் மன்றம்** (House of the Councillors)

பிரபுக்கள் சபைக்குப் (House of Peers) பதிலாக அதன் இடத்தைப் பெறும் கவுன்சிலர்கள் சபையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை 250 ஆகும். அரசியலமைப்பு கவுன்சிலர்களின் எண்ணிக்கையை வரையறை செய்யவில்லை. அரசியலமைப்பின் 43ஆம் விதி கூறுவதாவது: 'ஒவ்வொரு சபையினுடைய உறுப்பினர்களின் எண்ணிக்கை சட்டத்தினால் நிர்ணயிக்கப்படும்' என்பதேயாகும். என்வே, 250 என்ற இம்மன்றத்தின் உறுப்பினர் தொகை சட்டமொன்றினால் நிர்ணயிக்கப்பட்டது. அவர்களில் 150 பேர்கள் பூகோள அடிப்படையில் பிரதேச வாரியாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அதாவது ஜப்பான் நாற்பத்தாறு தேர்தல் தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இப்பிரிவுகள் ப்ரிபெக்சர்கள் (Prefectures) என்று அழைக்கப்படுகின்றன. இவைகளிலிருந்து அந்த 150 பேரும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பாக்கியுள்ள 100 பேரும் நாடு முழுவதும் ஒரே தொகுதியெனும் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். முன்னதாகச் சொல்லப்பட்டவைகள் பிராந்தியத் தொகுதிகளென்றும், பின்னதாகச் சொல்லப்பட்டது தேசியத்தொகுதியென்றும் அழைக்கப்படுகின்றன. ஒவ்வொரு ப்ரிபெக்சருக்குமுள்ள இடங்களின் எண்ணிக்கை மக்கள் தொகையை அடிப்படையாகக் கொண்டது. இதன்படி ஒவ்வொன்றின் எண்ணிக்கையும் இரண்டு முதல் எட்டு வரையிலும் மாறுபடுகிறது. ஒவ்வொரு வாக்காளரும் தேசியத் தொகுதிக்கென்று ஒன்றும் பிராந்தியத் தொகுதிக்கென்று ஒன்றும் ஆக இரண்டு வாக்குகளை அளிக்கின்றனர்.

கவுன்சிலர்கள் மன்ற உறுப்பினர்கள் ஆறுண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அவர்களில் பாதி பேர்கள் அரசியலமைப்பின் 46ஆம் விதிப்படி மூன்றுண்டுக்கொரு முறை தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மன்றம் கலைக்கப்படுவது கிடையாது. பதவிக்காலம் பரவலாகப்பட்டிருப்பதால் மூன்றுண்டுக்கால கெடு முடிந்ததும் பிராந்தியத் தொகுதிகளிலிருந்து (Prefectural Constituencies) 75 உறுப்பினர்களும், தேசியத்தொகுதிகளிலிருந்து 50 பேர்களும் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். போருக்குப் பிறகு அமைக்கப்பட்ட ஏழாவது

கவுன்சிலர்கள் மன்றத்திற்கு 1965ஆம் ஆண்டு ஜூலை மாதம் 4ஆம் தேதி நடைபெற்ற தேர்தலில் காலக்கெடு முடிந்ததால் காலியேற்பட்ட 125(75+50) இடங்கள் பூர்த்தி செய்யப் பட்டன. இத்தேர்தலில் அறுபது லட்சம் வாக்காளர்கள் தங்கள் வாக்குகளைச் செலுத்தினர். இருவகைப்பட்ட தொகுதிமுறை ஏற்படுத்தப்பட்டதன் காரணங்களாவன: முதலாவதாக மேல்சபை அதன் அமைப்பைப் பொருத்த மட்டில் கீழ்ச்சபையினின்றும் மாறுபட்டதாக இருக்கவேண்டு மென்பதாகும். இரண்டாவதாக, ஒரு சார்புடைய அரசியல் சச்சரவுகள், மோதல்களில் சம்பந்தமில்லாத தேசிய மட்டத் தில் செல்வாக்குடைய தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு வரவேற்பும் வாய்ப்பும் இருக்கவேண்டுமென்பதுமாகும்.

மேற்சபை கீழ்ச்சபைகளுக்கான உறுப்பினர் பதவிக்கு இருக்கவேண்டியத் தகுதிகள் சட்டத்தினால் நிர்ணயிக்கப்படு கின்றன. ஆனால், அதே சமயத்தில் இனம், சமயம், பால், சமூக அந்தஸ்து, குடும்பத் தோற்றம், கல்வி, சொத்து, வருமானம் ஆகிய அடிப்படைகளில் எத்தகைய வேறுபாடு மில்லாமல் எவரும் தேர்ந்தெடுக்கப்படும் வாய்ப்பு இருக்க வேண்டுமென்று அரசியலமைப்பு வற்புறுத்துகிறது. இதன் மூலநோக்கம் என்னவெனில் மெய்ஜி அரசியலமைப்பு அடிப் படையில் அமைக்கப்பட்ட பிரபுக்கள் சபையில் காணப்பட்ட தனிச்சலுகைகள் ஒழிக்கப்படவேண்டுமென்பதையும், ஆண் களைப்போல பெண்களுக்கும் சம உரிமைகள் உண்டென்பதை யும் வற்புறுத்த வேண்டுமென்பதுமாகும் (அ. விதி 43). கவுன்சிலராவதற்கான குறைந்த பட்சவயது முப்பதாகும். அவருக்கு வாக்காளராவதற்கு இருக்கவேண்டியத் தகுதிகள் அனைத்தும் இருக்க வேண்டும். ஆனால், எவரும் ஒரே சமயத் தில் இருமன்றங்களிலும் உறுப்பினராக இருப்பதை அரசிய லமைப்பு தடைசெய்கிறது (அ. விதி. 48). உறுப்பினர்களுக் கிருக்கவேண்டியத் தகுதிகள் பற்றி எழும் சந்தேகங்களை யெல்லாம் மன்றமே தீர்மானிக்கிறது. அதன் முடிவிற்கு எதிராக வேறு எங்கும் விண்ணப்பிக்க இயலாது (அ. விதி 55). உறுப்பினர் எவருக்காவது மன்றத்தில் இடம் கிடையாதென தீர்மானிக்கவேண்டுமாயின் அதற்கு மன்றக் கூட்டத்தில் கலந்துகொண்டு வாக்களிப்பவர்களின் கூடுதல் எண்ணிக்கையில் மூன்றிலிரு பங்கினர் ஆதரவோடு தீர்மானம் நிறைவேற்றுவது அவசியமாகும் (அ. விதி. 55).

உறுப்பினர்களுக்குப் பரிபூர்ண பேச்சுச் சுதந்திரம் வழங் கப்பட்டிருக்கிறது. மன்றத்தில் பேசிய பேச்சிற்காகவோ,

விவாதங்களுக்காகவோ, வாக்களித்ததற்காகவோ, மன்றத்திற்கு வெளியே நடவடிக்கையெதுவும் எடுக்கமுடியாது (அ. விதி. 51). சட்ட ஏற்பாடுகளுள்ள வழக்குகள் நீங்கலாக இதர வழக்குகளினால் உறுப்பினர்களுக்கு ஏற்படக்கூடிய பயத்திலின்றும் சபை தொடரிலிருக்கும்போது அவர்களுக்கு விலக்களிக்கப்பட்டிருக்கிறது. மன்றத்தொடர் ஆரம்பமாவதற்கு முன்பு கைது செய்யப்பட்ட உறுப்பினர், மன்றத்தின் கட்டளைக்கிணங்க தொடர் முடியும் வரை விடுவிக்கப்படுவார் (அ. விதி. 50). சட்டத்தினால் நிர்ணயிக்கப்பட்டவாறு உறுப்பினர்கள் ஆண்டுச் சம்பளமும், சபைத்தொடரிலிருக்குங்காலத்திற்கு தினப்படியும் (Allowance), இரயிலில் கட்டணமில்லாமல் பிரயாணம் செய்வதற்கு அனுமதிச் சீட்டுகளும் (Passes) தரப்படுகின்றன. அவை கூட்டம் நடக்கும்போது ஆவணங்களை அனுப்புவதற்காகவும் தொடர்பு வைத்துக்கொள்வதற்காகவும் ஏற்படுகின்ற செலவுத்தொகைகளும் அவர்களுக்குத் திரும்ப அளிக்கப்படுகின்றன. பதவியிலிருந்து விலகிய பிறகு ஓய்வூதியத்திற்கும் ஏற்பாடிருக்கிறது. நிலைக்குழுக்களின் (Standing Committees) தலைவர்களுக்கு அரசாங்க ஊர்திகள் தரப்படுகின்றன.

**மன்றத்தொடர்** (Session of the House)

ஆண்டிற்கொரு முறை மன்றம் பொதுவாக டிசம்பர் மாதத்தில் முறைப்படியானத் தொடரைத் தொடங்குகிறது. பேரரசர் இரு மன்றங்களின் கூட்டுக் கூட்டத்தில் உரையாற்றுகிறார். அவசியப்படும்போதெல்லாம் அமைச்சரவையினால் மன்றத்தின் சிறப்புக் கூட்டங்கள் அழைக்கப்படுகின்றன. கால் பகுதி உறுப்பினர்கள் சிறப்புக்கூட்டம் வேண்டுமெனக்கோருவார்களானால் மன்றத்தைக் கூட்ட வேண்டியது அமைச்சரவையின் கடமையாகும். பிரதிநிதிகள் மன்றம் கலைக்கப்படும்போது கவுன்சிலர்கள் மன்றமும் அதன் கூட்டத்தை முடித்துக்கொள்ளும். ஆனால், தேசிய நெருக்கடி நிலவும்போது கவுன்சிலர்கள் மன்றத்தை அமைச்சரவை கூட்டலாம் (அ. விதி. 53).

மன்றம் அதன் அலுவல்களை நடத்துவதற்கு அதன் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூன்றிலொரு பங்கு உறுப்பினர்கள் வருகை தந்திருக்க வேண்டும் (அ. விதி: 53). மூன்றிலிரு பங்கு உறுப்பினர்களின் இரகசியக் கூட்டத்திற்கான கோரிக்கையில்லாதபோது

மன்றத்தின் நடவடிக்கைகளை பொதுமக்கள் கவனிக்கலாம் (அ. விதி. 56). இரகசியங்கூட்டங்களின் நடவடிக்கைகள் நீங்கலாக இதரக் கூட்டங்களின் நடவடிக்கைகள் பதிவு செய்யப்பட்டு பொது மக்களுக்குக் கிடைக்குமாறு வெளியிடப் படவேண்டும். அரசியலமைப்பில் வேறு விதமாகக் குறிப் பிடப்படாமலிருக்கும் வரை மன்றத்தின் முடிவுகளெல்லாம் கூட்டத்திற்கு வந்திருப்பவர்களின் எண்ணிக்கையில் பெரும் பான்மை வாக்குகளடிப்படையில் எடுக்கப்படுகின்றன. வாக் கெடுப்பில் இரு கட்சிகளுக்கிடையில் சம ஆதரவு இருக்கு மாஞல் மன்றத்தலைவர் அந்நிலையை முடிவிற்குக்கொண்டு வரும் வகையில் அவரது வாக்கையளிப்பார் (அ. விதி. 57).

**மன்றத்தலைமை அலுவலர்** (The presiding officer)

கவுன்சிலர்கள் மன்றம் தனது தலைவரையும் துணைத் தலைவரையும் தானே தேர்ந்தெடுக்கிறது. தலைவர் அதன் கூட்டங்களுக்குத் தலைமை வகித்து நடவடிக்கைகளை ஒழுங்கு படுத்துகிறார். தலைவரில்லாதபோது துணைத்தலைவர் தலைமை வகிக்கிறார். கூட்டங்கள் நடைமுறைகள் மன்றத்திலுள் பின்பற்றப்படவேண்டிய கட்டுப்பாடு, கட்டுப்பாடற்ற நடத் தைக்காக உறும்பினர்களுக்குத் தரவேண்டிய தண்டனை ஆகியவற்றைப்பற்றிய விதிகளை மன்றமே ஏற்படுத்துகிறது. மன்றத்திலிருந்து உறுப்பினரொருவர் விலக்கி வைக்கப்பட வேண்டுமாஞல் அதற்குக் கூட்டத்தில் கலந்து கொள்ளும் உறுப்பினர்களின் கூடுதல் எண்ணிக்கையில் மூன்றிலிரு பங்கு உறுப்பினர்களால் அவ்வாறான தீர்மானமொன்று நிறை வேற்றப்படவேண்டும். சமநிலை ஏற்படுமாஞல் அவைத் தலைவர் அவரது வாக்கையளிப்பார் (அ. விதி. 58, 59).

**கவுன்சிலர்கள் மன்றத்தின் பணிகள்**
(Functions of the House of Councillors)

இம்மன்றத்தின் பணிகளென சட்டம், நிதி, ஆட்சித் துறை, நீதித்துறை, அரசியலமைப்பு, தேர்தல் சம்பந்த மானவை என சிலவற்றைக் குறிப்பிடலாம்.

முதலில் சட்ட சம்பந்தமான பணிகளைப் பார்க்கலாம். கவுன்சிலர்கள் மன்றத்திற்கும், பிரதிநிதிகள் மன்றத்திற்கும் ஒரே மாதிரியான சட்ட அலுவல்களை அரசியலமைப்பு வழங்கு கிறது. அரசியலமைப்பின் 41ஆம் விதி டையட்டுதான் உச்ச சட்டமன்றமென்றும், அஃதொன்றே சட்டமியற்றலாம்

என்றும் கூறுகிறது. 59ஆம் விதி இருமன்றங்களாலும் நிறைவேற்றப்படும் மசோதா சட்டமாகிறது என்றுரைக்கிறது. இதனால் சட்ட மசோதா எச்சபையில் வேண்டுமானாலும் முதலில் தாக்கல் செய்யப்படலாமென்பதும், அச்சபைகளால் தனித்தனியே அம்மசோதா நிறைவேற்றப்படுகிறபோது சட்டமாக அறிவிக்கப்பட்டு அங்ஙனம் பின்பற்றப்படுகிறதெனத் தெரிகிறது. இத்தகைய சிறப்பை கவுன்சிலர்கள் மன்றத்திற்கு வழங்கும் அரசியலமைப்பு, பிரதிநிதிகள் மன்றத்தின் மேம்பட்ட சிறப்பை நிலைநாட்டவும் செய்கிறது. எவ்வாறெனில் கவுன்சிலர்கள் மன்றம், பிரதிநிதிகள் மன்றம் இயற்றும் தீர்மானத்திற்கு மாறுபட்ட தீர்மானமொன்றை நிறைவேற்றுங்கால் இரு மன்றங்களுக்கிடையிலான அவ்வேறுபாட்டை இரு மன்றங்களின் கூட்டுக்குழு (Joint Committee of the two Houses) அகற்ற முடியாமல் போகுமானால் இரண்டாந் தடவையாக கூட்டத்தில் கலந்து கொள்ளும் உறுப்பினர்களின் தொகையில் மூன்றிலிரு பங்கு உறுப்பினர்களது ஆதரவுடன் பிரதிநிதிகள் மன்றம் அதன் முந்தைய தீர்மானத்தை மீண்டும் நிறைவேற்றுமானால் அத்தீர்மானம் டையட்டினால் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்பட்டு சட்டமாகிறது. மேலும் கவுன்சிலர்கள் மன்றத்திற்கு அனுப்பப்படும் மசோதா மீது அம்மன்றம் மசோதா கிடைத்த பிறகு 60 நாட்களுக்குள் இறுதி நடவடிக்கை எடுத்துக்கொள்ளத் தவறுமானால் அம்மசோதா அச்சபையால் நிராகரிக்கப்பட்டதாகக் கருதி, பிரதிநிதிகள் மன்றம் இறுதி முடிவை மேற்கொள்ளலாம் என்றும் அரசியலமைப்பு கூறுகிறது (அ. விதி. 60).

**நிதி சம்பந்தமான பணிகள்** (Financial Functions)

மக்களாட்சித் தத்துவங்களுக்கும் பாராளுமன்ற முறை அரசாங்கப் பழக்கத்திற்கும் பொருந்தும்வகையில் நிதி மசோதாக்கள் கவுன்சிலர்கள் மன்றத்தில் துவங்குவதில்லை. நிதி மசோதாக்கள் பிரதிநிதிகள் மன்றத்தில்தான் முதலில் தாக்கல் செய்யப்படவேண்டுமென்றும், அவை அங்கு நிறைவேற்றப்பட்ட பிறகு மேல் சபைக்கு அனுப்பப்பட வேண்டும் என்றும் அரசியலமைப்பு கூறுகிறது. மேல்சபை கீழ்ச்சபையின் தீர்மானத்திற்கு மாறான தீர்மானத்தை மேற்கொள்ளுங்கால் அம்மாறுபாடு இரு சபைகளின் கூட்டுக்குழுவால் அகற்ற முடியாமல் போகும்போதோ அல்லது அனுப்பப்பட்ட 30 நாட்களுக்குள் மேல்சபை நிதி வரவு-செலவுத்திட்டத்தை

ஏற்கத்தவறினலோ கீழ்ச்சபையின் தீர்மானம் டையட்டின் தீர்மானமாகக் கருதப்படும் (அ. விதி. 60). எனவே, வரவு-செலவுத்திட்டம் சம்பந்தப்பட்ட விவகாரங்களில் கவுன்சிலர்கள் மன்றத்தின் பணி குறிப்பிடத்தக்கதாக இல்லை.

அரசின் வரவு-செலவுக் கணக்குகள் ஆண்டுதோறும் தணிக்கைக் கழகத்தால் (Board of Audit) சரிபார்க்கப்பட்டு அமைச்சரவைக்கு அனுப்பப்படுகிறது. அவ்வறிக்கையை அமைச்சரவை பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கும் சமர்ப்பிக்கிறது. பிரதிநிதிகள் மன்றத்தைப்போல கவுன்சிலர்கள் மன்றத்தாலும் அவ்வறிக்கை ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என அரசியலமைப்பின் 90ஆம் விதி கூறுகிறது.

**ஆட்சித்துறைப் பணிகள்** (Administrative Functions)

அமைச்சரவை டையட்டினல் ஆக்கப்பட்டதாகும். அதன் தலைவர் பிரதமராவார். அமைச்சர்கள் அனைவரும் சிவிலியன்களாக இருக்கவேண்டும். அவர்களில் பெரும்பாலோர் பிரதமரையும் சேர்த்து டையட்டின் உறுப்பினர்களாக இருக்க வேண்டும். பிரதமரும் அவருடைய சகாக்களில் பெரும்பாலானவர்களும் பிரதிநிதிகள் மன்றத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கவேண்டுமென்பது வழக்காறுகிவிட்டது. மூன்று அல்லது நான்கிற்கு மேற்படாதவர்கள் கவுன்சிலர்கள் மன்றத்திலிருந்து நியமிக்கப்படுகிறார்கள். ஆனல், பிரதமர் டையட்டின் இருமன்றங்களாலும் நியமிக்கப்படுகிறார். பிரதமர் இருமன்றங்களாலும் தேர்ந்தெடுக்கப்படும் முறை பிறிதோரிடத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

கவுன்சிலர்கள் மன்றம் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த இயலாது. அதுபோல அரசாங்கத்திற்குப் பாதகமான வாக்கெடுப்பொன்றினல் நெருக்கடியொன்றையும் ஏற்படுத்த முடியாது. 66ஆம் விதிப்படி அமைச்சரவை டையட்டிற்கு கூட்டுப்பொறுப்புடையதாகிறது. ஆனல், இவ்விதியை 69ஆம் விதியோடு சேர்த்துப்பார்க்கும்போது பிரதிநிதிகள் மன்றத்திற்குத்தான் பொறுப்புடையதென்பது தெளிவாகிறது. அவ்விதி குறிப்பிடுவதாவது 'அமைச்சரவையின்மேல் நம்பிக்கையில்லையெனும் தீர்மானமொன்றை பிரதிநிதிகள் மன்றம் நிறைவேற்றும்போது அமைச்சரவை முழுவதுமாக பதவியிலிருந்து விலகவேண்டும் அல்லது பத்து நாட்களுக்குள் பிரதிநிதிகள் மன்றத்தைக் கலைக்கவேண்டும்.' கவுன்சிலர்கள்

மன்றம் கலைக்கப்படுவதில்லை. புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் மன்றம்தான் அரசாங்கத்தை எக்கட்சி அமைக்க வேண்டுமென்பதை முடிவு செய்கிறது.

இதனால் கவுன்சிலர்கள் மன்றத்தை ஊக்குவிப்பதில் எப்பங்கும் கிடையாதெனப் பொருளாகாது. கவுன்சிலர்கள் மன்ற உறுப்பினர்கள், நிர்வாகம் சம்பந்தப்பட்ட எந்தவொரு அம்சம் பற்றியும் கேள்விகள் கேட்பதன் வாயிலாக விபரங்கள் கோரிப்பெறலாம். 'கேள்வி நேரம்' பாராளுமன்றமுறை அரசாங்கத்தில் விறுவிறுப்பானதென்பதும், அது அரசாங்கத்தை வரையறைக்குள் வைப்பதற்கு உதவுகிறதென்பதும் இங்கு நாம் நினைவுகூறத்தக்கது. மேலும், உறுப்பினர்கள் தீர்மானமொன்றை நிறைவேற்றுவதன் மூலமாக பொது நலனுக்குகந்த காரியமொன்றைச்செய்யத்தவறியிருக்குமானால் அதைச் செய்யுமாறு அல்லது தங்களுடைய குறைகளை நிவர்த்தி செய்யுமாறு செய்யவியலும். அமைச்சரவை, குறிப்பாக பிரதமர் அவ்வப்போதோ அல்லது ஆண்டிற்கொரு முறையோ அரசு நிதிநிலைமை, பொது விவகாரங்கள், அயல் உறவுகள் பற்றி டையட்டின் இருமன்றங்களுக்கும் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறாரென அரசியலமைப்பு குறிப்பிடுகிறது (அ. விதி. 72). இறுதியாக, பிரதிநிதிகள் மன்றத்தோடு இணைந்து கவுன்சிலர்கள் மன்றம் அரசாங்கப் பணிகள் பற்றிப்புலனாய்வு செய்யும் அதிகாரத்தையும் பெற்றிருக்கிறது. 62ஆம் விதிப்படி டையட்டின் இரு மன்றங்களில் ஒவ்வொன்றும் அரசாங்கத்தொடர்புடைய புலனாய்வு செய்யவும், அதற்காக ஆவணங்களைக் கோரிப்பெறவும் விசாரணைக்கு வந்து சாட்சியம் கூறவேண்டுமெனவும் கூறலாம். கவுன்சிலர்கள் மன்றம் இம்மாதிரி ஆட்சித்துறையைக் கட்டுப்படுத்தி, அரசாங்கம் திறமையாகவும் நாணயமாகவும் செயலாற்றுமாறு செய்யவியலும்.

**நீதி அதிகாரங்கள்** (Judicial Functions)

உச்சநீதிமன்ற நீதிபதிகளின் மேலான இராஜத்துரோக குற்றச்சாட்டுகளை விசாரணை செய்ய பிரதிநிதிகள் மன்றத்துடன் கவுன்சிலர்கள் மன்றமும் சேர்ந்து நீதிமன்றமாக அமைகிறது. 64ஆம் விதி 'பதவி விலக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கும் நீதிபதிகளை விசாரிப்பதற்கு இருமன்றங்களின் உறுப்பினர்கள் கொண்ட அரசுத்துரோக விசாரணை நீதிமன்றமொன்றை நிறுவ' வகை செய்கிறது.

அரசுத்துரோகம் பற்றிய விஷயங்கள் சட்டத்தால் வரையறுக் கப்படுகின்றன. இப்போது அமைக்கப்பட்டுள்ள அரசுத் துரோக விசாரணை நீதிமன்றம் இருமன்றங்களிலிருந்தும் சமமான உறுப்பினர்களைக் கொண்டதாக, அதாவது பதினான்கு உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்கிறது. அம்மன்றத்தின் உறுப்பினர்கள் தங்களுள் ஒருவரைத் தலைவ ராகத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறார்கள். மேலும் இருமன்றங் களையும் சேர்ந்த உறுப்பினர்கள் கொண்ட குற்றச்சாட்டுக்குழு (Indictment Committee) வொன்றையும் சட்டம் ஏற்படுத்து கிறது. இம்மன்றம் அரசுத்துரோக வழக்குகளில் சம்பந்தப் பட்டுள்ள நீதிபதிகளின் மேலான குற்றப்பத்திரிகை தயார் செய்து தாக்கல் செய்கிறது. ஒரே சமயத்தில் இவ்விரண்டிலும் ஒருவர் அங்கம் வகிக்க முடியாது.

**அரசியலமைப்புப் பணிகள்** (Constitutional Functions)

அரசியலமைப்பை மாற்றுவதில் இருமன்றங்களும் சம மான அதிகாரம் பெற்றிருக்கின்றன. அரசியலமைப்பு மாற்றம் பற்றிய மசோதா எந்த மன்றத்தில் வேண்டு மானாலும் முதலில் துவங்கலாம். ஆனால், அத்தகைய மசோதா ஒவ்வொரு மன்றத்திலும் அதன் மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கையில் மூன்றிலிருபங்கு உறுப்பினர்களின் ஆதர வுடன் நிறைவேற்றப்படவேண்டும். அவ்வாறு இரு மன்றங் களாலும் நிறைவேற்றப்பட்டபிறகு மக்கள் சம்மதம் பெறத் தாக்கல் செய்யப்படும்.

**தேர்தல் அலுவல்கள்** (Electoral Functions)

கவுன்சிலர்கள் மன்றம் பிரதிநிதிகள் மன்றத்தோடு சேர்ந்து பல தேர்தல் சம்பந்தமான அலுவல்களைச் செய்கிறது. பிரதமர்தேர்வு குறித்த முறை முன்னமேயே விளக்கப் பட்டிருக்கிறது. இருமன்ற உறுப்பினர்களுக்கும் அவர்களது தேர்வாளர்களுக்கும் இருக்கவேண்டிய தகுதிகள் டையட் இயற்றும் சட்டத்தால் நிர்ணயம் செய்யப்படுகின்றன. அரசியல் அமைப்பு விதிக்கும் நிபந்தனை, இனம், பால், சமயம், சமூக அந்தஸ்து, குடும்பத்தோற்றம், கல்வி, சொத்து, வருமானம் போன்ற அடிப்படைகளில் எவருக்கும் தடை யிருக்கக் கூடாதென்பதே (அ. விதி. 44). வாக்காளர் தொகுதி கள், வாக்குப் பதிவுமுறை, இருமன்றங்களின் உறுப்பினர்கள் தேர்தல் சம்பந்தப்பட்ட இதரமுறை பற்றியும் சட்டம் செய்ய டையட்டிற்குத் தகுதியுண்டு என்று 47ஆம் விதி கூறுகிறது.

ஒவ்வொரு மன்றமும் அதன் உறுப்பினர்களுக்கு இருக்க வேண்டிய தகுதிகள்பற்றி எழும் சச்சரவுகளைத் தானே தீர்த்துக்கொள்ளும் அதிகாரம் பெற்றிருக்கிறது. எனினும் உறுப்பினரொருவருக்கு மன்றத்தில் இடம் கிடையாதென முடிவு செய்யும் தீர்மானத்திற்கு கூட்டத்தில் கலந்துகொண்டு வாக்களிப்பவர்களின் கூடுதல் எண்ணிக்கையில் மூன்றிலிரு பங்கினர் சம்மதம்பெற்ற தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும் (அ. விதி.55). கவுன்சிலர்கள் மன்றம் அதனுடைய தலைவர், துணைத்தலைவர், இதர அலுவலர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறது.

**கவுன்சிலர்கள் மன்றம் பற்றிய மதிப்பீடு**
(Estimate of the House of Councillors)

தொடக்ககாலத்தில் ஜப்பான் நாட்டிற்கு ஒருமன்றமுறை சட்டசபைபோதும் என்னும் ஜெனரல் மக் ஆர்தர் விருப்பத்திற்கிணங்க அரசியலமைப்பின் முதல்பிரதி எழுதப் பெற்றது. ஆனால், இதை ஜப்பானியத் தலைவர்கள் பலமாக ஆட்சேபித்ததால் 1947ஆம் ஆண்டு அரசியலமைப்பு இருமன்ற பாராளுமன்றத்தை ஏற்படுத்தியது. அரசியலமைப்பு பாராளுமன்றமுறை அரசாங்கத்தை ஏற்படுத்துவதால் அதிகாரத்தின் மையமாக பொதுமக்கள் கருத்தை பிரதிபலிக்கும் மன்றம் இருக்கவேண்டியதும், மேல்மன்றம் நிதானம், கட்டுப்படுத்தல், பெருந்தன்மை ஆகிய நோக்கங்களைக் கொண்டதாகவும் இருக்கவேண்டும் என்றும் கருதப்படுகிறது. இவ்விதத்தில் அரசியலமைப்பு ஸ்திரத்தன்மையையும் தொடர்ச்சியையும் முக்கியமான நோக்கங்களாகக் கொண்டிருக்கிறதெனலாம். இதன் எதிரொலியாகத்தான் கவுன்சிலர்கள் மன்றம் தொடர்ந்து இருப்பதாக, கலைக்கப்படாததாக அமைக்கப்பட்டிருக்கிறது. அதன் உறுப்பினர்களில் பாதிப்பேர்கள் மூன்றுண்டுக்கு ஒருமுறை பதவி விலகினாலும் அவர்கள் ஆறுண்டு காலத்திற்குப் பதவியிலிருக்கிறார்கள். இவ்வுறுப்பினர்கள் பல பிரதேசங்களின் பிரதிநிதிகளாகவும், தேசியமட்டத்தில் செல்வாக்குடையவர்களாகவும் இருப்பதால் மன்றத்தின் பணிகள் சிறப்பான முறையில் செய்யப்படுகின்றன. சுமார் இருபத்துநான்கு ஆண்டுகால அனுபவம் இம்மன்றத்திற்கு இருப்பினும் மூப்புத்தன்மையிலோ அரசியலிலோ பிரதிநிதிகள் மன்றத்திற்கு சமமாகத்தான் இது இருக்கிறதேயல்லாது அதனினும் மாறுபட்டதாக இருக்கவில்லையெனும் கருத்தே அரசியல் திறனாய்வாளர்

களிடம் காணப்படுகிறது. பிரதிநிதிகள் மன்றத்தைப் போன்றே இதுவும் பட்சபாதமுடையதாக விளங்குகிறது. இம்மன்றத்தில் தேசிய கண்ணோட்டமுடைய அறிவு சான்ற ஆன்றோர்களும், அரசியல் ஞானிகளும் இருந்தபோதிலும், பெரும்பாலானோர் தொழிலாளர் யூனியன்கள் கட்டுப்பாட்டிற் குட்பட்ட செல்வாக்குக் குழுக்கள், பெரும் பெரும் வியாபாரத் துறையினர் ஆகியோரின் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப் படுவதால் பிராந்திய மனப்பான்மையும் பட்சபாதமும் காணப்படுகின்றன.

கவுன்சிலர்கள் மன்றம் அவசரத்தையும், தீவிரத்தையும் கட்டுப்படுத்தும் சக்தியாக விளங்க வேண்டுமென்று எதிர் பார்க்கப்பட்டதெனினும் அந்நோக்கங்கள் நிறைவேறுமாறு அது பணியாற்றவில்லை. ஒரே அரசியல் கட்சி இருமன்றங் களையும் அடுத்தடுத்து நடைபெறும் தேர்தல்களுக்குப் பிறகும் கட்டுப்படுத்துவதால் இருமன்றங்களுக்குமிடையே கருத்து வேற்றுமைகள் ஏற்படுத்துவதற்குப் பதிலாக, எல்லா மசோ தாக்களும் இயற்கையாக நிறைவேற்றப்பட்டுவிடுகின்றன. கட்சிக் கட்டுத்திட்டங்கள் தீவிரமாக வற்புறுத்தப்படுவதால் எதிர்ப்பென்பதே இல்லாமல் கவுன்சிலர்கள் மன்றம் சாதாரணமாக ஒரு பதிவு மன்றமாக மாறிவிட்டிருக்கிறது. எனவே, இம்மன்றம் உடனடியாக சீர்திருத்தி அமைக்கப் படுவது வரவேற்கத்தக்கதென்ற கருத்து ஜப்பானிய மக்க ளிடையே பரவலாக இருக்கிறது.

**பிரதிநிதிகள் மன்றம்** (The House of Representatives)

**அமைப்பும் பதவிக்காலமும்:** பிரதிநிதிகள் மன்றம் ஜப்பானின் கீழ்மன்றம் ஆகும். அதில் 467 உறுப்பினர்கள் இருக்கிறார்கள். மன்றத்தின் ஆயுட்காலம் நான்கு ஆண்டு களாகும். மன்றம் கலைக்கப்படக் கூடியதாகையால் நான்காண்டுகாலம் முடியும் வரை அது கலைக்கப்படாதிருப்ப தில்லை. பொதுத்தேர்தல்கள், சாதாரணமாக $6\frac{1}{2}$ மாதங் களிலிருந்து 44 மாதங்கள் இடைவெளிகளில் நடைபெற்றிருக் கின்றன. நடுத்தர அளவுள்ளதெனச் சொல்லப்படும் 118 தேர்தல் தொகுதிகளிலிருந்து வேட்பாளர்கள் தேர்ந்தெடுத் தனுப்பப்படுகின்றனர். மக்கள்தொகை அடிப்படையில் ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் மூன்றிலிருந்து ஐந்து உறுப் பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆனால், அமாமித் தீவுகளுக்கு (Amami Islands) மட்டும் ஓரேயொரு உறுப்பினர்

தான் பிரதிநிதியாகத் தெரிந்தெடுக்கப்படலாம். ஒவ்வொரு தொகுதியும் பல உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கிற தென்றாலும் வாக்காளர் ஒவ்வொருவருக்கும் ஒரு வாக்குத் தானுண்டு. ஜப்பானிய முறை 'வரம்பு வாக்குமுறை' (Limited Form of Voting) எனப்படுகிறது. அதாவது ஒரு தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்படவேண்டிய உறுப்பினர் களின் எண்ணிக்கைக்குக் குறைவான வேட்பாளர்களுக்கு மட்டும் வாக்களிக்க அனுமதிக்கப்பட்டிருக்கின்றனர்.

1950ஆம் ஆண்டு அரசாங்க அலுவலகங்கள் தேர்தல் சட்டம் (The Public Offices Election Law) இருபது வயதடைந்த ஆண் பெண் அனைவருக்கும் வாக்குரிமையுண் டென உறுதியளிக்கிறது. பிரதிநிதிகள் மன்ற உறுப்பினர் பதவிக்கு போட்டியிட விரும்பும் வேட்பாளர் 25 வயதான வராகவும், எப்பகுதியிலிருந்து தேர்தலுக்கு நிற்கிறாரோ அப்பகுதியில் குறைந்தது மூன்றுமாத காலம் தொடர்ந்தாற் போல உறையுள் இருப்பவராகவும் இருத்தல் வேண்டும். ஆனால், பகுதி விதி (Locality Rule) அமெரிக்காவிலுள்ளது போல தொகுதியில் உண்மையாகக் குடியிருக்கவேண்டுமென்று கடுமையாக வற்புறுத்தவில்லை. அதற்கு 'சட்ட பூர்வமான குடியிருப்பும் அவ்வாறு பதிவு செய்திருப்பதும்' என்று பொருளாகும். ஆனால், வேட்பாளர்கள், வாக்காளர்களுக்கு என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டுமோ அவையனைத் தையும் உடையவர்களாக இருக்க வேண்டும். ஒரே சமயத்தில் இரண்டு மன்றங்களிலும் ஒருவர் உறுப்பினராக இருக்க முடியாது. அரசாங்கத்தில் வேறு எந்த உத்தியோகத்திலும் இருக்க முடியாது. உறுப்பினர்களுக்கானத் தகுதிகள் பற்றி யெழும் சச்சரவுகளைப் பிரதிநிதிகள் மன்றமே தீர்மானிக்கிறது. இதர அம்சங்களில் அதாவது சம்பளம், சலுகைகள் போன்ற வற்றில் மேல்சபை உறுப்பினர்களுக்கு என்னென்ன உண் டென்று சொல்லப்பட்டதோ அவைகள் கீழ்ச்சபை உறுப்பினர்களுக்குமுண்டு.

கூட்டங்கள் (Sessions) குறிப்பிட்ட இரு வகை டையட் கூட்டத்தொடர்களைப்பற்றி அரசியலமைப்பு குறிப்பிடுகிறது. சாதாரண அல்லது வழக்கமான தொடர், சிறப்புத்தொடர் என்பவை அவை. சாதாரணக்கூட்டம் ஆண்டுக்கொரு முறையும் சிறப்புக்கூட்டம் தேவையானபோதும் கூட்டப் படுகிறது. சிறப்புக்கூட்டம் கூட்டப்படுவதற்கான விதிகள் மேல்சபையைப் போன்றவையே. பிரதிநிதிகள் மன்றம்

கலைக்கப்படுமானால், அது கலைக்கப்பட்ட தேதியிலிருந்து நாற்பது நாட்களுக்குள் புது உறுப்பினர்களுக்கான தேர்தலும், தேர்தல் நடைபெற்ற தேதியிலிருந்து முப்பது நாட்களுக்குள் டையட்டின் கூட்டமும் நடைபெற வேண்டும் என்று அரசியலமைப்பின் 54ஆம் விதி கூறுகிறது. அவ்வாறு கூட்டப்படுகின்ற டையட்டின் தனிக்கூட்டத்தின் நோக்கம் பிரதமர் தேர்ந்தெடுக்கப்படுவதற்கும் மன்றம் கலைக்கப் பட்டதனால் கவனிக்கப்படாமலிருந்த அலுவல்களை கவனிப் பதற்குமாகும். பிரதிநிதிகள் மன்றம் கலைக்கப்பட்டு, தேர்தலுக்குப்பிறகு அதன் கூட்டம் நடைபெறும் வரையிலான இடைப்பட்ட காலத்தில்,கவுன்சிலர்கள் மன்றத் தால் அதன் நெருக்கடிகாலக் கூட்டத்தில் முடிவு எடுக்கப்பட்ட எல்லா விஷயங்களும், பிரதிநிதிகள் மன்றம் மீண்டும் கூட்டப் பட்ட தேதியிலிருந்து பத்து நாட்களுக்குள் ஆமோதிக்கப்பட வேண்டும். இல்லையேல் அவையனைத்தும் சொல்லத் தகாதவைகளாகிவிடும்.

மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூன்றி லொரு பங்கு உறுப்பினர்கள் அல்லது அதற்கு மேற் பட்டவர்கள் கலந்து கொண்டால்தான் பிரதிநிதிகள் மன்றம் எந்த நடவடிக்கையையும் மேற்கொள்ள முடியும். அரசிய லமைப்பில் குறிப்பாக சொல்லப்படாதிருக்குங்கால் முடிவு களெல்லாம் ஆதரவில் செய்யப்படுகின்றன. முடிவெடுப்பதில் தேக்கநிலை (The) இருப்பின் மன்றத்திற்கு யார் தலைமை வகிக்கிறாரோ அவரது வாக்கு பலத்தில் தீர்க்கப்படும் (அ. விதி. 56). மன்றத்தின் நடவடிக்கைகள் யாவும் வெளிப் படையாக நடைபெறவேண்டுமென்று அரசியலமைப்பின் 57ஆம் விதி கூறுகிறதெனினும் இரகசியக் கூட்டங்களும் நடை பெறலாம். இத்தகைய கூட்டத்திற்கான விதிகள் மேல் சபையின் இரகசியக் கூட்டத்திற்கான விதிகள் போன்றவையே. இரகசியக் கூட்டத்தைப் பொறுத்தவரை யிலும் சம்பந்தப்பட்ட மன்றம்தான் முடிவு செய்ய முடியுமே தவிர மெய்ஜீ அரசியலமைப்பின்படி இருந்தவாறு அமைச்சரவை செய்ய முடியாது.

**மன்றத்தின் அமைப்பு** (Organization of the House)

இம்மன்றத்தின் அமைப்பு மிகவும் எளிதானது. பொதுத் தேர்தல்களுக்குப்பிறகு கூடும் மன்றத்தின் முதற்கூட்டத்தின் அலுவல்கள் சபாநாயகரையும், உதவி சபாநாயகரையும்

தேர்ந்தெடுப்பதாகும். இவர்கள் மன்றக்கூட்டத்திற்குத் தலைமை வகிப்பவர்களாதலால் இவர்களின் தேர்தல் முதற்படியாகும். கூட்டம் சம்பந்தப்பட்ட விதிகளை, ஒழுங்கையும் நடைமுறைகளையும் மன்றமே முடிவு செய்கிறது. இம்மன்றம் மொத்தம் 16 நிலைக்குழுக்களை அமைத்து, அவை மூலமாகவும் அதன் அலுவல்களை நடத்துகிறது. இக்குழுக்கள் பெரும்பாலும் அமைச்சரகங்கள் அல்லது துறைகளின் எண்ணிக்கைக்குச் சமமானவை. குறிப்பிட்ட பிரச்சினைகள் அல்லது பிரேரணைகளைக் கவனிப்பதற்காக விசேஷக் குழுக்களையும் மன்றம் நியமிக்கலாம். ஒவ்வொரு கட்சிக்கும் அதன் பலத்திற்குத்தகுந்தாற்போல இக்குழுக்களில் பிரதிநிதித்துவம் கொடுக்கப்படுகிறது. ஒவ்வொரு உறுப்பினரும் குறைந்த பட்சம் ஒரு குழுவிலாவது பணியாற்ற வேண்டும். ஆனால், எவரும் மூன்று குழுக்களுக்குமேல் இருந்தலாகாது.

**சபாநாயகர்** (Speaker)

மெய்ஜி அரசியலமைப்பு அடிப்படையில் பிரதிநிதிகள் மன்ற உறுப்பினர்கள் தங்கள் சபாநாயகரை தேர்ந்தெடுக்கவில்லை. அதற்குப் பதிலாக மன்றம் மூன்று பேர்களை சிபாரிசு செய்தது. அவர்களில் ஒருவரை பேரரசர் சபாநாயகராக பணிபுரிய நியமிப்பார். ஆனால், 1947ஆம் ஆண்டு அரசியலமைப்பு ஒவ்வொரு மன்றமும் அதனுடைய தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்கு வகை செய்திருப்பதோடு வாக்கெடுப்பில் தேக்கநிலை ஏற்படும்போது சபாநாயகர் தன் தீர்வு வாக்கை (Casting Vote) அளிக்க வேண்டும் என்பதால் மன்ற நடவடிக்கைகள் சபாநாயகரோ அல்லது உதவி சபாநாயகரோ தேர்ந்தெடுக்கப்படாமல் நடைபெற முடியாது என்னும் அளவிற்கு முக்கியம் பெற்றிருக்கிறது. மிகவும் அவசரமான பிரதமர் நியமனம் கூட சபாநாயகர், துணைசபாநாயகர் தேர்ந்தெடுக்கப்படும் வரை முடியாததாகும்.

சாதாரணமாக சபாநாயகர், பிரதிநிதிகள் மன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியினால் நியமிக்கப்படுவார். அவர் மன்றத்தின் ஆயுட்காலத்திற்கு அதாவது நான்கு ஆண்டு காலத்திற்குப் பதவியிலிருப்பார். மன்றம் அதன் முழு பதவிக் காலத்திற்கு முன்னதாகவே கலைக்கப்படுமானால் அவரும் பதவி விலகுவார். ஆட்சியிலிருக்கும் கட்சிக்கு மன்றத்தில் பெரும்பான்மை இல்லாமல் இதரக் கட்சிகளுடன் செய்துகொள்ளப்படும் கூட்டினால் செயல் அளவு பெரும்பான்மை மட்டுமே

இருக்ுமானால், அரசாங்கக் கட்சியல்லாத பிறிதொரு கட்சியினால் நியமிக்கப்படுபவருக்குச் சொல்லலாம். ஐந்தாவது தடவையாக திரு. யோஷிடா அரசாங்கம் அமைத்தபோது இது நடந்தது இங்கு உதாரணமாகச் சொல்லப்படலாம். எனவே, பிரதிநிதிகள் மன்ற சபாநாயகர் கட்சி சார்புடையவரென்பதும், அப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகும் கட்சிப்பற்றுதல்களையும் பிணைப்புக்களையும் துறப்பதில்லை. இங்கிலாந்திலுள்ள 'ஒரு முறை சபாநாயகர் என்றால் எப்போதும் சபாநாயகர்' என்ற வழக்கும் இவரைப் பொருத்தமட்டில் கிடையாது. கடைசியாகக் கலைக்கப்பட்ட மன்றத்தில் சபாநாயகராக இருந்தவர் பொதுத்தேர்தல்கள் நடைபெற்றுப் பிறகு கூடும் மன்றத்தின் தலைவராக அதே கட்சி பெரும்பான்மை பலம் பெற்று அரசாங்கம் அமைத்தாலும் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென்னும் மரபு இல்லாவிட்டாலும், தேர்தல்களில் அவர் மீண்டும் போட்டியிட்டாலும் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் எனும் நியதி கிடையாது. மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு சபாநாயகர் கட்சி சார்புடையவராக இருக்க வேண்டியதோடு அரசாங்கத்தால் மன்றத்தில் கொண்டுவரப்படும் மசோதாக்களும் மற்றவைகளும் நிறைவேறுவதற்கு துணைபுரியவும் வேண்டும். ஆதலின் ஜப்பானிய சபாநாயகர் கட்சிசார்பற்ற நடுவராக இருந்து மன்ற உறுப்பினர்களின், அவர்கள் ஆட்சியிலிருக்கும் கட்சியைச் சேர்ந்தவர்களாயினும் சேராதவர்களாயினும் உரிமைகளைக் காப்பவராக இருக்கவில்லை. அவரது பணி அமெரிக்க பிரதிநிதிகள் மன்ற சபாநாயகர் பணிகளை ஒத்திருக்கிறதெனலாம்.

சபாநாயகர் பிரதிநிதிகள் மன்றக் கூட்டங்களுக்குத் தலைமை வகிக்கிறார். மன்றத்தின் நடவடிக்கைகளெல்லாம் சுமுகமாகவும் திறமையாகவும் நடப்பதற்கு மன்றத்தில் அமைதியையும் அதன் பெருமையையும் காப்பது அவருடைய தலையாய பணியாகும். அவருடைய உத்திரவுகளைப் புறக்கணித்தாலோ அல்லது ஒழுங்கீனமாக நடந்துகொண்டாலோ அல்லது தகாத மொழியைப் பயன்படுத்தினாலோ அத்தகைய உறுப்பினருக்குப் பேச்சுரிமையை மறுக்கலாம். அடங்காப் பிடாரித்தனம் கட்டுக்கடங்காமல் போகுமானால் மன்றத்தை ஒத்திவைக்கலாம். உறுப்பினர்களை மன்றத்திலிருந்து விலக்கி வைப்பதற்கு அரசியலமைப்புத் திட்டத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற விதிகளைப் பின்பற்றி நடக்கவேண்டும். மன்றக்

கூட்டங்களை கவனிப்பதற்கு வருகை தந்துள்ள உறுப்பின ரல்லாதார் தகாதமுறையில் நடந்து கொள்வார்களானல் அவர்களை வெளியேற்றுவதற்கும், அனுமதி மறுப்பதற்கும் அவருக்கு அதிகாரமுள்ளது.

மன்றத்தின் அலுவல்கள் எந்த வரிசையில் நடைபெற வேண்டுமென்பதை சபாநாயகரே தீர்மானிப்பார். விவாதங் கள், ஊடே எழுப்பப்படும் விஞக்கள் பற்றியும் அவைகள் எவ்வளவு நேரத்திற்கு நடைபெற வேண்டுமென்பதையும் விவாதத்தில் பங்கெடுத்துக்கொள்ள விரும்புபவர்களில் யார் யார் அனுமதிக்கப்பட வேண்டுமென்பதையும் அவரே முடிவு செய்வார். விவாதங்களை காலக்கெடுப்படி முடித்து வைப் பதும் அவரேயாகும். தீர்மானத்தை வாக்கெடுப்பிற்குவிட்டு முடிவை அறிவிக்கிருர். வாக்கெடுப்பில் தேக்கநிலையை முடித்துவைப்பதற்கு அவர் தனது வாக்கைப் பயன்படுத்த லாம். மசோதாவொன்று மன்றத்தில் தாக்கல் செய்யப் பட்டதும் அது எந்தக் குழுவிற்கு செல்லவேண்டுமோ அந்தக் குழுவிற்கு—அதாவது நிலைக்குழு அல்லது தனிக்குழுவிற்கு விதிப்படி அனுப்புகிருர். மன்றத்திற்கு வெளியேயுள்ள எல்லா நிறுவனங்களுடனும் அதனுடைய அதிகாரம் பெற்ற பிரதிநிதியாக அவர் பணியாற்றுகிருர். அவர் கூட்டு மாநாட்டுக்குழு (Joint Conference Committee) உள்பட எந்தக் குழு ஒன்றும் தோன்றி, அதன் பரிசீலனையிலிருக்கும் விஷயம் பற்றிய தன்கருத்தை எடுத்துக்கூறலாம். மன்றம் தொடரில் இல்லாதிருக்கும்போது மன்ற உறுப்பினர் தனது உறுப்பினர் பதவியை ராஜிஞமா செய்வாரானல் சபாநாயகர் அதை ஏற்றுக்கொள்ள அதிகாரம் பெற்றிருக்கிருர்.

**பிரதிநிதிகள் மன்றத்தின் மேன்மை**
(Supremacy of the House of Representatives)

அரசியலமைப்பு, பிரதிநிதிகள் மன்றத்தின் மேன்மையை இது நிலைநாட்டுகிறது. இது பாராளுமன்ற அரசாங்கமுறைத் தத்துவத்தையும் நடைமுறையையும் ஒத்ததாகவிருக்கிறது. அமைச்சரவையை ஆக்குவதிலும், அதைக் கலைப்பதிலும் பிரதிநிதிகள் மன்றம் ஆதிக்கம் பெற்றிருக்கிறது. சட்ட மியற்றலில் அது இறுதி அதிகாரமுடையது. கவுன்சிலர்கள் மன்றத்திற்கும், அதற்குமிடையே தீர்க்கவியலாத வேற்றுமை நிலவினுலோ, தாமதம் அல்லது நடவடிக்கை இல்லாதிருந் தாலோ பிரதிநிதிகள் மன்றம் அதை நிராகரிக்கலாம்.

கவுன்சிலர்கள் மன்றத்தின் மிகச்சரியான பணி சட்டமியற்றலை குறிப்பிட்ட காலக்கெடுவரையிலும் தாமதிப்பதேயாகும்.

**சட்டப்பணிகள்** (Legislative Functions)

முன்பே சொல்லப்பட்டதுபோல எந்தவொரு மசோதாவும் சட்டமாக வேண்டுமானால் இரண்டு மன்றங்களிலும் நிறைவேற்றப்படவேண்டும். ஆனால், ஏதேனும் ஒரு மன்றம் அடுத்த மன்றத்தின் கருத்தினின்றும் மாறுபடுமானால், அந்த மாறுபட்ட கருத்து இருமன்றங்களின் கூட்டுக்குழுவினால் தீர்க்கப்படாததாக இருக்குமானால், அதைப் புறக்கணித்துச் செயல்படும் அதிகாரத்தை அரசியலமைப்பின் 59ஆம் விதி பிரதிநிதிகள் மன்றத்திற்கு வழங்குகிறது. அத்தகைய மசோதாவொன்று பிரதிநிதிகள் மன்றத்தால் கூட்டத்திற்கு வந்திருப்போரில் மூன்றிலிருபங்கு பெரும்பான்மையடிப் படையில் இரண்டாந்தடவையாக நிறைவேற்றப்படுமாயின் சட்டமாகிவிடும். கூட்டுக்குழுவின் கூட்டமொன்றை அழைப்பதற்கு அரசியலமைப்பு பிரதிநிதிகள் மன்றத்திற்குத்தான் அதிகாரம் வழங்குகிறது.

பிரதிநிதிகள் மன்றத்தால் நிறைவேற்றப்பட்ட மசோதா ஒன்றை அது தனக்குக் கிடைத்த தேதியிலிருந்து அறுபது நாட்களுக்குள் கவுன்சிலர்கள் மன்றம் அதைப்பற்றிய இறுதி முடிவு எடுக்கத் தவறுமானால் அந்த மசோதா கவுன்சிலர்கள் மன்றத்தால் நிராகரிக்கப்பட்டதாக பிரதிநிதிகள் மன்றம் அதைக் கருதலாம். அத்தகைய மசோதாவை பிரதிநிதிகள் மன்றம் மூன்றிலிருபங்கு பெரும்பான்மையுடன் மீண்டும் நிறைவேற்றுமானால், அது டையட்டினால் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்பட்டு நடைமுறைப்படுத்தப்படும். எனவே சட்டமியற்றுவதில் பிரதிநிதிகள் மன்றத்திற்குத்தான் இறுதி அதிகாரம் இருக்கிறதென்பது தெளிவாகும்.

**நிதிப்பணிகள்** (Financial Functions)

பிரதிநிதிகள் மன்றம் கவுன்சிலர்கள் மன்றம் இரண்டும் சேர்ந்து நிதி விஷயங்களைக் கட்டுப்படுத்துகின்றன. இவ் விஷயத்திலும் கவுன்சிலர்கள் மன்றத்திற்கில்லாத மேலதிகாரத்தை பிரதிநிதிகள் மன்றத்திற்கு அரசியலமைப்பு வழங்குகிறது. இது பொறுப்புள்ள அரசாங்கமொன்றின் ஐயத்திற்கிடமில்லாத தேவை எனலாம். 60ஆம் அரசியலமைப்பு விதிப்படி வரவு-செலவுத் திட்டம் முதலில் பிரதிநிதிகள்

மன்றத்தில்தான் தாக்கல் செய்யப்பட வேண்டும். அங்ஙனமே கவுன்சிலர்கள் மன்றம் வரவு-செலவுத் திட்டத்தை ஏற்கத் தவறினாலோ அல்லது அதை நிறைவேற்றுவதற்கு 30 நாட்களுக்குள் நடவடிக்கை எடுக்காமல் விட்டுவிட்டாலோ அல்லது இரண்டிற்கும் இடையிலுமான வேற்றுமையை அவற்றின் கூட்டுக்குழு போக்கத் தவறினாலோ பிரதிநிதிகள் மன்றம் அதை ஏற்றுக்கொள்ளுமானால் அதுவே டையட்டின் சம்மதமாகக் கருதப்படுவதற்கு அரசியலமைப்பில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதேமுறை உடன்படிக்கைகளை ஏற்றுக்கொள்வதற்கும் பின்பற்றப்படுகிறது.

அரசியலமைப்பின் ஏழாம் பிரிவில் உள்ள 83 முதல் 91 வரையிலான ஒன்பது விதிகள் கவுன்சிலர்கள் மன்றத்தோடு பிரதிநிதிகள் மன்றம் தேசிய நிதி விவகாரங்களில் செலுத்தக் கூடிய அதிகாரங்களை விவரிக்கின்றன. தேசிய நிதிகள் எவ்வாறு நிர்வகிக்கப்பட வேண்டுமென்பதையும் தீர்மானிக்கிறது. முன்னமேயே விதிக்கப்பட்டு, வசூலிக்கப்படும் வரிகளை மாற்றியமைக்கவும் புதிய வரிகளை விதிப்பதற்கும், பணத்தைச் செலவு செய்வதற்கும், அரசு அதன் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கும் அதிகாரம் தர டையட்டிற்கு அதிகாரங்கள் இவ்விதிகளின்படி தரப்பட்டிருக்கின்றன. மேலும் அமைச்சரவையால் தயார் செய்யப்படும் செலவை அனுமதிப்பதும், எதிர்பாராத வரவு-செலவுத்திட்டத்தில் ஏற்படும் துண்டுகளை ஒதுக்கி வைக்கப்பட்ட நிதியிலிருந்து (Reserve Fund) ஈடு செய்து கொள்ள அனுமதி வழங்குவதும், தணிக்கைக் கழகத்தின் அறிக்கையைப் பெறுவதும் டையட்டு தான் என்று மேற்கூறப்பட்ட விதிகள் கூறுகின்றன.

**நிர்வாகப் பணிகள்** (Executive Functions)

பிரதிநிதிகள் மன்றத்தின் மூன்றாவது முக்கியப்பணி நிர்வாகத்தைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருப்பதாகும். அது அமைச்சரவையைத் தோற்றுவிக்கிறது. அதற்கு அமைச்சரவை கூட்டாகப் பொறுப்பு வகிக்கிறது. இதுதான் ஜப்பானில் ஏற்படுத்தப்பட்டுள்ள அமைச்சரவை ஆட்சி முறையின் ஆதாரக்கொள்கையாகும். அமைச்சரவையின் தலைவர் பிரதம மந்திரி. சட்டபூர்வமாக அவர் டையட்டினால் நியமிக்கப்படுகிறார். ஆனால், நிகழ்முறையில் பிரதிநிதிகள் மன்றத்தால் தெரிந்தெடுக்கப்படுகிறார். பிரதம மந்திரியைத் தெரிந்தெடுப்பதில் இரு மன்றங்களுக்குமிடையில் கருத்து

வேறுபாடிருக்குமானால் அது எவ்வாறு தீர்க்கப்படவேண்டு மென்பது பிறிதோரிடத்தில் விளக்கப்பட்டிருப்பதை இவ் விடம் நினைவு கூர்க. டையட்டினால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதம மந்திரியை பேரரசர் நியமிக்கிறார்.

பிரதமமந்திரி நியமனத்திலிருந்து அமைச்சரவை அமைப்புத் தொடங்குகிறது. அமைச்சர்களில் மிகப்பெரும் பான்மையானவர்கள் டையட்டிலிருந்து நியமிக்கப்பட வேண்டுமென்றும், அவர்கள் சிவிலியன்களாக இருக்கவேண்டு மென்றும் 66ஆம் விதி சாதாரணமாகக் கூறுகிறது. ஆனால், நடைமுறையில் கவுன்சிலர்கள் மன்றத்தைச்சேர்ந்த மூன்று அல்லது நான்கு பேர்களைத்தவிர இதர பன்னிரெண்டு அல்லது பதிமூன்று பேர்கள் பிரதிநிதிகள் மன்றத்திலிருந்து தான் எடுக்கப்படுகிறார்கள். கட்சிமுறை ஸ்திரத்தன்மை யடைந்ததிலிருந்து பிரதிநிதிகள் மன்றத்தில் எந்தக் கட்சி பெரும்பான்மை பலமுடையதாக இருக்கிறதோ, எதன் தலைவராக பிரதம மந்திரி இருக்கிறாரோ அந்தக்கட்சியைச் சேர்ந்தவர்களே அமைச்சரவையில் பெருமளவிற்குப் பிரதி நிதித்துவம் பெறுகிறார்கள். அரசு விஷயங்களில் பேரரசருக்கு ஆலோசனை வழங்குவதுடன் எல்லா நடவடிக்கைகளையும் ஏற்பதால் அது பொறுப்புடையதாக இருக்கிறது (அ. விதி. 3). அமைச்சர்கள் தனித்தனியாக பிரதம மந்திரியால் பதவியிலிருந்து விலக்கப்படலாமெனினும் அமைச்சரவையை முழுவதுமாகப் பிரதிநிதிகள் மன்றம்தான் விலக்க முடியும். 69ஆம் விதி கூறுவதாவது: நம்பிக்கை யில்லாத் தீர்மானமொன்றை பிரதிநிதிகள் மன்றம் ஏற்றாலோ அல்லது நம்பிக்கைகோரும் தீர்மானமொன்றை நிராகரித் தாலோ பத்து நாட்களுக்குள் பிரதிநிதிகள் மன்றம் கலைக்கப் படாவிட்டால் அமைச்சரவை பதவியை உடனே ராஜினமா செய்ய வேண்டும்.

பிரதிநிதிகள் மன்றத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கின்ற வரையில்தான் அது பதவியில் தொடர்ந்திருக்க முடியும் என்பதுதான் இதற்குப் பொருள். நம்பிக்கை இழக்கப்பட்ட பிறகு மாற்றுக்கட்சி அரசாங்கம் நிறுவுவதற்கு வழி செய்யும் வகையில் அமைச்சரவை பதவியிலிருந்து விலக வேண்டும். அரசாங்கம் விலகவில்லையாயின் பிரதிநிதிகள் மன்றம் கலைக்கப்படவேண்டுமென்று அது சிபாரிசு செய் கிறது. பிரதிநிதிகள் மன்றம் என்று கலைக்கப்பட்டதோ அன்றிலிருந்து நாற்பது நாட்களுக்குள் அதன் புதிய

உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான பொதுத் தேர்தல்கள் நடைபெற வேண்டும். எந்த மன்றத்திற்கு அமைச்சரவை பொறுப்புடையதாக இருக்கிறதோ அந்த மன்றத்தைக் கலைப்பதற்கு அதற்கு அதிகாரமிருக்கும்போது தான் கூட்டுப்பொறுப்பு சிறந்த முறையில் பின்பற்றப்படுவதற்கான நல்வாய்ப்பு இருக்கும் எனலாம். அமைச்சரவையின் கூட்டுப்பொறுப்பு அரசியலமைப்பின் 70ஆம் விதியாலும் மேலும் வற்புறுத்திச் சொல்லப்படுகிறது. அது கூறுவதாவது : பிரதம மந்திரி பதவி காலியாக இருக்கும்போது, அமைச்சரவை முழுவதுமாக பதவி விலகல் வேண்டும். பிரதமமந்திரி இல்லாத அமைச்சரவை சட்டத்திற்கு அப்பாற்பட்டது. அவர் இல்லாதபோது அமைச்சரவையும் இல்லை. பிரதிநிதிகள் மன்றத்திலுள்ள பெரும்பான்மை கட்சி அல்லது கட்சிகளின் தலைவர் பிரதம மந்திரிதான்.

பொறுப்பும் கட்டுப்படுத்தலும் (Control) ஒன்றோடொன்று இணைந்தவை. நிர்வாகத்தை இரண்டு முறைகளில் பிரதிநிதிகள் மன்றம் கட்டுப்பாட்டில் வைக்கிறது. வினாக்கள் எழுப்புதலும், குறுக்கீடு விவாதங்கள் கோருவதும் முதலாவது முறையாகும். இம்முறை ஆட்சி சம்பந்தப்பட்ட பல்வேறு விஷயங்களைப்பற்றிய செய்தியைப் பெறுவதற்கும், அதிகாரம் தவறான வழியில் செலுத்தப்பட்டிருக்குமானால் அதற்குப் பரிகாரம் தேடிப் பெறுவதற்கும் உதவுகிறது. இவ்விடத்தில் 'அரசாங்க நடவடிக்கைகளுக்கு மாத்திரமட்டுமல்லாமல் சமூக நடைமுறைகள் சரியான முறையில் இயங்குவதற்குத் தேவையான ஞானத்தைப் பெறுவதற்கும் பாராளுமன்றமுறை அரசாங்கம் பெற்றிருக்கும் திறமைக்குத் தகுந்தாற்போல அத்தகைய அரசாங்கம் வாழ்கிறது அல்லது மடிகிறது' என்று பேராசிரியர் லாஸ்கி என்பார் கூறியிருப்பதை கவனத்தில் கொள்வது நல்லது. தேசிய பொது விவகாரங்கள், அயல் நாடுகளுடனான உறவுகள் பற்றி பிரதம மந்திரி டையட்டிற்கு அவ்வப்போதும் குறைந்தது ஆண்டுக்கொரு முறையும் தகவல் தரவேண்டுமென அரசியலமைப்பு கூறுகிறது. அல்லாமலும் தேசிய நிதி நிலைமைகள் பற்றியும் மாதந்தோறுமோ அல்லது ஆண்டுக்கொரு முறையோ அமைச்சரவை டையட்டிற்கும் மக்களுக்கும் அ. வி. 91 அடிப்படையில் அறிக்கை சமர்ப்பிக்கிறது. இவ்வறிக்கை நிதி சம்பந்தப்பட்ட எல்லா அம்சங்களையும் ஆட்சித்துறையின் பிரச்சினைகளையும் விவரிக்கிறது. டையட் சகல விதமான உடன்படிக்கைகளையும் ஆமோதிக்க வேண்டும்.

பிரதிநிதிகள் மன்றத்தில் அடிக்கடி அரசாங்கத்தின் மீது சொல்லப்படும் கடிந்துரை அல்லதுகுறைகூறல் இரண்டாவது முறையாகும். பிரதிநிதிகள் மன்றம் பலவற்றையும் விவாதம் செய்யும் கழகமுமாகும். பெரும்பாலும் இவ்விவாதம் மசோதாக்கள் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்போது நடை பெறுகிறது. அத்தகைய சந்தர்ப்பங்களில் அரசாங்கத்தின் கொள்கைகளனைத்தும் புனராய்வு செய்யப்படுகிறதெனலாம். மசோதாவொன்றின் தோல்வி அரசாங்கத்தின் தோல்வியென ஆகுமாதலின் மசோதாவைத் தோற்கடிப்பதற்கும், முடியுமானால் அரசாங்கத்தை வீழ்த்துவதற்கும் எதிர்க்கட்சி தீவிர முயற்சி செய்யும். அதற்கும் மேலாக அரசாங்கம் தன் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் வாதிப்பதற்கு எல்லா முயற்சியையும் மேற்கொள்ளும். தேசிய நிதிநிலைமைகள் செலவினங்கள் பற்றிய விவாதம் வரும்போது அரசாங்கத்தைக் குறைகூறுவதற்கு மற்றுமொரு வாய்ப்புக் கிடைக்கிறது.

நிர்வாக அதிகாரம் பெற்றிருக்கும் அமைச்சரவையைத் தாக்குவதற்கு எதிர்க்கட்சிகளின் வாயிலாகப் பிரதிநிதிகள் மன்றம் பெற்றிருக்கும் சந்தர்ப்பங்கள் அம்மன்றம் நிர்வாகத்தின் மீதான தன் கட்டுப்பாட்டைச் செலுத்தப் போதுமானவைகளாகயிருக்கிறதெனலாம். அரசியலமைப்பும் டையட்டின் ஒவ்வொரு மன்றமும் விசாரணை செய்வதற்காக குழுக்களை நியமிக்க வகைசெய்கிறது. இவ்வாறு நியமிக்கப் படும் குழுக்கள் அரசாங்கத்தின் எந்தவொரு அம்சம் பற்றியும் விசாரணை செய்வதுடன், விசாரணைக்கு சாட்சிகள் வர வேண்டுமென்று வற்புறுத்துவதற்கும், ஆவணங்களைக் கோரி பெறுவதற்கும் அதிகாரம் பெற்றிருக்கின்றன. குழுக்கள் மூலமான விசாரணை மக்களாட்சித் தத்துவங்களுக்கிணங்க செயற்படும் அரசாங்கங்களைப் பொறுத்தவரை பொருளற்ற தெனத் தோன்றினாலும், ஆட்சித்துறை ஓரளவிற்குக் கட்டுப் பாடுடனும் பொறுப்புடனும் நடந்துகொள்வதற்கு உதவியாக இருக்கிறதென்பதை அடியோடு ஒதுக்கி விட முடியாது.

**நீதிப்பணிகள்** (Judicial Functions)

எந்தெந்த நீதிபதிகள் பதவியிலிருந்து விலகவேண்டுமென்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றனவோ அவர்களுக்கெதிரான வழக்குகளை விசாரணை

செய்வதற்கு இருமன்றங்களையும் சேர்ந்த உறுப்பினர்களைக் கொண்ட அரசுத்துரோகக் குற்ற விசாரணை நீதிமன்ற மொன்றை ஏற்படுத்த அரசியலமைப்பின் 64ஆம் விதி ஏற்பாடு செய்கிறது. நீதிபதிகள் அரசுத்துரோகக் குற்றச் சாட்டு மூலமாக அல்லாமல் இதர வகைகளில் பதவியிலிருந்து விலக்கப்படக்கூடாதென்று 78ஆம் விதி மேலும் கூறுகிறது. அரசுத்துரோகக் குற்ற விசாரணை நீதிமன்றத்தில் ஒவ்வொன்றி லிருந்தும் எழுவர் என்ற கணக்கில் டையட்டின் பதினான்கு பேர்கள் அங்கம் வகிக்கிறார்கள். அம்மன்றம் குற்றச்சாட்டுக் குழுவின் தாக்கீதின் பேரில் அவர்களை விசாரணை செய்கிறது. குற்றச்சாட்டுக் குழுவிலும் இருமன்றங்களையும் சேர்ந்த உறுப்பினர்கள் சமமான எண்ணிக்கையினராகவே நியமிக்கப் படுகின்றனர். ஒரே சமயத்தில் இரண்டிலும் ஒருவர் உறுப்பினராக இருக்க முடியாது.

**அரசியலமைப்பு சம்பந்தப்பட்ட பணிகள்** (Constituent Functions)

அரசியலமைப்புத் திருத்தங்கள் இருமன்றங்களில் எதில் வேண்டுமானாலும் முதலில் துவக்கி வைக்கப்படலாம். ஒவ்வொரு மன்றத்திலும் மன்றத்தின் மொத்த உறுப்பினர் கள் தொகையில் மூன்றிலிரு பங்கு பெரும்பான்மை பலத் துடன் மசோதா நிறைவேற்றப்பட்டதும் மக்களுடைய சம்மதம் பெற குடியொப்பம் நடைபெறுகிறது. அதில் வாக்களிப்பவர்களில் பெரும்பான்மையோரின் சம்மதம் கிடைக்குமானால் மசோதா நிறைவேறுகிறது. இவ்வாறு பிரதிநிதிகள் மன்றத்திற்கு அரசியலமைப்பைத் திருத்து வதில் பங்கிருப்பது தெரியவரும்.

**தேர்தல் பணிகள்** (Electoral Functions)

பிரதிநிதிகள் மன்றம் கவுன்சிலர்கள் மன்றத்தோடு சேர்ந்து பிரதம மந்திரியை நியமிக்கிறது. இருமன்றங்களும் தத்தம் உறுப்பினர்களுக்கு இருக்க வேண்டிய தகுதிகளைத் தானே முடிவு செய்து கொள்கின்றன. அதன் உறுப்பினர் கள் தகுதிகள் பற்றியெழும் தகராறுகளில் ஒவ்வொரு மன்றமும் தானே நீதிபதியாக இருந்து முடிவு செய்கிறது.

# 8. சட்டமியற்றல் பின்பற்றப்படும் முறை
(Legislative Proceedure)

**சட்டமியற்று முறையில் விசித்திரங்கள்**
(Peculiarities of the Legislative proceedure)

ஜப்பானில் சட்டமியற்றுவதற்குப் பின்பற்றப்படும் முறை, பாராளுமன்றமுறை அரசாங்கமுடைய நாடுகளில் பின்பற்றப் படும் முறைகளினின்றும் முற்றிலும் மாறுபட்டதாக இருக் கிறது. உண்மையில் அது எளியதாக இருக்கிறது. மசோதா வொன்று நிறைவேற்றப்படுவதற்கு மூன்று சட்டங்கள் தான் இருக்கின்றன. அவையாவன: தாக்கல் செய்தல், குழுநிலை, மன்றத்தின் பரிசீலனை ஆகியவையே அவை. இதேமுறை இருமன்றங்களிலும் பின்பற்றப்படுகிறது. இருமன்றங்களும் மசோதாவொன்றை நிறைவேற்றும்போது அது டையட்டினால் நிறைவேற்றப்பட்ட சட்டமாகிறது. பேரரசர் அதை ஏற்றுக் கொண்டு பிரகடனப்படுத்துகிறார். அவர் அதை நிராகரிக்க முடியாது.

மசோதா, மன்றத்தின் முழுக்கூட்டத்தில் தாக்கல் செய்யப் படும்போது சாதாரணமாக அதன் நோக்கங்களும், குறிக்கோள் களும் விளக்கப்படுவதில்லை. எனினும் வழிவகைகள் பற்றிய குழு அத்தகைய விளக்கம் ஏதேனுமொரு மசோதாவிற்கு, அம்மசோதா குழுப்பரிசீலனைக்கு அனுப்பப்படுவதற்கு முன் தேவையெனக் கருதுமானால் விளக்கம் தரப்படுகிறது. மற்றுமொரு முக்கியமான அம்சம் எதிர்த்தரப்பினர் மசோதா நிறைவேற்றப்படாதிருப்பதற்கு என்னென்ன தந்திரங் களையும், வித்தைகளையும் கையாளமுடியுமோ அவ்வளவையும்

கையாண்டு பார்ப்பது. இது சட்டமியற்றும் வரலாற்றிலேயே காணப்படாததொன்றாகும். 1955 முதல் பெரும்பான்மை பலம் குறையாமல் விளங்கும் லிபரல் ஜனநாயகக்கட்சி சோஷலிசவாதிகளையும், அவர்களுடைய தோழமைக் கட்சியினரையும் நிரந்தர சிறுபான்மையிலேயே வைத்திருக்கிறதெனலாம். பிரதிநிதிகள் மன்றத்தில் வாக்கெடுப்பு கடுமையான கட்சிக்கட்டுப்பாட்டு அடிப்படையில் எடுக்கப்படுவதால் மசோதா சட்டமாவதற்கு முன்பு சாத்தியமான எல்லா தடுப்பு நடவடிக்கைகளையும் எதிர்க்கட்சி எடுக்கும். எதிர்க்கட்சியினர் நீண்டநேரம் பேசுவதன் மூலமாக காலதாமதம் செய்வதுடன் குழப்பம், கலகம், பலாத்காரம் போன்ற முறைகளை மன்றத்தினுள்ளும் தெருக்களிலும் பின்பற்றுவர். இதைத் தவிர மற்றுமொரு தடைச்சாதனமும் இருக்கிறது. ஆத்திரமும் ஏமாற்றமும் அடைந்த எதிர்க்கட்சியினர் சபாநாயகர் மன்றத்தில் அமைதியை மீண்டும் ஏற்படுத்தமுடியாதவாறு மன்றம் கூடும் கட்டிடத்தின் தாழ்வாரங்களையும், நுழைவாயில்களையும் அடைத்துவிடுவர். கூட்டத்தை மீண்டும் கூட்டுவதைத் தடைசெய்யும் உறுப்பினர்களை சபையினின்றும் வலுக்கட்டாயமாக அகற்றுவதற்காக சபாநாயகர் காவலர்களை சபையினுள்ளே பல தடவைகளில் அழைக்கவேண்டியிருந்திருக்கிறது. மற்றுமொரு தடுப்புத் தந்திரச்சாதனம் இரு மன்றங்களின் முழுக்கூட்டங்களையும், குழுக்கூட்டங்களையும் பகிஷ்காரம் செய்வதாகும்.

**மசோதாக்களின் வகைகள்** (Kinds of Bills)

மசோதாக்கள் இருவகைப்படும். அவை அரசாங்க மசோதாக்கள், உறுப்பினர்கள் மசோதாக்கள் என்பவை. அரசாங்க மசோதாவும், உறுப்பினர் மசோதாவும் அவற்றின் பொருளடக்கத்தைப் பொறுத்தமட்டில் மாறுபடாமல் ஒரே மாதிரியாகவும் பொது விஷயங்களைப்பற்றியதாகவுமிருக்கலாம். ஆனால், அரசாங்க மசோதா பிரதம மந்திரியினால் அல்லது இதரமந்திரிகளுள் ஒருவரால் டையட்டின் ஏதேனுமொரு மன்றத்தில் தாக்கல் செய்யப்படுகிறது. உறுப்பினர் மசோதா உறுப்பினரொருவரால் கொண்டுவரப்படுகிறது. அரசாங்க மசோதா தோற்கடிக்கப்படுமானால் அது அரசாங்க நெருக்கடியைத் தோற்றுவித்து அமைச்சரவை பதவியிலிருந்து விலகுவதையோ அல்லது மன்றத்தின் கலைப்பையோ தோற்றுவிக்கலாம்.

**மசோதா தாக்கல் செய்யப்படுதல்** (Introduction of the Bill)

அரசாங்க மசோதா எப்போதுமே அமைச்சரவையினுல் தீர்மானிக்கப்பட்ட கொள்கையடிப்படையைப் பிரதிபலிப்பதாகும். அதன் நோக்கம் நடைமுறையில் பின்பற்றப்பட்டு வரும் சட்டத்தை திருத்துவதாகவோ அல்லது புதியதாகவொரு சட்டத்தை ஏற்படுத்துவதாகவோ இருக்கலாம். இரண்டில் எதுவாக இருப்பினும் அதற்கான பிரேரணை அமைச்சரகங்களில் ஏதேனுமொன்றில் உருவாகி பல நிலைகளையும் கூர்ந்து, அரசாங்கத்தின் துறைகளில் வடிவமைப்புக் கொடுக்கப்படுகிறது. கடைசியாக சம்பந்தப்பட்ட அமைச்சரால் ஆமோதிக்கப்பட்ட பிறகு நகல் மசோதா (Draft Bill) சட்டக்கழகத்திற்கு (Bureau of Legislation) அனுப்பப்பட்டு அங்கு அது விற்பன்னர்களால் பரிசோதிக்கப்படுகிறது. அங்கிருந்து பிறகு அது அமைச்சரவை செயலகத்திற்குச் செல்கிறது. கடைசியாக அமைச்சரவையின் அனுமதிக்கு அது சமர்ப்பிக்கப்படுகிறது.

அமைச்சரவை அந்த நகல் மசோதாவை ஆமோதித்துவிடுமாஞல் டையட்டின் இருமன்றங்களில் ஏதேனுமொரு மன்றத்தில் தாக்கல் செய்யப்படுவதற்கு அது தயாராக இருக்கிறது. எந்த மன்றத்தில் தாக்கல் செய்யப்படவேண்டுமென்று விரும்பப்படுகிறதோ அந்த மன்றத்தின் தலைவரிடம் பிரதம மந்திரியின் பெயரால் அது தாக்கல் செய்யப்படுகிறது. ஆனுல், நிதிமசோதா பிரதிநிதிகள் மன்றத்தில்தான் முதலில் தாக்கல் செய்யப்படவேண்டும். சட்டமசோதாவொன்று முதலில் கவுன்சிலர்கள் மன்றத்தில் தாக்கல் செய்யப்படுமாயின் அதன்படியொன்று ஐந்து நாட்களுக்குள்ளாகப் பிரதிநிதிகள் மன்றத்திற்கு அனுப்பப்படவேண்டும். இதே முறை மசோதா முதலில் பிரதிநிதிகள் மன்றத்தில் தாக்கல் செய்யப்படுமாஞல் கவுன்சிலர்கள் மன்றத்தைப் பொறுத்தும் பின்பற்றப்படுகிறது. பிரதிநிதிகள் மன்றத்தின் சபாநாயகர் அல்லது கவுன்சிலர்கள் மன்றத்தின் தலைவர் வழிவகைகள் குழுவின் (Committee of ways & Means) சிபாரிசுக்கிணங்க அவ்வாறு தாக்கல் செய்யப்படும் மசோதாவை பொருத்தமான குழுவொன்றிற்கு அனுப்புவார். மசோதாவொன்று மிக அவசரமானதென்று கருதப்படும்போது, குழுப்பரிசீலனை செலுத்துங்குழு (Steering Committee) முடிவிற்கிணங்க கைவிடப்படலாம். 'இம்முறை சிறப்பாக உறுப்பினர் மசோதாவொன்றை எந்தக்குழு பரிசீலனை செய்ததோ அதன்

கருத்து முன்னுலேயே பெறப்படும்போது பின்பற்றப் படுகிறது'. பொதுவாக மசோதா மன்றத்தின் முழுக் கூட்டத்தில் பரிசீலிக்கப்படுவதில்லை. ஆனுல், வழிவகைக்குழு மசோதா மன்றத்தின் முழுக்கூட்டம் குழுவாகமாறி பரிசீலனை செய்யவேண்டுமென்று கருத்துத்தெரிவிக்குமானுல், அவ்வாறே பரிசீலிக்கப்படும்.

**குழுநிலை** (Committee Stage)

மசோதாவின் பயணத்தில் குழுநிலை மிகவும் முக்கியமான தாகும். மசோதா நிலைக்குழுவொன்றிற்கோ அல்லது தனிக்குழுவொன்றிற்கோ அனுப்பப்படலாம். அக்குழு 'தகுதியற்றது, அவசியமற்றது அல்லது விரும்பத்தக்கதல்ல' என்று கருதுமானுல் மசோதாவை மீண்டும் மன்றத்திற்கு அனுப்பாதிருந்துவிடலாம். இது மசோதாவைக்கொன்று விடுவதற்குச் சமமானதாகும். குழு, பொதுக்கூட்டங்களை நடத்துகிறது. அக்கூட்டங்களுக்கு பிரதம மந்திரியும், அமைச்சர்களும், இதர அரசாங்க அலுவலர்களும் வருகைதர வேண்டும் என்று குழு கோரலாம். அவர்கள் குழுவினுல் மசோதாபற்றி விடுக்கப்படும் வினுக்களுக்கான விடைகளையும் விளக்கங்களையும் தரவேண்டும். காவலர்களைக்கூட (Policemen) அழைத்து மசோதாபற்றிய அவர்களுடைய கருத்துகளைச் சொல்லுமாறு பணிக்கலாம். அது விசாரணை நிமித்தம் வெளிநாடுகள் உள்பட பிரயாணங்களை மேற்கொள்ளலாம். குழுவிற்கு உதவியாக பணிபுரிய, டையட்டின் ஆராய்ச்சி யாளர்கள் உள்பட அலுவலர்கள் யாவரும் எப்போதும் தயாராக இருக்கிருர்கள். மசோதாவைத் துல்லியமாகப் பரிசீலனை செய்வதற்காக தேசிய டையட்டின் நூலகப்பணிகளை நாடிப்பெறவும், எவ்வெப்பொழுதெல்லாம் அவசியமாக இருக் கிறதோ அவ்வப்பொழுதெல்லாம் சட்டம், அரசியலமைப்பு, ஆட்சித்துறை சம்பந்தப்பட்ட விஷயங்களில் கருத்துத் தெரிவிக்குமாறு சட்டக்கழகத்தை வற்புறுத்தவுங்கூடும்.

**மன்றப் பரிசீலனை** (Consideration by the House)

குழுவினுல் முற்றிலும் பரிசீலனை செய்யப்பட்ட பிறகு மசோதா மன்றத்தின் பரிசீலனைக்கும் வாக்கெடுப்பிற்கும் தாக்கல் செய்யப்படுகிறது. குழுவின் தலைவர் சிறுபான்மை யினர் முடிவெதுவுமிருக்குமானுல் அதனுடன் அறிக்கையை அளிக்கிருர். அதன்பிறகு மன்றம் பரிசீலனையையும் விவாதத்தையும் தொடங்குகிறது. அப்போது உறுப்பினர்கள்

மாற்றங்களைக் கொண்டுவரலாம். எல்லாப் பகுதிகளும் படிக்கப்பட்டு வாக்கெடுப்பில் நிறைவேறிய பிறகு மசோதா முழுவதுமாக நிறைவேற்றப்படுகிறது. வாக்கெடுப்பு முடிவில் தேக்க நிலையிருக்குமானால் அதையகற்ற சபாநாயகர் அவரது வாக்கைச் செலுத்துவார்.

**மசோதா சட்டமாகிறது** (A Bill Secomes Law)

ஒரு மன்றத்தில் மசோதா நிறைவேறியவுடன் அடுத்த மன்றத்திற்கு அது அனுப்பப்படுகிறது. அங்கும் இதே நடைமுறை பின்பற்றப்படுகிறது. இரண்டாவது மன்றம் மசோதாவை ஆமோதிக்குமானால் அது டையட்டினால் நிறைவேற்றப்பட்டதாக 'பிரகடனப்படுத்துவதற்காக' பேரரசருக்கு அனுப்பப்படும். பிறகு அது சட்டமாகிறது. ஆனால், இரண்டு மன்றங்களுக்குமிடையே மசோதாபற்றிய கருத்து வேறுபாடு இருக்குமானால் அவ்வேறுபாடு இருமன்றங்களின் கூட்டுக்குழுவினாலும் தீர்த்து வைக்கப்படமுடியாமல் போகுமானால் அல்லது கவுன்சிலர்கள் மன்றம் 60 நாட்களுக்கு நடவடிக்கை எதுவும் எடுக்கத் தவறுமானால், அத்தகைய மசோதாவை இரண்டாம் முறையாக கூட்டத்தில் கலந்து கொள்ளும் உறுப்பினர்களில் மூன்றிலிரண்டுபங்கு உறுப்பினர்களின் சம்மதத்தோடு பிரதிநிதிகள் மன்றம் நிறைவேற்றுமானால் மசோதா டையட்டினால் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்பட்டு சட்டமாகிறது.

**வரவு-செலவுத்திட்டம்** (Budget)

வரவு-செலவுத்திட்டம் நிறைவேற்றத்திற்கு மாறுபட்ட முறையொன்று பின்பற்றப்படுகிறது. 60ஆம் விதிப்படி வரவு-செலவுத்திட்டம் பிரதிநிதிகள் மன்றத்தில்தான் முதலில் தாக்கல் செய்யப்படவேண்டும். கவுன்சிலர்கள் மன்றத்தில் அது தொடங்க முடியாது. பிரதிநிதிகள் மன்றத்தில் வரவு-செலவுத்திட்டம் நிறைவேற்றப்பட்டதும் கவுன்சிலர்கள் மன்றத்திற்கு அனுப்பப்படுகிறது. கவுன்சிலர்கள் மன்றம் அதை 30 நாட்களுக்குள் ஏற்றுக்கொள்ளவேண்டும். அவ்வாறில்லாமல் அம்மன்றம் மாறுபட்ட முடிவைச் செய்யுமானால் இரண்டு மன்றங்களுக்குமிடையே ஏற்படும் கருத்து வேற்றுமையை கூட்டுக்குழு அகற்றத் தவறுமானால் அல்லது 30 நாட்களுக்குள் எந்த நடவடிக்கையையும் எடுக்கத் தவறுமானால், பிரதிநிதிகள் மன்றத்தின் முடிவே டையட்டின்

முடிவாகக் கொள்ளப்பட்டு, வரவு – செலவுத்திட்டம் ஆமோதிக்கப்படும்.

வரவு-செலவுத் திட்டத்தைத் தயாரித்து, ஆண்டுக்கொரு முறை டையட்டின் பரிசிலனைக்கும் சம்மதத்திற்கும் தாக்கல் செய்யவேண்டியது அமைச்சரவையின் அரசியலமைப்பு சம்பந்தப்பட்ட கடமையாகும். பல அமைச்சரகங்களாலும் சமர்ப்பிக்கப்பட்ட உத்தேசத் திட்டங்களையெல்லாம் பரிசிலித்து வரவு-செலவுத் திட்டத்தைத் தயாரிக்கும் வேலை செப்டம்பர் மாதத்தில் ஆரம்பிக்கிறது. இவ்வேலை மிகவும் கடினமான வேலை. ஏனெனில் பல அமைச்சரகங்களின் எதிர் பார்க்கும் திட்டங்கள் மிகைப்படுத்தப்பட்டதாக இருக்கும். அவைகளையெல்லாம் தீர ஆய்ந்து குறைக்கவேண்டிய இடத்தில் குறைத்து சரிசெய்யவேண்டிய இடத்தில் சரிசெய்யவேண்டும். இவ்வாறு தயாரிக்கப்படும் பட்ஜெட் அமைச்சரவையின் பரிசீலனைக்கு ஜனவரி மாதத்தில் செல்லும். அமைச்சரவை பல கூட்டங்களில் அதை விவாதித்து முடிவு செய்த பிறகு அமைச்சரகங்களுக்கு மீண்டும் அனுப்பப்படும். அதன் பிறகு நிதியமைச்சரகம் ஒவ்வொரு அமைச்சரகத்திடமிருந்தும் இறுதித் திட்டங்களைப்பெறுகிறது. அதன் பிறகு நிதியமைச்சர் ஏப்ரல் முதல் தேதி தொடங்கும் நிதியாண்டுக்கான வரவு-செலவுத் திட்டத்தைத் தயாரித்து மீண்டும் அமைச்சரவையின் முடிவான அனுமதிக்கு தாக்கல் செய்வார்.

வரவு-செலவுத்திட்டம் மசோதா ஜனவரி மாதக் கடைசியில் பிரதிநிதிகள் மன்றத்தில் தாக்கல் செய்யப்படுகிறது. கவுன்சிலர்கள் மன்றத்தில் நிதிமசோதா அடுத்தநாளே பெரும்பாலும் சமர்ப்பிக்கப்படுகிறது. பிரதம மந்திரியும், அயல்நாட்டு விவகார மந்திரியும், நிதிமந்திரியும், பொருளாதாரக் கொள்கைக் கழக இயக்குனரும் அத்திட்டம்பற்றி உரையாற்றுவார்.

அதன் பிறகு 51 பேர்கள் கொண்ட நிலைக்குழுவொன்று வரவினங்கள் செலவினங்கள் போன்ற எல்லா அம்சங்களையும் தீர அலசி ஆராயும். அப்போது மசோதாவிலுள்ள குறைகள் நிவர்த்திக்கப்படும். குழு தன்னுடைய பரிசீலனையை முடித்துக் கொண்ட பிறகு அதன் தலைவர் பிரதிநிதிகள் மன்றத்திற்கு குழுவின் முடிவுபற்றி அறிக்கையைச் சமர்ப்பிப்பார். பிரதிநிதிகள் மன்றம் அதன் பிறகு மூன்று அல்லது நான்கு வாரங்களுக்கு வரவு-செலவுத் திட்டம்பற்றிய விவாதத்தை நடத்தித்

தேவையான மாற்றங்களைச் செய்து நிறைவேற்றி கவுன்சிலர்கள் மன்றத்திற்கு அனுப்பும். அங்கும் மசோதா நிறைவேறுமானால் அது சட்டமாகி ஏப்ரல் முதல் தேதியி லிருந்து அமுலுக்கு வருகிறது. ஏப்ரல் முதல் தேதிக்குள் ஏதாவதொரு அசம்பாவிதம் காரணமாக மசோதா நிறைவேறாமல் போகுமானால் அது நிறைவேற்றப்படும்வரை மாதந்தோறும் தற்காலிகமாக பட்ஜெட்டை டையட் நிறை வேற்றும்.

**டையட்டின் குழுக்கள்** (Committees of the Diet)

சட்டமியற்றலில் டையட்டின் குழுக்கள் முதன்மையான இடத்தைப் பெறுகின்றனர். இவைகள் மெய்ஜி அரசிய லமைப்புக் காலத்திலேயே இம்பீரியல் டையட்டில் இருந்தன. ஆனால், அக்குழுக்கள் முக்கியமான பணியெதுவும் பெற்றிருக்க வில்லை. இப்போதுள்ள அரசியலமைப்பின்படி ஒவ்வொரு மன்றத்திற்கும் ஆரம்பத்தில் 22 நிலைக்குழுக்கள் இருந்தன. பிறகு அவை பதினாறாகக் குறைக்கப்பட்டு, அவ்வெண்ணிக் கையே இப்போதுமிருக்கிறது. ஒவ்வொரு மன்றத்திலுமுள்ள நிலைக்குழுக்களாவன: அமைச்சரவை, பிராந்திய நிர்வாகம், நீதிஅலுவல்கள், அயல்நாட்டு அலுவல்கள், நிதி, கல்வி பொது நலமும், தொழிலாளர், வேளாண்மை, காடுகளும் மீன் பிடித் தலும், வணிகமும் தொழிலும், போக்குவரத்து, செய்திகள், வரவு-செலவு கணக்கு செலுத்துதல், (Steering), கட்டுப்பாடு, (Discipline). இக்குழுக்களில் பெரும்பாலானவை அரசாங்கத் திலுள்ள துறைகளையொத்தவை.

நிலைக்குழுவொன்றில் முப்பது அல்லது நாற்பது அல்லது ஐம்பது உறுப்பினர்கள் இருப்பார்கள். ஆனால், கட்டுப்பாடு பற்றிய குழுவில் இருபது பேரும், வழிகாட்டுக்குழுவிலும் கணக்குக் குழுவிலும் தலா இருபத்தைந்து பேரும்தான் இருப்பர். டையட்டின் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட வுடன் அடுத்தபடியாக இக்குழுக்கள் அமைக்கப்படும். இக் குழுக்களின் உறுப்பினர்களை மன்றத்தலைவர்களே நியமிப்பார். கட்சிகளின் பலத்திற்குத் தகுந்தாற்போல குழுக்களில் அவற்றிற்குப் பிரதிநிதித்துவமும், தலைமைப் பதவியும் தரப்படும். பெரும்பாலும் அரசாங்கத்தை எந்தக் கட்சி அமைக்கிறதோ அந்த கட்சிக்கு மிக அதிகமான தலைமைப் பதவிகள் தரப்படுகின்றன. குழுத்தலைமைப் பதவி மிகுந்த சிறப்புடையது. சட்டங்கள் இயற்றுவது சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிநிரலை குழுத்தலைவர் கட்டுப்படுத்துவதோடன்றி

குழுக்கள் செயல்படும் முறையை வகுத்து நடத்துவதும் அவரே. சான்றாக, குழுக்கூட்டம் எப்போது துவங்க வேண்டும், எப்போது முடிய வேண்டும், குழு உறுப்பினர்கள் எவ்வளவு நேரம் பேச வேண்டும் என்பன போன்ற வற்றையும், விவாதத்தின் தன்மையையும் போக்கையும் ஒழுங்குபடுத்துவது தலைவரே என்பதிலிருந்து அவர் எத்தகைய முக்கியமானவர் என்பது தெரியவரும்.

சட்டமியற்றுவதில் நிலைக்குழுக்கள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. அவைகள் சட்டப்பிரேரணைகளை நிறைவேறு மாறு அல்லது நிறைவேறாதவாறு செய்ய வல்லவை. அவைகள் தான் எந்தெந்த மசோதாக்கள் சட்டமாகத் தகுந்தவை என்று தேர்ந்தெடுத்து, அவைகளை சிபாரிசு செய்து சட்டமாகுமாறு செய்கின்றன. சட்டப்பிரேரணைகள் எல்லா வற்றையும் இக்குழுக்கள் தீவிரமாகப் பரிசீலனை செய்வதோடு அவை சம்பந்தப்பட்ட எல்லாப் புள்ளிவிவரங்களையும் பல ஆதாரங்களிலிருந்தும் சேகரம் செய்கின்றன. இக்குழுக்கள் விரும்பும் எவரும் அவை முன் தோன்றி தங்கள் வசமுள்ள விவரங்களைத் தரவேண்டும். அவ்வாறு அவர்கள் செய்யத் தவறினால் அக்குழுக்களை அவமதித்த குற்றத்திற்காளாவர்.

இந்த நிலைக் குழுக்களிலுள்ள உறுப்பினர்களின் எண்ணிக்கை, அவர்கள் செயலாற்றும் விதம் ஆகியவை காரணமாக இக்குழுக்கள் பலவாறாகக் குறை கூறப்பட்டு வருகின்றன. இக்குழுக்களின் எண்ணிக்கையும் மிக அதிக மாக இருப்பதால் நாட்டு அலுவல்கள் சுமூகமாக நடைபெற அவை தடையாக இருக்கின்றன என்பதும் ஒரு கருத்து. அரசாங்கம் ஒருமித்து அமைந்து தேசிய பிரச்சினைகளை விரை வாகவும், சீரிய முறையிலும் நடத்த வேண்டும். மசோதாக் களின் பரிசீலனை குழுக்கூட்டங்களிலேயே நடந்து முடிந்து விடுவதால், அப்பரிசீலனை குழுக்களில் இடம்பெறாத சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு எந்த அடிப்படையில் மசோதாக் கள் உருவாக்கப்பட்டன என்பது போன்ற விவரங்கள் தெரியாமல் போய்விடுகின்றன. மசோதாக்களின் நோக்கங் களும், குறிக்கோள்களும் பாராளுமன்றத்தின் முழுக் கூட்டத்தில் விளக்கிக் கூறப்படுவதில்லை. எனவே, டையட் உறுப்பினர்களிடையே தேவையான உற்சாகமிருப்பதில்லை. 'இது டையட்டில் நடைபெறும் விவாதங்கள் தகுந்த முறையில் பயன்படுத்தப்படுவதை சிரமமானதாக ஆக்கு கிறது. உண்மையில் மன்றத்தில் நடைபெறும் பொது

விவாதத்தின் சிறப்பையும் தரத்தையும் குறைத்து மதிப்பிடு மாறு செய்து விடுகிறது,' என்று யானகா என்பவர் குறிப்பிடு கிறார். மேலும், இந்நிலைக்குழுக்கள் எல்லாம் அரசாங்கத்தி லுள்ள துறைகளுக்குண்டானவைகளாக இருப்பதால் அவை அமைச்சரகங்களோடும், அமைச்சர்களோடும் நெருங்கிய தொடர்புடையவைகளாக இருக்கின்றன. இத்தொடர்பு நிர்வாகத்துறையைப் பலப்படுத்தி, சட்டத்துறையை பல வீனப்படுத்துவதாக இருக்கிறது என்பது ஒரு கருத்து. அல்லாமலும் இக்குழுக்களில் இடம்பெறுவோர் பலர் அதிகார வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாக முன்பு இருந்தவர்களாதலால் அதிகாரவர்க்கத்தை ஆதரிப்பவர்களாகவும் சட்டப்பொறுப்பு களைத் தகுந்தமுறையில் நிறைவேற்றாதவர்களாகவும் இருக் கிறார்கள். எனவே, நாட்டின் உச்சநிலையமாக விளங்கும் பாராளுமன்றத்தின் சிறப்பு குறைவதற்கு ஏதுவாகிறது என்றும் கருதப்படுகிறது.

நிலைக்குழுக்களைப்போன்று, குறிப்பிட்ட பிரச்சினைகளை கவனிப்பதற்காக தாற்காலிகக் (Ad-hoc) குழுக்களும், தனிக் குழுக்களும் இருக்கின்றன. இரு மன்றங்களுக்குமிடையே தோன்றும் கருத்துவேறுபாடுகளை அகற்ற இரு மன்ற உறுப்பினர்களையும் கொண்ட கூட்டுக்குழுவும், விசாரணைக் குழுவுமிருக்கின்றன. கூட்டுக்குழுவில் இரு மன்றங்களி லிருந்தும் சமமாக நியமிக்கப்பட்ட இருபது உறுப்பினர்கள் இருக்கிறார்கள். சம்பந்தப்பட்ட மன்றங்களைச் சேர்ந்த உறுப்பினர்கள் அவர்களுக்கெனத் தலைவர்களைத் தேர்ந் தெடுத்துக் கொள்வார்கள். இவ்விரு தலைவர்களும் குழுவிற்கு மாறி மாறித் தலைமை வகிப்பார்கள். இவையல்லாமல் சட்டம் சம்பந்தப்பட்ட குழுவொன்றிருக்கிறது. இக்குழுவும் கூட்டுக் குழுவாகும். இதில் 18 பேர்கள் இருப்பார்கள். இவர்களில் 10 பேர்கள் பிரதிநிதிகள் மன்றத்திலிருந்தும், 8 பேர்கள் கவுன்சிலர்கள் மன்றத்திலிருந்தும் நியமிக்கப்படுவார்கள். இக்குழுவிற்கும் சட்டமியற்றுவதற்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது. அதனுடைய வேலை பிரதிநிதிகள் மன்றத்திற்கும் கவுன்சிலர்கள் மன்றத்திற்குமிடையே நல்லுறவை ஏற்படுத்தி இருமன்றங்களும் சிறப்பானமுறையில் செயலாற்றுவதற்கு வகை செய்வதாகும். இக்குழு பிரதிநிதிகள் மன்ற சபா நாயகருக்கும், கவுன்சிலர்கள் மன்றத்தலைவருக்கும், அவற்றின் ஒவ்வொரு கூட்டத்தொடர் ஆரம்பிக்கும்போது அதன் அறிக்கையைச் சமர்ப்பிக்கிறது.

# 9. நீதித்துறை

## Judiciary

**மெய்ஜி அரசியலமைப்பின் கீழ் நீதித்துறை:** மெய்ஜீ அரசிய லமைப்பு நடைமுறையில் இருந்த காலத்தில் நீதி முறையில் பெரிய மாற்றம் ஏற்பட்டது. பழங்காலத்தில் நிலமான்ய திட்டமுறையையொட்டி ஏற்பட்டிருந்த தத்துவங்கள் கைவிடப்பட்டு, ஐரோப்பிய முறையைச் சார்ந்த நீதித் தத்துவங்களை அடிப்படையாகக்கொண்ட புதுச்சட்டங்கள் ஜெர்மானிய, பிரெஞ்சு வழக்கறிஞர்களின் துணைகொண்டு இயற்றப்பட்டன. ஆங்கில-சக்சேனிய நீதிமுறை இங்கு பின்பற்றப்படவில்லை. எனவே, நீதித்துறை சுதந்திரமான தென்றில்லாமல் நிர்வாகத்தின் ஒரு பிரிவாகக் கருதப்பட்டு, அதன் நிர்வாகம் நீதி அமைச்சரகத்தால் நடத்தப்பட்டது. நீதிபதிகள் சுதந்திரமாக நீதி வழங்கவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டாலும், அவர்கள் அமைச்சரகத் தயவில் இருந்ததால் அச் சுதந்திரம் எடுபடவில்லை. அங்கு சட்ட ஆட்சி (Rule of Law) கிடையாது. மக்களுடைய பொது நலமே நீதிமுறையின் ஆதாரமாகக் கொள்ளப்பட்டது. நீதி மன்றங்கள் சட்டத்தையோ அல்லது நிர்வாக உத்திரவையோ செல்லத்தகாததென்று அறிவிப்பதற்கு நீதிமன்றங்களுக்கு அதிகாரம் கிடையாது. அங்ஙனமே மக்களுடைய உரிமை களையும் சுதந்திரத்தையும் பாதுகாப்பதற்கும் அவற்றிற்கு அதிகாரம் கிடையாது. ஆட்சித்துறை தீர்ப்பு, ஆட்சிதுறை வழக்கு நீதிமன்றத்தின் அதிகார வரம்புக்குட்பட்டது.

முதலில் மூன்றுவகை நீதிமன்றங்கள் இருந்தன. சாதாரண சிவில், குற்றவியல் நீதிமன்றங்கள், ஆட்சித்துறை வழக்கு நீதிமன்றம் (Court of Administrative Litigation) இராணுவ நீதிமன்றம் என்பவை அவை. சாதாரண சிவில்

குற்றவியல் நீதிமன்றங்களுக்குத் தலைமையாக உச்ச நீதி மன்றம் இருந்தது. இம்மன்றத்தில் 45 நீதிபதிகள் இருந்தார்கள். அம்மன்றம் பிரிவு ஒன்றிற்கு 5 நீதிபதிகளைக்கொண்ட 9 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. உச்சநீதிமன்றம் மூல, அப்பீல் வழக்கு விசாரணை அதிகாரத்தைப் பெற்றிருந்தது. பேரரசு குடும்பத்திற்கு எதிரான கடுமையான அல்லது துரோக வழக்குகளில் அதற்கு மூல அதிகாரமிருந்தது. அப்பீல் அதிகாரத்தைப் பொறுத்தவரை, அதற்கு சிவில் குற்றவியல் வழக்குகளில் கீழ்மன்றங்களிலிருந்து வந்தவைகளை விசாரிக்கும் அதிகாரம் பெற்றிருந்தது.

உச்சநீதிமன்றத்திற்கு அடுத்தாற்போல, மாநிலம் ஒவ்வொன்றிற்கும் ஒன்று என மொத்தம் ஏழு உயர்நீதிமன்றங்கள் இருந்தன. கீழ்நீதிமன்றங்களிலிருந்து வந்த அப்பீல் வழக்குகளை உயர்நீதிமன்றங்கள் விசாரித்தன. உயர்நீதிமன்றங்களுக்குகீழே பிரிபெக்சர் (Prefecture) ஒவ்வொன்றுக்கும் குறைந்தது ஒன்றுவீதம் மொத்தம் 50 மாவட்ட நீதிமன்றங்கள் இருந்தன. இம்மாவட்ட நீதிமன்றங்கள் மிகத்தீவிரமான சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் பெற்றிருந்தன. இவை எல்லாவற்றிற்கும் கீழ் கிட்டத்தட்ட மூன்னூறுக்கும் (300) அதிகமான சாதாரண நீதிமன்றங்கள் (Local Courts) இருந்தன. இவைகள் சாதாரண வழக்குகளைக் கேட்டன.

ஆட்சித்துறை வழக்குநீதிமன்றம், பிரான்சு நாட்டிலிருந்த அத்தகைய நீதிமன்றத்தின் மறுபதிப்பாக இருந்தது. அது ஐடோ இளவரசர் (Prince Ito) கொள்கையடிப்படையில் அமைக்கப்பட்டிருந்தது. அக்கொள்கையாவது 'நீதித்துறையின் கட்டுப்பாட்டிற்கும், மேற்பார்வைக்கும் ஆட்சித்துறை அலுவல்கள் உட்படுத்தப்படுமானால், ஆட்சித்துறைச் செயல்களைப் புனராய்வதற்கும், செல்லத்தகாதவைகளாக்குவதற்கும் நீதிமன்றங்களுக்கு அதிகாரம் தரப்படுமானால் நிர்வாகத்துறை நீதித்துறைக்கும் கீழானதாகக் கருதப்பட்டு நிர்வாகப்பிரிவின் ஐக்கியத்தையும் சிறப்புத் தன்மையையும் பாதிக்கும்'.

**1947ஆம் ஆண்டு அரசியலமைப்பின்படி நீதிமுறையின் அம்சங்கள்**

இதர பலநிலையங்களைப்போல நீதித்துறையும் ஆக்கிரமிப்பு ஆட்சிக்காலத்தில் பலவகைகளில் மாற்றமடைந்தது. அந்த

Japanese people & Politics—Page 355 Yanaga.

மாற்றங்கள் நீதிமன்றங்களின் அமைப்பு, நீதி நடைமுறை சம்பந்தப்பட்டவைகளாகவும், அமெரிக்கர்களால் போற்றப் பட்ட குடியாட்சி மரபிலமைந்த சட்ட நீதியியல் தத்துவத்திற் கேற்பவும் இருந்தன. இம்மாற்றங்கள் பற்றி நொபுடக்கா ஐக் (Nobutaka Ike) கூறுவதாவது, 'ஐரோப்பியக் கண்டத்தில் பின்பற்றப்பட்ட முறைப்படியான தன்மையையோ அன்றி ஆங்கிலேய-சாக்சேனிய கருத்துகளையும், பழக்கங்களையும் ஆட்கொண்ட நீதிமுறையைப்போல வேறு அல்லாத ஆனால், ஆக்கிரமிப்புக் காலத்தன்மைக்கேற்ப அவை ஏற்பட்டதில் ஆச்சரியமில்லை'.[1]

பதவி உறுதிமொழிகூட, மொழியினாலும் உருவ அமைப் பாலும் அமெரிக்க ஐக்கியநாடுகளிலுள்ளவாறு மாற்றப் பட்டிருக்கிறது. பின்வரும் பக்கங்களில் ஜப்பானிய நீதிமுறை யில் ஏற்பட்டுள்ள மாற்றங்களைச் சுருக்கமாக விவரிக்கக் காண லாம்.

(1) அரசியலமைப்பு நீதித்துறையை நிர்வாகத்தினின்றும் பிரித்து அரசாங்கத்தின் சுதந்திரமான பிரிவாக அமைக்கிறது. 76ஆம் விதி உச்சநீதிமன்றத்திடமும் சட்டத்தினால் ஏற்படுத் தப்பட்டு, அதன்கீழ் இயங்கும் கீழ்மட்டத்திலுள்ள இதர நீதிமன்றங்களிடமும் 'நீதி அதிகாரம் முழுவதையும்' வழங்கு கிறது. மேலும் அது, தனிநீதிமன்றம் (Extraordinary Tribunal) ஏற்படுத்தப்படுவதையோ, 'நிர்வாகத்துறையோ அல்லது அதன் அனுமதிபெற்ற இதர நிறுவனங்களோ இறுதி நீதி அதிகாரந்தரப்படுவதையோ' தடைசெய்கிறது.

நீதித்துறையின் சுதந்திரத் தன்மையை வற்புறுத்துவதை எடுத்துக்காட்டும் வகையில் நாட்டின் நீதி சம்பந்தப்பட்ட அலுவல்கள் அனைத்தும் உச்சநீதிமன்றத்தின் கட்டுப்பாட்டில் விடப்பட்டிருக்கின்றன. 71ஆம் விதிப்படி வழக்குரைஞர்கள் (Attorneys) நீதிமன்றங்களின் உள்ளொழுங்கு, நீதி அலுவல் களின் நிர்வாகம் சம்பந்தப்பட்ட விஷயங்களிலும், நடைமுறை விதிகளிலும் முடிவெடுப்பதற்கான விதி செய்யும் (Rule Making) அதிகாரம் உச்சநீதிமன்றத்திற்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

(2) நீதிபதிகளின் சுதந்திரத்திற்கும், அவர்களின் கண்ணியத்திற்கும் அரசியலமைப்பு உத்திரவாதமளிக்கிறது.

[1] Yanaga Japanese people and Politics—Page 355

அது நீதிபதிகளனைவரும் 'அரசியலமைப்பினாலும், சட்டங்களாலும் தான் கட்டுப்படுத்தப்படுவார்கள் என்று அரசியலமைப்பின் 76ஆம் விதியில் கூறப்பட்டிருக்கிறது. உச்சநீதிமன்றத்தலைமை நீதிபதி அமைச்சரவையினால் சிபாரிசு செய்யப்பட்டு பேரரசரால் நியமிக்கப்படுகிறார் (அ. விதி. 6). இந்த நடைமுறை பிரதம மந்திரியின் அந்தஸ்திற்கும் கண்ணியத்திற்கும் சமமாகத் தலைமை நீதிபதி கருதப்படுவதற்கு வகை செய்வதாகச் சொல்லப்படுகிறது. உச்சநீதிமன்றத்தின் இதர நீதிபதிகள் அமைச்சரவையாலும், கீழ்மட்டத்திலுள்ள நீதிமன்றங்களுக்கான நீதிபதிகள் உச்சநீதிமன்றத்தால் அனுப்பப்படும் பட்டியலில் உள்ளவர்களிலிருந்தும் அமைச்சரவையினால் நியமிக்கப்படுகிறார்கள் (அ. விதி. 80). நீதிபதிகள் அவர்களுடைய கடமைகளை நிறைவேற்றத்தேவையான மனவளமும் உடல்வளமும் அற்றவர்களென நீதிமுறைப்படி அறிவிக்கப்படாதவரை இராஜத்துரோகக் குற்றச்சாட்டு அடிப்படையில் தான் நீக்கப்படலாம். நிர்வாகத்துறையோ அல்லது அதன் அதிகாரம்பெற்ற இதர நிறுவனங்களோ நீதிபதிகளுக்கெதிரான ஒழுங்கு நடவடிக்கையை எடுக்கமுடியாதென்பது அரசியலமைப்பின் 78ஆம் விதியினால் தெரியவருகிறது.

(3) உச்சநீதிமன்ற நீதிபதிகள் விஷயத்திலும் மக்கள் இறைமைக் கொள்கையை அரசியலமைப்பு கடைப்பிடிக்கிறது. அவர்கள் நியமனம், அவர்கள் நியமனம் செய்யப்பட்டபிறகு பிரதிநிதிகள் மன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க தேர்தல்கள் நடைபெறும்போதும், அதற்குப்பிறகு பத்தாண்டுகளுக்கு ஒருமுறையும் மக்களால் மறுபரிசீலனை செய்யப்படுகிறது. பெரும்பான்மையான வாக்காளர்கள் நியமனத்தை ஏற்கவில்லையெனில் நீதிபதி பதவியிலிருந்து விலக்கப்படுகிறார் (அ. விதி. 79). கீழ்மட்ட நீதிமன்றங்களுக்கான நீதிபதிகள் முதலில் பத்தாண்டு காலத்திற்கு நியமிக்கப்படுகிறார்கள். அதற்குப்பிறகும் அவர்கள் மீண்டும் நியமிக்கப்படலாம். உச்சநீதிமன்றத்தைச் சேர்ந்த நீதிபதிகள் எவரும் இதுவரை பதவியிலிருந்து நீக்கப்படவில்லை. அங்ஙனமே கீழ்மட்ட நீதிமன்ற நீதிபதிகளும் மீண்டும் நியமிக்கப்படுகிறார்கள். இருப்பினும், அவர்களுடையப் பதவிக்காலம் இருநிலைகளிலும் பரிசீலனைச் செய்யப்படவேண்டுமென்பது அரசியல் சட்டபூர்வமான உண்மையாகும்.

(4) நீதி அமைச்சரகக் கட்டுப்பாட்டிலுள்ள வழக்குப் பதிவாளரால் (Curator) செய்யப்படும் கிரிமினல் புலன்

விசாரணையினின்றும் நீதி நிர்வாகம் முழுவதுமாக பிரிக்கப் பட்டிருக்கிறது. அதனால், நீதிபதிகளும் வழக்குப் பதிவாளர் களும் தனித்தனியாகச் சுதந்திரமாகச் செயற்படும் பணியாளர் களாகின்றார்கள். வழக்குப் பதிவாளர்கள் நீதி அமைச்சரின் கீழ்ப்பணியாற்றும் சிவில் ஊழியர்களாக இருக்கிறார்கள். ஆனால், நீதித்துறை அரசாங்கத்தின் சுதந்திரத்துறையாக விளங்குகிறது.

(5) ஆட்சி சட்டக் (Rule of Law) கொள்கை ஜப்பானில் முதன்முதலாக அறிமுகப்படுத்தப்பட்டது. நாடு முழுவதும் இப்போது ஒரே அமைப்பைச் சேர்ந்த நீதிமன்றங்களும், ஒரே முறையைச் சேர்ந்த சட்டமுமே இருக்கின்றன. அதற்குத் தான் மக்கள் கீழ்ப்படிகின்றார்கள். நீதி அதிகாரம் முழுவதும் உச்சநீதிமன்றத்திற்குத் தரப்பட்டிருக்கிறது.

(6) கிரிமினல் நடைமுறைச்சட்டமும் சிவில் நடை முறைச்சட்டமும் முன்பிருந்ததைவிட அதிகமான பணியை நீதிமன்றங்களுக்கு வழங்குகின்றன. கைது செய்யப் படுவதற்கும், காவலில் வைப்பதற்குமான உத்திரவுகள் இப்போது நீதிமன்றங்களால் பிறப்பிக்கப்படுகின்றன. நீதி மன்றங்கள் குற்றஞ்சாட்டப்பட்டவர், குற்றஞ்செய்திருக்க மாட்டாரென்ற அடிப்படையில் வழக்குகளைத் தொடங்கு கின்றன. நீதித்தீர்ப்புகள் இப்போது பாமரமொழியிலேயே வழங்கப்படுகின்றன. அதனால் சாதாரண ஜப்பானியர்களும் அவைகளைப் புரிந்துகொள்ள முடிகிறது.

(7) உச்சநீதிமன்றம் மேல்மட்டத்திலுள்ள இறுதி நீதி மன்றம். அதற்கு சட்டம், ஆணை, ஒழுங்கு செய்தல், அரசாங்க நடவடிக்கைகள் அரசியல் சட்டபூர்வமானவையா இல்லையா என்பதை நிர்ணயிக்கும் அதிகாரம் இருக்கிறது (அ. விதி. 8). எனவே, அரசியலமைப்பு எல்லாவற்றிற்கும் மேலானதாகவும், உச்சநீதி மன்றத்திற்கு நீதிப்புனராய்வு உரிமை தெளிவாகத் தரப்பட்டிருக்கிறது.

(8) குடிமக்களுக்கு ஆதார உரிமைகளை அரசியலமைப்பு வழங்குகிறது. அவ்வுரிமைகளின் காப்பாளராக நீதி மன்றங்கள் உள்ளன. அரசியலமைப்பின் 97ஆம் விதி ஆதார உரிமைகள் எக்காலத்திலும் மீறப்படமுடியாதவை என்றும் அரசியலமைப்பே மேலான சட்டம் என்றும் தெளிவாகக் கூறுகிறது. இவ்வரசியலமைப்பிற்குட்பட்டுத்

தான் சட்டங்கள் பிறப்பிக்கலாம். ஆணைகள் பிறப்பிக்கலாம். அப்பொழுதுதான் அவைகள் சட்டபூர்வமானவையாகும்.

(9) நீதித்துறையின் பிறிதொரு அம்சம் குடும்ப உறவுகள் பற்றிய நீதிமன்றங்களை (Courts of Domestic Relations) ஏற்படுத்தியிருக்கும் முறையாகும். இந்நீதிமன்றங்கள் நீதிபதிகளையும், சாதாரண மக்களையும் கொண்டதாக அமைக்கப்பட்டிருக்கின்றன. அவை வழக்கு விசாரணையைப் பொருத்தமட்டில் நீதிமன்றங்கள் கடைப்பிடிக்கும் நடை முறைகளைப் பின்பற்றினாலும் சில சமயங்களில் வழக்கில் சம்பந்தப்பட்ட இருசாராரும் அதன் முடிவுகளை ஏற்றுத்தான் ஆகவேண்டும் என்று விதிக்கும் அதிகாரமுடையவை. இந் நீதிமன்றங்கள் குடும்ப உறவுகள், வயதுக்கு வராத இளைஞர் கள் செய்யும் குற்றங்கள் பற்றிய வழக்குகளை முடிவு செய்கின்றன.

(10) உச்சநீதிமன்றம் மகி (Maki) குறிப்பிட்டதுபோல 'அதிகாரப் பிரிவினைக்கொள்கையை சிறிதும் வழுவாது கடைப்பிடித்து வந்திருப்பதைப்போன்று, சட்டத்துறை மேலாண்மைக் கோட்பாட்டையும் (Doctrine of Legislative Supremacy) அதற்குச் சமமாக மதித்து நடந்து வருகிறது.'[1] அந்நீதிமன்றம், நீதியதிகாரம் முழுவதையும் தானே செலுத்த வேண்டுமென்பதை வற்புறுத்திச் செலுத்தி வருவதோடு, நீதித்துறையில் குறுக்கீடு இல்லாமலும், சுதந்திரத்தன்மை நிலை நாட்டப்படும் வகையிலும் செயலாற்றுகிறது. ஆனால், அதே சமயத்தில், சட்ட நிர்வாக உத்தரவுகள் அரசியலமைப்பிற்கு மாறுபட்டவை என்று அறிவிக்கப்படவேண்டுமென்பதையும் உறுதியாக ஏற்க மறுத்து விடுகிறது. அத்தகைய அறிவிப்புகள் சட்டத்துறை மேலாண்மையையும், அதிகாரப்பிரிவினைக் கொள்கையையும் மீறுவதாகும் என்று அது வாதிக்கிறது. அரசியலமைப்பிற்குப்புறம்பான சட்டங்கள் இயற்றப்படு மானால், அதற்குப் பரிகாரம் அரசியல் அடிப்படையில் காணப் படவேண்டும். இறைமை அதிகாரமுடைய மக்கள் டையட், அமைச்சரவைகளின் நடவடிக்கைகளில் தேர்தல் மூலமாகத் தீர்ப்பு வழங்க முடியுமென அது கூறுகிறது.

**நீதிமன்றங்களின் அமைப்பும் பணிகளும்**
(Organisation and Functions of the Court)

நீதித்துறையில் தற்போது ஒரு உச்சநீதிமன்றமும் 8 உயர்நீதிமன்றங்களும், 235 கிளைகளையுடைய 49 மாவட்ட

---

1 Maki, John M. Government and Politics in Japan. page 107.

நீதிமன்றங்களும் 570 சிறிய நீதிமன்றங்களும் இருக்கின்றன. இவையல்லாமல் 235 கிளைகளையுடைய குடும்ப உறவுகள் அல்லது குடும்ப நீதிமன்றங்களுமிருக்கின்றன.

**உச்ச நீதிமன்றம்** (The Supreme Court)

நீதித்துறையமைப்பின் மேல் மட்டத்தில் உச்சநீதிமன்றம் இருக்கிறது. அது டோக்கியோ நகரத்தில் அமைக்கப்பட்டு செயல்படுகின்றது. அது ஒரு தலைமை நீதிபதியையும் பதினான்கு இதர நிதிபதிகளையும் உடையதாக இருக்கிறது. தலைமை நீதிபதி அமைச்சரவையின் சிபாரிசின் பேரில் பேரரசரால் நியமிக்கப்படுகிறார். இதர நீதிபதிகள் அமைச்சரவையினால் பேரரசர் சான்றோடு நியமிக்கப்படுகிறார்கள். மொத்தமுள்ள பதினைந்து நீதிபதிகளில் பத்து நீதிபதிகள் குறைந்த பட்சம் இருபது ஆண்டுகால தொழில் அனுபவமும் சட்ட ஞானமும் உடையவர்களாக இருத்தல் வேண்டும். எஞ்சியுள்ள ஐவரும் சட்டத்துறையில் ஞானமும் அனுபவமும் உடையவர்களாக இருத்தல் வேண்டும். 'இது, நாட்டின் மிக உயர்ந்த நீதிமன்றத்தில் மிக உயர்ந்த–பரந்த நீதித்துவமும் அறிவாழமும் ஏற்படும் வகையில் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது.' உச்சநீதிமன்ற நீதிபதிகளின் நியமனம் முதலில் தேசிய குடியொப்பம் மூலமாக பொதுத்தேர்தல்கள் நடைபெறும்போதும் அதற்குப்பிறகு பத்தாண்டுகட்குப் பிறகு முதலில் நடைபெறும் தேர்தலின்போதும் பரிசீலனை செய்யப்படுகிறது. இதுவரையிலும் எவரும் பதவி நீக்கம் செய்யப்படவில்லையென்பது குறிப்பிடத்தக்கது. ஆனால், மக்கள் பரிசீலனைக்கு விடப்படும் இம்முறை 'நீதிமன்றத்தை கரடுமுரடான கட்சி அரசியலில் இழுத்துவிடக்கூடிய அபாயம் இருக்கிறதென்பதை' நினைவூட்டுகிறது.

உச்சநீதிமன்ற நீதிபதிகள் சட்டத்தினால் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்ற வயதை அடைந்ததும் அதாவது எழுபது வயதானதும் பதவியிலிருந்து ஓய்வு பெறவேண்டும். உச்சநீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்பட ஒருவருக்கு குறைந்தது நாற்பது வயதாகியிருக்கவேண்டும். நீதிபதிகள், மன, உடல் நலமின்மையால் அவர்களது கடமையைச் செய்ய முடியாது என நீதியடிப்படையில் அறிவிக்கப்பட்டிருந்தால் அல்லது நாட்டுத்துரோகக் குற்றச்சாட்டு மூலமாகத்தான் பதவியிலிருந்து நீக்கப்படலாம். நிர்வாகத்துறையோ அல்லாது அதன்பிரிவோ நீதிபதிகளுக்கெதிராக ஒழுங்கு நடவடிக்கை

எதுவும் எடுக்க முடியாது. அரசியலமைப்பின் 7ஆம் விதி எல்லா நீதிபதிகளும் மனச்சாட்சிக்கேற்பச் சுதந்திரமாகச் செயல்படுமாறும், அச்சுதந்திரத்திற்கு அவசியமான உத்தரவாதமளிக்கப்பட்டும் இருக்கவேண்டுமெனவும், அவையெல்லாம் அவர்களுடைய பதவிக்காலத்தில் குறைக்க முடியாதவாறும் இருக்கவேண்டுமென விதிக்கிறது.

உச்சநீதிமன்றம் ஜப்பானின் இறுதி நீதிமன்றமாகும். அதற்குமேல் வேறு நீதிமன்றம் கிடையாது. அதற்கு அரசாங்க நடவடிக்கை, ஒழுங்குவிதி, ஆணை, சட்டம் ஆகியவற்றின் செல்லுபடியாகும், ஆகாத தன்மையை நிர்ணயிக்க அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. இங்ஙனம், நீதிப்புனராய்வு செய்யும் அதிகாரம் அதற்கு ஐயப்பாட்டிற்கு இடமில்லாமல் அளிக்கப்பட்டிருக்கிறது. அரசியலமைப்புச் சட்டப்படி சட்டங்கள் இருக்கின்றனவா அல்லவா என்னும் வழக்குகள் யாவும் 15 நீதிபதிகளையும் கொண்ட ஆனால், குறைந்த பட்சம் 9 நீதிபதிகள் கலந்து கொள்ளும் பெரும் பிரிவினால் (Grand Bench) கேட்கப்படுகிறது. சட்டப்பிரச்சினைகள் கொண்ட இதர வழக்குகள் ஐந்து நீதிபதிகளைக் கொண்ட சிறுசிறு பிரிவினால் (Petty Bench) கேட்கப்படுகிறது. இவ்வழக்குகள் யாவும் மேல் முறையீடு (Appeal) அடிப்படையில் வருபவையாகும்.

உச்சநீதிமன்றத்திற்கு விதிசெய்யும் (Rule making) அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. அந்த ஆதாரத்தில் பழக்க வழக்கங்களையும் நடைமுறை விதிகளையும் வழக்குரைஞர்கள் (Attorneys) பற்றிய பொருட்களையும் நீதிமன்றங்கள் பின்பற்றவேண்டிய வேலை முறைகளையும், நீதிபரிபாலனம் பற்றிய விஷயங்களையும் அது நிர்ணயஞ்செய்கிறது. அரசாங்க வழக்குரைஞர்களும் (Public Procurator) உச்சநீதிமன்றத்தின் விதி-செய்யும் அதிகாரத்திற்குட்பட்டவர்கள். இது உண்மையிலேயே வழக்கத்திற்கு அதிகமாகத் தரப்பட்டிருக்கும் அதிகாரமாகும். உச்சநீதிமன்றம் தனக்குள்ள விதிசெய்யும் அதிகாரத்தின் ஒரு பகுதியை அதற்கும் கீழுள்ள நீதிமன்றங்களுக்கு வழங்கலாம். இவ்வாறு நாட்டிலுள்ள நீதித்துறையைக் கட்டுப்படுத்தி உச்சநீதிமன்றம் கண்காணித்து வருகிறது. 'நீதிக்கண்காணிப்புச் சம்பந்தப்பட்ட விரிவான அதிகாரங்களை உச்சநீதிமன்றம், சட்டப்படி அமைக்கப்பட்டு அதன் அதிகார எல்லைக்குட்பட்டிருக்கும் சட்ட ஆராய்ச்சி, பயிற்சிக்கழகத்தின் (Legal Research and Training) துணை

யினாலும் அதன் மூலமாகவும் செய்து வருகிறது. இதர பல பொறுப்புகளில் நீதித்துறையில் ஆர்வமுடைய ஒவ்வொருவருக்கும் போதுமான தகுந்த பயிற்சியைத்தருவது இக்கழகத்தின் பணியாகும்.' எனவே, நீதிபதியாகவோ, வழக்குரைஞராகவோ, அரசாங்க வழக்குரைஞராகவோ ஆக விரும்பும் எவரும் இக்கழகத்தில் படித்துப் பட்டம் பெற வேண்டும் அல்லது அதனில் அத்துறையில் பயிற்சி பெற்றிருக்கவேண்டும். மேலும் நீதிமன்ற எழுத்தர்களுக்கும் குடும்ப நீதிமன்ற அலுவலர்களுக்கும் இத்தகைய பல கழகங்களை உச்சநீதிமன்றம் நடத்துகிறது. கீழ்மட்ட நீதிமன்ற நீதிபதிகள் நியமனம் அமைச்சரவையினால் அனுப்பப்படும் பட்டியலில் உள்ளவர்களிலிருந்து உச்சநீதிமன்றத்தால் நியமிக்கப்படுகின்றார்கள்.

உயர்நீதிமன்றங்கள் (High Courts), உச்சநீதிமன்றத்திற்கு நேர் அடுத்தபடியாக எட்டு உயர்நீதிமன்றங்கள் இருக்கின்றன. உயர்நீதி மன்றமொன்றின் அதிகார வரம்பு அது எந்தப் பகுதிக்காக ஏற்படுத்தப்பட்டதோ அந்தப் பகுதி முழுவதும் செல்லுபடியாகும். இதனால் அது பிரதேச அதிகார வரம்புடையது என்பது தெளிவாகும். இந்நீதிமன்றங்களின் நீதிபதிகளின் எண்ணிக்கை நீதிமன்றத்திற்கு நீதிமன்றம் மாறுபடுகிறது. எடுத்துக்காட்டாக டோக்கியோ உயர்நீதிமன்றத்தில் 64 நீதிபதிகளும் சபோரோ (Saporro) நீதிமன்றத்தில் எழுவரும் இருப்பதைக் கூறலாம். நீதிமன்றம் மூன்று நீதிபதிகள் கொண்ட பிரிவாகச் செயற்படுகிறது. அரசாங்கத்தைக் கவிழ்க்க முயன்ற குற்றம் போன்ற வழக்குகளில், பிரிவில் (Bench) ஐந்து நீதிபதிகள் இருப்பார்கள். நீதிபதிகள் எடுத்த எடுப்பில் பத்தாண்டுப் பதவிக்காலத்திற்கு நியமிக்கப்படுகிறார்கள். அவர்கள் மீண்டும் நியமிக்கப்படலாம். அவர்கள் உச்சநீதிமன்றத்தால் அனுப்பப்படும் பெயர்ப்பட்டியலிலிருந்து அமைச்சரவையினால் நியமிக்கப்படுகிறார்கள். நீதிபதிகளாக நியமிக்கப்படுபவர்கள் குறைந்தது பத்தாண்டுகளுக்கு நீதித்துறையில் அனுபவமுடையவர்களாகவோ அல்லது அரசாங்க வழக்குரைஞராகவோ அல்லது வழக்குரைஞராக அனுபவமோ பெற்றிருக்க வேண்டும். உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பு மேல்முறையீடு சம்பந்தப்பட்டதாகும். பெரும்பாலான வழக்குகளில் முதலில் அதன் முடிவே இறுதியானதாகும். நீதிமன்றத்தின் மூலஅதிகார வரம்பு அரசாங்கத்தைக் கவிழ்ப்பதற்கான குற்றங்களைப்பற்றியதாகும்.

### மாவட்ட நீதிமன்றங்கள் (District Courts)

உயர்நீதிமன்றங்களுக்கு அடுத்தபடியாக ஹொக்கைடோ (Hokkaido) நீங்கலான இதர மாவட்டங்கள் ஒவ்வொன்றிற்கும் ஒன்று என மொத்தத்தில் 50 மாவட்ட நீதிமன்றங்கள் இருக்கின்றன. ஹொக்கைடோ மாவட்ட நீதிமன்றத்தில் மட்டும் நான்கு நீதிபதிகள் இருக்கின்றனர். இந்த நீதிமன்றங்களின் நீதிபதிகள் உயர்நீதி மன்றத்தின் நீதிபதிகளைப் போன்றே நியமிக்கப்படுகின்றார்கள். தகுதிகளும் உயர்நீதிமன்ற நீதிபதிகளுக்கு இருக்க வேண்டியவை போன்றவையேயாகும். மாவட்ட நீதிமன்றங்கள் பிரதான வழக்கு விசாரணை நீதிமன்றங்களாகும். இதர நீதிமன்றங்களுக்கு பிரத்தியேகமாகத் தரப்படாத எல்லா சிவில் நடவடிக்கைகளிலும் பொதுவான அதிகார வரம்புடையவைகளாகும். நீதிமன்றத்திற்கு ஒரு நீதிபதி தலைமை வகிக்கிறார். சிக்கலான, மோசமான வழக்குகளில் மூன்று நீதிபதிகளடங்கிய குழு விசாரணையை நடத்துகிறது.

மாவட்ட நீதிமன்றங்களோடு இணைக்கப்பட்ட 235 கிளைகளையுடைய 49 குடும்பஉறவு நீதிமன்றங்களுள்ளன. இந்த நீதிமன்றங்கள் ஜப்பானில் மட்டுமே காணப்படுபவையாகும். இவைகள் குடும்பத்திலும், உறவினர்களிடையேயும் சுமுகமான உறவை ஏற்படுத்தும் நோக்கத்தோடு ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. குடும்ப நீதிமன்றமென மக்களால் அழைக்கப்படும் ஒவ்வொன்றிலும் ஒரு நீதிபதியும், இரண்டு சாதாரண நபர்களும் இருக்கிறார்கள். இந்நீதிமன்றங்கள் விவாகரத்து, தனித்துவாழும் மனைவிக்காகத் தரப்படும் பணம், வாக்குறுதி மீறல், வாரிசுரிமை, பாகப்பிரிவினை, தத்தெடுத்தல், காப்பாளர் போன்ற குடும்பவிவகாரங்கள் பற்றிய வழக்குகளின் தீர்வுக்கான வசதிகளைச் செய்து தருகின்றன. நீதிமன்றத்திற்கு வெளியே தீர்வுக்கான வாய்ப்புக்களிருக்குமாதலால் சாதாரணமாக எல்லா வழக்குகளிலும் நீதித்துறை நடைமுறை பின்பற்றப்படுவது இடையாது.

### வட்டார நீதிமன்றங்கள் (Summary Courts)

ஜப்பானிய நீதித்துறையில் கடைக்கோடியிலுள்ளவை 570 வட்டார நீதிமன்றங்களாகும். இந்நீதிமன்றங்கள் சிறிய சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரிக்கின்றன. சிவில் வழக்குகளில் சம்பந்தப்பட்ட தொகை 5000 யென்களுக்குக் (Yens)

குறைவாகவும், கிரிமினல் வழக்குகளில் குற்றவாளிக்கு அளிக்கப்படும் தண்டனை ஒரு மாதத்திற்குக் குறைவாகவு மிருக்க வேண்டும். வழக்கு விசாரணையில் தலைமை அலுவல ருக்கு சுதந்திரம் தரப்படுகிறது. உயர்நீதிமன்றம் முதல் வட்டார நீதிமன்றம் வரையிலான நீதிமன்ற நீதிபதிகள் அனைவரும் அமைச்சரவையால் உச்சநீதிமன்றம் அனுப்பும் பெயர்ப்பட்டியலிலிருந்து நியமிக்கப்படுகிறார்கள் என்பதை மீண்டும் இங்கு வற்புறுத்திச் சொல்வது அவசியமாகும். நீதிபதிகள் எழுபது வயதில் பதவியிலிருந்து ஓய்வு பெறு கிறார்கள்.

# 10. அரசியல் கட்சிகள்

**வரலாற்று அடிப்படை**

ஜப்பானில் 1947இல் பாராளுமன்ற அரசாங்கம் ஏற்படுவதற்கு முன்பாகவே 1874ஆம் ஆண்டிலேயே அரசியல் கட்சிகள் தோன்றின எனலாம். ஆனால், அவைகள் பெயரளவில்தான் கட்சிகளாக இருந்தன. அதாவது அரசியல் குழுக்களாக சமூகங்களாக இருந்தன. 1874ஆம் ஆண்டு ஜனவரித்திங்கள் இடகாகி (Itagaki) என்பவர் உரிமையையும். சுதந்திரத்தையும் பெறவேண்டும் என்ற நோக்கமுடைய இயக்கமொன்றை நாட்டுப்பற்றுடைய பொதுக்கட்சி (Patriotic Public Party) என்னும் கட்சியை ஆரம்பித்தார். உடனேயே, மக்கள் ஆதரவு பெற்ற பிரதிநிதித்துவ சட்டமொன்றை ஏற்படுத்தவேண்டுமென்னும் கோரிக்கையடங்கிய விண்ணப்பமொன்று பேரரசருக்கு சமர்ப்பிக்கப்பட்டது. அது நாட்டை ஒரு கலக்கு கலக்கி மக்களிடையே வியக்கத்தக்க விளைவை ஏற்படுத்தியது. ஆனால், பேரரசர் அதை நசுக்கி ஒடுக்கும் நடவடிக்கைகளை மேற்கொண்டதால், தோன்றிய இரண்டு மாதங்களுக்குள்ளாகவே அக்கட்சி இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயிற்று. மீண்டும் அக்கட்சி 1878ஆம் ஆண்டு அதே நோக்கத்தை அடைவதற்காகத் தோற்றுவிக்கப்பட்டது. இத்தடவையும் முதலில் அரசாங்கம் அதைநசுக்கி ஒழிக்கவேண்டுமென்று விரும்பினும் அது பலன்தராது என்று கருதியதால் சீக்கிரமாகவே, பொதுமக்கள் விருப்பத்திற்குப் பணிந்தது. 1881ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் பதினெட்டாம் நாள் வெளியிடப்பட்ட அரண்மனைக் குறிப்பொன்று, 1890ஆம் ஆண்டில் தேசிய சட்டமன்றமொன்று அமைக்கப்படும் என்று அறிவித்தது.

அரண்மனைக் குறிப்பு வெளியான ஆறு நாட்களுக்குப் பிறகு லிபரல் கட்சி தோற்றுவிக்கப்பட்டு மக்கள் அரசாங்கத்திற்காகப் பாடுபட்ட இயக்கத்தின் முன்னோடியாக இயங்கியது. இக்கட்சிக்கு அடுத்தாற்போல முன்னேற்றக் கட்சியும் (Progressive Party), சாம்ராஜ்யக்கட்சியும் (Imperial Party) தோன்றின. முன்னேற்றக்கட்சி சீர்திருத்தக்கட்சி என மக்களால் அழைக்கப்பட்டது. அக்கட்சி பெந்தம் (Bentham), ஜான் ஸ்டுவர்டு மில் (John Stuort Mill) போன்ற ஆங்கிலேயர்கள் வற்புறுத்திவந்த கொள்கைக்குச் சமமான மிதவாதக் கொள்கையை விரும்பியது. இந்த லிபரல், முன்னேற்றக்கட்சியின் கொள்கைத்திட்டங்களையும் நடவடிக்கைகளையும் கண்டு பயந்த அரசாங்கம் சாம்ராஜ்யக் கட்சியின் துவக்கத்திற்கு ஆதரவளித்தது. அது அரசாங்க ஆதரவு பெற்ற கட்சி. அதில் அங்கம் வகித்தவர்களெல்லாம் அரசாங்க ஊழியர்களும், பௌத்த, ஷிண்டோ மதத்தைச் சேர்ந்த துறவிகளும், அரசாங்கக் கல்வி நிலையங்களில் பயின்ற தேசிய அறிஞர்களுமே ஆவர்.

இந்த மூன்று கட்சிகளுமே 1885ஆம் ஆண்டு உட்பூசல், அரசாங்கத் தொந்தரவு காரணமாகக் கலைந்தன. அச்சமயத்தில் ஜெர்மனியிலிருந்து திரும்பி வந்திருந்த இடோ (Ito) அரசியல் கட்சிகள் அமைக்கப்படுவதை எதிர்த்ததால் சாம்ராஜ்யக்கட்சியும் கலைக்கப்பட்டது. 1885ஆம் ஆண்டில் இடோ பிரதம மந்திரியானார். அவர் வெளிவிவகார மந்திரியாக இருந்த ஐனோவுடன் (Inoue) சேர்ந்து ஜப்பானை மேற்கத்திய மயமாக்கும் திட்டத்தை விரைவுபடுத்தினார். அதனால் ஜப்பானில் தேசியவாதிகளும், சிவில் உரிமைகளை ஆதரிப்பவர்களும் தோன்றினார்கள். விரைவில் அரசாங்கத்திற்கெதிரான இயக்கம் வலுப்பெற்று கலைக்கப்பட்டிருந்த லிபரல் கட்சியைச்சேர்ந்த உறுப்பினர்களையும் தேசியவாதிகளையும், கன்சர்வேடிவ்களையும் சேர்ந்த 'கட்சிகளின் பெருங்கூட்டு' (Great Coalition of Parties) அமைக்கப்பட்டது.

அரசாங்கம் இக்கட்சிகளின் சவாலை ஏற்று 1887ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 19ஆம் நாள் தலைநகரத்திலிருந்து ஏழுமைல் தூரத்திற்குள் இருந்து அரசாங்கத்திற்கெதிரான நடவடிக்கைகளில் ஈடுபடுவோரை வெளியேற்ற வகைசெய்த அமைதிப் பாதுகாப்புச் சட்டத்தை (Peace Preservation Ordinance) வெளியிட்டது. இந்தச் சட்ட அடிப்படையில் கிட்டத்தட்ட அறுநூறு பேர்கள் வெளியேற்றப்

பட்டார்கள். இந்த இயக்கம் அக்கம் பக்கங்களிலும் விரைவாகப் பரவியது. இதற்கிடையில் முதலில் ஒன்றாக இருந்து பிறகு பிரிந்து பகைவர்களாக இருந்த இடோவும் ஒகுமாவும் (Okuma) மீண்டும் ஒன்று சேர்ந்தார்கள். அதற்குப்பிறகு ஏற்பட்ட அரசாங்கத்திற்கு குராடோ (Kurado) தலைமை வகித்தாரென்றாலும் ஒகுமா தான் அதன் ஆணிவேர் போன்றிருந்து நடத்தினர்.

1889இல் மெய்ஜி அரசியலமைப்பு நடப்பிற்கு வந்தவுடன் பிரதம மந்திரி குராடோ, கட்சிக்கு அப்பாற்பட்ட அரசாங்கத்தில் அவருக்கிருந்த பற்றுதலை அறிவித்தபோது, பிரிவு கவுன்சிலின் தலைவராக இருந்த இடோ அவரை ஆதரித்தார். இனோ, கடோ, இடகாகி ஆகிய மூவரையும் பிரதம மந்திரி தன் பக்கம் இழுத்து அமைச்சரவையிலும் அவர்களைச் சேர்த்துக்கொண்டார். இதைப்பற்றி கருத்துத் தெரிவிக்கையில் யானகா கூறுவதாவது: 'மக்களாட்சித் தத்துவத்திற்காகவும் உரிமைகளுக்காகவும் ஆட்சியிலிருந்த சிறு குழுவாட்சியை (Oligarchy) எதிர்த்துப் போராடியவர்கள் இந்த அரசியல் தலைவர்கள். இருப்பினும், போதுமான செல்வாக்குடைய அரசாங்க பதவிகள் என்னும் ஆசை காட்டியதும் அவர்கள் தங்கள் போராட்டத்தைக் கைவிட்டு மகிழ்ச்சியோடு அதிகார பீடத்திலிருந்தவர்களோடு சேர்ந்து கொண்டார்கள். பொறுப்பாட்சிக் குறிக்கோள்களில் அவர்களுக்கிருந்த பிடிப்போ அல்லது அரசியல் கட்சிகளில் அவர்களுக்கிருந்த ஆர்வமோ உண்மையானதாக இல்லாததோடு எளிதில் விலைக்கு வாங்கக் கூடியதாக இருந்தது.'[1] அதுதான் ஜப்பானில் 1890ஆம் ஆண்டுவரை அரசியல் கட்சிகளின் இயல்பாக இருந்தது.

சீனாவிற்கும் ஜப்பானுக்குமிடையே 1894இல் போர் ஏற்பட்டபோது அரசாங்கத்திற்கெதிராக இருந்த எதிர்ப்பு அடியோடு மறைந்தது. ஆனால், போருக்குப்பிறகு பிரதான இரண்டு எதிர்க்கட்சிகளும் (தங்களுடைய முட்டாள்தனத்தை உணர்ந்து) 'பல ஆண்டுகளாக தாங்கள் ஏமாற்றப்பட்டதையும் சுரண்டப்பட்டதையும் உணர்ந்து அதற்குப் பிறகும் தங்களுக்குள் சண்டை போட்டுக்கொள்ளக்கூடாதென்றும் ஒற்றுமையாக அப்போது பதவியிலிருந்த சட்சுமா-சோசு (Satsuma-Choshu) குழு அரசாங்கத்திற்கெதிராகப் போராட

---

[1] Japanese people and Politics-Page 221

வேண்டுமென்றும்' முடிவு செய்தன. அவை இரண்டும் 1898இல் ஒரு புதுக்கட்சியை ஏற்படுத்தின. இக்கட்சி லிபரல் கட்சியும் முன்னேற்றக்கட்சியும் சேர்ந்த இணைப்பு எனலாம்.

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் அரசியல் கட்சிகளின் வளர்ச்சியில் வியக்கத்தக்க மற்றுமொரு முன்னேற்றம் ஏற்பட்டது. அதுவரையிலும் அரசியல் கட்சிகளைத் தீவிர மாக எதிர்த்துவந்த இளவரசர் இடோ அவற்றின் ஆதரவாள ரானார். கட்சிகள் தொழில் நிறுவனங்களின் தயவை நம்பி யிருந்ததெனலாம். எந்தக்கட்சி அரசாங்கம் அமைத்தாலும் அந்த அரசாங்கத்தின் ஆதரவைப்பெறும் நோக்கத்தில் ஒரு சிலதொழிலதிபர்கள் எதிர்க்கட்சிகளுக்கு ஆதரவளித்தார்கள். அரசியல் கட்சிகளுக்கும் சைபாட்சுவிற்குமிடையே இருந்த கூட்டு அரசாங்கம் பெருந்தொழில் நிறுவனங்களுக்குச் சாதக மாக நடந்துவந்ததெனும் சந்தேகத்தைக் குறிப்பாக டையட் டில் அரசாங்கத்திற்கெதிராக எதிர்க்கட்சிகள் அவ்வப்போது கொண்டுவந்த லஞ்ச ஊழல், கைக்கூலி போன்ற குற்றச் சாட்டுகளால் ஏற்படுத்தியது.

இதற்கு மேலும் சில காரணங்களுமிருந்தன. எடுத்துக் காட்டாக, பெரும் நகரங்களின் தோற்றம், வட்டார அடிப் படையிலான தொழில்கள், தொழிலாளர் கூட்டுச்சங்கங்கள், கல்வி வளர்ச்சி போன்றவைகளைக் கூறலாம். இது ஜப்பானி யர்களிடையே விழிப்பை ஏற்படுத்தியதோடு வாக்குரிமை அடிப்படையை விரிவாக்கவேண்டும் என்ற கோரிக்கையையும் வாக்களிக்கும் உரிமையை வழங்கவேண்டும் என்ற கோரிக்கை யையும் தோற்றுவித்தது. ஆனால், ஜப்பானியத் தலைவர்களோ வாக்காளர்களை அதிகரிப்பதற்குத் தயங்கினார்கள். அவர்கள் அத்தகைய விஸ்தரிப்பு, சமூகத்தில் நிலையற்ற தன்மையை ஏற்படுத்தி, மக்களுடையவும் நாட்டினுடையவும் வளர்ச்சி யையும் முன்னேற்றத்தையும் பாதிக்கும் என்று நினைத்தனர். ஆனால், மக்களுடைய கோரிக்கையை எதிர்ப்பது நினைத்த அளவிற்கு எளிதாக இல்லாதிருந்ததால் 1925ஆம் ஆண்டு 25 வயதான எல்லா ஆண்களுக்கும் வாக்களிக்கும் உரிமையளிக்கப் பட்டது.

அவர், நல்ல திறமையான அரசாங்கத்திற்கு அரசியல் கட்சிகள் மிகஇன்றியமையாதவை என்று அறிவித்ததோடு அரசியல் கட்சிகளின் கழகம் (Association of Political Parties) என்னும் கட்சியொன்றையும் 1900ஆம் ஆண்டில் நிறுவினார்.

1913ஆம் ஆண்டுவரை முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் பிறிதொரு கட்சியைத் தோற்றுவிக்க முன்வரவில்லை. அவர்கள் கூட்டரசாங்கம் (Coalitions) அமைப்பதோடு திருப்தியடைந்தார்கள். 1913–1925ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில்தான் மூதறிஞர்கள், தொழில் தலைவர்கள் ஆதரவுடன் அரசியல் சட்டமுறைக்கழகம் (Constitutional Association) என்னும் கட்சி அமைக்கப்பட்டது. இக்கழகம் சட்டமுறை அரசாங்கம் ஏற்படுத்துவதைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தது. முதல் உலகப் பெரும்போர் ஜப்பானியர்களிடையே ஜனநாயக நிறுவனங்களுக்குச் சாதகமான மாற்றத்தை ஏற்படுத்தியது. 1920ஆம் ஆண்டின் போதெல்லாம் அந்நாட்டில் முழுஅளவிலான பாராளுமன்றமுறை அரசாங்கம் விரைவில் ஏற்படக்கூடும் என்று கருதப்பட்டது. அரசியல் சட்டமுறைக் கழகத் தலைவரான கடோடகாகிரா (Kato Takakira) முதல் 1932இல் இனுகி சுயோசி (Inuki Tsuyoshi) கொலை செய்யப்படும்வரை தளபதி டனேகா கைசி (General Tanaka Giichi) பதவியிலிருந்த காலம்போக மற்ற சமயங்களிலெல்லாம் அரசாங்கத்திற்கு கட்சித்தலைவர்களே தலைவர்களாக இருந்தனர்.

இந்த காலத்தின் முக்கியமான அம்சம் அரசியல்கட்சிகளெல்லாம் தேர்தல் செலவுகளுக்கான நிதிக்கு சைபாட்சு (Zaibatsu) போன்ற பெரும் வாக்குரிமை விரிவுபடுத்தப்பட்டதெனினும் அரசியலமைப்பு, பேரரசர் பதவி, தனிநபர் சொத்துரிமை போன்றவற்றில் மாறுதல் வேண்டுமென்று விரும்பும் சமூகங்கள், நிறுவனங்கள் முதலியவற்றில் அங்கம் வகிப்பவர்கள் குற்றம் புரிந்தவர்களாகக் கருதப்பட்டு பத்தாண்டு சிறைவாசத் தண்டனை விதிப்பதற்கு வழிசெய்யும் அமைதி பாதுகாப்புச் சட்டத்தை (Peace Preservation Law) டையட் நிறைவேற்றியது. இச்சட்டம், தீவிரவாதக் கட்சிகளின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்தமுடியவில்லை. சாதாரண மக்களின் நன்மையையும், சமத்துவத்தையும் அடைவதை நோக்கமாகக்கொண்ட குடியானவர் தொழிலாளர் கட்சி (Farmer-Labour Party) 1925இல் தொடங்கப்பட்டது. ஆனல், பொதுவுடைமைத் தத்துவத்தை (Communism) அடிப்படையாகக்கொண்ட கட்சிகள் ஜப்பானில் தலைதூக்க முடியவில்லை என்பதை இங்கு குறிப்பிடுதல் அவசியமாகும். வேறுசில தீவிர இடதுசாரி கட்சிகள் அவ்வப்போது ஏற்பட்டன என்றாலும் மக்களாதரவு கிட்டாததால் அவைகள் தோன்றியவாறே மறைந்து விட்டன.

வயது வந்த ஆண்களுக்கெல்லாம் வாக்குரிமையென்னும் அடிப்படையில் முதன் முதலில் 1928ஆம் ஆண்டில் தேர்தல்கள் நடைபெற்றன. அத்தேர்தல்களில் நான்கு சோஷலிசக்கட்சிகள் சேர்ந்து 88 வேட்பாளர்களை நிறுத்தி வைத்தன என்றாலும் பிரதிநிதிகள் மன்றத்தில் எட்டு இடங்களைத்தான் பிடிக்க முடிந்தது. அதற்குப்பிறகு அந்தக் குறைவான ஆதரவையும் அக்கட்சிகள் இழந்து 1930ஆம் ஆண்டுபோல பெரும் அதிர்ச்சிக்கு ஆளாயின.

பழமைவாதக் கட்சிகளும் அவைகளுக்கிடையே இருந்த உட்பூசல் காரணமாகத் துன்பத்திற்காளாயின. எனவே, வாக்காளர்களிடையே அக்கட்சிகளுக்கு ஆதரவோ, மரியாதையோ இருக்கவில்லை. அக்கட்சிகளில் எதற்கும் தெளிவான, உறுதியான திட்டமெதுவும் கிடையாது. டையட்டிற்கு அரசாங்கம் பொறுப்புடையதாக இல்லாதிருந்ததால், பொறுப்பற்ற முறையில் நடந்த அரசாங்கத்தை உறுப்பினர்கள் கட்டுப்படுத்தும் வழிதெரியாது தவித்தனர். இராணுவங்கள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டன. அவைகள் நாட்டில் நிலவிய பொருளாதார நெருக்கடிக்கும், அரசியல் நெருக்கடிக்கும் பன்னாட்டுத்துறையில் ராஜதந்திரத் தோல்விக்கும், அரசியல் கட்சிகளின் போக்கும், அரசியல்வாதிகளின் போக்கும் சரியில்லாததே காரணம் என்றுரைத்தன. மக்களும் அக்கட்சிகளிடம் நம்பிக்கையிழந்தனர். எனவே, கட்சியரசாங்கம் 1932ஆம் ஆண்டு குழிதோண்டிப் புதைக்கப்பட்டது. அப்போது முதல் ஆட்சியிலிருந்த இராணுவ அரசாங்கங்கள் கடைபிடித்துவந்த கொள்கைகள், தொந்தரவுகள் தாங்காமல் 1940ஆம் ஆண்டு முதல் 1945ஆம் ஆண்டுவரை 'இம்பீரியல் ஆட்சி அனுகூலக்கழகம்' (Imperial Rule Assistance Association) ஒன்றுதான் ஆட்சி பீடத்தில் இருந்தது. அக்கட்சி ஆட்சி சர்வாதிகார ஆட்சியென்று விவரிக்கத்தேவையில்லை.

### இரண்டாம் உலகப்போருக்குப்பிறகு அரசியல் கட்சிகள் (Post-war Political Parties)

**அரசியல் கட்சிகளின் மறுதோற்றம்:** பத்தாண்டுக் காலத்திற்கும் மேலாக மறைந்திருந்த அரசியல் கட்சிகள் அரசியல், சமூக, சமய உரிமைகள் மேல் விதிக்கப்பட்டிருந்த தடைகளை விலக்கவேண்டுமென்று 1945ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 4ஆம் நாள் ஜனநாயக அரசாங்கமொன்றை ஏற்படுத்த வேண்டும் என்னும் நோக்கத்தில் ஆக்கிரமிப்பு அதிகாரிகள்

ஜப்பானிய அரசாங்கத்திற்குக் கட்டளை பிறப்பித்தபோது மீண்டும் ஏற்பட்டன. மக்கள் உரிமைகளுக்குத் தடையாக இருந்த சட்டங்கள், ஆணைகள், ஒழுங்குமுறை விதிகள் யாவற்றையும் உடனடியாக ஜப்பானிய அரசாங்கம் விலக்க வேண்டுமென்றும் அறிவுறுத்தப்பட்டது. அரசியல் காரணத்திற்காக சிறையில் வைக்கப்பட்டிருப்பவர்கள் விடுதலை செய்யப்படவேண்டுமென்றும் அக்கட்டளை உத்தரவிட்டது. அதற்கு ஒரு வாரத்திற்குப் பிறகு எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாகப் பெண்களுக்கு வாக்குரிமை தரவேண்டுமென்றும், தொழிலாளர் கூட்டுச்சங்கங்கள் அமைக்கப்படுவது ஊக்குவிக்கப்பட வேண்டுமென்றும் பொருளாதார நிறுவனங்கள் ஜனநாயக முறையில் இயங்குமாறு மாற்றியமைப்பதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்படவேண்டுமென்றும் தளபதி மக்ஆர்தர் விரும்பினர்.

அக்கட்டளை அரசியல் நடவடிக்கைகளும், அரசியல் கட்சிகளும் மீண்டும் ஏற்படுவதற்கு ஆதாரமாக அமைந்தது. 1946ஆம் ஆண்டு நடந்த முதல் பொதுத்தேர்தல்களில் கிட்டத்தட்ட 250 'கட்சிகள்' கலந்துகொண்டன. காளான்களைப்போன்று தோன்றிய இந்தக் கட்சிகளில் நான்கு கட்சிகள்தான் நிலைக்க முடிந்தது. அவையாவன: லிபரல் கட்சி, முன்னேற்றக்கழகம், சோஷலிச ஜனநாயகக்கட்சி, ஜப்பான் கம்யூனிஸ்டுக்கட்சி. இந்த நான்கில் முதலிரண்டு கட்சிகளும் பெயருக்கேற்றவாரில்லாமல் கன்சர்வேடிவ் கட்சிகளாக இருந்தன. 1955இல் இவை இரண்டும் ஒன்று சேர்ந்து லிபரல் ஜனநாயகக்கட்சி (Liberal Democratic Party) என்ற பெயரோடு இயங்கத்தொடங்கின. இதற்கு முக்கிய காரணமாக இருந்தது சோஷலிசக்கட்சிகள் ஒன்று சேர்ந்ததேயாகும். எனினும் சோஷலிசக்கட்சிகளின் ஒருமைப்பாடு நெடுநாள் நீடிக்கவில்லை என்பது சோஷலிச ஜனநாயகக்கட்சி 1959இல் சோஷலிசக்கட்சி, ஜனநாயகசோஷலிசக்கட்சி என்று இரண்டாகப் பிரிந்ததிலிருந்து வெளிப்படையாகும். பின்வரும் அட்டவணை பிரதிநிதிகள் மன்றத்திற்கு 1960ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 26ஆம் நாள், 1963ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 20ஆம் நாள் நடைபெற்ற தேர்தல்களில் கட்சிகளின் நிலவரத்தைக் காட்டுகிறது.[1]

---

Statistical Hand Book of Japan, 1964-page 106.

| கட்சிகள் | டிசம்பர், 26 1960 | கட்சிகள் | டிசம்பர், 20 1963 |
|---|---|---|---|
| லிபரல் ஜனநாயகக்கட்சி | 301 | லிபரல் ஜனநாயகக்கட்சி | 294 |
| ஜனநாயக சோஷலிசக் கட்சி | 16 | ஜனநாயக சோஷலிசக் கட்சி | 23 |
| சோஷலிசக்கட்சி | 144 | சோஷலிசக்கட்சி | 144 |
| சுயேச்சையார் | 3 | சுயேச்சையார் | 1 |
| கம்யூனிஸ்டுக்கட்சி | 3 | கம்யூனிஸ்டுக்கட்சி | 5 |
| மொத்தம் | 467 | மொத்தம் | 467 |

1965[2] ஆம் ஆண்டு ஜூலை மாதம் 4ஆம் தேதி நடைபெற்ற தேர்தல்களுக்குப்பிறகு கவுன்சிலர்கள் மன்றத்தில் கட்சிகளின் நிலவரம் பின்வருமாறு :

| கட்சிகள் | பெற்றிருந்த இடங்கள் |
|---|---|
| லிபரல் ஜனநாயகக் கட்சி | 140 |
| ஜப்பான் சோஷலிசக்கட்சி | 73 |
| கொமைட்டோ கட்சி | 20 |
| ஜனநாயக சோஷலிசக் கட்சி | 7 |
| ஜப்பான் கம்யூனிஸ்டுக் கட்சி | 4 |
| சுயேச்சையார் | 5 |
| மொத்தம் | 249 ஒரு இடம் காலி |

**ஜப்பானியக் கட்சிமுறையின் தன்மைகள்**
(Characteristics of the Japanese party System)

ஜப்பானியக் கட்சி முறையின் முக்கியமான அம்சங்கள் வருமாறு: (1) கட்சிமுறையைப்பற்றி அரசியலமைப்பில் எதுவும் சொல்லப்படவில்லை. பாராளுமன்றமுறை பின்பற்றப் படும் இதரநாடுகளைப்போல இங்கும் அரசியல்கட்சிகள் அரசியலமைப்பிற்கு வெளியே வளர்ந்தவை.

(2) இருகட்சி முறைக்குப் பதிலாக பல கட்சிமுறைதான் மேலோங்கியிருக்கிறது. போர்க்காலத்திற்கு முன்பு சுமார் 500 கட்சிகளும், 1947ஆம் ஆண்டிற்குப்பிறகு சுமார் 260 கட்சி களும் இருந்தன. அவைகளைக் கட்சிகள் என்று கூறுவதைவிட

[2] Information Bulletin, Embassy of Japan, August 1. 1965.

பல பிரிவுகள், கழகங்கள் என்பதே பொருந்தும். பலகட்சி முறை அரசியலில் சிக்கலை ஏற்படுத்துகிறது என்பது கவனிக்கத்தக்கது.

(3) கட்சிகள் பிளவுபடுவதும், ஒன்று சேருவதும் மிகச் சாதாரணமான அம்சம். புதுமையிலும் வகைகளிலும் ஜப்பானியர்களிடையே ஆர்வமிருப்பதால் பிளவும் பன்மைக் கட்சிமுறையும் எளிதில் ஏற்பட்டுவிடுகின்றன. பெயர் மாற்றத்தைக்கூட கட்சிகள் விரைவிலும் தயக்கமில்லாமலும் ஏற்றுக்கொண்டுவிடுகின்றன.

(4) அரசியல்கட்சிகளில் எதுவுமே சாதாரண மக்களின் ஆதரவைப் பெற்றிருக்கவில்லை. அவைகளெல்லாம் அரசியலைத் தொழிலாகக் கொண்டிருக்கும் சிலரின் கழகங்கள். அவர்களில் பெரும்பாலோர் டோக்கியோவைத் தங்கள் அலுவல்களுக்குத் தலைமை இடமாகக் கொண்டிருக்கிறார்கள். பாராளுமன்ற உறுப்பினர்கள் தங்கள் தொகுதிகளுக்குச் செல்வதென்பது அரியதொரு செயலாகும்.

(5) மற்றுமொரு முக்கியமான அம்சம் கட்சிகளிலும் டையட்டிலும் பெருமளவில் ஓய்வுபெற்ற, ஓய்வுபெறாத அரசாங்க ஊழியர்கள் சேருவதாகும். ஜப்பானில் மக்களிடையே நிலவும் பழமொழி 'அரசியலில் நுழைவதற்கு அரசாங்க ஊழியராக ஆகவேண்டு' மென்பதாகும். அமைச்சராக விரும்பும் அரசாங்க ஊழியரொருவர் தகுந்த சமயத்தில் டையட் உறுப்பினர் பதவிக்குப் போட்டியிடுவதாகும். ஏறத்தாழ 1949ஆம் ஆண்டிலிருந்து சமீபகாலம்வரை லிபரல் ஜனநாயகக் கட்சியைச்சேர்ந்த ஓய்வுபெற்ற அதிகாரவர்க்கத்தினர்மட்டும் பிரதிநிதிகள் சபையில் கால்பகுதி இருந்தனர். 1957முதல்1960வரை அந்நாட்டு அமைச்சரவையில் பாதிப்பேர் ஓய்வுபெற்ற அதிகாரிகள் இருந்தனர். பெரும்போருக்குப் பிறகு பிரதம மந்திரிகளாக இருந்தவர்களில் பெரும்பாலோர் அரசாங்கப் பணியில் நெடுங்காலம் பணியாற்றியவர்கள். சான்றாக சிதேகரா (Shidehara), யோஷிடா (Yoshida), அசிடா (Ashida), கிஷி (Kishi), இகேடா (Skeda) ஆகியோரைக் குறிப்பிடலாம்.

(6) ஜப்பானிய அரசியலில் வட்டாரப்பற்று இன்றும் சிறப்பிடத்தைப் பெற்றிருக்கிறதெனலாம். வாக்காளர்கள் கட்சிக்கு வாக்களிக்காது தங்கள் பகுதியைச் சேர்ந்தவர்களுக்கே வாக்களிக்கின்றனர்.

(7) இவையெல்லாவற்றையும்விட சிறப்பான அம்சம் சமய அடிப்படையில் அரசியல்கட்சிகள் அமைந்து செயல்படவில்லையென்பதாகும். சமயச்சார்பற்ற அரசியல், அரசியல்வாதிகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பின்பற்றப்படுகிறது. இது பெரும்பாலான இதரநாடுகளில் காணப்படாத அம்சமாகும்.

**அரசியல் கட்சிகளும் கொள்கைகளும்**

**லிபரல் ஜனநாயகக்கட்சி :** இக்கட்சி கன்சர்வேடிவ் குழுக்கள் ஒன்றிணைந்ததன் விளைவாக 1955ஆம் ஆண்டில் தோன்றியதாகும். இக்கட்சி சோஷலிஸ்டுகளை எதிர்த்து ஏற்பட்டதாகும். லிபரல் ஜனநாயகக்கட்சியின் கொள்கைகள் வருமாறு: மக்கள் கொள்கையைப்போற்றி பாதுகாப்பது தனிநபர் உரிமைகள், சுதந்திரம் ஆகியவைகளையும் கண்ணியத்தையும், பயனையும் மதித்து நடத்தல், அரசுத் தலைவரான பேரரசரின் தன்மையையும், செல்வாக்கையும் உயர்த்தும் வகையில் அரசியலமைப்பைத் திருத்துவது, நாட்டைப் பாதுகாக்கும் உரிமையை மீட்டல், தற்காப்பிற்காக குறைந்த அளவில் படையமைப்பு, கல்வி தொழில்நுட்ப முன்னேற்றம், வெளிவர்த்தக வளர்ச்சி, திட்டமிட்ட தொழில் முன்னேற்றம், தொழில்துறையில் அமைதி, தொழிலாளர் நலம், ஐக்கிய நாடுகள் கழகத்தின் கொள்கைகளுக்கேற்ப உலகநாடுகளுடன் உறவு, எச்சரிக்கையுடன் சோவியத் சீனமக்கள் குடியரசுடன் உறவை ஏற்படுத்திக்கொள்ளல் முதலியவை.

இக்கட்சி தன்னைத் தேசியக்கட்சியாகக் கருதி பல்வேறு வகைப்பட்ட மக்களின் ஆதரவையும் கோருகிறது. ஆனால், இக்கட்சி பெரும்பாலான நாட்டுப்புற மக்களாலும், வர்த்தக, தொழில் நிறுவனங்களின் சொந்தக்காரர்களாலும், அரசாங்க நிறுவனங்களைச் சேர்ந்த ஊழியர்களாலும் ஆதரிக்கப்படுகிறது. இதற்கு ஒரு தலைவருண்டு. அவர் டையட்டிலுள்ள கட்சி உறுப்பினர்களையும், வட்டார அமைப்புகளின் பிரதிநிதிகளையும் கொண்ட மாநாட்டினால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். தலைவரைத் தவிர, பொதுச்செயலாளர், நிர்வாகக்கழகத்தின் தலைவர், அரசியல் ஆராய்ச்சிக் குழுவின் தலைவர் ஆகியோரும் தேசிய நிறுவனக்குழு, ஒழுங்கு கட்டுப்பாட்டுக் குழுவின் உறுப்பினர்களும் இதர அலுவலர்களாவர். கட்சியின் தலைமைச் செயலகம் டோக்கியோ நகரத்தில் இருக்கிறது. இங்குதான் கட்சியின் பெரும்பாலான அலுவல்களும் நடைபெறுகின்றன. கட்சியின் கொள்கைகள் அன்றாட அலுவல்கள் யாவும் கட்சி

மாநாட்டினால் ஆமோதிக்கப்படவேண்டுமெனினும் கட்சியின் தலைமையினரே முடிவெடுக்கின்றனர். இக்கட்சி 1955லிருந்து தொடர்ந்து பதவியிலிருந்து வருகிறது.

**ஜப்பானிய சோஷலிசக்கட்சி:** இக்கட்சியும் 1955ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் மொசபுரோ சுசுக்கி (Mosaburo Suzuki) தலைமையில் நிறுவப்பட்டது. பலவருடங்களாகப் பிளவு பட்டிருந்த வலது-இடதுசாரி சோஷலிசக்கட்சிகள் ஒன்று சேர்ந்ததால் ஏற்பட்டதாகும் இந்தக்கட்சி. இக்கட்சி 1959ஆம் ஆண்டு பிளவுபட்டு இரண்டாயிற்று. அதிலிருந்த வலது சாரியினர் ஜனநாயக சோஷலிசக்கட்சி என்ற பெயரில் ஒரு கட்சியை 1960ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 24ஆம் தேதி துவக்கினர். ஜப்பானிய சோஷலிசக்கட்சி ஜப்பானில் இரண்டாவது பெரிய கட்சியாகும். இக்கட்சி சமீபகாலத்தில் ஆட்சி பீடத்தில் அமருவதென்பது கடினமானதென்று சொல்லப்படுகின்றது.

ஜப்பானின் அயல்நாடுகளுடனான உறவுகள், ஜப்பான் அமெரிக்கா, சோவியத் யூனியன், ஆகியவற்றின் ஆதரவுபெற்ற பாதுகாப்பும், ஆக்கிரமிப்பற்ற நிலைமையும் ஏற்படவேண்டும். தற்போதுள்ள படைகள் கலைக்கப்பட்டு, அந்த இடத்தில் ஜனநாயக தேசியக் காவல்படையொன்று ஏற்படுத்த வேண்டும். மக்களாட்சியை ஏற்படுத்துதல் சமூகநல அரசு ஏற்படுவதற்குச் சாதகமாக தொழில், நிதி நிறுவனங்களை சமூகத்திற்கேற்ப மாற்றியமைப்பது. வேலையற்றோருக்கு வேலை கிடைக்கும் வகையில் நிலத்தை மேம்படுத்துவது போன்றவை இக்கட்சியின் குறிக்கோள்களாகும். இவைகளை யெல்லாம் அமைதியான புரட்சி வாயிலாக அடையவேண்டுமென்பது இக்கட்சியின் வழியாகும்.

இது தன்னை மக்கள் ஆதரவுபெற்ற கட்சியாகச் சொல்லிக் கொள்கிறது. இதன் ஆதரவாளர்களில் உழைப்பாளிகள், குடியானவர்கள், மீனவர்கள், சிறிய நடுத்தர தொழில் நிறுவனத்தினர் குறிப்பிடத்தகுந்தவர்கள். இக்கட்சியும் லிபரல் ஜனநாயகக் கட்சியைப்போன்றே அமைக்கப்பட்டிருக்கிறது.

**ஜனநாயக சோஷலிசக்கட்சி:** இக்கட்சியின் அமைப்பு சோஷலிசக்கட்சியின் அமைப்பைப் போன்றதே. இதற்குத்

தலைவர், பொதுச்செயலாளர், குழு உறுப்பினர்கள் இருக்கின்றனர். இதன் கொள்கைகளில் முக்கியமானவைகளில் சில கீழே தரப்படுகின்றன:

(1) வலது-இடதுசாரி முதலாளித்துவத்தையும் ஏதேச்சாதிகாரத்தையும் எதிர்ப்பது.

(2) தனிநபரின் கண்ணியத்தை மதித்து நடப்பது.

(3) சுதந்திரமான அயல்நாட்டு கொள்கையைப் பின்பற்றுவது.

(4) திட்டமிட்ட பொருளாதார, சோஷலிச வழிகள் மூலமாக சமூகநல அரசை ஏற்படுத்துவது.

**கம்யூனிஸ்டுக்கட்சி:** கம்யூனிஸ்டுக்கட்சி 1922ஆம் ஆண்டிலேயே முறைப்படி அமைக்கப்பட்டதெனினும் இரண்டாம் உலகப்பெரும்போர் முடியும்வரை தடைசெய்யப்பட்டிருந்தது. 1946ஆம் ஆண்டு முதல் இதுவரை நடந்த எல்லா பொதுத் தேர்தல்களிலும் இக்கட்சி கலந்துகொண்டு வேட்பாளர்களை நிறுத்தியிருக்கிறது. பாராளுமன்றத்துறையில் அதன் வெற்றி மிதமானதாக இருக்கிறது. 1949இல் நடைபெற்ற பொதுத் தேர்தல்களில் அதன் பலம் உச்சக்கட்டத்தை அடைந்தது. அப்போது பதிவான மொத்த வாக்குகளில் 5.6 விழுக்காட்டையும், பிரதிநிதிகள் மன்றத்தில் 35 இடங்களையும் அது பிடித்தது. ஆனால், அதற்குப்பிறகு நடைபெற்ற தேர்தல்களில் அதன்பலம் குறைந்தது, இப்போது அது பெயரளவில் கட்சியாக இருந்துவருகிறது.

ஜப்பானிய கம்யூனிஸ்டுக் கட்சியின் கொள்கைகள் நடவடிக்கைகளைப் பொறுத்தவரை அகில ஜப்பானிய கம்யூனிஸ்டுக்கட்சி ஆண்டு மாநாடு இறுதியான முழு அதிகாரமுடையது. இந்த மாநாடு இரண்டு ஆண்டுகளுக்கொருமுறை கூட்டப்படுகிறது. இதில் கலந்துகொள்ளும் பிரதிநிதிகள் வட்டார மாநாடுகளால் தேர்ந்தெடுத்து அனுப்பப்படுகிறார்கள். இந்த மாநாடுகள் இரண்டாண்டுகளுக்கு ஒரு முறையே கூடுவதால் கட்சியின் கொள்கைகள் கட்சியின் தலைமையால்தான் அவ்வப்போது முடிவுசெய்கிறது. இந்தக் கட்சிக்கு ஒரு மத்திய செயற்குழு இருக்கிறது. அதில் பத்து உறுப்பினர்களும் ஒரு பொதுச்செயலாளரும் இருக்கின்றனர்.

இது குறைந்தது மூன்று மாதங்களுக்கொருமுறையாவது கூடி கட்சி அலுவல்களைக் கவனிக்கிறது. இதற்குச் செயலக மொன்றும் இருக்கிறது. கட்சியின் நடவடிக்கைகளைக் கண்காணிக்கவும், வளர்ச்சிக்குத்தேவையான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவும் மத்திய கட்டுப்பாட்டு மேற்பார்வைக் குழுவொன்று கட்சி மாநாட்டினுல் தேர்ந்தெடுக்கப்படுகிறது.

# 11. வட்டார அரசாங்கம்

## (Local Government)

**போருக்கு முன்பு வட்டார அரசாங்கம் :** மெய்ஜி மீட்சிக்குப் பிறகு வட்டார அரசாங்கமுறை ஏற்படுத்தப்பட்டது. நாடு 250 பிரிவுகளாகப் (Prefectures) பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு பிரிவிற்கும் கவர்னர் நியமிக்கப்பட்டார். இந்த நியமனம் பேரரசரது ஆதிக்கத்தை எடுத்துக்காட்டியது. நிலமான்யமுறை இருந்தபோது தரப்பட்டிருந்த அதே பெயர்களே மாநிலங்களுக்குச் சூட்டப்படுவது எச்சரிக்கையுடன் தவிர்க்கப்பட்டது. முதலாவது சாம்ராஜ்ய டையட் கூட்டப்படுவதற்கு முன்பு 1888, 1889ஆம் ஆண்டுகளில் 'டையட் வட்டார அரசாங்கங்களின் அமைப்பில் பங்கு கோருவதைத் தடைசெய்யும் வகையில்' வட்டார அரசாங்கம் பற்றிய பல ஆதாரச்சட்டங்கள் அறிவிக்கப்பட்டு நடைமுறைக்கு வந்தன. அதன் நோக்கம், பிரதிநிதித்துவ அரசாங்கம், வட்டார அரசாங்கம் பற்றிய பல ஆதாரச்சட்டங்கள் அறிவிக்கப் பட்டு நடைமுறைக்கு வந்தன.[1] அதன் நோக்கம் பிரதிநிதித்துவ அரசாங்கம் வட்டார அரசாங்கங்களைக் கட்டுப் படுத்துவதைத்தடுத்து, மத்திய அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டுமென்பதாகும். எனவே, வட்டாரத் தன்னாட்சி பலமற்றதாகவும் சக்தியற்றதாகவும் இருந்தது.

ஒவ்வொரு மாநில கவர்னரும் உள்துறை அமைச்சரின் சிபாரிசு அடிப்படையில் பேரரசரால் நியமிக்கப்பட்டார். அதனால் அவர் டோக்கியோவை இருப்பிடமாகக் கொண்டு இயங்கிய மத்திய அரசாங்கத்தின் அலுவலராக இருந்ததோடு அவ்வரசாங்கத்தின் கைக்கூலியாக வக்காலத்து வாங்கு

---

[1] Kahin, Government of Asia—page. 201.

பவராகவுமிருந்தார். ஒவ்வொரு மாநிலத்திலும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றமொன்று இருந்தது. அது கவர்னரால் கொண்டுவரப்பட்ட வரவு-செலவுத்திட்டத்தை விவாதித்து நிறைவேற்றியது. எனினும், அதன் அதிகாரம் ஆலோசனை அளிப்பது மட்டுமே. வரவு-செலவுத்திட்டத்தை அச்சட்டமன்றம் ஏற்கமறுத்தால் அதனை மதிக்காமல் கவர்னர் நடந்துகொள்ள முடியும். மத்திய அரசாங்கத்தில் இருந்த அமைச்சரகங்கள் குறிப்பாக உள்துறை, நிதித்துறை அமைச்சரகங்கள் மாநிலங்கள் சம்பந்தப்பட்ட விவகாரங்களில் கவர்னர்களுக்கு கட்டளைகளையும், அறிவுறுத்தல்களையும் (Instructions) பிறப்பிக்க அதிகாரம் பெற்றிருந்ததோடு அவர்களைப் பதவியிலிருந்து தாற்காலிகமாக விலக்கி வைக்கவோ அல்லது அவர்களுடைய நடவடிக்கைகளை விலக்கவோ முடியும். ‘வட்டாரத்தன்னுட்சி, மக்களாட்சிக் கொள்கைகளை விட, அதிகாரக்குவிப்பும், அதிகாரவர்க்கத்துவமும்தான் போருக்கு முன்பு பின்பற்றப்பட்டவைகளாகும்’.[1]

ஆரம்பத்தில் நகரங்களின் மேயர்கள் உள்துறை அமைச்சரகத்தால் நியமிக்கப்பட்டார்கள். 1920ஆம் ஆண்டுக்கு பிறகு மேயர்களும், அவர்களுடைய உதவியாளர்களும் நகராட்சி சட்டமன்றங்களால் (Municipal Assemblies) தெரிந்தெடுக்கப்பட்டார்கள். இந்த நகராட்சி, சட்டமன்றங்கள் ஒவ்வொன்றிலும் நான்காண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட 30 அல்லது அதற்கு மேற்பட்ட உறுப்பினர்கள் இருந்தார்கள். இச்சட்டமன்றம் மாதமொருமுறை கூடியது. ஆனால், அவசர அலுவல்களைக் கவனிப்பதற்காக 10 அல்லது 15 பேர்களைக்கொண்ட—ஆனால், இச்சட்டமன்றத்தால் அதன் உறுப்பினர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட நகராட்சிக்கழகம் (Municipal Council) அமைக்கப்பட்டது. இந்த நகராட்சிக்கழகம் தேவைப்பட்டபோதெல்லாம் கூடிச் செயல்பட்டது.

**1947ஆம் அரசியலமைப்பின்படி வட்டாரத்தன்னுட்சி**
(Local Autonomy under the Constitution of 1947)

ஆக்கிரமிப்பு அதிகாரிகள் முதலிலிருந்த பழைய முறைகளையெல்லாம் எல்லா நிலைகளிலும் மக்களாட்சித் தத்துவங்களுக்கேற்ப மாற்றியமைப்பதில் தீவிரமாக இருந்

---

[1] Theodore McNelly (Contemporary Government of Japan page 155.)

தனர். வட்டார அரசாங்கத்தைப் பொறுத்தவரையிலும் சுயாட்சியையும் (Home Rule), மக்களாட்சியையும் எந்த அளவிற்கு அதிகமாகத் தரமுடியுமோ அந்த அளவிற்கு அளிப்பதில் தீர்மானமாயிருந்தனர். 'வட்டாரத் தன்னாட்சிக் கொள்கைக்கேற்ப' வட்டார அரசாங்கங்களின் அமைப்பும் வேலைமுறைகளும் சட்டத்தினால் நிர்ணயிக்கப்படுவதற்கு அரசியலமைப்பின் 92ஆம் விதி ஏற்பாடு செய்கிறது. 93ஆம் விதி வட்டார நிறுவனங்கள் தங்கள் சட்டசபைகளை அமைத்துக்கொள்வதற்கும், ஒழுங்குமுறை விதிகளைச் சொந்தமாக இயற்றிக்கொள்வதற்கும் உரிமையளிக்கிறது. அவைகளின் தலைமை நிர்வாக அலுவலர்கள் யாவரும் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். 94ஆம் விதி உடைமைகளையும், அலுவல்களையும், ஆட்சிமுறையையும் அவைகளே செய்துகொள்ளவும் விதிமுறைகளை ஏற்படுத்திக்கொள்ளவும் உரிமை வழங்குகிறது. மக்களாட்சிக் கொள்கைகளுக்கேற்ப குறிப்பிட்ட எந்தவொரு வட்டார அரசாங்கத்தையும் பாதிக்கும் சட்டமொன்றை சம்பந்தப்பட்ட பகுதியைச் சேர்ந்த வாக்காளர்களில் பெரும்பான்மையோர் சம்மதமில்லாமல் டையட் இயற்றாது என்று 95ஆம் விதி கூறுகிறது.

வட்டார நிறுவனங்களோடு தொடர்புடைய எல்லா விஷயங்களும் 1947ஆம் ஆண்டு வட்டாரச்சட்டங்களின் தலைமை நிர்வாக அலுவலர்கள் யாவரும் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். 91ஆம் விதி உடைமைகளையும் அலுவல்களையும், ஆட்சிமுறையையும் அவைகளே செய்து கொள்ளவும், விதிமுறைகளை ஏற்படுத்திக் கொள்ளவும் உரிமை வழங்குகிறது. மக்களாட்சிக் கொள்கைகளுக்கேற்ப குறிப்பிட்ட எந்தவொரு வட்டார அரசாங்கத்தையும் பாதிக்கும் சட்டமொன்றை சம்பந்தப்பட்ட பகுதியைச் சேர்ந்த வாக்காளர்களில் பெரும்பான்மையோர் சம்மதமில்லாமல் டையட் இயற்றாது என்று 95ஆம் விதி கூறுகிறது.

வட்டார நிறுவனங்களோடு தொடர்புடைய எல்லா விஷயங்களும் 1947ஆம் ஆண்டு வட்டாரத் தன்னாட்சி சட்டத்தில் (Local Autonomy of Law 1947) கண்டுள்ள ஏற்பாடுகள் அடிப்படையில் நிர்ணயிக்கப்பட்டு கட்டுப்படுத்தப்படுகின்றன. இவ்வாறு ஜப்பானில் மூவகை அரசாங்கங்கள் இருக்கின்றன. அவையாவன: தேசிய அரசாங்கம், மாநில அரசாங்கங்கள், ஊராட்சி அரசாங்கங்கள். வட்டார

அரசாங்கமென்னும் சொல் மாநில, நகரமட்டங்களிலுள்ள அரசாங்கங்களைக் குறிப்பிடுகிறது. இவ்வரசாங்கங்கள் அரசியலமைப்பு, 1947ஆம் ஆண்டு வட்டாரத் தன்னாட்சிச் சட்டம் ஆகியவற்றின் ஏற்பாடுகளுக்குட்பட்டவை.

ஜப்பான் தற்போது 46 பெரிய மாநிலங்கள் (Prefectures) என்றழைக்கப்படும் அரசியல் துணைப்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இந்த 46 மாநிலங்களில் ஒன்று தலைநகரமும், ஒன்று மாவட்டமும், இரண்டு நகரப்பகுதிகளைக்கொண்டதும், 42 நாட்டுப்புறப் பகுதிகளைக் கொண்டதுமாகும். அங்கு 1960ஆம் ஆண்டுக்கணக்குப்படி சுமார் 3700 நகரங்களும், கிராமங்களுமிருக்கின்றன. இவை ஒவ்வொன்றும் ஊராட்சி அரசாங்கத்தை அமைத்துக்கொள்ள உரிமையுடையவை. ஆனால், சமீபத்தில் இயற்றப்பட்டசட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு பொருளாதாரச்சிக்கனம், திறமையான நிர்வாகம் ஆகிய நோக்கங்களை அடைவதற்காக நகரங்களும் சரி, கிராமங்களும் சரி மற்றவைகளோடு இணைந்து கொண்டன.'[1] 1964ஆம் ஆண்டு இச்சட்ட அடிப்படையில் ஏற்பட்ட இணைப்பினால் அங்கு அவ்வாண்டில் 559 பட்டினங்களும், 1971 நகரங்களும், 874 சிற்றூர்களும் இருந்தன.[2] சில பெரிய பட்டினங்கள் 'தனிப்பட்டினங்கள் என்றழைக்கப்பட்டு, அவை எந்த மாநிலங்களில் இருக்கின்றனவோ அந்த மாநில அரசாங்கங்களின் கட்டுப்பாட்டினின்றும் சில தனிச்சலுகைகள் தரப்பட்டிருக்கின்றன.

வட்டார அரசாங்க நிறுவனங்களின் பணிகள் இருவகைப்படும் (1) சில தேசியச் சட்டங்களை நடைமுறைப்படுத்துதல் (2) வட்டார அரசாங்கங்களின் சட்டங்களை இயற்றுவது, அவற்றை நடைமுறைப்படுத்துதல். முதல்வகையைச்சேர்ந்த பணிகளை நிறைவேற்றும்போது அவ்வரசாங்கங்கள் தேசிய அரசாங்கத்தின் பிரதிநிதியாக அவை விளங்குகின்றன. அப்பணிகளைப் பொறுத்தவரையிலும் அவைகள் சம்பந்தப்பட்ட அமைச்சரகத்தின் மேற்பார்வையிலிருக்கின்றன. இரண்டாவது வகையில் வட்டார அரசாங்கங்கள் அவைகளுக்குத் தேவையான சட்டங்களை இயற்றிக்கொள்வதும், அவைகளைச் செயற்படுத்துவதும் அடங்கும். இப்பணிகள், டையட்டினால் இயற்றப்பட்ட அல்லது இயற்றப்படுகின்ற

[1] Town and Village Merger Acceleration Law.

[2] Statistical Hand Book of Japan, 1964.

சட்டங்கள் அடிப்படையில் அவைகளுக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்தின்கீழ் அடங்கும். வட்டார அரசாங்கங்களின் பணிகளை அரசியலமைப்பு எடுத்துரைக்கவில்லை. இதனால் அவ்வரசாங்கங்கள் தேசிய அரசாங்கத்தின் தயவையே எதிர்நோக்கியிருப்பதாகச் சொல்லமுடியாது. இவ்விடத்தில் முன்னமேயே சொல்லப்பட்டிருக்கின்ற அரசியலமைப்பின் 94, 95, 96ஆம் விதிகளின் ஏற்பாடுகளைக் கருத்தில் கொள்வது பொருந்தும்.

வட்டார அரசாங்கங்கள் என்னென்னவற்றைச் செய்யத் தகுதியுடையவை என்பதை வட்டாரத்தன்னாட்சிச் சட்டத்தில் காணலாம். அவ்வரசாங்கங்கள் செய்யக்கூடியவை வருமாறு: பொது அமைதிப் பராமரிப்பு; அந்தந்தப் பகுதிகளில் வாழும் மக்களது பாதுகாப்பு, சுகாதாரம் ஆகியவைகளைப் பாது காப்பது; பூங்காக்கள், விளையாட்டுத் திடல்கள், வாய்க்கால் கள், நீர்ப்பாசன வடிகால் வாய்க்கால்கள், நீர்ச்செடிகள், சாக்கடைத்திட்டம், மின் நிலையங்கள், போக்குவரத்து, கிடங்குகள், பள்ளிக்கூடங்கள், நூல்நிலையங்கள், மியூசியங் கள், மருத்துவமனைகள், வயதானவர் அடைக்கல நிலையங்கள், சிறைச்சாலைகள், இடுகாடுகள், கல்லறைகள் போன்றவை களை அமைத்துப் பராமரித்தல்; வரிகளையும் வாய்தாக்களையும் விதித்து வசூல் செய்தல்; வட்டார நிறுவனங்களின் நட வடிக்கைகளை ஒருங்கிணைத்தல் முதலியன. ஆனால், இவ்வர சாங்கங்கள் தேசிய முக்கியத்துவமுடைய அலுவல்களைச் செலுத்தமுடியாது. உதாரணமாக அஞ்சல் நிலையங்கள், தேசிய நெடுஞ்சாலைகள், தேசிய போக்குவரத்து, தேசிய கல்வி நிலையங்கள் அவற்றில் நடைபெறும் ஆராய்ச்சிகள், குற்றத்திற்கு தண்டனை அளித்தல், நீதித்துறை சம்பந்தப் பட்ட அலுவல்கள் ஆகிய பலவற்றைச்சொல்லலாம். இவ்வர சாங்கங்களின் செயல்கள் எவையும் சட்டத்தினால் அனுமதிக்கப்படும் விதிகள், அமைச்சரவை ஆணைகள், அமைச்சரக ஒழுங்குமுறை விதிகள் முதலியவற்றிற்கு மாறுபட்டவையாக இருத்தலாகாது. ஓர் ஊராட்சி மாநிலத் துணைச்சட்டத்திற்கெதிராகவும் செயல்படலாகாது. அங்ஙனமே, தேசிய அரசாங்கமும் வட்டார அரசாங்கங்கள் அதிகார எல்லைக்குட்பட்ட துறைகளில் தலையிடாது.

**தலைமை நிர்வாகிகள்** (Chief Executives)

மாநிலம் ஒவ்வொன்றிற்கும் ஒரு கவர்னரும் நகராட்சிக்கு மேயரும் நிர்வாகத்தலைவராவார். இருவரும் சம்பந்தப்பட்ட

பகுதிகளைச் சேர்ந்த வாக்காளர்களால் நான்காண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுவர். அவர்கள் வாக்காளர்களால் பதவியிலிருந்து திரும்ப அழைத்துக்கொள்ளப்(Recall) படலாம். அல்லது தகுந்த சட்டமன்றத்தால் நிறைவேற்றப் படும் நம்பிக்கையில்லாத் தீர்மான அடிப்படையில் பதவி நீக்கம் செய்யப்படலாம். கவர்னரும், மேயரும் தேசிய அரசாங்கத்தின் பிரதிநிதிகளாகச் செயல்படும்போது அவ்வரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். அவர்கள் தேசிய அரசாங்க ஆணைகளை ஏற்க மறுத்தாலோ, அவர்களை அவைகளைச் செய்யுமாறு பணிக்கவேண்டுமெனத் தகுந்த நீதிமன்றத்தை மத்திய அரசாங்கம் கேட்டுக்கொள்ளலாம். அதையும் மீறி கவர்னர் நடப்பாரானால் சம்பந்தப்பட்ட மந்திரியே சட்டத்தைச் செயற்படுத்தலாம் என்பதோடு பிரதம மந்திரி அவரைப் பதவியிலிருந்து விலக்கலாம். அங்ஙனமே,மேயரைப் பொருத்தும் கவர்னர் செய்யலாம். இவ்வாறு வட்டார அரசாங்கத் தலைவர்கள் இரு எஜமானர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியிருக்கிறது.

**வட்டாரச் சட்டமன்றங்கள்** (Local Assemblies)

ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு சட்டமன்றமும் நகராட்சிக் கழகமும் இருக்கின்றன. இவை பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுச் செயலாற்றுகின்றன. மாநிலச் சட்டமன்றத்தின் உறுப்பினர்கள் 40 முதல் 120 வரை இருப்பார்கள். நகராட்சிக்கழகத்தின் உறுப்பினர்களும் மக்கட்தொகை அடிப்படையில் 12 முதல் 100 வரை இருப்பார்கள். சட்டமன்ற நகராட்சிக் கழக உறுப்பினர்கள் நான்கு ஆண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்களெனினும் அவைகள் முறையே கவர்னராலும், மேயராலும் முன்னதாகவே கலைக்கப்படலாம். வாக்காளர்களும் அவர்களைப் பதவிக் காலம் முடிவதற்கு முன்பு பதவியிலிருந்து திரும்ப அழைக்கப் படலாம். அதனால் அவை கலைக்கவும்படலாம்.

வட்டார சட்டமன்றங்களும், இதரநிலையங்களும் வட்டாரத் தன்னாட்சி சட்டத்தில் கண்டுள்ள இனங்களில் துணைச் சட்டங்களை இயற்றிக்கொள்ளும் அதிகாரம் படைத்தவை. இவ்விடத்தில், தேசிய டையட்டுதான் சட்டங்களை இயற்ற முடியுமென்பதையும் வட்டாரச் சட்டமன்றங்களும், கழகங்களும் இயற்றும் சட்டங்களெல்லாம் 'துணைச்சட்டங்கள்' (By Laws) என்று அழைக்கப்படுகின்றன என்பதையும் கவனித்தறிவது நல்லது. வரவு-செலவுத் திட்டத்தைத்

தயாரித்தல்; அதன் உடைமைகளை வாங்குதல், விற்றல், பராமரித்தல், வரிகளை விதித்து வசூலித்தல் முதலியன வட்டார அரசாங்கம் அதிகாரம் செலுத்தக்கூடிய துறைகளாகும்.

கவர்னரும், மேயரும் வட்டார அரசாங்கச் சட்டமன்றம், அல்லது கழகம் இயற்றும் சட்டங்களை மறுப்பாணை அதிகாரத்தைப் பயன்படுத்தி ஏற்கமறுக்கலாம். ஆனால், சட்டமன்றமோ அல்லது கழகமோ அவ்வாறு நிராகரிக்கப் பட்டதை மீண்டும் மூன்றிலிருபங்கு பெரும்பான்மை பலத்தினால் நிறைவேற்றினால் அது துணைச்சட்டமாகிவிடும். மாநிலம் அல்லது நகரத்தலைமை நிர்வாகியிடம் நம்பிக்கையில்லை என்னும் தீர்மானமொன்றை நிறைவேற்ற மாநிலச் சட்ட மன்றத்திலும் சரி, நகராட்சிச் சட்டமன்றத்திலும் சரி அதன் மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்களாவது குறைந்தபட்சமாகக் கூட்டத்திற்கு வருகை தந்திருக்கவேண்டும். அவர்களில் முக்கால் பங்கினரால் அத்தீர்மானம் நிறைவேற்றப்படுமானால், ஒன்று தலைமை நிர்வாகி தன் பதவியைத் துறக்கவேண்டும் அல்லது சம்பந்தப் பட்ட மன்றத்தைக் கலைக்கவேண்டும். மன்றம் கலைக்கப் பட்டு புதியதாகத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களும் மறுபடியும் நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை நிறைவேற்றுவார்களானால் தலைமை நிர்வாகி இத்தடவை பதவியிலிருந்து விலகத்தான் வேண்டும்.

வட்டார அரசாங்கத்தில் மாநிலத்தில் மட்டுமல்லாமல் பல நகராட்சிகளிலும்கூட கல்வி வாரியங்களும், மக்கள் பாதுகாப்புக் கழகங்களும், மேற்பார்வைக் கழகங்களும் அலுவலர் பற்றிய கழகங்களுமிருக்கின்றன. இக்கழகங்களின் உறுப்பினர்கள் சம்பந்தப்பட்ட சட்டமன்றங்களின் சம்மதத்தின் பேரில் கவர்னர் அல்லது மேயரால் நியமிக்கப்படுகின்றனர். இந்த உறுப்பினர்கள் அவர்கள் பதவிக்காலம் முடிவதற்கு முன்பே திரும்ப அழைத்துக்கொள்ளப்படலாம்.

வட்டாரத் தன்னாட்சி சட்டத்தில் மக்கள் துவக்கத்திற்கும் (Initiative) திரும்பி அழைக்கப்படுவதற்கும் (Recall) ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கிறது. எந்தவொரு வட்டாரத் [illegible] பதிவு செய்யப்பட்ட வாக்காளர்களில் ஐந்தில் [illegible] ஏதாவதொரு பொருள் பற்றி சட்டமியற்ற வேண்டும் என்று கோருவார்களானால் தலைமை நிர்வாகி தன் கருத்துடன் கூடிய அக்கோரிக்கையை அந்த வட்டாரச் சட்ட

மன்றத்திற்கு அனுப்பி வைக்கவேண்டும், சம்பந்தப்பட்ட தொகுதி வாக்காளர்களில் மூன்றிலொரு பங்கினர் கையெழுத்திட்டு அனுப்பும் விண்ணப்பத்தின் பேரில் வட்டாரத் தலைமை நிர்வாகிகளையும், குறிப்பிட்ட சில அலுவலர்களையும், சட்டமன்ற, கழக உறுப்பினர்களையும், திரும்ப அழைத்துக் கொள்ளலாம்,

முடிவுரை

மேற் கூறப்பட்டவைகளெல்லாம், ஜப்பானில் வட்டாரக் கழகங்களின் சட்டப்படி உள்ள தன்மையாகும். நடைமுறையில் அவை பல முக்கியமான அம்சங்களில் மாறுபடுகின்றன. அவைகள் சட்டத்தின்படி எந்த அளவிற்கு தன்னாட்சி உடையவைகளாக இருக்கவேண்டுமென்பது எதிர்பார்க்கப்பட்டதோ அந்த அளவிற்கு தன்னாட்சித் தன்மையை யுடையவைகளாக இருக்கவில்லை. வட்டார அரசாங்கங்களின் மீதான மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாடும் மேற்பார்வையும் படிப்படியாக நாளடைவில் வளர்ந்துக்கொண்டே வருகின்றன. குறிப்பாக, கல்வி, காவல் (Police), வட்டாரநிதி ஆகிய துறைகளை மேற் கூறப்பட்டதற்குச் சான்றுகக்கூறலாம். வட்டார அரசாங்கங்கள் அவற்றின் சொந்தத் தேவைகளைத் தாமாகவே நிறைவேற்றிக்கொள்ள முடியாமலிருப்பதால் அவைகள் மத்திய அரசாங்க உதவியை எதிர்நோக்கியிருக்கின்றன. இங்ஙனம் நிதி உதவிக்காக மத்திய அரசாங்கத்தைச் சார்ந்திருப்பதும், டோக்கியோவில் அமைந்திருக்கும் தேசிய அரசாங்கத்தை வழிகாட்டியாக எதிர்நோக்கும் அதிகார வர்க்கத்தன்மையும் பெருமளவிற்கு, மாநிலங்கள், பட்டினங்கள், நகரங்கள், கிராமங்கள் ஆகியவற்றின் தன்னாட்சியைப் பாதிக்கிறது என்று கருதப்படுகிறது.

# மேலும் படிக்கவேண்டிய நூல்கள்


Burks, W. Ardath : The Government of Japan

G. M. Kahim : Major Government of Asia

Linebarger and Others : Far Eastern Government and Politics—China and Japan

Maki, M. John : Government and Politics in Japan

Theodore, McNelley : Contemporary Government of Japan

C. Yanaga : Japanese People and Politics

# 1. சீன அரசும் அரசியலமைப்பும்

**முன்னுரை :** நவசீனுவிற்குச் செல்லும் எவரும் அந் நாட்டின் வளர்ச்சியில் பல முக்கிய அம்சங்கள் இருப்பதைக் கவனிக்கத் தவறமுடியாது. குறிப்பாக அந்நாட்டின் அரசியல்முறை, தத்துவம், வெகு வேகமாக வளர்ந்து வந்திருக்கும் பொருளாதார முன்னேற்றம், திட்டமிட்ட முன்னேற்றத்திற்கேற்ப நடந்துகொள்ளும் மக்கள் கருத்துகள் ஆகியவற்றைச் சொல்லலாம். அந்நாட்டிற்குச் செல்பவர்களைத்தான் இவைகள் ஈர்க்கின்றன என்பது கிடையாது. வெளியிலிருந்து நோக்குபவர்களையும் அவை கவரத்தக்கதாக இருக்கின்றன. சீன நாட்டு நிலையங்களையும் அவை இயங்கும் முறைகளையும் புரிந்துகொள்வதற்கு அந்நாட்டின் வரலாறும், பிரச்சினைகளும், மக்களது கருத்துகளும் சரிவர தெரிந்திருக்க வேண்டியது அவசியமெனக் கூறலாம். அவசரப்பட்டு முடிவுக்கு வருவது சூதாட்டத்தின் முடிவு போன்றது எனின் மிகையாகாது.

கடுமையான தாக்குதலுக்கும், குறை கூற்றுக்கும், கற்பனைக்கும் ஆட்படுத்தப்பட்டுள்ள சீன அரசியல் முறையை (Political System) இந்நூல் விவரிக்கிறது. இம் முயற்சி மிக எளிதானதல்ல என்பது எவரும் புரிந்து கொள்ளக்கூடியது. இங்கு சொல்லப்படும் கருத்துகள் அல்லது விளக்கங்கள் சீனமுறையை புகழுவதற்காகவோ அல்லது தாக்குவதற்காகவோ அல்ல; அதற்கு மாருக அம் முறையை மற்றவர்கள் புரிந்துகொள்வதற்காக எடுத்துக் கொள்ளப்படும் முயற்சியேயாகும். குறைகூறுவதோ அல்லது ஏற்றுக்கொள்வதோ அல்லது ஏற்க மறுப்பதோ மக்களாட்சி சமூகத்தைச் சேர்ந்தவர்கள் விருப்பத்தைப் பொறுத்தது. ஆனால், அடிப்படை உண்மைகளைக் கவனமாக அறிய

வேண்டியது மானிட இயல்களை, குறிப்பாக அரசியல் துறையைச் சேர்ந்த மாணவர்களின் கடமையாகும்.

சீனநாட்டு அரசியல்முறை சோவியத் யூனியனின் அரசியல் தத்துவத்தை (Political philosophy) ஓரளவிற்குப் பின்பற்றுகிறதெனினும், அது எந்தவொரு கொள்கையையும் கண்மூடித்தனமாக ஏற்கவில்லை என்று சொல்லலாம். இருப்பினும் அதுவும் சந்தர்ப்பச் சூழ்நிலைகளாலும் தோற்றுவிக்கப் பட்டதெனில் தவறுகாது. சீனமுறை, திறந்த மனத்தையும் கருத்துகளை அவ்வப்போது மாற்றிக்கொள்வதற்குத் தயாராக இருக்கும் சீனத்தலைவர்களின் பண்புகளையும் எதிரொலிப்பதாக இருக்கிறதெனலாம்.

# 2. சீனப்புரட்சி

பல்லாயிரம் ஆண்டுகளுக்குச் சீனர்கள் தங்களை உலகின் நடுவில் இருப்பதாகக் கருதிவந்தார்கள். அதற்குத்தகுந்தாற் போல சீனநாடு 'நடு அரசு' (Middle Kingdom), என்று அழைக்கப்பட்டு வந்தது. அதைச் சுற்றிலும் பல சிறிய நாடுகள் இருந்தன. அவைகளில் உள் மங்கோலியாவையும், வெளி மங்கோலியாவையும், திபெத், சிங்கியாங், பர்மா, கொரியா, வியட்நாம் ஆகிய நாடுகளையும் குறிப்பிடலாம். இவைகள் நேரிடையாகவோ, மறைமுகமாகவோ பீகிங்கினுல் ஆளப்பட்டு வந்தன அல்லது பீகிங்கிக்கு அவை அடங்கி நடந்து வந்தன. இம்மேலாட்சி சீனுவின் இராணுவம் அல்லது அரசாங்கப் பலத்திற்கேற்ப அமைந்திருந்த தெனலாம். பீகிங்கிற்கும் நிலமான்ய அரசுகளுக்குமிடையே யான உறவுகள் 'கப்பம் கட்டுமுறை'யால் ஒழுங்குபடுத்தப் பட்டன. இதனுல் அப்பகுதிகளின் தலைவர்கள் சீனப் பேரரசரின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டிருந்தனர் என்பது தெளிவாகிறது.

பல நூற்றுண்டுகளாக மேற்சொல்லப்பட்ட கப்பங்கட்டும் முறை சீனத்திற்கும், அண்டை நாடுகளுக்குமிடையிலான உறவுகளுக்குப் போர்வைபோல உதவியது. ஆனுல், பதினுரும் நூற்றுண்டுமுதல் இம்முறை ஏகாதிபத்திய நோக்கங் கொண்ட ஐரோப்பிய நாடுகளைச்சேர்ந்த கடல் வணிகர்களால் பாதிக்கப்பட்டு வந்தது. முதலில் போர்ச்சுகீசியர்களும், ஸ்பானியர்களும், பிறகு 17ஆம் நூற்றுண்டில் டச்சுக்காரர் களும், பிரித்தானியர்களும் கப்பங்கட்டிவந்த இதர நாட்டார் களைப்போன்றே நடத்தப்பட்டனர். பீகிங்குக்கு வெகு தொலைவில் தென்கிழக்குக் கடற்கரைப் பகுதியில் மாகோ (Macao), காண்டன் (Canton) என்ற துறைமுக நகரங்களி

விருந்த சீன அரசாங்க ஏகபோக நிறுவனங்கள் மூலமாக வியாபாரம் நடைபெற்றது. இச்சமயத்தில்தான் மேற்கத்திய நாடுகள், குறிப்பாக இங்கிலாந்து, சுதந்திர வணிகத்திற்கு விதிக்கப்பட்டிருந்த தடைகளையெல்லாம் அகற்றவேண்டுமென வற்புறுத்தியது. பிரித்தானிய கிழக்கிந்திய கம்பெனி சீனுவுடன் நடத்திவந்த அபின் வியாபாரம் மேலோங்கியிருந்ததும் இக்காலத்தில்தான். எனவே, இங்கிலாந்து நாடு, இன்னும் அதிக எண்ணிக்கையிலான துறைமுக நகரங்களை வியாபாரத்திற்குச் சீனு திறந்துவிடவேண்டுமெனவும், இரண்டு நாடுகளுக்குமிடையே ராஜ தந்திரத் துறையில் சமத்துவம் தரப்படவேண்டுமெனவும் கேட்டுக்கொண்டது. எனினும், இங்கிலாந்திலிருந்து வந்த தூதுக்குழுக்கள் தேவையான சலுகைகளைப் பெறமுடியவில்லை. இதைத்தொடர்ந்து நடைபெற்ற அபின் சண்டையில் (Opium War) சீனு தோற்றதால், செய்து கொள்ளப்பட்ட 1842ஆம் ஆண்டு உடன்படிக்கையின்படி ஐரோப்பியர்களுக்கு இந்த உடன்படிக்கையில் சேர்க்கப்பட்ட துறைமுக நகரங்களில் சீனச்சட்டங்களுக்கு உட்படாமல் வணிகஞ்செய்யும் உரிமை கிடைத்தது.

இத்தோல்வியோடுமட்டுமல்லாமல் உள்நாட்டுப் பிரச்சினைகளாலும் சீனு துன்புற்று வந்தது. பொருளாதாரத்துறையில் வேளாண்மைதான் முக்கியமானதாக இருந்தது. இத்துறையில் நிலங்கள் யாவும் பெருநிலக்கிழார்களிடமிருந்ததால் பொருளாதார வாய்ப்புக்களையெல்லாம் அவர்களே பெற்று வந்தனர். குடியானவர்கள் வெள்ளங்கள் போன்ற இயற்கைக் கொடுமைகளாலும் வெகுவிரைவில் சோற்றுக்குக் கூட இல்லாமல் பட்டினி கிடக்க நேரிட்டது. இனிப்பு உருளைக்கிழங்கு போன்ற உணவுப்பொருள்களின் உற்பத்தி, மக்கள் தொகை வளர்ச்சிக்கேற்ப அதிகரிக்கவில்லை. 1500ஆம் ஆண்டில் 60 மிலியன்களாக இருந்த ஜனத்தொகை 1850ஆம் ஆண்டில் 430 மிலியன்களாக அதிகரித்ததென்பது இவ்விடத்தில் நினைவு கூறத்தக்கது. அதிகவரி, லஞ்சம், இராணுவத்தின் பலஹீனம் முதலிய காரணங்களாலும் மஞ்சு அரசபரம்பரை (Manchu Dynasty) ஆட்சியின் மீது மக்களுக்கிருந்த நம்பிக்கை தளர்ந்து 19ஆம் நூற்றுண்டின் மத்திய காலத்தில் தைப்பிங் கலகம் (Taiping Rebellion) ஏற்பட்டது. இக்கலகம் குடியானவர்களால் செய்யப்பட்டதாகும். இக்கலகத்தில் சுமார் இருபது மிலியன் மக்கள் மேலைநாட்டு அரசுகளின் உதவியால் கொல்லப்பட்டனர். இக்கலகத்தில் சீனுவிற்கு

உதவியதற்காக மேற்குநாடுகளுக்குக் குறிப்பாக இரண்டாவது அபின் சண்டைக்குப் (1858-60) பிறகு மேலும் பலதுறைமுக நகரங்களை வியாபாரத்திற்காக திறந்து விட நேர்ந்தது. பீகிங்கில் இங்கிலாந்து, பிரான்ஸ் போன்ற நாடுகளுக்கு இராஜ தந்திர அடிப்படையில் தங்கும் வசதி அளிக்க வேண்டியதாயிற்று.

இவ்வாறு ஐரோப்பிய மிலேச்சர்களால் (Barbarians) பல தடவைகளில் தோற்கடிக்கப்பட்டதாலும், உள்நாட்டில் அரசாங்கத்திற்கெதிராக மக்களால் செய்யப்பட்ட கிளர்ச்சிகளாலும் பேரரசரின் பாதுகாப்பாளராகத் துரைத்தனம் நடத்திய தோவாகர் பேரரசியார் (Empress Dowager) 1860லும் அதற்குப் பிறகும் சீனவை நவீனப்படுத்தும் திட்டமொன்றைக் கொண்டுவரும் கட்டாயம் ஏற்பட்டது. இதனல் வெளிவிவகார அமைச்சரகம், கப்பல்தளம் போன்ற திட்டவட்டமான சில பயன்கள் ஏற்பட்டபோதிலும் சீனவின் பழைமைக் கொள்கைமுறையை மேற்கத்திய முறையில் நவீனப்படுத்தும் திட்டம் புறக்கணிக்கும் என்று கருதப்பட்டதால் முன்னேற்றமெதுவும் ஏற்படவில்லை. இருபதாவது நூற்றுண்டில்தான் மேற்கத்தியத் தொழில் நுணுக்கமும் நிலையங்களும் அப்பகுதி சமுதாய அரசியல்முறைகளினல் ஏற்பட்டவையாதலால் அந்நிய நாடுகளில் அவை எளிதாகத் தோற்றுவிக்கப்படவியலாது என்று உணரப்பட்டது.

இதற்குப்பின் ஏற்பட்ட மேலும் பல அந்நியர் ஆக்கிரமிப்புகளாலும் 1895ஆம் ஆண்டில் ஜப்பானியர்களால் தோற்கடிக்கப்பட்டதாலும் மற்றுமொரு சீர்திருத்தத்திட்டம், இத்தடவை 1898இல் குவாங்-சி (Kuang-hsi) பேரரசரால் கொண்டுவரப்பட்டது. இச்சீர்திருத்தங்கள் பிற்போக்குவாதிகளின் நலன்களைப் பாதித்ததால் அவர்கள் தோவாகர் பேரரசியாரின் தலைமையில் வெற்றிகரமான புரட்சியொன்றை நடத்தினர். சீர்திருத்தம் தோல்வியுற்றதால் சீனர்களில் பலர் ஆத்திரமடைந்து புரட்சி செய்ய ஆரம்பித்தார்கள். இதனல் அரசாங்கக்கட்டுப்பாடு பலஹீனமடைந்தது. பாக்சர்கள் (Boxers) இயக்கம் வடசீனவில் விரைவில் வளர்ந்தது. 1900ஆம் ஆண்டில் கோடைக்காலத்தில் பீகிங்கிலிருந்த அயல்நாடுகளைச்சேர்ந்த தூதுவர்களின் இல்லங்களை இந்த பாக்சர்கள் இரண்டு மாதங்களுக்கு முற்றுகையிட்டனர். ஆனல். இராணுவம் அம்முற்றுகையை முடிவுக்குக் கொண்டு வந்தது.

**குடியரசுப்புரட்சி** (The Republican Revolution)

இத்தருணத்தில் வெளிநாடுகளில் கல்வி பயின்ற சன்யாட் சென் (Dr. Sun Yat-Sen) என்ற சீனர் ஜனநாயகக் கொள்கைகளில் இருந்த ஆர்வத்தினாலும், மக்களுடைய துன்பத்தை நீக்கவேண்டுமென்ற நோக்கத்தினாலும் தீவிரவாத சீனர்கள், ஜப்பானிய அறிஞர்கள், வெளிநாடுகளில் வாழ்ந்த சீனர்கள் ஆகியோரின் பொருளுதவியைத் துணைக்கொண்டு மஞ்சு அரச பரம்பரைக்கு (Manchu Dynasty) எதிராகப் போராட்டத்தைத் தொடர்ந்து தீவிரமாக நடத்தி அப்பரம்பரையைக் கவிழ்த்து, சட்டசம்மதமான ஆட்சியொன்றை நிறுவத் திட்டமிட்டார். எனவே தேசியம், ஜனநாயகம், மக்களுக்கு உண்ண உணவு என்ற மூன்று கொள்கைகளை அடிப்படையாகக்கொண்ட டுங்-மெங்கை (Tung-Menghui) என்ற இயக்கமொன்றைத் தோற்றுவித்தார். இவ்வியக்கம் தனிப்பட்ட நிலக்கிழார்களுக்குக் கட்டுப்பாடுகளை விதிப்பதை ஆதரித்தது.

பலதடவைகளில் செய்த முயற்சிகளில் தோல்வியடைந்த போதும் கடைசியாக 1911ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 10ஆம் நாள் தோன்றிய எழுச்சியொன்று புரட்சித்தீயை ஏற்றி வைத்தது. முன்னமேயே நலிவுற்ற நிலையிலிருந்த மஞ்சு அரச பரம்பரை, அதன் ஆதரவாளராக முதலிலிருந்து பிறகு புரட்சிக்காரர்கள் ஆதரவாளராக மாறிய யுவான்-ஷி-காய் (Yuan Shih-Kai) என்பவரிடம் இராணுவ ஆதரவுகோரி அது கிடைக்காமல்போனதால் விரைவில் சரிந்தது. அப்போது அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்த சன்யாட் சென் தாய்நாடு திரும்பி உடனே வந்துசேர்ந்ததும் 1912ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் முதலாம்நாள் சீனக்குடியரசின் தற்காலிகத் தலைவராக அறிவிக்கப்பட்டார். இருப்பினும் இராணுவ அதிகாரம் யுவான்-ஷி-காயிடமே இருந்தது. ஐந்தே வயதான பூ-இ (Pu-Yi) என்ற பேரரசர் பதவியைத் துறந்ததும் அமைதியை நிலைநாட்டுவதற்கு யுவான்-ஷி-கயால் தான் முடியுமென்ற வெளிநாட்டு அரசுகள் கருதியதால் டாக்டர் சன்யாட்செ அவருக்காகத் தலைவர் பதவியிலிருந்து விலகினர். யுவா தலைமையிலான சீனஅரசாங்கத்திற்குப்போதுமான பொருள தார வசதி அப்போது இல்லாததால் அவர் மாநிலங்களிலிருந் இராணுவத் தலைமை அதிகாரிகளுக்குத் தன்னாட்சி வழங்கி அவர்கள் விருப்பம்போல வரிகளை விதிக்கவும், வாங்கவும் அனுமதிதந்தார். இது மத்திய அரசாங்கத்தை மேலும் பலவீனப்படுத்தி, ஒருவருக்கொருவர் சண்டை போட்டு

கொள்ளும் பழைய போர் பிரபுத்துவத்தை இவ்வதிகாரி களிடம் ஏற்படுத்தியது. அதன் பிறகு யுவான், அமைச்சரவை யையும் பாராளுமன்றத்தையும் உதாசீனப்படுத்தியதோடு கலைத்தும்விட்டார். அவர் தன்னை ஆரம்பமாகக் கொண்ட புதிய அரசபரம்பரையொன்றை ஏற்படுத்தக் கனவுகண்டார். ஆனால், அம்முயற்சியில் அவருக்கு வெற்றிகிட்டவில்லை. இதையடுத்து அவர் 1916ஆம் ஆண்டில் இறந்துவிட்டார். இதற்குள் பத்தாண்டுகாலப்போர் பிரபுத்துவமுறை கடந்து விட்டது.

1911ஆம் ஆண்டு புரட்சி தோல்வியுற்றதற்கு முக்கியமாக இரண்டு காரணங்களைக் கூறலாம். முதலாவதாக, மஞ்சு அரசபரம்பரையைக் கவிழ்ப்பதொன்றைத்தவிர புரட்சிவாதி களிடம் வேறுஎந்த பொதுப்பிணைப்புமில்லை. இரண்டாவதாக, புது குடியரசிற்குத் தேவையான ஆதரவை நல்கும் வகையில் தேசிய உணர்ச்சி மக்களிடம் பரவியிருக்கவில்லை. அதோடு மட்டுமின்றி, அமைச்சரவை, பாராளுமன்றம் போன்ற மேலை நாட்டு நிலையங்கள் சீனாவில் வளர்ந்திருக்கவில்லை.

**போர் பிரபுத்துவம்** (War Lordism)

ஒவ்வொன்றும் அதனதன் பகுதியிலிருந்து அமைக்கப் பட்ட படையின் வலிமையாலும் தங்களுடைய நலன்களைப் பாதுகாத்துக்கொள்வதில் அக்கறையுடையவைகளாகஇருந்த வெளிநாடுகளால் ஆதரிக்கப்பட்டதாலும், ஒன்றோடொன்று எப்போது பார்த்தாலும் சண்டைபோட்டுக்கொண்டிருந்த பிரதேசங்களையுடையதாக இருந்த துண்டாடப்பட்ட சீனாவின் நிலைமைதான் போர் பிரபுத்துவம் என்றழைக்கப்பட்டது. வடக்கே பீகிங்கை மையமாகக்கொண்ட மஞ்சூரியாவின் சாங்சோலினாலும் (Changtso-lin), ஜப்பானாலும் ஆதரிக்கப் பட்ட அன்வைக்குழு (Anhwei Group) இருந்தது. இக்குழு பிரிட்டனைச் சார்ந்திருந்த சிகிலியைத் (Chihli) தலைமையாகக் கொண்டிருந்த ஊபை-பு (Wupei-fu) குழுவோடு சண்டையிட்டு வந்தது. 1917இல் பீகிங் சிகிலிகுழுவினால் கைப்பற்றப் பட்டது. இக்குழுவிற்கு அப்போது சாங்சோ-லின் குழுவின் ஆதரவு கிடைத்தது. இருப்பினும் இவ்விரண்டு குழுக்களுக்கு மிடையே கருத்துவேற்றுமைகள்தோன்றி, இரண்டும் சண்டையிட்டுக் கொண்டபோது சாங்சோ-லின் 1922ஆம் ஆண்டில் மஞ்சூரியாவுக்குப் போய்ச்சேர்ந்தார். சீனாவின் தென்பகுதியில் வேறுசில போர் தத்துவக்குழுக்களும்

காண்டனை கேந்திரமாகக் கொண்டு அப்பகுதியிலிருந்த பிரபுக்களை ஆதரித்துக்கொண்டு, அதேசமயத்தில் சீனுவின் தேசிய அரசாங்கமென்று பறைசாற்றிவந்த சன்யாட் சென்னின் கொமின்டான் கட்சி (தேசியக்கட்சி)யும் இருந்தது. இருப்பினும் வல்லரசுகள் பீகிங்கிலிருந்து எந்தக்குழு ஆட்சி செய்ததோ அதையே சீன அரசாங்கமாக ஏற்று சன்யாட் சென்னுக்கு அத்தகுதியைத்தர மறுத்தன.

**மே இயக்கம்** (May Fourth Movement)

ஐரோப்பாவின் கவனம் முதல் உலகப்போரில் இருந்ததையும், உள்நாட்டுக்குழப்பத்தால் சீனு குன்றிப்போயிருந்ததையும் கருத்தில்கொண்டு, சீனுவிற்குக் குந்தகம் ஏற்படக்கூடிய வாறு ஜப்பான் பயனடையும் முயற்சியில் ஈடுபட்டது.

1914இல் ஜப்பான் ஜெர்மனிமீது போர் தொடுத்து சாண்டுங்கில் (Shantung) சீனுவிற்குத்தரப்பட்டிருந்த சலுகைகளைத் துரிதமாகப் பற்றிக்கொண்டது. அதற்கும் அடுத்த ஆண்டு இருபத்தோரு கோரிக்கைகள் (Twenty one Demands) அடங்கிய தாக்கீதொன்றைச் சீனுவுக்கு அனுப்பி, ஜெர்மனிக்கு அதுகாறும் தரப்பட்டிருந்த சலுகைகளைத் தனக்கு அளிக்க வேண்டுமென வற்புறுத்தியது. இதுவும், இதர கோரிக்கைகளும் ஜப்பானுக்கு அளிக்கப்பட்டிருந்தால் சீனு அந்நாட்டின் குடியேற்ற நாடென்ற நிலைக்கு மதிப்பு குறைந்துபோயிருக்கும். ஜப்பானின் இச்செயல் சீனமக்களிடையே சீற்றத்தை தோற்று வித்ததன் விளைவாக ஜப்பானியப் பொருள்களின் விலக்கேற்பட்டது. ஆனுல், ஜப்பானின் பயமுறுத்தலுக்குப் பணிந்து யுவான்-சி-காய் பல கோரிக்கைகளைப் பலவந்தமாக ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று.

1917இல் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வற்புறுத்தலாலும், பிற்பாடு நடைபெற்ற சமாதான மாநாட்டில் கலந்து கொள்ளும் வாய்ப்பையும் அதன் வாயிலாக ஜப்பானுக்கெதிராகத் தனது உரிமைகளை வற்புறுத்திக் கேட்டுப் பெறுவதற்காகவும் ஜெர்மனி மீது சீனு போர் தொடுத்தது. எனினும், போருக்குப் பிறகு ஜெர்மனிக்குச் சீனுவில் தரப்பட்டிருந்த உரிமைகளைத் தொடர்ந்து பெற்றிருப்பதற்காக ஜப்பான் ரகசியமாக பிரிட்டன், பிரான்சு, ரஷ்யா ஆகியவற்றுடன் பேச்சுவார்த்தைகளை நடத்தியிருந்தது. எனவே, 1919ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் வர்சேல்ஸ்சில் நடந்த சமாதான

மாநாடு சாண்டுங்கில் ஜெர்மனிக்குத் தரப்பட்டிருந்த தளங்களைத் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்ற சீனவின் வேண்டுகோளை நிராகரித்துவிட்டது. அப்பொழுது சீனவில் பல பெரிய நகரங்களில் தாய்மொழியில் பிரசுரிக்கப்பட்ட செய்திகளினால் புதியதொரு தேசிய உணர்ச்சி பரவியிருந்தது. செய்திகளின் நடப்பை ஊன்றிக் கவனித்து வந்த பலர் மேற் சொல்லப்பட்ட வர்சேல்ஸ் மாநாட்டின் முடிவைக் கேட்டதும் ஆத்திரமடைந்தனர். இருபத்தோரு கோரிக்கைகள் விடுக்கப் பட்டது முதல் வர்சேல்ஸ் மாநாட்டின் முடிவு வரை சீனர்கள் மனதில் குமுறிக்கொண்டிருந்த ஆத்திரம் கட்டுக்கடங்காமல் போய்மே மாதம் நான்காம் தேதி மாபெரும் மாணவர்கள் போராட்டமாக வெடித்தது. அப்போராட்டத்தின் போது ஜப்பான் பக்கம் சார்புடையவர்களாக இருந்த சீன மந்திரிகள் தாக்கப்பட்டனர். அதற்குப்பிறகும் நாடு முழுவதும் பல போராட்டங்களும், வேலைநிறுத்தங்களும், ஜப்பானியப் பொருள்களின் விலக்கு நடவடிக்கைகளும் தொடர்ந்து நடை பெற்றன. இறுதியில் அரசாங்கம் அவர்களுடைய கோரிக்கை களுக்குப் பணிந்தது. சமாதான மாநாட்டிற்குச் சென்றிருந்த சீனப்பிரதிநிதிகள் சமாதான உடன்படிக்கையில் கையெழுத் திட மறுத்து, வர்சேல்ஸிலிருந்து ஜூன் மாதம் திரும்பி வந்தார்கள். சாண்டுங்கில் ஜெர்மானியர்களுடைய உரிமைகள் பற்றிய பிரச்சினை 1922ஆம் ஆண்டு ஜப்பானல் திரும்பத் தரப்பட்டபோதுதான் தீர்ந்தது.

**சீனக் கம்யூனிஸ்டுக் கட்சித் தோற்றம்**

மே இயக்கம், சீன அறிஞர்களிடையே மன மாற்றத்தைத் தோற்றுவித்தது. அதுவரையிலும் ஐரோப்பிய மோகங் கொண்டிருந்த அவர்கள் சீனவின் உரிமைகள் ஜப்பானுக்கு அடகு வைக்கப்பட்டதால் ஆத்திரமடைவதற்கும், ரஷ்யாவில் புதியதாக ஏற்பட்டிருந்த கம்யூனிச அரசாங்கம் தனக்கு சீன வின் பகுதிகளை ஆதிக்கம் செலுத்தும் ஆசை கிடையாதென்று அறிவித்து நல்ல பெயர் தட்டிக்கொண்டு போவதற்கும் பொருத்தமாக இருந்தது.

1917ஆம் ஆண்டு அக்டோபர் புரட்சியின் ஆரம்ப விளைவு கள் சீனவைப் பொறுத்தவரை அவ்வளவாக இல்லை. இதற்குக் காரணம் மாஸ்கோவிற்கும் பீகிங்கிற்கும் இருந்த நீண்ட தூரமாக இருப்பினும் மார்க்ஸ், லெனின் ஆகியவர் களின் சிந்தனைகள் சீன மொழியில் சிறிது சிறிதாக வெளி

யிடப்பட்டன. பீகிங் பல்கலைக் கழகத்தில் கல்வி பயிற்று வித்து வந்த லி டா-சோவோவும் (Li Ta-Chao) சென்டு-சியுவும் (Chen Tu-Hsin) மார்க்சீய கல்விக்குழு (Marxist Study Group) வொன்றை 1918இல் நிறுவினர். இக்குழுவில் இளமைத்துடிப் புடன் இருந்த மோசேதுங்கும் வேறு சிலரும் மாணவர்களாகச் சேர்ந்தனர். இக்குழுவிலிருந்தவர்களெல்லாம் மார்க்சீயக் கொள்கைகளைப் பின்பற்றுபவர்களாக இல்லாமல் அவைகளைக் கல்விக் கண்ணோட்டத்தோடு ஆராய்ந்து, பலப்பல புதுக் கொள்கைகளை எடுத்துரைத்தனர். எனினும், அவர்கள் குறிப் பாக லியும், சென்னும் 1920ஆம் ஆண்டிலேயே மார்க்சீயவாதி களாக மாறிவிட்டனர்.

அச்சமயத்தில் சீனாவில் வேறுபல மார்க்சீயக்கல்வி குழுக் களும் ஏற்பட்டிருந்தன. இந்தக்குழுக்களையெல்லாம் ஒன்று சேர்த்து செயல்படுமாறு செய்வதற்கு ரஷ்யாவிலிருந்து வாய் டின்ஸ்கி (Voitinsky) என்ற தூதரொருவர் சீனாவிற்கு வந்து சேர்ந்தார். இவருடைய உதவியால், லிடா சோவோவும் (Li Ta-Chao), சென்டு-சியும் சீனாவில் ஆங்காங்கு பல கூட்டங் களை நடத்தினார்கள். அதன்பிறகு இரண்டுபேருமாகச் சீனக் கம்யூனிஸ்டுக்கட்சியைத் துவக்கி (CCP)ஐம்பது பேர்களுக்குப் பிரதிநிதிகளாக வந்த பன்னிரண்டு பேர்களோடு சாங்கையில் (Shangai) 1921ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல்தேதியன்று முதல் காங்கிரசை நடத்தினார்கள். சென், கட்சியின் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சீனக் கம்யூனிஸ்டுக் கட்சியின் திட்டம் இடதுசாரி வகையைச் சேர்ந்ததாகும். அத்திட்டம் சீனாவில் சோஷலிசத் தின் வெற்றிக்கும், உழைப்பாளி வர்க்கத்தின் முன்னேற்றத் திற்கும் வழிவகுப்பதாக அமைந்தது. அதே சமயத்தில் நிலப் பிரபுத்துவ ஜனநாயக வாதிகளுக்கு எதிரானது. அவர்களை ஒழிக்கவேண்டுமென்பது. ஆனால், இக்கம்யூனிஸ்டுக் கட்சிக்கு ஆரம்பத்தில் பொது மக்களிடையே அதிக செல்வாக்கில்லாத தால் அச்செல்வாக்கைப் பெறும் வரை சன்யாட்சென் கொமின்டான் (Kuomintang) கட்சியோடு கூட்டு சேர்ந்து கொள்ளும் லெனினுடைய அறிவுரையை அது ஏற்றுக்கொண் டது. ஆனால், சன்யாட்சென் உடனடியாக கம்யூனிஸ்டுக்கட்சி யோடு கூட்டுச்சேர்வதை நிறைவேற்றாமல் காலங்கடத்தி வந்தார். இருப்பினும், மேலைநாடுகள் அவர் ஏற்படுத்திய அரசாங்கத்திற்கு அங்கீகாரம் தராததால் வெறுப்புற்றிருந்த தாலும், அதே சமயத்தில் ரஷ்யாவின் ஆதரவில் பலமிக்க

படையைத் திரட்டி சீனுவை ஒன்றுபடுத்தி விடலாம் என்று கருதியதாலும் கம்யூனிஸ்டுக் கட்சியை அரசாங்கத்தில் ஏற்றுக் கொள்ள சம்மதித்தார். ஆனுல், கம்யூனிஸ்டுக் கட்சியோ கொமின்டான் கட்சியை பொதுமக்கள் ஆதரவைப் பெறு வதற்கு முதலில் ஏணிபோல் பயன்படுத்திக் கொண்டு, பிறகு உதறித் தள்ளிவிடலாம் என்ற எண்ணத்தில் தான் சன்யாட் சென் கட்சியோடு சேரவிழைந்தது என்பது தெளிவு, சன்யாட்சென்னுே கம்யூனிஸ்டுகளைப் பிறகு மெதுவாக விலக்கி விடலாமென எண்ணினுர். இக்கட்சிகளுக்கிடை யிலான கூட்டு கம்யூனிஸ்டுக் கட்சியினுல் 1923ஆம் ஆண்டு ஜூன் மாதம் கூட்டப்பட்ட மூன்ருவது காங்கிரசால் முறைப் படியாக ஏற்றுக்கொள்ளப்பட்டு, 1924ஆம் ஆண்டு ஜனவரி மாதம்கூடிய முதல் கொமின்டான் காங்கிரசால் ஆமோதிக்கப் பட்டது. இதனுல் கொமின்டான் மத்திய நிர்வகாக் குழு விற்கு மூன்று கம்யூனிஸ்டு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். மோ சே-துங் மாற்று உறுப்பினராக ஆக்கப் பட்டார்.

### முதல் ஐக்கிய முன்னணி (1924—1927)

இம்முன்னணியில் கூட்டாளிகளான இரு கட்சிகளிடை யிலும் ஆரம்ப முதலே வேற்றுமைகளும் மோதல்களும் இருந்து வந்தபோதிலும், 1925ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் சன்யாட்சென் பீகிங்கில் இறக்கும்வரை வெளியே வரவில்லை. அதே ஆண்டு நவம்பர் மாதம் கொமின்டான் கட்சியைச் சேர்ந்த சில கன்சர்வேடிவ் உறுப்பினர்களின் குழுவொன்று கம்யூனிஸ்டுகள் வெளியேற்றப்படவேண்டுமென்றும், அவர் களுடையப் பிரதிநிதியாக அரசாங்கத்திலிருந்த போரோடின் (Borodin) என்பவர் பதவி நீக்கம் செய்யப்படவேண்டும் என்றும் வற்புறுத்தியது.

சன்யாட்சென் இறந்தவுடன் அவர் வகித்த தலைமைப் பதவிக்கு வாங்சிங்-வை (Wang ching-wei), சியாங்கே-ஷேக் (Chiang Kai-Shek) என்ற இருவர் வாரிசுகளாக எழுந்தனர். விரைவில் சியாங் தலைமைப் படைத்தளபதியாகவும், காண்டனில் இயங்கிவந்த வாம்போவா இராணுவக் கழகத்தின் தலைவராகவும் நியமிக்கப்பட்டார். இவர் கம்யூனிஸ்டுகளை நம்பாதவரெனினும், சன்யாட் சென்னின் குறிக்கோள்களை அடைவதற்கு ரஷ்ய உதவி அவசியம் தேவை யென்று உணர்ந்திருந்ததால் தீவிர நடவடிக்கையில் இறங்கா

திருந்தார். எனினும் அவர், போரோடின் ஒரு சமயம் பீகிங் போயிருந்தபோது காண்டனிலிருந்த சில கம்யூனிஸ்டுகளைக் கைது செய்ததோடு, ரஷ்ய ஆலோசகர்கள் சிலரையும் வீட்டுக் காவலில் வைத்தார். இருப்பினும் கம்யூனிஸ்டுகள் கோமின்டான் கட்சியோடு தொடர்பை அறுத்துக்கொள்ளாமல் தொடர்ந்து இருந்துவர விழைந்தது. போரோடின் திரும்பி வந்ததும் ஆத்திரப்படாமல், கம்யூனிஸ்டுகளின் நடவடிக்கைகளைக் குறைத்துக்கொள்ளவும், சியாங்கின் விருப்பப்படி வட சீனப்படையெடுப்பில் அவருக்கு ஆதரவு நல்குவதாகவும் வாக்களித்தார். சியாங்கும் அவருடைய பங்கிற்கு, கோமின்டான் கட்சியிலிருந்த கன்சர்வேடிவ்களைக் கட்டுப்படுத்தி வைப்பதாக வாக்குறுதி தந்தார்.

ரஷ்யர்களுடைய ஆயுதங்கள், ஆலோசகர்கள் உதவியால் 1926ஆம் ஆண்டு ஜூலை மாதம் வடசீனப்படையெடுப்புத் தொடங்கிற்று. இப்படையெடுப்பின்போது கம்யூனிஸ்டுகள் வழிநெடுக ஆதரவு தந்து வந்தனர். அவர்களில் குறிப்பிடத்தகுந்தவர் மோசே-துங். வடக்கே மஞ்சு அரசர்களையும்விட மோசமாக ஆட்சி செய்து வந்த ஊபை-பூ எதிர்ப்பைத்தாங்க முடியாமல் உயிர் தப்பியோடினார். இதற்கிடையில் சியாங்கே ஷேக் சாங்கையை நோக்கிச்சென்றபோது கியாங்சி (Kiangsi) மாநிலத்தின் தலைநகரான நான்செங்கை (Nanchang) நவம்பரில் கைப்பற்றியதும், அங்கு சிறிதுகாலம் குளிரை முன்னிட்டு தங்கிச்செல்லத் திட்டமிட்டிருந்தார்.

ஆனால், 1927ஆம் வருட ஆரம்பத்தில் கோமின்டான் கட்சியின் வாங்சிங்-வைத் தலைவராகக்கொண்ட இடதுசாரிகளுக்கும், சியாங்கே-ஷேக்கைத் தலைவராகக்கொண்ட வலதுசாரிகளுக்குமிடையே சச்சரவு முச்சந்திக்கு வந்தது. இச்சச்சரவுக்குப் பல காரணங்கள் இருந்தன. அவைகளுள் முக்கியமானவை வருமாறு: இரண்டு பேருக்குமிடையே தனிப்பட்ட முறையில் இருந்த போட்டி; கம்யூனிஸ்டுகளுடனை கூட்டுப்பற்றிய மாறுபட்ட கருத்துகள்; வாங்குக்கு சியாங்கின் இராணுவ பலம் பற்றிய பயம்; சியாங், சாங்கை நோக்கிச் சென்றதானது மேலை நாடுகளைக் கலங்கவைக்கும் என்ற எண்ணத்தில் போரோடினின் எதிர்ப்பு; போரோடின், கோமின்டான் வடக்கே பீகிங்கை நோக்கிச்செல்லவேண்டுமென்று வற்புறுத்தினார்.

1927ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் வாங்சிங்-வை கோமின்டான் தேசிய அரசாங்கத்தை ஊகனுக்கு (Wuhan)

மாற்றினர். சியாங் நான்சங்கிற்கு மாற்றப்படுவதை வர வேற்றிருப்பார். மார்ச் மாதத்தில் சியாங்கின் இராணுவ, அரசியல் அதிகாரங்களுக்கு ஊகன் அரசாங்கம் பல தடைகளை விதித்தது. இத்தடைகளால் கலக்கமுருமல், சியாங் தனது படைகளை அதே மாதத்தில் சௌ-என்-லாய் (Chou-En-lai) தலைமையில், சீனக் கம்யூனிஸ்டுகளும் தொழிலாளர்களும் சாங்கையில் சீனர்கள் வாழும் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டிருந்ததைத் தகர்க்க சாங்கைக்கு நகர்த்தினர். அவர்கள் அருகிலேயே புரட்சி வந்து விட்டதையுணர்ந்த அயல் நாட்டுத்தொழில்துறைப் பிரதிநிதிகள் நடுக்கங் கொண்டனர். அவர்கள் அங்ஙனம் பயந்து நடுங்கியிருக்க வேண்டியதில்லை. ஏனெனில் கம்யூனிஸ்டுகளுடன் நீண்ட கால ஒற்றுமை சாத்தியமற்றதென்று கருதிய சியாங் விரைவிலேயே ரகசியக்குழுக்கள், வணிகர்கள் ஆதரவைத் துணையாகக்கொண்டு சீனக் கம்யூனிஸ்டுக்கட்சி உறுப்பினர் களையும், கம்யூனிஸ்டுகள் என்று சந்தேகிக்கப்பட்டவர்களையும் ஏப்ரல் 12ஆம் தேதி படுகொலை செய்ய ஆரம்பித்தார் .சௌ-என்-லாய் மயிரிழையில் தப்பியோடினர்.

டிராட்ஸ்கியுடன் உள்நாட்டில் கருத்துவேற்றுமை அடிப் படையில் அதிகாரத்தை தக்கவைத்துக் கொள்வதற்காகப் போராடிவந்த ஸ்டாலின், சியாங்கின் இத்துரோகச்செயலை வெறுத்தாரெனினும் ஒருவகையில் கொமின்டான் கட்சி யிலிருந்த தீவிர இடதுசாரிகளின் துணைக்கொண்டு, கம்யூனிச இயக்கத்தைப் பரவச்செய்யமுடியுமென நம்பியதால், சியாங் பிரிந்துசென்றதைப்பற்றி அவ்வளவாகக் கவலைப்படவில்லை. இடதுசாரி கொமின்டானும் ஸ்டாலினுடைய நம்பிக்கை வீண்போகாதவாறு ரஷ்யாவினுடனை ஒத்துழைப்பை மீண்டும் உறுதிப்படுத்தியது. இதற்குப்பிறகு சீனவில் மூன்று அரசாங்கங்கள் இருந்தன. அங்கீகாரம் வழங்கப்பட்ட பீகிங்கிலிருந்த அரசாங்கம், ஊகனிலிருந்த இடதுசாரி கொமின்டானின் தேசிய அரசாங்கம், ஏப்ரல் மாதம் நான்கிங் கில் நிறுவப்பட்ட சியாங்-சே-ஷேக்கின் தலைமையில் இயங்கிய புதிய அரசாங்கம் ஆகியவை அவை.

கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் இடதுசாரி கொமின்டான் கட்சிக்குமிடையேயிருந்த நட்பு நீடிக்கவில்லை. வாங்சிங்-வை, கொமின்டானைப் பிடிப்பதற்கு அல்லது அதைத் தன் செல் வாக்கின் கீழ்க்கொண்டுவருவதற்கு கம்யூனிஸ்டுகள் திட்டம் போட்டிருந்தனரென்று சந்தேகம் கொண்டார். இச்சந்தே

கத்தை உறுதிப்படுத்துவதுபோலிருந்தது ஸ்டாலினிடமிருந்து எம். என். ராய்க்கு வந்த தந்தி. அத்தந்தியில் கொமின்டான் கட்சியைக் கைப்பற்றுமாறு சீனக்கம்யூனிஸ்டுக் கட்சியைக் கேட்டுக்கொண்டிருந்தார் ஸ்டாலின். ஜூலை மாத நடுவில் ஊகன் அரசாங்கம் கம்யூனிஸ்டுகளையெல்லாம் களையெடுத்து விட்டு, போரோடின் உள்பட எல்லா ஆலோசகர்களையும் மாஸ்கோவுக்குப் பயணமாகுமாறு செய்தது. இதற்கு முக்கிய காரணம் சீனக்கம்யூனிஸ்டுக்கட்சியும், முக்கியமாக அதன் தலைவரான சென்-டு-சியுவும் தவறான கொள்கைகளைப் பின்பற்றியதாகுமென ஸ்டாலின் கருதினார். ஆனால், உண்மையில் அப்போதிருந்த சூழ்நிலையில் கம்யூனிஸ்டுக்கட்சி அதைவிடச் சிறந்த கொள்கைகளைப் பின்பற்றியிருக்க முடியாது. இது தொலைதூரத்தில் மாஸ்கோவிலிருந்த ஸ்டாலினுக்குத்தெரிந்திருக்க நியாயமில்லை. மேலும் ஸ்டாலின், சியாங்கே-ஷேக்கின் திறமைகளைக் குறைத்து மதிப்பிட்டிருந்தார். ஸ்டாலினால் குற்றஞ் சாட்டப்பட்ட, உறுப்பினர்கள் எண்ணிக்கையில் குறைந்துவிட்ட, நகர்ப்புறங்களில் ஆதர விழந்த கம்யூனிஸ்டுகள் நாட்டுப்புறங்களுக்குச் சென்று புதிய யுக்தியொன்றை ரஷ்யக்கம்யூனிஸ்டுக் கட்சியைப்புறக்கணித்து உருவாக்கினர்.

இதற்குப்பிறகு கம்யூனிஸ்டுகள் ஆகஸ்டு மாதத்தில் கான் கௌ (Han Kow) என்னுமிடத்தில் அவசரக் கூட்ட மொன்றை நடத்தினர். அக்கூட்டத்தின் தீர்மானங்களுக் கேற்ப சென்டு-சியு தலைமைப் பதவியிலிருந்து விலக்கப்பட்டு, சு-சியு-பை (Chu-Chiu-Pai) அப்பதவிக்கு நியமிக்கப்பட்டார். வேளாண்மைப்புரட்சிக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டது. முதல் வேலையாக நகரங்களில் உழைப்பாளி வர்க்கத்தினரை ஒன்று திரட்ட முயற்சிக்கப்பட்டது. ஆயுதம் தாங்கிய புரட்சி யும் செய்யப்படவேண்டுமென்று கட்சி வற்புறுத்தியது.

இக்கொள்கைகள் கொமின்டான் படையிலிருந்த ஹோ லங் (Ho Lung) யே டிங் (Yeh-Ting) என்ற படைத்தலைவர் களால் மேற்சொல்லப்பட்ட அவசரக்கூட்டத்திற்கு முன்பே ஆகஸ்டு முதல் தேதியில் கொண்டுவரப்பட்டிருந்தது. இந்த ஆகஸ்டு முதல் தேதியைத்தான் செம்படை (Red army) ஆரம்ப தினமாக இப்போதும் சீனர்கள் கொண்டாடுகின்றார்கள். இதன் தோற்றத்திற்கு முக்கிய காரணம் கொமின்டான் கட்சியையும், கொமின்டான் இராணுவத்தையும் சீனக் கம்யூனிஸ்டுக்கட்சி கைப்பற்றமுடியாது என்பதால் ஏற்பட்ட தாகும்.

நான்சங்கில் இராணுவப் படையெடுப்பு நடத்தப்பட்ட போதே கிராமப்புறங்களிலும் கம்யூனிஸ்டுகளின் புதுக் கொள்கைகளைப் பரப்புவதற்கு நடவடிக்கைகள் எடுப்பதற்கு முயற்சிகள் செய்யப்பட்டன. அவைகளில் முக்கியமானவை மோ-சே-துங்கினால் 1927ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஹுநானில் (Hunan) அமைக்கப்பட்டு நடத்தப்பட்ட இலையுதிர் கால அறுவடைக்கிளர்ச்சிகளாகும். (Autumn Harvest Uprisings) ஹுநானுக்கு மத்தியக்குழுவால் மோ, கிளர்ச்சிகளை ஏற்பாடு செய்வதற்காக அனுப்பப்பட்டார். இலையுதிர்காலம் கிளர்ச்சிகளை ஏற்பாடு செய்வதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட காரணம் அந்த சமயத்தில்தான் அறுவடைகள் நடைபெறும், வரிகளும் வசூல் செய்யப்படும். குடியானவர்கள் புரட்சிக்கு ஆதரவு தருவார்கள் என்ற நோக்கமாகும். மோ, பெருநிலக்கிழார், இடைநிலக்கிழார்களின் நிலங்களையெல்லாம் பிடுங்கி ஏழைக் குடியானவர்களுக்குப் பிரித்துக்கொடுக்கத் திட்டமிட்டிருந்தார். புரட்சிப்படையொன்றையும், தொழிலாளர் குழுக்களை (Soviets) அமைக்கவும் அவர் விரும்பினார்.

தொழிலாளர் குழு (Soviet) என்னும் சொல் ரஷ்ய அனுபவத்திலிருந்து கடன்வாங்கப்பட்டதாகும். அதற்குத் தொழிலாளர்கள், குடியானவர்கள், போர்வீரர்கள் பிரதிநிதித்துவக்குழு என்பது பொருள். இத்தகைய குழுக்கள் ரஷ்யாவில் முதலில் 1905-லும் பிறகு 1917-லும் பயன்படுத்தப்பட்டன. சீனாவில் இச்சொல் பிறகு செம்படையால் கட்டுப்படுத்தப்பட்ட பகுதிகளைக் குறிப்பதாயிற்று. இவ்வாறு சோவியத்துகளைத் தருணம் வருவதற்குமுன்பே அமைக்கும் கொள்கையை மோ, கடைப்பிடித்தது ரஷ்யாவின் தலைவராக இருந்த ஸ்டாலினுக்குப் பிடிக்கவில்லை. மோ அதைப் பொருட்படுத்தாமல் தன்னுடைய திட்டங்களை நிறைவேற்ற முனைந்ததன் பயனாகப் பல கிளர்ச்சிகள் சீனாவில் தொடர்ந்து ஏற்பட்டன. இக்கிளர்ச்சிகள் மொத்தத்தில் தோல்வியுற்றாலும் குடியானவர்களின் ஆதரவைப் பெறுவதற்கு அறுவடைக்காலமே சிறந்தது என்ற எண்ணத்தை அவர் கைவிடவில்லை. குடியானவர்கள் கிளர்ச்சிக்குத் தரக்கூடிய ஆதரவு மகத்தானது என்பதும் அவரது பரிபூரணமான நம்பிக்கை. மோ தத்துவத்தின் (Maoism) முக்கியமான கொள்கைகளில் இதுவும் ஒன்றாகும். இந்தத் தத்துவத்தை ரஷ்ய கம்யூனிஸ்டுகள் ஏற்றுக்கொள்ளாது. புரட்சிக்குத் தொழிலாளர்களே நம்பகமானவர்கள் என்றும் இவர்களுக்கு ஆதரவு தருபவர்களாகக் குடியானவர்களைக் கருதலாம் என்றும் கூறினார்கள்.

இது மார்க்சீயத்தத்துவங்களுள் ஒன்ருகும். சீஞ முழுவதும் கம்யூனிச மயமாக ஆக்கப்படுவதற்கு உறுதியான பிரதேச அடிப்படை தேவையென்றும் அதன் துணைக்கொண்டு படிப் படியாகப் புரட்சியை நாடுமுழுவதும் பரப்பவேண்டுமென்றும் மோ கருதிஞர்.

புரட்சியைப் பரப்புவதற்கும், அதிகாரத்தைக் கைப்பற்று வதற்கும் என்னென்ன கொள்கைகளையும் முறைகளையும் பின்பற்றவேண்டுமென்பதில் மோவுக்கும் சீனக்கம்யூனிஸ்டு களுக்குமிடையே கருத்துவேறுபாடு இருந்ததைப்போலவே, மோவுக்கும் ரஷ்யத்தலைவர்களுக்குமிடையே இருந்தது. ஆரம்பத்தில் மோ விலக்கிவைக்கப்பட்டபோதிலும் பிறகு மோ பின்பற்றிய கொள்கைகளே சீஞவிற்குப் பொருத்த மானவை என்ற கருத்து மேலோங்கியது. மோவிற்குத் துணையாக சூ (Chu) என்பவரும் இருந்தார். இந்த இருவரும் இதர சிலரது ஆதரவிஞல் சிங் காங் சான் (Ching Kang Shan) கியாங்சி (Kiangsi) போன்ற இடங்களைப் பிடித்துப் பலப் படுத்திவந்தனர். இவற்றையெல்லாம் கண்ட சியாங்-கே-ஷேக் இவர்களை வளைத்துப்பிடிக்கும் இயக்கங்களை அவ்வப்போது நடத்திஞர். அதஞல் கம்யூனிஸ்டுகளின் நடவடிக்கைகள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரப்பட்டதோடு சில இடங் களில் அவர்கள் தோற்கடிக்கவும்பட்டார்கள். இந்த சமயத்தில் சூ-யென்-லாயின் கை ஓங்கியது. மோவின் ஆட்கள் பதவியிலிருந்து அகற்றப்பட்டார்கள்.

ஏறத்தாழ அதே சமயத்தில் அதாவது 1933ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் சியாங்-கே-ஷேக்கும் ஜெர்மானிய தள வாடங்கள், இராணுவ ஆலோசகர்கள் உதவியுடனும், பத்து லட்சம் பேர் கொண்ட படையுடனும் கம்யூனிஸ்டுகளை நாலா பக்கமும் தாக்கிஞர். இத்தாக்குதலைச் சமாளிக்க முடியாது திணறிய கம்யூனிஸ்டுகள் 1934ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முன்பு பிடித்திருந்த இடங்களை விட்டு விட்டு சோவியத் பகுதி கள் பக்கம் செல்ல வேண்டியதாயிற்று. இப்பயணம் வர லாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஏனெனில் இதில் கலந்துகொண்ட செம்படையினரின் எண்ணிக்கை ஒரு லட்ச மாகும். அவர்கள் 6000 மைல்களை நாளொன்றுக்கு 24 மைல் கள் வீதம் 12 மாநிலங்களையும், 24 ஆறுகளையும், 18 மலைப்பகுதி களையும் கடந்து சென்றனர். இந்தப்பயணம் 'நீண்ட பயணம்' (Long-March) எனப்படுகிறது. இதன் விளைவாகக் கம்யூனிஸ்டு கள் தங்களுடைய தளங்களை விட்டுச் செல்ல நேர்ந்தது. இத்த

யைத் தோல்விக்கு முக்கிய காரணம் கட்சியிலேயே இருந்த எதிரிகளும் மாணவர்களும்தான் என்று மோ குற்றஞ் சாட்டினார். இச்சம்பவத்திற்குப் பிறகு நடந்த கம்யூனிஸ்டு கட்சி மாநாட்டில் மோ-சே-துங் அதன் தலைவராகத் தேர் தெடுக்கப்பட்டார். இருப்பினும் மோவுக்கு சாங்குவோ-டோவோ (Chang-Kuo-Tao) போன்றவர்களிடமிருந்து எதிர்ப்பு தொடர்ந்திருந்து வந்தது. ஆனால், சாங்குவோ-டோவோ 1936ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் மோவுடன் சேர்ந்தார் என்றாலும், பிறகு கம்யூனிஸ்டு கட்சியிலிருந்து விலக்கப் பட்டார். எனவே, அவர் அதன் பிறகு தேசிய கொமின்டான் கட்சியுடன் சேர்ந்து இப்பொழுது ஹாங்ஹாங்கில் வசித்து வருகிறார். இச்சமயத்தில் கம்யூனிஸ்டு கட்சியின் படைவீரர்கள் எண்ணிக்கை 300,000-லிருந்து 30,000 ஆகக் குறைந்து விட்டது. எனவே, சியாங்கே-ஷேக் கடைசித் தடவையாக மற்றுமொருமுறை சண்டையைத் துவக்கினால் கம்யூனிஸ்டுகள் அழிந்துபோகக்கூடும் என்று தோன்றியது.

## இரண்டாவது ஐக்கிய முன்னணிக்கான ஏற்பாடுகள்

1935ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் கம்யூனிஸ்டுகளும் கொமின்டான் கட்சியைச் சேர்ந்த தேசியவாதிகளும் ஒரு கூட்டரசாங்கம் ஏற்படுத்தலாமென்று மோ-சே-துங் பிரேரபித் தார். இக்கூட்டரசாங்கம் ஐப்பானிய ஆக்கிரமிப்பை முறி யடிக்க உதவுமென்பது அவர் கருத்தாகும். எனினும் இம் முயற்சி கம்யூனிஸ்டுகளைக் கொமின்டான் கட்சித்துருப்புகள் தாக்கி அழிப்பதைத் தடுத்து, மறுபிறவி தருவதற்காகச் செய்யப்பட்டது என்பதுதான் உண்மையாகும். மோ-சே-துங்கின் இப்பிரேரணைகளுக்கு அகில உலக கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைமை ஆதரவுமிருந்தது. ஐப்பானியர்களுடனான போரில் கொமின்டான் கட்சியைச்சேர்ந்த துருப்புகளைப் பயன்படுத்துவதன் மூலமாகக் கம்யூனிஸ்டுகள் தங்களுக்குச் சாதகமான நிலைமையைத் தோற்றுவிக்க முடியும் என்பது கம்யூனிஸ்டுக்கட்சியின் கருத்து.

பல சீன அறிஞர்கள் இப்பிரேரணைகளை வரவேற்றார்கள் என்றாலும், சியாங்-கே-சேக் அவைகளை நிராகரித்துப் போரைத் தொடர விரும்பினார். ஷேக்கின் மறுப்பை ஏற்காத அவருடைய படை வீரர்கள் அவரைக் கடத்திச் சென்றார்கள். சௌ-யென்-லாயின் தலையீட்டின் பேரில் ஷேக் விடுதலை செய்யப்பட்டார். ஆனால், அவர் கம்யூனிஸ்டு

களுடன் போர் செய்யாது ஜப்பானியத் தாக்குதலை முறியடிக்க வேண்டுமென்ற நிபந்தனையை ஏற்றுக்கொள்ளவேண்டிய தாயிற்று. கம்யூனிஸ்டுகளும் அவரை நாட்டுத்தலைவராக ஏற்றுக்கொண்டு நிலக்கிழார்களின் நிலங்களை அபகரிப்பதைத் தாற்காலிகமாக நிறுத்தி வைத்தனர். கம்யூனிஸ்டுகளின் செம்படையும், இதரப்படைகளும் சியாங்-கே-ஷேக்கின் தலைமையை ஏற்க ஒப்புக்கொண்டன.

இவ்வேற்பாடுகளுக்கிணங்க இருதரப்புப் படைகளும் இணைக்கப்பட்டுச் செயலாற்றிய சமயத்தில் சியாங்-கே-ஷேக்கைக் கம்யூனிஸ்டுக்கட்சி ஆரம்பத்தில் குறைகூறவாரம் பித்தது. சோவியத் யூனியனும் கணிசமான அளவிற்கு இராணுவத் தேவைகளை அனுப்பி வந்தது. யேடிங் (Yeh T'ing) தலைமையில் கிழக்குச்சீனாவில் 10,000 பேர் கொண்ட படையொன்றும் நிறுவப்பட்டது.

1637ஆம் ஆண்டு ஜூலை மாதம் 7ஆம் தேதி மார்கோ போலோ பாலமருகில் (Marco Polo Bridge) ஏற்பட்டவொரு நிகழ்ச்சியைக் காரணம் காட்டி ஜப்பான் சீனாவைப் பரவலாகத் தாக்கியது. போதுமான பயிற்சியும் பலமும் தளவாடங்களும் இருந்ததால் ஜப்பானியர் பீகிங்கை அதே மாதத்தில் கைப்பற்றி விட்டனர். 1938ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்திற்குள் சாங்கை, ஊகன், கான்டன் போன்ற இடங்களும் பிடிக்கப்பட்டு விட்டன. தேசிய கொமின்டான் படையினர் சரணடைய மறுத்து தலை நகரத்தைப் பீகிங்கிலிருந்து சுங்கிங்கிற்கு (ChungKing) மாற்றி னர். எனவே, ஜப்பானியர்கள் ஆட்பலம் இல்லாத காரணத் தால் மேலும் மேலும் உள்நாட்டில் முன்னேறிச்செல்லாமல் அதுவரையிலும் பிடித்திருந்த கடற்கரைப்பகுதிகளையும் நகரங்களையும், வடசீனச் சமவெளிப்பகுதியையும், யாங்டிசி (Yangtse) பள்ளத்தாக்கையும் விட்டுவிடாமல் தங்கள் வசமே வைத்துக் கொண்டனர். கிராமப்புறங்களில் அவர்களது ஆதிக்கம் செலுத்தப்படாமல் விடப்பட்டதால் அங்கு கம்யூனிஸ்டுக்கட்சியைச் சேர்ந்த கொரில்லாக்கள் தாராள மாகத் தங்களுடைய நடவடிக்கைகளைத் தொடர்ந்து நடத்தி னர். சீனக் கம்யூனிஸ்டுக்கட்சி, ஜப்பானியர்கள் வசத்தி லில்லாத பகுதிகளிலெல்லாம் தங்களுடைய அரசாங்கத்தை அமைத்து ஆட்சி செய்தது.

கம்யூனிஸ்டுகளால் ஏற்படுத்தப்பட்ட அரசாங்கமுறையில் மக்கள் கழகங்கள் (Peoples Councils) முக்கியமான

இடத்தைப் பெற்றன. இக்கழகங்களில் கட்சி உறுப்பினர்கள் கட்சியைச் சேராத முன்னேற்றவாதிகள், இந்த இரண்டையும் சேராது நடுவில் நின்ற அறிஞர் பெருமக்கள் சமமான அளவில் பிரதிநிதித்துவம் தரப்பட்டனர். இவ்வமைப்பில் அதிகாரம், கம்யூனிஸ்டுக்கட்சியிடமே இருந்தது. எனினும், இம்முறையில் குடியானவர்கள் அரசியலில் பங்குபெற முடிந்ததால் அவர்களுடைய ஆதரவு கம்யூனிஸ்டுகளுக்கு தொடர்ந்து கிடைக்க வழி ஏற்பட்டது. குடியானவர்களுக்கு வரிக் குறைப்பும் சலுகையும் கிடைத்தது. ஆனால், ஜப்பானியர்களுக்கு உடந்தையாக இருந்த நிலக்கிழார்களின் நிலங்களெல்லாம் பறிமுதல் செய்யப்பட்டன. கம்யூனிஸ்டுக்கட்சியின் உண்மையான நிலத்திட்டமும் சீனவைக் கம்யூனிஸ்டுகளின் ஆட்சியின் கீழ்க்கொண்டு வருவதையும், கம்யூனிஸ்டுக் கட்சி கைவிடவில்லையென்பது 'புது ஜனநாயகம்' பற்றி மோ-சே-துங் 1940இல் எழுதிய நூலிலிருந்து தெரிகிறது. இந்நூலில் சீனவில் இதற்குமுன் நடைபெற்ற புரட்சி போலல்லாமல் பல கட்சிகளைச் சேர்ந்த அறிஞர்கள், பல கட்சிகள், பல உழைப்பாளி வகுப்பினர்களால் புரட்சிகரமான ஜனநாயக சர்வாதிகாரத்தின் தலைமையில் கூட்டாகப் புரட்சி நடைபெறும் என்று மோ சொல்லியிருக்கிறார்.

ஜப்பானியர்களால் ஏற்பட்ட பிரச்சினையோடு கட்சிக்குள்ளும் கம்யூனிஸ்டுகளிடையே கடுமையான பல பிரச்சினைகள் இருந்தன. எல்லையோரப் பகுதிகளிலிருந்த அரசாங்கங்களின் நடவடிக்கைகளையும், செய்திப் போக்குவரத்துச் சாதனங்களையும் இணைத்துச் செயற்படுத்துவதில் பூகோள அடிப்படையிலான பலதுன்பங்கள் இருந்தன. இரண்டாவதாக, 1937ஆம் ஆண்டில் நாற்பதினயிரமாக இருந்த கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினர்களின் எண்ணிக்கை 1945இல் 1,200,000-மாக உயர்ந்தது. இவ்வளர்ச்சியினல் கொள்கைப்பிடிப்புடைய உறுப்பினர்களின் எண்ணிக்கை குறையக்கூடுமென்ற பயமும் ஏற்பட்டது. எடுக்கப்படும் நடவடிக்கைகள் ஒருமுகமாக நிறைவேற்றப்படமுடியாத நிலை ஏற்படக்கூடுமென்றும் கருதப்பட்டது. எனவே, கட்சியினுள் கட்டுப்பாட்டையும், கொள்கையையும் உறுதிப்படுத்துவதற்கும், எல்லையோரப் பகுதிகளிலுள்ள கட்சி சார்புடைய அரசாங்கங்கள் கட்சி உறுப்பினர்களால் செய்யப்பட்ட முடிவுகளுக்கிணங்க ஒருமுகமான நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் செங்-பெங் (Cheng-Feng) என்ற சீர்திருத்த இயக்கமொன்றை 1942இல் கம்யூனிஸ்டுகட்சி ஏற்படுத்தியது. இவ்வியக்கம் மோ-சே-துங்,

மார்க்ஸ், ஏஞ்சல், லெனின், ஸ்டாலின் ஆகியோரது நூல்களை யும், கருத்துகளையும் படித்தறியும் பல சிறுசிறு குழுக்களைக் கொண்டதாகும். இக்குழுக்களைச் சேர்ந்தவர்கள் காரசாரமான விவாதங்களில் ஈடுபட்டதோடு தங்களைத் தாங்களே குறையும் சொல்லிக்கொண்டார்கள். கட்சியைச் சேர்ந்த சிலர் விலக்கப் பட்டார்கள். மற்றவர்கள் தங்களைத் திருத்திக்கொள்ளுமாறு செய்யப்பட்டார்கள்.

செங்-பெங் இயக்கம் மோ-சே-துங்கின் கொள்கைகளை எதிரொலித்தது. கட்சிக்குள் அவருடைய அதிகாரத்தைப் பரப்பி, அவருடைய நிலைமையைப் பலப்படுத்தியது. இவ்வியக்கம் கட்சிக்குள் கண்மூடித்தனமாகக் கொள்கைகளைப் பின்பற்றுவதையும், ரஷ்யாவின் முறைகளை அடிமைகளைப் போல அவ்வாறே கடைபிடிப்பதையும் எதிர்த்தது. இத்தகைய தாக்குதலுக்கு ஆளானவர்களில் குறிப்பிடத் தகுந்தவர், வாங் மிங் (Wang Ming) என்பவர். மார்க்சியக் கொள்கைகள் சீனவுக்குத் தகுந்தாற்போல மாற்றியமைக்கப் பட்டன. 1945ஆம் ஆண்டு நடைபெற்ற கட்சியின் ஏழாவது காங்கிரசில் மோ-சே-துங் தட்டிக்கேட்பாரற்றத் தலைவராகத் தோன்றினர்.

**ஜப்பானியர்களும் கொமின்டான் தேசியவாதிகளும்**

ஜப்பானியர்களுக்கும், கொமின்டான் தேசியவாதிகளுக்கு மிடையிலான சண்டை 1938ஆம் ஆண்டு முதல் 1945ஆம் ஆண்டுவரை தேக்கநிலையிலேயே இருந்தது. அவ்வப்போது இவர்களுக்கிடையே நடந்த சிறுசிறு சண்டைகளைத் தவிரப் பெரிய தாக்குதல் எதுவும் நடக்கவில்லை. செல்வச்செழிப்பும், தொழில்வளமும் கொண்ட பகுதிகளினின்றும் பிரிக்கப் பட்டிருந்த தேசியவாதிகள் பிற்போக்குவாதிகளாகவும் லஞ்ச ஊழலில் மிதந்தவர்களாகவும் இருந்ததோடு தன்னம்பிக்கை யிழந்தவர்களாகவுமிருந்தார்கள்.

இருப்பினும், ஜப்பானியர்களால் துன்புறுத்தப்பட்ட மக்கள் வெறுப்படைந்திருந்த நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு கம்யூனிஸ்டுகள் குடியானவர்களைத் தூண்டிவிட்டு விட்டு, ஆங்காங்கு கொரில்லாக்களையும் அனுப்பி ஜப்பானியர் களைத் தாக்கினர். இதனால் கம்யூனிஸ்டுகளின் செல்வாக்கு தேசியவாதிகளின் செல்வாக்குக் குறைந்துவந்தது. கம்யூ னிஸ்டுகள் மக்களின் தேசிய உணர்ச்சியைத் தங்களுக்குச்

சாதகமாக்கிக் கொள்வதைக் கண்ட கொமின்டான் தேசிய வாதிகள் ஆத்திரமடைந்தனர். அதனால் இருசாரர்களுக்குமிடையே அவ்வப்போது மோதல்கள் ஏற்பட்டன. 1939-1940 ஆகிய ஆண்டுகளில் கூட்டணி பெயரளவில்தான் இருந்தது. 1941ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கம்யூனிஸ்டுகள் தேசியவாதிகளைத் தாக்கியபோது தேசியவாதிகளுக்குப் பலத்த சேதம் ஏற்பட்டது. ஜப்பானியர்களும் சீனுவிலிருந்து விலக வேண்டியவர்களானுர்கள்.

இதன் பிறகு தேசியவாதிகளும், கம்யூனிஸ்டுகளும் ஒருவரையொருவர் அழிப்பதில் தீவிரமாக இறங்கினர். சுங்கிங்கிலிருந்த தேசியவாதிகள் அமெரிக்காவிடமிருந்து உதவியை எதிர்பார்த்திருந்தனர், இரண்டாம் உலகப்போரின் போது ஜப்பான் பேர்ல்ஹார்பர் (Peorl Harbour) துறைமுகத்தை 1941ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் தாக்கியபோது அமெரிக்காவும் போரில் குதித்தது. அதனால், தேசியவாதிகளுக்கு அமெரிக்காவிலிருந்து உதவி கிட்டியது. எனினும், தேசியவாதிகள் போர் முடிந்ததும் கம்யூனிஸ்டுகளுடன் பிறகு போரிடுவதற்காகத் தளவாடங்களையும், ஆயுதங்களையும் பதுக்கிக் கொண்டு, ஜப்பானியர்களுடன் தீவிரமாகப் போர் செய்யவில்லை, அதனுல் ஜப்பானியப் போர் வீரர்கள் சீனுவின் பல பகுதிகளில் தொடர்ந்து இருந்து வந்தனர். இரண்டாம் உலகப்போரின் போது தேசியவாதிகள் படை 40 லட்சம் பேர்களைக் கொண்டதாக இருந்தபோதிலும் விலைவாசி யேற்றம், ஊழல் நிர்வாகம் போன்ற காரணங்களால் மக்களிடையே மனத்தளர்ச்சி மேலோங்கி நின்றது.

இச்சூழ்நிலையில், அமெரிக்கர்கள், ஜப்பானில் 1945ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் ஹிரோஷிமா, நாகசாகி நகரங்கள் மீது அணுகுண்டுகளை வீசியதால் ஏற்பட்ட சேதத்தினுல் பயந்த ஜப்பானியர்கள் சரணுகதியடைந்து போரை நிறுத்தினுர்கள். சீனுவில் தேசியவாதிகளும் சரி கம்யூனிஸ்டுகளும் சரி இத்திடீர் முடிவை எதிர்பார்த்திராததால் ஆச்சரியமடைந்தனர். தேசிய வாதிகள், அமெரிக்கப்படை, சீனுவில் வந்திறங்கி ஜப்பானியர்களுக்கெதிராகப் போர் செய்யும் என்றும் அந்தப் படையின் ஆதரவில் கம்யூனிஸ்டுகளை ஒடுக்கி விடலாமென்றும் நினைத்திருந்தனர். இத்திடீர் முடிவின் காரணமாக தேசியவாதிகளும், கம்யூனிஸ்டுகளும் தங்களால் முடிந்தவரை ஆயுதங்களையும் இடங்களையும் ஜப்பானியர்களிடமிருந்து பெறுவதற்குப் பரபரப்பாகப் போட்டியிட்டனர்.

சீனப்பகுதிக்கு நேசப்படைகளின் தளபதியாக இருந்த சியாங்-கே-ஷேக், அமெரிக்க விமானப்படையைத் தன்னுடையத் துருப்புகளை சீனுவின் வடபகுதியிலிருந்த நகரங்களுக்குக் கொண்டுசேர்க்குமாறு கேட்டுக்கொண்டார். கிட்டதட்ட ஐந்து லட்சம் போர் வீரர்கள் ஊகன், பீகிங், டியன்ஸ்டின் (Tientsin) போன்ற நகரங்களுக்கு விமானங்களில் கொண்டு சேர்க்கப்பட்டனர். இதனுல் தேசியவாதிகள் நகரங்களையும், கம்யூனிஸ்டுகள் கிராமப்புறங்களையும் தங்கள் வசம் பெற்றிருந்தனர். இரண்டாம் உலகப்போரின்போது ரஷ்யா மஞ்சூரியாவைப் பிடித்துக்கொண்டிருந்தது. மஞ்சூரியா ரஷ்யாவுக்குத் தரப்படுவதற்கு சர்ச்சில், ரூஸ்வெல்ட், ஸ்டாலின் ஆகியோரிடையே 1945ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் யால்டாவில் (Yalta) இரகசிய ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்டிருந்தபோதும், ரஷ்யா அப்பகுதியைச் சீனுவிற்குத் தருவதற்குத் தயாராக இருந்தது. ஆனுல், சியாங்-கே-ஷேக் தன்னுடைய போர் வீரர்கள் அங்கு போய்ச் சேர்வதற்கு அவகாசம் கிடைக்கவேண்டுமென்பதற்காக ரஷ்யர்களைத் தாமதித்து விலகுமாறு கேட்டுக்கொண்டிருந்தார். எனவே, ரஷ்யர்கள் தாங்கள் விரும்பியதற்கும் அதிகமான காலத்திற்கு அங்கு தங்கினுர்கள். கடைசியாக ரஷ்யர்கள் அப்பிரதேசத்தை விட்டுச்சென்றபோது, ஜப்பானியர்களால் கைவிடப்பட்ட ஆயுதங்களில் பெரும்பான்மையானவை கம்யூனிஸ்டுகளிடம் சிக்கியது. தேசியவாதிகள் நகரங்களில்தான் அதிகமாக இருந்தார்கள். மஞ்சூரியாவின் தொழில்களெல்லாம் பிரித்து ரஷ்யாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. ரஷ்யர்கள் மஞ்சூரியாவை விட்டுச்சென்றபிறகு இருந்த நிலைமை தேசியவாதிகளுக்குச் சாதகமாக இல்லை. நகரப்பகுதிகளிலிருந்த தேசியவாதிகளுக்குத் தேவைப்படும் பொருள்களெல்லாம் தரைமார்க்கமாக வந்து சேராதபடி கிராமப்புறங்களிலிருந்த கம்யூனிஸ்டுகள் தடுத்துவிட்டதோடு வடதென்பகுதிகளுக்கிடையே இருந்த ரயில் தொடர்களையும் துண்டித்து விட்டனர். ஆனுல், மத்திய, கிழக்கு சீனப்பகுதிகளில் தேசியவாதிகளிடமிருந்த பகுதிகள் அதிகமாகவும், கம்யூனிஸ்டுகளிடமிருந்த பகுதிகள் மிகக்குறைவாகவும் இருந்தன. இவ்விடங்களில், கம்யூனிஸ்டுகளைத் தேசியவாதிகள் சூழ்ந்திருந்தனர்.

**உள்நாட்டுப்போர்**

கொமின்டான் தேசியவாதிகளுக்கும் கம்யூனிஸ்டுகளுக்குமிடையே சமாதானப்பேச்சுகள் 1943-லேயே ஆரம்

பித்தன. அமெரிக்கநாட்டுத் தூதுவர் ஹர்லி (Hurley) 1944ஆம் ஆண்டில் யேனுனில் (Yenan) மோவுடன் பேச்சு வார்த்தை நடத்தினர். ஆகஸ்டு, 1945இல் மோ ஹர்லியுடன் சுங்கிங் சென்று சியாங்-கே-ஷேக்குடன் கலந்தாலோசித்த பிறகும் கூட்டரசாங்கம் கம்யூனிஸ்டுகளின் தளங்கள், படைகளின் தலைமை போன்ற முக்கியமானப் பிரச்சினைகளில் கருத்தொற்றுமை ஏற்படவில்லை. மறுபடியும் 1945ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் அமெரிக்கக் குடியரசு தலைவர் ட்ருமன் அவர்களால் அனுப்பப்பட்ட தளபதி ஜார்ஜ் மார்ஷல் இருதரப்பினருக்குமிடையே சமாதானம் செய்ய முயற்சித்தார். இதன் பலனுக ஜனவரி 1946இல் போர் ஓய்வு ஒப்பந்தம் ஏற்பட்டதெனினும் அது அதிக நாள் நீடிக்கவில்லை. ஏனெனில் இரு கட்சிகளும் இருபதாண்டுக்கால உள்நாட்டுப் போரினுல் ஏற்பட்ட மனக்கசப்பின் காரணமாக ஒன்றுக்கொன்று முரணுன நோக்கங்களைப் பின்பற்றியதும், ஒவ்வொன்றும் ஒன்றையொன்று தோற்கடிப்பதற்கான திறமை தனக்கு இருப்பதாக நம்பியதுமாகும். எனவே, உள்நாட்டுப்போர் மத்திய சீனுவில் 1946ஆம் ஆண்டு நடுவில் மீண்டும் பெருமளவில் சண்டைகளாக ஆரம்பித்தது. மார்ஷல் 1947ஆம் ஆண்டுத் துவக்கத்தில் இனி சமாதானம் சாத்தியப்படாதென்றுணர்ந்து நாடு திரும்பினுர்.

கடைசியாக 1947ஆம் ஆண்டு ஜூலை மாதம் மற்றுமொரு சமாதான முயற்சியை அமெரிக்கா மேற்கொண்டது. இத்தடவை தளபதி ஆல்பர்ட் வெடிமெயர் (General Albert C. Wedemeyer) ட்ருமனுல் அனுப்பப்பட்டார். பணவீக்கம், ஊழல் போன்றவற்றை விரைவாக அகற்றச் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டால்தான் தேசியவாதிகளின் ஆட்சி நிலைபெறும் என்று தளபதி ஆல்பர்ட் கருதினுர். ஆனுல், சியாங்-கே-ஷேக்கினுடைய படைகள் கம்யூனிஸ்டுகள் ஆதிக்கத்திலிருந்த இடங்களையும், 1947ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தின்போது அவர்களின் தலைநகரான யேனுனையும் திரும்பப் பிடித்தன. இவ்வெற்றியுடன் திருப்தியடையாத சியாங் அமெரிக்க ஆலோசனையையும் பொருட்படுத்தாமல் சாண்டுங்கிலிருந்தும், மஞ்சூரியாவிலிருந்தும் ஒரே சமயத்தில் கம்யூனிஸ்டுகளைத் துரத்திப் பிடிக்க விரும்பிப் படையெடுத்தார். ஆனுல், அவருடைய முயற்சி சாண்டுங்கில் தோல்வியடைந்ததோடு, மஞ்சூரியாவில் நகரங்களுக்கிடையே சியாங் துண்டிக்கப்பட்டார். அவருடைய படைகளும் லின்பியோ

வைத் (Linpiao) தலைவராகக்கொண்ட கம்யூனிஸ்டுப் படைகளால் தாக்கப்பட்டு நிர்மூலமாக்கப்பட்டன.

தேசிய கொமின்டாணைப் பொறுத்தவரை 1947ஆம் ஆண்டு அதன் அழிவிற்கு ஒரு ஆரம்பமாகும். மஞ்சூரியாவிலிருந்த தேசியவாதிகளின் படைகள், கம்யூனிஸ்டுகளால் முற்றுகையிடப்பட்டு நெருக்கப்பட்டன. இத்தகைய நிலைமைகளைச் சமாளிப்பதற்காக, சியாங் மஞ்சூரிய கடற்கரைப் பகுதியில் பெரும்படையொன்றை 1948ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தின்போது கொண்டுவந்து முக்டென் (Mukden) முற்றுகையைத் தகர்க்க முயன்றார். எனினும், மக்கள் இப்படைகளைச் சூழ்ந்துகொண்டு தாக்கியதால் வழியறியாது அப்படைகள் சரணாகதியடைந்தன. இச்சமயத்தில் செம்படை, மக்கள் விடுதலைப்படையெனப் (People's Liberation Army) பெயர் சூட்டப்பட்டது.

இதற்குப்பிறகு 1949ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சியாங்-கே-ஷேக் நாட்டுத் தலைமைப் பதவியிலிருந்து விலகி, லி-சுங்-சென் (Li-Tsung-jen) என்பவரைத் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டு கம்யூனிஸ்டுகளுடன் சமாதானம் செய்து நாட்டைத் துண்டுபோட விரும்பினார். இந்தப் பிரேரணையைக் கம்யூனிஸ்டுகள் தயக்கமில்லாமல் நிராகரித்து விரைவாக யாங்டிசி, நான்கிங், சாங்கை ஆகிய இடங்களை ஏப்ரல் மாதத்திலிருந்து மே மாதத்திற்குள் பிடித்து விட்டனர். முதலில் கொமின்டான் தேசிய அரசாங்கம் காண்டனுக்குப் பின்வாங்கிச் சென்று, இறுதியாக 1949ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் தைவானில் (Taiwan) அடைக்கலம் புகுந்தது. இதற்கிடையே மோ-சே-துங், சீனமக்கள் குடியரசை (People's Republic of China) பீகிங்கில் 1949ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முதல் தேதியன்று பிரகடனப்படுத்தினார். இவ்வாறு சீனாவின் பிரதானப் பகுதியில் சீனமக்கள் குடியரசு உதயமாயிற்று. தேசிய சீனக் குடியரசு தைவானிலிருந்து செயற்பட்டு வருகிறது.

# 3. சீனமக்கள் குடியரசின் அரசின் பண்பு

## (Character of State in People's Republic of China)

1954ஆம் ஆண்டு 20ஆம் நாள் தேசிய மக்கள் காங்கிரசால் (National People's Congress) நிறைவேற்றப்பட்ட குடியரசு அரசியலமைப்புச் சட்டத்திற்கேற்பச் (Constitution) சீன அரசியல்முறை அமைக்கப்பட்டிருக்கிறது. அரசியல் அமைப்புச் சட்டம் எளிமையானது; அளவில் சிறியது, நேரிடையானது, தேவைக்கேற்றது; 106 விதிகளையுடையது. அது எளிதில் புரிந்துகொள்ளக்கூடிய பேச்சு வழக்கிலுள்ள மொழியில் எழுதப்பட்டிருக்கிறது. இந்த அடிப்படையில் அது இதரநாடுகள் பின்பற்றப்படும் மரபுக்கு மாறானது. எனினும் பாமரமக்களாலும் சுலபமாக அறிந்துகொள்ளக் கூடியது. அது 1949ஆம் ஆண்டு முதல் 1954ஆம் ஆண்டு வரையிலான காலத்தில் நிகழ்முறையில் இப்போது அதில் சேர்க்கப்பட்டிருக்கும் கொள்கைகளைப் பின்பற்றியதால் ஏற்பட்ட அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டு வரையப்பட்டது. நடைமுறையில் அவை சோதனைக்குட்படுத்தப்பட்டு அச்சோதனையில் வெற்றி கண்டபடியால் எதிர்காலத்திற்கும் அவை ஏற்றதாக இருக்கும் எனப்படுகிறது.

சீன அரசியலமைப்புச்சட்டம் எழுதப்பட்ட தன்மையே தனியானதாகும். சுமார் 33 வாரங்களில் மிகவிரைவாக அது வரையப்பட்டுவிட்டது. 1949இல் சீனமக்கள் அரசியல் ஆலோசனை மாநாடு (Chinese People's Political Consultative Conference) தற்காலிக அரசியலமைப்புச்சட்டத்தை வரையும்

வேலை 1953ஆம் ஆண்டு ஜனவரித்திங்கள் 13ஆம் நாள்தான் மோ-சே-துங் தலைமையில் அரசாங்கக் கழகம் (Central Government Council) அமைக்கப்பட்டபோது தான் தொடங்கியது. 1954ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் சீனப்பொதுவுடைமைக் கட்சியின் மத்தியகுழு சமர்ப்பித்த அரசியலமைப்புச் சட்டத்தின் முதல் நகலை அரசியலமைப்புச் சட்டவரைக் குழு (Drafting Committee) ஏற்றுக்கொண்டது. அந்த நகல் இதர அரசியல் கட்சிகளாலும், கழகங்களாலும் காரசாரமாக விவாதிக்கப்பட்டது. இவ்விவாதத்தில் ஏறத்தாழ 8,000 பேர்கள் கலந்துகொண்டதாகத் தெரியவருகிறது. இவ் விவாதத்தில் முடிவாக ஏற்பட்ட இரண்டாவது நகல் 1954ஆம் ஆண்டு ஜூன்மாதம் 14ஆம் நாள் பொதுமக்களுக்கு அறிவிக்கப்பட்டது. இந்த இரண்டாவது நகலும் முன் தடவையைவிட்டு மிகஅதிகமான மக்களால் குறிப்பாகக் குடியானவர்கள், தொழிலாளர்கள், கைவினைஞர்கள் போன்ற கிட்டத்தட்ட 150 இலட்சம் மக்களால் தாராளமாக இரண்டு மாதக்காலத்திற்கு விவாதிக்கப்பட்டது. அதன்பிறகு அரசியலமைப்புச் சட்டத்தை வரைவதற்காக அமைக்கப்பட்ட வரை குழு (Drafting Committee) மேற்சொல்லப்பட்ட விவாதத்தின் விளைவாகக் கிடைத்த யோசனைகள்-கருத்துகளை ஆதாரமாகக் கொண்டு மூன்றாவது நகலொன்றை வரைந்தது. இந்த நகலை மத்திய அரசாங்கக் கழகம் சோதித்துத் தெளிந்து, அதை 1954ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 9ஆம் தேதி அதனுடைய 34ஆம் கூட்டத்தில் ஏற்றது. அது 1954ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 20ஆம் தேதி தேசிய மக்கள் காங்கிரசால் இறுதியாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதுவே செஞ்சீனாவின் அரசியலமைப்புச் சட்டமாயிற்று.

1954ஆம் ஆண்டு வரையப்பட்ட இந்த அரசியலமைப்புச் சட்டம் இறுதியானதாக இருக்கவேண்டும் என்று கருதப்படவில்லை. ஏனெனில் சீனா ஒரு வளர்ந்துவரும் நாடு. அதன் நிலையங்களும், நிறுவனங்களும் அப்போது முழுமையாக வளர்ச்சி பெறாமலிருந்தன. சோதனைகள் பலவும் செய்யப்பட்டு எங்கெங்கு அவசியமோ அங்கு விரைவான மாற்றங்களும், சீர்திருத்தங்களும் அந்தச் சோதனைகள் அடிப்படையில் செய்யப்படவேண்டியதாக இருக்கும். சான்றாக முன்பெல்லாம் பீகிங் பல்கலைக் கழகத்தில் வகுப்பு உரைகளின் காலம் முப்பது மணித்துளிகளாக இருந்தன. இப்போது அவை தொண்ணூறு மணித்துளிகளாக இருக்கின்றன. முதல் ஐந்தாண்டு திட்டக் காலத்தில் தொழில் மூலமாக மொத்த உற்பத்தி நூறு

விழுக்காடு ஆகவும் வேளாண்மைப் பொருள்களின் மொத்த உற்பத்தி இருபத்துமூன்று விழுக்காடாகவும், தொழில் வேளாண்மை ஆகியவற்றின் உற்பத்தி கூட்டு 51.5 விழுக் காடாகவும் உயரக்கூடும் என்பது எதிர்பார்க்கப்பட்டது. இத்தகைய பொருளாதார முன்னேற்றம், அது வரையிலும் வளர்ச்சியற்ற பொருளாதார நிலைமையைப் பெற்றிருந்த நாட்டில் மிகப்பெருமளவில்-அதாவது பழைய நிலைமைகளும் கருத்துகளும் அடியோடு களையெடுக்கப்பட்டால்தான் ஏற்பட முடியும் எனப்பட்டது. இத்தகைய மாறுதல்கள் ஏற்படும் சூழ்நிலையில் எதுவும் நெகிழாத அல்லது இறுதியானதாக இயற்றப்படவேண்டும் என்று எதிர்நோக்க முடியவில்லை. ஆனால், எந்தத்துறையில் மாறுதல் ஏற்படவேண்டும் என்பது தீர்மானிக்கப்படவேண்டியிருக்கிறது. இதைத்தான் மாறி வரும் காலத்திற்கு சீன அரசியலமைப்புச் சட்டம் செய்திருக் கிறது.

சீன மக்களினுடைய-சீன அரசாங்கத்தினுடைய முடி வான நோக்கம் ஒரு முழுமையான சோஷலிசப் பொருளா தாரத்தை ஏற்படுத்துவதுதான். ஆனால், இந்நோக்கம் நொடிப்பொழுதில் ஈடேறக்கூடியது அல்ல. அதே சமயத்தில் நெடுங்காலத்திற்கு ஒத்தி வைக்கப்படக்கூடியதுமல்ல. சீனு இந்த மாற்றத்திற்கு இருபதாண்டுக் காலவரையறையை ஏற் படுத்திக்கொண்டது. எனவே, இந்த அரசியலமைப்பு நான்கு ஐந்தாண்டுகாலத் திட்டக் காலத்திற்கு மக்களுக்குப் பணிபுரிய வேண்டுமென்ற நோக்கத்தோடு ஏற்கப்பட்டதாகும். அதா வது 1972ஆம் ஆண்டு வாக்கிலோ அல்லது அதே ஆண்டிலோ மற்றுமொரு அரசியல் சட்டத்தை சீனு இயற்றவேண்டு மென்று முடிவு செய்யப்பட்டது.

அரசியலமைப்பின் முகவுரை மக்கள் சீனக் குடியரசு ஏற் பட்டது முதல் சோஷலிச சமூகம் அடையப்படும் வரையிலான இடைப்பட்ட காலம் 'மாறி வரும் காலமாகும்' (Period of Transition) என்று சொல்கிறது. இந்தக் காலத்தில், வேளாண்மை, கைத்தொழில்கள், தொழில், வணிகம் ஆகிய துறைகளில் மாற்றத்தை ஏற்படுத்துவதன் மூலமாக சுரண்டலை படிப்படியாக அரசு ஒழிக்கும்.

இது அரசியலமைப்புச் சட்டத்தின் மற்றொரு அம்சத் திற்கு நம்மை அழைத்துச்செல்கிறது. அது தனிப்பட்டோர், குழுக்கள் அதிகாரங்கள், கடமைகள், உரிமைகள் பற்றி

மட்டும் விளக்குவதோடமையாது, மாறிவருங்காலத்தில் அப்போது நடைமுறையிலிருந்து வந்த பொருளாதாரம் தொடர்ந்து பின்பற்றப்படுமென்றும் அனால், அதே சமயத்தில் சோஷலிசப் பொருளாதாரத்தை ஏற்படுத்துவதற்குப் பின் பற்றவேண்டிய நிகழ்ச்சி நிரலையும் தெளிவாக ஏற்படுத்து கிறது. இந்த அரசியலமைப்புச் சட்டத்தின் பரந்த அடிப் படை பொதுவான, ஒன்றுக்கொன்று இணக்கமான கொள்கைகளைப் பின்பற்ற மக்களுக்கும் நிறைய இடம் அளிக் கிறது. அதனால் அவர்கள் ஆதார நோக்கங்களில் மட்டுமில்லா மல் அவற்றை அடைவதற்கான செயல் திட்டத்தை நிதான மான ஆனால் உறுதியான முறையில் பின்பற்றுவதிலும் ஒன்று பட்டவர்களாக இருக்கிறார்கள்.

சீன அரசியலமைப்புச் சட்டத்தின் பாங்கு பரந்த அடிப் படையில் சோவியத் யூனியன் அல்லது இதர மக்கள் குடியரசு களின் (People's Democracies) அரசியலமைப்பை ஒத்திருக்கிற தெனலாம். சீனாவின் தேசிய மக்கள் காங்கிரஸ் சோவியத் யூனியனிலுள்ள சுப்ரீம் சோவியத்தைப் (Supreme Soviet) போன்றுள்ளது. அவ்வாறே சீனாவிலுள்ள நிலைக்குழு(Standing Committee) சோவியத் யூனியனின் பிரிசிடியத்தைப் போல இருக்கிறது. ஆனால், சீனமக்கள் குடியரசின் தலைவருக்குச் (Chairman) சமமான நிறுவனம் சோவியத் யூனியனில் கிடை யாது. அதேபோல சீனமக்கள் அரசியல் ஆலோசனை மாநாடு என்ற நிறுவனமும் புதியதாகும்.

# 4. அரசின் முக்கியத் தன்மை

## (Character of State)

சீனமக்கள் குடியரசின் அரசியலமைப்புச் சட்டத்தின் முதலாம் விதி கூறுவதாவது: உழைக்கும் மக்களால் தலைமையேற்று நடத்தப்படும் குடியாட்சி சீனமக்கள் குடியரசு. அது குடியானவர்கள் தொழிலாளர்கள் கூட்டை ஆதாரமாகக் கொண்டது.

உழைப்பாளர் வர்க்கம் சீனாவிற்கு தலைமையேற்கிறது. இந்தத் தலைமைதான் 'நிலபிரபுத்துவ ஆதிக்கம், முதலாளித்துவ அதிகார வர்க்க ஆதிக்கம், ஏகாதிபத்தியம்' ஆகியவற்றின் பிடியிலிருந்து சீனாவை மீட்டுத்தந்தது எனக் கருதுகிறார்கள். இன்று அத்தலைமை நாட்டின் வளர்ச்சியிலும் அமைப்பிலும் வியக்கத்தகுந்த அளவிற்கு அக்கறையோடு செயலாற்றிவருகிறது. எனவே, உழைப்பாளர் வர்க்கத் தலைமை சமூகக் கூட்டமைப்பையும், சமூகமாறுதலையும் தீவிரமாகவும் வெற்றிகரமாகவும் செய்துமுடிக்கும்வகையில் வலுவும் பலமும் தரப்படவேண்டும்.

உழைப்பாளிகள் குடியானவர்களுடன் கூட்டுச்சேர்ந்திருக்கிறார்கள். அங்ஙனம் அவர்கள் புரட்சியின்போது சேர்ந்திருந்தார்கள். இப்போதும் அவர்கள் நாட்டின் சீரமைப்பிற்காகச் சேர்ந்திருக்கிறார்கள். சீனாவின் மக்கள்தொகையில் எண்பது விழுக்காட்டினர் குடியானவர்கள். உழைப்பாளி–குடியானவர் கூட்டென்பது மிகப்பெரும்பான்மைக் குடிமக்களின் ஒற்றுமையென்றாகிறது. அது குடியானவர்களுக்கு நன்மை தருவதாகும். எவ்வாறெனில், வாய்க்கும் கைக்கும் என்ற நிலையிலுள்ள வருமானத்தோடு போராடிக்கொண்டிருக்கின்ற குடியானவர்கள், தொழிலாளர் ஒத்துழைப்பினால் கூட்டுப்

பண்ணை அல்லது சோஷலிசப் பண்ணைகள் அமைத்துக் கொள்வதன் வாயிலாக அவர்களுடைய வருவாயை பெருக்கிக் கொள்ளமுடியும். எனவே, உழைக்கும் வர்க்கத்தின் தலைமைக்குத் தொழிலாளர்-குடியானவர் கூட்டு ஆதாரமாக அமைவதாகும்.

உழைக்கும் வர்க்கத்தினர் கைத்தொழிலாளர்களுடனும் குடியானவர் அல்லாத ஆனால், தங்கள் உழைப்பையே நம்பியிருக்கும் இதரத் தொழிலாளர்களுடனும் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள்.

அறிஞர்கள் தனியான ஒரு சமூக வகுப்பினராகச் சீனாவில் கருதப்படுவதில்லை. ஏனெனில் அவர்கள் சமூகத்தின் பல பிரிவுகளில் சிதைந்து காணப்படுகிறார்கள். அதனால் அவர்கள் ஏதேனுமொரு புது சமூகப்பிரிவோடு சேர்ந்துகொள்ள வேண்டும். அவர்கள் உழைக்கும் வர்க்கத்தினருடன் சேர்ந்தால் அதைச் சேர்ந்த அறிஞர்களாகவும், நிலப்பிரபுக்களுடனும், அதிகாரவர்க்க முதலாளிகளுடனும் சேர்ந்தால் பின்னேக்க அறிஞர்களாகவும் கருதப்படுகிறார்கள். உழைப்பாளிகளுடன் சேர்ந்தால் அவ்வர்க்கத்தைச் சேர்ந்த அறிஞர்களாகப் போற்றப்படுகிறார்கள். உழைக்கும் வர்க்கம் அறிஞர்களைத் தன்பக்கம் ஈர்த்துவருவதுடன் அவர்கள் இப்போதுள்ள ஆர்வத்திற்கும், நிலைமைக்கும் தகுந்தவாறு சமதரும சீரமைப்பை ஏற்படுத்துவதற்கான முறையில் கொள்கைகளையும், கருத்துகளையும் மாற்றிக்கொள்வதற்கு முயற்சி செய்துவருகிறது. சீனத்தலைமை, அறிஞர்வர்க்கத்தை ஒதுக்கிவைக்கவோ, உதாசீனம் செய்யவோ அல்லது அவ்வர்க்கத்திற்கெதிரான பகைமையைத்தூண்டவோ விரும்பவில்லையென்பது தெளிவாகத் தெரிகிறது. உண்மையில், மோ-சே-துங் ஒருசமயம் குறிப்பிட்டதாவது: 'மக்கட் பணியில் ஈடுபட்டிருக்கும் எல்லா அறிஞர்களும், அரசு, சமூகம் ஆகியவற்றின் செல்வங்களாகக் கருதப்பட்டு, மரியாதை தரப்படவேண்டும்.' உழைக்கும்வர்க்கத்தலைமை, அவர்களை மரியாதையுடன்நடத்துகிறது. அவர்களைக் கட்டாயப்படுத்தாமல் அவர்களுடைய பொதுநோக்கை விரிவுபடுத்திக் கொள்வதற்கு உதவுமாறு அவர்களிடம் காணப்படும் 'குறைகளைப்' பெரிது படுத்தாமல் பொறுமையுடன் நடந்துகொள்கிறது.

மக்களிடையே காணப்படும் வேறு வகுப்பினர்களும், தேசிய சிறுபான்மைப் பிரிவினரும் உழைக்கும் வர்க்கத்

தினரால் நண்பர்களாக்கிக் கொள்ளப்படுகிறார்கள் என்பதை யும் இங்கு நாம் குறிப்பிடவேண்டும்.

புரட்சியின்போது செய்துகொள்ளப்பட்ட கூட்டு காரணமாக, சிறையில் ஒழிக்கப்பட்டுவிட்ட அதிகார வர்க்கத் தினர்போக, இன்றும் தேசிய அதிகார வர்க்கத்தினரும், முதலாளிகளும் இருக்கின்றார்கள். அந்தக் கூட்டு இன்னும் தொடர்ந்திருந்து வருகிறது. தேசிய முதலாளிகள் சமதரும அமைப்பிற்கும் மாறுதலுக்கும் தீவிரமான தங்களுடைய ஆதரவைத் தந்து வருகிறார்கள். அவர்களுடைய அரசியல் நோக்கும், சான்பான் (San-fan) ஊ பான் (Wu-fan) இயக்கங் கள் காரணமாக மாறுதலடைந்திருக்கிறது. சான்பான் இயக்கம் இலஞ்ச ஊழல், வீணடித்தல், அதிகார வர்க்கத்துவம் ஆகியவற்றை எதிர்ப்பதற்கும், ஒழிப்பதற்கும் தோன்றியதாகும். ஊபான் இயக்கம் அரசாங்க ஊழியர் களிடையேயுள்ள (அ) இலஞ்ச ஊழலையும் (ஆ) வரி கொடுப்பதினின்றும் தப்பிக்க முயல்வதையும் (இ) அர சாங்கப்பொருள்களைத் திருடுவதையும் (ஈ) அரசாங்க காண்ட்ராக்டுகளில் ஏமாற்றுவதையும், (உ) தனிப்பட் டோர் ஆதாயத்திற்காக அரசாங்கப் பொருளாதாரத் தகவல் களைப் பயன்படுத்துவதையும் எதிர்த்து நடைபெறுவதாகும். அரசு, முதலாளித்துவத் தொழிலையும், வணிகத்தையும் படிப் படியாக பொதுவுடைமைத்தொழிலாகவும், வணிகமாகவும் மாற்றியமைப்பதை அதன் கொள்கையாகக் கொண்டிருக் கிறது. இதற்கிடையில், அவைகள் நாட்டுப் பொருளாதாரச் சீரமைப்பில் பெரும் பணியாற்றி வருகின்றனர்.

இவ்வாறு, சீனமக்கள் குடியரசு எல்லா வகுப்பினருக்கும் பொதுவுடமை அரசொன்றை நிறுவும் நோக்கத்திற்காக, உழைக்கும் வர்க்கத்தலைமையில் ஒன்றுபட்ட நாடாகத் திகழ் கிறது. எனினும், ஆட்சி மக்களால் நடத்தப்படும் ஆட்சி யாகவே இருக்கிறது. சீனநாடு மக்கள் குடியரசு நாடென்று அழைக்கப்படுகிறது. மக்கள் குடியரசு, முதலாளித்துவ நாடுகளிலுள்ள குடியரசினின்றும் மாறுபட்டதென்று எடுத்துக் காட்டப்படுகிறது. ஏனெனில் இரண்டாவதாகச் சொல்லப்பட்டதில் எண்ணிக்கையில் குறைவான சிலர் ஆட்சி செய்கிறார்கள். ஆனால், முதலாவதாகச் சொல்லப்பட்டதிலோ, மிகப் பெரும்பான்மையினரான மக்கள் தலைவர்களாக இருக் கிறார்கள்.

அரசியலமைப்புச் சட்டப்படி சகல அதிகாரங்களும் மக்களுக்குச் சொந்தம். அவர்கள் அவ்வதிகாரங்களை தேசிய மக்கள் காங்கிரஸ் (National People's Congress) மூலமாகவும், வட்டார மக்கள் காங்கிரசுகள் (Local People's Congress) மூலமாகவும் செலுத்துகிறார்கள். எனவே, சீன அரசியல் முறை மக்கள் காங்கிரசுகள் முறையாகும். இந்தக் காங்கிரசுகளும், இதர அரசு நிறுவனங்களும் குடியாட்சிக்குவிப்புக் (Democratic Centralism) கொள்கையைப் பின்பற்றுகின்றன. அரசு நிறுவனங்கள் அனைத்தும் மக்களைச் சார்ந்திருக்க வேண்டும். அவர்களோடு அடிக்கடி தொடர்பு கொள்ள வேண்டும். அவர்களுடையக் கருத்துகளையும், மேற்பார்வையையும் ஏற்று அதன்படி நடக்கவேண்டும்.

# 5. தேசிய மக்கள் காங்கிரஸ்

## (The National People's Congress)

அரசியலமைப்புச் சட்டத்தின் இரண்டாம் பகுதி அரசாங்க அமைப்புமுறையைப்பற்றி விவரிக்கிறது. அது மொத்தமுள்ள 106 விதிகளில் 64 விதிகளையுடையதாக இருக்கிறது. அதன்கண் அரசாங்கத்தின் பல நிறுவனங்களின் அமைப்பு, ஆட்சி, அதிகாரம், அவைகளின் பணிகள், உறவுகள் ஆகியவற்றின் விளக்கத்தைக் காணலாம். இப்பகுதியில் சொல்லப்பட்டுள்ள அம்சங்களிலிருந்து மக்கள் காங்கிரசுகள் ஆதரவில் அரசாங்கமுறை அமையவேண்டுமென்பதில் சீனு அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கிறதெனத் தெளிவாகத் தெரிகிறது.

அரசின் அதிகாரம், தேசிய மக்கள் காங்கிரசாலும் (National People's Congress) வட்டார மக்கள் காங்கிரசுகளாலும் (Local People's Congresses) செலுத்தப்படுகின்றது. முதலாவதாகச் சொல்லப்பட்டது நாடு முழுவதற்கும் பொதுவான மத்திய உயர்மட்ட சட்டமன்றமாகும். இரண்டாவதான வட்டார மக்கள் காங்கிரசுகள் சீனுவில் அரசியலடிப்படையில் அமைக்கப்பட்டுள்ள ஒவ்வொரு வட்டாரத்திலும் அமைக்கப்பட்டிருக்கிறது. நாட்டின் அரசாங்கமாக அரசுக் கழகமும் (State Council), வட்டார அரசாங்கமாக வட்டாரக் கழகமும் (Local Council) இருக்கின்றன. இவைகள் சம்பந்தப்பட்ட மக்கள் காங்கிரசுகளால் கண்காணிக்கப்படுகின்றன. இந்த காங்கிரசுகள் எவ்வாறு அரசாங்கத்தைக் கண்காணிக்கின்றன என்பதைப் பிறிதோரிடத்தில் காணலாம்.

**சட்டமன்றம் தேசிய மக்கள் காங்கிரஸ்**

சீனுவில் தேசிய மக்கள் காங்கிரஸ்தான் மேல் மட்டத்தில் உச்ச அதிகாரமுடைய நாடு முழுவதிற்குமான பாராளுமன்ற

மாகும். இதன் மூலமாகத்தான் மக்கள் அதிகாரம் செலுத்து கின்றனர். இதன் உறுப்பினர்கள், மாநிலங்கள், தன்னுட்சிப் பகுதிகள் (Autonomous Regions) மத்திய அரசாங்கத்தின் நேரிடைக் கட்டுப்பாட்டிலிருக்கும் நகராட்சிகள், போர்ப் படையினர், வெளிநாடுகளில் வாழும் சீனமக்களால் தேர்ந் தெடுக்கப்படுகிறார்கள் (அ. விதி. 23). 1953ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் முதல் தேதியன்று பிரகடனப்படுத்தப் பட்ட தேர்தல் சட்டப்படி, மாநிலங்கள் 8,00,000 பேர்களுக்கு ஒருவர் என்ற கணக்கில் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக் கின்றன. ஆனால், ஒவ்வொரு மாநிலமும் குறைந்தது மூன்று உறுப்பினர்களை அனுப்ப வேண்டும். மத்திய அரசாங்கத்தின் நேரிடைக் கட்டுப்பாட்டிலிருக்கும் நகராட்சிகள் ஒவ்வொரு 1,00,000 பேர்களுக்கும் ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக் கின்றன. தேசிய சிறுபான்மைப் பிரிவினர் 150 பிரதிநிதி களையும், போர்ப்படையினர் 60 பிரதிநிதிகளையும் வெளிநாடு களில் வாழும் சீனக் குடிமக்கள் 30 பிரதிநிதிகளையும் தேர்ந் தெடுத்து அனுப்ப வேண்டும். தேசிய மக்கள் காங்கிரஸ் நான்காண்டு பதவிக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப் படுகிறது. அது ஆண்டிற்கொருமுறையாவது கூடுகிறது. இக்காங்கிரசுக்கு நடத்தப்பெறும் தேர்தல்கள் எல்லா அம்சங் களிலும் சுதந்திரமானவையல்லவென்பது டாங்கு (Tang) என்பவர் கருத்தாகும். இதரக் கம்யூனிஸ்டு நாடுகளிலுள்ளது போல சீனாவிலும் ஒரேயொரு வேட்பாளர்கள் பட்டியல்தான் இருக்கிறது. தேசிய மக்கள் காங்கிரசில் உறுப்பினர்களா வதற்கு வேட்பாளர்கள் மத்திய அரசாங்கத்தலைவர்களால் நிய மிக்கப்படுகிறார்கள். இந்நியமனம் ஆலோசனைக் கலப்புமுறை மூலமாக (Consultative System) நிறைவேற்றப்படுகிறது. தேர்தல் சட்டத்தின் 47ஆம் விதிப்படி கம்யூனிஸ்டுக் கட்சி யினால் வேட்பாளர்கள் தனியாகவோ அல்லது இதர ஜனநாயகக் கட்சிகள், பல்வேறு மக்கள் நிறுவனங்கள், வாக்காளர்கள் எல்லாம் சேர்ந்து கூட்டாகவும் நியமிக்கப் படலாம். ஆனால், நடைமுறையில் வேட்பாளர்கள் நியமனம் சம்பந்தப்பட்ட நிறுவனங்கள், மக்களுடன் ஆலோசனை கலந்த பிறகு இக்கட்சிகளின் அல்லது நிறுவனங்களின் தலைவர் களால் செய்யப்படுகிறது. இதனால் சோவியத் யூனியனைப் போன்று சீனாவிலும் இடங்கள் பலவாக இருப்பினும் ஒன்றுக்கு ஒருவர் என்றுதான் வேட்பாளர்கள் பொறுக்கி யெடுக்கப்பட்டு நிறுத்தப்படுகிறார்கள். வோட்டெடுப்பு ரகசிய வாக்குப் பதிவு மூலம் நடைபெறுகிறது.

தேசிய மக்கள் காங்கிரஸ் ஒரு மன்ற முறையைச் சார்ந்த தாகும். இதிலுள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை உலகத்தின் வேறு எந்தப் பாராளுமன்றத்திலும் இல்லாத அளவிற்கு அதிகமானதாகும். அத்தகைய பெரிய தொரு சட்டமன்றத்தில் ஆற்றல் மிகுந்த விவாதம் நடைபெற முடியாது. இந்த மன்றம் சோவியத் யூனியன் பாராளுமன்ற மான சுப்ரீம் சோவியத்தைப் போன்றது என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. ஆனால், சுப்ரீம் சோவியத் இருமன்ற முறையைச்சார்ந்ததாகும். காங்கிரசுக்கு நடைபெறும் தேர் தல்கள் மறைமுகமானவை. பல்வேறு பகுதிகளுக்கும் வகுப்புக்களுக்கும் தரப்பட்டிருக்கும் பிரதிநிதித்துவம் சமமாக இல்லாதது வித்தியாசமானது. இவ்வகைகளில் இம்மன்றத் தின் அமைப்பு இதர நாடுகளிலுள்ள மன்றங்களின் அமைப்பைவிடப் பின்தங்கியது. இதன் கூட்டம் ஆண்டுக்கு ஒரு முறையாவது நடைபெறவேண்டும். தொடர்நிலைக்குழு வினால் (Standing Committee) கூட்டப்படுகிறது. நிலைக்குழுவோ அல்லது ஐந்தில் ஒரு பங்கு உறுப்பினர்களோ மற்றுமொரு கூட்டம் அவசியம் என்று கருதினால் அவ்வாறு அதைக் கூட்ட லாம் (அ. விதி. 25).

காங்கிரஸ் கூடும்பொழுது அதன் கூட்டங்களை நடத்து வதற்குப் பிரீசிடியமொன்றைத் தேர்ந்தெடுக்கிறது (அ. விதி. 26).

அரசியலமைப்புச் சட்டம் குழுக்கள் அமைப்பிற்கு வகை செய்கிறது. சீனாவில் தற்போது, தேசிய இனங்கள், சட்டம், மசோதாக்கள், வரவு-செலவுத்திட்டம் ஆகியவற்றிற்கும் வேறுபல விஷயங்கள் குறித்தும் பல குழுக்கள் இருக்கின்றன. இந்தக் குழுக்களின் உதவியைக்கொண்டு காங்கிரஸ் தன் அலு வல்களைச் செய்து முடிக்கிறது. கூட்டம் நடைபெறும்பொழுது காங்கிரசும், கூட்டம் நடைபெறாத பொழுது அதன் நிலைக்குழு வும் தனிப்பிரச்சினைகளைக் கவனிக்கவும், அவற்றை ஆராயவும் ஆய்வுக்குழுக்களை (Investicating Committees) நியமிக்கலாம். காங்கிரஸ் உறுப்பினர்கள் அரசுக்கழகம், அமைச்சர்கள் அல்லது கழகங்களுக்கு அனுப்பும் வினாக்களுக்கு விடைகள் தரப்படவேண்டியது அரசியலமைப்புச் சட்டத்தின் 36ஆம் விதிப்படி கடமையாகும். காங்கிரஸ் அதன் கூட்டங்களை நடத்துகின்றபொழுது அதன் அனுமதி இல்லாமல் உறுப் பினர்கள் கைது செய்யப்படவோ அல்லது அவர்கள்மேல் நீதிமன்றங்களில் வழக்குகள் தொடரவோ முடியாது. காங்கிரஸ் கூட்டம் நடைபெறாதிருக்கும் பொழுது அத்தகைய

நடவடிக்கைகளுக்கு நிலைக்குழுவின் அனுமதி தேவை (அ. விதி. 37).

ஒரு குறிப்பிடத்தக்க அம்சம் தேசிய மக்கள் காங்கிரசின் உறுப்பினர்கள், அவர்கள் எந்தப் பிரிவுகளால் தேர்ந்தெடுக்கப் பட்டார்களோ, அந்தப் பிரிவுகளால் மேற்பார்வை செய்யப் படுகிறார்கள். காங்கிரஸ் உறுப்பினர்கள் சட்டத்தினுல் குறி பிடப்பட்டிருக்கின்ற முறைகளைப் பின்பற்றி, தேர்தல் தொகுதிகளால் எப்போது வேண்டுமானுலும் திரும்ப அழைக்கப்பட்டு அவர்களுக்குப் பதிலாக புதிய உறுப்பினர் கள் தேர்ந்தெடுக்கப்படலாம் என்பதாகும் (அ. விதி. 38).

**தேசிய மக்கள் காங்கிரசின் அதிகாரங்களும் பணிகளும்**

காங்கிரசின் அதிகாரங்களும் பணிகளும் அரசியலமைப்புச் சட்டத்தின் 27ஆம் விதியில் எடுத்துச் சொல்லப்பட்டிருக் கின்றன. இம்மன்றத்தின் அதிகாரம் எல்லையற்றதாகவும் வரையறை செய்யமுடியாததாகவுமிருக்கிறது. இதன் பணி களைப் பரந்த அடிப்படையில், (அ) பொது அல்லது கொள்கைபற்றிய பணிகள் (ஆ) நடைமுறைகள் (Procedurial) பற்றிய பணிகளென இருகூறுகளாகப் பிரிக்கப்படலாம்.

**பொது அல்லது கொள்கைப் பணிகள்**

இத்தலைப்பின் கீழ்வரும் பணிகள் வருமாறு : (1) அரசிய லமைப்புச் சட்டத்திற்கு மாற்றம் கொண்டுவருதல். இதன்படி மொத்தமுள்ள உறுப்பினர்களின் மூன்றிலிரண்டு பங்கு உறுப் பினர்களின் ஆதரவில் அரசியலமைப்புச் சட்டத்தை மாற்ற லாம் (அ. விதி. 27).

(2) சட்டங்கள் இயற்றுதல் : சட்டங்கள் நிறைவேற்றப் படுவதற்கு மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் சாதாரண அறுதிப் பெரும்பான்மை பலம் தேவைப்படுகிறது.

(3) தேசியப் பொருளாதாரத் திட்டங்களைப்பற்றி முடிவு செய்தல்.

(4) அரசு சமர்ப்பிக்கும் வரவு-செலவுத் திட்டத்தையும் நிதி அறிக்கையையும் ஆமோதித்தல்.

(5) மாநிலங்கள், வட்டாரப் பகுதிகளின் எல்லைகளை ஏற்றல்.

(6) போர், சமாதானம் போன்ற விஷயங்களை முடிவு செய்தல். மேற்கூறப்பட்ட துறைகளில் தேசிய மக்கள் காங்கிரஸ் செய்யும் முடிவே இறுதியானது.

**நடைமுறைகள் பற்றிய பணிகள்**

தேசிய மக்கள் காங்கிரசின் இதர சிலபணிகள் நடைமுறைகள் பற்றிய பணிகள் என்று சொல்லப்படலாம். அவைகளில் முக்கியமான பணிகளைப்பற்றி இப்போது காணலாம். அரசின் முக்கியமான பணியாளர்களை அது தேர்ந்தெடுக்கிறது. அவர்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில் முக்கியமானவற்றையும் அதுவே முடிவு செய்கிறது. சீனுவின் தலைவரும் உதவித்தலைவரும், உச்சமக்கள் நீதிமன்றத்தலைவரும் தலைமை வழக்குரைஞரும் இம்மன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அரசுக் கழகத்தின் தலைவரான பிரதமரும், உதவிப் பிரதமரும் தேசியப் பாதுகாப்புக் கழகத்தின் (Council of Defence) உறுப்பினர்களும் தலைவரால் நியமிக்கப்படுவதற்கு இம்மன்றத்தின் சம்மதம் தேவையாகும். அதற்கு இவர்களைப் பதவியிலிருந்து விலக்குவதற்கும் அதிகாரமிருக்கிறது. இம்மன்றம் தொடரில் இல்லாமல் இருக்கும்போது இடைவெளியில்லாமல் தொடர்ந்து செயலாற்றுவதற்கென நிலைக் குழுவொன்றைத் தேர்ந்தெடுக்கிறது. நாட்டிலுள்ள அனைத்து நிறுவனங்களுக்கும் இதுவே உயர் அதிகாரம் உடைய நிலையமாகத் திகழ்வதால் அவைகளைக் கட்டுப்படுத்துவதும் இதன் அதிகாரவெல்லைக் கீழ்வரும். அரசுக்கழகம் இதற்குப் பொறுப்புடையதாக இருந்து அறிக்கைகளைச் சமர்ப்பிக்கவேண்டும். பிரதமரையும், இதர அமைச்சர்களையும் பதவிநீக்கம் செய்யவும் அதிகாரமுண்டு. கடைசியாக, அவசியமெனத்தோன்றும் இதர அதிகாரங்களையும் பணிகளையும் செய்வதற்கு அதற்கு அதிகாரமுண்டு.

**நிலைக்குழு (Standing Committee)**

சட்ட நிர்வாக அதிகாரங்களனைத்தும் தேசிய மக்கள் காங்கிரசுக்கே தரப்பட்டிருப்பதால், அது தன்னுடைய கூட்டத்தொடரில் இல்லாமலிருக்கும்போது, அதன் சார்பாகச் செயலாற்றுவதற்கு ஒரு நிரந்தர நிறுவனம் தேவைப்படுகிறது. உண்மையில் அது ஆண்டுக்கொருமுறைதான் கூடுகிறது. எனவே, அதன் சார்பாகச் செயலாற்றும் நிறுவனம் நிலைக்குழுவாகும். இக்குழுவில் (அ) ஒரு தலைவரும் (ஆ) ஒரு உதவித்

தலைவரும் (இ) ஒரு பொதுச்செயலாளரும் (ஈ) இதர உறுப்பினர்களும் இருக்கின்றார்கள்.

இந்த நிலைக்குழு பல அலுவல்களையும் அதிகாரங்களையும் பெற்றிருந்தாலும் அரசியல், பொருளாதார சமூகத் துறைகளில் எந்த முக்கியமான முடிவுகளையும் எடுக்காது. சான்றாக, நிலைக்குழு சட்டங்களை இயற்றவோ, பொருளாதாரத் திட்டங்களை முடிவுசெய்யவோ, அரசாங்க வரவு-செலவுத் திட்டத்தை ஆமோதிக்கவோ, மாநிலங்கள், தன்னாட்சிப் பகுதிகள், நகராட்சிகளின் தரத்தை நிர்ணயஞ் செய்யவோ அல்லது அவற்றின் எல்லைகளை இறுதியானதென்று அறிவிக்கவோ, போர் அல்லது சமாதானம்பற்றி முடிவுசெய்யவோ முடியாதென்பது கவனிக்கத்தக்கது. இவ்விஷயங்கள் எல்லாவற்றிலும் இறுதிமுடிவு தேசிய மக்கள் காங்கிரசால்தான் எடுக்கப்படவேண்டும். ஆனால், இதர அவ்வளவு முக்கியமில்லாத, தேசிய மக்கள் காங்கிரசின் நேரிடைக்கவனம் தேவைப்படாத நடைமுறைகள் சம்பந்தப்பட்ட அலுவல்களும், மற்றவைகளும் நிலைக்குழுவின் பொறுப்பில் விடப்பட்டிருக்கின்றன.

தேசிய மக்கள் காங்கிரஸ் என்னென்ன அலுவல்களைச் செய்கிறதென்பதை அது 1955ஆம் ஆண்டு ஜூலை மாதம் கூடியபோது கவனித்த விஷயங்களிலிருந்து ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். அவைகளாவன:

(1) தேசியப் பொருளாதார முன்னேற்றத்திற்காக வரையப்பட்ட முதல் ஐந்தாண்டுத்திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

(2) 1954, 55ஆம் ஆண்டுகளுக்கான வரவு-செலவுத் திட்டம் ஆய்வு செய்யப்பட்டு அனுமதிக்கப்பட்டது.

(3) இராணுவப்பணிச் சட்டம் (Military Service Law) இயற்றப்பட்டது.

(4) மஞ்சள் ஆற்றுநீரை சரிவர முழுவதுமாகப் பயன்படுத்துவதற்கு வரைப்பட்ட திட்டத்தை ஏற்றது.

(5) நிலைக்குழுவின் அறிக்கை ஆமோதிக்கப்பட்டது.

(6) நிலைக்குழுவில் இரண்டு இடங்கள் காலியானபோது அந்த இடங்களுக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தது. இந்தக் கொள்கைகள் நடைமுறைப்படுத்தப்படுவதற்கான

இதரப் பெரிய முடிவுகள் நிலைக்குழுவினால் அன்றாடம் செய்யப் பட்டன.

இவை இரண்டிற்குமிடையிலான இத்தகைய அதிகாரப் பிரிவினையில் மூன்று தெள்ளத்தெளிவான நன்மைகள் இருக்கின்றன. முதலாவதாக தேசிய மக்கள் காங்கிரஸ் இரண்டாந்தர முக்கியமுடைய விஷயங்கள், நடைமுறை சம்பந்தப்பட்ட விஷயங்களில் அதன் நேரத்தை வீணடிக்க வேண்டியதில்லை. இரண்டாவதாக, தேசிய முக்கியத்துவம் கொண்ட கொள்கைகளைப்பற்றி ஆராய்ந்து முடிவு செய் வதற்கு அதனால் போதுமான நேரம் கிடைக்கிறது. மூன்று வதாக, நடைமுறை அல்லது இரண்டாந்தர விஷயங்கள் பற்றி நுணுக்கமாக ஆராய்வதற்கு பிரதிநிதிகளுக்கு சௌகரியமாக இருக்கிறது. அவைகள் அரசுக் கழகத்தினால் முடிவு செய்யப்படுவதில்லை.

**நிலைக்குழுவின் பணிகள்**

நிலைக்குழுவின் பணிகளைப் பின்வருமாறு வகைப்படுத்திச் சொல்லலாம் (அ. விதி. 31)

**1. பன்னாட்டு உறவுகளும் அவசர நிலைமையும்**

(அ) இதர நாடுகளுக்கு நியமிக்கப்படும் தூதுவர்களின் நியமனத்தையும் அவர்கள் திரும்ப அழைக்கப்பட வேண்டியதையும் முடிவு செய்தல்.

(ஆ) அயல் நாடுகளுடன் செய்துகொள்ளப்படும் உடன்படிக்கைகளை உறுதிப்படுத்தலும், முறித்தலும் பற்றி தீர்மானித்தல்.

(இ) தேசிய மக்கள் காங்கிரஸ் தொடரில் இல்லாம லிருக்கும்போது நாடு அந்நியப்படைகளால் தாக்கப்படும் போது அல்லது ஆக்கிரமிப்பை எதிர்த்து தற்காப்புக்காகச் செய்துகொள்ளப்பட்டிருக்கும் பன்னாட்டு உடன்படிக்கை களின்படியான கடமைகளை நிறைவேற்றவேண்டி வரும் போது நாட்டில் போர்ப் பிரகடனம்பற்றி முடிவு செய்வது.

(ஈ) பகுதியாக அல்லது முழுமையாகப் படைக்கு ஆட்களைத் திரட்டுவது பற்றி முடிவு செய்வது.

(உ) கடைசியாக, நாட்டின் சில பகுதிகளிலோ அல்லது முழுவதுமோ ராணுவச்சட்ட அமுல் பற்றி தீர்மானிப்பது.

**2. நடைமுறை விதிபற்றியவை**

(அ) தேசிய மக்கள் காங்கிரசுக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்குத் தேர்தலை நடத்துவது.

(ஆ) தேசிய மக்கள் காங்கிரசைக் கூட்டம் கூடுமாறு அழைப்பது.

(இ) சட்டங்களை ஏற்பது; சட்டங்களை விளக்குவது.

(ஈ) இராணுவ ராஜதந்திரத் தொடர்புடைய தரங்களையும், பட்டங்களையும் ஏற்படுத்துவது.

(உ) மன்னிப்பளிப்பது பற்றி முடிவு செயதல்.

**3. மேற்பார்வையும் மத்தியக் கட்டுப்பாடும்**

(அ) அரசுக்கழகம், உச்ச மக்கள் நீதிமனறம், உச்ச மக்கள் வழக்குரைஞர்கள் மன்றங்களின் வேலைகளைக் கண்காணித்தல்.

(ஆ) அரசியலமைப்புச்சட்டம், சட்டங்கள் ஆகியவற்றிற்குப் புறம்பான அரசுக் கழகத்தின் முடிவுகளையும் ஆணைகளையும் விலக்குதல்.

(இ) மாநிலங்கள் தன்னுட்சிப் பகுதிகள், மத்திய அரசாங்கத்தின் நேர்ப்பார்வையிலுள்ள நகராட்சி அரசாங்கங்கள் இயற்றும் தீர்மானங்களை மாற்றியமைத்தல் அல்லது தள்ளிவிடுதல்.

(ஈ) தேசிய மக்கள் காங்கிரஸ் தொடரில் இல்லாமலிருக்கும்போது உதவிப் பிரதமர், அமைச்சர், கழகத்தலைவர் அல்லது அரசுக் கழகத்தின் பொதுச்செயலாளர் ஆகியோரது நியமனங்களையும், பதவி நீக்கத்தையும் முடிவு செய்தல்.

(உ) உதவித் தலைவர்கள், நீதிபதிகள், உச்ச மக்கள் நீதிமன்ற நீதிக்குழுவின் (Judicial Committee of the Supreme People's Court) இதர உறுப்பினர்களை நியமிப்பது அல்லது விலக்குவது.

(ஊ) உச்சமக்கள் வழக்குரைஞர்கள் கழகத்தின் வழக்குரைஞர் குழுவைச் சேர்ந்த உறுப்பினர்கள், உதவித் தலைவர்களை நியமிப்பது அல்லது நீக்குவது.

நிலைக்குழு, தேசியமக்கள் காங்கிரசுக்குப் பொறுப்பாக இருந்து அதற்குத் தனது அறிக்கைகளைச் சமர்ப்பிக்கும். இந்த நிலைக்குழுவிலுள்ள உறுப்பினர்கள் எப்போது வேண்டுமானாலும் தேசிய மக்கள் காங்கிரசால் திரும்ப அழைக்கப் படலாம்.

**தேசிய மக்கள் காங்கிரசின் உறுப்பினர்கள்**

தேசிய மக்கள் காங்கிரசின் உறுப்பினர்கள் அரசுக் கழகத்திற்கும் அமைச்சரகங்களுக்கும் கேள்விகளை அனுப்புவதற்கு உரிமை பெற்றிருக்கிறார்கள். அக்கேள்விகளுக்குப் பதில்சொல்ல அவைகள் கடமைப்பட்டவைகள் (அ. விதி. 36). இது அரசுக்கழகம் ஒரு குறிப்பிட்டத்துறையில் குறிப்பிட்ட கொள்கையை ஏன் பின்பற்றுகிறது என்பதைத் தெரிந்துகொள்வதற்கு உதவுகிறது. எனவே, அவர்கள் தங்களைத் திருப்தி செய்துகொள்ள முடிவதோடு வாக்காளர்களையும் திருப்திப்படுத்த முடிகிறது. அதற்குத் தகுந்தாற் போலப் பொருத்தமான யோசனைகளையும் சொல்வதற்கும் உதவுகிறது.

அரசியலமைப்புச் சட்டத்தின் 37ஆம் விதிப்படி எந்தப் பிரதிநிதியும், தேசிய மக்கள் காங்கிரஸ் கூட்டத்திலிருக்கும் போது அதனுடைய அனுமதியின்றியும், அது கூடாதிருக்கும் போது நிலைக்குழுவின் அனுமதியின்றியும் கைது செய்யப் படவோ அல்லது அவர்மேல் வழக்குத் தொடரப்படவோ முடியாது. இந்த ஏற்பாடு பிரதிநிதிகளின் சுதந்திரம் காக்கப் படுவதோடு, அவர்கள் பிறர் குறுக்கீடின்றி கடமையைச் செய்வதற்கு உதவுவதாகவுமிருக்கிறது. மேலும், அரசாங்கத்தின்கீழ் பணியாற்றுபவர் எவருக்காவது பிரதிநிதிகளைப் பிடிக்கவில்லையென்றால் அந்தக் காரணத்திற்காகக் கைது செய்து காவலில் வைக்கக்கூடிய அபாயத்தினின்றும் அது பிரதிநிதிகளைக் காப்பாற்றுகிறது.

மேற்கூறப்பட்டவாறு பிரதிநிதிகள் சுதந்திரமானவர்கள் என்றாலும், அவர்களை எந்தப்பகுதிகள் தேர்ந்தெடுத்தனவோ அந்தப் பகுதி வாழ் வாக்காளர்களின் மேற்பார்வைக்கும், அவர்களால் திரும்ப அழைக்கப்படுவதற்கும் கட்டுப்படுத்தப் பட்டவர்கள். அவ்வாறு திரும்ப அழைக்கப்பட்டவர்கள் இடங்களில் மற்றவர்களை அனுப்புவதற்கு அப்பகுதிகளுக்கு அதிகாரமிருக்கிறது (அ. விதி. 38.). இந்த ஏற்பாடு பிரதிநிதிகளைத் தங்களுடையப் பணிகளைப் பொறுப்புடனும், மனச்

சாட்சியுடனும், கவனமாகவும் செய்வதற்கு வகை செய்கிற தெனலாம். பொறுப்பற்ற முறையில் நடப்பவர்கள் திரும்ப அழைக்கப்படுவர் என்ற அச்சம் இருப்பதால் இயற்கையாகவே உறுப்பினர்கள் சிறப்பான வகையில் பணியாற்றி வருகிருர்கள்.

**காங்கிரசின் தொடர்கள்**

தேசிய மக்கள் காங்கிரஸ் ஆண்டிற்கொரு முறையே சாதாரணமாகக் கூடுகிறது. ஆனுல், சிறப்புக் கூட்டங்கள் பிற்றோரிடத்தில் சொல்லப்பட்டிருப்பது போல அழைக்கப்படலாம். இம்முறையினுல் பல நன்மைகள் இருப்பதாகச் சொல்லலாம். முதலாவதாக, பிரதிநிதிகள் பலவகைப்பட்ட ஆக்க வேலைகளில் தினசரி ஈடுபட்டிருக்கிருர்கள். அவ் வேலைகள், அவர்கள் பிரதிநிதிகள் என்பதால் தடைப்படுவதில்லை. இரண்டாவதாக, கட்சியைச் சேர்ந்த ஊழியர்களுடன் அவர்கள் அன்ருடம் உழைப்பதால், ஊழியர்களுடன் நெருங்கிய பழக்கமும் அவர்களுடைய கருத்துகளும் தெரிவதற்கு வாய்ப்பிருக்கிறது. இதனுல் ஏற்படும் முக்கியமான நன்மை அரசியல்வாதிகளென்ற தனிவர்க்கமொன்று தோன்றுவதில்லை. மூன்ருவதாக, அரசியல்வாதிகளிடம் பொதுவாகக் காணப்படாத திறந்த மனமும், உண்மையான செயல் சாத்தியமான கருத்தும் காங்கிரஸ் கூடும்போது இவர்களிடமிருந்து கிடைக்கிறது. கடைசியாகச் சாதாரண விஷயங்களில் அவர்கள் விவாதம் செய்து நேரத்தையும், பொருள் விரயத்தையும் ஏற்படுத்துவதைத் தடுக்கிறது. அதே சமயத்தில் பொதுமக்கள் தாங்கள் முக்கியமானது என்று கருதுமெதையும் பிரதிநிதிகள் மூலமாக அரசுக் கழகத்தின் கவனத்திற்குக் கொண்டு வருவது சாத்தியமாகிறது. அரசுக் கழகமும், அமைச்சரகங்களும் பிரதிநிதிகள் பொறுப்பற்றும் அஜாக்கிரதையாகவுமிருந்தால் அவர்கள் திரும்ப அழைத்துக் கொள்ளப்படுவதற்கு ஆளாவர்.

மேற்கூறப்பட்ட கருத்து சியன்டுவாங் செங் (Chien Tuan Sheng) என்பவரால் 'நமது புது அரசியலமைப்பு' (Our New State Structure) என்னும் கட்டுரையில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. இக்கட்டுரை 'சீனு புனரமைக்கிறது' என்னும் பத்திரிகையில் 1955ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் வெளி வந்தது. அவர் கூறுவதாவது, 'நமது பிரதிநிதிகள் பல வகைப்பட்ட வேலைகளில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிருர்கள்

தேர்ந்தெடுக்கப்பட்டதும் அவர்கள் தங்கள் வேலைகளை விட்டு விடுவதில்லை. அவர்கள் செய்துவரும் வேலைகள் மூலமாக அவர்கள், மக்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ள முடிவதோடு அவர்களுடையத் தேவைகளையும் கருத்துகளையும் அறிந்து கொள்ள முடிகிறது. தொழிலாளர்களாக, பொறியியல் வல்லுநர்களாகப் பணியாற்றும் பிரதிநிதிகள் தொழிற்சாலைகளில் அவரவர் தொழில்களைத் தொடர்ந்து செய்து வருவதன் வாயிலாக தொழில்களின் தேவைகளைப் பற்றிய முதல் தரமான அறிவுடையவர்களாக இருக்கிறார்கள். வேளாண்மை, கல்வி, கலைகள், இதரத்துறைகளில் ஈடுபட்டிருப்பவர்களும் அவர்களுடைய வேலைகளைத் தொடர்ந்து செய்து வருகிறார்கள். பிரதிநிதிகள் அவர்களுடைய பதவிக் காலமான நான்காண்டுகளுக்குத் தற்காலியமாகத் தங்கள் தொழில்களை விட்டாலும், அவர்களுடைய பிரதிநிதித்துவத் தன்மையை அவர்கள் இழந்து விடுகிறார்கள் என்று கருதப் படுவதே அவர்கள் தங்களுடையத் தொழில்களை தொடர்ந்து செய்து வரவேண்டும் என்பதற்கான முக்கியமான காரணமாகச்சொல்லப்படுகிறது. மேலும், பிரதிநிதிகள் தங்களுடைய பொன்னான நேரத்தை, தனி மசோதாக்கள், காலதாமதம் செய்யும் நோக்கத்தோடு விவாதத்தை நீடிப்பது போன்ற முக்கியமில்லாத விஷயங்களில் வீணடிக்க விரும்புவதில்லை. அல்லாமலும் தேசியமக்கள் காங்கிரசின் ஆண்டுக்கூட்டம் குறுகிய காலத்திற்கே நடைபெறுவதால் அதற்கு நேரமும் கிடையாதென்பதோடு, உறுப்பினர்கள் எப்பொழுது வேண்டுமானாலும் தங்கள் தொகுதி வாக்காளர்கள் தேவைகளையும், கருத்துகளையும் காங்கிரசுக்கு தெரிவித்து, ஆகவேண்டியவைகளைக் கவனிப்பதற்கு வசதியிருப்பதையும் குறிப்பிட வேண்டும்.'

தேசிய மக்கள் காங்கிரசின் அதிகாரத்தை நிலைக்குழு அபகரித்துக் கொண்டுவிடக் கூடுமென்னும் பயம் சீன மக்களுக்கு ஒருபோதும் ஏற்படுவதில்லை. அதற்கு முக்கியக் காரணம் அக்குழு காங்கிரசின் சார்பாகச் செயலாற்றுவதும் அதற்குப் பொறுப்புடையதாக இருப்பதுமேயாகும். தேசிய மக்கள் காங்கிரஸ் எப்போது வேண்டுமானாலும் நிலைக் குழுவிலுள்ள அதன் பிரதிநிதிகளைத் திரும்ப அழைத்துக் கொள்ளும் அதிகாரமிருக்கிறதென்பதும் கவனிக்கத்தக்கது.

# 6. தலைவரும் அரசுக்கழகமும்

## (The Chairman and the State Council)

**சீனமக்கள் குடியரசின் தலைவர்**

மேற்றிசை அரசாங்கங்களிலும்சரி, கீழ்த்திசை அரசாங்கங்களிலும் சரி பொதுவாக அரசாங்கத்தலைவரோடு, நாட்டுத் தலைவர் (Head of State) என்றொருவர் இருப்பதைக் காணலாம். இத்தலைவர் அமெரிக்கா, பிரான்சு போன்ற நாடுகளிலுள்ளவாறோ அல்லது இந்தியா, ஜப்பான், இங்கிலாந்து நாடுகளிலுள்ளவாறோ இருக்கலாம். அதாவது அரசு விவகாரங்களில் உண்மையான அதிகாரமுடையவராக அல்லது அதிகாரமற்ற அலங்காரத் தலைவராக இருக்கலாம். அல்லது சுவிட்சர்லாந்துக் குடியரசு அரசாங்கத்திலுள்ளதுபோல சமதகுதியுடைய தலைவராகவும் இருக்கலாம். இந்த வகைகளில் எதிலும் முற்றிலும் சேராத தனியொரு தலைவரைச் சீனாவில் காணலாம். அரசியலமைப்புச் சட்டப்படி, பாராளுமன்றத்திற்கும் மேலான தலைவரும் அல்ல; அதிகாரமுடைய நிர்வாகத்தின் தலைவருமல்ல. ஆனால், நாட்டின் ஒற்றுமைச் சின்னமாக (Symbol of the unity of State) அவர் கருதப்படுகிறார்.

**அவருடையப் பணிகள்**

அரசியலமைப்பிலுள்ள ஏற்பாடுகள் : தலைவரது பணிகள் அரசியலமைப்பில் 40 முதல் 43 வரையிலுள்ள விதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த விதிகளின்படி தலைவர்,

(1) தேசிய மக்கள் காங்கிரஸ் அல்லது நிலைக்குழு முடிவுகள்படி,

(அ) சட்டங்களையும், உத்தரவுகளையும் பிரசுடனப் படுத்துகிறார்.

(ஆ) பிரதமர், உதவிப் பிரதமர், அமைச்சர்கள், கழகங்களின் தலைவர்கள், அரசுக் கழகப் பொதுச்செயலாளர் ஆகியோரை நியமிக்கிறார்.

(இ) உதவித்தலைவரையும், தேசியப் பாதுகாப்புக் கழகத்தின் உறுப்பினர்களையும் நியமிக்கிறார் அல்லது பதவியிலிருந்து விலக்குகிறார்.

(ஈ) அரசு கௌரவப் பரிசுப் பதக்கங்களையும், விருதுப் பட்டங்களையும் வழங்குகிறார்.

(உ) பொதுக்குற்ற மன்னிப்பையும் (Amnesty), சாதாரண மன்னிப்பையும் அறிவிக்கிறார்.

(ஊ) இராணுவச் சட்டத்தைப் பிரகடனப்படுத்துகிறார்.

(எ) போர் நிலைமைப் பிரகடனத்தை அறிவித்துப் படைக்கு ஆள்சேர்க்கும் உத்தரவுகளைப் பிறப்பிக்கிறார்.

2. அயல்நாடுகளுடனான உறவுகளில் சீனமக்கள் குடியரசின் பிரதிநிதியாக விளங்குகிறார். இதர நாடுகளின் தூதுவர்களாக சீனாவிற்கு வருபவர்களை வரவேற்கிறார். நிலைக்குழுவின் முடிவுகளுக்கிணங்க அயல்நாடுகளுக்கான சீனத்தூதுவர்களை நியமிக்கிறார் அல்லது அவர்களைத் திரும்ப அழைக்கிறார். மற்ற நாடுகளுடன் செய்துகொள்ளப்படும் உடன்படிக்கைகளை உறுதிப்படுத்துகிறார்.

(3) முப்படைகளின் தலைவராக இருந்து அவைகளைத் தன் கட்டளைகளுக்குட்படுத்துகிறார். தேசிய பாதுகாப்புக் கழகத்தின் தலைவராக இருக்கிறார்.

(4) தேவைப்படும்போது உச்ச அரசு மாநாட்டைக் (Supreme State Conference) கூட்டுவதோடு அதற்குத் தலைமையும் ஏற்கிறார். இம்மாநாட்டின் கருத்துகளை அவர் தேசிய மக்கள் காங்கிரசுக்கோ, அதனுடைய நிலைக்குழுவிற்கோ, அரசுக் கழகத்திற்கோ அல்லது சம்பந்தப்பட்ட இதர நிறுவனங்களுக்கோ தாக்கல் செய்கிறார். அதன் பிறகு அவைகள் அக்கருத்துகளைப் பரிசீலனை செய்து அவைபற்றி முடிவெடுக்கின்றன.

**பணிகள் பற்றிய ஆய்வு:** மேலே சொல்லப்பட்ட தலைவரது பணிகளில் பல நடைமுறைகள் பற்றியவையாகும் என்பது

தெளிவாகிறது. அவர் என்ன செய்தாலும் அது தேசிய மக்கள் காங்கிரஸ் அல்லது நிலைக்குழு முன்னதாகச் செய்யும் தீர்மானங்களை ஆதாரமாகக்கொண்டது. அவருக்குத் தனியான அதாவது சுதந்திரமான அதிகாரங்கள் கிடையாதாகையால், தேசிய மக்கள் காங்கிரஸ் அல்லது அதனுடைய நிலைக் குழு அதிகாரங்களை மீற முடியாது.

எனினும், இதரக் குடியரசு நாடுகளில் நடைமுறையிலுள்ள வாறு, சீனமக்கள் குடியரசுத் தலைவர் அயல் நாடுகள் சம்பந்தப் பட்ட அலுவல் உறவுகளில் சீன நாட்டின் பிரதிநிதியாகத் திகழ்கிறார் என்பதை மறுக்கவியலாது. அங்ஙனமே படை களின் தளபதியாகவுந் திகழ்கிறார். தேசியப் பாதுகாப்புக் கழகத்தின் தலைவராக அவர் இருந்தாலும் அக்கழகம் காங்கிரஸ், நிலைக்குழு அல்லது அரசுக் கழகத்தின் அதிகாரங் களை புறக்கணிக்க முடியாதென்பதாலும், அது ஆலோசனை வழங்கும் மன்றமாக இருப்பதாலும் அவர் தன்னிச்சைப்படி நடக்கவியலாதென்பது புலனாகிறது. அங்கனமே உச்ச அரசுக் கழகத்தை அவர் கூட்ட அதிகாரம் பெற்றவரெனினும், அக்கழகமும் தனியாக முடிவுகளெடுக்க முடியாதாகையால் அவர் பல தளைகளால் கட்டுண்டிருக்கிறார் என்பது தெளி வாகிறது.

**தலைவர் இடமும் அந்தஸ்தும் :** சீன மக்கள் குடியரசுத் தலைவர் தேசத்தலைவராகக் கருதப்படவில்லை. காங்கிரஸ் அல்லது நிலைக்குழுவின் முடிவுகளுக்கேற்ப அவர் பணிகளைச் செய்கிறா ரென்றும் அதிகாரங்களைச் செலுத்துகிறாரென்றும் சொல்லப் படுவதால் சீனாவில் நாட்டுத்தலைவர், கூட்டுத்தலைவர் என்றா கிறது. நாட்டுத்தலைவரின் அதிகாரங்களும் கடமைகளும் தலைவர், காங்கிரஸ், நிலைக்குழு ஆகியவற்றால் கூட்டாகச் செலுத்தப்படுகின்றன.

**ஒப்பற்றத் தன்மை :** இவ்வாறு சீனத்தலைவர், வேறு எந்த நாட்டிலுமில்லாத ஒப்பற்றத்தலைவராக இருக்கிறார். அவர் அமெரிக்க, பிரான்சு நாட்டுத்தலைவர்களை ஒத்திராது, சாயலில் சோவியத் யூனியனிலுள்ள சுப்ரீம் சோவியத்தின் சிருஷ்டியாக வுள்ள பிரீசிடியத்தின் தலைவர் போன்றுள்ளார் என்று கருதப் படுகிறது. சீனத்தலைமைப் பதவியும், ரஷ்யத்தலைமைப் பதவி யும் ஆட்சித்துறை அதிகாரமுடைய (Administrative Power) நிறுவனம் எதனுடைய பாகங்களாகவும் இல்லாமல் அரசதிகாரமுடைய (State Power) உச்ச நிறுவனத்தால்

அதாவது பாராளுமன்றத்தால் ஏற்படுத்தப்பட்டவை என்பது சிறப்பாக இங்கு அறியத்தக்கது. இந்தியக் குடியரசுத் தலைவரும், இங்கிலாந்து நாட்டு அரசியாரும் பாராளுமன்றத்தின் அங்கமாகக் கருதப்படும் அதே நேரத்தில் நிர்வாகத்துறையின் அங்கமாகவும் கருதப்படுகிறார்களென்பதை நோக்குங்கால் சீனத்தலைமையின் தனித்தன்மை தெரியவரும். சோவியத் தலைவரைப்போன்று, சீனத்தலைவர் எந்தவொரு கழகம் அல்லது குழுவின் தலைமை உறுப்பினராக இல்லாததோடு அதன் சார்பாகப் பேசுபவரும் அல்ல. இவ்விடத்தில் சோவியத்தலைவர் பிரீசிடியத்தின் முக்கியப் பிரதிநிதியாக, அதன் சார்பாகப் பேசியும் நடந்தும் வருகிறாரென்பதைக் குறிப்பிடுவது அவசியமாகிறது.

**தலைவர் தேர்தல் :** சீனக்குடியரசின் தலைவர் தேசிய மக்கள் காங்கிரசால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். தலைவர் தேர்தலுக்கு நிற்க விரும்பும் எந்தக்குடிமகனும் (அ) வாக்குரிமை உடையவராகவும், தேர்தலுக்கு நிற்க உரிமை உடையவராகவும் (ஆ) முப்பத்தைந்து வயதானவராகவுமிருத்தல் வேண்டும். தலைவரினுடைய பதவிக்காலம் நான்காண்டுகளாகும் என்று அரசியலமைப்புச் சட்டத்தின் 39ஆம் விதி கூறுகிறது.

**உச்ச அரசு மாநாடு** (Supreme State Conference)

சீன உதவித்தலைவர், நிலைக்குழுத்தலைவர், அரசுக் கழகத் தலைவர் (அதாவது பிரதம மந்திரி) ஆகியவர்களும் வேறு சிலரும் உச்ச அரசு மாநாட்டின் உறுப்பினர்களாகக் கலந்துகொள்கின்றனர். அரசியலமைப்புச் சட்டத்தின் 43ஆம் விதிப்படி சீனமக்கள் குடியரசுத்தலைவர், நாட்டின் பல முக்கியமான விஷயங்கள்பற்றிய இந்த மாநாட்டின் கருத்துகளை, தேசிய மக்கள் காங்கிரஸ், நிலைக்குழு, அரசுக்கழகம் ஆகியவற்றிற்கும் சம்பந்தப்பட்ட இதர நிறுவனங்களுக்கும் தாக்கல் செய்கிறார்.

**துணைத்தலைவர்** (Vice-Chairman)

சீனக்குடியரசின் துணைத்தலைவர், தலைவருடைய அலுவல்களில் அவருக்கு உதவியாக இருக்கிறார். தலைவர் அவ்வப்போது அவருக்களிக்கும் அதிகாரங்களையும் பணிகளையும் அவர் செய்கிறார். தலைவராவதற்கு ஒருவருக்கு என்னென்னத் தகுதிகள் இருக்கவேண்டுமோ அவையனைத்தும் துணைத் தலைவராவதற்கும் இருக்கவேண்டும். அங்ஙனமே, தலைவர்

தேர்ந்தெடுக்கப்படுவது போன்றே துணைத்தலைவரும் நான்காண்டுப் பதவிக்காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இந்திய, அமெரிக்க ஐக்கியநாடுகளிலுள்ளவாறு தலைவர் நீண்டகாலத்திற்கு நோய்வாய்ப்பட்டிருப்பதனால் கடமைகளை ஆற்ற முடியாமற்போகுங்காலத்தில் தலைவரது பணிகள் துணைத் தலைவரால் நிறைவேற்றப்படுகின்றன. தலைவர் பதவி காலியாகுமானால், துணைத்தலைவர் அரசியலமைப்புச் சட்டத்தின் 44ஆம் விதிக்கிணங்கத் தலைவராகப் பொறுப்பேற்கிறார்.

**அரசுக் கழகம்** (State Council)

சீனமக்கள் குடியரசின் அரசுக்கழகம் அங்குள்ள மத்திய மக்கள் அரசாங்கமாகும். இதற்குச் சமமாக இதரநாடுகளிலுள்ள நிறுவனம் அமைச்சரவை என அழைக்கப்படுகிறது. இது தேசிய மக்கள் மாநாட்டின் (National People's Conference) நிர்வாக நிறுவனமென்பதோடு (Executiveorgan) நாட்டின் மிகவுயர்ந்த ஆட்சித்துறை நிலையமாகவுந் திகழ்கிறது.

இது பிரதமர், உதவிப்பிரதமர்கள், அமைச்சர்கள், கழகங்களின் தலைவர்கள், பொதுச்செயலாளர் ஆகியவர்களைக் கொண்டதாகும். குடியரசுத்தலைவர் யாரைப் பிரதமராகத் தேர்ந்தெடுக்கிறாரோ, அவரை அவருடைய பரிந்துரைக்கிணங்க தேசிய மக்கள் காங்கிரஸ் முடிவுசெய்கிறது. பிரதமர், அமைச்சரவையில் யார் யார் தனது தோழர்களாக இருக்க வேண்டுமெனத் தெரிந்தெடுக்கிறாரோ, அவர்களது பெயர்களை காங்கிரசுக்குச் சமர்ப்பித்ததும், காங்கிரஸ் தீர்மானிக்கிறது. தேசிய மக்கள் காங்கிரஸ் பிரதமரையும் அமைச்சரவையில் அங்கம் வகிக்கும் மற்றவர்களையும் பதவிநீக்கம் செய்யும் அதிகாரம் படைத்ததாகும்.

அரசுக்கழகம், காங்கிரசின் நிர்வாக மன்றமாதலால் காங்கிரசின் கட்டுப்பாட்டிற்கும் மேற்பார்வைக்கும் அது உட்பட்டதாகும். அரசுக் கழகத்தின் பணிகளும், அதிகாரங்களும் அரசியலமைப்புச் சட்டத்தின் 49ஆம் விதியில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. முதலாவதாக, அது ஆட்சித்துறை நடவடிக்கைகளை உருவாக்கி முடிவுகளையும் ஆணைகளையும் பிறப்பிக்கிறது. அதன் ஆணைகள் சரியாக நிறைவேற்றப்படுகின்றனவா என்பதை அது மேற்பார்வையிடுகிறது. முடிவுகளும், நிறைவேற்றப்படுகின்ற முறைகளும்

அரசியலமைப்புச் சட்டத்திற்கும், சாதாரணச் சட்டங்களுக்கும், அரசு உத்தரவுகளுக்குமிணங்க இருக்கின்றனவா என்பதையும் சரிபார்க்கிறது. மேலும், தேசிய மக்கள் காங்கிரஸ் அல்லது நிலைக்குழுவிற்கு மசோதாக்களைத் தாக்கல் செய்கிறது. இரண்டாவதாக, அமைச்சரகங்கள், கழகங்கள், வட்டார ஆட்சித்துறை நிறுவனங்களின் பணிகளை அது ஒருங்கிணைத்துச் சுமுகத்தை ஏற்படுத்துவதோடு அவசியமான இடங்களில் அவற்றிற்கு வழிகாட்டியாகவுமிருக்கிறது. இந்த நோக்கத்தை அடிப்படையாகக்கொண்டு அவற்றின் ஆணைகளை அமைச்சரவை மாற்றியமைக்கலாம்; பொருத்தமற்ற இடங்களில் நிராகரிக்கலாம். மூன்றாவதாக, சமுதாயத்தின் நன்மையைக் கருதி இன்றியமையாத பல விஷயங்களையும் அது செயலாக்குகின்றது. அரசாங்கத்தின் வரவு-செலவுத் திட்டத்தையும், தேசியப் பொருளாதாரத் திட்டங்களையும் நடைமுறையில் இயக்கிவருகின்றது. உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகத்தைக் கட்டுப்படுத்துகிறது. கல்வி, பண்பாடு, பொதுசுகாதாரம் போன்றத்துறைகளை இயக்கிவருகின்றது. நான்காவதாக, அது சில அரசியல் பணிகளையும் செய்கிறது. அயல் நாடுகள் சம்பந்தப்பட்ட விஷயங்களையும் கவனிக்கிறது. பாதுகாப்புப் படைகளுக்குத் தேவையானவற்றைப் பெறுவதற்கு உதவி செய்கிறது. பொது அமைதியையும், அரசு நலனையும் பாதுகாக்கிறது. குடிமக்கள் உரிமைகளுக்குப் பாதுகாவலனாகத் திகழ்கிறது. வெளிநாடுகளில் வாழும் சீனமக்கள் சம்பந்தப்பட்ட அலுவல்களை நிர்வகிக்கிறது. உள்நாட்டில், நகராட்சிகள், மாநிலங்களின் எல்லைகளை உறுதிப்படுத்துகிறது. கடைசியாக, ஆட்சித்துறைப் பணியாளர்களை அது நியமிக்கிறது. அல்லது பதவியிலிருந்து விலக்குகிறது. இவை தவிர, தேசிய மக்கள் காங்கிரசும் நிலைக்குழுவும் அதற்கு அளிக்கும் இதரப்பணிகளையும் அதிகாரங்களையும் அது செலுத்துகிறது.

அரசுக்கழகத்தில் சுமார் நாற்பது உறுப்பினர்கள் இருக்கிறார்கள். உள்துறை அமைச்சரகமும், அயல்நாட்டு விவகார அமைச்சரகமும், இதர இருபத்தெட்டு அமைச்சரகங்களும், தேசியத்திட்டக்கமிஷனும், வேறு நான்கு கமிஷன்களும் அதன் கீழ்வருகின்றன. அரசுப் புள்ளிவிவரக் கழகத்தையும், மக்கள் வங்கியையும் (People's Bank) அது தன் மேற்பார்வையில் செயல்படுமாறு ஏற்படுத்தியிருக்கிறது. வேறு எத்தகைய நிறுவனங்களையும் தேவையானல் அது ஏற்படுத்தலாம்.

அரசுக்கழகம் மிக அதிகமான உறுப்பினர்களையுடையதாக இருப்பதால் அடிக்கடி அது கூடுவதற்கியலாது. ஆனால், பிரதமரும், ஆட்சித்துறைகளுக்குத் தலைவர்களாக இருக்கின்ற துணைப்பிரதமர்களும் (இவர்களின் எண்ணிக்கை பத்து) அடிக்கடி கூட்டப்படும் கூட்டங்களில் கலந்து கொள்கிறார்கள். இந்தப் பதினொரு பேர்களும் இதர நாடுகளிலுள்ள அடிப்படையில் சீனாவின் அமைச்சரவை (Cabinet) உறுப்பினர்களாகிறார்கள் எனலாம். அரசுக்கழகம் அதிலுள்ள மொத்த உறுப்பினர்களுடன் மந்திரிசபை (Ministry) என அழைக்கப்படலாம்.

# 7. வட்டார மக்கள் காங்கிரஸ்களும், கழகங்களும்

சீனமக்கள் குடியரசின் அதிகாரம் பெற்ற வட்டார மக்கள் காங்கிரசுகளும், வட்டாரக் கழகங்களும் ஆகிய நிறுவனங்கள் முறையே சட்டமியற்றுவதற்கும், நிர்வாகத்தை நடத்துவதற்கும் நிறுவப்பட்டிருக்கின்றன. இவைகளை அவை எந்தெந்தப் பிரிவுக்கென அமைக்கப்பட்டிருக்கின்றனவோ, அந்தப்பகுதி நிறுவனங்கள் என சொல்லவேண்டும். சான்றாக, மாநில மட்டத்தில் அமைக்கப்பட்டிருக்கும் சட்ட சபை அல்லது நகராட்சியில் அமைக்கப்பட்டிருக்கும் சட்ட சபை பொதுவாக சம்பந்தப்பட்ட வட்டார மக்கள் காங்கிரஸ் என்றழைக்கப்படுகிறது. இவைகளைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்வதற்கு முன்பாகச் சீனாவிலுள்ள ஆட்சித் துறைப் பிரிவுகளை (Administrative Divisions) பற்றி முதலில் காணலாம்.

**ஆட்சித்துறைப் பிரிவுகள்**

சீனமக்கள் குடியரசு பல ஆட்சிப் பிரிவுகளாகவும், அரசியல் பிரிவுகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவைகள் வருமாறு:

(1) தன்னாட்சிப் பிரதேசங்கள், மாநிலங்கள், மத்திய அரசாங்கத்தின் நேரடி மேற்பார்வையிலுள்ள நகராட்சிகள்

(2) கவுண்டிகள் (Counties), தன்னாட்சிக் கவுண்டிகள், நகராட்சிகள்

(3) சியாங் (Hsiang) தேசிய சியாங் (Nationality Hsiang) நகரங்கள் என்று மூன்று மட்டங்களில் இப்பிரிவுகள் செய்யப் பட்டிருக்கின்றன.

மேற்சொல்லப்பட்டவாறு வட்டாரப் பிரிவுகளும், துணைப் பிரிவுகளும் ஆட்சித்துறை அலுவல்கள் கருதிப் பிரிக்கப் பட்டிருந்தாலும் பின்வரும் கருத்துகளையும் இது சம்பந்த மாகத் தெரிந்து கொள்வது நலமாகும்.

(அ) தன்னுட்சி சௌகள் (Chous) சில சமயங்களில் முதலில் சொல்லப்பட்ட இரண்டு பிரிவுகளினூடே செல் கின்றன.

(ஆ) மத்திய அரசாங்கத்தின் நேரடி மேற்பார்வை யிலிருக்கும் நகராட்சிகள் பல மாவட்டங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றன. இம்மாவட்டங்கள்தான் கீழ் மட்டத்தி லுள்ள அரசு அதிகாரம் பெற்ற ஆட்சித்துறைப் பகுதி களாகும்.

(இ) மத்திய நகராட்சிகளாக இல்லாமலிருப்பவை பெரிய பகுதிகளாக இருந்தால் அவைகளும் சிறு, சிறு மாவட்டங்களாகப் பிரிக்கப்படுகின்றன. இதன்கீழ் தரப் பட்டிருக்கும் வரைபடம் (Chart) சீனுவிலுள்ள, அரசியல், ஆட்சித்துறைப் பிரிவுகளை விளக்குகிறது.[1]




[1] Shie I-Yuar, Changes in China's Administrative Divisions, 'People's China', Peking, May 16, 1955, Page. 28.

1954ஆம் ஆண்டு ஜூன் மாதத்திற்கு முன்பு சீனாவில் 30 மாநிலங்கள் இருந்தன. ஆனால், இப்போது அவை 26 மாநிலங்களாகக் குறைக்கப்பட்டு விட்டன. மத்திய அரசாங்கத்தின் நேரடி மேற்பார்வையில் முதலிலிருந்த 14 நகராட்சிகள் இப்போது 3ஆகக் குறைக்கப்பட்டுள்ளன. பீகிங், சாங்கை (Shanghai), டீன்ஸ்டின் (Teintsin) ஆகியவை தான் இப்போது அந்த மூன்று நகராட்சிகளாகும். நிர்வாக அமைப்பை மேம்படுத்தவும், ஆட்சிமுறையை எளிதாக்கவும், தேசிய சீரமைப்பிற்கு உதவுவதற்கும் இவைகளின் எண்ணிக்கை குறைக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

**கவுண்டிகள் :** கவுண்டிகள், மாநிலங்கள், தன்னாட்சிப் பிரதேசங்கள், தன்னாட்சி சௌகளின் செயல்படும் ஆட்சித் துறைப் பகுதிகளாகும். சாதாரணமாக ஒரு கவுண்டியின் மக்கள் தொகை சுமார் 2,00,000 முதல் 3,00,000 ஆகும். ஆனால், கவுண்டிகளின் அதிகப்பட்ச மக்கள் தொகை பத்து இலட்சமாகவும் குறைந்தபட்ச மக்கள் தொகை 10,000மாகவும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. மாநிலத்தில் அதிகபட்சமாக 140 கவுண்டிகளும் குறைந்தபட்சமாக 20 கவுண்டிகளும் இருக்கக்கூடுமென்றாலும் சாதாரணமாக ஒவ்வொன்றிலும் 80 முதல் 90 கவுண்டிகள் இருக்கின்றன. சீனாவில் தற்போது சுமார் 2150 கவுண்டிகள் இருக்கின்றன.

**நகராட்சி :** நகராட்சிகளில் 50,000க்கும் அதிகமான மக்கள் இருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் முக்கியமாக, தொழில் வணிகத்துறையில் ஈடுபட்டிருக்கிறார்கள். நகராட்சிகள், மாநிலம் அல்லது தன்னாட்சிப் பிரதேசம் அல்லது சௌவிலுள்ள வட்டார அரசாங்கத்தின் நேரடி ஆட்சியின் கீழ் வருகின்றன. சீனாவில் சுமார் 170 நகராட்சிகள் இருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

**சியாங் :** சியாங்குகளும், நகரங்களும் கவுண்டி ஆட்சியின் கீழ் இயங்கும் ஆட்சித்துறைப் பிரிவுகளாகும். சியாங் என்பது வேளாண்மையில் ஈடுபட்டிருக்கும் மக்களைக் கொண்ட, ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட பல சிற்றூர்களைக் கொண்டதாகும். சியாங் பெரும்பாலும் கிராம வகையைச் சேர்ந்ததாகும். அங்கு சுமார் 2,20,000க்கும் அதிகமான சிற்றூர்கள் இருக்கின்றன.

**நகரங்கள் :** நகரங்கள் தொழிலிலும், வணிகத்திலும் வளர்ச்சிபெற்று சுற்றுவட்டாரத்திலுள்ள ஊர்களுக்குத்

தேவையான பொருள்களை வழங்கும் வணிகக் கேந்திரங்களாக இருப்பவை. அவைகளின் மக்கள் தொகை கிட்டத்தட்ட சியாங்கிலுள்ள மக்கள் தொகைக்குச் சமமானது. இவ்வகை நகரங்கள் அங்கு 5,000 என்பதாகத் தெரிகிறது.

மேற்கூறப்பட்டவைகளிலிருந்து, சீனுவில் மூவகை வட்டார நிறுவனங்கள் அரசு அதிகாரமுடையவைகளாகத் திகழ்கின்றன என்பது தெரியவரும்.

மாநிலங்கள், நகராட்சிகள், கவுண்டிகள், மாவட்டங்கள், சியாங்குகள், நகரங்கள் எல்லாவற்றிலும் மக்கள் காங்கிரஸ் களும், மக்கள் கழகங்களும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. தன்னுட்சிப் பிரதேசங்கள், தன்னுட்சி சௌகள், தன்னுட்சி கவுண்டிகளிலெல்லாம் அந்தந்தப் பகுதிவாழ் மக்கள் விருப்பத்திற்கிணங்க ஏற்படுத்தப்படும். தன்னுட்சி அரசாங்க நிறுவனங்கள் நிர்வாகத்திற்குப் பொறுப்பேற்கின்றன.

**வட்டார மக்கள் காங்கிரசுகள்** (Local Peoples Congresses)

வட்டார மக்கள் காங்கிரசுகள் அரசாங்க நிறுவனங்க ளாகும். ஒவ்வொரு வட்டார மட்டத்திலும் ஒரு காங்கிரஸ் இருக்குமென அரசியலமைப்புச் சட்டத்தின் 55ஆம் விதி கூறு கிறது.

மாநிலங்கள், மத்திய அரசாங்கத்தின் நேரடி மேற் பார்வையிலுள்ள நகராட்சிகள், கவுண்டிகள், மாவட்டங்க ளாகப் பிரிக்கப்பட்டுள்ள இதர நகராட்சிகளின் மக்கள் காங்கிரசுகளின் பிரதிநிதிகள் ஒவ்வொன்றிற்கும் அடுத்த கீழ் மட்டத்திலுள்ள மக்கள் காங்கிரசுகளால் தேர்ந்தெடுக்கப் படுகிருர்கள். ஆனுல், மாவட்டங்களாகப் பிரிக்கப்படாத நகராட்சிகள், முனிசிபல் மாவட்டங்கள், சியாங், தேசிய சியாங் நகரங்களின் மக்கள் காங்கிரசுகளின் பிரதிநிதிகள் வாக்காளர்களாலேயே நேராகத் தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள். மாநில காங்கிரசுகளின் பதவிக்காலம் நான்கு ஆண்டுகளாகும். ஆனுல், இதர காங்கிரசுகளின் பதவிக்காலம் இரண்டாண்டு கள் தான்.

இந்த வட்டாரக் காங்கிரசுகளெல்லாம் சட்டங்களும், நீதித் தீர்ப்புகளும் முறைப்படி பின்பற்றப்படுகின்றனவா, நிறைவேற்றப்படுகின்றனவா என்பதைக் கவனிக்கின்றன. அவைகள் அந்தந்த வட்டாரங்களின் முன்னேற்றத்திற்கானத் திட்டங்களையும் வரைகின்றன. குறிப்பாக அவை—

(1) சட்டங்களும், நீதித்தீர்ப்புகளும் சம்பந்தப்பட்ட ஆட்சித்துறைப் பகுதிகளில் பின்பற்றப்பட்டு நிறைவேற்றப் படுவதற்குத் துணைபுரிகின்றன.

(2) வட்டாரப் பொருளாதாரப் பண்பாட்டு முன்னேற்றத்திற்கும் பொதுப்பணிகள் வளர்ச்சிக்கும் திட்டங்களைத் தீட்டுகின்றன.

(3) வட்டாரத்தொடர்புடைய வரவு-செலவுத் திட்டங்களையும் நிதி அறிக்கைகளையும் ஆய்வு செய்து ஏற்றுக்கொள்கின்றன.

(4) அரசாங்கத்திற்குச் சொந்தமான உடைமைகளைக் காப்பாற்றுகின்றன.

(5) பொது ஒழுங்கைப் பராமரிக்கின்றன,

(6) குடி மக்கள், தேசிய சிறுபான்மை மக்களுடைய உரிமைகளைக் காப்பாற்றுவதுடன் எல்லோருக்கும் சம உரிமைகள் கிடைக்க உதவுகின்றன.

இந்த வட்டாரக் காங்கிரசுகள் அந்தந்தப் பகுதி மக்கள் கழகங்களின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றன. அங்ஙனமே, அவர்களைத் திரும்ப அழைத்துக் கொள்ளும் அதிகாரமும் அவைகளுக்குண்டு. வட்டாரக் காங்கிரசுகள் அவைகள் தொடர்புடைய வட்டாரக்கழகங்கள் எடுக்கும் முடிவுகளும், ஆணைகளும் பொருத்தமற்றவைகளாக இருக்குமானால் அவைகளை மாற்றவோ அல்லது விலக்கவோ அதிகாரமுடையவை. கவுண்டியும், அதற்கு மேல் மட்டத்திலுள்ள வட்டாரக் காங்கிரசுகள் அவைகளுக்குக் கீழ் மட்டத்திலுள்ள காங்கிரசுகளால் செய்யப்படும் தீர்மானங்கள், ஆணைகளை அவை பொருத்தமற்றவைகளாக இருக்குமானால் திருத்தியமைக்க அல்லது செல்லுபடியாகாமல் செய்ய அதிகாரம் பெற்றிருக்கின்றன. இந்தக் காங்கிரசுகளின் பிரதிநிதிகள் அவைகளைத் தேர்ந்தெடுத்தவர்களின் மேற்பார்வைக்குக் கட்டுப்பட்டவர்கள்.

**தேர்தல் முறை** (Method of Election)

அடித்தள நிலையில் தேர்தல்கள் நேர்முகமானவை. மேலே போகப்போக அவை மறைமுகமானவை. அடித்தள நிலையில் வாக்குகள் கைத்தூக்குதல் மூலமாகவோ அல்லது இரகசிய வாக்கெடுப்பு மூலமாகவோ நடைபெறுகின்றன. ஆனால்,

அதற்கு மேல்மட்டங்களில் எப்போதுமே இரகசிய வாக்கெடுப்பு முறைதான் பின்பற்றப்படுகிறது. வயதிற்கு வந்த ஆண் பெண் அனைவருக்கும் வாக்குரிமை வழங்கப் பட்டிருக்கிறது. ஆனால், வாக்காளர்கள் அனைவரும் கல்வி அறிவுடையவர்களாக இல்லை என்பது தெளிவு. கீழ்க்கடைக் கோடியிலுள்ள நிலையங்களுக்கு நடைபெறும் தேர்தல்களில் போட்டியிடும் வேட்பாளர்களுடைய தராதரங்களும், தகுதி களும் அக்கோடியிலுள்ள வாக்காளர்களுக்குத் தெரிந்திருக்கு மாதலால் அம்மட்டத்தில் தேர்தல்கள் நேரிடையாகவும் அதற்கு மேல்மட்டத்தில் நடைபெறும் தேர்தல்கள் யாவும் மறைமுகமாகவும் நடைபெறுகின்றன.

**வேட்பாளர்கள் தேர்வு** (Choice of Candidates)

சீனாவில் இது ஒரு முக்கியமான விஷயமாகக் கருதப் படுவதால், பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு யார் யாரை வேட்பாளர்களாக நியமிக்க வேண்டுமென்பதைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்கப்படுகிறது. இவ்வேலை இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதலாவது, குறிப்பிட்ட பகுதி யொன்றிற்குப் பிரதிநிதியாக விரும்பும் வேட்பாளர்களுக்கு இருக்கவேண்டிய தகுதிகள் பற்றியது. இரண்டாவது, அத் தகுதிகளுடைய வேட்பாளர்களிலிருந்து தகுதியானவரைத் தேர்ந்தெடுப்பது பற்றியது. திருப்திகரமான தேர்வு முக்கிய மாக மூன்று விஷயங்களைப்பொறுத்ததாகும். முதலாவது, வாக்காளர்களுக்கு வேட்பாளர்களைத்தெரிந்திருக்க வேண்டும். இரண்டாவதாக, பிரதிநிதிகளுக்கு இருக்கவேண்டிய தகுதிகள் என்னென்ன என்பதில் அவர்களுக்குத் தெளிவிருக்கவேண்டும். மூன்றாவதாக, ஒவ்வொரு வேட்பாளருடனும் சுதந்திரமாகக் கருத்துகளைப் பறிமாறிக் கொள்வதன் வாயிலாக வேட் பாளரின் பொருத்தமுடைமையை முடிவுசெய்யும் வாய்ப் பிருக்கவேண்டும். மேற்சொல்லப்பட்ட இந்த வாய்ப்பு களெல்லாம் கடைக்கோடியிலுள்ள நிலையங்களுக்குப் போட்டி யிடும் வேட்பாளர்கள் விஷயத்தில் வாக்காளர்களுக்கு இருக்கு மென்பதும், ஆனால், மேல்மட்டங்களிலுள்ள நிலையங்களுக்குப் போட்டியிட விரும்புகிறவர்கள் விஷயத்தில் இருப்பதற்கு வாய்ப்பில்லையென்பதும் எவரும் எளிதில் அறியக்கூடியதாகும். ஆகையால்தான், சீனாவில் அடிமட்டந்தவிர, மேல்மட்டத்தில் தேர்தல்கள் மறைமுகமுறையடிப்படையில் நடைபெறு கின்றன. எனினும், கல்வியறிவும், செய்திப்போக்குவரத்துச் சாதனங்களும் அதிகரிக்கும்போது எல்லாமட்டங்களிலும்

நேர்முகத்தேர்தல் நடத்தப்படுவது எதிர்பார்க்கக்கூடிய தாகும்.

ஒவ்வொரு சியாங் அல்லது நகரத்திலும் சிறந்த பிரதிநிதியாக ஆகக்கூடியவரின் தரங்கள் கூட்டாகத் தீர்மானிக்கப் படுகின்றன. அதன்பிறகு கம்யூனிஸ்டுக்கட்சி, இதரக் கட்சிகள், மக்கள் நிறுவனங்களெல்லாம் சேர்ந்தோ அல்லது தனித்தனியாகவோ வேட்பாளர்கள் பட்டியல்களை அளிக்கின்றன. தனிப்பட்ட வாக்காளரும்கூடத் தான் விரும்பும் வேட்பாளரின் பெயரைப் பரிந்துரைக்கலாம்.

இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட வேட்பாளர்களின் எண்ணிக்கையும், எத்தனை இடங்களுக்குத் தேர்தல் நடைபெற வேண்டுமோ அத்தனை இடங்களின் மொத்த எண்ணிக்கையும் சமமாக இருக்கும். அதன்பிறகு வாக்கெடுப்பு நடைபெறுகிறது. வாக்காளரொருவர் கூட்டுப் பட்டியலுக்கோ (Joint List), தனிப்பட்டியலுக்கோ (Seperate List) வாக்களிக்கலாம். எந்தப் பட்டியலிலும் இடம்பெருது, முறைப்படி முன்மொழியப்படாதவருக்குக்கூட அவ்வாக்காளர் வாக்களிக்கலாம். வாக்குரிமை பதினெட்டு வயதான ஆண், பெண்கள், தொழிலாளர்கள், குடியானவர்கள் ஆகிய சோஷலிச சமுதாயத்தைச் சமைப்பதில் சம்மதமுடைய அனைவருக்கும் தரப்படுகிறது. இவர்கள்தான் நவசீனவின் தலைவர்கள். வியாபாரிகளுக்கும், தேசிய முதலாளிகளுக்கும் வாக்குரிமை தரப்படுகிறது. தேசிய சிறுபான்மையினருக்கும், படைகளில் இருப்பவர்களுக்கும், அயல் நாடுகளில் வாழும் சீனக்குடிமக்களுக்கும் வாக்குரிமை தரப்படுகிறது. இவர்களெல்லாம் தேர்தலுக்கும் நிற்க உரிமை பெறுகிருர்கள். மக்கள்தொகையில் மூன்று விழுக்காட்டினராக இருந்த முன்னுள் நிலப்பிரபுக்களுக்கும், நடுத்தர வகுப்பு முதலாளிகளுக்கும் இவ்வுரிமை 1954ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தல்களின்போது மறுக்கப்பட்டிருந்தது என்பதை இங்கு குறிப்பிடுவது அவசியமாகிறது. ஆனல், இப்போது அத்தகைய வர்க்கத்தினர் இல்லாததால் எல்லோருக்குமே வாக்குரிமை தரப்படுகிறதெனலாம்.

**பிரதிநிதித்துவ அடிப்படை:** பலவகைப்பட்ட வகுப்புகள் அல்லது வட்டாரங்களுக்குக் காங்கிரசுகளில் தரப்படும் பிரதிநிதித்துவம் மக்கள்தொகை விகித அடிப்படையில் இல்லாமல் ஆங்காங்குள்ள நிலைமைகளுக்குத் தகுந்தாற்போல சரி

செய்யப்படுகிறது. எவ்வாறு அது சரிசெய்யப்படுகிறது என்பதைக் கீழே காணலாம்.

(அ) மக்கள்தொகை அடிப்படையிலான பிரதிநிதிகளின் விகிதம் நகர்ப்புறங்களுக்கும், கிராமப்புறங்களுக்குமிடையே மாறுபடுகிறது. கவுண்டி காங்கிரசுகளுக்கு நகர்ப்புறங்கள் 500 பேர்களுக்கு ஒரு பிரதிநிதி வீதமும் கிராமப்புறங்கள் 2,000 பேர்களுக்கு ஒரு பிரதிநிதி வீதமும் அனுப்புகின்றன. மாநிலமட்டத்தில் நகர்ப்புறங்களும், கிராமப்புறங்களும் முறையே 20,000 பேர்களுக்கு ஒரு பிரதிநிதியையும், கிராமப்புறங்கள் 2,00,000 பேர்களுக்கு ஒரு பிரதிநிதியையும் அனுப்புகின்றன. தேசிய மக்கள் காங்கிரசுக்கு நகர்ப்புறத்திலிருந்து 1,00,000 பேர்களுக்கு ஒருவரும், கிராமப்புறங்களிலிருந்து 8,00,000 பேர்களுக்கு ஒருவரும் அனுப்பப்படுகின்றனர். இந்த முறை, நவசீனாவின் மாற்றத்திற்குத் தலைமை வகிக்கும். ஆனால், அதே சமயத்தில் சமுதாயத்தில் மிகப்பெரிய வகுப்பினராக இல்லாதிருக்கும்-தொழிலாளர்களுக்கு சரியான பிரதிநிதித்துவம் கிடைக்கும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டதாகும். குடியானவர்கள் சீனாவின் மொத்த மக்கள்தொகையில் 80 விழுக்காடாக இருக்கிறார்கள். இவர்களும் தொழிலாளர்களும் சமமாக நடத்தப்படுவார்களானால், தொழில்துறைப் பணியாளர்களுக்கு, அவர்களுடைய அரசியல் அந்தஸ்த்திற்கும், பொருளாதார ஆக்கப்பணியில் அவர்கள் ஈடுபட்டிருக்கும் ஆர்வத்திற்கும் இயைய பிரதிநிதித்துவம் இல்லாமற் போகக் கூடும். அதனால் சோஷலிச வழிகளிலான பொருளாதார வளர்ச்சி விரைவில் ஏற்படாமல் போகலாம்.

(ஆ) தேசிய சிறுபான்மையினர் நாட்டின் மக்கள்தொகையில் பதினான்கில் ஒரு பங்கினராவர். அவர்களுக்குரியவகையில் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு தனி ஏற்பாடுகள் செய்யப்பட்டிருப்பதால் தேசிய மக்கள் காங்கிரசில் அவர்களுக்குத் தரப்பட்டிருக்கும் பிரதிநிதித்துவம் ஏழில் ஒரு பங்கு முதல் எட்டில் ஒரு பங்கு வரை இருக்கிறது; படைகளுக்கு காங்கிரசில் ஐந்து விழுக்காட்டு இடங்களும், அயல் நாடுகளில் வாழும் சீனக் குடிமக்களுக்கு 2.5 விழுக்காட்டு இடங்களும் ஒதுக்கப்பட்டிருக்கின்றன.

(இ) அங்ஙனமே, எண்ணிக்கை அடிப்படையில் மிகக் குறைவாகவுள்ள, ஆனால், பொருளாதாரத் துறையில்

சிறப்புப்பணியாற்றும் தேசிய முதலாளிகளுக்கு மக்கள் தொகை விகிதாசாரப்படி பிரதிநிதித்துவம் தரப்படுமானல் அது அவர்களுக்கு நீதி செய்ததாகாது.

(ஈ) ஜன நெருக்கடி குறைவாகவுள்ள பகுதிகளின் நிலைமையும் தகுந்தவாறு பரிசீலனை செய்யப்பட்டுள்ளது. அதன்படி எந்த மாநிலத்திற்கும் தேசிய மக்கள் காங்கிரசில் மூன்றிற்கும் குறைவான பிரதிநிதிகள் இல்லாதவாறு இருப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சான்ருக மக்கள் தொகை அடிப்படையில் 90,000 பேர்களே உடைய நிங்சியா (Ninghsia) மாநிலம் ஒரேயொரு பிரதிநிதியை அனுப்பும் உரிமையுடையது. எனினும் அது மூன்று உறுப்பினர்களை அனுப்புவதற்கு இந்த ஏற்பாட்டின்படி முடிகிறது.

# 8. வட்டார மக்கள் கழகங்கள்
## (Local People's Councils)

வட்டார மக்கள் கழகங்கள், தேசிய மட்டத்திலுள்ள அரசுக்கழகத்தின் மறுபதிப்பாக வட்டாரங்களிலிருப்பவையாகும். இவைகள் சீனாவின் பல்வேறு பிரதேசங்களிலுமுள்ள அமைச்சரவைகள் என்பதே உண்மையான நிலைமை. இவைகள் அந்தந்த வட்டாரங்களிலுள்ள மக்கள் காங்கிரசுகளின் நிர்வாக நிறுவனங்களாகும். (Executive Organs) அங்ஙனமே சம்பந்தப்பட்டப் பகுதிகளில் இவை அரசின் ஆட்சித்துறை நிறுவனங்களாகும் (Administrative Organs of State). இக்கழகங்களின் பதவிக்காலம் அந்தந்தப் பகுதிகளிலுள்ள மக்கள் காங்கிரசுகளின் பதவிக்காலம் போன்றதே. ஒவ்வொரு கழகத்திலும் தலைவரொருவரும், துணைத்தலைவர்களும் உறுப்பினர்களும் இருக்கிறார்கள். மாநிலங்களின் தலைவர்கள் ஆளுநர்களும் என்றும், துணைத்தலைவர்கள் துணை-ஆளுநர்களென்றும் அழைக்கப்படுகிறார்கள். அங்ஙனமே நகரப் பகுதிகளிலுள்ளவர்கள் மேயர்கள், துணைமேயர்கள் என்றும், கவுண்டித் தலைவர்களென்றும், துணைக்கவுண்டித் தலைவர்களென்றும் அழைக்கப்படுகிறார்கள். வட்டாரக் கழகத்தின் பணிகளும், அதிகாரங்களும் அரசியலமைப்புச்சட்டத்தின் 64, 65ஆம் விதிகளில் வரையறை செய்யப்பட்டிருக்கின்றன. அந்த விதிகளின்படி அதன் கடமைகளும், அதிகாரங்களும் பின்வருமாறு சொல்லப்படலாம் :

(1) சட்டத்தினால் சொல்லப்பட்டிருக்கின்ற அதிகார வரம்பிற்குட்பட்டு சம்பந்தப்பட்ட பகுதியை நிர்வகித்தல்;

(2) காங்கிரசால் செய்யப்பட்ட முடிவுகளைச் செயற்படுத்தல்.

(3) உயர்மட்டங்களிலுள்ள ஆட்சித்துறை நிறுவனங்கள் செய்யும் முடிவுகளையும், பிறப்பிக்கும் ஆணைகளையும் செயற்படுத்தல்.

(4) சட்டத்தினால் வரையறை செய்யப்பட்டுள்ளவாறு முடிவுகளையும் ஆணைகளையும் பிறப்பித்தல்.

(5) மக்கள் கழகத்தினுடையவும், இதரத் துறைகளினுடையவும் வேலைகளைக் கீழ்நிலையிலுள்ள ஏஜென்சிகளைச் செய்யுமாறு பணித்தல்;

(6) கீழ்மட்டங்களிலுள்ள காங்கிரசுகளின் பொருத்தமற்ற முடிவுகளையும், ஆணைகளையும் நிறுத்தி வைத்தல்;

(7) கீழ்மட்டங்களிலுள்ள கழகங்கள், துறைகளின் பொருத்தமற்ற தீர்மானங்களையும், ஆணைகளையும் திருத்தி அமைத்தல் அல்லது விலக்கி விடுதல்.

வட்டாரமக்கள் கழகங்கள் மக்கள் காங்கிரசுகளுக்குப் பொறுப்புடையவை. அதேபோல அவைகளுக்கு மேல் மட்டத்திலுள்ள ஆட்சித்துறை நிறுவனங்களுக்கும் பொறுப்புடையவை. கடைசியாக அவை தேசிய அரசுக்கழகத்திற்குக் கட்டுப்பட்டு, அது காட்டும் வழியில் நடக்க வேண்டியவை. மேற்கண்டவாறு வட்டார மக்கள் கழகங்கள் மூன்று வகையால் கட்டுப்படுத்தப்படுகின்றன. இந்த ஏற்பாடு, மூன்றும் சுமுகமாக இருக்கும்வரை திறமையாகச் செயலாற்றவல்லவை. பூசல் ஏற்படுமானால் தீவிரமான சங்கடங்கள் தோன்றக்கூடும். இவ்வமைப்பிலுள்ள முக்கியமான குறைபாடு, ஏதாவதொரு கீழ்மட்டத்திலுள்ள காங்கிரசிற்கும், கழகத்திற்குமிடையே கருத்து வேறுபாடு தோன்றுமானால், கழகம் காங்கிரசுக்குக் கட்டுப்பட்டு நடக்காமல் அதற்கு மேல் மட்டத்திலுள்ள கழகத்திற்கு முறையிட்டுக் கொள்வதன் வாயிலாக அதைப்புறக்கணிக்கவியலும். இவ்வாறு தேசிய அரசுக் கழகம்வரை இம்முறையீடு செல்ல முடியும். இதனால் சம்பந்தப்பட்ட காங்கிரசின் சுதந்திரம் பறிபோகக்கூடும் என்று தோன்றுகிறது. மேலும், அரசியலமைப்புச் சட்டம், வட்டார காங்கிரசுகளின் கூட்டங்களைப் பற்றி எதுவும் குறிப்பிடாமல் இருப்பதால், இக்காங்கிரசுகள் கூட்டப்படாமலேயே கழகங்கள் நிர்வாகத்தை நடத்தவியலும் என்றும் தோன்றுகிறது. ஆனால், இத்தகையச் சந்தர்ப்பங்கள் ஏற்படுமென்று பொதுவாகச் சொல்வதற்கில்லை. அரசியலமைப்புச் சட்டம் சிக்கலற்றதாகவும், எளியதாகவுமிருப்ப

தால் இத்தகையச் சூழ்நிலைகளை எளிதில் கற்பனை செய்து கொள்ளலாம். ஆனால், அந்நாட்டில் காணப்படும் ஒற்றுமையும், மனத்திட்பமும் விரைவான முன்னேற்றத்தை ஏற்படுத்துவதற்குச் சாதகமாக இருப்பதால் நிகழ்முறையில் பொதுவாக எதிர்நோக்கப்படுகின்ற சூழ்நிலைகள் ஏற்படமாட்டாவெனத் திடமாகச் சொல்லலாம். மேலும், இப்போதிருக்கின்ற அரசியலமைப்புச் சட்டம் தற்காலிகமானதென்று முன்னமேயே தெளிவாக்கப்பட்டிருப்பதால், இதுவரை அதை நடைமுறைப்படுத்தியதால் கிட்டியுள்ள அனுபவங்கள அடிப்படையில் தேவையான மாற்றங்கள் அல்லது சீர்திருத்தங்களொடு கூடிய அரசியலமைப்புச் சட்டத்தைத் தயாரித்துக் கொள்வதன் மூலமாக மேற்சொல்லப்பட்டுள்ள குறைபாடுகளைப் போக்கிக் கொள்ளலாம்.

# 9. நீதியும் நீதிமன்றங்களும்

நீதித்துறையும், நீதிமன்றங்களும் தனிப்பட்டோர் உரிமைகளைக் காப்பாற்றும் சாதனங்களாகக் கருதப்படாமல் புரட்சிகரமான சமுதாய நோக்கங்களை அடையவும், புரட்சி நோக்கங்கொண்டவர்களை எதிர்க்கும் பிற்போக்காளர்களை நசுக்கவும் உதவும் சாதனங்களாக சீனக்கம்யூனிஸ்டுக் கட்சியினால் கருதப்பட்டு வந்திருக்கின்றன. 1949ஆம் ஆண்டு மக்கள் ஜனநாயக சர்வாதிகாரம் பற்றிய கட்டுரையொன்றில் மோ-சே-துங் குறிப்பிட்டதாவது: 'இராணுவம்,காவல்துறை, நீதிமன்றங்கள் முதலான எல்லா அரசு சாதனங்களும் எதிர்ப்போரை நசுக்கி பூண்டோடு ஒழிக்கும் கருவிகளாகும். இம்முறை வன்முறையேயாகும்'.[1] 1954ஆம் ஆண்டில் அரசியலமைப்புச்சட்டம் இயற்றப்பட்டு ஏற்றுக்கொள்ளப் படும்வரை நீதிப்பரிபாலனம் வன்முறையில்தான் இருந்தது. 1949-1952ஆம் ஆண்டுகளில் கம்யூனிஸ்டுக்கட்சி அதன் நிலைமையைப் பலப்படுத்திக்கொள்ளும் வகையில் எடுத்துக் கொண்ட நிலச்சீர்திருத்தத்தை சீராக நிறைவேற்று வதற்கும், திருப்திகரமான நீதிமுறையை அமைப்பதற்கும் பல நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தது. அவைகளிலொன்று, நாட்டுப்புறங்களில் பெருநிலக்கிழார்களுக்கெதிராக நடத்தப் பட்ட இயக்கமாகும். இந்த இயக்கம் பெருநிலக்கிழார்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்கு வதற்கென பல 'மக்கள் நீதிமன்றங்களை' (People's Tribunals) ஏற்படுத்தியது.

---

[1] Selected Readings from the works of Mao-Tse-Tung (Peking Foreign Languages Press, 1967) Page 309.

இந்நீதிமன்றங்கள் ஊர் ஊராகச் சுற்றி பெருநிலக் கிழார்களுக்கும், இதர நிலச்சொந்தக்காரர்களுக்கும் மரண தண்டனை அளித்து அதை உடனடியாகவும் நிறைவேற்றின. இந்நீதிமன்றங்களெல்லாம் முறைப்படியான நீதிமன்றங்களாகக் கருதப்படமுடியாது. 1954ஆம் ஆண்டு அரசியலமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்தபோது முறைப்படி நீதித்துறைமுறை ஏற்படுத்தப்பட்டது. அரசியலமைப்புச் சட்டத்தின் 78ஆம் விதி நீதிமன்றங்களின் சுதந்திரத்தையும், மூன்றும் பகுதி குடிமக்களின் உரிமைகளை எடுத்துரைத்து அவற்றின் பாதுகாப்புக்கு அரசு உத்திரவாதமளிக்கும் என்று குறிப்பிட்டாலும், நீதிமன்றங்கள் அரசாங்கத்தால் இயற்றப்படும் சட்டங்களை அரசியல் சட்ட சம்மதமானவை என்று அறிவிப்பதற்கு அதிகாரந்தரப்படவில்லை. வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிக்கும் அதிகாரம் நீதிமன்றங்களுக்கு வழங்கப்பட்டாலும் கம்யூனிஸ்டுக்கட்சியின் பொதுக் கொள்கைகளுக்கேற்பதான் அவ்வதிகாரஞ் செலுத்தப்பட வேண்டுமென்று தெளிவாக்கப்பட்டுள்ளது. பெரும்பாலான வழக்குகள் நீதித்துறையோடு தொடர்பில்லாத ஆட்சித் துறையைச் சார்ந்த நிலையங்களாலேயே பைசல் செய்யப்படுகின்றன. சொத்து அடிப்படையில் ஏற்படும் சாதாரண சிவில் வழக்குகள் அல்லது விவாகரத்து போன்ற வழக்குகள் 'சமரசக் குழுக்க'ளால் (Conciliation Committees) கவனிக்கப்படுகின்றன. இக்குழுக்களின் முயற்சிகள் தோல்வியுற்றால்தான் வழக்குகள் நீதிமன்றங்களுக்குச் செல்லுகின்றன. இனி நீதிமன்றங்களின் அமைப்பைப் பார்ப்போம்.

### நீதிமன்றங்களும் அவற்றின் அமைப்பும்

முதன்முதலில் கூடிய தேசிய மக்கள் காங்கிரஸ் இரண்டு அமைப்புச்சட்டங்களை இயற்றியது. அச்சட்டங்களின் அடிப்படையில் மக்கள் நீதிமன்றங்களும் (People's Courts) நீதித்துறை பின்பற்றவேண்டிய நடைமுறைகளும், மக்கள் வழக்குரைஞரகம் (People's Procurate) சம்பந்தப்பட்ட இதர அம்சங்களும் ஏற்படுத்தப்பட்டன.

**மக்கள் நீதிமன்றங்கள்:** நீதியதிகாரம், உச்சமக்கள் நீதிமன்றம், வட்டாரமக்கள் நீதிமன்றங்கள், இதர தனிமக்கள் நீதிமன்றங்களால் செலுத்தப்படுகிறது. உச்சமக்கள் நீதிமன்றத்தின் தலைவர் 27 (7)ஆம் விதிப்படி தேசிய மக்கள்

காங்கிரசால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அதனாலேயே பதவியி லிருந்தும் அவர் நீக்கப்படக்கூடியவர். கவுண்டியும், அதற்கு மேல் நிலையிலுமுள்ள வட்டாரங்களிலுள்ள மக்கள் நீதிமன்றங் களின் தலைவர்கள் அந்தந்த வட்டாரமக்கள் காங்கிரஸ்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். 14ஆம் விதிப்படி உச்சமக்கள் நீதிமன்றத்தலைவரும், இதர மக்கள் நீதிமன்றங்களின் தலைவர் களும் நான்காண்டுக் காலத்திற்கு பதவியிலிருப்பார்கள்.

மக்கள் நீதிமன்றங்களில் நீதி நடைமுறைகளைப் பொறுத்த மட்டில் மக்கள் அறங்கூறுநர் (People's assessors System) முறை பின்பற்றப்படுகிறது. அறங்கூறுநர்கள் பொதுமக்களால் அவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இருபத்து மூன்று வயதான வாக்குரிமையுடைய, தேர்தலுக்கு நிற்கத் தகுதியுடைய எவரும் அறங்கூறுநராகத் தேர்ந்தெடுக்கப்பட லாம். எனவே, மிகப்பெருமளவில் மக்கள் நீதித்துறை நடவடிக்கைகளில் பங்கெடுத்துக்கொள்ள முடிவதோடு நீதி மன்றங்களின் வேலைகளையும் மேற்பார்வை செய்யமுடிகிறது.

சட்டத்தினால் குறிப்பாகச் சொல்லப்படாதவரை வழக்கு விசாரணை பொதுமக்கள் முன்னிலையில் நடைபெறுகிறது: வழக்கில் குற்றஞ்சாட்டப்பட்டவர் தன் கட்சியை எடுத் துரைத்து வாதாடுவதற்கு உரிமை தரப்படுகிறார். வழக் குரைஞரோ, நண்பர்களோ அல்லது உறவினர்களோ குற்றவாளி சார்பில் வாதாடலாம். நீதி வழங்குவதில் சட்டத்திற்குட்பட்டு நீதிமன்றங்கள் சுதந்திரமானவை யென்றும் அவைகளின் பணிகளில் குறுக்கிடுவதோ அல்லது அணுகுவதோ கடுமையாகத் தடை செய்யப்பட்டிருக்கிற தென்றும் சொல்லப்படுகிறது.

உச்சமக்கள் நீதிமன்றந்தான் (Supreme People's Court) நீதித்துறையிலுள்ள இறுதி நிறுவனமாகும். அது வட்டார, தனி நீதிமன்றங்களின் வேலையைக் கண்காணிக்கிறது. அது தேசிய மக்கள் காங்கிரசுக்குப் பொறுப்புடையதாக இருப் பதோடு, அதற்கு அறிக்கைகளையும் அவ்வப்போது அனுப்ப வேண்டும். இதேபோல கீழ்மட்டங்களிலுள்ள நீதிமன்றங் களெல்லாம் கண்காணிக்கப்படுவதோடு, அவைகள் அந்தந்தப் பகுதியிலுள்ள மக்கள் காங்கிரசுக்குப்பொறுப்புடையவை யாகும்.

சீனமக்கள் குடியரசிலுள்ள நீதிதுறையமைப்பைப் பின்வருமாறு சுருக்கமாகக்கூறலாம். அடிமட்டத்தில் இருக்கும் நீதிமன்றங்கள் ஆரம்ப நீதிமன்றங்களாகும் (Primary Courts). இவைகள் கவுண்டி அல்லது அதற்குச் சமமான பகுதியில் அமைக்கப்பட்டு செயல்படுகின்றன. அவைகளுக்கும் மேல் நடுநீதிமன்றங்கள் (Intermediate Courts) அமைக்கப் பட்டுள்ளன. இந்த நீதிமன்றங்கள் பல கவுண்டிகள் அல்லது சௌகள் இணைக்கப்பட்ட கூட்டமைப்புகளுக்கானவை. இவைகளுக்கு அடுத்தபடியாக மாநில மட்டத்தில் உயர்நீதி மன்றங்களும், இவை எல்லாவற்றிற்கும் மேல் உச்சநீதி மன்றமும் இருக்கின்றன. வழக்குகளில் பெரும்பாலானவை ஆரம்ப நீதிமன்றங்களில் தொடங்கி மேல்முறையீட்டடிப் படையில் மேல் மட்டங்களிலுள்ள நீதிமன்றங்களுக்குச் செல்கின்றன. வழக்கு முதல் முதலாக விசாரிக்கப்படும்பொழுது அறங்கூறுநர்களின் துணைகொண்டு கேட்கப்படுகின்றன.

இங்கு நாம் முக்கியமாகத் தெரிந்துகொள்ள வேண்டியதென்னவெனில், சீனுவில் இதரநாடுகளில் பின் பற்றப்படும் நீதிமுறை பின்பற்றப்படவில்லையென்பதாகும். தேசிய மட்டத்திலிருந்து கவுண்டி மட்டம்வரை நீதி மன்றங்கள் அமைக்கப்பட்டிருந்தாலும், அவையனைத்தும் 1959ஆம் ஆண்டுவரை நீதி அமைச்சரகத்தின் கட்டுப் பாட்டிலும், அதற்குப்பிறகு கம்யூனிஸ்டுக் கட்சியின் நிறுவனங் களான அரசியல், நீதித்துறைகளுக்கு கட்டுப்பட்டு அவை களின் விருப்பங்கள் அல்லது உத்தரவுகளுக்கிசைய நடக்க வேண்டியவைகளாக இருக்கின்றன. இந்த நிறுவனங்கள் வழக்குகள் பற்றிய தீர்ப்புக்களை முன் கூட்டியே வழங்கிவிடு வதால் அந்தத் தீர்ப்புக்களையே தங்கள் தீர்ப்புக்களாக நீதி மன்றங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டியவைகளாக இருப் பதால், அங்கு நீதித்துறை சுதந்திரம் இல்லையென்பது தெளி வாகும்.

நீதித்துறையோடுத் தொடர்புடைய பிறிதொரு அமைப்பு மக்கள் வழக்குரைஞரகமாகும் (People's Procurate). இந்நிறுவனத்தில் அங்கம் வகிக்கும் வழக்குரைஞர்கள் அரசு வழக்குரைஞராவார்கள். இவர்கள் அரசுக்கழகங்களும் பல்வேறு ஆட்சித்துறைகளும் சட்டத்தை சரியாகப் பின்பற்று கின்றனவா என்பதைக் கவனிக்கிறார்கள். இத்தகைய வழக்குரைஞரகம் உச்சநீதிமன்றம் முதல் ஆரம்ப நீதிமன்றம்

வரை ஒவ்வொரு நீதிமன்றத்திற்குமுண்டு. இதன் தலைவர், சம்பந்தப்பட்டப் பகுதியிலுள்ள மக்கள் காங்கிரசால் நியமிக்கப்படுகிறார். இத்தலைவரின் பதவிக்காலம், பொறுப்புகளெல்லாம் நீதிமன்றத் தலைவருக்குள்ளவை போன்றே ஏற்படுத்தப்பட்டுள்ளன. எனவே, இந்நிறுவனமும் கட்சிக்குக் கட்டுப்பட்டுத்தான் செயல்படமுடியும் என்பது விளங்கும்.

# 10. சீனக் கம்யூனிஸ்டுக் கட்சி

**முன்னுரை**

அரசியல் அதிகாரமனைத்தையும் கம்யூனிஸ்டுக் கட்சியே செலுத்துவதை கம்யூனிசக் கொள்கை சரியெனக் கூறுகிறது. இந்த அடிப்படையில்தான் கம்யூனிஸ்டு நாடுகளில் அரசாங்கங்கள் அமைக்கப்பட்டுச் செயல்பட்டு வருகின்றன. பொதுவுடைமைத் தத்துவத்தின் தந்தையென்று போற்றப் படும் கார்ல்மார்க்சைப் (Karl Marx) பொறுத்தவரையிலும் உழைப்பாளி வர்க்க எதேச்சதிகார (Proletariat dictatorship) முதலாளித்துவத்திற்கும் கம்யூனிசத்திற்கும் இடைப்பட்ட நிலைமையாகும். இவ்வெதேச்சதிகாரத்திற்கு அறிவாற்றல் மிக்க தலைமை தேவையென ரஷ்யப் புரட்சியின் தலைவரான லெனின் கூறினார். இந்த அடிப்படையில்தான் ரஷ்யாவில் அரசாங்கம் இயங்கி வருகிறது. சீனாவிலுள்ள உழைப்பாளி வர்க்க எதேச்சதிகாரம் 'மக்கள் ஜனநாயக எதேச்சதிகாரம்' (People's democratic dictatorship) என்று சொல்லப்படுகிறது. இதுதான் உண்மையான ஜனநாயகம். ஏனெனில் பெரும் பான்மையான மக்கள் தொழிலாளர்களாகவும், குடியானவர் களாகவும், மிகச் சிறுபான்மையோர் பிற்போக்குவாதி களாகவும் இருக்கிறார்கள். இந்தச் சிறுபான்மையோரைப் பெரும்பான்மையோராக இருப்போர் ஆட்சி செய்கிறார்கள்.

சீனக் கம்யூனிஸ்டுக்கட்சியின் முக்கிய நோக்கம் அரசற்ற, வகுப்பற்ற சமுதாயமொன்றை ஏற்படுத்துவதாகும். ஏனெனில், உழைப்பாளிவர்க்க எதேச்சதிகாரம் உழைப்பாளி களுக்கு முன்னோடியாக இருந்து, மார்க்ஸ், லெனின் போன்றோரின் கருத்துகளைத் தெரிந்து வைத்திருப்பதாலும், அமைப்பு முறையில் சிறப்பாக இருப்பதாலும் எல்லா

மக்களுடைய தேவைகளையும் நன்கு உணர்ந்திருப்பதாலும் சிறப்புடையதாகவுள்ள உழைப்பாளிவர்க்கக் கட்சியான சீனக்கம்யூனிஸ்டுக் கட்சியினுல் தலைமையேற்று நடத்தப்பட வேண்டும். அதாவது கட்சியினுடைய நன்மைகளே மக்களுடைய நன்மைகளாகும் என்று சொல்லப்படுகிறது.

இருப்பினும் சீனக்கம்யூனிஸ்டுக்கட்சி தன்னை ஆட்சித் துறையின் ஓர் அங்கமாகக் கருதாமல் தலைமையேற்கும் நிறுவனமாகக் கருதுகிறது. கொள்கைகளை உருவாக்கித் தருகிறது. அவைகளின் நிறைவேற்றத்தை அரசாங்கத்திடம் விட்டு விட்டு மேற்பார்வை செய்கிறது.

சீனுவில் சமூகமும், அரசும் கொள்கைகள் பற்றி எடுக்கின்ற முடிவுகளுக்கெல்லாம் கம்யூனிஸ்டுக் கட்சிதான் வழிகாட்டுவதாக அமைந்து ஆதரவு நல்குகிறது. நாட்டி லுள்ள கட்சி, அரசாங்கம், இராணுவம் ஆகிய மிகவுயர்ந்த நிலையங்களிலுள்ள தலைவர்கள் பல்வேறு இயக்குநர் அகங் களோடு தொடர்புடையவர்களாக இருந்து, கட்சியின் கொள்கைகளை நிறைவேற்றப்படுமாறு செய்கின்றூர்கள். எனவே, கட்சியின் மத்தியக் குழுவில் எத்தகைய நிறுவன அமைப்புகளிருக்கின்றனவோ அத்தகைய அரசாங்க நிறுவனங்களிருக்கின்றன. அமைச்சரவையில் அங்கம் வகிக்கும் அனைவரும் கட்சியின் மத்தியக் குழுவிலும் அங்கத்தினர்களாக இருக்கிறூர்கள். மத்திய அல்லது மேல்மட்டத்திற்கும் கீழே யுள்ள பலமட்டங்களிலும் கட்சியமைப்பு எவ்வாறுள்ளதோ அவ்வாறே அரசாங்க அதிகாரவர்க்க நிறுவனங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. கட்சியில் உறுப்பினர்களாக இருப்பவர்கள் அரசாங்க நிறுவனங்களையும் அதிகாரிகளையும் கட்டுப் படுத்துவதால் கட்சியினுடைய கட்டளைகளை அரசாங்கம் ஏற்று நடத்தவேண்டியதாக இருக்கிறது.

**மோ-சே-துங்கின் சிந்தனை :** கம்யூனிஸ்டுக்கட்சியின் தலைவர் களான மார்க்ஸ், லெனின் போன்று மோ-சே-துங்கும் ஒரு பெருந்தலைவர் என்று சீன கம்யூனிஸ்டுக் கட்சி கருது கிறது. சீனப்புரட்சியின்போது கிடைத்த அனுபவத்தில் மார்க்ஸ் லெனின் போன்றோர் கருத்துக்களை மோ-சே-துங் இணைத்தார். மார்க்ஸ், ஏஞ்சல் (Engels) இருவரும் உழைப் பாளி வர்க்க புரட்சிக்குத் தேவையானவற்றை ஏற்படுத்தித் தந்தனர். லெனினும், ஸ்டாலினும் சோஷலிசப் புரட்சிக்கு ரஷியநாட்டில் வெற்றித் தேடித்தந்தார்கள். மோ-சே-துங்

உலகமுழுவதும் புரட்சி பரவவும், வெற்றி ஏற்படவும் முதலாளித்துவமும் ஏகாதிபத்தியமும் ஒழியவும் பாடுபடுகின்றார்.

மோ சே-துங்கினுடையச் சிந்தனைகள் 1945ஆம் ஆண்டு சீனக்கம்யூனிஸ்டுக் கட்சியின் அரசியலமைப்பில் தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. அதற்குப்பிறகு அச்சிந்தனைகள் கம்யூனிஸ்டுக் கட்சியின் அரசியலமைப்பிலிருந்து நீக்கப் பட்டிருந்தபோதிலும், பிறகு 1969ஆம் ஆண்டில் ஒன்பதாவது கட்சிக் காங்கிரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, மறுபடியும் அவைகள் வற்புறுத்தப்பட்டு வருகின்றன. எனவே, மோ சிறந்தவொரு சுயமான சிந்தனையாளர்-தத்துவவாதி என்றும் கடந்த காலத்தில் வாழ்ந்த சிந்தனையாளர்களின் உயிருடன் இருக்கும் வாரிசு என்றும் போற்றப்படுகிறார். சீனாவில் ஏற்பட்ட பண்பாட்டுப் புரட்சியின் (Cultural Revolution) போது கட்சிக்கும் மக்களுக்கும் அப்பாற்பட்ட உயர்ந்த நிலையில் கடவுளென மோ-சே-துங்கும், கடவுளின் வாக்குகளென அவரது சிந்தனைகளும் வணங்கி ஏற்றுக்கொள்ளப் பட்டன. இப்போதும் அத்தகைய நிலையே நீடித்து வருகிறது.

மோ-சே-துங்கைப்பற்றிய பீகிங்கின் இக்கருத்துகள் மிகைப்படுத்தப்பட்டவைகளாகும். மோவின் கருத்துக் களாகச் சொல்லில் பிரபலப்படுத்தப்பட்டு வரும் கருத்துகள் லெனின், ஸ்டாலின் போன்ற கம்யூனிசக் கொள்கையாளர் களால் முன்பே எடுத்துரைக்கப்பட்டவைகளேயாகும். உண்மைநிலை என்னவெனில் அக்கருத்துகளில் சிலவற்றை மாற்றி கூறியிருக்கிறார் அல்லது வற்புறுத்தி எடுத்துச் சொல்லியிருக்கிறார் என்பதேயாகும். எனவே, மோ முதல்தர மான சுயசிந்தனையாளர் என்பது சரியானதல்ல. ஆனால், மோ, கொரில்லா இயக்கத்தை ஆரம்பித்து, அதற்கு காரிய சாத்தியமான தலைமையொன்றைத் தந்து, கிராமப்புற சூழ் நிலைகளுக்கேற்ப அவ்வியக்கம் செயல் புரியுமாறு செய்த மட்டில் சிறந்ததொரு தலைவராகக் கருதப்படலாம்.

சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால் மோ தத்துவ (Maoism) மென்பது அவருடைய வாழ்க்கை அனுபவங்களி லிருந்து பெறப்பட்ட படிப்பினைகளால் தோன்றிய கொள்கை களின் திரட்சியெனலாம். மேலை நாடுகளால் அடக்கப்பட்டுத் தலை குனியுமாறு செய்யப்பட்டதனால் உணர்வு பெற்ற அவர், சீனதேசியத்தை ஆதரிக்கவேண்டியதாயிற்று.' மக்களுடையச்

சக்தியிலும், உறுதியிலும், செய்கையிலும் அவருக்கு அசைக்க முடியாத நம்பிக்கையிருந்தாலும் சுமார் கால் நூற்றுண்டு காலம் தேசியவாதிகள். ஜப்பானியர்களுக்கெதிராக ஆயுதந் தாங்கிப் போர் செய்த அனுபவமிருந்தாலும், எதிர்ப்புச் சக்திகள் எத்தனையெத்தனை இருந்தாலும் அவைகளோடு சமர் புரிந்து வெற்றி காணவியலும் என்ற திடமான நம்பிக்கை அவருக்கு எப்போதுமேயுண்டு. ஆனல், இவையெல்லாம் பொருளாதாரத் துறையில் காணவேண்டிய முன்னேற்றத்திற்கு பயன்படாதவை, மாறுனவையென்பது பண்பாட்டுப் புரட்சிக் காலத்தில் பெறப்பட்ட அனுபவங்களிலிருந்து புலனாகியது. எவ்வாறு பத்தொன்பதாம் நூற்றுண்டில் அரசியல், சமூக அமைப்புக்களை மாற்றியமைக்காமல் மேலை நாட்டார் இயந்திரச் சாதனங்களை முன்னேற்றத்திற்குப் பயன்படுத்த முடியாதென்று சீனுவிற்குத் தோன்றியதோ, அதைப்போல இந்த நூற்றுண்டிலும் எளிய, சிக்கலற்ற கொரில்லாக் காலத்தில் பின்பற்றப்பட்ட முறைகள் அடிப்படையில் தொழிற்துறை முன்னேற்றமும், பொருளாதாரச் சக்தியும் பெற முடியதென்று சீனு உணர்ந்தது.

**சீனக் கம்யூனிஸ்டுக்கட்சியின் வளர்ச்சி**

1921இல் கட்சி துவக்கப்பட்டபோது அதில் மனக்கசப்புற்றிருந்த ஐம்பது அறிஞர்களே இருந்தனர். ஆனல், 1961இல் கிட்டத்தட்ட 170 இலட்சம் பேர்கள் இருந்தனர். ஆரம்பத்தில் கட்சியின் வளர்ச்சி மெதுவாகவே இருந்தது. 1925இல் அதில் ஆயிரத்திற்கும் குறைவான எண்ணிக்கையினரே இருந்தனர். எனினும், தேசிய கொமின்டானும் கம்யூனிஸ்டுக் கட்சியும் ஐக்கிய முன்னணியொன்றை அமைத்ததிலிருந்து கட்சி உறுப்பினர்களின் எண்ணிக்கை வேகமாக வளர்ந்தது. 1927இல் அதில் மொத்தம் 58,000 பேர்கள் இருந்தனர். 1934இல் அத்தொகை மூன்று இலட்சமாக உயர்ந்தது. ஆனல், கம்யூனிஸ்டுகள் உள்நாட்டில் நிலைமை சரியில்லாதிருந்ததால் 'நீண்ட பயணத்'தின் (Long March) போது ரஷ்யாவை நோக்கிப் புறப்பட்டுச் சென்ற சமயத்தில் பத்திலொரு பங்கினரே இருந்தனர். அவர்களும் சென்சி (Shensi) மலைப்பகுதிகளில் பதுங்கிக்கொண்டிருந்தனர். எனினும் 1937இல் ஜப்பான் சீனுவை ஆக்ரமித்திருந்த காலத்தில் ஜப்பானியத் துருப்புகளுக்கெதிரான வெறுப்பு, குடியானவர்கள் நிலச்சொந்தக்காரர்களாக வேண்டுமென்ற விருப்பம் ஆகியவைகளைப் பயன்படுத்திக்

கொண்டு, அவர்கள் ஜப்பானியர்களை எதிர்த்தனர். வேளாண்மைச் சீர்திருத்தத்திட்டத்தைக் கொண்டு வந்தனர். இதனால், கட்சி உறுப்பினர்களின் எண்ணிக்கை 1945இல் பன்னிரெண்டு இலட்சமாக உயர்ந்தது. இவ்வெண்ணிக்கை, சியாங்-கே-ஷேக்கின் படைகளோடு நடந்த உள்நாட்டுப் போரின்போது வளர்ந்தது. 1949இல் வெற்றி கிட்டியபோது 45 இலட்சமாக உயர்ந்தது.

ஆரம்பத்தில் சீனக் கம்யூனிஸ்டுக்கட்சி குடியானவர்களைக் கொண்ட நாட்டுப்புறக்கட்சியாக இருந்தபோதிலும் காலப் போக்கில் உழைப்பாளி வர்க்கத்தினருக்கு ஊக்கமளிக்கப் பட்டதாலும், நகர்ப்புறங்களிலிருந்த தொழிலாளர்கள் பலர் சேர்ந்த காரணத்தினாலும் அது நகரங்களையும் தன்வசப் படுத்திக் கொண்டது. பொதுவாக, புதியதாக விடுவிக்கப் பட்ட கிராமப்புறங்களில் எங்கு கட்சி பலஹீனமாக இருந்ததோ அங்குதான் குடியானவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். எனினும், 1955-லும் அதற்குப் பிறகும் கூட்டுமுறை விவசாயத்திற்கு ஊக்கமளிக்கும் கொள்கையைக் கட்சி பின்பற்ற ஆரம்பித்தபோது முன்போல குடியானவர்களும் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். இக் காரணங்களால் கட்சி உறுப்பினர்களின் எண்ணிக்கை 1956இல் 107 இலட்சமாகவும், 1961இல் 170 இலட்சமாகவும் உயர்ந்தது. 1961க்குப்பிறகு கட்சி உறுப்பினர்கள் பற்றிய புள்ளி விவரங்கள் கிடைக்கவில்லை.

**உறுப்பினர்கள் பற்றிய சில சிறப்பம்சங்கள்**

சீனக்கம்யூனிஸ்டுக்கட்சியிலுள்ள உறுப்பினர்களில் பெரும்பகுதியினர் 1949ஆம் ஆண்டுக்குப்பிறகு சேர்ந்தவர்கள். 1961இல் செய்யப்பட்ட மதிப்பீட்டின்படி 'விடுதலை'க்குப் பிறகு சேர்ந்தவர்கள் 80 விழுக்காட்டினராவர். தற்போது கட்சி உறுப்பினர்களின் எண்ணிக்கை மேலும் அதிகரித் திருக்குமென்பதில் ஐயமில்லை. இதற்கு நேர்மாறாகக் கட்சியின் மேலிடத்தில் 1930 அல்லது அதற்கு முன்பு சேர்ந்தவர்களே அதிகாரத்தை ஏகபோகமாக இன்றும் செலுத்திவரு கிறார்கள். இது கட்சியிலுள்ள வயதில் குறைந்த உறுப்பினர் களிடையே உற்சாகமற்ற நிலைமையையும், தலைவர்களுக்கும் கட்சி ஊழியர்களுக்குமிடையில் 'தலைமுறை இடைவெளி' (Generation gap) பிரச்சினையையும் ஏற்படுத்தியிருக்கிறது. 1956ஆம் ஆண்டுக்கணக்குப்படி கட்சி உறுப்பினர்களில் 92

விழுக்காட்டினர் நாற்பத்தைந்து அல்லது அதற்குக் குறைவான வயதானவர்களாக இருந்தார்கள். எட்டு விழுக்காட்டினரே நாற்பத்தைந்து வயதிற்கு மேற்பட்டவர்களாக இருந்தனர். சீனாவின் மொத்தஜனத்தொகையோடு கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினர்களின் எண்ணிக்கையை ஒப்பிட்டுப்பார்க்கும் போது அது மிகவும் குறைவேயாகும். உதாரணமாக 1961இல் ஜனத்தொகை 700மிலியன்களாக இருந்தபோது கட்சி உறுப்பினர்களின் எண்ணிக்கை 2.43 விழுக்காடுதான் என்பதும் கவனிக்கத்தக்கது.

1969ஆம் ஆண்டில் ஏற்றுக்கொள்ளப்பட்ட கட்சி அரசியலமைப்பின்படி பதினெட்டு வயதான தொழிலாளர், ஏழைக் குடியானவர், நடுத்தரநிலைக்குடியானவர், புரட்சிப்படைவீரர், இதரப் புரட்சிவாதி ஆகிய யாராக இருந்தாலும் கட்சியில் உறுப்பினராகச் சேரலாம். சேரவிரும்புபவரின் மனுவை மூன்பே கட்சியின் உறுப்பினர்களாக உள்ள இருவர் சிபாரிசு செய்யவேண்டும். அதைச் சம்பந்தப்பட்ட வட்டாரக்கிளை பரிசீலனை செய்யும். பரிசீலனையின்போது கட்சியினுள்ளும், கட்சிக்கு வெளியிலும் இருக்கும் பொதுமக்களின் கருத்துகள் கோரப்படும். அதன்பிறகு அவர் கட்சியில் தற்காலிக உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்படுவார். ஆனால், கட்சியில் முதல் இரண்டாண்டுகள்வரை அவருடைய நடத்தை கண்காணிக்கப்பட்டு, அதில் திருப்தி ஏற்பட்டால் பிறகு கட்சியின் முழு உரிமைகளையும் பெறத்தக்க உறுப்பினராக ஏற்றுக்கொள்ளப்படுவார். கட்சிக்கு புது உறுப்பினர்கள் சேர்க்கப்படுவதற்கு கம்யூனிஸ்டுக் கட்சியின் இளைஞர் கழகம் உதவி செய்கிறது. மேலும், அவ்வப்போது கட்சியினால் நடத்தப்படும் பெரும் இயக்கங்களில் முன்னணியில் நின்று பங்கெடுத்துக்கொள்பவர்களும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள்.

கட்சியில் உறுப்பினர்களானதும், உறுப்பினர்கள், மார்க்ஸ், லெனின், மோ-சே-துங் போன்றத் தலைவர்களின் சிந்தனைகளைக் கற்றறிந்து வாழும் வகைக்கேற்ப அவைகளைப் பின்பற்றவேண்டும்; சீனமக்களின் நன்மைகளுக்காக உழைக்க வேண்டும்; தவறு செய்துவிட்டுப் பிறகு திருத்திக் கொள்பவர்கள் உள்ளிட்ட பெருவாரியான மக்களுடன் ஒன்றிவிடும் திறமையுடையவர்களாக இருத்தல் வேண்டும். இருப்பினும் சதிகாரர்கள், எப்பக்கமும் சாய்பவர்கள், சுயநலவாதிகள் போன்றவர்கள் விஷயத்தில் எச்சரிக்கையுடனும், கண்காணிப்

புடனும் இருக்க வேண்டிய அவசியம் வற்புறுத்தப்படுகிறது. அத்தகையவர்கள் கட்சியிலும், அரசாங்கத்திலும் நுழைந்து விடாதபடி பார்த்துக்கொள்ள வேண்டுமென்பதும் வலியுறுத்தப்படுகிறது. இத்தகைய விதிகளெல்லாம் 1969ஆம் ஆண்டு சட்டதிட்டங்களில்தான் காணப்படுகின்றன.

கட்சிக்கொள்கையும், மோ-சே-துங் சிந்தனையும் அரசு, சமூகம் ஆகிய துறைகளில் கட்சி ஆட்சி செலுத்துவதை நியாயமானதாக்குகிறது. நிரந்தரமான இராணுவத்தன்மையுடைய குழுக்கள், அறிஞர்கள் கழகங்கள், இதர நிறுவனங்கள் துணையுடன் கட்சியினால் உறுதியாக முடிவு செய்யப்பட்ட நோக்கங்களை அடைவதற்கு சமூகத்தைச் செயற்படுமாறு கட்சி செய்கிறது. இராணுவத்தன்மையுடைய குழுக்கள் (Cadres) தான் கம்யூனிஸ்டு சீனாவின் தலைமைக்கு முதுகெலும்பு போன்றவையாகும். அவை கட்சிக்கொள்கை நிறைவேற்றத்திற்கு சரியான முறையில் உதவி புரிந்து வருகின்றன. அவைகளில் அங்கம் வகிப்பவர்கள் கட்சியில் உறுப்பினர்களாக இருக்கலாம் அல்லது இல்லாமலுமிருக்கலாம். அவர்கள் கட்சியில் தலைமை பதவி வகிக்கலாம். அரசாங்கம், இராணுவம், இதர நிறுவனங்கள் ஆகியவற்றில் பல நிலைகளில் தலைமைப் பதவியில் இருக்கலாம். ஆனால், அரசாங்கப் பதவியிலிருப்பவர்கள் கட்சி அங்கத்தினர்களாக இருக்கவேண்டிய அவசியமில்லை. கட்சிக்குள் எல்லா மட்டங்களிலுமுள்ள நிறுவனங்கள் இக்குழுக்களால் ஆனவை என்று லியு-சாவோ-சி (Liu-Shao-Chi) என்பவர் சொல்லியிருக்கிறார். இக்குழுக்கள் தான் கட்சி அமைப்பிற்கும் சீனப் புரட்சிக்கும் கருப்பொருளாக இருப்பவை.

1952இல் நாட்டில் இராணுவக் குழுக்கள் நீங்கலாக மொத்தம் 27½ இலட்சம் குழுக்கள் இருந்தன. இவ்வெண்ணிக்கை 1960இல் பலவகைப்பட்ட குழுக்களையும் சேர்த்து ஏறத்தாழ 60 இலட்சம் குழுக்களாக உயர்ந்தன என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

கட்சிக்குழுக்களுள் முதுநிலையும் (Seniority) அதிகாரமும் முக்கியமாகக் கட்சியில் சேர்ந்த தேதியிலிருந்து கணக்கிடப்படுகின்றன; எனினும், சியாங்சி போராட்டங்களிலும் 'நீண்ட பயண'த்திலும் பங்கெடுத்துக்கொண்ட குழுக்களுக்குச் சலுகைக் காட்டப்பட்டது. இவைகளுக்கு அடுத்தாற்போல, ஜப்பானியர்களுக்கு எதிரான போர் அல்லது கொமின்டான்

தேசியவாதிகளுடன் நடைபெற்ற உள்நாட்டுப் போர்களில் பங்கெடுத்துக்கொண்ட குழுக்களுக்கு சலுகை தரப்படுகிறது. இவைகளுக்கும் அடுத்தாற்போல வருபவை 1949ஆம் ஆண்டுக்குப் பிறகு கட்சியில் சேர்ந்தவைகளாகும்.

கட்சிக்குழுக்களில் அங்கம் வகிப்பவர்களுடைய நடத்தை, அரசியல் நடவடிக்கைகள், கருத்துகள் பற்றிய செய்திகளடங்கிய விரிவான பட்டியல்கள் அவ்வப்போது சேகரிக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டுவருகின்றன. இக்குழுக்களைச் சேர்ந்த உறுப்பினர்கள் கட்சி சம்பந்தப்பட்ட கொள்கைகள் கருத்துரைகள் அடங்கிய ஆவணங்களைப் படித்து, விவாதித்து தெளிவுபெறுவதற்கு 'படிப்பகங்கள்' பல ஒழுங்காக நடத்தப்படுகின்றன. இப்படிப்பகங்களில் கூடுவோர் தங்களுடையத் தோழர்களை அவர்கள் சரிவரக் கடமைகளைச் செய்யவில்லையானால் குறை சொல்வார்கள்.

படிப்பகங்களில், கட்சிச்சார்பு, சார்பற்ற குழுக்கள் கலந்து கொண்டாலும் கட்சிக்குழுக்களை பிறவற்றினின்றும் பிரித்துக்காட்டுவதற்கு அவ்வப்போது கட்சிக்குழுக்களுக்காக கட்சிக்கூட்டங்கள் நடத்தப்படுகின்றன. இக்கூட்டங்களில் கட்சி சார்பற்ற குழுக்கள் கலந்துகொள்ள முடியாது. கட்சிக் கூட்டங்களின்போது கட்சியில் அங்கம் பெறாத குழுக்களுக்கு மறுக்கப்பட்ட பத்திரங்களும், செய்திகளும கட்சியில் உறுப்பினர்களாக இருப்பவர்களுக்கும் குழுக்களுக்கும் தரப்படுவதன் மூலமாக இவ்விரண்டு வகைப்பட்டக் குழுக்களுக்குமிடையிலான வேறுபாடு காப்பாற்றப்படுகிறது.

**ஜனநாயக அதிகாரக் குவிப்புத் தத்துவம்**
(Democratic Centralism)

ஜனநாயக அதிகாரக்குவிப்புத் தத்துவமென்பது, 'கட்சியின் அமைப்போடு தொடர்புடைய கொள்கை' என்று கட்சியின் அமைப்புச்சட்டம் (Constitution) கூறுகிறது. இதையொரு வகைப்பட்ட அரசியல்முறையென்றும் சொல்லலாம். இத்தத்துவத்தின் ஜனநாயக அம்சம், எல்லா மட்டங்களிலுமுள்ள கட்சி நிறுவனங்களுக்கும் நடைபெறும் தேர்தலாகும். இது, கட்சி காங்கிரசுகளால் ஆதார நிலையிலிருந்து மேல் நிலைவரையிலும் கட்சிக்குழுக்கள் (Party Committees) தேர்ந்தெடுக்கப்படுவதைக் குறிக்கிறது. மேல் நிலையில் மத்தியக்குழு (Central Committee) தேசியக்கட்சிக்

காங்கிரசால் தேர்ந்தெடுக்கப்படுகிறது. இவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும் குழுக்கள் நிர்வாகக் (Executive)குழுக்களாகும். இக்குழுக்கள் குறிப்பிடப்படும் கால இடைவெளிகளில் அவைகளோடு தொடர்புடையக் காங்கிரசுகளுக்கு செயல் அறிக்கைகளைத்(Work reports) தவறாது சமர்ப்பிக்க வெண்டும். 'கட்சிக்குள்ளும் கட்சிக்கு வெளியிலுமுள்ள பொது மக்களுடையக் கருத்துகளை அவ்வப்போது கேட்டறிய வேண்டியதோடு அவர்களுடைய மேற்பார்வையையும் ஏற்றுக் கொள்ளவேண்டும்.'

மேலும், ஜனநாயக அதிகாரக்குவிப்புத் தத்துவத்தின் மைய அம்சம், 'தனிநபர், நிறுவனத்திற்குக் கட்டுப்பட்டவர்; சிறுபான்மை, பெரும்பான்மைக்குக் கட்டுப்பட்டது; கீழ் மட்டம் மேல் மட்டத்திற்குக் கட்டுப்பட்டது; கட்சி, மத்தியக் குழுவிற்குக் கட்டுப்பட்டது' என்பதாகும். இருப்பினும், தனிப்பட்டக் கட்சி உறுப்பினர்கள், கட்சியின் முடிவு அல்லது கட்டளையினின்றும் மாறுபட்டக் கருத்துடையவர்களாக இருப்பார்களானால், அம்மாறுபாட்டை வற்புறுத்தும் வகையில் கட்சியின் மத்தியக் குழுவிற்கு கட்சி நிறுவனங்களைப் பொருட்படுத்தாமல் நேரிடையாகத் தெரிவிக்க உரிமை தரப் பட்டிருக்கிறார்கள். இது கட்சியில் முன்பிருந்ததைவிட அதிகமான அளவிற்கு ஜனநாயகமுறை பின்பற்றப்படுவதைக் குறிக்கிறதெனலாம். ஆனால், நடைமுறையில் கட்சி அமைப்பின் மைய அம்சம் ஜனநாயகமுறையையும் மிஞ்சி காணப்படுவதோடு மேல் நிலையிலிருந்து கடைநிலைவரையிலு முள்ளக் கட்சிகுழுக்கள் தங்களுடைய மறு தேர்தலை உறுதி செய்துகொள்ளக்கூடிய அளவிற்கு அதிகார முடையவைகளாக இருக்கின்றன, எனவே, மேல் நிலையிலுள்ள மத்தியக்குழு தொடங்கி கடைநிலையிலுள்ளக் கட்சிக்குழு வரை சங்கிலித்தொடர்போல கொள்கைகளும், திட்டங்களும், முடிவுகளும் பிறப்பிக்கப்பட்டுப் பின்பற்றப்படுகின்றன.

ஜனநாயக அதிகாரக்குவிப்புத் தத்துவக் கொள்கை முதலில் ரஷ்ய போல்ஷ்விக்கு (Bolsheviks)களிடமிருந்து சீனர்களால் கடன்வாங்கப்பட்டு, ஏனனில் (Yenan) கிடைத்த அனுபவங்கள் அடிப்படையில் தங்களுக்கேற்றவாறு சீனர்களால் மெருகு கொடுக்கப்பட்டது. முரண்பாடுகள் உலக முழுவதும் பரந்து காணப்படுகின்றன என்றும், அந்த முரண்பாடுகள் எதிர்ப்புத்தன்மை, எதிர்ப்புத்தன்மையற்றவை என்று இரு வகைகளாகப்பிரிக்கப்படலாமென்

தோடு, எதிர்ப்புத்தன்மை வாய்ந்தவைகள் பலாத்காரத்தைப் பயன்படுத்துவதன் மூலமாகவும், எதிர்ப்புத்தன்மையற்றவைகளை விவாதங்கள், கல்வி புகட்டல்மூலமாகவும் முடிவுக்குக் கொண்டு வரலாமென்றும் அவர் கருதினர். தனி நபர் விருப்பு வெறுப்புகளுக்கும் அரசு விருப்பு வெறுப்புக்களுக்குமிடையே யுள்ள முரண்பாடுகள் எதிர்ப்புத்தன்மையற்ற வகைக்கு எடுத்துக்காட்டுகளாகச் சொல்லப்படுகின்றன. இந்த முரண்பாடுகளைக் கட்சிதான் முடிவுக்குக் கொண்டுவரவியலும். ஏனெனில், கட்சிதான் சீனமக்களுடைய 'உண்மையான' விருப்பு வெறுப்புகளைச் சரியாக உணர்ந்து செயலாற்றக் கூடிய முறையில் அமைந்திருக்கிறது.

கட்சியைப்பொறுத்தமட்டிலும், பெரிய முரண்பாடாகக் கருதப்படுவது, தலைவர்களுக்கும் தொண்டர்களுக்குமிடையே காணப்படுவதுதான். கட்சியின் உயர்மட்டத்திலுள்ள அதிகாரிகளின் கட்டளைகளைக் கட்சி உறுப்பினர்கள் சிரமேற்கொண்டு பணிந்து நடப்பதை கட்சி விரும்புகிறது. கட்டளைகளை ஏற்றுக்கொண்டு நடக்க வேண்டும் என்று சொல்லும் போது, அவைகளை அவர்கள் கண்மூடித்தனமாகவல்லாமல் கற்பனைத்திறத்தோடும், ஆக்கத்தை நோக்கமாகக்கொண்டும் பின்பற்றி நடக்கவேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. குறிப்பாக, கட்சியும், அரசும் பல முக்கியமானவையும், எதிர்பாராதவையுமான பிரச்சினைகளுக்குத் தீர்வு காணவேண்டியிருக்கும்போது உறுப்பினர்கள் கட்சிக் கட்டளைகளை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறார்கள். கட்சியினுள் பின்பற்றப்படும் ஜனநாயகமுறையும், அதிகார வர்க்கத்தின் குறைகளை இடித்துக்காட்டுவதற்குத் தரப்படும் சுதந்திரமும் கட்சிக்குழுக்கள் மக்களிடம் கொள்கைகளை எடுத்துக்கூறி, விளக்கி அவர்களுடைய மனமார்ந்த ஆதரவைப் பெறுவதற்காகும் எனத் தோன்றுகிறது. அதிகாரவர்க்கத்திற்கேயுரிய ஆணவத்தோடோ அல்லது அலுவலகங்களில் அமர்ந்துகொண்டு இதைச் செய்ய வேண்டும் அல்லது அதைச்செய்யவேண்டுமென்று உத்தரவு போடும் மனப்பான்மையோடோ காரியங்கள் செய்யப்படும் முறை மேற்கூறிய முறைக்குமாறானதென்பதால் இம்முறை பின்பற்றப்படுவதில்லை. எனவே, கொள்கைகளைப் பரப்புவதற்காக அவ்வப்போது ஒழுங்காக நடைபெறும் போதனைகளும், திறனாய்வும், தன்னைத்தானே மதிப்பிட்டுக் கொள்வதும், வட்டாரங்களில் காணப்படும் நிலைமைகளுக்கேற்ப கட்சி அமைப்பை வளைந்து கொடுக்குந்தன்மையதாக

வைத்துக்கொள்வதற்கு உதவுவதோடு, கட்சி உறுப்பினர் களிடையே ஒருமைப்பாட்டைப் பலப்படுத்துவதற்கும் உதவுகிறது.

இதுவரை சீனக் கம்யூனிஸ்டுக்கட்சியில் ஜனநாயக முறையடிப்படையிலான அதிகாரக்குவிப்புத்தத்துவம் எந்த அளவிற்கு வற்புறுத்தப்படுகிறது என்பதைக் கண்டோம். இனி இத்தத்துவம் ஆட்சித்துறையில் பின்பற்றப்படும் முறையைப்பற்றிப் பார்க்கலாம்.

குறிப்பிட்டவொரு மட்டத்திலுள்ள வட்டாரக் கழகங்கள் (Local Councils) அவைகளுக்கு மேல் மட்டத்திலுள்ள வட்டாரக் காங்கிரசுகளுக்குப் பொறுப்புடையவைகளாகும். அவைகளெல்லாம், எல்லாவற்றிற்கும் மேலேயுள்ள அரசுக் கழகத்திற்குக் (State Council) கீழ்ப்பட்டிருப்பதோடு, அதன் கட்டளைகளையும் ஏற்று அதன்படி நடக்கவேண்டும். இந்த வட்டார கழகங்களும், அரசுக்கழகமும், முறையே அவ்வவற்றோடுத் தொடர்புடைய வட்டாரமக்கள் காங்கிரசுகளுக்கும், தேசிய மக்கள் காங்கிரசுக்கும் கட்டுப்பட்டவைகளாகும். இக்கழகங்களை பதவியில் தொடர்ந்திருக்க அனுமதிப்பது அல்லது அவைகளைப் பதவியிலிருந்து நீக்குவது போன்ற அதிகாரத்தைச் சம்பந்தப்பட்ட மக்கள் காங்கிரசுகள் பெற்றிருக்கின்றன. முக்கியமாக நாம் இங்கு அறியவேண்டியது, குறிப்பிட்ட மட்டத்திலுள்ள மக்கள் காங்கிரஸ் அல்லது கழகம் எடுக்கும் முடிவுகள் அல்லது தீர்மானங்களை அதற்கு மேல் மட்டத்திலுள்ள காங்கிரஸ் அல்லது கழகம் நிறுத்தி வைக்கவோ, மாற்றியமைக்கவோ அதிகாரம் பெற்றிருக்கிறது என்பதாகும். இந்த அடிப்படையில் பார்க்கின்றபோது இவை எல்லாவற்றிற்கும் மேலே சகல அதிகாரங்களும் பெற்றிருப்பவை அரசுக்கழகமும் தேசிய மக்கள் காங்கிரசும் என்பது தெளிவாகும். கீழே தரப்பட்டுள்ள வரைப்படம் (chart) அரசுத்துறை, ஆட்சித்துறை அதிகாரங்கள் பல்வேறு மட்டங்களில் எங்ஙனம் செலுத்தப்படுகிறதென்பதை விளக்குகிறது. அம்புக்குறிகள் அதிகாரம் செலுத்தப்படும் திசையைக் காட்டுகின்றன.

**ஜனநாயக அதிகாரக் குவிப்புத்தத்துவம்பற்றிய மதிப்பீடு**

சீனாவிற்கு வெளியேயுள்ளவர்கள் இத்தகையதொரு அமைப்பில் உண்மையான ஜனநாயகம் இருக்கமுடியாதென்றும், மக்களுடைய சுதந்திரம் கணிசமான அளவிற்குப்

பாதிக்கப்படுவதற்கான சாத்தியக்கூறுகள் இருக்கின்றன என்றும் குறைகூறுகிறார்கள். இதற்கு அவர்கள் கூறும் காரணம், ஜனநாயகமும் அதிகாரக்குவிப்புத்தத்துவமும் ஒன்றுக்கொன்று முரணானவை, ஒன்றுசேர்க்கமுடியாதவை என்பதாகும். அதேசமயத்தில் விரைவான பொருளாதார முன்னேற்றத்தை அடைவதற்கு ஏதாவதொருவகையிலாவது




அதிகாரக்குவிப்புத் தேவைப்படுகிறதென்பதை அவர்கள் ஏற்றுக்கொள்ளக்கூடும். அரசியல் அதிகாரக்குவிப்பு அடிப்படையிலான சர்வாதிகாரம் இந்த நூற்றாண்டில் சாத்தியப்படாதென்பதை சர்வாதிகாரத்தை ஆதரிப்பவர்கள் அறிவர். இவ்வாறு அதிகாரக்குவிப்புத்தத்துவமும் ஜனநாயகமும்

தேவையானவை என்று ஏற்றுக்கொள்ளப்படுமானால் இவை யிரண்டையும் எவ்வாறு இணைப்பது? ஜனநாயக அதிகாரக் குவிப்புத்தத்துவம், ஜனநாயகமும் அதிகாரக்குவிப்பும் சேர்ந்தது. எனவே, ஜனநாயகமும் அதிகாரக்குவிப்பும் சேர்ந்ததுதான் ஜனநாயக அதிகாரக்குவிப்புத்தத்துவமென்ப தாகும். இத்தகையச் சேர்க்கைகள் எப்போதும் சரிவர இயங்குவதில்லை என்பது உண்மைதான் என்றாலும் சில சமயங்களில் அவை செயல்படுகின்றன என்பதை மறுக்க முடியாது. இச்சேர்க்கை சீனாவில் எந்த அளவிற்கு வெற்றி கரமாகப் பின்பற்றப்படுகிறது என்பது ஆர்வத்தோடு ஊன்றி கவனிக்க வேண்டியதாகும். இதனால் ஏற்படக்கூடிய வலிமை அல்லது வலிமையற்ற தன்மையைப்பற்றியதொரு முடிவுக்கு இவ்வளவு சீக்கிரமாக நாம் வரமுடியாதெனினும், அந்நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு எவரும் மூக்கில் விரல் வைத்து ஆச்சரியப்படுமளவிற்கு உதவி செய்திருக்கிற தென்பதை மறுக்கமுடியாது. அரசியலில் இது சிறந்ததொரு முறையா இல்லையா என்பதை எதிர்காலந்தான் சொல்ல முடியும். இவ்விஷயத்தில், சம்பந்தமில்லாதவர்கள் முடிவைப் பொறுத்தவரையிலும் திறந்த மனத்துடன் இருக்கவேண் டியது அவசியமாகும். அவசரப்பட்டு ஒருமுடிவுக்குவருவது ஆத்திரக்காரனுக்கு புத்திமட்டு என்பதற்குச் சமமாகு மெனலாம்.

**தேசிய மட்டத்தில் கட்சி அமைப்பு**
(Party Organisation at the National Level)

சீனக்கம்யூனிஸ்டுக் கட்சியின் அமைப்புப் பற்றிய விவரங் கள் 1956-லும் 1969-லும் வெளியிடப்பட்ட சட்டதிட்டங் களிலிருந்து தெரியவருகின்றன. 1969ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 14ஆம் தேதியன்று கட்சியின் ஒன்பதாவது காங்கிரஸ் கட்சியின் புதிய அமைப்புச்சட்டத்தை ஏற்றுக்கொண்டது. இந்த அமைப்புச்சட்டம் 1956ஆம் ஆண்டு அமைப்புச் சட்டத்தைவிட சிறியதாகவும், பல அம்சங்களில் தெளிவற்ற தாகவும் இருக்கிறது. எனினும் இவை இரண்டிற்குமிடையே பெரிய வித்தியாசங்கள் கிடையாது. கட்சி தேசியமட்டத்தில் எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கிறது என்பது பின்வரும் கட்டத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

**தேசியக் கட்சிக் காங்கிரஸ்**

தேசியக் கட்சிக் காங்கிரஸ் என்பது சீனக் கம்யூனிஸ்டுக் கட்சியின் உயர்மட்ட உறுப்பாகும். அது கட்சி விதிகள்படி

ஐந்தாண்டுப் பதவிக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறது. விசேஷமான சந்தர்ப்பங்களின்போது மத்தியக் குழுவால் கட்சிக்காங்கிரஸ் முன்னதாகவோ, தள்ளியோ கூட்டப்படலாம். ஆண்டுக்கொருமுறை அது கூட்டவேண்டுமென்று சொல்லப்பட்டாலும் எவ்வப்பொழுதெல்லாம் கூடவேண்டுமென்று தெளிவாக்கப்படவில்லை. தேசியக்கட்சிக் காங்கிரஸ்,

**1956ஆம் ஆண்டு தேசிய மட்டத்தில் கட்சியின் அமைப்பு**




மத்தியக் குழுவைத் தேர்ந்தெடுக்கிறது. இக்காங்கிரஸ், மத்தியக்குழுவின் அறிக்கைகளை ஆய்வுசெய்கிறது, கட்சி கடைப் பிடிக்கவேண்டிய வழியையும் கொள்கையையும் முடிவு செய்வதோடு கட்சி அமைப்புச் சட்டத்தையும் திருத்துகிறது.

1921இல் நடந்த முதல் காங்கிரஸிலிருந்து மிக அண்மையில் 1969இல் நடந்த காங்கிரஸ் வரை சீனக்கம்யூனிஸ்டுக் கட்சி இதுவரையிலும் ஒன்பது காங்கிரசுகளை நடத்தியிருக்கிறது. 1945இல் நடந்த ஏழாவது காங்கிரசுக்கும் எட்டாவது காங்கிரசுக்குமிடையே பதினோரு வருடகால இடைவெளியும், எட்டாவது காங்கிரசுக்கும் ஒன்பதாவது காங்கிரசுக்கு

யிடையே பதிமூன்று ஆண்டுகால இடைவெளியும் இருந்தது. ஆண்டுதோறும் இக்காங்கிரசுகளின் கூட்டங்கள் நடைபெறுவதில்லை. உதாரணமாக 1956இல் நடந்த எட்டாவது காங்கிரஸ் ஒரேயொரு முறைதான் 1958இல் இரண்டாவது கூட்டத்தொடரை நடத்தியது. இதனால் கட்சியின் அமைப்புச்சட்டம் தீவிரமாகப் பின்பற்றப்படுவதில்லை என்று தெரிகிறது.

தேசியக் கட்சிக் காங்கிரசுக்கு நடைபெறும் தேர்தல்கள் தேசிய மக்கள் காங்கிரசுக்கு நடைபெறும் தேர்தல்களைப் போன்றவையேயாகும். அதாவது பிரதிநிதிகள் மாநாடுகளால் மறைமுகமுறை அடிப்படையில் நடைபெறுகின்றன. மக்கள் குடியரசு அரசியலமைப்புச் சட்டத்தைப் போன்றில்லாமல், தேசிய காங்கிரஸ் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படும் நடைமுறை விதிகள் கட்சி அமைப்புச் சட்டத்தில் தெளிவாகச் சொல்லப்படவில்லை. பல மட்டங்களிலுமுள்ள கட்சியின் முக்கியமான நிறுவனங்களுக்கானத் தேர்தல்கள் ஜனநாயகமுறையில் நடத்தப்படும் ஆலோசனை அடிப்படையில் நடைபெறுகிறதென்று கட்சி அமைப்புச்சட்டம் கூறுகிறது.

கட்சியமைப்புச்சட்டம் எவ்வாறிருப்பினும், தேசிய மக்கள் காங்கிரஸ் அதிக அதிகாரமுடையதாக இருக்கவில்லை. இதன் கூட்டம் மிகஅபூர்வமாகத்தான் கூட்டப்படுகிறது. இதனுடைய உறுப்பினர்கள் அதிகமாகவிருப்பதால் இங்கு விவாதங்கள் நல்லமுறையில் நடைபெறுஞ்சூழ்நிலையில்லை. கட்சியின் முக்கியக் கொள்கைகளெல்லாம் இதன் கூட்டம் நடைபெறுவதற்கு முன்பே தீர்மானிக்கப்பட்டுவிடுகின்றன. இதற்கு விதிவிலக்காக, கட்சியின் ஒன்பதாவது காங்கிரஸ் இருந்ததெனத் தோன்றுகிறது. 1956ஆம் ஆண்டு நடைபெற்ற எட்டாவது காங்கிரசிற்கு மாநிலங்கள், தன்னாட்சிப்பகுதிகள், போர்ப்படை, நகரங்கள், அரசாங்கம் ஆகியவற்றிலிருந்து 1000 பிரதிநிதிகளுக்குமேல் வந்திருந்தனர். அவர்கள் மோ-சே-துங் கூட்டத்தைத் துவக்கிவைப்பதைக் கண்டார்கள். இதரக் கட்சித்தலைவர்கள் பொருளாதார நிலைமை பற்றிய அறிக்கைகள் வெளியிட்டதையும், கட்சிபற்றிய புதிய அமைப்புச்சட்டத்தைத் தாக்கல்செய்து பேசிய பேச்சுக்களையும் கேட்டனர். காங்கிரசால் முடிவுசெய்யப்பட்ட எல்லா முக்கியமான தீர்மானங்களையும் கட்சியின் மத்தியக்குழு

அதனுடைய முழுக்கூட்டத்தில் முன்னதாகவே முடிவு செய்துவிட்டிருந்தது.

எனினும் இந்தக் காங்கிரஸ்கள் எல்லாம் கட்சி உறுப்பினர்களின் ஆர்வத்தைத் தூண்டுவதற்கும் கட்சியைச் சேர்ந்த சில உறுப்பினர்கள் தலைவர்களோடு நேரிடையாகத் தொடர்பு கொள்வதற்கும் உதவும் சாதனங்களாக இருக்கின்றன எனலாம். அடையவேண்டிய புதிய குறியெல்லைகளை, கட்சி, காங்கிரசின் கவனத்திற்குக் கொண்டு வருவதோடு, கட்சியினால் செய்யப்பட்டிருக்கின்ற பெரிய கொள்கை மாற்றங்களை காங்கிரசும் தெரிந்துக் கொள்ள முடியும். சான்றாக பண்பாட்டுப்புரட்சி, முன்னேற்றத்திற்கான பெருந்திட்டம் ஆகியவைகள் எல்லாம் கட்சியினால் முடிவு செய்யப்பட்ட பெருங் கொள்கைகளாகும். காங்கிரஸ்களோ அல்லது அவற்றின் தொடர் கூட்டங்களோ கூட்டப்படாதிருந்தால் அவைகளைப் பற்றி காங்கிரஸ் தெரிந்துகொண்டிருக்க முடியாதென்பதோடு, பொதுமக்களும் அவைகளைத் தீவிரமாகப் பின்பற்றி வெற்றியடையச் செய்திருக்க முடியாதென்பதைக் கூறலாம்.

**மத்தியக்குழு (Central Committee)**

கட்சியின் 1956ஆம் ஆண்டு அமைப்புச் சட்டப்படி சீனக் கம்யூனிஸ்டு கட்சியின் மத்தியக்குழு பரவலான பெரும் பொறுப்புக்களைப் பெற்றிருக்கிறது. அது தேசியக்கட்சிக் காங்கிரசால் ஐந்தாண்டு பதவிக்காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறது. அது ஆண்டொன்றுக்கு குறைந்தது இரு முறையாவது முழுவதுமாகத்தன் கூட்டத்தை நடத்தவேண்டும். கட்சிக்காங்கிரசின் ஆண்டுக் கூட்டத்தை அது கூட்டவேண்டியதோடு, காங்கிரஸ் அதன் கூட்டத்தை நடத்தாமலிருக்கும் போது கட்சிவேலைகளை நடத்தி வைக்க வேண்டியதும் அதன் பொறுப்பாகும். அதனுடைய இதர அலுவல்களாவன: கட்சியிலிருக்கின்ற குழுக்களின் உதவியைக் கொண்டு மத்திய அரசு நிறுவனங்களுக்கும், மக்கள் நிறுவனங்களுக்கும் வழி காட்டவேண்டும். பொது அரசியல் துறை(General Political Department) மூலமாக மக்கள் விடுதலைப்படைக்கு (Peoples (Liberation Army) உத்தரவுகளைப் பிறப்பிக்கவேண்டும். கட்சியின் போலிட் பீரோ (Polit Puro), செயலகம் (Secretariat) ஆகியவற்றின் உறுப்பினர்களையும் தலைவர் (Chairman), துணைத்தலைவர் (Vice Chairman). பொதுச்செயலாளர் (General Secretary) ஆகியவர்களையும் தேர்ந்தெடுக்கவேண்டும். 1969ஆம்

ஆண்டு அமைப்புச்சட்டம் ஜனநாயகத் தத்துவத்தையும், முறைகளையும் தீவிரமாகப் பின்பற்றவேண்டுமென்று வற்புறுத்துவதால், மத்தியக்குழு கட்சியின் பிரதானமான உறுப்பெனுந்தன்மைக்கேற்ப கட்சிக்குள்ளும், கட்சிக்கு வெளியிலுமுள்ள பொதுமக்களின் கருத்துகளை கேட்டறிய வேண்டியது அவசியமாகிறது.

மத்தியக்குழுவில் 97 முழு உறுப்பினர்களும், 73 மாற்று உறுப்பினர்களும் இருக்கிறார்கள். மாற்று உறுப்பினர்கள் குழுவின் கூட்டங்களில் கலந்து கொள்ளலாமே தவிர வாக்கெடுப்பில் பங்கெடுத்துக் கொள்ள முடியாது. நிரந்தர உறுப்பினர்கள் பதவிகளில் காலி ஏற்படுமானால் மாற்று உறுப்பினர்களில் அதிக காலமாகப் பதவியிலிருப்பவர்கள் அந்த இடங்களுக்கு நியமிக்கப்படுவார்கள். மத்தியக்குழு கட்சி அமைப்புச் சட்டத்தில் கண்டுள்ள விதிகள்படியே எல்லாப் பொறுப்புக்களையும் நிறைவேற்றுகிறது என்று சொல்ல முடியாது.

மத்தியக் குழுவின் முக்கியமானப் பணி போலிட் பீரோவும், நிலைக்குழுவும் எடுக்கும் முடிவுகளை ஆமோதிப்பதாகும். அது கொள்கைகளை முடிவு செய்யும் நிறுவனமாக இல்லாமல் கொள்கைகளை நிறைவேற்றி வைப்பதாக இருக்கிறது. அரசாங்கத்திலும், சமூகத்திலும் பெரும் பெரும் பதவிகள் பெறுவதற்கு அக்குழுவில் உறுப்பினராக இருப்பது முக்கியமானதாகக் கருதப்படுகிறது. மத்தியக்குழுவில் அங்கம் வகிப்பவர்கள் படித்தறிந்தவர்களாகவும், அனுபவம் பெற்றவர்களாகவும் இருக்கிறார்கள்.

மத்தியக்குழுவின் கீழ் பணி சம்பந்தப்பட்டக்கொள்கைகளை மேற்பார்வை செய்யும் பல துறைகள் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, அமைப்பு (organisation), கல்வி, பன்னாட்டுத் தொடர்பு, ஐக்கிய முன்னணி, பிரச்சாரம் போன்றவற்றிற்கான துறைகளைக் கூறலாம். ஒவ்வொரு துறைக்கும் போலிட்பீரோவிடமிருந்து செயலகம் வழியாக வேலைகள் வருகின்றன. உதாரணமாக, அமைப்புத்துறை கட்சிப்பணியாளர்கள் சம்பந்தப்பட்ட எல்லா அலுவலர்களுக்கும் பொறுப்புடையதாகும். அதாவது, பணியாட்களை வேலைக்கமர்த்தல், பயிற்சியளித்தல், பல்வேறு உத்தியோகங்களுக்கும் ஆட்களைப் போடுதல் இத்துறையின் வேலையாகும். இத்தகையத்துறைகளோடு இராணுவ விவகாரங்கள்

பெண்கள் சம்பந்தப்பட்ட வேலை, சமூக விவகாரங்கள் பற்றிய வேறு சில துறைகளும் இருக்கின்றன. பெரும் பாலானத்துறைகள், குழுக்களின் தலைவர்களாக மத்தியக் குழு உறுப்பினர்களே இருப்பார்கள்.

**போலிட்பீரோவும் அதன் நிலைக்குழுவும்**

1956ஆம் ஆண்டில் ஏற்றுக்கொள்ளப்பட்ட கட்சி அமைப்புச்சட்டப்படி போலிட்பீரோவும் அதன் நிலைக்குழுவும் மத்தியக்குழுவின் முழுக்கூட்டத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டு, மத்தியக்குழு கூடாதிருக்கும் காலத்தில் அதன் அதிகாரங்களை யும் பணிகளையும் செய்து வருகின்றன. மத்தியக்குழுவின் கூட்டத்தை ஆறுமாதங்களுக்கொருமுறை கூட்டவேண்டியது அவைகளின் பொறுப்பாகும். செயலகத்தின் அலுவல்களை இயக்குவதும் அவைகளின் பொறுப்பாகும். மத்தியக்குழுவின் தலைவரும், துணைத்தலைவரும் போலிட்பீரோவிலும் முறையே அதே பதவிகளை வகிப்பார்கள்.

போலிட்பீரோவும், நிலைக்குழுவுந்தான் நாட்டைப் பொருத்தவரையிலும் பெரிய கொள்கைகளில் முடிவெடுக்கும் உயர் உறுப்புக்களாகக் கட்சியில் விளங்குகின்றன. இந்நிலைமை பண்பாட்டுப் புரட்சி ஆரம்பமாகும்வரை நீடித்தது. போலிட்பீரோவின் கொள்கைபற்றிய முடிவுகளெல்லாம் செயலகம் வாயிலாக அறிவிக்கப்பட்டன. செயலகம் போலிட் பீரோவின் முடிவுகளையும், கட்டளைகளையும் சம்பந்தப்பட்டத் துறைகளுக்கு அனுப்பி, அவைகள் நடைமுறைக்கு கொண்டு வரப்படுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யும். அரசாங்கத்தை யும், கட்சியையும், போர்ப்படையையும் இதர அரசாங்க உறுப்புக்களையும் தேசிய மக்கள் காங்கிரசின் அரவணைப்போடு போலிட்பீரோவே இயக்கிவந்தது. பண்பாட்டுப் புரட்சிக்கு முன்பு போலிட்பீரோ வாரத்திற்கொருமுறையோ அல்லது இருமுறையோ கூடியது. போலிட்பீரோவில் முதலில் 13 முழுஅந்தஸ்துடைய உறுப்பினர்கள் இருந்தார்கள். 1956ஆம் ஆண்டிலிருந்து 17 உறுப்பினர்கள் இருந்தார்கள். இதே ஆண்டில்தான் நிலைக்குழுவொன்று அமைக்கப்பட்டது. இந்த நிலைக்குழு போலிட்பீரோவில் ஒரு 'உள் அமைச்சரவை' (Inner Cabinet) போன்றிருந்தது. இக்குழுவில் மத்தியக் கமிட்டியின் தலைவரும் (மோ-சே-துங்), நான்கு துணைத்தலைவர் களும் (லியு, சாவோ-சி, சௌ-யென்-லாய், சூடே, சென்யுன்), ஒரு பொதுச்செயலாளரும் (டெங்சியாவோ-பிங்) இருந்தனர்.

ஆனால், 1958-க்குப் பிறகு மோ-சே-துங், சௌ-யென்-லாய் ஆகியவர்களைத் தவிர இதரர்கள் அவரவர்கள் பெற்றிருந்த பதவிகளில் தொடர்ந்திருந்தார்கள் என்று சொல்லமுடியாது. வேறு சிலரும் தொடக்கத்திலிருந்தவர்களுக்குப் பதிலாக புதிதாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். ஆனால், 1969ஆம் ஆண்டு ஜனவரி மாதம் போலிட்பீரோ அதன் செல்வாக்கை இழந்ததென்றாலும் மீண்டும் அதே செல்வாக்கை ஒன்பதாவது காங்கிரசின் கூட்டத்திற்குப்பிறகு பெற்றது.

**செயலகம் (Secretariat)**

1956ஆம் ஆண்டு கட்சி அமைப்புச்சட்டப்படி பார்த்தால் செயலகமும் கட்சியின் மேல்மட்டத்திலிருந்த உறுப்புக்களில் முக்கியமானதாக இருந்தது. கட்சியினுடைய அன்றாட அலுவல்களைத் திட்டமிட்டு நடத்திவந்தது. ஆனால், இச்செயலகம் மோ-சே-துங்கிற்கெதிராக இருந்த காரணத்தினால் பண்பாட்டுப் புரட்சி நடைபெற்ற காலத்தில் தன் செல்வாக்கை இழந்தது. இதனுடைய அலுவல்களைக் கவனிக்க, மத்தியக் கட்டுப்பாட்டுக்கழகம் (Central Control Commission), பொது அரசியல்துறை (General Political Department) போன்ற வேறுசில உறுப்புக்கள் ஏற்படுத்தப் பட்டன.

**வட்டாரக் கட்சி நிறுவனம் (Local Party Organisation)**

சீனக்கம்யூனிஸ்டுக் கட்சி பிரமிடைப் (Pyramid) போன்று அமைக்கப்பட்டிருக்கிறது. மேல்மட்டத்திலுள்ள அதன் மத்தியக்கட்சி உறுப்புகளில் ஆரம்பித்து, பூகோள அடிப்படையில் பிரதேசங்கள், மாநிலங்கள், தனிமாவட்டங்கள், கவுண்டிகள், மாவட்டங்கள் என்று கொம்யூன்கள்வரையிலும் தொழில்கள் அடிப்படையில், தொழிற்சாலைகள், அலுவலகங்கள், கல்வி நிலையங்கள், தெருக்கள் என்று இரண்டு மூன்று உறுப்பினர்களையோ அதற்கு மேற்பட்டவர்களையோ கொண்ட அமைப்புகள்வரை அது பரவியிருக்கிறது. ஒவ்வொரு மட்டத்திலுமுள்ள கட்சி அமைப்பு தேசிய மட்டத்திலுள்ளவாறே அமைக்கப்பட்டிருக்கிறது. கீழ்மட்டத்திலுள்ள கட்சி அமைப்புகள் அவைகளுக்கு மேல்மட்டத்திலுள்ள கட்சி அமைப்புகளுக்குக் கட்டுப்பட்டவையென்றாலும், ஜனநாயக அடிப்படையில் கீழ்மட்டத்திலுள்ள உறுப்புகளின் கருத்துகளுக்கும் முடிவுகளுக்கும் இயன்ற அளவு மதிப்புத் தரப்படு

கின்றன. கீழே தரப்பட்டுள்ள கட்டம் சீனக் கம்யூனிஸ்டுக் கட்சி எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கிறதென்பதை விவரிக்கிறது.

சீனக்கம்யூனிஸ்டுக் கட்சியின் வட்டார அமைப்பை
விளக்கும் கட்டம்

மத்தியமட்டங்கள்
|
பிரதேச மட்டங்கள்
|
மாநிலமட்டம்
|
(தனி மாவட்டம்)*
|
கவுண்டி
|
(மாவட்டம்)
|
ஆதார (அடிப்படை) மட்டங்கள்

*இக்குறியிட்ட அமைப்புகள், நிர்வாக சௌகரியத்தைக் கருத்தில் கொண்டு, அவைகளுக்கு மேல்மட்டத்திலுள்ள அமைப்புகளால் ஏற்படுத்தப்பட்டவைகளாகும்.

ஒவ்வொரு நிர்வாக மட்டமும் தனக்கென ஒரு கட்சிக் காங்கிரசைத் தேர்ந்தெடுக்கிறது. ஆனால், பிரதேசம், தனி மாவட்டம், மாவட்டம் ஆகிய மட்டங்கள், அவைகளுக்கு மேல் மட்டங்களிலுள்ள உறுப்புகளின் விசேஷ ஏஜென்சிகளாக இருப்பதால் தங்களுக்கென காங்கிரசுகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாது. எனவே, கட்சிக் காங்கிரசுகள் தேசிய மாநில கவுண்டி மட்டங்களிலுள்ள இடங்களிலும், அவைகளுக்குச் சமமான தன்னாட்சி, நகராட்சிப் பகுதிகளிலும்தான் தேர்ந்தெடுக்கப்பட்டுக் கூட்டப்படுகின்றன. பிரதேசம், மாவட்டம்போன்ற மட்டங்களிலுள்ள அமைப்புகள், கட்சித் தலைமையின் விருப்பத்திற்கும், ஆணைகளுக்குமிணங்க, மாநிலம் கவுண்டி ஆகியபகுதிகளில் கட்சியினுடைய கொள்கை

களையும், திட்டங்களையும் பரப்பும் தனி நிறுவனங்களாகத் திகழ்கின்றன. ஒவ்வொரு மட்டத்திலுமுள்ள இதரக் கட்சி அமைப்புகள் நேரிடையாக மேலேயுள்ள அமைப்புகளின் முடிவுகளை நடைமுறைக்குக் கொண்டுவரவேண்டும். கட்சிக் கொள்கைகளைப் பிரசாரம் செய்யவேண்டும். கொள்கைகள் பற்றிய பொதுமக்களின் கருத்துகளைக் கட்சித் தலைமைக்குத் தெரியப்படுத்த வேண்டும். புது உறுப்பினர்களைச் சேர்க்க வேண்டும். கட்சிக்குள் ஒற்றுமையையும், ஒழுங்கையும் காப்பாற்றவேண்டும். இவைகளையெல்லாம் காட்டிலும் ஆட்சிக் கழகங்கள் சரியாகப் பணியாற்றுகின்றனவாவெனக் கண்காணித்து அவைகளுக்கு வழிகாட்டவேண்டும். மார்க்ஸ், லெனின், மோ-சே-துங் போன்ற பெருந்தலைவர்களது சிந்தனைகளை மக்களிடம் மனதில் படியுமாறு எடுத்துச்சொல்லி அவர்களைத் திருத்தி, நல்லநிலைக்குக் கொண்டுவர அயராது உழைக்கவேண்டும்.

அரசியல், சமூக, பொருளாதாரத்துறைகளிலும் இதரத் துறைகளிலும் கட்சி எந்த அளவிற்குச் சீனுவில் அதிகாரம் செலுத்துகிறதென்பது கட்சியின் 1956ஆம் ஆண்டு அமைப்புச் சட்டத்தில் விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சீனுவில் கம்யூனிஸ்டுக் கட்சிதான் மிக உயர்ந்த நிறுவனமாகும். சீனுவின் அரசியல், பொருளாதார சமூகவாழ்வு அனைத்தும் கட்சியினுல் நடத்திவைக்கப்படுபவையே. சுருக்கமாகச் சொல்லவேண்டுமெனில் நாட்டின் உயிரெனப்படுவது கட்சியேயாகும். 1969ஆம் ஆண்டு கட்சி அமைப்புச்சட்டமும் இத்தத்துவத்தைப் பலமாக வற்புறுத்துவதோடு தோழர் மோ-சே-துங்கைத் தலைவராகக் கொண்ட கட்சி சிருஞ்சிறப்புமுடையதாக இருப்பதோடு மக்களுக்குப் பலதுறைகளிலும் நல்வழிகாட்டுவதாக அமைந்திருக்கிறதெனக் கூறுகிறது.

அதிகாரங்கள், மத்திய மட்டத்தில் கட்சித் தலைமை நிறுவனங்களான போலிட் பீரோவிடமும், நிலைக்குழுவிடமும் குவிக்கப்பட்டிருக்கின்றன. போலிட்பீரோ அல்லது நிலைக்குழு கட்சியின் கீழ்மட்டத்திலுள்ள இதர கிளை நிறுவனங்களுக்கு ஆணைகளைப் பிறப்பிக்கிறது. ஒவ்வொரு பகுதியிலுமுள்ள கட்சிக்குழுக்கள் அந்தந்தப் பகுதி சம்பந்தப்பட்ட அலுவல்கள், திட்டங்களெல்லாம் சரியாக நிறைவேற்றப் படுகின்றனவா என்பதைக் கவனித்துக் கொள்ள வேண்டும். அரசாங்க நிறுவனங்கள் கட்சிக் குழுக்களின் கருத்துகளுக்குச்

செவிசாய்த்து, அவற்றின் விருப்பப்படியே நடக்கவேண்டும் என்பது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

சீனக் கம்யூனிஸ்டுக்கட்சியின் துணை நிறுவனங்கள் அல்லது செல்வாக்குக் குழுக்களாக, இளைஞர் கம்யூனிஸ்டுக் கழகத்தையும் (Young Communist League), புதிய இளைஞர் நிறுவனங்களையும் (New Youth Organs), இளம் முன்னோடிகளையும் (Young Pioneers) கூறலாம். இவைகளெல்லாம், சீனக் கம்யூனிஸ்டுக்கட்சியின் கொள்கைகளை மக்களுக்கு எடுத்து விளக்குகின்றன. திட்டங்களை நிறைவேற்ற உதவுகின்றன. இவ்வமைப்புகளின் உதவியால் 'பண்பாட்டுப் புரட்சி' போன்ற பல இயக்கங்கள் வெற்றிகரமாக நடத்தப் பட்டிருக்கின்றன.

# 11. வரலாற்றுப் புகழ்பெற்ற பண்பாட்டுப் புரட்சி

## (The Great Cultural Revolution)

1960ஆம் ஆண்டு சமயத்தில் சீனவில் அதிகமான அளவிற்கு நிலவிய பிற்போக்குவாதத்தைப் (Revisionism) பற்றி மோ-சே-துங் கவலைகொண்டார். அவரது அப் போதையச் சிந்தனையெல்லாம் புரட்சிக்கு வாரிசுகளாகவும் உரிமையாளர்களாகவுமிருந்த இளைஞர்கள் மனத்தில் தனக்குப் பிற்காலத்திலும் புரட்சி நீடிக்கவும், அதன் நோக்கங் கள் அவர்களால் பின்பற்றப்படவும் ஊக்கத்தையும் உணர்வையும் எவ்வாறு ஏற்படுத்துவது என்பதைப் பற்றியே இருந்தது. மோ-சே-துங்கிற்கிருந்த முக்கியமான பிறிதொரு பிரச்சினை பொருளாதார முன்னேற்றம் பாதிக்கப்படாமல் நாட்டை எவ்வாறு நவீனப்படுத்துவது, அதிகாரவர்க்கத் தினர் ஆதிக்கம் மேலோங்காமல் தடுப்பதென்பதுமாகும்.

இவ்வாறு அவர் கவலைகொண்டு சிந்தனை செய்து வந்த அதே சமயத்தில் பிற்போக்குவாதம் மேலும் அதிகமாகப் பரவ ஆரம்பித்தது. அதற்குக் காரணமாக விளைபொருட்கள் குறைந்ததையும், முன்னேக்கிச்செல்லுந் திட்டம் எதிர் பார்த்த பலனைத் தரத்தவறியதையும், ரஷ்யர்கள் அதுகாறும் அளித்துவந்த பொருளாதார உதவிகளை நிறுத்தியதையும் தொழில் நுணுக்க அறிஞர்களை சோவியத் யூனியன் திரும்ப அழைத்துக் கொண்டதையும் முக்கியமாகக் கூறலாம். பொது மக்களில் பலரும், கட்சி மேல்மட்ட நிறுவனங்களின் உறுப் பினர்களில் சிலரும் இவைகளுக்கெல்லாம் காரணம் மோ-சே துங்கும் அவருடைய கொள்கைகளுந்தான் என்று காரசார

மாகக் குறைகூறி வந்தனர். இத்தகைய விவாதங்களால் பொருளாதாரத்துறையில், தளர்ச்சிநிலை ஏற்படவே, தனியார் துறைத்தொழில் முயற்சி தலைதூக்க ஆரம்பித்தது. எனினும், பொருளாதாரத்துறையில் சிறிது அபிவிருத்தி ஏற்பட்டதும், மோ-சே-துங் தன்னைக் குறை கூறியவர்களையும், பிற்போக்கு வாதத்தை ஆதரித்தவர்களையும் எதிர்த்துத் தாக்குத லொன்றைத் தொடுத்தார். இத்தாக்குதலுக்கு 1962ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்ட சோஷலிசக் கல்வி இயக்கம் (Socialist Education Movement) ஆதரவு தந்தது. இவ்வியக்கம் பண்பாட்டுப் புரட்சியின் முன்னோடியாகவும், அவசியமற்ற, குறிப்பாக, கட்சிக்குழுக்களின் தரக்குறைவிற்கும், குடியான வர்களின் சிறு சிறு புரட்சிகளுக்கும் அளிக்கப்பட்டுவந்த முக்கியத்துவம் போன்ற போக்குகளைச் சமாளிப்பதற்கும் தோற்றுவிக்கப்பட்டதெனப்படுகிறது. இவ்வியக்கத்தின் பலனாக நகர்ப்புறங்களிலிருந்த கட்சிக் குழுக்கள் நாட்டுப் புறங்களுக்கு அனுப்பப்பட்டுக் கொம்யூன்களிலிருந்த குடி யானவர்களோடு உழைக்குமாறு செய்யப்பட்டதோடு அவர் களுடன் தங்கி வாழுமாறும் பணிக்கப்பட்டனர். ஏழையாக வும் நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்களாகவுமிருந்த குடியான வர்களுக்குத் தன்னம்பிக்கையும், பொறுப்பும் ஏற்படுவதற்கு அதிக அளவில் உத்தியோகங்களும் தரப்பட்டன. குடியான வர்களும் மற்றவர்களும் மக்கள் விடுதலைப்படையை முன் மாதிரியாகக்கொண்டு நடக்குமாறும், மோ-சே-துங்கின் சிந்தனைகளைப் பலமுறை ஊன்றிப் படித்துச் சிந்திக்குமாறும் வற்புறுத்தப்பட்டார்கள். இவற்றிற்கெல்லாம் காரணமாக இருந்த இந்த இயக்கம் 1966ஆம் ஆண்டில் பிரதான இயக்க மான பண்பாட்டுப் புரட்சியில் இறுதியாக ஒன்று கலந்து விட்டது. இனிப் பண்பாட்டு இயக்கம் பற்றிய சில முக்கிய மான நோக்கங்களையும் அம்சங்களையும் காணலாம்.

பண்பாட்டுப் புரட்சியென்று சீனாவிலும் வெளிநாடு களிலும் பிரபலமாகப் பேசப்பட்ட இயக்கம் 1960ஆம் ஆண்டிலும், அதற்குப்பிறகும் சீனாவில் கல்வி, கலை, பண்பாடு, தொழில், கட்சி, இராணுவம், அரசாங்கம் போன்ற பல துறைகளிலும் மாற்றம் அல்லது சீர்திருத்தம் கருதி நடை பெற்ற பேரியக்கமாகும். முக்கியமாக மோ-சே-துங்கின் கருத்துப்படி கட்சியின் பல முக்கியமான நிறுவனங்களில் அங்கம் வகித்த தலைவர்களிடம் காணப்பட்ட பழைமையையும், பிற்போக்குவாதத்தையும், அவர்களுக்கிருந்த எதிர்ப்பை யும் நசுக்குவதற்காக ஏற்பட்டதாகும். இவ்வியக்கத்தின்

தோற்றத்திற்கான மற்றொரு காரணம் சீனஇராணுவம் எவ்வாறு அமைக்கப்பட வேண்டுமென்பதில் தலைவர் களிடையே காணப்பட்ட நீக்கமுடியாத கருத்து வேற்றுமை யாகும். இக்கருத்துவேற்றுமை, இராணுவம் நவீன சாதனங் களுடன் கூடியதாக அமைக்கப்படவேண்டுமோ அல்லது பழையமாதிரி கொரில்லா முறைக்குச் சாதகமாக அமைக்கப் படவேண்டுமோ, பொருளாதார நோக்கங்களையடைவதற் குப் பயன்படுத்தப்படலாமா, கூடாதா என்பதேயாகும். இராணுவத் தலைவர்கள் முக்கியமாகத் தலைமைத் தளபதி லோஜூய்-சிங் (Lojui-Ching) நவீனமுறையில் அமைக்கப்பட வேண்டும், பொருளாதார நோக்கங்களையடைவதற்குப் பயன் படுத்தக் கூடாதென்றனர். ஆனால், இராணுவ அமைச்சராக இருந்த லின் பியோ (Lin Piao) இதற்கு நேர்மாறான கருத் துடையவராக இருந்தார். லின்பியோவின் கருத்து மோ-சே-துங்கின் கருத்திற்கிசைந்ததாக இருந்தது. ஆகையால் இராணுவத் தலைமைத் தளபதி அஞ்ஞாதவாசம் செய்ய வேண்டியவரானார். லின்பியோ மோ-சே-துங்கை பலமாக ஆதரித்ததால் மோ-சே-துங் இராணுவத்தின் உதவியைக் கொண்டு கட்சியிலிருந்த எதிர்ப்பாளர்களை ஒழித்து, இராணுவம் தன்னை ஆதரிப்பதைப்போலக் கட்சியும் அதைப் பார்த்து தன்னை ஆதரிக்கும்படி செய்யவேண்டுமென விரும்பினார்.

பண்பாட்டுப் புரட்சியின் முதல் கட்டம் 1965ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் நடைபெற்ற மத்தியக்குழுவின் கூட்டத்தில் மோ-சே-துங்கினால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. அப்போது பீகிங்கின் மேயரும், போலிட்பீரோவின் உறுப்பினருமான பெங்சென் (Peng Chen) என்பவரது தலைமையில் கட்சியின் உயர்அலுவலர்கள் ஐந்து பேர்களைக்கொண்ட ஒரு குழு அமைக்கப்பட்டது. அதே சமயத்தில், பிற்போக்குக் கருத்து களைப் பரப்பிவந்ததாகக் கருதப்பட்ட சீன அறிஞர்கள், கட்சிப்பிரசார நிறுவனம் ஆகியவற்றைத் தாக்குவதற்காக மோ-சே-துங் மூன்று ஆதார அமைப்புகளைத் தேர்ந்தெடுத் தார். அவைகளாவன: முதலாவது இராணுவம், இரண் டாவது சாங்கை (Shanghai) கட்சி நிறுவனம்; மூன்றாவது சென்போ-டா (Chenpo-Ta)வால் நடத்தப்பட்ட 'செங்கொடி' (Red Flag) என்னும் கொள்கையைப் பரப்பிவந்த சஞ்சிகை. சென்போ-டா முதலில் மோ-சே-துங்கின் அந்தரங்கச் செயலாளராக இருந்தார். அவரை உண்மையாகப் பின்பற்றி நடந்தவர்.

பண்பாட்டுப் புரட்சி இயக்கத்தின் முதல் மோதல் 1965ஆம் ஆண்டு நவம்பர் மாதம் ஆரம்பமாயிற்று. அம்மோதலில் கம்யூனிஸ்டுக் கட்சியைச்சேராத ஆனால், பிகிங்கிற்கு உதவி மேயராக இருந்த வூகன் (Wuhan) என்பவர் சாங்கை பத்திரிகையொன்றால் தாக்கி எழுதப் பட்டார். பல மாதங்கள் நடைபெற்ற அந்தப் போராட்டத்தில் மோ-சே-துங் வெற்றிபெற்றார். இவ்வாறு அடுத்தடுத்து தலைவர்களுக்கிடையிலும், பல குழுக்களுக்கிடையிலும், நிறுவனங்களுக்கிடையிலும், மாணவர்களுக்கும் கட்சித் தலைவர்களுக்கிடையிலும் பல மோதல்கள் 1969ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம்வரை நடைபெற்றவண்ணமிருந்தன. இந்த மோதல்களில் பல தலைவர்கள் தங்கள் பதவிகளை இழந்தனர். புதியவர்கள் பல பதவிகளைப் பெற்றனர். சிலசமயங்களில் கருத்துவேறுபாடு கொண்டிருந்தவர்களிடையே சமரசம் ஏற்பட்டு மீண்டும் அவர்கள் சேர்ந்து பணியாற்றினர். இந்த பண்பாட்டுப் புரட்சி இயக்கத்தினால் சீனா, சமூகப்பொருளா தார, அரசியல் துறைகளில் பல்லாற்றானும் அலைக்கழிக்கப் பட்டபோதிலும் இறுதியில் ஒற்றுமையும் பலமுமுடைய நாடாக எழுந்ததோடு, சீனாவின் அசைக்கமுடியாத ஒப்பற்ற தலைவராக மோ-சே-துங் ஏற்றுக்கொள்ளப்பட்டார் என்பதை யும் குறிப்பிடவேண்டும். இவ்விடத்தில், அப்புரட்சியை முடிவிற்குக் கொண்டுவந்தது கட்சியின் ஒன்பதாவது காங்கிரஸ்தான் என்பதையும் நினைவில் கொள்ளுதல் நல்ல தாகும். இந்த ஒன்பதாவது காங்கிரஸ் 1969ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதியன்று மோ-சே-துங்கினால் தொடங்கிவைக்கப்பட்டு 24ஆம் தேதிவரையிலும் தொடர்ந்து நடைபெற்றது.

'1969ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் கூடிய ஒன்பதாவது காங்கிரஸ் பதிமூன்று ஆண்டுகளுக்குப் பிறகு கூட்டப்பட்ட முதல் காங்கிரசாகும். அது பண்பாட்டுப் புரட்சியின்போது ஏற்படுத்தப்பட்ட மாறுதல்களை ஏற்றுக்கொள்வதற்காகவும், மோ-சே-துங்கிற்கு எதிராக இருந்த தலைவர்கள் கட்சியிலும், அரசாங்கத்திலும் வகித்திருந்த பதவிகளிலிருந்து விலக்கப் பட்டதை ஆமோதிப்பதற்காகவும், கட்சியில் மீண்டும் மனோ பலத்தைத் தோற்றுவிப்பதற்காகவும், கட்சியினுடைய புதிய அமைப்புச்சட்டத்தை ஆமோதிப்பதற்காகவும், கட்சிக்குள் புரட்சியின் தத்துவங்களை வலியுறுத்தி நடைமுறைக்குக் கொண்டுவரத்தக்க புதிய நிறுவனங்களை ஏற்படுத்துவதற்கும்

கூட்டப்பட்டது.'[1] எட்டாவது காங்கிரசைப் போலல்லாமல் இந்தக் காங்கிரசில் நிகழ்த்தப்பட்ட பேச்சுகள் வெளியிடப் படவில்லை. கூட்டத்தின் நடைமுறைபற்றிய நிகழ்ச்சிகளும் தரப்படவில்லை. இதில் 1512 பிரதிநிதிகள் கலந்து கொண்டார் கள். மோ-சே-துங் காங்கிரசின் கூட்டத்தை முறைப்படியாகத் தொடங்கிவைத்தார். காங்கிரசின் நிகழ்ச்சி நிரலில் லின் பியோவினால் தாக்கல் செய்யப்படவிருந்த அரசியல் அறிக்கை யும் (Political Report) புதிய கட்சி அமைப்புச் சட்டத்தின் ஆமோதிப்பும், புதிய மத்தியக்குழுவின் தேர்தலும் இடம் பெற்றிருந்தன.

காங்கிரசின் கூட்டம் முடிந்தபிறகு வெளியிடப்பட்ட லின் பியோவினால் தயாரிக்கப்பட்ட அரசியல் அறிக்கை மோ-சே-துங்கின் சிந்தனைகளை அறிவின் பிறப்பிடமாகக் கருதியது. பண்பாட்டுப் புரட்சியின்போது நடைபெற்ற நிகழ்ச்சிகளைத் தொகுத்துரைத்தது. சீன அரசின் தலைவராக இருந்த லியோ-ஷா-சி (Liu-Shaw-Chi) செய்த குற்றங்களையும், கட்சியிலிருந்த வேறுசிலர் ஈடுபட்டிருந்த தகாத நடவடிக்கை களையும் விரிவாக எடுத்துக்காட்டி கண்டனம் தெரிவித்தது. பண்பாட்டுப் புரட்சிக்குப்பிறகு கட்சியைச் சீர்திருத்தும் பணியில் புதிய புரட்சிக்குழுக்கள் முக்கியப் பங்கேற்கும் என்று சொல்லப்பட்டது. இந்த அறிக்கையின் முடிவில் வெளிநாடு களுடன் சீனாவில் உறவு பற்றிய கருத்தும் தெளிவாக்கப் பட்டது. அதன்படி சீனாவைப் பொறுத்தவரை அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்குப் பதிலாக சோவியத் யூனியன்தான் முதலாவது எதிரி என்று அறிவிக்கப்பட்டது.

கட்சியின் புதிய அமைப்புச் சட்டம் ஏப்ரல் மாதம் பதி னான்காம் தேதி காங்கிரசால் நிறைவேற்றப்பட்டது. இந்த அமைப்புச்சட்டப்படி, தற்காலிகமாக அமைக்கப்பட்ட பிரீசிடியத்திற்கு 176 பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இவர்களில் 25 விழுக்காட்டினர்தான் அதற்கு முன்பு கட்சியில் முக்கியப் பதவிகளில் இருந்தவர்களாவர். மற்றவர்கள் புதிய வர்கள். இவர்களில் பெரும்பாலோர் புதிய மத்தியக்குழு உறுப்பினர்களாக இரகசிய வாக்கெடுப்பு அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். புதிய மத்தியக் குழுவில் முழு உரிமைகளும் பெற்ற உறுப்பினர்களாக 170 பேர்களும், மாற்று உறுப்பினர்களாக 109 பேர்களும் ஆகமொத்தம் 279

---

[1] D. J. Waller: The Government and Politics of China Page 75.

பேர்கள் இருந்தார்கள். இந்த 279 பேர்களின் பெயர்களைக் கொண்ட பட்டியலில் தலைவர் மோ-சே-துங்கின் பெயரும், துணைத்தலைவர் லின்பியோவின் பெயரும் தலைமையிடங்களைப் பெற்றன. இந்த உறுப்பினர்களில் 123 பேர் இராணுவத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். மத்தியக்குழுவில் இதற்கு முன் இருந்தவர்களில் 52 பேர்கள் தான் புதிய குழுவில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். மொத்தமிருந்த 29 புரட்சிக் குழுக்களின் தலைவர்களும் இதில் இடம் பெற்றார்கள். இவ்வாறு புதிய மத்தியக்குழுவில் சீனக்கம்யூனிச இயக்கத்தின் தந்தையாகக் கருதப்படும் மோ-சே-துங்கின் ஆதரவாளர்கள் பலர் சேர்த்துக்கொள்ளப்பட்டதால், அவருக்கிருந்த எதிர்ப்பு மறைந்து, மீண்டும் அவர் பெருந்தலைவராகப் போற்றப் பட்டார்.

மத்தியக்கமிட்டி மாற்றியமைக்கப் பட்டவாறே போலிட் பீரோவும், நிலைக்குழுவும் மோ-சே-துங் ஆதரவாளர்களைக் கொண்டதாகத் திருத்தியமைக்கப்பட்டது. போலிட்பீரோ 21 முழு உறுப்பினர்களும், நான்கு மாற்று உறுப்பினர்களும், மொத்தத்தில் 25 பேர்களைக்கொண்டதாக அமைக்கப் பட்டது. இதில் இடம் பெற்றவர்களில் மோ-சே-துங், லின் பியோ, லியூபோ-செங், சியாங்சிங், சூடே, சென்போ—டா, சௌ-யென்-லாய் ஆகியோர் முக்கியமானவர்கள். நிலைக்குழு ஐந்து பேர்களைக்கொண்டதாக அமைக்கப்பட்டது. அவர்கள் பெயர்கள் வருமாறு: மோ-சே-துங், லின்பியோ, சென்போ-டா சௌ-யென்-லாய், காங்ஷெங் (Kang Sheng). இவ்விரண்டு உறுப்புக்களிலும் இடம் பெற்றிருந்த மோ-சே-துங்கும் அவர் வாரிசாகக் கருதப்பட்ட லின்பியோவும் தலைவர்கள் வரிசையில் முன்னணியில் இருப்பவர்களாகக் கருதப்பட்டனர். அந்த வரிசையில் சௌ-யென்-லாய்க்கு மூன்றாவது இடம் தரப் பட்டது.

புதியதாக அமைக்கப்பட்ட போலிட்பீரோவில் இராணுவத்தைச் சேர்ந்த பதிமூன்று பேர்கள் இருந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்க அம்சமாகும். இவர்களில் சூடேயும், லின்பியோவும்,லியுபோ-செங்கும் இராணுவத்தில் 'மார்ஷல்' அந்தஸ்துடையவர்களாவர். இராணுவத்தைச் சேராதவர்களாக இருந்த பன்னிரண்டு பேர்களில் இருவர் மோ-சே-துங்கின் மனைவியான சியாங்சிங்கும், லின்பியோவின் மனைவியான யே-சுன்னும் (Yeh-Chiun) ஆவர். யேசுன் 1966ஆம் ஆண்டு டிசம்பர் மாதம்தான் பொது வாழ்வில் ஈடுபாடு

கொண்டு செயலாற்றினர். 1667ஆம் ஆண்டு ஜனவரி மாதம் வரை பலருக்கு அவர் லின் பியோவின் மனைவி என்று தெரியாது. சியாங்சிங் மோ-சே-துங்கின் நான்காம் மனைவியாவார். இவர்கள் இரண்டுபேரும் 1939இல் திருமணம் செய்துகொண்டார்கள். சியாங்சிங், பண்பாட்டுப்புரட்சியில் ஈடுபட்டு பிறகு அதன் தலைவரானர்.

இதர மத்திய மட்டத்திலான கட்சி உறுப்புகளைப்பற்றியும் (குறிப்பாகச் செயலகம்) அவற்றின் அந்தஸ்து பற்றியும் ஒன்பதாவது காங்கிரசால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கட்சியின் அதன் புதிய அமைப்புச்சட்டத்தில் நேரிடையாக எதுவும் சொல்லப்படவில்லை. இச்செயலகத்தில் மொத்தமிருந்த பதின்மூன்று உறுப்பினர்களில் ஒன்பதுபேர் பண்பாட்டுப் புரட்சியின்போது பதவிநீக்கம் செய்யப்பட்டார்கள். மீதமுள்ள முன்னுள் உறுப்பினர்களான காங்ஷெங் (K'angsheng), லிபு-சுன் (Lifu-Ch'un), லிசியேன்-நியேன் (LiH-Sien-nien), லிசு-பெங் (Li-Hsueh-feng) என்ற நால்வரும் அரசியலில் முக்கியமான இடங்களில் இன்னும் பதவி வகிக்கிறார்கள். மேலும், கட்சிக்கட்டுப்பாட்டுக்குழு (Party Control Commission), மத்தியக்குழு நேரிடை மேற்பார்வையில் செயலாற்றி வந்த பத்து துறைகள், அவற்றின் உறுப்பினர்கள் என்ன ஆனூர்கள் என்பது பற்றித்தகவல் கிடையாது. மத்திய மட்டத்தில் இப்போது அளவில் குறைந்த கட்சி நிறுவனந்தான் செயலாற்றுகிறது. கட்சியின் கீழ்மட்டங்களிலும், மத்திய மட்டத்தில் செய்யப்பட்டது போன்ற மாற்றங்கள் செய்யப்பட்டிருக்கின்றன என்று தெரியவருகிறது.

மேற்சொல்லப்பட்டவாறு கட்சியின் எல்லா மட்டங்களிலும் பண்பாட்டுப் புரட்சியின்போதும், அதற்குப்பிறகும் பல மாறுதல்கள் செய்யப்பட்டதென்றாலும், இராணுவப் படைகளிலும், கட்சியின் மேல்மட்டத்திலும் இன்றும் அதாவது 1971-லும் பலபதவிகள் காலியாகவே இருக்கின்றன. 1971ஆம் ஆண்டின் ஆச்சரியப்படத்தக்கதும் முக்கியமானதுமான மாற்றம், கட்சியின் துணைத்தலைவராகவும், பாதுகாப்பு அமைச்சராகவும், மோ-சே-துங்கின் வலதுகரம் போன்றவராகவுமிருந்த லின்-பியோவின் வீழ்ச்சியெனலாம்.

1971ஆம் ஆண்டு கூட்டப்படுவதாக இருந்த தேசிய மக்கள் காங்கிரசின் நான்காவது கூட்டம் எப்போது நடைபெறுமென்று 1972ஆம் ஆண்டு வந்தபிறகும் தெரியவில்லை.

கூட்டப்படவிருக்கும் தேசிய மக்கள் காங்கிரசின் முக்கிய அலுவல் பண்பாட்டுப் புரட்சியின்போது காலியான அரசாங்கப் பதவிகளுக்கு ஆட்களை நியமிப்பதாகும். சான்றாக தற்போது ஒன்பது அமைச்சர்கள்தான் பதவியிலிருக்கிறார்கள். மேலும், 26 துறைகளுக்குத் தலைவர்கள் அதாவது அமைச்சர்கள் தேசிய காங்கிரசால் நியமிக்கப்படவேண்டும். இந்நியமனங்கள் ஒருக்கால் 1972இல் செய்யப்பட்டாலும் படலாம்.

பண்பாட்டுப்புரட்சி முடிவு பெற்ற பிறகும் கூட சீனக் கம்யூனிஸ்டுக் கட்சியில் உட்பூசல்களும் தலைமைப்பதவிக்கான போட்டிகளும் மறைந்ததாகத்தெரியவில்லை. எடுத்துக் காட்டாக இதே அத்தியாயத்தில் பிறிதோரிடத்தில் லின்பியோவின் வீழ்ச்சிகுறிப்பிடப்பட்டது. இவரைத்தொடர்ந்து சீனக் கம்யூனிஸ்டுக்கட்சியின் முக்கிய கொள்கைவாதியான சென்போ-டாவும், காங்ஷெங்கும் இப்போது இருக்கும் இடம் தெரியவில்லை. இராணுவத்திலும் தலைமைத்தளபதியான யூங்-ஷெங்கும் (Yung-Sheng), ஆகாயப்படைத்தளபதியான ஊபா-சியனும் (WuFo-Hsien) செல்வாக்கிழந்து விட்டார்களென்றுதெரிகிறது.

மேற்கூறியவாறே, ஒன்பதாவதுகட்சிக் காங்கிரசால் தேர்ந்தெடுக்கப்பட்ட 25 போலிட்பீரோ உறுப்பினர்களில் தற்சமயம் 12 பேர்களே பொதுநிகழ்ச்சிகளில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். மற்றவர்கள் என்ன ஆனார்கள் என்பது தெரியவில்லை. நிலைக்குழுவிலிருந்த ஐந்து உறுப்பினர்களில் மோ-சே-துங்கும், சௌ-யென்-லாயும்தான் அரசியல் விவகாரங்களிலும், அரசாங்க, கட்சி அலுவல்களிலும் தீவிரமாக இருக்கின்றார்கள். இதர மூன்று உறுப்பினர்கள் நிலைக்குழு உறுப்பினர்களாக இருப்பதாகத்தோன்றவில்லை.

மோ-சே-துங்கின் மனைவியான சியாங்சிங் மோவுக்கும், சௌயென்-லாய்க்கு அடுத்தபடியாகக் கட்சியில் இப்போது மூன்றாவது இடத்தைப் பெற்றிருக்கிறார். சௌ-யென்-லாய் இரண்டாம் இடத்தைப் பெற்றிருக்கிறார். எழுபத்து மூன்று வயதான யேசியன்-இங் (Yeh-chien-Ying) நான்காம் இடத்தைப் பிடித்துக்கொண்டிருக்கிறார். துணை ஜனாதிபதியாக உள்ள 85 வயதான துங்பி-ஊ (Tungpi-wu) என்பவர் ஜனாதிபதியின் அலுவல்களைக் கவனித்து வருகிறார். லியுசா-சி, பண்பாட்டுப் புரட்சியின்போது ஜனாதிபதி பதவியிலிருந்து

விலக்கப்பட்டபிறகு அப்பதவிக்கு வேறு எவரும் இதுகாறும் நியமிக்கப்படவில்லையென்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இதுவரையிலும் சொல்லப்பட்டுள்ளவற்றிலிருந்து பொதுவாக நாம் அறியக் கூடியது, சீனக் கம்யூனிஸ்டுக்கட்சியையும், அரசாங்கத்தையும் பற்றித் திட்டவட்டமாக எதையும் நாம் முடிவு செய்ய முடியாதென்பதாகும். எனினும் அரசின் அன்றாட அலுவல்களில் சௌ-யென்-லாய் தனக்கென உறுதியான இடத்தைப் பிடித்துக்கொண்டிருக்கிறாரென்பதும், செயல் நோக்கோடு கூடிய கொள்கைகளைப் பின்பற்றுகிறாரென்பதும் அரசியல் நோக்காளர்களின் ஆய்வுரைகளிலிருந்து தெரியவருகிறது. மோ-சே-துங்கின் பங்கு பணி என்னவென்பது இன்னுமோர் யூகமாக இருக்கிறதென்று அவர்கள் கருதினாலும், கட்சியின் மாபெருந்தலைவராக அவர் தொடர்ந்திருந்து வருகிறாரென்றும், எல்லாவற்றையும் அதாவது அரசாங்கத்தையும், கட்சியையும் ஆட்டிப்படைக்கும் வல்லாற்றலுடையவராகத் திகழ்கிறாரென்றும் சொல்கிறார்கள்.

## மேலும் படிக்கவேண்டிய நூல்கள்

G. M. Kahim : Major Government of Asia

Lineharger and Others : Far Eastern Government and Politics-China and Japan

Peter S. H. Tang, : Communist China Today

D. J. Waller : The Government and Politics in China.

# 1. அரசியல் முறையின் ஆதாரங்கள்

**முன்னுரை**

வளர்ந்து வரும் நாடுகளின் துன்பம் உலக நாடுகளின் அக்கறையாகியிருக்கிறது. அவைகளின் தேவைகள், அவைகளின் பிரச்சினைகள், அவைகளின் கோரிக்கைகள், அவைகளின் நன்றியுடைமையெல்லாம், அரசியல் மேதாவிகள், பன்னுட்டு சிவில் ஊழியர்கள், வரிகொடுப்போரெல்லாம் கவனம் செலுத்தும் துறைகளாகியிருக்கின்றன. அவைகளினுடைய அரசியல், பொருளாதார முன்னேற்றத்திற்கான சாத்தியக்கூறுகள்பற்றி நிறைய எழுதப்பட்டிருக்கின்றன. எதிர்காலத்தில் நம்பிக்கையுள்ளவர்களும், நம்பிக்கையற்றவர்களும் புது நாடுகள், நாட்டினுள் ஒற்றுமையின்மையைப் போக்கி பரம்பரை பரம்பரைத் தன்மையிலாழ்ந்துள்ள சமூகங்களுக்கேற்ப நவீன அரசாங்க நிலையங்களை ஏற்று நடத்தும் சக்தியுடையவைகளா என்பதைப்பற்றிய கேள்வியில் இறங்கியிருக்கிருர்கள். அதிகரித்துக்கொண்டேவரும் அவைகளினுடைய மக்கள்தொகைகளின் வேகத்தைக் கட்டுபடுத்தவும், தேவையான முதலீட்டைப்பெற்று, பொருளாதாரத்தைப் பெருக்கவும் முடியுமா என்பன போன்ற கேள்விகள் நிலவுகின்றன. அரசியல் பொருளாதார முன்னேற்றம் பற்றிய புள்ளிவிவரங்கள் எவ்வளவுதான் சேகரிக்கப்பட்டாலும் அவைகளைக்கொண்டு, அந்நாடுகளின் சக்தியை மதிப்பிடுவது கடினமாக இருக்கிறது. அமெரிக்க, பிரித்தானிய அனுபவங்கள் எந்த அளவிற்கு இந்த நாடுகளைப் பொறுத்தவரையிலும் பொருத்தமாக இருக்கும், பின்பற்ற முடியுமென்பது சந்தேகமாகவே இருக்கிறது. இருப்பினும் அத்தகைய அம்சங்கள் நிலையான அரசியல் முறைகளுக்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் உதவக்கூடுமென்று சொல்லலாம்.

வளர்ந்து வரும் நாடுகளில் ஜனநாயகம் தழைத்து வளர்வதற்கான வாய்ப்புகள் பிலிப்பைன் நாட்டில் இருப்பதாகக் கருதப்படுகிறது. ஏனெனில் அங்கு அரசியல் மாறுதல்களும் திடத்தன்மையும் சீராக இருப்பதால் பொருளாதார வளர்ச்சிக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. சுதந்திரம் கிடைத்ததிலிருந்து மும்முறை நடந்த தேர்தல்களில் ஆட்சியில் 'உள்ளே' இருந்தவர்கள் 'வெளியே' அனுப்பப்பட்டதோடு செல்வாக்கு பெற்றத் தலைவர்கள் இறந்தபோது முன்பின் நன்கு அறிமுகமாகாத உதவி ஜனாதிபதிகள் இருமுறை தேசியத் தலைவர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டனர். நான்காண்டுகால ஜப்பானிய ஆக்கிரமிப்பும், பொருளாதார அழிவும் சுதந்திரத்திற்கு வழிகோலின. இருப்பினும் பதினைந்து ஆண்டுகள் கழித்து கம்யூனிஸ்டுகளின் புரட்சியை அடக்கி, சிறந்த முன்னேற்றத்திற்கான அடிப்படையை அவர்கள் போட்டார்கள். குடியரசில் அவ்வப்போது பலாத்காரமும், லஞ்ச ஊழலும் மலிந்திருந்தாலும் முன்னேற்றத்தை அடைவதற்காகவும், சச்சரவுகளை அகற்றுவதற்காகவும் பிலிப்பைன் நாட்டினர் ஜனநாயக முறையை ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். அந்நாட்டினரின் வாழ்க்கை அவர்கள் மேற்கொண்டிருக்கின்ற சமூக மாறுதல்களுக்குப் பலியிடப்படலாம். தலைவர்கள் இம்முடிவுகளையெல்லாம் மேற்கொள்கிறார்களோ இல்லையோ, வெற்றி நம்பிக்கையைத்தரும் என்றும் அதனால் ஜனநாயகம் வளரவும், மாறுதல்கள் ஏற்படவும் வழிகோலுமென எதிர்பார்க்கப்படுகிறது.

இதர வளர்ந்து வரும் நாடுகளைப்போன்று பிலிப்பைன் நாடும் வேளாண்மைத்துறையில் அதிக ஈடுபாடுடைய சமூகத்தையுடையதாகும். அச்சமூகத்திலுள்ள அரசியல் முறை, மரபடிப்படையில் வரும் சமூக, பொருளாதார முறைகளால் நெடுங்காலமாகக் கட்டுப்படுத்தப்பட்டு வந்ததாகும். சில பெரிய நிலச்சுவான்தார்கள் அந்நாட்டுப் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தி வந்தனர். அவர்களே சமூக அரசியல்துறைகளிலும் முன்னணியிலிருந்தனர். தொழில் துறையில் முன்னேற்றமடைந்துவரும் பலர் இப்போது அந்த நிலச்சுவான்தார்களது ஆதிக்கத்தை எதிர்க்க ஆரம்பித்திருக்கின்றனர். அல்லாமலும், கல்வி, போக்குவரத்து, செய்தி சாதனங்களில் ஏற்பட்டிருக்கும் வளர்ச்சியும் நாட்டின் மூலாதாரங்கள் பரவலாக பொது நன்மையை நோக்கமாகக் கொண்டு பயன்படுத்தப்படவேண்டும் என்பதற்கு ஆதார

மாக அமைந்திருக்கிறது. இந்த மாறுதல் நடைமுறையிலுள்ள அரசியல் கட்டுக்கோப்புக்குள் மேற்கத்திய உதாரணத்தையும், அரசியல் துறையில் ஏற்பட்டுவரும் அதிகமான ஈடுபாட்டினாலும் ஏற்பட்டு வருகிறது.

இத்தகைய மாபெரும் முன்னேற்றங்கள் பல பெரிய இடையூறுகளுக்கும், தடைகளுக்குமிடைய சாதிக்கப்படுகின்றன. மரபு அடிப்படைச் சமூகங்களில் காணப்படும் தன்மைகள் பிலிப்பைன் சமூகத்திலும் காணப்படுகின்றன. அவைகளில் முக்கியமாக, நேருக்குநேர் உறவுகள் அல்லது தொடர்புகள், சட்ட, நீதிகளுக்கப்பாற்பட்ட குடும்பப்பிணைப்புகளைக் குறிப்பிடலாம். மேலும், பிலிப்பைன் கத்தோலிக்கச் சமயஞ் சார்ந்ததாக இருப்பதால், சொத்துரிமைகள், சமூகக் கட்டுப்பாடுகள் போன்றவற்றிற்கு அதிக மதிப்புத் தருவதால் ஜனநாயக நடைமுறைகளும், நிகழ்முறையில் சாத்தியமான நடவடிக்கைகளும் சமாதானமுறைகளும் நிலவுவதற்கு வழியில்லாமல் போகிறது. பல்லாண்டுகளாக குடியேற்ற நாடாக இருந்ததாலும் அந்நாடு தளர்ந்துபோய் தேசிய ஒற்றுமை பற்றியத் தெளிவான நோக்கமில்லாதிருக்கிறது. சுருக்கமாக, வளர்ந்துவரும் நாடுகள் என்னென்ன அல்லது எத்தகையப் பிரச்சினைகளைச் சமாளிக்கவேண்டியிருந்தனவோ அவையனைத்தையும் பிலிப்பைன் நாடும் பெற்றிருந்தது. எனினும், இது வரையிலும் அது இதர நாடுகளைவிட நல்லமுறையில் அவைகளைச் சமாளித்து வந்திருக்கிறது.

பிலிப்பைன் நாட்டு அரசியல் முன்னேற்றம் வரலாற்று அனுபவத்தையும், பண்பாட்டு வகைகளையும் பொறுத்து வெற்றி பெற்றிருக்கிறது. ஸ்பானிய குடியேற்றக் கொள்கை கத்தோலிக்க திருச்சபையின் வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டிருந்ததால் அம்மதம் பிலிப்பைன் தீவுகள் முழுவதும் விரைவாக வளர்ந்தது. ஸ்பானிய ஆட்சியால் ஏற்படுத்தப்பட்ட அரசியல் நிறுவனங்களும், பொருளாதார வகைகளும் சமய நிறுவனங்களின் செல்வாக்கு உயர உதவி புரிந்தன. முக்கியமான பிராந்திய வேற்றுமைகள் இருந்தபோதிலும், முன்னூறு ஆண்டுகால ஸ்பானிய ஆட்சி பிலிப்பைன் அரசியல் அடிப்படையில் பலரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய நாடாகவும், கிறித்துவ இனமாகவும் ஆயிற்று. அமெரிக்கக் குடியேற்றக் கொள்கை அந்நாட்டை முதலில் தன்னாட்சிக்கும், பிறகு சுதந்திரத்திற்கும் தயார் செய்தது. அமெரிக்கர்கள் பிலிப்பைன் அரசியல் நடவடிக்கையில் ஈடுபடுவதற்கும், அந்த

அடிப்படையில் ஒற்றுமை காணவும் வசதியாக இருக்கும் பொருட்டு மக்களுடைய கருத்துகளை திரட்டியதோடு கல்வி, அரசியல் சார்புடைய நிலையங்களின் வளர்ச்சியை ஏற்படுத்தினர். இச்சூழ்நிலையில் பிலிப்பைன் நாட்டினர் 1946 இல் சுதந்திரம் பெற்றபோது சட்டப்பூர்வமான குடியரசொன்றை நிறுவவும், தேசிய ஒற்றுமையைப் போற்றிப் பாதுகாக்கவும் உறுதியான நம்பிக்கையுடையவர்களாக இருந்தனர்.

அரசியல் ஒற்றுமையும், அரசியல் நடப்பும் ஏற்றுக் கொள்ளப்பட்டதனால் அரசியல் வளர்ச்சி பிலிப்பைனில் சீராக வளர்ந்தது. இது அந்நாட்டிற்கு ஒளிமிக்க எதிர்காலமிருக்கிறதென்பதைக் காட்டுகிறது. இத்தகைய விரைவான அரசியல் வளர்ச்சிமாற்றம் மூன்று நோக்கங்களையடைய உதவியிருக்கிறது. முதலாவதாக, நேரிடை பொருளாதார முன்னேற்றமேற்படவும், பொருளாதாரக் குழுக்களிடையே ஏற்படும் போட்டிகளை நடைமுறை சாத்தியமான வழிகளில் தீர்த்துவைக்கவும் அது ஏற்றுக்கொண்டிருக்கிறது. இரண்டாவதாக, பிளவுபட்டு சிரழிந்து கொண்டிருந்த சமூக குழுக்களை ஒருங்கிணைத்து, இனம் என்ற பெருமையை அது தேடித் தந்திருக்கிறது. ஏனெனில் ஒவ்வொரு குடிமகனும் மத்திய அரசாங்கத்துடன் நேரிடைத் தொடர்பு கொண்டிருப்பதோடு வட்டார அரசியல் தலைவர்கள் மூலமாக அதன் பொருளாதார வசதிகளையும் பெறுகின்றனர். இது நகர்ப்புறத்திலிருப்பவர்களுக்கும், நாட்டுப்புறத்திலிருப்பவர்களுக்குமிடையிலும் பிலிப்பைனியர்களுக்கும், சினர்களுக்குமிடையிலும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைத் தோற்றுவித்தபோதிலும் அரசியல் திடத்தன்மையை தோற்றுவிக்கவில்லையென்பது குறிப்பிடத் தக்கது. இறுதியாக, அது சமூகம் பின்பற்றும் சில குறிப்பிட்ட முறைகளுக்கும் முடிவுகளுக்கும் நியாயமெனும் முத்திரையை வழங்குகிறது. அம்முறை நாட்டை நவீனப்படுத்தும் முயற்சியில் வெற்றி பெற்றிருப்பதோடு, மக்களும் தேசிய ஒருமைப்பாட்டைப் பரிசுகள் வழங்குவதன் மூலமாக ஏற்றுக் கொள்ளுமாறு ஊக்குவிக்கப்பட்டு வருகிறார்கள். பரிசுகள் வழங்கப்படுவதால் அவைகளைப் பெறுவதற்கும் நேர்மையான போட்டிகளில் ஈடுபடுவதற்கும் பயனுடையப் பணிகளைச் செய்வதற்கும் ஊக்குவிக்கப்படுகிறார்கள்.

அரசியல் பொருளாதார முன்னேற்றங்கள் ஒரே சமயத்தில் ஏற்படக்கூடுமென்பதற்கு பிலிப்பைன் அனுபவம் சிறந்த உதாரணமாகும். ஆரம்பத்திலேயே மக்கள் அந்த அரசியல்

முறையை ஏற்றுக்கொண்டு விட்டதால் தேசிய முன்னேற்றத் திற்கு அவசியமான எல்லா பொருளாதார மூலங்களையும் திரட்டி நவீனப்படுத்தும் பாதையில் செல்ல முடிகிறது. பிலிப் பைனியர்களுக்கு அரசியல் ஒரு பேரமாகும். பேரம் பேசுவதில் மக்களது திறமைகள் வளர்கின்றன. திறமைகள் வளர் வதால் ஜனநாயக அரசியல் முன்னேற்றம் ஏற்படுகிறது. பேரத்தை அடிப்படையாகக் கொண்ட ஜனநாயகத்தத்துவம் புதியதெனச் சொல்ல முடியாது. ஏனெனில், அரசியல் சொல் அகராதியில் 'அரசியலின் சாரம் சமரசம்' போன்ற உண்மை விளக்கங்கள் எங்குமுண்டு என்பதை யாவரும் அறிவர். உதாரணமாக, ஜனநாயகத்தில் வாக்காளர்களை தேர்ந் தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சந்தித்து தங்களுடையச் சாதனைகளை விளக்குவதும், அவர்கள் ஆதரவைக் கோரு வதும், வாக்காளர்கள் தங்கள் தொகுதிகளுக்கென சில திட்டங்கள் அல்லது காரியங்களைச் செய்யவேண்டுமென வற்புறுத்திப் பெறுவது பலவும் பேரங்களல்லாமல் வேறு என்ன? இந்தப் பேர அடிப்படை பிலிப்பைனில் காணப் படுவதில் வியப்பேதுமில்லையெனத் தோன்றுகிறது.

# 2. அரசியல் முறையின் வரலாற்றுப் பின்னணியும் ஆரம்பமும்

நால்வகைப்பட்ட பண்பாடுகளும், இரண்டு சமயங்களும் நவீன பிலிப்பைன் நாட்டை உருவாக்கியுள்ளன. முன்னூறு ஆண்டுகால ஸ்பானிய ஆட்சியும், சீனச்செல்வாக்கின் நீண்ட வரலாறும் கிட்டத்தட்ட ஐம்பதாண்டுகால அமெரிக்கர் களின் இருப்பும் சமூகத்தின் மலாய்த்தன்மையை மாற்றி விட்டன என்றாலும் அதை உருத்தெரியாமல் செய்து விடவில்லை. இஸ்லாமும், கிறிஸ்துவமும் பிலிப்பைன்சில் பரவினாலும், அவ்விரு சமயங்களின் கொள்கைகளையும், வழி முறைகளையும் பிலிப்பைனியர்கள் தங்களுடைய நம்பிக்கை களுடனும் நடைமுறைகளுடனும் இணைத்தே ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். ஸ்பானியர்கள் மதமும், அமெரிக்கர் களுடையத் தொழில் நுணுக்கமும் பிலிப்பைனியர்கள் அவர் களிடமிருந்து பெற்றவைகளாகும். எனவே, பிலிப்பைனியர் களது நாகரீகத்தைத் தெளிவாக விளக்குவதென்பது முடியாததாகிறது.

பிலிப்பைனியர்கள் தங்களைத் தாங்களே அடிக்கடி கேட்டுக்கொள்ளும் கேள்வி, ஏன் அவர்கள் மேலைநாட்டு முறைகளைப் பின்பற்றவேண்டும்; ஏன் மேலைநாட்டுப் பொருள் களைப் பெறவேண்டுமென்பதாகும். இத்தகைய எண்ணம் குறிப்பாக அறிஞர்களிடத்திலும், தேசியவாதிகளிடத்திலும் காணப்படுகிறது. எனவே, பிலிப்பைனியர்கள் அரசியலில் பெற்றதென்ன? எத்தகைய அமைப்புகள் அவர்களுடைய இயல்புகளுக்கு ஏற்றவையாக இருக்கும்? என்பதைத் தெரிந்து கொள்வது அவசியமாகிறது.

ஸ்பானிய குடியேற்ற ஆட்சி, பரந்த சிக்கல்மிக்கதான அரசியல் முறையைத் தந்ததன்மூலமாக மலாய் பண்பாட்டை

யும் சமூகத்தையும் உருவாக்கியது. ஆனால், அதே சமயத்தில் ஸ்பானிய ஆட்சி ஏற்படுத்திய சமூக அமைப்பும், பொருளாதார முறையும் சமூகத்தில் எளிதில் அகற்றமுடியாத ஏற்றத் தாழ்வுகளைத் தோற்றுவித்து சமூகத்தைப் பிளவுபடுத்திய தோடு முன்னேற்றத்திற்கும் தடையாக அமைந்தது. அதைத் தொடர்ந்துவந்த அமெரிக்க ஆட்சி இந்த ஏற்றத்தாழ்வுகளை அகற்ற நடவடிக்கைகள் சிலவற்றை எடுத்துக்கொண்ட போதிலும், சமூகத்தையும், பொருளாதாரத்தையும் ஆட்படுத் தும் போட்டி அரசியல் முறையை ஏற்படுத்தியது. இப்போது ஜனநாயகத்தினால் ஈர்க்கப்பட்ட பிலிப்பைனியர்கள் தொழில் மயமான, உலகாயத சமூகமொன்றை ஏற்படுத்த முயன்று வருகிறார்கள்.

பிலிப்பைனியர்கள் அவர்களுடைய வரலாற்றில் பல தெளிவான கால கட்டங்களில் பலவகைப்பட்ட குறிக்கோள் களை அடைய முயற்சி செய்து வந்திருக்கின்றனர். ஒவ்வொரு காலகட்டமும் மக்களுடைய உணர்ச்சிக்கும், பண்பாட்டிற்கும் அதன் உதவியைச் செய்திருக்கிறது. இப்போது அவர்கள் தொழிற் சமுதாயத்திற்கேற்ற தன்மையையும், ஆசியாவிலும், உலகத்திலும் தங்களுக்கென ஒரு இடத்தைப் பெரும் முயற்சி யிலும் ஈடுபட்டிருக்கிறார்கள். இம்முயற்சியில் அவர்கள் வெற்றிபெற்றால் அது அவர்களுடைய பழைய சிறப்புமிக்க மானிடப்பண்புகளைப் பாதுகாக்க உதவும். பிலிப்பைனிலுள்ள செயல்தன்மையுள்ள ஜனநாயகம் சிவில் சமுதாயத்தின் சிறப்புகளை மதித்துப் போற்றுவதாக இருக்கிறது.

பிலிப்பைன் வரலாறு ஆறுபகுதிகளாகப் பிரிக்கப் படலாம். ஸ்பானிய வருகைக்கு முந்தியகாலத்தில் மலாய் இன அமைப்பும், அரசியல், சமூகவாழ்வின் பகுதியாக பலம் மிக்க அரசர் ஆட்சியும் ஏற்படுத்தப்பட்டது. ஸ்பானியர்கள் ஆட்சிக்காலத்தில், பிலிப்பைன் தீவுகளில் கிறிஸ்துவ சமயம் மக்களிடத்தில் ஒருமையுணர்ச்சியைத் தோற்றுவித்து தேசிய இனமென்னும் பிணைப்புணர்வுகளை வளர்த்தது. புரட்சிக் காலத்தில், பிலிப்பைனில் நாட்டுப்பற்றும் அரசியல் கொள்கை களைச் சோதிக்கும் கருவிகளாக சுதந்திர உணர்வும், பிரதிநிதித்துவ அரசாங்கமும் மேற்கத்திய முறையில் ஏற்படுத்தப்பட்டன. அமெரிக்க ஆட்சிக்காலத்தில் சமயச் சார்பற்றத்தன்மையும், பழமையிலிருந்து புதுமையை நோக்கி யும் இறுதியாகச் சுதந்திரத்தையடையவும் தேவையான திறமைகளும் ஏற்பட்டன. ஜப்பானிய ஆக்கிரமிப்பின்போது

பிலிப்பைனியர்கள் மேற்கத்திய முறைகளைப் பெருமையுடன் போற்றி, பின்பற்றி அரசியல்துறையில் புதுப்புது சக்திகளைத் தோற்றுவித்தனர். கடைசியாக, சுதந்திரம் பெற்றதிலிருந்து பிலிப்பைனியர்கள் தங்களுக்கேயுரிய முறையில் தெளிவான அரசியல் பாணியை அமைத்துக்கொண்டு அதைச் செயற் படுத்தி வருகின்றனர். இனி இவ்வத்தியாயத்தின் அடுத்து வரும் பகுதிகளில் பிலிப்பைன் அரசியல்முறையின் முன்னேற்றத்திற்கு மிக இன்றியமையாததவை எனக்கருதப் படும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சில அம்சங்களை மேற்சொல்லப்பட்ட பிரிவுகளடிப்படையில் சற்று விளக்க மாகக் காண்போம்.

**1. அரசியல்முறையின் தோற்றம் :** '1521ஆம் ஆண்டு மெகலன் (Magellan) என்பவர் சீபுத் (Cebu) தீவில் வந்திறங்கியபோது, தாதுகள் (Datus) என்றழைக்கப்பட்ட சிறுசிறு தலைவர் களின் ஆட்சிக்குட்பட்டு, மலாய் இனத்தைச் சேர்ந்த மக்கள் கடற்கரையோரப் பகுதிகளில் பல குடியேற்றங்களில் வாழ்ந்து வந்தனர். மலேசியாவிலிருந்தும் இந்தோனேசியாவிலிருந்தும் மக்கள் கூட்டங்கூட்டமாக பராங்கே (Barangays) என்றழைக் கப்பட்ட படகுகளில் அங்கு வந்து குடியேறினர். அவர்கள் தங்களை பராங்கேகள் என்றழைத்துக் கொண்டனர். அவர்கள் முதலில் ஆறுகளின் முகத்துவாரங்களிலும், அதற்குப்பிறகு அவைகளின் பள்ளத்தாக்குகளிலும், சமவெளிப் பகுதி களிலும் நெடுங்காலமாக அங்கு வாழ்ந்துவந்த பழங்குடி யினரை மலைப்பகுதிகளுக்குத் துரத்திவிட்டு, தங்களுடைய இருப்பிடங்களை அமைத்துக்கொண்டு வாழத்தொடங்கினர். இந்தப் பழங்குடியினர் நீக்ரோ இனத்தைச் சேர்ந்த நாடோடி கள்ளாவர். இவர்களில் சிலர் இன்றும் லசான் (Luzon), நீக்ரோப் (Negroes) பகுதிகளில் வாழ்ந்துவருகின்றனர். இவர்கள் நாடோடிகளாகவும், எண்ணிக்கையில் மிகக்குறை வானவர்களாகவுமிருந்ததால் மலாய் இனத்தவரால் ஏற் படுத்தப்பட்ட அரசியல் முறையில் இவர்கள் சேர்க்கப்படாமல் ஒதுக்கி வைக்கப்பட்டனர்.'

பாதுகாப்புதான் சமூகத்தின் முக்கியப் பிரச்சினையாக இருந்தது. எனவே, அதைக் கவனத்தில் கொண்டு சமூகம் சம்பந்தப்பட்ட நிறுவனங்கள் அனைத்தும் ஏற்படுத்தப் பட்டன. புது இடங்களைத் தேடி வருபவர்களிடத்திலிருந்தும், அதிக அதிகாரத்தின்மீது ஆசை கொண்டத் தலைவர்களிட மிருந்தும், கடற்கொள்ளைக்காரர்களிடமிருந்தும் தங்களைக்

காப்பாற்றிக்கொள்வதற்காக பராங்கேகள் தங்களைப் பல இராணுவக்குழுக்களாக அமைத்துக்கொண்டனர். இச் சமூகங்கள் தங்களை இஸ்லாமிய சக்திகளிடமிருந்தும் காப்பாற்றிக்கொள்ளவேண்டியதாக இருந்தது. அராபிய வியாபாரிகளால் 15ஆம் நூற்றுண்டின்போது கொண்டுவரப் பட்ட முஸ்லிம்கள் மின்டானே (Mindanao) பிரதேசத்திலும், அதற்குப்பிறகு விசயா (Visayas), தென் லூசான் (Luzon) பகுதி களிலும் பரவலானுர்கள். ஸ்பானியர்கள் 1569ஆம் ஆண்டில் அங்கு வந்தபோது முஸ்லிம்களால் மேனிலா (Maynila) என்றழைக்கப்பட்ட ஒரு இடத்தில் முஸ்லிம் சமுதாயம் வாழ்ந்ததைக் கண்டனர். ஸ்பானியர்களின் வெற்றி முகமதியர் களின் செல்வாக்கைத் தடுத்தது. ஆனுல், அவர்கள் மின்டானே பிரதேசத்தில் ஸ்பானியர்கள் தொந்தர வில்லாமல் தொடர்ந்திருக்க முடிந்தது.[1]

முகமதியர்களுடையவும், ஸ்பானியர்களுடையவும் வெற்றி, பரவலாக இருந்த பராங்கேயர்களினுடைய பல ஹீனத்தை விளக்குகிறது. எனினும், பராங்கேயர்கள் தங்களுக்குள் பல இணைப்பரசுகளை ஏற்படுத்திக்கொண்டு, அந்நியர்களுடைய ஆக்கிரமிப்பைச் சமாளிக்க இயன்றவரை முயன்றனர். பராங்கேய சமுதாயங்கள் தங்களுக்கெனத் தனித்தனி அமைப்புகளை ஏற்படுத்திக்கொண்டு தங்க ளுடையப் பண்பைக் காப்பாற்றிக்கொண்டு வந்தனர். பராங்கேயர்களது குடும்ப அமைப்பிற்கும் சமுதாய அமைப்பிற்கும் வித்தியாசமெதுவும் கிடையாது. ஏனெனில் அவர்களது சமுதாயம் குடும்ப அமைப்பிலிருந்து வளர்ந்த தாகும். எனவே, குடும்பப் பணிகளும், சமுதாயப் பணிகளும் ஒரே மாதிரியாக இருந்தன. உதாரணமாக, குடும்பப் பணிகளை யாற்றும் ஒருவன் அதேசமயத்தில் குடிமகனுக்குரியப் பணி களையும் செய்து வந்தான். ஒவ்வொரு வயதடிப்படையிலான பிரிவிற்கும் குறிப்பிட்ட சமூகக் கடமைகள் இருந்தன. அவர் களிடையே குடும்ப ஒருமைப்பாடும், நன்றியுணர்வும் மிக உயர் நிலையில் இருந்தன. பராங்கேய சமுதாயங்களில் சிறந்த தலைவரெனக் கருதப்பட்டவர் ஆற்றல்மிக்கவராகவும், புராதன மரபுகளை அறிந்து அதன்படி நடப்பவராகவும், தயாளகுணமுடைய முன்னேர்கள் வழித்தோன்றலாகவு மிருக்கவேண்டும். சிறந்த குடிமகன் எனப்பட்டவர், சமுதாய த்திற்கு ஆற்றவேண்டிய கடமைகளைச் செய்பவராகவும்,

[1] Jean Grossholtz—Politics in the Philippines, page 16.

குடும்பகௌரவத்தைக் காப்பவராகவும், சமுதாயத்திற்கு உண்மையுடையவராகவும் இருத்தல் வேண்டும். அவர்கள் முக்கியமாக வற்புறுத்திவந்த அம்சம் பாதுகாப்பாகும். எந்த அளவிற்கு பாதுகாப்பு சிறப்பாக இருந்ததோ அந்த அளவிற்குச் சமுதாயத்திற்கு நன்மை ஏற்படுமென்பது அவர்களது கருத்து.

2. **ஸ்பானியர் காலம்:** மெகலன் வருகைக்கு நாற்பதாண்டுகள் கழித்து மெக்சிகோவிலிருந்த ஸ்பானியர்கள் குழுவொன்று பைகால் (Bicol) தீபகற்பத்தில் வந்திறங்கியது. அக்குழுவைச் சேர்ந்தவர்கள் லாபெஸ் லெகாஸ்பை (Lopez Legazpi) என்பவர் தலைமையில் லூசான் பகுதி முழுவதும் எதிர்ப்பெதுவுமின்றி பல இடங்களைக் கைப்பற்றினர். சமவெளிப் பகுதிகளிலும் இதர இடங்களிலிலுமிருந்த பராங்கேயர்கள் மலைப்பகுதிகளுக்குத் தப்பிச் சென்றனரெனினும், பலர் தக்க சமயத்தில் ஸ்பானியர்கள் ஆட்சியை ஏற்று மீண்டும் அங்கு வந்து குடியேறினர்.[1] லூசான் பகுதியிலிருந்தவர்களுடைய குடியேற்றம் பற்றிய விளக்கமான கருத்துரைகள் பெலிக்ஸ்கீசிங் என்பார் எழுதியுள்ள புத்தகத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஆரம்பத்தில், ஸ்பானியர்கள் அவர்களை நேராக ஆட்சி செய்யாமல் அவர்களது தலைவர்களான 'தாது'க்கள் அல்லது சிற்றூர் தலைவர்கள் மூலமாக ஆண்டு வந்தனர். ஆனால், விரைவிலேயே ஸ்பானிய சமய நிறுவனங்களைச் சேர்ந்தவர்கள் நாட்டுப்புறங்களில் 'தாது'க்களை நீக்கிவிட்டு அதிகாரஞ் செலுத்தலாயினர். ஸ்பானியர்கள், அவர்களுக்கு நன்றியுடையவர்களாகவும், கிறித்துவ சமயத்தைத் தழுவ சம்மதம் தெரிவித்தவர்களும் வாழ்ந்த இடங்களென்றும், இதரர்கள் வாழ்ந்த இடங்களென்றும், நாட்டைப் பல பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் ஸ்பானியர்கள் குடியேறுவதற்குக் காரணமாக இருந்த முன்னோடிகளையும், அவர்களைச் சேர்ந்தவர்களையும் தலைவர்களாக இருந்து நிர்வாகம் செய்யும் உரிமையை வழங்கினர். இதற்கிடையில், கிறித்துவ பாதிரிமார்களும், திருச்சபையைச் சேர்ந்தவர்களும் நாட்டின் பல பகுதிகளிலும் இருந்த மக்களை திருச்சபையைப் பின்பற்று மாறு செய்து வந்தார்கள். 19ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தின்போதே திருச்சபைகள் இருந்த இடங்களைச் சுற்றி மக்கள்

[1] Felix Keesing, The Ethno-History of Northern Luzon.

குடி பெயர்ந்து தங்கள் இருப்பிடங்களை அமைத்துக் கொள்ளும் முறை நிரந்தரமானதாகி விட்டது. சிற்றூர்களில் தலைவர்கள் இருந்ததுபோல நகரங்களிலும் தலைவர்கள் தோன்றினார்கள். இத்தலைவர்கள் ஸ்பானிய நாகரீகத்தில் மூழ்கியவர்களாகவும், செல்வந்தர்களாகவும் திருச்சபையைச் சேர்ந்த பாதிரிமார்கள் விருப்பப்படி ஆட்சி செய்பவர்களாகவுமிருந்தனர். எனவே, ஸ்பானியர்களின் அரசாங்க முறை 'ஸ்பானிய முன்னோடி'களையும், சமய நிறுவனங்களின் விருப்பத்தையும் ஆதாரமாகக் கொண்டிருந்ததெனலாம்.

3. **புரட்சிக்காலம்:** குடியேற்ற அரசாங்கம் தாங்க முடியாத அளவுக்கு ஸ்பானியக் கொள்கைகள் அந்நாட்டில் பல சக்திகளைத் தோற்றுவித்தன. 19ஆம் நூற்றாண்டில் கிறிஸ்துவ கல்வி நிலையங்கள் பல கற்றறிந்த பிலிப்பைனியர்களை உருவாக்கின. அவர்கள் பாதிரிமார்களுடன் பல நன்மைகளைப் பகிர்ந்து கொண்டதோடு நாட்டுப்புறங்களில் அவர்களோடு அதிகாரத்தையும் பங்கு போட்டுக்கொண்டனர். ஸ்பானியர்களுக்கும் பிலிப்பைனியர்களுக்குமிடையிலான திருமணங்களால் பிறந்த குழந்தைகள் நிலவுரிமையைப் பெற்றனர். செல்வந்தர்களாக இருந்தவர்கள், அவர்கள் பிள்ளைகளை வெளிநாடுகளுக்குக் கல்வி பெற அனுப்பினர். அவ்வாறு அனுப்பப்பட்டு திரும்பி வந்தவர்கள் மற்றவர்களினின்றும் மாறுபட்டவர்களாகவும், ஸ்பானிய சமூக முறைகளைப் பின்பற்றுபவர்களாகவும் இருந்தனர்.

எனினும் அவர்களெல்லாம் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருந்தவர்களால் ஏற்றுக்கொள்ளப்படாததோடு ஆட்சியில் பங்கு பெற முடியாதவர்களாகவும், சமூகத்திற்குத் தங்கள் கடமைகளைச்செய்ய முடியாதவர்களாகவுமிருந்தனர். பாதிரிமார்களே தொடர்ந்து அரசியல், சமூக, பொருளாதாரத் துறைகளில் ஆதிக்கம் செலுத்தி வந்ததால் அவர்களையே பிலிப்பைனியர்கள் வேறு வழியின்றி பின்பற்ற வேண்டியிருந்தது என்று ஜோஸ்ரிசால் என்பவர் 'இழந்த ஈடன்' என்ற நவீனத்தில் குறிப்பிடுகிறார்.[1]

பாதிரிமார்கள் கப்பம் அடிப்படையில் அதிகமான தொகையை அவ்வப்போது வற்புறுத்தியதால், குடியானவர்

[1]Jose Rizal's novels Provide the best description of Friar Dominance and the life of Philipins during this Period

கள், குத்தகைதாரர்களுடைய நிலைமை சீரழிந்து வந்தது. படகுத் தொழிலும் அதனால் கிடைத்து வந்த வருமானமும் நின்று விட்டதால் பிலிப்பைனியர்களிடமிருந்து புதுப்புது வருவாய் இனங்களைத் தேர்ந்தெடுத்து வரிவசூல் செய்வதற்காகப் பாதிரிமார்கள் தங்களுடைய ஏஜென்டுகளைஅனுப்பி வந்தனர்.

19ஆம் நூற்றுண்டின் முடிவில் பிலிப்பைனில் பல ரகசியக் குழுக்கள் தோன்றின. இக்குழுக்களின் முக்கியநோக்கம் சீர்திருத்தமாகும். ஆனால், அவற்றில் பல தீவிரமான குறிக்கோள்களை அடைவதை நோக்கமாகக்கொண்டிருந்தன. இக்குழுக்களை பொதுவாக இரண்டுவகைகளாகப் பிரிக்கலாம். ஒருவகைக் குழுக்களில் சாதாரண மக்கள் உறுப்பினர்களாக இருந்தனர். அவர்களுடைய நோக்கம் பூரணசுதந்திரம் பெறுவதாகும். அதனால் அவர்களது துன்பங்களுக்கு முடிவு ஏற்படும். மற்றொருவகைக் குழுக்களில் ஸ்பெயின் நாட்டில் கல்வி கற்று ஆனால், தங்களுடைய நாட்டில் ஆதரவில்லாமல் இருந்த மேல் வகுப்பினர் உறுப்பினர்களாக இருந்தனர். அவர்கள் மெஸ்டிசோ (Mestizo) எனப்படுபவர்கள். அவர்களுடைய நோக்கமும் சீர்திருத்தமேயெனினும் ஜனநாயகத்தின் முக்கியக் கொள்கையான 'எல்லோரும் சமம்' என்பதில் அவர்களுக்கு நம்பிக்கை கிடையாது. ஆனால், அவர்கள் அதுகாறும் தங்களுக்கு மறுக்கப்பட்டுவந்த பதவிகளையும், அரசாங்கத்தில் பங்கையும்பெற திட்டமிட்டிருந்தனர். அவர்கள் 'நாங்கள் இங்கு இருக்கிறோம், நாங்களும் உங்களைப்போலவே எங்களை மாற்றிக்கொண்டிருக்கிறோம், உங்களுக்குக் கிடைத்திருக்கும் வாய்ப்புகளை எங்களுக்கும் தாருங்கள்' என்று குறிப்பிட்டதாகத் தோன்றுகிறது.[1]

சமவாய்ப்புகள் கிடைக்கப்பெறாத கற்றறிந்த பிலிப்பைனியர்கள் கூட்டமும், மாநிலப்பகுதிகளில் பாதிரிமார்களின் அளவுக்கு அதிகமானக் கொடுமைகளும், பிலிப்பைனியர்களிடம் கட்டாய வேலைவாங்கியதும் மாற்றம் வேண்டி எழுந்த கோரிக்கைக்கு காரணங்களாகும். இவைகளை அப்போதிருந்த அரசாங்கம் சமாளிக்கமுடியாததோடு, பாதிரிமார்களுக்கு அது அவசியமாகவும் தோன்றவில்லை. எனவே, குடியானவர்களின் புரட்சிகள் அதிகரித்தன. அறிஞர்கள் இப்புரட்சிகளை விளம்பரப்படுத்துபவர்களாக இருந்தனர். இவ்வறிஞர்கள்,

[1] Jean Grossholtz: Politics in the Philipines, Page 20.

சமூக அரசியல், பொருளாதாரத்துறைகளில் பிலிப்பைனியர்களுக்கு அதிக பங்கு கிடைக்கும்வகையில் சீர்திருத்தங்கள் செய்யப்படவேண்டுமென்று வற்புறுத்தினர். ஸ்பானியர்களுடைய ஆட்சிமுறையில் அரசியல் அதிகாரம் பெற்றிருந்தவர்களுக்கும், பொருளாதாரத்துறையில் அதிகாரம் செலுத்தியவர்களுக்குமிடையே நெருங்கியத்தொடர்பு இருந்து வந்தது. எனினும் சட்டபூர்வமான அதிகாரிகள் அதிகாரம் செலுத்தமுடியாமல் சட்டத்திற்கப்பாற்பட்ட தலைவர்கள், உதாரணமாக நாட்டுப்புறங்களில் பாதிரிமார்கள் அல்லது பெருநிலக்கிழார்கள் உண்மையான அதிகாரம் செலுத்தினர். ஆட்சி அதிகாரங்கள் அனைத்தும் குவிக்கப்பட்ட மத்திய அரசாங்கமொன்று இருந்தாலும், அது பிராந்தியங்களில் நாட்டின் பொருளாதாரத்தைக் கட்டுபடுத்திய வட்டாரத் தலைவர்களின் கையில் சிக்குண்டிருந்தது. பெருநிலக்கிழார்கள் அவர்களுடைய நிலங்களிலும், பாதிரிமார்கள் நகரங்களிலும் வைத்ததே சட்டமாக இருந்தது. இச்சமயத்தில், ஸ்பெயினில் இருந்த அரசாங்கமும் பலமற்றதாக இருந்ததோடு, தீவிரமான முறையில் பழைமைவாத அடிப்படையிலானக் கொள்கைகளைப் பின்பற்றி வந்தது.

இச்சூழ்நிலையில் 1872ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 20ஆம் தேதி ஸ்பானியர்கள் கப்பல் கட்டும் தளமான கவைட்டியில் (Cavite) போர்வீரர்கள், தொழிலாளர்களுக்கிடையில் கலகமொன்று ஏற்பட்டது. அக்கலகம் இரண்டு நாட்களில் அடக்கப்பட்டு, அதில் சம்பந்தப்பட்டிருந்தவர்கள் சுடப்பட்டு இறந்தார்கள். மற்றவர்கள் ஸ்பானிய சிறைகளில் அடைக்கப்பட்டார்கள். சுடப்பட்டு உயிரிழந்தவர்களில் பாதரஸ் கோமெஸ் (Padres Gomez), பர்கோ (Burgos), சாமோரா (Zamora) என்ற பிலிப்பைனிய மேற்றிராணியார்கள் முக்கியமானவர்கள். இவர்கள் புரட்சி இயக்கத்தின் தியாகிகளாகவும் முன்னோடிகளாகவும் கருதப்பட்டார்கள். ஸ்பெயினிலிருந்த ஆத்திரமடைந்த பிலிப்பைன் மாணவர்கள் பிரசாரம் செய்வதற்கும், போராட்டங்கள் நடத்துவதற்கும் அந்நிகழ்ச்சி காரணமாக அமைந்தது. கவைட்டி கலகத்திற்குப் பிறகு, பிலிப்பைனியர்கள் அதுவரையிலும் பெற்று அனுபவித்து வந்த சலுகைகள் அரசாங்கத்தால் திரும்பப்பெறப்பட்டதோடு, அதிருப்தியை வெளிப்படையாகத்தெரிவித்த அனைவரும் சிறையிலிடப்பட்டனர்.

இத்தகைய ஆயுதந்தாங்கிய புரட்சிக்கு ஸ்பெயினிலிருந்த பிலிப்பைன் அறிஞர்களும் சரி, பிலிப்பைன் நடுத்தர வகுப்

பினரும் சரி ஆதரவுதரவில்லை. 1893ஆம் ஆண்டில் மீண்டும் புரட்சி ஏற்பட்டபோது அறிஞர்களில் முன்னணியில் இருந்த ஜோஸ்ரிசால் தன்பெயரையோ அல்லது ஆதரவையோ அதற்குத்தர மறுத்தார். அதற்குமாருக, புரட்சியைக்கண்டித்தும் பிலிப்பைனியர்கள் இன்னும் தன்னுட்சிக்குப் பக்குவம் பெறவில்லை என்றும் எழுதினுர்.

புரட்சிக்குக் கருப்பொருளாக இருந்தது, சிந்துவாரற்று துன்பத்திலுழன்ற நகர்ப்புறங்களிலிருந்த கடை வகுப்பினரேயாவர். அவர்களுக்கு ஆண்ட்ரே போணிபசியோ தலைவராவார் (Andres Bonifacio). அவர்கள் கல்வியறிவற்றவர்களாகவும், ஸ்பானியப் பண்பாட்டைப் பின்பற்ருதவர்களாகவும் இருந்ததால் ஸ்பானிய சமூகத்தினின்றும் ஒதுக்கிவைக்கப் பட்டிருந்தார்கள். எனவே, ஆட்சியதிகாரமுடையவர்கள். அவர்களை சேர்த்துக்கொள்ளும் வாய்ப்பில்லாததால், ஸ்பானியர்களை அடியோடு விரட்டியடிப்பது ஒன்றைத்தவிர வேறு எதுவும் அவர்களுக்கு உதவிசெய்யாது. ஆகையால் அவர்களனைவரும் போனிபசியோவின் தலைமையில் ஒன்று சேர்ந்து 'கடிபுனம்' (Katipunam) என்ற இரகசியக்குழுவின் முழுப்பெயர் 'ககாலங்கலங்கன் கடாஸ்டசாங் கடிபுனம்' என்பதாகும் (Kagalangalangan Kataastasang Katipunam). அதன் பொருள் 'மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய நாட்டின் தவப்புதல்வர்களின் கழகம்' என்று சொல்லப்படுகிறது. இக்குழு, மற்ற எல்லாக்குழுக்களையும்விட சிறந்தமுறையில் அமைக்கப்பட்டு மிகவிரைவில் மணிலாவுக்கு வெளியிலும் பரவியது. இக்குழு, ஸ்பானியர்கள் வருகைக்கு முன்பே பிலிப்பைன் நாகரீகத்தில் சிறந்தும், இதர ஆசிய நாடுகளுடன் வணிகத் துறையிலும், சமயத்துறையிலும் தொடர்புடையதாகவும், சிறந்தொரு இனமாகவும் இருந்ததெனும் கருத்தை நாடெங்கிலும் பரப்பிவந்தது. அவர்கள், பிலிப்பைனியர்களுக்கு பாதிரிமார்கள் பண்பாட்டு வளர்ச்சிக்கு உதவாமல் மேலெழுந்தவாரியான உலகெங்கும் பின்பற்றப்படும் சில நடைமுறைகளையே போதித்தனர் என்று குற்றஞ்சாட்டினர். அவர்கள் ஒரேயொரு தத்துவத்தின் அடிப்படையில் பிலிப்பைனியர்களை ஒன்றுபடுத்தி புரட்சி செய்வதன்மூலமாக சுதந்திர அரசொன்றை ஏற்படுத்தத்திட்டமிட்டிருந்தார்கள். இக்குழுவில் குறைந்தது 1,00,000 பேர்கள் உறுப்பினர்களாக இருந்தனர் என்று மதிப்பிடப்பட்டது.[1]

---

[1] James Le Roy, The Americans in the Philippines. Page 8

போராட்டத்தின்போது போனிபசியோவுக்கு இராணுவத் திறமையில்லையென்று தெரியவந்ததால் எமிலியோ அகைனல்டோ (Emilio Aguinaldo) என்ற பள்ளிக்கூட ஆசிரியர் புரட்சித்தலைவராக ஏற்றுக்கொள்ளப்பட்டார். அவர் பல சண்டைகளில் வெற்றி தேடித்தந்தார். ஆனால், ஸ்பானியர்களின் இராணுவ பலத்திற்கு பிலிப்பைனியர்களால் ஈடுகொடுக்க முடியவில்லை. எனவே, 1897இல் பியாக்-நா-பாடோ என்னுமிடத்தில் ஓர் உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது. அதன்படி பிலிப்பைனியர்கள் தங்கள் வசமிருந்த ஆயுத்தளவாடங்களை ஒப்படைத்து விடவேண்டும். அகைனல்டோவும், இதரத்தலைவர்களும் பிலிப்பைன்சைவிட்டுப் போய்விடவேண்டும். அதற்கு ஈடாக அவர்களுக்கு ஸ்பெயின் இருபது மிலியன் மெக்சிகன் டாலர்களுக்குச் சமமானத் தொகையைத்தரும் என்று ஏற்பாடாகியிருந்தது.

ஸ்பானியர்களும் தங்கள் தரப்பில் சீர்திருத்தங்களைச் செய்ய முன்வந்தனர். ஆனால், இந்நிபந்தனைகள் முழுவதுமாக நிறைவேற்றப்படவில்லை. அகைனல்டோ ஹாங்ஹாங்கில் தஞ்சம் புகுந்தார். சில ஆயுதங்களும், மருந்துப்பொருள்களும் மட்டுமே ஒப்படைக்கப்பட்டன. அங்ஙனமே, ஸ்பானியர்களும் தருவதற்கு ஒப்புக்கொண்ட தொகையில் ஒரு சிறு தொகையையே தந்தனர். ஆனால், சீர்திருத்தமெதையும் செய்யவில்லை. இருதரப்பினரும் தவறு செய்துவிட்டனர்.

1898ஆம் ஆண்டு ஸ்பெயினுக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குமிடையே போர் மூண்டபோது ஹாங்ஹாங்கில் தளபதி ஜார்ஜ் தியுவே (George Dewey) தலைமையிலிருந்த படை ஸ்பானியர்களை மணிலாவில் தாக்குமாறு அனுப்பப்பட்டது. தியுவே, மணிலாபோகும்போது கூடவே, அகைனல்டோவையும் அழைத்துக்கொண்டுபோனார். அவரது உதவியினால் ஸ்பானியர்களைத் தாக்குவது எளிதாக இருக்குமென்பது தியுவேயின் கருத்தாகும். பிலிப்பைனியர்களின் எண்ணங்களை நிறைவேற்றுவதற்கு அமெரிக்கா உதவி செய்யுமா என்பது பற்றி ஒன்றும் சொல்லவில்லையென்று தியுவே கூறினார். 1898ஆம் ஆண்டு மே மாதம் முதல்தேதியன்று மணிலா வளைகுடாவில் ஸ்பானியர்களின் கடற்படை தியுவேயினால் தோற்கடிக்கப்பட்டு, நகரம் முற்றுகையிடப்பட்டது. இரண்டு வாரங்களுக்கெல்லாம் அகைனல்டோ, கவைட்டிற்குச் சென்று படையொன்றைத்திரட்டி மணிலா நகரத்திலிருந்த ஸ்பானியர்களைச்சுற்றி வளைத்துக்கொண்டார்.

அமெரிக்கர்கள் ஜுன், ஜுலை மாதங்களில் ஸ்பானியர்களின் சரணாகதியை ஏற்றுக்கொண்டு நகரத்தினுள் நுழைந்தார்கள். ஆனால், பிலிப்பைனியர்கள், நகரத்தினுள் நுழையாதபடி வெளியிலேயே இருக்குமாறு செய்யப்பட்டார்கள்.

சுதந்திரம் எதிர்பார்த்தபடி விரைவில் அமெரிக்கர்கள் வாயிலாகக் கிடைக்காததென்றுணர்ந்த அகைனால்டோ, மணிலாவிற்கு வெளியேயுள்ள இதர பகுதிகளில் சட்டபூர்வமான அரசாங்கத்தை ஏற்படுத்தும் முயற்சியில் இறங்கினார். புரட்சி அரசாங்கத்தின் தலைநகரம் புலாகன் (Bulacan) மாநிலத்திலுள்ள மலோலாஸ் (Malolos) என்று 1899ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் அறிவிக்கப்பட்டது. அதற்கென ஒரு அரசியலமைப்பும் வெளியிடப்பட்டது.

இதற்கிடையில் அமெரிக்கர்களுக்கும் பிலிப்பைனியர்களுக்குமிடையிலிருந்த உறவு மோசமடைந்தது. அமெரிக்கர்கள் பிலிப்பைனிய புரட்சி அரசாங்கம் கலைக்கப்படவேண்டுமென உத்தர விட்டனர். ஆனால், அவ்வரசாங்கம் அதை ஏற்க மறுத்ததால் இரு சாராருக்குமிடையே சண்டை மூண்டது. 1899ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் தொடங்கிய சண்டை முடிவதற்கு மூன்றாண்டுகளாயிற்று. முதலில் மார்ச்சு மாதத்திலேயே (1899) குடியரசின் தலைநகரமான மலோலாஸ் வீழ்ந்ததென்றாலும் 1902ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பெரிய கொரில்லாப் படையொன்று அமெரிக்கர்களிடம் சரணாகதியடைந்தபோதுதான் போர் இறுதியாக முடிவுற்றது.

### 4. அமெரிக்கர்கள் காலம்

இந்த நூற்றாண்டு ஆரம்பமுதல் பிலிப்பைன் சங்கிலித்தொடர்போல புது வெற்றிகளைப் பெறவும் மேற்கத்தியமயமாக்கும் முயற்சியிலும் ஈடுபட்டது. அமெரிக்கர்கள் எந்த வேகத்தோடு புது அரசை ஏற்படுத்த விரும்பினார்களோ அதே வேகத்தில் பிலிப்பைனியர்களும் ஒத்துழைத்த காரணத்தினால் அவர்கள் முப்பத்தைந்தாண்டு காலத்தில் தன்னாட்சியையும், நாற்பத்தாறு ஆண்டுகாலத்தில் அரசியல் சுதந்திரத்தையும் பெற்றனர்.

அமெரிக்கர்கள் பிலிப்பைனியர்களுக்கு தன்னாட்சி வழங்கவும் பிறகு முடிவாக சுதந்திரம் வழங்கவும் சம்மதித்திருந்தனர். வில்லியம் ஹோவர்டு தப்ட் (William Howard Taft) தலைமையில் அமைக்கப்பட்ட முதல் சிவில் ஆட்சியாளர்கள் அந்நாட்டில் வட்டார அரசாங்கங்கள் அமைக்குமாறு அறி

வுறுத்தப்பட்டிருந்தனர். அவ்வாறு ஏற்படுத்தப்படும் அரசாங்கங்களில் எந்த அளவிற்குச் சாத்தியப்படுமோ அந்த அளவிற்கு தலத்திலுள்ளவர்களே தல அலுவல்களை நிர்வகிப்பதற்கு வாய்ப்புத்தரப்படவேண்டுமென்றும், அவர்களை மேற்பார்வையிடும் அதிகாரம் மிகக் குறைவாகவே இருக்கவேண்டுமென்றும் வலியுறுத்தப்பட்டது. தலப்பிரதிநிதிகள் மன்றத்தின் பணிகள், அமைதி, ஒழுங்கு ஆகியவற்றிற்குப் பங்கமேற்படாதவாறு நிர்வகிக்கப்படவேண்டுமென்று கூறப்பட்டது. ஆங்கிலமொழி அடிப்படையில் கல்வி அளிக்கப்படவேண்டுமென்றும், கல்விக் கூடங்கள் ஏற்படுத்தப்படவேண்டுமென்றும், பொது சுகாதாரமும், முறைகளும் உயர்ந்தநிலையில் மேற்கொள்ளப்படவேண்டுமென்றும், நீர் நிலைகளும், நீர்ப்பாசன வசதிகளும் விரிவுப்படுத்தப்படவேண்டுமென்றும், சாலைகள் சரிவரப் பராமரிக்கப்படவேண்டுமென்றும் வற்புறுத்தப்பட்டது.

ஜனாதிபதி மக்கின்லியின் ஆணைப்படி நகராட்சி அரசாங்கங்கள் அமைக்கப்படுவதற்கானத் தேர்தல்கள் 1905ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் நடைபெற்றன. மாநில கவர்னர்களுக்கானத் தேர்தல் அதற்கடுத்த பிப்ரவரி மாதம் நடைபெற்றது. தேர்தல்கள் அமைதியாக நடைபெற்றதோடு பொதுமக்கள் ஆர்வமும் அதிகமாகக் காணப்பட்டது. மொத்தமிருந்த 32 மாநிலங்களில் 29 மாநிலங்களுக்கு கவர்னர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். எஞ்சிய, கவைட் (Cavaite), சமர் (Samar), இசபெல்லா (Isabella) ஆகிய மூன்று மாநிலங்களில் வன்முறைச் செயல்களும், கலவரங்களும் ஏற்பட்டதால் அவைகளுக்கு கவர்னர்-ஜெனரலே, கவர்னர்களை நியமித்தார். தேர்ந்தெடுக்கப்பட்ட 29 கவர்னர்களில் திரு. ரெய்னால்டு (Mr. Reynolds) என்பவர் அமெரிக்காவைச் சேர்ந்தவராவார். இதரர்களில் பலர் அமெரிக்க ஆதிக்கத்தை எதிர்த்து கிளர்ச்சிச் செய்ததால் பிரசித்தமானவர்கள். மற்றவர்கள் புதியவர்கள். இவ்வாறு மாநிலமட்டத்தில் அரசாங்கங்கள் ஏற்படுத்தப்பட்டதன் நோக்கம் பிலிப்பைனியர்களுக்கு மிக அதிகபட்சமான வட்டாரத் தன்னாட்சி தரவேண்டுமென்பதாகும். ஆனால், இத்திட்டம் வெற்றிபெறவில்லை. ஏனெனில், இவைகளை ஒருங்கிணைத்து செயற்படுத்துவதற்குத் தேவையான மத்திய ஆட்சி அமைப்பு இல்லாமல் போனதேயாகும்.

தேசிய மட்டத்தில் பிலிப்பைன் கழகம் (Philippine Commission) சட்டமன்றமாக ஏற்பட்டது. கவர்னர் ஜெனரல்

நிர்வாகத்தின் தலைவராக இருந்தார். 1901ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதியன்று மூன்று பிலிப்பைனியர், கழக உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். இவர்கள் கல்விமான்களாகவும், செல்வந்தர்களாகவும் இருந்தனர். ஆரம்பத்தில் இவர்கள் புரட்சி அரசாங்கத்தை ஆதரித்து வந்தவர்களெனினும் பிறகு அமெரிக்க முறைகளை ஆதரித்து வந்தவர்கள். இவர்கள் அமெரிக்க யூனியனுக்குட்பட்ட சுதந்திர பிலிப்பைன் அரசு வேண்டுமென்ற கொள்கையைப் பின்பற்றிய கூட்டாட்சிக் கட்சியைச் (Federal Party) சேர்ந்தவர்கள்.

பொது அமைதி பராமரிப்பு, வட்டாரத்தன்னாட்சி ஆகியத் துறைகளில் கிட்டிய வெற்றியைக்கண்ட அமெரிக்கர்கள் இன்னுமோர்படி அதிகமாகச் சென்று, 1907இல் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக்கொண்ட தேசிய சட்ட மன்றத்திற்கான (National Assembly) தேர்தல்களை நடத்துவதற்குத் தயாராயினர். அச்சட்டமன்றம் கீழ்ச்சட்டமன்றமாகவும் (Lower House), பிலிப்பைன் கழகத்தால் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களைக்கொண்ட மேல்சட்டமன்றமாகவும், கவர்னர் - ஜெனரல் நிர்வாக அதிகாரம் உடையவராக இருக்கவும் திட்டமிடப்பட்டது.

நகராட்சி, மாநில மன்றங்களுக்கான தேர்தல்களில் கலந்து கொள்வதற்குத் தகுதிபெற்ற வாக்காளர்கள் தேசிய சட்டமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கவும் தகுதி பெற்றனர். அதன்படி, இருபத்தொரு வயதான எல்லா ஆண்களும் குறைந்தது அவரவர்களுடைய மாவட்டங்களில் ஆறுமாதகாலம் உறையுளும், 1898ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 13ஆம் தேதிக்கு முன்பு வட்டார அலுவலகங்களில் பணி செய்தவர்களாகவும், 500 பிசாக்கள் (Pesos) பெறுமான முள்ள உண்மையான சொத்துடையவர்களாக அல்லது ஆங்கிலம் அல்லது ஸ்பானிய மொழியை எழுத அல்லது பேசப் படிக்க தெரிந்தவர்களாக இருப்பவர்களும் வாக்குரிமை பெற்றனர். சட்டமன்றத் தேர்தல்களுக்கு 1,04,966 பேர்கள் வாக்காளர்களாகப் பதிவு செய்திருந்ததோடு அவர்களில் 94 விழுக்காட்டினர் பங்கெடுத்துக்கொண்டிருந்தனர்.[1]

---

[1] United States War Department, Office of the Secretary, Eighth Annual Report of the Philippine Commission to the Secretary of war, 1907 (Washington. Govt. Printing Office, 1908) Part I Pages 202-203:

1907ஆம் ஆண்டு ஜுன் மாதம் தேசியசட்டமன்றத்திற்கு நடைபெற்றத் தேர்தல் பிரச்சாரம் பதவியில் அமர்ந்திருந்தவர்களுக்கும், பதவிக்கு வரமுடியாதவர்களுக்குமிடையே, அதாவது, அரசாங்கத்தில் பதவி பெற்றிருந்தவர்கள், நியமன பதவி பெற்றவர்கள், பதவியில்லாதவர்கள் அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட பதவிகளிலிருந்தவர்களுக்கிடையே போராட்டமாக உருவெடுத்தது. கூட்டாட்சிக் கட்சியைச் சேர்ந்தவர்களும், அதிகாரத்தில் இருந்தவர்களும் முன்னேற்றக் கட்சி (Partido Progresista) என்று தங்கள் கட்சியின் பெயரை மாற்றிக்கொண்டார்கள். வெளிப்படையாகச் சுதந்திரம் வேண்டுமென வற்புறுத்திய தேசியவாதிகள் (Nationalistes) மாபெரும் வெற்றிபெற்றார்கள். மொத்தமிருந்த 80 இடங்களில் தேசியவாதிகள் 58 இடங்களையும், சுயேச்சையார் 6 இடங்களையும் பெற்றனர். ஆஸ்மேனு (Osmena) என்பவரது தலைமையில் தேசியவாதிகள் தேசிய சட்டமன்றத்தை அமைத்தனர். 1907ஆம் ஆண்டு முதல் 1946ஆம் ஆண்டுவரை தேசியவாதிகள்தான் பிலிப்பைனில் சிறந்த அரசியல் கட்சியினராக இருந்தனர்.

அதிகாரத்திற்காக நடைபெற்ற இரு தனித்தனி போராட்டங்களோடு பிலிப்பைன் அரசியல் ஒருகட்சி அரசியலாயிற்று (One party Politics). முதலாவது, ஆஸ்மேனுவுக்கும் மானுவல் கியூசானுக்குமிடையில் (Manuel L. Quezon) அதிகாரத்திற்கான போராட்டமாக உருவெடுக்குமளவிற்கு தலைவர்களுக்கிடையில் இக்கட்சியினுள் ஏற்பட்ட உட்சண்டையாகும். இரண்டாவது, ஒருபக்கம் தேசிய சட்டமன்றத்திற்கும் மறுபக்கம் கழகம், கவர்னர்-ஜெனரலுக்குமிடையே சட்டமன்றத்திற்கு அதிக அதிகாரம் தரவேண்டுமென்பதற்காக நடைபெற்றப் போராட்டமாகும்.

அமெரிக்காவில் ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயகக்கட்சி வெற்றிபெற்றதும், பிலிப்பைனில் தன்னாட்சித்துறையில் மேலும் பல முக்கிய மாற்றங்கள் ஏற்பட்டன. பிலிப்பைன் அரசாங்கத்தில் பிலிப்பைனியர்களுக்கு முன்பிருந்ததைக் காட்டிலும் அதிக அதிகாரமும், பதவிகளும் தரப்பட்டன. ஆனால், இதை முன்னாள் கவர்னர்-ஜெனரல்களும், தொழிலதிபர்களும் ஆட்சேபித்தனர். 1916ஆம் ஆண்டு அமெரிக்க பாராளுமன்றமான காங்கிரஸ் பிலிப்பைன் பற்றிய அமைப்புச் சட்டமொன்றை இயற்றியது.[1] ஜோன்ஸ் சட்டமென அழைக்

[1] Public Act No. 240, 64th Congress (August 29, 1916)

கப்படும் இச்சட்டம், பிலிப்பைன் தீவுகளில் அரசியல் சட்ட மொன்றிற்கும், அதன் அடிப்படையிலான அரசாங்க மொன்றிற்கும் ஏற்பாடுசெய்திருந்ததோடு நிலையான அரசாங்கம் ஏற்படுத்தப்பட்டதும் அமெரிக்காவின் மேலாதிக்க அதிகாரம் திரும்பப்பெற்றுக்கொள்ளப்படு மென்றும் அறிவித்தது.

ஜோன்ஸ் சட்டப்படி மக்கள் இறைமையடிப்படையில் நடைபெற்றத் தேர்தல்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சபை (House of Representatives), மேல்சபை (Senate) இரண்டிற்கும் சட்டம் செய்யும் அதிகாரம் வழங்கப்பட்டது. ஆனால், கிறிஸ்துவர்கள் அல்லாத இதரர்களுக்கு பிரதிநிதித்துவம் கிடைக்கும்வகையில் செனட்டிற்கு இரு உறுப்பினர்களையும், பிரதிநிதிகள் சபைக்கு ஏழு உறுப்பினர்களையும் நியமிப்பதற்கு கவர்னர்-ஜெனரலுக்கு அதிகாரம் தரப்பட்டது. வரி, குடியிறக்கம் (immigration), நாணயம், பொதுச்சொத்துக்கள், மரம், சுரங்கம் வெட்டுதல் பற்றி பிலிப்பைன் பாராளுமன்றம் இயற்றும் சட்டங்கள் அமெரிக்க ஜனாதிபதியால் ஏற்கப்படும்வரை அமுலுக்கு வரமுடியாது. அங்ஙனமே, இயற்றப்படும் எல்லா சட்டங்களும் அமெரிக்க காங்கிரசுக்கு அனுப்பப்படவேண்டும். காங்கிரஸ் அச்சட்டங்களை விலக்கும் அதிகாரம் பெற்றிருந்தது. உச்ச அதிகாரம் பெற்றிருந்த கவர்னர்-ஜெனரல் அமெரிக்க ஜனாதிபதியால் நியமிக்கப்பட்டார். உச்சநீதிமன்றம், முதல் நிலை நீதிமன்றங்கள் (Courts of First Instance), அமைதிகாண் நீதிமன்றங்கள் (Justices of the Peace) ஆகியவை அடங்கிய நீதித்துறையொன்றும் ஏற்படுத்தப்பட்டது. உச்சநீதிமன்றத்தின் தலைமை நீதிபதியும், எட்டுத் துணை நீதிபதிகளும் அமெரிக்க செனட் சம்மதத்தின் பேரில் ஜனாதிபதியால் நியமிக்கப்பட்டனர்.

ஜனாதிபதி வில்சன் தலைமையில் இயங்கிய அமெரிக்க நிர்வாகம் பிலிப்பைனியர்களுக்கு அரசாங்கத்தில் அதிக அதிகாரம் அளித்ததானது, அங்கு அமெரிக்க மேலாதிக்க அதிகாரம் தக்க வைத்துக்கொள்ள முடியாத சூழ்நிலையைத் தோற்றுவித்தது. ஏனெனில், இச்சமயத்தில் அமெரிக்கர்களிடையே சுதந்திரம் பற்றிய புதியதொரு விவாதம் ஆதரவு பெற்று வந்தது. அவ்விவாதம் வருமாறு: விவாதத்தின் முக்கியப் பிரச்சினை பிலிப்பைன் பாதுகாப்பைப் பற்றியது. அமெரிக்கா, பிலிப்பைனில் தொடர்ந்து இருந்தால்

சீனுவினாலும், ஜப்பானாலும் அதற்கு ஏற்படக்கூடிய ஆபத்தைச் சமாளிப்பதற்கு இராணுவம், பாதுகாப்பு ஆகிய வற்றிற்காக அமெரிக்கா நிறையத் தொகை செலவழிக்க நேரிடும் என்பது சுதந்திரம் அளிக்கவேண்டுமென்றவர்களின் கருத்து. அமெரிக்க மேலாதிக்கம் அங்கு தொடர்ந்திருந்து வரவேண்டுமென்றவர்கள், அமெரிக்கா அங்கிருந்து விலகி விட்டால் ஜப்பான், சீனு அல்லது வேறு ஏதேனுமொரு நாடு அதைப் பிடித்துக்கொள்ளும் என்றூர்கள். இத்தகைய சமயத்தில் பிலிப்பைன் அரசியல்வாதிகள் கவர்னர் ஜெனரலின் அதிகாரத்தைத் திறமையாகச் சமாளித்து சுதந்திரம் பெறுவதற்கு பொதுமக்களிடமிருந்த ஆதரவை எவ்வாறு பயன்படுத்திக்கொள்ளலாம் என்பதைத் தெரிந்து கொண்டிருந்தார்கள். ஆனால், அமெரிக்காவில் குடியரசுக் கட்சியைச்சேர்ந்த ஹூவர் ஜனுதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டதால் நிலைமையை சமாளிப்பது எப்படி என்பதுபற்றியக் கொள்கைகளில் ஏற்பட்டக் கருத்துவேற்றுமை காரணமாக அமெரிக்க கவர்னர்-ஜெனரலுக்கும் பிலிப்பைனியர்களுக்கு மிடையே வெளிப்படையான சச்சரவேற்பட்டது.

ஹென்றி எல். ஸ்டிம்சன் (Henry L. Stimson) கவர்னர்-ஜெனரலாக இருந்த காலத்தில் சுதந்திரம் வேண்டுமென்றவர் களுக்கும் வேண்டாமென்றவர்களுக்குமிடையே போராட்டம் உச்சகட்டத்தை அடைந்தது. ஹூவர் நிர்வாகம் சுதந்திரத்திற் கெதிரான அதன் முடிவை அறிவித்தது. எனினும், பிலிப்பைனியர்களின் சுதந்திர உணர்ச்சிகளுக்கு வழக்கமாக ஆதரவளித்துவந்த ஜனநாயகக்கட்சிக் கட்டுப்பாட்டிலிருந்த அமெரிக்க 72-வது காங்கிரஸ் பிலிப்பைனுக்கு சுதந்திரம் வழங்கும் மசோதாவொன்றை நிறைவேற்றி, ஜனுதிபதி ஹூவருக்கு இசைவிற்காக அனுப்பி வைத்தது. ஹூவர் அதை தன் மறுப்பாணை அதிகாரத்தைக் கொண்டு நிராகரித் தார். எனினும், காங்கிரஸ் அம்மசோதாவை மீண்டும் நிறை வேற்றியதால், அது 1933ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 17ஆம் தேதி சட்டமாயிற்று.

பிலிப்பைன் அரசியல்வாதிகளுக்கிடையிலிருந்த குழுச் சண்டை காரணமாக ஹேர்-ஹாவஸ்-கட்டிங் சட்டமென (Hares-Hawes-Cutting act) அழைக்கப்பட்ட அச்சட்டம் ஏற்கப் படவில்லை. ஆஸ்மேனு தலைமையிலான பிலிப்பைன் சுதந்திரக் கழகத்தால் (Philippine Independence Commission) ஏற்றுக் கொள்ளப்பட்ட அச்சட்டத்தின் சில அம்சங்களை கியூசான்

ஆட்சேபித்தார். அதன் பிறகு கியூசான் அமெரிக்காவிற்குச் சென்று, இரண்டு அல்லது மூன்றுண்டுகளுக்குள் சுதந்திரமும், தடையிலாவணிகம் செய்யும் உரிமையும் கிடைக்க வழிசெய்யும் சட்டமொன்று நிறைவேற்றப்பட முயற்சித்தாரென்றாலும், அதற்கு ஆதரவு விரைவில் கிடைக்காதென்று தெளிவாயிற்று. அப்போது ஜனாதிபதியாக இருந்த ரூஸ்வெல்ட் பிலிப்பைனில் அமெரிக்கப்படைத்தளங்கள் பற்றிய அம்சங்களைத்தவிர, இதர அம்சங்களில் மாற்றம் செய்யமுடியாதெனத் தெளிவாகச் சொல்லிவிட்டார். அடுத்து டைடிங்ஸ்-மக்டபி (Tydings-Mc Duffie Act) என்ற சட்டம் 1934ஆம் ஆண்டு மார்ச் மாதம் 24ஆம் தேதி இயற்றப்பட்டது.

இச்சட்டம் அரசியல் நிர்ணயசபையொன்றுக்கும் குடியரசு அரசியலமைப்பிற்கும், பிலிப்பைனில் அமெரிக்க உயர் ஆணையாளர் (High Commissioner) ஒருவர் அமெரிக்க அரசாங்கச் செலவில் அமெரிக்கர்களுடைய நலன்களைக்கவனித்துக்கொள்வதற்கு நியமிக்கப்படுவதற்கும், அவ்வாறே பிலிப்பைன் அரசாங்கப் பிரதிநிதியொருவர் அமெரிக்காவில் நியமிக்கப்படுவதற்கும் வகைசெய்தது. மேலும், அமெரிக்க உச்சநீதிமன்றம் பிலிப்பைன் சட்டங்கள்பற்றிய புனராய்வைத் தொடர்ந்து பெற்றிருக்குமென்றும் கூறியது. இச்சட்டத்தின் முக்கியமான அம்சம், புதிய அரசாங்கம் பதவியேற்றது முதல் பத்தாண்டுகளில், அதாவது ஜூலை மாதம் நான்காம் தேதிக்குள் அமெரிக்க மேலாதிக்க அதிகாரம் திரும்பப் பெற்றுக்கொள்ளப்பட்டு, பிலிப்பைன் முழு உரிமை பெற்ற சுதந்திர நாடாகிவிடும் என்பதாகும்.

சுதந்திரக் குறிக்கோள் அடையப்பட்டபிறகு என்ன செய்வதென்று தெரியாது பிலிப்பைன் அரசியல்வாதிகள் விழித்தனர். ஸ்பானியர்கள் அரசாங்கத்தில் பங்குபெற்றில்லாவிட்டாலும் சமயத்துறையில் இன்னும் ஆதிக்கத்தைதக்க வைத்துக்கொண்டிருந்தனர். அமெரிக்க கவர்னர்-ஜெனரல்கள் மேற்கத்தியமயமாக்கும் துறையில் மேலெழுந்தவாரியாக என்னென்ன மாறுதல்களைச் செய்யமுடியுமோ அவைகளைச் செய்து வந்தனர். குறிப்பாக, வட்டார அரசாங்கம், சிவில் பணித்துறை, பொது மராமத்து, பள்ளிக்கூடங்கள், சாலைகள், சுகாதாரப் பணித்துறைகள், நிதி நிர்வாகம் ஆகியவற்றில் அவர்கள் மேற்கத்தியமரபுகளை நுழைத்தவண்ணமிருந்தனர். பிலிப்பைனில் அமெரிக்கர்களுடைய அபரிமிதமான முதலீடும் தடையிலா வணிகக்கொள்கையும், பொருளாதார முன்

னேற்றத்திற்கு ஆதாரமாக அமைந்தாலும், நகர்ப்புற, நாட்டுப்புற மக்களிடையே பொருளாதார ஏற்றத்தாழ்வு களைத் தோற்றுவித்தன. கல்வியில் முன்னேற்றமும் போக்கு வரத்து மேம்பாடும், இதர பலவும் மக்களிடத்தில் வேலை வாய்ப்பில்லாத நிலைமையைத் தோற்றுவித்தன. அரசாங்கமும் மக்களின் கோரிக்கைகளை நிறைவேற்றும் சக்தியற்றதாக இருந்தது. எனவே, நாட்டில் குறிப்பாக, மத்திய லூசான் பகுதியில் மக்களிடத்தில் பரவலான அமைதியின்மை நிலவியது. பொருளாதார சக்திகளுக்கும், அதிகாரத்திற்கும் அரசியல் அதிகாரம் கட்டுப்பட்டிருந்ததோடு, சமூகத்தில் உயர்மட்டத்தில் இருந்தவர்களுக்கே அரசாங்க உதவிகள் கிட்டி வந்தன. இவ்வாறு அமெரிக்கர்கள் ஆட்சி செய்த காலத்தில் பிலிப்பைன் நவீன அரசாக மாறிவிட்டிருந்த தென்றாலும் பல பிரச்சினைகளையும் தோற்றுவித்தது.

பிலிப்பைன் அரசியலில் ஆறுண்டு காலத்திற்கு மானுவல் எல். கியூசான் தன்னிடமிருந்த காந்த சக்தியையும், அகங் காரத்தையும் இணைத்து வெளிப்படுத்தி, அரசியல் சாமர்த்தி யத்தால் நிகரற்றவராகத் திகழ்ந்தார். நாட்டுபுற மக்களின் குறைகளையும், துயரங்களையும் அகற்றத் திட்டமொன்றை வகுத்து, செல்வந்தர்கள், பெருநிலப் பிரபுக்களின் ஆதரவை அதை நிறைவேற்றுவதற்குக் கோரினர். இதற்கிடையில் பல சீர்திருத்த இயக்கங்கள் தோன்றலாயின. கம்யூனிஸ்டுகளும், சோஷலிசவாதிகளும் மக்களுடைய குறிப்பாக, குடியானவர் களுடைய ஆதரவைத்திரட்டி வந்தனர். கியூசானுலும் மற்றவர் களாலும் துயர் துடைப்பதற்காக எடுத்துக்கொள்ளப்பட்ட முயற்சிகளுக்கு, நாட்டுப்புறங்களில் ஆதிக்கத்தை விடாப் பிடியாகக் காப்பாற்றிவந்த நிலப்பிரபுக்கள் ஆதரவுதர முன் வரவில்லை. பிரபுக்களில் பலர் சொந்தப் படைகளையும் வைத்திருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. இச்சூழ் நிலையில் ஜப்பான் பிலிப்பைனைத் தாக்கி, தன் வசப்படுத்திக் கொண்டது. இம்மாற்றத்தால், கெடுபிடிகளுக்கு ஆளாகி யிருந்த நாட்டுப்புற மக்களுக்கு விடுதலை கிடைத்ததோடு நாட்டுக்கும் விடுதலை கிடைத்தது. விடுதலையோடு, புதிய குழுக்களும், புதிய கருத்துகளும், புதிய சக்திகளும் ஏற்பட்டன.

## 5. ஜப்பானிய ஆக்ரமிப்பு

1941ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 8ஆம் நாள் ஜப்பானியர் கள் பிலிப்பைன் நாட்டைத்தாக்கி அமெரிக்க ஆகாயவிமானப்

படையின் பெரும்பகுதியை நாசப்படுத்திவிட்டனர். ஆயுதத் தளவாடங்கள் சரிவர இல்லாத அமெரிக்க-பிலிப்பைன் கூட்டுப்படை பூரண அழிவு ஏற்படுவதற்கு முன்பாக, படான் (Bataan) தீபகற்பத்திற்கு முன்னரே திட்டமிட்டிருந்தவாறு பின்வாங்கிச்சென்றுவிட்டது. ஜனாதிபதி கியூசானும், உதவி ஜனாதிபதி ஆஸ்மேனாவும், வேறு சில உதவியாளர்களும், பிலிப்பைன் அரசாங்கத்தை அமெரிக்காவிலுள்ள வாஷிங் டனுக்கு மாற்றிக்கொண்டுபோய்விட்டனர். அவ்வாறு செல்லாமல் மணிலாவிலேயே தங்கிய இதர அரசாங்க அலுவலர்கள் முடிந்தவரை பிலிப்பைனியர்களைக் காப்பாற்றும் பணியில் ஈடுபட்டனர்.

ஜப்பானியர்களுடனான போராட்டத்தில் அமெரிக்கப் படையோ, தளவாட உதவியோ கிடைக்காதென்பது பிலிப் பைனியர்களுக்குப் புரிந்துவிட்டது. எனினும் அவர்கள் தங்களால் இயன்றவரை எதிர்த்துப்போராடினர் என்றாலும், 1942ஆம் ஆண்டு மே மாதம் 6ஆம் நாள் காரிகைடாரில் (Correigidor) சரணடைந்தனர். அதன் பிறகு பிலிப்பைனிய வீரர்கள் மலைப்பகுதிகளுக்குச் சென்று கொரில்லாச்சண்டை முறையில் போரிட்டு, ஜப்பானியர்களுக்கு முடிந்தவரை தொந்தரவு தந்துவந்தனர். இப்போராட்டத்தில் மாணவர் களும், அறிஞர்களும், தொழிலாளர்களும் முழுமூச்சுடன் ஈடு பட்டனர். நகரங்களில் அதுகாறும் வாழ்ந்துவந்த பெருநிலப் பிரபுக்கள் சிலர் ஜப்பானியர்களுக்கு ஊழியம் செய்யவேண்டி யிருக்குமென்று பயந்து நாட்டுப்புறங்களுக்குச் சென்றனர். ஆனால், அவர்களுக்கு வசதிகளற்ற அவ்வாழ்க்கை சரிப்பட்டு வரவில்லை. அவர்களில் பலர், அப்போதுதான் தங்கள் நாட்டு மக்கள் எத்தகைய வாழ்க்கையை நடத்திவந்தார்கள் என் பதை உணர்ந்தார்கள்.

ஆனால், பல நிலப்பிரபுக்களும், மேல்வகுப்பினரும் தங்கள் குடும்பத்தோடு மணிலாவிற்குக் குடிபெயர்ந்து வியாபாரத்தில் ஈடுபட்டதோடு ஜப்பானியர்களுக்குத்தேவையான பொருள் களைத்தந்து, தங்களுடைய உடைமைகளையும் செல்வத்தையும் காப்பாற்றிக்கொண்டனர். பிலிப்பைனில் பல இடங்களில் குறிப்பாக மத்திய லூசான் போன்ற பகுதிகளில் போருக்கு முன்பிருந்த நிலப்புரபுத்துவ அரசாங்கம் ஒழிக்கப்பட்டு, அவ்விடங்களில் பொதுவுடமை இயக்கங்கள் சோஷலிச-கம் யூனிசக்கட்சிகளின் தலைமையில் செயற்படவாரம்பித்தன.

அவர்கள் அறுவடை செய்யப்படும் தானியங்கள் ஜப்பானியர்களிடம் சிக்கிவிடாதவாறு தடுத்துநிறுத்தினர். பல இடங்களில் வட்டாரத் தன்னாட்சி அரசாங்கங்கள் ஏற்படுத்தப்பட்டு அவைகளில் குத்தகைதாரர்களுக்குப் பொறுப்பும் பதவிகளும் தரப்பட்டன. கம்யூனிஸ்டுக்கட்சியின் தலைமையில் ஹக்கு (Huks) என்றழைக்கப்பட்ட மக்கள் படை (People's Army) ஜப்பானியர்களை எதிர்த்து கொரில்லாமுறையில் போராட ஏற்படுத்தப்பட்டது. இப்படை மோ-சே–துங் பின்பற்றிய யுக்தி அடிப்படையில் அமைக்கப்பட்டதோடு, நாட்டுப்புற மக்களோடு தொடர்பில்லாதவாறு பார்த்துக்கொள்ளப் பட்டது. இப்படையில் சுமார் 5000 வீரர்கள் இருந்தனர். அவர்கள் மத்திய லூசான் பகுதியில் பெரும்பாலான இடங்களைத்தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டுவந்தனர். அவர்களின் முக்கிய நோக்கம் ஜப்பானியர்களுக்கெதிராக மக்களிடம் காணப்பட்ட வெறுப்பைப் பயன்படுத்திக்கொண்டு அவர்களை எதிர்ப்பதாகும்.

ஆனால், இது ஜப்பானிய ஆக்கிரமிப்பு பற்றியக்கதையின் ஒரு பகுதிதானகும். மற்றொரு பகுதி எந்த அளவிற்கு பிலிப்பைனியர்கள் ஜப்பானிய ஆக்கிரமிப்பாளர்களுக்கு ஆதரவு தந்தனர் என்பதைப்பற்றியதாகும். பிலிப்பைன் அரசாங்கத்தில் முதலில் பங்கேற்றிருந்தவர்கள், ஜப்பானியர்களை எதிர்ப்பதைக் கைவிட்டு,ஜோஸ்லாரல் என்ற செனட்டர் தலைமையில் ஜப்பானியர்களின் ஆதரவில் அவர்களால் இறைமையதிகாரம் உடையதாக அறிவிக்கப்பட்ட பிலிப்பைன் குடியரசொன்றை 1943ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 14ஆம் நாளன்று நிறுவினர். ஜப்பானிய அரசாங்கம் இக்குடியரசோடு உடன்படிக்கையொன்றைச் செய்துகொண்டதெனினும், இக்குடியரசு ஜப்பானியர்களின் கைப்பொம்மையாகவே இருந்ததென்பதை மறுக்கமுடியாது.

போர் முடிந்தபிறகு இவர்கள் ஜப்பானியர்களோடு ஒத்துழைப்பதற்கான காரணங்களாகக் குறிப்பிட்டதாவது: (1) அவ்வாறு செய்யுமாறு கியூசான் அவர்களுக்கு உத்திரவிட்டிருந்தார் (2) எனவே, அவர்கள் ஜப்பானியர்களிடமிருந்து மக்களைக் காப்பாற்றினர் (3) அவர்கள் ஜப்பான் அல்லது அமெரிக்க சார்புடையவர்களாக இல்லாதிருந்ததால் பிலிப்பைனியர்களைக் காப்பாற்றுவதிலும், அவர்களுக்குச் சுதந்திரம் கிடைக்குமாறு செய்வதிலும் இருந்த அக்கறை சண்டையைப்பற்றிக் கிடையாது என்பவையாகும். போர்

நடைப்பெற்றுக்கொண்டிருந்தபோது அமெரிக்க ஜனாதிபதியான பிராங்ளின் டி. ரூஸ்வெல்டும், ஜெனரல் மக் ஆர்தரும் ஜப்பானிய ஆதரவாளர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்று பயமுறுத்திக் கொண்டிருந்தனர். ஆனால், விடுதலைக்குப் பிறகான காலத்தில் ஏற்பட்டக் குழப்பங்களில் இந்தக் கொள்கை மறக்கப்பட்டு விட்டது. இக்கொள்கைக்குக் கிடைத்த பேரிடி மானுவல் ஏ. ராக்சாஸ் என்பவர் மக் ஆர்தரால் நடத்தப்பட்டமுறைபற்றியக் கொள்கையாகும்.

போர் ஆரம்பித்தபோது ராக்சாஸ் கியூசானின் கையாளும், சட்டமன்றத்தின் சபாநாயகரும் ஆவார். மக் ஆர்தர் தலைமையில் இயங்கிய படையில் அவர் பிரிகேடியர் ஜெனரலாக இருந்தார். 1942இல் இவர் தப்பிச்சென்றபோது ஜப்பானியர்களால் பிடிக்கப்பட்டு, அதன்பிறகு அவர்களுக்குச் சாதகமாக நடந்துகொண்டு பிலிப்பைன் அரசாங்கத்தில் முக்கியப் பங்கேற்றார். மீண்டும் அமெரிக்கர்கள் பிலிப்பைனைக் கைப்பற்றியபோது, ராக்சாசும் பிடிக்கப்பட்டு, ஜெனரல் மக்ஆர்தரால் முன்பு அவர் வகித்து வந்த பதவியும் அந்தஸ்தும் தரப்பட்டதோடு, துப்பறியும் துறையின் தலைமை இடத்திலிருந்து பணிபுரிய அனுப்பப்பட்டார். மக் ஆர்தரின் இச்செயல், அவர், ஜப்பானியர்களுடன் ஒத்துழைத்தவர்கள் பழிவாங்கப்படுவார்கள் என்று அறிவித்திருந்ததற்கு நேர் எதிரானதாகும். அடுத்த ஓராண்டுக்கும் சற்று அதிகமான காலத்தில் ராக்சாஸ் பிலிப்பைன் குடியரசின் தலைவராகவும் ஆனார்.

கியூசான் இறந்த பிறகு, பிலிப்பைன் ஜனாதிபதியாகப் பதவிக்கு வந்த ஆஸ்மேனா, மக் ஆர்தருடன் பிலிப்பைனுக்குத் திரும்பிவந்தார். ஆனால், இவ்விருவருக்குமிடையே விரைவிலேயே கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டுத் தீர்க்க முடியாமற் போய்விட்டன. ஆஸ்மேனா, ஜப்பானியர்களுடன் ஒத்துழைப்பு பற்றியக் கொள்கையை மக் ஆர்தருக்கு விளக்கமுயன்றாரென்றாலும் அது ஏற்றுக்கொள்ளப்படவில்லை. மக் ஆர்தர், காங்கிரசைக் கூட்டுமாறு ஆஸ்மேனாவை வற்புறுத்தினார். அவரோ, சட்டமன்றத்தின் உறுப்பினர்களில் பாதிக்கும் மேற்பட்டவர்கள் ஜப்பானியர்களோடு ஒத்துழைத்தவர்களாக இருந்ததால் மறுத்தார். எனினும், வற்புறுத்தல் தாங்கமுடியாமல் காங்கிரஸ் கூட்டப்பட்டபோது ராக்சாஸ் செனட்டின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர்

உடனேயே ஜப்பானியர்களுக்கு ஒத்துழைப்பு நல்கியதாகவும், அதனுல் நாட்டுக்குத் துரோகம் செய்ததாகவும் சுமத்தப் பட்டக் குற்றச்சாட்டுகளினின்றும் தன்னையும், தன்னைச் சார்ந்தவர்களையும் விடுவித்துக்கொள்ள நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டார். அவரும், அவருடைய செனட் தோழர் களும், ஆஸ்மேனுவால் அமைச்சரவைக்குச் செய்யப்பட்ட நியமனங்களை ஏற்க மறுத்தனர். அங்ஙனம் நியமிக்கப்பட்ட வர்கள் அனைவரும் கொரில்லா நடவடிக்கைகளில் ஈடுபட்டி ருந்தவர்கள் அல்லது ஒத்துழைப்பு நடவடிக்கைகளில் சேராதவர்களாவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். ராக்சா ஸினுடைய இச்செல்வாக்கிற்கு எதிராக ஜனுதிபதி பதவியின் வசதிகளைக் கொண்டு ஆஸ்மேனுவினுல் ஒன்றும் செய்யமுடிய வில்லை.

ஜப்பானிய ஆக்கிரமிப்பால் தோன்றிய அரசியல் சக்தி களும் பிரச்சினைகளும்தான் 1946ஆம் ஆண்டு தேர்தல் பிரச்சாரத்தின் முக்கிய அம்சங்களாக இருந்தன. சுதந்திரம் வழங்கப்படுவது தள்ளிப்போடப்படவேண்டுமென்று பொது வாகக் கருதப்பட்டாலும், டைடிங்ஸ்-மக்டபி சட்டப்படி (Tydings McDuffie Act) 1946ஆம் ஆண்டு ஜுலை மாதம் 4ஆம் நாள் பிலிப்பைனுக்குச் சுதந்திரம் தரப்படும் என்பதைத் திட்டவட்டமாக அமெரிக்கா அறிவித்தது. பிலிப்பைன் குடி யரசின் முதல் ஜனுதிபதியையும், காங்கிரசின் தலைவரையும் தேர்ந்தெடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்ட தேர்தலில், வேட் பாளர்கள் ஒருவருக்கொருவர் சண்டை போடுவதற்குச்சேர்ந்து கொண்டார்கள். தேசியக் கட்சியின் உத்தியோகப் பூர்வமான வேட்பாளராக ஆஸ்மேனு அறிவிக்கப்பட்டார். ஆனுல், தேசிய கட்சியிலிருந்த இடதுசாரியினர் ராக்சாஸ்தான் கட்சி வேட்பாளராகப் போட்டியிடவேண்டுமென்று கிளர்ச்சி செய் தனர். இறுதியில் அவர்கள் மிதவாதக்கட்சி (Liberal Party) என்ற பெயரில் புதுக்கட்சியை ஆரம்பித்தனர்.

ராக்சாஸ் தேர்தல் இயக்கம் மூன்று பிரச்சினைகளை வற்புறுத்தியது. அவைகள், உடந்தை (Collaboration) கம்யூனிசம், மாற்றம் (Chane) ஆகியவையாகும். முதலாவதும் முக்கியமானதும் ஜப்பானியர்களுடன் சேர்ந்திருந்ததாகச் சாட்டப்பட்டக் குற்றச்சாட்டாகும். அந்தக் குற்றச்சாட்டு ஆதாரமற்றது என்று நிரூபிப்பது மிகவும் கசப்பான பிரச்சினையாகும். ஏனெனில், பல பிலிப்பைனியர்கள் தங்கள்

உயிரையும் பொருட்படுத்தாமல் நாட்டுக்காகப் பணியாற்றினார்கள். ஜப்பானியர்களின் கீழ் பல பதவிகளிலிருந்தவர்கள் தங்களுடைய செல்வாக்கை, பிலிப்பைனியர்கள் ஜப்பானிய ஆதிக்கத்தால் பாதிக்கப்படாமல் இருப்பதற்குப் பயன்படுத்தினர். வேறு சிலர் நாட்டில் நிலவிய குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, கள்ள வியாபாரம் மூலமாகப் பெரும் பொருள் ஈட்டவும், சகமக்களைத் துன்பத்திலாழ்த்தவும் செய்தனர். குற்றவாளிகளை விசாரணை செய்து தண்டிப்பதற்காகத் திறமைமிக்க லோரன் சோ தானடா (Loren Zo Tanada) என்பவர் தலைமையில் மக்கள் நீதிமன்றமொன்று (People's Court) ஏற்படுத்தப்பட்டது. ஆனால், அமெரிக்கப்படையின் தெளிவற்றக் கொள்கையும் சட்டமன்றத்தின் எதிர்ப்பும், குற்றத்தை நிரூபிப்பதிலிருந்த தொல்லைகளும் அந்நீதிமன்றம் நல்லமுறையில் செயல்படாதவாறு செய்துவிட்டன. ஜப்பானியர்களின் கீழ் பணியாற்றியவர்கள் நாட்டிற்கு நன்றியுடையவர்களாக இருந்ததோடு, ஜப்பானியர்களை எதிர்த்தும் வந்தனர் என்று ராக்சாஸ் வெளிப்படையாகச் சொன்னார். கைக்கூலி அரசாங்கத்தின் இதர உறுப்பினர்களான லாரல், ரெக்டோ என்பவர்கள் எவரும் ஏற்கத்தக்க வாதங்களை எடுத்துரைத்தனர். அவர்கள், நான்காண்டுகாலம் ஜப்பானிய ஆக்ரமிப்பு எத்தகையதென்பதை உணர்வதற்கு மற்றவர்களோடு தாய் நாட்டிலேயே இருந்தனரென்றும் ஆனால், ஆஸ்மேனுவோ பயமின்றி வாஷிங்டனில் இருந்தார் என்றும் எடுத்துக் காட்டினர். ராக்சாஸின் இயக்கம் ஜப்பானியர்களுக்கு உடந்தையாக இருக்கவில்லை என்பது அதற்குப்பிறகு அந்தப் பேச்சு மீண்டும் எழாதபடி செய்துவிடவேண்டுமென்பதை நோக்கமாகக் கொண்டு நடத்தப்பட்டதோடு, மக்களிடையே ஆதரவையும் நாடியது.

இரண்டாவது பிரச்சினை 'நாட்டைக்குழப்பத்திலிருந்தும், இலஞ்ச ஊழலிலிருந்தும், கம்யூனிசத்திலிருந்தும் காப்பாற்ற வேண்டும்' என்னும் ராக்சாஸின் குரலாகும். இதற்கு அடிப்படைக் காரணம் ஹக்குகளாகும் (Huks). ஹக்குகள் ஆரம்பத்தில் கொரில்லாப் பிரிவுகளோடு போராடினர். அவர்களுக்கு ஆலோசகர்களாக அமெரிக்க அலுவலர்களுங்கூட இருந்தனர். போர் முடிந்து அமெரிக்க ஆதிக்கம் மீண்டும் ஏற்படுத்தப்பட்டபோது, ஹக்குகள் ஆயுதங்களை ஒப்படைக்க மறுத்துவிட்டனர். அதனால் அமெரிக்கர்கள் அவர்களை உத்தியோகப் பூர்வமான கொரில்லாக்களாக ஏற்றுக்கொள்ளாமல், சிறை

யில் அடைத்துத் துன்புறுத்தினர். இதனால் ஆத்திரமடைந்த ஹுக்குகள் அமெரிக்கப்படையினரும், பிலிப்பைன் காவல் துறையினரும் மீண்டும் நாட்டில் பிரபுத்துவத்தை ஏற்படுத்த சதிசெய்கிறார்களென்று கூறி, குடியானவர்களைத் தூண்டி விட்டனர். எனவே, நாட்டுப்புறங்களில் அமைதியின்மையும், பரவலாகக் கலகங்களும் ஏற்பட்டன.

தேர்தல் பிரச்சாரம் ஆரம்பமானதும், மூன்றாவது அரசியல் கட்சியொன்று, போருக்கு முன்பிருந்த ஜனநாயகக் கட்சி, இதர மிதவாதக் குழுக்கள், கொள்கைகள் அடிப் படையில் ஏற்பட்டது. அக்கட்சியின் பிரமுகர்களாக உச்ச நீதிமன்ற நீதிபதி ஏசு பரேராவும் (Jesus Barrerra), பிலிப்பைன் கம்யூனிஸ்டுக்கட்சியில் போலிட் பீரோ உறுப்பினராக இருந்ததற்காகத் தண்டனைபெற்ற வின்சென்ட் லவாவு (Vincente Lava) மிருந்தனர். இக்குழு அதை ஆதரித்த ஹுக்குகளோடு கூட்டுசேர்ந்து ஆஸ்மேனாவை ஆதரித்தது. இக்கூட்டு பிலிப்பைனுக்குத் திட்டமிட்டபடி சுதந்திரம் தரப்படவேண்டுமென்றும், ஜப்பானியர்களுக்கு உடந்தையாக இருந்தவர்களைத் தண்டிக்கவேண்டுமென்றும், நாட்டை சர்வாதிகாரக் கும்பல்களிடமிருந்து காப்பாற்றவேண்டு மென்றும், நேர்மையான, இலஞ்ச ஊழலற்ற அரசாங்கம் வேண்டுமென்றும் தன்னுடைய கொள்கைகளாக அறி வித்தது. இக்குழுவை, ராக்சாஸ் கம்யூனிசச் சார்புடைய தென்று வருணித்து, ஆஸ்மேனா தேர்ந்தெடுக்கப்பட்டால் பிலிப்பைனில் கம்யூனிச ஆதிக்கமேற்பட்டுவிடுமென்று பய முறுத்தினார்.

மூன்றாவது பிரச்சினை, மாற்றமாகும். முதுமையுடன் களைப்புற்றிருந்த ஆஸ்மேனாவுடன் ஒப்புநோக்குங்கால் ராக்சாஸ் இளமைத் துடிப்புடனும், ஆற்றல் மிக்கவராகவு மிருந்தார். ராக்சாஸ், கியூசான் ஆதரவாளர். ஆகையால், ராக்சாஸ்தான் ஜனாதிபதியாக வரவேண்டுமென்று கியூசான் விரும்பினார் என்று சொல்லிக்கொள்ள முடியும். மேலும், அவர் சிறந்த பொருளியல் வல்லுனர் என்ற புகழைப் பெற்றி ருந்தார். அப்போது நாட்டினுடைய முக்கியப் பிரச்சினை களாக, புனர்வாழ்வும், பொருளாதார மீட்புமிருந்தன. ராக்சாஸ், தான் தேர்ந்தெடுக்கப்பட்டால், பழைய தலைமை யொழிந்து புதுயுகமொன்று ஏற்படுமென்றும், நாட்டிற்குப் புத்துயிர் அளிக்கும் பொருளாதாரக் கொள்கைகள் பின்

பற்றப்படுமென்றும் வாதித்தார். இதனால் கையாலாகாத வராகக் காணப்பட்ட ஆஸ்மேனவைக் காட்டிலும் ராக்சாஸ் மேல் என்பதாக மக்களுக்குத் தோன்றியது.

பணவீக்கம், கள்ள வியாபாரம், வெளிநாட்டு செலாவணி யில் இறங்குமுகம் ஆகிய சூழ்நிலைகளில் தேர்தல் பிரச்சாரம் நடந்தது. ராக்சாஸ் நாடு முழுவதும் சென்று ஆதரவு தேடினர். ஆனல், ஆஸ்மேனவோ, தேர்தலுக்கு மூன்று நாட்கள் முன்பு ஒரேயொரு சொற்பொழிவாற்றினர். அவருக்காக ஜனநாயகக் கூட்டணியினர் மணிலாப் பகுதி யிலும், மத்திய லூசானில் ஹக்குகளும் பிரச்சாரம் செய்தனர்.

இறுதியில் ராக்சாஸ் 2,00,000 வாக்குகள் வித்தியாசத்தில் ஆஸ்மேனவை வென்றதோடு, காங்கிரசின் இருமன்றங்களும் அவருடைய கட்சியின் ஆதிக்கத்தில் வந்தன. செனட்டில் மிதவாதக் கட்சிக்கு பதினேரு இடங்களும், ஆஸ்மேன கட்சிக்குப் பத்து இடங்களும் கிடைத்தன. பிரதிநிதிகள் சபையில் அவர்களுக்கு அறுபத்திரண்டு இடங்கள் கிடைத்தன. ஹக்குகள் அதன் பிறகு சட்டபூர்வமான செயல் களில் ஈடுபடுவதற்குப் பதிலாக, கொரில்லா நடவடிக்கைகளில் இறங்கினர். நிலப்பிரபுக்கள் மீண்டும் அரசியலில் செல்வாக்கு பெற ஆரம்பித்தனர். உடன்தைப் பிரச்சினை ஆழக் குழி தோண்டி புதைக்கப்பட்டது. இலஞ்சமும், ஊழலும் பிலிப்பைன் அரசியலில் முக்கியப் பிரச்சினைகளாக ஏற் பட்டன.

### 6. சுதந்திரத்திற்கான ஏற்பாடுகள்

நாட்டு விடுதலையோடுகூட குழப்பமும், அழிவும் ஏற் பட்டன. மிகப்பெருமளவிற்கு உடலுழைப்பு குறைந்தது. மணிலா நகரம் அழிந்து கொண்டிருந்தது. நாட்டுப்புறப் பகுதிகள் சீரழிந்து கொண்டிருந்தன. உணவுக்காக வேலைக்குப் பயன்படக்கூடிய ஆடு மாடுகள் கொல்லப்பட்டன. போக்குவரத்து குலைந்து வியாபாரம் பாதிக்கப்பட்டது. உணவு, இருப்பிடம், மருத்துவ உதவி, பள்ளிக்கூடங்கள் அத்தியாவசியமாகத் தேவைப்பட்டன.

சுதந்திரத்திற்கான, சட்டபூர்வமான ஏற்பாடுகள் பொருளாதார சீரமைப்பைக் கருத்தில் கொண்டு செய்யப் பட்டன. பிலிப்பைனிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட

தேங்காயெண்ணெமேல் போடப்பட்ட வரித்தொகை மூலமாகக் கிடைத்த 7,15,00,000 டாலர்கள், இராணுவத்தளவாடங்களின் உத்திரவாதத்திற்காகப் பிலிப்பைன் அரசாங்கம் போருக்கு முன்பு செலுத்தியிருந்த 60,00,000 டாலர்கள், அமெரிக்கப் புனரமைப்பு நிதிக் கழகத்தால் அளிக்கப்பட்ட 75 மிலியன் டாலர்கள் தொகையைக் கொண்டு புனரமைப்பு 1945இல் தொடங்கப்பட்டது.

பிலிப்பைன் அமெரிக்க நாடுகளுக்கிடையிலான உறவுகள் சுதந்திரத்திற்குப்பிறகு எத்தகையவைகளாக இருக்கவேண்டுமென்பதற்கு முக்கியமான இரண்டு சட்டங்கள் அடிப்படைகளாக அமைந்தன. அவைகளிலொன்று, பிலிப்பைன் வாணிபச்சட்டம். இச்சட்டத்தின்படி அமெரிக்காவிற்கும், பிலிப்பைனுக்குமிடையே ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள் சம்பந்தமான வியாபாரம் சுதந்திரமாக இருக்கவேண்டுமென்பதை வற்புறுத்தியது. ஆனால், 1954ஆம் ஆண்டுக்குப் பிறகு பல காலகட்டங்களில் படிப்படியாக வரி விதிக்கப்படுவதற்கும் வகை செய்யப்பட்டது. பிறிதொன்று, 1946ஆம் வருடத்திய பிலிப்பைன் மறுவாழ்வளிப்புச்சட்டம். இச்சட்டம் போரினால் ஏற்பட்ட இழப்பிற்கு ஈடாக, 620 மிலியன் டாலர்கள் செலவிடப்பட வகை செய்தது. குறிப்பாக, தனிப்பட்டோர் பட்ட நஷ்டத்தின் கூடுதல் தொகையின் விழுக்காட்டிற்குச் சமமான தொகை இந்நிதியிலிருந்து எடுத்துக்கொள்ளப்படவேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. 99 ஆண்டுகளுக்கு அமெரிக்கா பிலிப்பைனில் இராணுவத் தளங்களை ஏற்படுத்திப் பராமரித்து வருவதற்கும், தேசிய மட்டத்தில் சுதந்திரத்திற்கு ஆபத்து விளைவிக்கக் கூடிய நிகழ்ச்சிகள் தோன்றுமானால், அவைகளை அடக்குவதற்கு உரிமையும் அமெரிக்காவிற்கு வழங்கப்பட்டன.

1946ஆம் ஆண்டு ஜூலை மாதம் 4ஆம் தேதி பிலிப்பைன் ஒரு சுதந்திரக் குடியரசாக ஆயிற்று. எனினும், பொருளாதாரத்துறையில் அமெரிக்காவுடன் பிணைக்கப்பட்டிருந்தது. பொருளாதாரத்துறையிலான இச்சார்பு அரசியலில் நிலக்கிழார்களின் செல்வாக்கு தொடர்ந்திருந்துவருவதற்கு வகை செய்யும் தன்மையதாக அமைந்தது. ஏனெனில் பிலிப்பைனுக்குத் தேவையான அந்நியச்செலாவணி விவசாயப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டதால் கிடைத்ததாகும். அப்பொருள்களை உற்பத்தி செய்தவர்கள் சாகுபடி காலத்தில்

அரசாங்கத்திடமிருந்து கடனுதவி பெற்றனர். அவர்கள் நிலச்சுவான்தாரிமுறை தொடர்ந்திருந்து வரவேண்டுமென விரும்பியதோடு நாட்டுப்புறங்களில் அமைதியும், ஒழுங்கும் பராமரிக்கப்பட வேண்டுமென்றனர். அவர்களுடைய பொருளாதார பலம் அவர்களுடைய அரசியல் ஆதிக்கத்தை உறுதிப்படுத்துவதாக இருந்தது. ஆனால், இத்தகைய நிலைமையை மாற்றியமைக்க இதர சக்திகள் முயன்று வந்தன.

இளவயதினரான கொரில்லாத் தலைவர்கள் பொது மக்களிடத்திலிருந்த ஆதரவைப் பயன்படுத்திக்கொண்டு, அரசியலில் ஈடுபட்டனர். பலர் ஜப்பானியர்களுக்கு உடந்தையாக இருந்து, அவர்களோடு ஒத்துழைத்ததாகச் சாட்டப்பட்டக் குற்றச்சாட்டினால் மனந்தளர்ந்து அரசியலுக்கு முழுக்குப் போட்டனர். வேறு சிலர் அப்போதிருந்த அரசியல் முறையை ஏற்று, மக்கள் ஆதரவுடன் சட்டமன்றத்தில் நுழைந்தனர்; அல்லது அரசாங்கப் பணியில் ஈடுபட்டனர். அவர்களில் பெரும்பாலோர் நாட்டுப்புற மக்களோடு நெருங்கிய தொடர்புடையவர்களாக இருந்ததோடு, நாட்டுப் பற்றைப்பற்றிய புதுக் கருத்துடையவர்களாகவுமிருந்தனர்.

இரண்டாவது சக்தியாக, போர்க்காலத்தின்போது நிலவிய குழப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு உபரிப் பொருள்களில் கள்ள வியாபாரம் செய்து செல்வந்தர்களான தொழில்களில் அக்கறை காட்டியவர்களும் இருந்தார்கள். அவர்கள் வாணிபத்துறைகளில் தங்களுடைய மூலதனத்தைப்போட்டு, பொருள் ஈட்டுவதன் மூலமாக அரசியலில் முக்கியப் பணியாற்றினர்.

மூன்றாவது பெரும் சக்தியாக விளங்கியது மக்கள் சக்தியாகும். போர் நாட்டுப்புறத்திலிருந்த மக்கள் கண்களைத் திறந்து விட்டதோடு, நாட்டில் அவர்களுடைய நிலை என்ன என்பதையும் உணர்த்தியது. அவர்கள், அரசாங்கம் தங்களுடைய ஏழ்மை நிலைமையை அகற்ற வேண்டுமென்று எதிர்பார்த்தனர். பலர் நகரங்களை நோக்கிக் குடியேறினர்.

நாட்டு விடுதலைக்கான ஏற்பாடுகளும், தேர்தலும் கிட்டத்தட்ட முதலில் இருந்ததுமாதிரியான அரசியல் முறையையும் பொருளாதார அமைப்பையுமே திரும்பத் தோற்றுவித்தன வென்றாலும், நிலைமை மாறவேண்டுமென்பதற்கு ஆதரவான

ச்திகளும் இருந்தன. கணிசமான அளவிற்கு பொது மக்களிடத்தில் நம்பிக்கையின்மையும், அரசியல் வாழ்க்கையில் முன்னுக்குப்பின் முரணான வழிகளும், நோக்கங்களும் மலிந்திருந்தன. எனவே, குழப்பமும் வன்முறையும் நாட்டில் ஏற்படுமெனத் தோன்றியது. ஆதலின் புதிய குடியரசின் மிகப்பெரும் பிரச்சினையாக, அரசாங்கத்திடம் நம்பிக்கையை யும், தங்களைத் தாங்களே ஆட்சி செய்வதற்குத் தகுதியிருக்கிற தென்பதையும் பிலிப்பைனியர்களிடையே எவ்வாறு ஏற் படுத்துவது என்பதிருந்தது. சுருக்கமாகச் சொல்லவேண்டு மாயின், புதியதாக ஏற்படுத்தப்பட்டக் குடியரசின் சட்ட பூர்வமானத் தன்மையைப்பற்றிய பிரச்சினையே அது.

## 7. பிலிப்பைன் குடியரசு

புதிய குடியரசுக்கு நேரிடையாக ஏற்பட்ட முதல் சோதனை அது வீழ்ந்து விடாமல் இருக்குமா என்ற பயம் தான். நாட்டுப்புற மக்களிடத்திலிருந்த அதிருப்தியைப் பயன் படுத்திக்கொண்டு எழுந்த ஹக் இயக்கம் குடியானவர்களுக்கு விருப்பமான பிரச்சினைகளைத் தனக்குச் சாதகமாகப் பயன் படுத்திக்கொண்டது. போருக்குப்பிறகு மக்களுக்கு நம்பிக்கை யேற்படும் வகையில் அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்கத் தவறி விட்டது. அதற்கேற்றாற்போல் அரசியல்வாதிகள், பெருநிலக்கிழார்களின் நடவடிக்கைகளுமிருந்ததால், குடியான வர்கள், அறிஞர்கள், தேசியவாதிகளின் விருப்பங்களையும், நோக்கங்களையும் பிரதிபலிக்கும் ஒரே அமைப்பு ஹக் இயக்கம் தான் என்று வாதம் செய்தது சரியென்று தோன்றியது. ஆனால், அரசாங்கமோ ஹக் இயக்கத்தால் தோன்றிய நிலைமையை உணர்ந்ததாகவோ அதற்கேற்ப நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று நினைத்ததாகவோ தெரிய வில்லை. நாட்டுப்புறத்திற்கும் மத்திய அரசாங்கத்திற்கு மிடையே சரியான தொடர்பில்லாததாலும், அரசாங்கம் பின் பற்றிய பொருளாதாரக் கொள்கைகளில் பொதுமக்களுக்கு அக்கறையில்லாததாலும் ஆட்சி செய்வதற்கான அரசாங்கத் தின் சட்டபூர்வமான உரிமைக்கான முயற்சிகள் பாதிக்கப் பட்டன.

ராக்சாஸ் ஆட்சிக்காலம் முழுவதும் ஹக் இயக்கத்தைச் சேர்ந்தவர்களுடன் பேச்சு வார்த்தைகள் நடத்த வேண்டு மென்றும், பொது மன்னிப்புஅளித்து ஆயுத தளவாடங்களைச் சேர்த்துவிட்டு, அரசியல் திட்டத்தில் சேர்ந்து பணியாற்று

வதற்கு அவர்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டு மென்றும் மிதவாதக்கட்சினர் வற்புறுத்தினர். ஆனால், இக் கோரிக்கைகளை ராக்சாஸ் நிராகரித்ததோடு மட்டுமல்லாமல், 1948ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் ஹக் இயக்கம் சட்டபூர்வ மானதல்லவென்றும் அறிவித்தனர்.

ஹக்குகள் தங்கள் பெயரை "ஹக்பாங் மக்பாலயங்பயன்" (Hwkbong Magpalayang Bayan) அதாவது மக்கள் விடுதலைப் படை (People's Liberation Army) என்று மாற்றிக்கொண்டு அரசாங்கத்தின்மீது இராணுவத் தாக்குதலைத் தொடுத்தனர். 1948ஆம் ஆண்டு ஏப்ரலில் ராக்சாஸ் இருதயநோய் காரண மாக இறந்தார், அவருக்குப்பிறகு மக்களுக்கு மிகவும் அறிமுக மில்லாத கியூசானுக்குத் தனிமுறை செயலாளராக இருந்த எல்பிடோ கியூரினோ (Elpididio Quirino) ஜனாதிபதியானார். இவர் மிதவாதக்கட்சியின் வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர். கட்சியில் செல்வாக்கற்றவர். அவருடைய சொந்தப்பகுதியில் அவரால் வாக்குகள் கிடைக்கும் என்ற காரணத்தால் தேர்தலில் நிறுத்தப்பட்டு வெற்றி பெற்றவர். ஆகையால் தேசியமட்டத்தில் அரசாங்கத்தில் சூன்யத் தன்மை ஏற்பட்டது. எனவே, கியூரினோ கட்சியில் ஆதரவு தேடும் முயற்சியில் கவனத்தைச் செலுத்தவேண்டியதாயிற்று.

கியூரினோவும் அவரது ஆதரவாளர்களும் கட்சியைத் தங்கள் கட்டுப்பாட்டில் கொண்டுவருவதற்குத் தீவிரமாக முயன்று வந்ததால் ஹக் இயக்கம் தற்காலிகமாகப் பின்னணிக்குத் தள்ளப்பட்டது. தேர்தல்களும் 1949ஆம் ஆண்டு நடைபெறவேண்டியிருந்தன. இதற்கிடையில் கியூரினோ ஹக்குகளை சமாதானப்படுத்த முயன்றார் என்றாலும் அவர்கள் சீர்திருத்தங்கள் நிறைவேற்றப்படும்வரை ஆயுதங் களை ஒப்படைக்க மறுத்து விட்டனர்.

1949இல் தேர்தல் நடைபெற்றது. நாட்டுப் பொருளா தார நெருக்கடியைச்சமாளிப்பதற்காக விடுதலை தரப்பட்ட போது ஒதுக்கப்பட்டநிதிகள் சரியான முறையில் செலவிடப் படாததால் அரசாங்கம் அழிவைத் தழுவும் நிலையிலிருந்தது. மக்களிடையே விரக்தியும் கசப்பும் ஏற்பட்டிருந்தன. கியூரினோ மிதவாதக் கட்சி சார்பில் ஜனாதிபதி தேர்தலுக்கு நின்றார். அவரை எதிர்த்து ஜோஸ் லாரல் தேசியக்கட்சி சார்பில் போட்டியிட்டார். என்னென்னத் தகாதமுறைகளுண்டோ அத்தனை முறைகளும் தேர்தலின்போது தாராளமாகப் பின்

பற்றப்பட்டன. மிண்டானோவா தீவில்தான் இதர இடங்களை விட அதிகமான ஊழல்முறைகள் ஏற்பட்டன. இறுதியில் கியூரினோ மிகக்குறைவான வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றார்.

1949லும் 1950லும் ஹக்குகள் தங்களுடைய தாக்குதல் களை தீவிரப்படுத்தியதோடு 1951இல் அரசாங்கத்தைப் பிடிக்கப்போவதாகவும் பயமுறுத்தியிருந்தனர். பிலிப்பைன் அரசாங்கமும் இராணுவமும் சமாளிக்கும் வகை தெரியாமல் தவித்தன. போர் நடைபெற்ற இடங்களில் இராணுவம் தகாத முறைகளில் நடந்து கொண்டிருந்ததால் அதற்கு நல்ல பெயர் கிடையாது.

அழிவு உறுதியென்ற இத்தகைய சமயத்தில் இருதிட்டங் கள் கொண்டுவரப்பட்டன. முதலாவது திட்டம் உதவிகோரி ஜனதிபதி ட்ரூமனுக்கு விடுக்கப்பட்ட வேண்டுகோள். இரண்டவது முதலில் கொரில்லாக்களுக்குத் தலைவராக இருந்த இராமோன்–மக்சாய்-சாய் என்பவர் ஹக்குகளை அடக்குவதில் விருப்பம்போல எந்த நடவடிக்கையையும் எடுத்துக் கொள்ளும் அதிகாரத்தோடு தேசிய பாதுகாப்புச் செயலாள ராக நியமிக்கப்பட்டார்.

பிலிப்பைன் அரசாங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க ஜனதிபதி ட்ரூமன், டேனியல்பெல் என்ற அமெரிக்கப் பாராளுமன்ற உறுப்பினரைப் பிலிப்பைனுக்குச் சென்று நிலைமையை ஆராய்ந்து செய்ய வேண்டியதென்ன வென்று சிபாரிசு செய்யுமாறு அனுப்பினர். அவர் மிகக்குறைவான வருவாயும் மிகமோசமான உற்பத்தியும் தான் முக்கியமான பிரச்சினையென்று அறிக்கையொன்றைச் சமர்ப்பித்தார்.[1] அவ் வறிக்கையில் காணப்பட்ட சிபாரிசுகளாவன: நாட்டுப்புற மக்களும், தொழிலாளர்களும் பங்கு கொள்ளும் வகையில் பொருளாதாரத்தைச் சீர்திருத்தியமைத்து வருவாய் உயரச் செய்யவேண்டும். குறைந்த பட்ச ஊதியம், விவசாயக்கடன் வசதி, வெளிச்செலாவணி கட்டுப்பாடு ஆகியவை சம்பந்தமாக சட்டங்கள் இயற்றப்படவேண்டும். எந்த அளவிற்கு இத் துறைகளில் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றனவோ

---

[1]Economic Survey Mission to the Philippines. Report to the President (Washington D. C. October 9, 1950) Page. 1 (Known as the Bell Report)

அதற்கேற்ப அமெரிக்க உதவிதரப்படவேண்டும், என்பவை யாகும். இந்த நடவடிக்கையினால் பிலிப்பைன் அரசியல்வாதிகள் அடக்கத்துடன் நடந்து கொண்டதோடு மேற்கூறப்பட்ட சீர்திருத்தங்களை உள்ளடக்கிய சட்டங்களும் இயற்றப்பட்டன. இவ்வறிக்கை குழப்பமடைந்து பிளவுப்பட்டிருந்த அரசாங்கத்திற்கு வழிகாட்டியாகவும் அமைந்தது.

1950இல் மக்சாய் சாய் பாதுகாப்புச் செயலாளராக நியமிக்கப்பட்டது மிகச்சாதுர்யமான நடவடிக்கையாகும். அவர் பல ஆண்டுகளாகப் பாராளுமன்றத்தில் உறுப்பினராக இருந்தவர். சாதாரண எளிய நடுத்தரவகுப்புக் குடும்பத்தில் பிறந்தவர். நாட்டுப்புற மக்களினுடையவும், ஏழைக் குடியானவர்களினுடையவும் வாழ்க்கை முறைகளை நன்றாக அறிந்திருந்தவரென்பதோடு அவர்களோடு தாராளமாகப் பழகும் தன்மையையும் உடையவராக இருந்தார். தன்சொந்த உழைப்பினால் உயர் பதவிக்கு வந்தவர். நேர்மையானவரென்பதோடு கஷ்டமான காலங்களிலெல்லாம் கொரில்லாக்களுடன் உண்டு, உறங்கி நண்பராக இருந்தவர். எனவே, அவரைப் பற்றிய ஒவ்வொரு செய்தியையும் பத்திரிகைகளும், அரசாங்கமும் விளம்பரப்படுத்தி வந்தன. அத்தகையவரின் தலைமையில் செயல்பட ஆரம்பித்த இராணுவம் அதனுடைய பழைய தகாத செயல்களையெல்லாம் விட்டொழித்து நல்ல வழிகளைக் கடைப்பிடித்தது. வீரச்செயல்கள் புரிந்தவர்கள் பதவி உயர்வு பெற்றார்கள். திருந்தமறுத்தவர்களும், அரசியல் வாதிகளும் இராணுவத்திலிருந்து வெளியேற்றப்பட்டனர். இராணுவமும் சிறுகச்சிறுக தன்னம்பிக்கை பெற்று ஹக்குகளை வேட்டையாடுவதில் வெற்றி பெற்று வந்தது. அதுவரையிலும் இராணுவத்தோடு வெறுப்பு காரணமாக ஒத்துழைக்க மறுத்த பொதுமக்களும் தங்களுடைய பழைய கருத்தை மாற்றிக்கொண்டு ஹக் இயக்கம் பற்றிய செய்திகளைத் தாமாகவே தர ஆரம்பித்தனர்.

அடுத்தபடியாக, ஹக்குகளை கொல்வதை நோக்கமாகக் கொள்ளாமல் அவர்கள் அரசாங்கத்தை எதிர்ப்பதற்குக் காரணமாக இருந்த நிலைமைகளை அகற்றவேண்டுமென்பது மக்சாய் சாயின் திட்டமாகும். அத்திட்டத்தை நிறைவேற்றுவதற்காகப் பொருளாதார முன்னேற்ற வாரியம் (Economic Development Corporation) ஒன்றை நிறுவினார். அத்திட்டம் இராணுவமும், இராணுவத் தளவாடங்களும் தாங்க முடியாத துன்பம் காரணமாக (ஹக் இயக்கத்தில்) சேர்ந்

திருந்த ஏழைக் குடியானவர்களின் மறுவாழ்வுக்கு மிண்டா னேவாவிலிருந்த நிலங்களைச் சீர்த்திருத்தி, பண்படுத்தி அவர்களை குடியமர்த்துவதற்கு பயன்படுத்தப்படுவதை அடிப் படையாகக் கொண்டதாகும். அத்திட்டம், விரைவாக பிரபல மடைந்து பல குடியானவர்கள் மிண்டானேவாவுக்கு கொண்டு செல்லப்பட்டு இராணுவத்தின் ஆதரவில் சாகுபடி செய்தார்கள்.

1950ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 18-ந் தேதி ஹக் இயக்கத்திற்கு ஓர் பேரிடி ஏற்பட்டது. அதிலிருந்து அவ் வியக்கம் பிறகு தலைதூக்கவே முடியவில்லை. மணிலாவிலிருந்த கம்யூனிஸ்டுக்கட்சியின் போலிட் பீரோவை அரசாங்கம் கைப் பற்றியது. அதன்பிறகு அரசாங்கத்தின் முயற்சிகளுக்குத் தொடர்ந்து பயன் கிட்டியது. புதிய குடியரசின் மேலான நம்பிக்கைக்கு ஆதாரமாக அமைந்ததென எட்டு செனட்டர் களையும், மாநில வட்டார அரசாங்கங்களின் உத்தியோகஸ்தர் களையும் தேர்ந்தெடுப்பதற்கு நடைபெற்ற 1951ஆம் ஆண்டுத் தேர்தல்களெனலாம். தேர்தல்கள் நேர்மையாகவும், வன்முறைச் செயல்கள் குறுக்கிடாமலும் நடைபெறுவதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்தார். சான்றாக, அவர் இராணுவத்தையும், நேர்மையான தேர்தல்கள் நடை பெறுவதற்கென ஏற்படுத்தப்பட்ட தேசிய கழகத்தையும் (National Association for the Maintenance of free Elections) தேர்தலில் தகாத முறைகள் பின்பற்றப்படாமல் பார்த்துக் கொள்ளுமாறு பணித்ததைக் குறிப்பிடலாம். அதன் முடிவு, தேர்தல்களில் தேசிய கட்சிக்குக் கிடைத்த வெற்றிகளாகும். அரசாங்கத்திடம் மக்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டதோடு, அது சட்டபூர்வமானதென்பதும் நிலைநாட்டப்பட்டது. ஆனால், அந்நம்பிக்கை தனிப்பட்ட மனிதரொருவரின் ஆளுமையை அடிப்படையாகக் கொண்டதாகும்.

தேசிய கட்சியின் தலைமை ஆட்சியைக் கைப்பற்றுவதில் மிகுந்த அக்கறை காட்டியதால், 1953ஆம் ஆண்டு நடக்க விருந்த ஜனாதிபதி தேர்தலில் மக்சாய்-சாயை அதன் வேட்பாளராக நிறுத்துவதாகக் கூறியபின் அவர் மிதவாதக் கட்சியிலிருந்தும், அமைச்சர் பதவியிலிருந்தும் ராஜினாமா செய்தார். பிறகு கிராம மக்களிடமும் மற்றவர்களிடமும் நிலச்சீர்திருத்தங்கள் கொண்டு வருவதாகவும், இலஞ்ச ஊழலற்ற அரசாங்கம் அமைப்பதாவும், பணக்காரர்களுக் காக அல்லாமல் சாதாரண மக்களுக்காக அரசாங்கம் ஏற்

படுத்துவதாகவும ஊர் ஊராகக் கால்நடையாகச் சென்று பிரச்சாரம் செய்தார். முடிவில், அவர் அதுவரையிலும் எவரும் பெற்றிராத அளவிற்கு வாக்குகள் பெற்று ஜனாதிபதி யாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் தனிப்பெருந் தலைவராக, மக்களின் பேராதரவு பெற்ற ஜனாதிபதியாக இருந்ததால் கட்சியிலிருந்த இதர தலைவர்களும், அரசியல் வாதிகளும் அவருக்குக் கட்டுப்பட்டு அவர் விருப்பம் போல நடக்கவேண்டியவரானார்கள். வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்கும் நோக்கத்துடன் பல திட்டங்களைக் கொண்டு வந்ததோடு, சாதாரண பிலிப்பைனியர்கள் அரசாங்க நடவடிக்கைகளை அறிந்துகொள்ளும் வகையில் செய்திப்போக்குவரத்து சாதனங்களை விரிவுபடுத்தி அமைத்தார். ஆனால், அவர் ஆரம்பத்தில் அத்திட்டங்களில் காட்டிய ஆர்வத்தை கடைசி வரையிலும் காட்டாததால் அவைகள் கொஞ்சம் கொஞ்சமாக நைந்து கொண்டே வந்தன. அவர் கிராமங்களுக்குச்சென்று மக்களை நேராகச் சந்தித்து, குறைகளை கேட்டறிந்து அவைகளை உடனுக்குடன் முடிவு செய்தார். அதனால் அரசாங்கத்தின் செலவு கட்டுக் கடங்காததாக ஆயிற்றென்றாலும் முக்கிய நோக்கத்தை அடை வதற்கு அவை துணை நின்றன. அதாவது அரசாங்கத்திடம் மக்களுக்கேற்படவேண்டிய நம்பிக்கையையும் தன்னாட்சித் தன்மையையும் வளர்த்தன. தங்கள் குறைகளை ஜனாதிபதி யிடம் நேரில் சென்று சொல்லி நிவர்த்தி செய்துகொள்ளும் அளவுக்கு மக்கள் ஊக்குவிக்கப்பட்டார்கள். ஆனால், இவ்வை யனைத்தும் தனிமனிதனை அடிப்படையாகக்கொண்டு நடை பெற்றவையே தவிர ஒரு நிலையத்தை ஆதாரமாகக் கொண்ட வையல்ல என்பது அறியத்தக்கது.

1957ஆம் ஆண்டு மார்ச் மாதம் ஆகாயவிமான விபத் தொன்றில் அவர் இறந்தபோது மக்கள் திகைப்படைந்தனர். 1948இல் கியூரினோ ஜனாதிபதியானவாறே, மக்சாய் சாய்க்குத் துணை ஜனாதிபதியாக இருந்த கார்லோஸ் பி. கார்சியா (Carlos P. Garcia) ஜனாதிபதியானார். கார்சியா மக்களிடத் திலும் சரி, கட்சியிலும் சரி அவ்வளவு பிரபலமானவர் அல்ல. எனவே, அதே ஆண்டில் நடைபெறவிருந்த ஜனாதிபதி தேர்தலைக் கருத்தில் கொண்டு கட்சியைத் தன் கட்டுப்பாட்டில் கொண்டுவரும் முயற்சியில் இறங்கினார். பெரிய அளவில் நடைபெற்ற தேசிய கட்சியைச்சேர்ந்த ஒருவரை அதாவது கார்சியாவை ஜனாதிபதியாகவும், மிதவாதக் கட்சியைச்சேர்ந்த ஒருவரை அதாவது, மகாபகல் (Macapagal) என்பவரை உதவி

ஜனாதிபதியாகவும் பிலிப்பைனியர்கள் தேர்ந்தெடுத்தனர். கார்சியாவுக்கு கிடைத்த வாக்குகள் பதிவான வாக்குகளில் 43 விழுக்காடேயாகும். ஆனால், உதவி ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மகாபகலுக்கு, கார்சியாவைவிட மிக அதிகமான வாக்குகள் கிடைத்தன.

கார்சியா ஜனாதிபதியாக இருந்த காலத்தில் நிதித் துறையில் ஸ்திரத்தன்மையை அடையவும், அயல்நாட்டு செலாவணிக் கட்டுப்பாடுகளை ஒழுங்குபடுத்தவும், ஆனால், அதே சமயத்தில் தொழில் துறையில் முன்னேற்றம் காணவும் முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. நாட்டுப்புறங்களில் அமைதியும் ஒழுங்கும் பராமரிக்கப்பட்டன. சமூக நலத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. அதனால் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டது. எனினும், அயல்நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாடுகளை ஒழுங்குபடுத்துவதற்குப் பொறுப்பேற்ற பல நிறுவனங்கள் இலஞ்ச ஊழல்கள் காரணமாக சரியாகத் தங்கள் கடமைகளைச் செய்யவில்லை. மேலும், பிலிப்பைனியர்கள் தங்கள் தலைவர்களுக்கு என்னென்னத் தகுதிகள் இருக்கவேண்டுமென்று எதிர்பார்க்கிறார்களோ அந்தத் தகுதிகளில் பல கார்சியாவுக்கு இல்லாததோடு, எந்த பிரச்சினையிலும் முடிவெடுப்பதில் உறுதியற்றும், மெதுவாகவு மெடுத்தார். கட்சியின்மீது அவருக்கிருந்த கட்டுப்பாடு அவர் வகித்த பதவி காரணமாகக் கிட்டியதேயல்லாமல் அவருடைய தனிப்பட்ட சிறப்புக்களாலல்ல. 1960ஆம் ஆண்டுச் சமயத்தில் இலஞ்ச ஊழல்கள் மலிந்ததோடு அரசாங்கத்திடம் மக்களுக் கிருந்த நம்பிக்கையும் அபாயகரமான அளவுக்குக் குறைந்த

எனவே, 1961ஆம் ஆண்டு நவம்பர் மாதம் நடைபெற் தேர்தல்களில் வாக்காளர்கள் மகாபகலை ஜனாதிபதியா தேர்ந்தெடுத்து, கார்சியா நிர்வாகத்தை அகற்றின அதோடு செனட்டிலும் மிதவாதக் கட்சியைச் சேர்ந்தவர் பெரும்பான்மை பலம் உடையவர்களாகவும் தேர்ந்தெடுக் பட்டனர். இதனால் பிலிப்பைனியர்கள் அரசியல் அறிவுை வர்களாகவும், ஈடுபாடுடையவர்களாகவும் இருக்கிறார் என்பது தெளிவாகிறது.

அனுபவம் பிலிப்பைனை ஒரு ஒருமையுடைய நா நாடாக மாற்றியமைக்க உதவியிருக்கிறது. அன்னியர் ஆதிக்கம் பிலிப்பைனியர்களை முதலில் சமய அடிப்படையி அடுத்தபடியாக சமயச்சார்பற்ற நிலையங்களை ஏற்படுத்திய

வாயிலாகவும் ஒன்றுபடச் செய்தது. அமெரிக்க, ஸ்பானிய, மலாய் இனத்தவர்கள் ஒன்று சேர்ந்த ஒரு கூட்டுச்சமுதாயம் பிலிப்பைனில் ஏற்பட்டிருக்கிறதென்றாலும், மலாய் பண்பாடு மேலோங்கியிருக்கிறது. அமெரிக்க வாழ்க்கைமுறையோடு இழைந்து செல்லும் சமத்துவக்கோட்பாட்டில் ஆர்வமில்லாத பிலிப்பைனியர்கள் தங்களுடைய சமூக உறவுகளில் ஒவ்வொருவருடைய கடமைகளும், உரிமைகளும் என்ன என்பதைப் பற்றியத் தெளிவான கருத்துடையவர்களாக இருக்கின்றனர். அதிகாரம் என்பது ஏற்றுக்கொள்ளப்பட்டு, பெறப்பட்டு, பயன்படுத்தப்படவேண்டும் என்பதே பிலிப்பைனியர் ஒவ்வொருவருடைய கருத்தாகும். வரலாற்று அனுபவம் எந்த அளவிற்கு அரசியல் முறையில் எதிரொலிக்கிறது என்பதை அடுத்த அத்தியாயத்தில் காணலாம்.

# 2. அரசியல் முறையின் ஆதாரம்

முதல் அத்தியாயத்தில் பிலிப்பைன் அரசியலின் வரலாற்றுப் பின்னணி எடுத்துரைக்கப்பட்டது. அதில் பிலிப்பைனியர்கள் சுதந்திரம் பெறுவதற்கு முன்னமேயே நவீனமுறைகளைப் பின்பற்றுவதில் நாட்டமுடையவர்களாக இருந்தார்களென்பதும், பெருமளவிற்கு அவர்களிடையே ஒற்றுமையுணர்ச்சி காணப்பட்டதென்பதும் சொல்லப் பட்டது. ஸ்பானியர்கள் காலத்திலும், அமெரிக்கர்கள் காலத்திலும் பலரும் பின்பற்றக்கூடிய சமயமொன்றும், மத்திய அரசாங்கமொன்றும் ஏற்பட்டதென்பது எடுத்துக் காட்டப்பட்டது. இவ்வத்தியாயத்தில் பிலிப்பைன் அரசியல் முறை பற்றிய அடிப்படைக் கருத்துகளைக் காணலாம்.

சமுதாயத்தைப்போல அரசியல்முறையும் நவீன காலத்திற்கேற்ப அதன் பகுதிகளில் மாற்றத்தை மேற் கொண்டு வருகிறது. முறைப்படியான நிறுவனங்கள் (Formal Institutions) எத்தகைய பணியைச் செய்யவேண்டுமென்பதை பிலிப்பைனியர்களே தீர்மானிப்பார்களென்றாலும், இதர நாடுகளைப்போல் அங்கும் மக்களாட்சித்தன்மை வாய்ந்த முறைப்படியான நிறுவனங்களும், அத்தன்மையற்ற நிறுவனங் களும் பொதுமக்களுடைய கோரிக்கைகளை பரிசீலித்து, அவைகளை பொதுக்கொள்கையாக மாற்றலாம். முறைப்படி யான நிறுவனங்கள் ஆசைகளுக்கும், கோரிக்கைகளுக்கும் வேலி கட்டுகின்றன. குறிப்பிட்ட அரசாங்க உறுப்புகளுக்கு குறிப்பிட்ட அதிகாரத்தைத் தெளிவாக வழங்குவதன் மூலமாக எந்த அளவிற்கு பேரச்சக்தி இருக்கிறதென்ற பரந்த அடிப்படைகளை அரசியலமைப்பு விளக்குகிறது. விதிகளைப் படைத்தல், பின்பற்றல், தீர்ப்பளித்தல் என்ற துறைகளில் எந்த அளவிற்கு அதிகாரம் செல்லுபடியாகுமென்பது அந்தந்த

காரியங்களுக்காக அமைக்கப்படும் அமைப்புகளால் தெளிவு படுத்தப்படுகிறது.

பிலிப்பைன் அமெரிக்காவின் குடியேற்ற நாடாக இருந்த காலத்தில் அமெரிக்காவினுல் எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளால் பல மாறுதல்கள் ஏற்பட்டன. அவைகளுள் குறிப்பாக மக்கள் சாக்காட்டு விகிதம் குறைந்ததையும் பிறப்பு விகிதம் அதிகரித்ததையும் சொல்லலாம். உயர்நிலைப் பள்ளிகளில் கல்வி பயின்று வெளியேறியவர்கள் பாராளுமன்றத்தோடு தொடர்பு பெற்றிருந்த அலுவலகங்களுக்கு வேலைதேடி வந்தனர். ஆனுல், அதே சமயத்தில் நாட்டுப்புற மக்களின் முன்னேற்றம் புறக்கணிக்கப்பட்டதால் அவர்களுக்கும் நகர்ப்புற மக்களுக்குமிடையே பெரியதோர் இடைவெளி 1930ஆம் ஆண்டு சமயத்தில் ஏற்பட்டது. ஓரளவிற்கு பழைய பணிகளும், கருத்துகளும், மாறிவந்த சூழ்நிலைகளுக்கேற்ப சரி செய்யப்பட்டுவந்தபோதிலும், ஜப்பானியர்களின் ஆக்கிரமிப்பு அவைகளை வெளிப்படையாக்கியதோடு மாற்றத்திற்கான கோரிக்கைகள் அதிகரித்தன.

இக்கோரிக்கைகள் அரசாங்க அதிகாரம் பயன்படுத்தப்பட்ட முறையில் புதுமைகள் என்ற உருவத்தில் அரசியல் துறையை விரிவுபடுத்தும் கட்டாயத்தை ஏற்படுத்தின. பொருளாதார, சமூக அமைப்புகள் நிலைமைக்குத் தகுந்தாற்போல மாற்றியமைக்கப்பட்டதால் தொழிலில் முதலீடு செய்து, இலாபம் சம்பாதிக்கும் உணர்வு எதிரொலித்ததோடு கருத்துகளிலும், பிடிப்புகளிலும் நெகிழ்ச்சி காணப்பட்டது. வணிகம் அல்லது வியாபாரத்திலிருந்த வெறுப்பு மறைந்து, வெற்றிக்கும் தோல்விக்கும் 'கடவுள் விருப்பமே' காரணம் என்ற மனப்பாங்கும் அகன்றது. ஆனுல், இந்நோக்குகள் நாட்டுப்புறங்களில் அவ்வளவாக ஊடுருவிச் செல்லவில்லையென்பதும், நகர்ப்புறங்களிலும், மாநிலத் தலைநகரங்களிலும் வர்த்தகக்கேந்திரங்களிலுந்தான் ஏற்பட்டனவென்பதும் அதனுல் நடுத்தர, கீழ் நடுத்தர வகுப்புகளைச் சேர்ந்தவர்கள் என்றழைக்கப்பட்ட மக்கள் தோன்றினுர்களென்பதும் அறியத்தக்கதாகும். அம்மக்கள் நாட்டுப்புற மக்களோடு தொடர்புடையவர்களாக இருந்தனரென்பதும் முக்கியமாகும்.

அரசியலில் பொருளாதாரம் பெரும் பங்கு வகித்ததால் தொழில்களில் முதலீடு செய்து, இலாபம் பெறும் உணர்வு

பொருளாதாரத்துறையோடு நில்லாமல் அரசியலிலும் அடிப்படையானதாயிற்று. தொழிலதிபர்கள், பெருநிலக்கிழார்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அரசியலையும் அதிகாரத்தையும் வியாபாரமாக்கிவிட்டனர். அரசியல் சந்தர்ப்பவாதமாயிற்று. அதனால் பெரும் பெரும் வெகுமதிகள் கிடைத்தன. பலரும் அத்தகைய நோக்குடையவர்களாக இருந்ததால் அதில் ஆபத்தில்லாமலிருந்தது. இந்த வியாபாரத்தன்மை அரசியல் முறையிலும் வேரூன்றியது.

பொருளாதார அமைப்பில் மாறுதல்களும், தொழில்கள் ஏற்படுத்தப்பட வேண்டுமென்பதற்கான கோரிக்கைகளும் சமூக, பொருளாதாரத்துறைகளில் சமத்தகுதியுடையவர்களாக இருந்தவர்களுக்கிடையே தனிப்பட்ட பேச்சுவார்த்தைகளால் தீர்க்கப்படமுடியாமல் சச்சரவுகளைத் தோற்றுவித்தன. வன்முறையைத் தவிர்ப்பதற்கும் நடைமுறையிலிருக்கும் முறை மறையாமலிருப்பதற்கும் புதுப்புதுக் குழுக்களைச் சேர்த்துக்கொண்டு, அவற்றினுடைய ஆதரவைத் தேடுவதும் அவசியமாயிற்று. வாக்காளர் தொகுதியை விரிவுபடுத்தி, முன்னிலும் அதிகமான அளவில் மக்கள் பங்கெடுத்துக் கொள்ளுமாறு செய்வதும், தலைவர்களின் தேர்தல் கால வாக்குறுதிகளை நினைவில் கொள்ளுமாறு செய்வதும் தவிர்க்க முடியாததாயிற்று. தொழில், வேளாண்மை செல்வாக்குக்குழுக்களுக்கிடையிலிருந்த சச்சரவு ஆழமாக இருந்ததால் பரந்த கொள்கை பின்பற்றப்படுவது அவசியமானதோடு, அதற்கு நெடுங்காலமாகத் தனிப்பட்ட முறையில் செல்வாக்குப் பெற்றிருந்தவர்களுடைய உதவி தேவையாயிற்று. இந்தச் சச்சரவைத் தீர்த்து வைப்பதற்கான வழிவகைகளை ஏற்படுத்தித் தருவதற்கு அரசியல்முறை விரிவாகப் பணியாற்றவேண்டியதாயிற்று. ஒரு முறையில் அவ்வரசியல்முறை இயற்கையாகவே (தானாகவே) வந்ததெனலாம். பொருளாதாரமாற்றம், கொள்கை ஆகியவைகளையும், அரசியல் நடவடிக்கைபற்றிய பொருள்பொதிந்த நோக்குகளையும், புதிய விழிப்புணர்ச்சியையும் குறியாகக் கொண்டு ஒழுங்குபடுத்தும் சக்தியாக அரசியல்முறை மாறியிருக்கிறது. சுருங்கக் கூறவேண்டுமானால் அது புதியதோர் பிலிப்பைன் சமுதாயத்தை உருவாக்கி வருகிறது.

இவ்வத்தியாயத்தில், இம்மாற்றங்களெல்லாம் எவ்வாறு அரசியல் முறையில் இணைக்கப்பட்டிருக்கின்றனவென்பதையும், அவை எவ்வாறு செயல்படுகின்றனவென்பதையும்,

அரசியல் உயிரோட்டத்தையும் காணலாம். பிலிப்பைன் அனுபவத்திலிருந்து இம்முன்னேற்றம் தேவையான நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டதனுல் கிடைத்த பயன் அல்லவென்பதைத் தெளிவாக உணரவேண்டும். அது சமூக கருத்துகளும், பண்பாட்டுப் பிடிப்புகளும் செய்துவரும் பெரியதோர் சிக்கலான முறையாகும். அது, ஒரு கொத்து விதிகளை ஏற்றுக்கொள்வதையும், சமூகக் கட்டுப்பாடுகளைச் சார்ந்திருப்பதற்கான விருப்பத்தையும், வெவ்வேறு வகைப்பட்ட குறிக்கோள்களோடு பேரம் நடத்தி வெகுமதி அல்லது பரிகாரம் தேடுவதற்கான தயார் நிலையையும் சார்ந்திருக்கிறது.

அரசாங்கத்தின் முறைப்படியான நிலையங்களுக்குப் பொருளையும், சட்டபூர்வத் தன்மையையும் பெற்றுத்தருவன மேற்கூறப்பட்டவையே என திடமாகக் கூறலாம். பிலிப்பைனில் இந்த நிலையங்கள் பணிகளை ஒதுக்கியிருக்கின்றன; நடவடிக்கைக்கு வரம்பு கட்டியிருக்கின்றன. அதிகாரத்தைப் பகுத்து வழங்கியிருக்கின்றன. ஆனல், அவைகளின் நடைமுறையும், உபயோகமும் சமூக, பண்பாட்டுச் சக்திகளால் நிபந்தனைகளாக்கப்பட்டிருப்பதால் அவையாற்றும் பணியை விளக்குவதற்கு அரசியலமைப்பு ஏற்பாடுகளை எடுத்துக் கூறுவது போதுமானதாக இருக்காது. சான்ருக, தனிப்பட்ட தலைவர்களுக்கிடையிலான அரசியல் சமாதானப் பேச்சுவார்த்தைகள் சட்டமன்றம் சூன்யமான, அவசியமற்ற ஓர் மடம் என்ற நிலைமையைத் தோற்றுவித்திருக்கிறது. தனிப்பட்டவர்களிடம் வழக்கமாகக் காட்டப்படும் நன்றியுடைமை, பரந்த அடிப்படையிலான, கட்டுப்பாடுடைன கட்சியமைப்பு ஏற்படுவதைத் தடுக்கிறது. ஆனல், அத்தலைவர்முறை உடைந்து சட்டபூர்வமாக ஏற்படுத்தப்பட்ட நிலையங்கள் அதிகமான அளவிற்கு முக்கியப் பணியாற்றி வருகின்றன.

அடுத்துவ்ரும் அத்தியாயங்கள் முறைப்படியான நிலையங்கள்; அரசியல் கட்சிகளின் தன்மையையும் நடைமுறையையும் விளக்குகின்றன. அவ்விளக்கங்கள் பிலிப்பைன் அரசியல் பண்பாட்டை தெளிவுபடுத்துபவைகளாக அமையுமெனலாம்.

# 3. அதிகாரம், பணிபற்றிய சட்டபூர்வமான ஏற்பாடு

ஆட்சியாளர்களுடன் பிலிப்பைனியர்கள் கொண்டிருந்த தொடர்பு, அரசியல் அமைப்புகள், குழுக்கள் பற்றிய அறிவு, சக்தி வாய்ந்த அரசியல் நடவடிக்கை எது என்ற அறிவு, அதிகாரம் செலுத்தப்படுகின்ற அமைப்புகள் முதலியன சிறந்த நடைமுறை சாத்தியமான அரசியல் முறைக்கு (Political System) வழிகோலியிருக்கின்றன. எடுத்த எடுப்பில் அம்முறை சர்வாதிகாரத் தன்மையுடையது, அர்த்தமற்றது என்று தோன்றினாலும், கூர்ந்து நோக்குங்கால் கொள்கைகளை உருவாக்குவதில் ஈடுபட்டிருப்பவர்கள் கவனித்து, அதைக் கருத்தில் கொண்டு, அதன்படி நடக்குமளவிற்கு பொது மக்களின் கோரிக்கைகள் வலுவுற்றிருக்கின்றன என்பது தெளிவாகிறது. மாற்றம் கோரி எழுந்த வற்புறுத்தல்களால் மாற்றியமைக்கப்பட்டிருந்தாலும் பரம்பரைச் சமுதாயத்தின் தேவைகள் முறைப்படியான அமைப்புகளோடு போதுமான அளவிற்குப் பொருத்தப்படவில்லை. தனிப்பட்டமுறை தொடர்புகளில் காணப்படும் அளவிற்கு ஒப்பந்தத் தன்மை யுடைய கடமைகள் காணப்படவில்லையென்பது தெளிவாகிறது. வாக்காளர்கள், அரசாங்கப் பணிகளில் பணியாற்று பவர்களுக்கு ஆதரவு தேடுமளவிற்கு எவரையும் கட்டுப் படுத்தும் தன்மையை அமைப்புகள் பெற்றிருக்கின்றன வென்பதும் அதே சமயத்தில் தெளிவாகிறது. இவ்வத்தியா யத்தில் அரசியல் சட்டப்படியான அமைப்புமுறைகளையும், முறைப்படியான நிறுவனங்கள் எவ்வாறு வளர்ச்சியுற்றிருக் கின்றனவென்பதையும் காணலாம்.

அரசியல்முறை, சமுதாயத்தைப்போல மாற்றங்களை ஏற்கும் தன்மையுடைய கட்டத்தில் இருக்கிறது. அதாவது

'நவீன' அமைப்புக்குத் தகுந்தாற்போல அதனுடையப் பகுதிகள் தேவையான மாறுதல்களை ஏற்றுக்கொள்கின்றன. இதர நாடுகளிலுள்ளதைப்போல இங்கும் மக்கள் விருப்பங்களை அரசுத்திட்டங்களாகச் செயற்படுத்தும் தன்மையுடைய மக்களாட்சிமுறையை ஏற்படுத்துவதில், பிலிப்பைனிலுள்ள முறைப்படியான அமைப்புகள் தீவிரமான பங்காற்றுகின்றன. முறைப்படியான அமைப்புகள் பேரமுறைக்கு வரம்பிட்டு, சீர்திருத்தியமைக்கின்றன. அரசியலமைப் பொன்று அரசாங்க உறுப்புக்களின் அதிகாரவெல்லையை நிர்ணயிப்பதன் வாயிலாக பேரச்சக்தியை (Bargaining Power) விளக்குகின்றதெனலாம். விதிகளை ஆக்குவதற்கும், அவைகளைப் பின்பற்றுவதற்கும், தீர்மானிப்பதற்குமுள்ள ஆட்சி அதிகாரம் அந்த நோக்கங்களையடைவதற்காக அரசியலமைப்பில் ஏற்படுத்தப்படும் அமைப்புகளால் கட்டுப்படுத்தப் படுகின்றன.

தனிப்பட்ட தன்மையுடைய நிறுவனமான வாக்காளர் தொகுதிக்கும், அரசியலமைப்பில் முறைப்படியாக ஏற்படுத்தப்பட்டுள்ள அமைப்புகளுக்குமிடையேயுள்ள உறவு ஒன்றையொன்று சார்ந்துநின்று இயங்குவதாகும். பிலிப்பைனில் முறைப்படியான அமைப்புகள் தனிப்பட்டத் தன்மையுடைய நிறுவனங்களோடு தொடர்பின்றி இயங்கியிருந்திருந்தால், நாட்டில் எத்தனை வாக்காளர்கள் இருக்கின்றார்களோ அத்தனை கோரிக்கைகள் ஏற்பட்டிருக்கக்கூடும். எனவே முன்னதாகச் சொல்லப்பட்ட அவ்வமைப்புகள் மக்களின் நன்மை கருதி செயற்படவேண்டியிருக்கிறதென்பது தெளிவாகும். இவ்விடத்தில் அரசியல்பணிகள், முறைப்படியான அதிகாரப் பகிர்ந்தளிப்பினால் உருவங் கொடுக்கப்படுகின்றன என்பதையுணர்வது நலமாகும்.

**பிலிப்பைன் அரசியலமைப்பு**

பிலிப்பைன் அரசாங்கம் அதன் பல அம்சங்களில் அமெரிக்க முறையைப் பின்பற்றி அமைக்கப்பட்டிருப்பதாக அமெரிக்கர்கள் பொதுவாகக் கருதுகிறார்களென்றாலும், அதை அவ்வாறே முழுவதுமாக ஏற்றுக்கொள்வதற்கில்லை. ஏனென்னில் அமெரிக்க பிலிப்பைனியமுறைகளுக்கிடையிலுள்ள ஒற்றுமை அம்சங்கள், தன்னாட்சி அரசாங்கத்திற்குத் தேவையான சட்டப்படியான அடிப்படையையும் சுதந்திரத்தையும் ஏற்படுத்துவதோடு நின்றுவிடுகின்றன. மற்றபடி

பிலிப்பைனியர்கள் அயல்நாடுகளிலுள்ள நிலையங்களைத் தங்களுடையத் தேவைகளுக்குத் தகுந்தாற்போல திருத்தியமைத்துக்கொள்ளும் திறமையையுடையவர்களாக இருக்கிறார்கள் என்னும் கருத்து இதற்குமுன் பிறிதோரிடத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதை ஈண்டு நினைவு கூர்தல் நல்லதாகும்.

ஜனாதிபதி பிராங்ளின் டி. ரூஸ்வெல்டினால் 1934ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் கையெழுத்திடப்பட்ட டைடிங்-மக்டபி சட்டத்தை அடிப்படையாகக்கொண்டு பிலிப்பைன் அரசியலமைப்பு எழுதப்பட்டதாகும். இதர பல அம்சங்களோடு அதனில் காணப்படும் அம்சங்கள், குடியரசுத்தன்மை வாய்ந்த அரசாங்கம், பூரண சமய சகிப்புத்தன்மை, உரிமைகள் மசோதா, அரசியலமைப்பு மாநாடு (Constitutional Convention) தானாகவே முன் வந்து ஏற்றுக்கொள்ளவிரும்பும் அரசியல் கருத்துகள் ஆகியவை முக்கியமானவையாகும். பத்தாண்டு கால அமெரிக்க மேற்பார்வைக்கும், அமெரிக்க நலன்களின் பாதுகாப்பிற்கும் வசதிசெய்யும் சட்டமொன்றும் அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டிருந்தாலும், பின்னர் அச்சட்டம் 1946ஆம் ஆண்டு கைவிடப்பட்டு, முதல் சட்டம் பிலிப்பைன் அரசியலமைப்பாயிற்று.

அரசியலமைப்பின் இரண்டாம் விதியில் காணப்படும் கொள்கைகள் பற்றியப் பிரகடனம் பிலிப்பைனை ஒரு குடியரசு (Republic) நாடென்றும், இறைமை மக்களிடத்திலிருக்கிறதென்றும் விளக்குகிறது. குடிமக்கள் நாட்டின் பாதுகாப்பிற்காகச் சேவைசெய்ய வேண்டுமென அரசால் கட்டாயப்படுத்தப்படலாமென்றாலும், தேசியக்கொள்கையின் கருவியாகப் போர் ஏற்றுக்கொள்ளப்படாததோடு, நாட்டின் சட்டத்தின் பகுதியாக பன்னாட்டுச்சட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. இளைஞர்களை 'சிறந்த குடிமைத் தன்மையுடையவர்களாக' வளர்ப்பதற்கு பெற்றோர்களுக்குத் தேவைப்படும் உதவியையும் ஆதரவையும் தரும் பொறுப்பை அரசு ஏற்றுக்கொள்ளுமென்றும், எல்லா மக்களுடைய நல்வாழ்விற்கும், பொருளாதாரத்துறை காப்பிற்கும் வகைசெய்யும் முறையில் சமுதாய நீதியில் அரசு அக்கறைகாட்டுமென்றும் அரசியலமைப்பு அறிவிக்கிறது. பிலிப்பைன் கழகத்தால் ஏற்படுத்தப்பட்ட நெகிழாத்தன்மையுடைய நிலச்சட்டங்கள் அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டதோடு பிலிப்பைன் கட்டுப்பாட்டிற்கு வகைசெய்யும் முறையில் இயற்கை மூலாதாரங்களின் உபயோகமும், விற்பனையும் மிகுந்த எச்சரிக்கையுடன்

விளக்கப்பட்டிருக்கின்றன. தொழிலாளர்களைக் காப்பாற்று வதற்கும், உடைமைகளின் உரிமைகளை வரையறை செய் வதற்கும், தொழிலில் ஈடுபடுவதற்கும் விரிவான பல அதி காரங்கள் அரசாங்கத்திற்கு வழங்கப்பட்டிருக்கின்றன. இவ் வேறுபாடுகள், அரசியலமைப்பு சமூக நலத்தை நோக்கமாகக் கொண்டிருக்கிறதென எடுத்துக்காட்டுகின்றன.

அமெரிக்க அனுபவத்தின் சாயல் பெருமளவில் தென் பட்டாலும் தனக்கே இயல்பான முறையில் பிலிப்பைன் தன் அரசியல் முறையை அமைத்துக் கொண்டிருக்கிறதென்பதும், அதில் மானுவல் எல். கியூசானின் மறுக்கமுடியாத முத்திரை பதிந்திருக்கிறதென்பதும் தெளிவாகும். பிலிப்பைன் வரலாற்றில், 1935 முதல் 1941 வரையிலான காலம் கியூசான் அரசாங்கக்காலம் என்று அழைக்கப்படும் சிறப்புடைய தாகும். கியூசான், தன் கட்சியிலும், அரசாங்கத்திலும் தனிப்பெருஞ்செல்வாக்குடையவராக இருந்து அவைகளை இயக்கி வந்தார். 1940ஆம் ஆண்டில், ஜனாதிபதியினுடையப் பதவிக்காலத்தை ஆறுண்டுகாலத்திலிருந்து நான்காண்டு காலமாகவும், தனிமனிதன் எவரும் எட்டாண்டு காலத்திற்கு மேல் ஜனாதிபதியாக இருக்கக்கூடாதெனவும் அரசியலமைப் புக்குக்கொண்டு வந்து நிறைவேற்றப்பட்ட மாற்ற மசோதாக் கள், கியூசான் ஆட்சியில் தொடர்ந்திருப்பதற்கு வகை செய்யும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டவையாகும். எல்லா மாற்ற மசோதாக்களும் தேர்தலில் வாக்களித்த மொத்த வாக்காளர்களின் எண்ணிக்கையில் முக்கால் பங்கின ரால் ஏற்றுக்கொள்ளப்பட்டனவென்பது குறிப்பிடத்தக்க தாகும்.

ஜனாதிபதியின் அரசியல் சட்டப்படியான அதிகாரங்கள் முதலிலேயே கணிசமாக இருந்தன. அவ்வதிகாரங்கள் கியூ சானால் மேலும் அதிகரிக்கப்பட்டன. சட்டமன்றத்திற்கு ஜனாதிபதியால் அனுப்பப்படும் பரிந்துரைகள் உண்மை யில் ஆணைகளேயாகும். அடிக்கடி சட்டமன்ற உறுப்பினர் கள் கிளர்ச்சிகள் செய்தாலும், கியூசான் அரசாங்கத்தைத் தீவிரக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார். 1936இல் பள்ளிக் கூட ஆசிரியர்களுக்கு அவர் நிகழ்த்திய சொற்பொழிவில் அவருடைய அரசியல் தத்துவங்கள் காணக்கிடக்கின்றன. அப்போது அவர் அமெரிக்க பிலிப்பைனியத் தத்துவங்களுக் கிடையே வித்தியாசமிருக்கிறதெனக் குறிப்பிட்டார். தனி நபர் அரசுக்குக் கட்டுப்பட்டவர் என்பதற்கு உதாரணமாக அரசியலமைப்பிலுள்ள கட்டாய இராணுவ சேவையை

எடுத்துக்காட்டினர். அமெரிக்க அரசியலமைப்போ தனி நபர் மேலானவரென்றும், அவருடைய ஆதார உரிமைகளைப் பாதுகாப்பது அரசாங்கத்தின் பொறுப்பென்றும் கூறுவதாக எடுத்துக்காட்டினர். ஆனால், 'பிலிப்பைன் அரசியலமைப்பு இதற்கு நேர்மாறான அரசியல் தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டது. அரசியலமைப்பின்படி தனி நபர்கள் மேலானவர்கள் அல்ல. தனிநபர் நன்மைக்குப்பதிலாக அரசின் நன்மைதான் மேலோங்கி நிற்கவேண்டும்'.[1]

அரசாங்கம் குவிக்கப்பட்ட அதிகாரத்தையுடையதென்பதற்கு வட்டார அரசாங்கத்திற்கு சிறப்பிடம் தரப்படாமல் தேசிய அரசாங்கத்திற்குத் தரப்பட்டுள்ளதையும், வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படும் செனட் அமைக்கப்பட்டுள்ளதையும் எடுத்துக்காட்டுகளாகக்கூறலாம். இது, அமெரிக்க அரசாங்கத்தின் எண்ணத்திற்குமாறாக ஸ்பானிய அரசியல் முறையில் வேரூன்றியிருந்தவொரு அம்சமாகும். மத்திய அரசாங்கத்திடம் அதிகாரத்தைக் குவிப்பதில் பிலிப்பைன் கட்சிகளுக்கு அக்கறை இருந்தது. அதற்குக்காரணம், அவைகள் தங்களுடைய சொந்த லாபத்தில் ஈடுபாடு உடையவைகளாக இருந்ததேயாகும். சக்திமிக்க நிர்வாகத்துறையை அமைப்பதில் நாட்டமுடையவராக இருந்த கியூசான், வாக்காளர்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களைக்கொண்ட செனட் நல்லதென்றறிந்தார். ஏனெனில், போக்குவரத்து முன்னேற்றமில்லாத நாட்டில் வேட்பாளர்கள் தாங்கள் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு ஜனாதிபதியின் துணையையும் புகழையும் தேடுவார்கள். அதனால் ஜனாதிபதிக்கு அவர்கள் ஆதரவுகிட்டும் என்பதாகும். மேலும், இலவசக் கல்வி வசதி காரணமாக எழுத்தறிவு பரவியதால் அமெரிக்க ஆக்கிரமிப்பு காலத்தின்போது வாக்காளர்களின் எண்ணிக்கையும் சிறுகச்சிறுக அதிகரித்தது. இது பிலிப்பைன் அரசியலில் ஆதிக்கம் செலுத்திவந்த பெருநிலக்கிழார்களை பயமுறுத்துவதாக அமைந்தது. மக்கள் தொகையடிப்படையில் சிறு சிறு மாவட்டத்தொகுதிகளினால் தீவிர சீர்திருத்தங்களைக்கொண்டு வருவதாக வாக்களித்து, அதன்பேரில் பொது மக்கள் ஆதரவுடன் சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சோஷலிஸ்டுகள் பதவியேற்க முடிந்தது. ஆனால்,

[1]'Changes in Government and Political Philosophy,' Speech of the President of the Philippines at Teachers' Camp, Bagino, May 22, 1936.

சட்டமன்றத்தின் இரண்டாவது சபையொன்று ஏற்படுத்தப் பட்டதும், அச்சபையின் உறுப்பினர்கள் தேர்தலில் பணக் காரர்களுக்கும், செல்வாக்குடையவர்களுக்கும் முக்கியப்பங்கு அளிக்கப்பட்டதால், மேற்சொல்லப்பட்ட போக்கு தடைப் பட்டது. சமீபஆண்டுகளில், செனட்டர்கள் மாவட்டங் களால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்ற பிரேரணைகள் செய்யப்பட்டு வருகின்றன. இப்பிரேரணைகளை ஜனுதிபதி கார்சியா நிறைவேற்ற முயன்றபோது, தேசியமட்டத்தில் செல்வாக்குடையவர்களான தலைவர்களை இருந்த இடம் தெரியாமல் ஆக்குவதற்கும், மத்தியமட்டத்தில் சக்திவாய்ந்த நிர்வாகத்தை அமைப்பதற்கும் அவர் முயற்சி செய்ததாகக் குறை சொல்லப்பட்டார்.

அரசியலமைப்பின்படியும், அரசியல் முறையின்படியும் சக்திமிக்க ஜனுதிபதி இருந்ததால் சுதந்திரமான, பொறுப் புள்ள சட்டமன்றம் ஏற்படுவது தாமதமாயிற்று. கொள் கையை உருவாக்குவதில் சட்டமன்றத்திற்கு செல்வாக்கில்லை. அதனுல் சட்டமன்ற உறுப்பினர்கள் ஜனுதிபதியால் பின்பற்றப்பட்ட கொள்கைகளை எதிர்ப்பதில் ஈடுபட்டனர். முதல் சட்டசபையின் அனுபவம் அதற்குப் பிறகு ஏற்பட்ட சட்டசபைகளின் அனுபவங்களைப் போன்றே இருந்தது. ஆரம்பத்தில் சபாநாயகராக யார் தேர்ந்தெடுக்கப்படவேண்டு மென்பது பற்றி ஜனுதிபதிக்கும், கியுண்டின் பாரடி (Quintin Paredes) என்ற சட்டமன்ற உறுப்பினருக்குமிடையே சண்டை நடந்தது. தன் ஆள் சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப் பட்டதன் மூலமாக கியூசான் தன் மேலதிகாரத்தை நிலைநாட்டிக் கொண்டார். தாராளமாகப் பயன்படுத்தப்பட்ட மறுப்பாணைகளின் எண்ணிக்கையைக்கொண்டு எந்த அளவிற்கு நிர்வாகத்துறைக்கும் சட்டத்துறைக்குமிடையே கருத்துவேற்றுமை இருந்ததென்பதைத் தெரிந்து கொள்ள லாம். 1938ஆம் ஆண்டில் நடைபெற்ற சட்டமன்றத் தொடரில் நிறைவேற்றப்பட்டவைகளில் 42 விழுக்காட்டிற்குச் சமமான 44 மசோதாக்கள் மறுப்பாணை மூலமாக நிராகரிக்கப் பட்டன. பிற்காலச் சட்டசபைகளைப்போலவே, இந்த சட்ட மன்றமும் தொடரின் பெரும் பகுதிக்காலத்திற்கு அதனுடைய சுதந்திரம், சலுகைகளைப்பற்றி விவாதித்துவிட்டு கடைசியில் சில நாட்களில் மசோதாக்களை நிறைவேற்றியது. அவ்வாறு அவசரம் அவசரமாக மசோதாக்கள் நிறைவேற்றப்பட்டதால் அவைகள் விரிவாகப் பரிசீலனை செய்யப்படாததோடு விவாதிக்கப்படவும் முடியாது போயிற்று. சான்றுக, முதலில்

முறைப்படியாகக் கூடியதொடரில் நிறைவேற்றப்பட்ட 148 மசோதாக்களில் 93 மசோதாக்கள் கடைசி நாளன்று நிறைவேற்றப்பட்டன.

அரசியல்துறை முன்னேற்றம் பெரும்பாலும், கொள்கையை உருவாக்குவதற்கு உதவியாக இருக்கும் நிலையங்களைப் பொருத்ததாகுமெனலாம். பிலிப்பைனில், சட்டபூர்வமான முறைகளைப் பின்பற்றி நடப்பதற்கு அரசியல்வாதிகளிடையே ஆர்வம் காணப்படுவதால், அரசியல் ஸ்திரத்தன்மை காணப்படுவதோடு, முன்கூட்டியே மாற்றங்களைப்பற்றி கருத்து தெரிவிக்கவும் முடிகிறது. எனினும், ஏற்கப்பட்ட அம்முறைகள் சச்சரவிற்கான வழிகளாக இப்போது அந்நாட்டில் மாறி வருகின்றன.

**நிர்வாகத்துறை**

தனி மனிதனின் தலைமையில்உள்ள பிடிப்பும், அம்மனிதன் அதிகாரங்களைச் செலுத்தவேண்டுமென்னும் பிலிப்பைனியர்களின் கருத்தும் அரசியலமைப்பின் முக்கியமான அம்சமாக விளங்குகிறது. அரசியல் காரணங்களைக் கருத்தில் கொண்டு நடைமுறையில் அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. சட்டமன்ற உறுப்பினர்கள், ஜனாதிபதியின் அதிகாரங்கள் அளவற்றவை என்று கருதுகின்றனர். ஜனாதிபதியின் இத்தகைய அதிகாரங்கள் பதவியிலிருந்த அல்லது இருக்கின்ற தனிப்பட்டவர்களின் செல்வாக்கை ஆதாரமாகக் கொண்டவை. எனினும், பிராந்திய அரசியலில் செல்வாக்குடையவர்கள், சட்டத்துறைமூலமாக ஜனாதிபதியைக் கட்டுப்படுத்தவும் செய்கிறார்கள்.

அரசியலமைப்பு மாநாடு கொள்கையளவில் அதிகாரப் பிரிவினைக் கொள்கையை ஏற்றுக்கொண்டதெனினும், மரபடிப்படையில் சட்டத்துறைக்குத் தரப்பட்டிருக்கும் அதிகாரத்தைக் காட்டிலும் அதிகமான அதிகாரம் நிர்வாகத் துறைக்குத் தரப்பட்டிருக்கிறது. சான்றாக, காங்கிரஸ் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கென சில திட்டங்களை நிர்வாகத்துறை தலைவராக இருக்கும் ஜனாதிபதி, விதிக்கப்பட்டு அமுலிலிருக்கும் நடைமுறைகளை ஒதுக்கி வைத்து மொழியலாம். அங்ஙனமே வரவு-செலவுத் திட்டத்தைப் பொறுத்தும் ஜனாதிபதிக்கு கணிசமான சுதந்திரம் தரப்பட்டிருக்கிறது. சில துறைகளில் கொள்கைகளை உருவாக்குவதிலும் அவருக்குச் சுதந்திரமிருப்பதாகத் தெரிகிறது.

அவருக்குத் தரப்பட்டிருக்கும் விரிவான அதிகாரங்கள் பிலிப்பைன் அரசாங்கத்தின் ஒற்றையரசாங்க முறையினால் கிடைத்தவைகளாகும். வட்டார அரசாங்கம் தேசிய அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டது. தேசிய அரசாங்கம் தரும் அதிகாரங்களைத்தான் வட்டார அரசாங்கம் செலுத்த முடியும். வட்டார அரசாங்கத்தை மேற்பார்வை செய்வதற்கு ஜனாதிபதிக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருப்பதால், அவர், எல்லைகளைத் தீர்மானிக்கவும், நகராட்சிகளையும், கிராமங்களையும் பிரிக்கவும் முடியும். அதாவது, சட்டமன்றத்தின் அனுமதி இல்லாமலேயே அவைகளை ஆக்கவோ அல்லது அழிக்கவோ அவருக்கு அதிகாரமிருக்கிறது.

இவையெல்லாவற்றையும்விட பயன்மிக்கதோர் அதிகாரம் ஜனாதிபதிக்குள்ள நியமன அதிகாரமாகும். ஜனாதிபதி,எவரும் வியப்படையத்தக்க அளவிலான பதவிகளுக்கு தொழிலாளர்களையும், எழுத்தர்களையும், அலுவலர்களையும் நியமிக்கிறார். 1955ஆம் ஆண்டுவரையிலும் அவர் தனித்தன்மை வாய்ந்த நகரங்களின் மேயர்களையும், காவலர் தலைவர்களையும் நியமித்து வந்தார். இப்போது அவற்றில் பாதிக்கும் அதிகமான அலுவலர்களை அவர் நியமித்து வருகிறார். அவர் மத்திய வங்கியின் இயக்குநரையும், நகராட்சி பணக்காவலரையும், சுகாதார அலுவலர்களையும், சட்ட எழுத்தர்களையும் நியமிக்கிறார். வட்டார அரசாங்கங்களிலுள்ள இப்பணிகளுக்கு நியமனம் செய்யும் அதிகாரம் அவருக்கு இருப்பதால் ஊழியர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் அரசியலில் நன்றியுடையவர்களாக இருக்கிறார்கள். வட்டார சுகாதார அலுவலர்களையும், குடியானவர்களையும் வட்டார மேயர் கட்டுப்படுத்தமுடியாது. காரணம் அவர்கள் நேரிடையாக தேசிய அரசாங்கத்திற்கே பொறுப்புடையவர்களாக இருக்கிறார்கள். எனவே, மேயர் ஜனாதிபதியை நம்பி இருக்கவேண்டியவராகிறார். ஜனாதிபதியின் ஆதரவுதான் பிலிப்பைனில் அரசியல் என்ற அளவிற்கு வளர்ந்திருக்கிறது. பிலிப்பைன் அரசாங்கத்தின் ஒற்றையாட்சித் தன்மையும், அரசாங்கம்தான் சிறந்த வேலை என்றில்லாமல் சில சமயங்களில் வேலைக்கே வாய்ப்புகளைத்தரவல்லது என்ற நிலைமையும் இவ்வரசியலை மேலும் முக்கியமானதாக்குகிறது.

ஜனாதிபதியின் நியமன அதிகாரம் நியமனங்கள் கழகத்தின் (Commission on Appointments) இசைவுக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறது. அக்கழகத்தின் உறுப்பினர்கள்

விகிதாச்சார பிரதிநிதித்துவ அடிப்படையில் கட்சிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகிறுர்கள். அதிலுள்ள மொத்த உறுப்பினர்கள் இருபத்திஞன்கு பேர்களில் பன்னிரெண்டு பேர்கள் பிரதிநிதிகள் சபையிலிருந்தும், எஞ்சிய பன்னிரெண்டு பேர்கள் செனட்டிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்படுகிறுர்கள். அக்கழகத்தின் தலைவராக செனட்டின் தலைவரிருப்பார். அநேகமாக எல்லா நியமனங்களும் அக்கழகத்தால் ஆமோதிக்கப்பட்டுவிடும். ஏனெனில், ஜனுதிபதி மிகச் சாமர்த்தியமாக அந்நியமனங்களைச் செய்வதோடு காங்கிரசில், ஆட்சித்துறைக்குப் பெரும்பான்மையிருப்பதுமாகும்.

ஜனுதிபதி ஆட்சித்துறையின் தலைவராவார். சட்டமன்றத்திற்கு ஜனுதிபதியைக் கட்டுப்படுத்தும் அதிகாரமிருக்கிறது. ஏனெனில், அது நிர்வாகத்துறைகளை ஏற்படுத்தவும், அவற்றின் அதிகாரங்களை வரையறை செய்யவும், அவை செயல்படுவதற்குத் தேவையான நிதியை வழங்கவும், அவற்றின் அறிக்கைகளைப் பெறவும், அவசியமானபோது அவைகளின் நடவடிக்கைகள்பற்றி சாட்சியங்கள் பெறவும் சட்டமன்றத்திற்கு அதிகாரமிருப்பதேயாகும். ஆனுல், ஜனுதிபதிக்கு அரசியலில் உள்ள செல்வாக்கும், நியமனங்களிலுள்ள அதிகாரமும், நிதி ஒதுக்கீடு செய்வதற்குள்ள உரிமையும் சுதந்திரமாக இயங்குவதற்கான அடிப்படையை நல்குகின்றன. ஆட்சித்துறை தலைவரென்ற முறையில், சட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தேவையான நிர்வாக ஆணைகளை ஜனுதிபதி பிறப்பிக்கவேண்டும். ஏனெனில், காங்கிரஸ் பொதுவாக பொதுக்கொள்கையை விளக்குவதோடு நின்றுவிடுகிறது. சட்டங்களை நடைமுறைக்குக் கொண்டுவருவதற்காகப் பிறப்பிக்கும் விதிகளிலும், ஒழுங்குமுறைகளிலும் ஜனுதிபதி தன் கருத்துகளையும், தான் விரும்புபவைகளையும் புகுத்தமுடியும்; அங்ஙனம் புகுத்தவும் செய்கிறுர். நிலைய அடிப்படையில் இல்லாமல் ஆள் அடிப்படையில் ஆட்சித்துறை முடிவுகள் செய்யப்படுவது பிலிப்பைனில் காணப்படும் அம்சமாகும். அதற்கு உதாரணமாக, ஆட்சித்துறை சம்பந்தப்பட்ட சாதாரண விஷயங்கள்கூட ஜனுதிபதியின் முடிவுக்கு விடப்படுவதைக் கூறலாம். மேலும், அரசாங்க அலுவலர்களுக்கிடையே ஏற்படும் சச்சரவுகளையும் ஜனுதிபதியே சமரசம் செய்துவைக்கிறுர். ஆட்சித்துறையில் அவர் தலையீடு இல்லாத பிரிவே கிடையாதெனலாம்.

ஜனுதிபதியின் அதிகாரத்திற்கு மற்றுமொரு முக்கியமான ஆதாரம் இராணுவப்படைகளுக்கு அவரே தலைமைத்தளபதி

என்பதோடு, நாடுமுழுவதையுமோ அல்லது பகுதிகளையோ இராணுவச்சட்ட ஆட்சியின் கீழ் கொண்டுவருவதற்கும், கைதுசெய்து காவலில் வைக்கப்பட்டிருப்பவர்களை நீதிமன்றத்தின் முன்கொணர்ந்து விசாரிக்க வகைசெய்யும் ஆணையை (Writ of Habeas Corpus) ரத்து செய்வதற்குமுள்ள அதிகாரமாகும். எனினும், இத்துறையிலுள்ள அதிகாரங்கள் மிகவும் சாதாரணமான சூழ்நிலைகளில்தான் ஜனாதிபதிகளால் பயன்படுத்தப்பட்டன. ஆனால், பிலிப்பைன் காவல்துறை அரசியலில் பட்சபாதமானமுறையில் பயன்படுத்தப்படுகிறதென்ற அவப்பெயர் ஏற்பட்டுள்ளது.

பிலிப்பைனிலும், இதரநாடுகளைப்போல, வரவு-செலவுத் திட்டம் நிர்வாகத்தின் கொள்கைகளுக்கும்,அரசியல் அழுத்தச் சக்திகளுக்கும் அடிப்படைத்தளமாக அமைந்திருக்கிறதெனலாம். அமெரிக்க நிர்வாகத்திற்குத் தரப்பட்டிருக்கும் சுதந்திரத்தைவிட, அதிகமான சுதந்திரம் தலைவர்வழிமுறைப் பின்பற்றும் பிலிப்பைனில் ஜனாதிபதிக்குத் தரப்பட்டிருக்கிறது. சட்டமன்றத்தின் ஒவ்வொரு முறைப்படியான தொடர் ஆரம்பித்த பதினைந்து நாட்களுக்குள், வரவு-செலவுத் திட்டத்தை அதன் பரிசீலனைக்கு ஜனாதிபதி சமர்ப்பிக்க வேண்டும். இந்த வரவு-செலவுத்திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு, நிர்வாகத்துறை, சட்டத்துறை ஆகியவைகளுக்கிடையிலும், அரசியல் கட்சிகளுக்கிடையிலும் அரசியல்வாதிகளுக்கிடையிலும் பேரங்கள் நடைபெறுகின்றன. நீதித்துறை, சட்டமன்றத்திற்கான நிதிக்கோரிக்கைகள் நீங்கலாக நிர்வாகத்துறைக்கான ஜனாதிபதியின் கோரிக்கைகளை சட்டமன்றம் அதிகரிக்கமுடியாது. நிர்வாகத்திற்குச் சங்கடமில்லாத வகையில், காங்கிரசால் நிறைவேற்றப்பட்ட இனங்களை, இனங்கள் அடிப்படையில் மறுப்பாணையைப் பயன்படுத்தி நிராகரிக்கமுடியும். அவரால் நிராகரிக்கப்பட்டவைகளை நீக்க வேண்டுமானால், மீண்டும் அவைகள் ஒவ்வொரு சபையிலுமுள்ள மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் முக்கால் பங்கினர் ஆதரவுபெற்று நிறைவேற்றப்பட வேண்டும்.

பிலிப்பைன் வரவு-செலவுத் திட்டத்தயாரிப்பிலேயே ஆச்சரியப்படத்தக்கதும், புதிரானதுமான அம்சம் பொதுப் பணித்துறை வரவு-செலவுத்திட்டமாகும். இத்திட்டம் நிர்வாகத்தால் தயாரிக்கப்படாமல் காங்கிரசால் பொதுப்பணித் துறை (Public Works Department) அளிக்கும் சிபாரிசுகள்

அடிப்படையில் தயாரிக்கப்படுவதாகும். இத்திட்டத்தில், ஒவ்வொரு உறுப்பினரும் அவரவருடைய தேர்தல் தொகுதியில் செலவழித்துக்கொள்வதற்கென குறிப்பிட்ட தொகையொன்றைப் பெறுகின்றனர். இத்தொகை வரவு-செலவுத் திட்டக்கழகத்தின் கண்காணிப்புக்குட்பட்டு ஜனாதிபதியினால் உறுப்பினர்களுக்கு வழங்கப்படுகிறது. இத்தொகையிலிருந்து தான் தேர்தலுக்கான செலவு செய்துகொள்ளப்படுகிறது. எனவே, எக்கட்சி தேர்தலில் வெற்றி பெறுகிறதோ அல்லது வெற்றிபெறும் வாய்ப்பை உடையதாக இருக்கிறதோ, அக்கட்சிக்கு, மாற்றுக்கட்சியிலிருப்பவர்கள் தாவிவிடுகிறார்கள்.

பொதுப்பணித்துறை நிதியல்லாமல், எதிர்பாராது ஏற்படும் இதர செலவுகளுக்காகவும், அவசரகாலத் தேவைக்காகவும் ஜனாதிபதிக்கு நிறையத் தொகைகள் ஒதுக்கப்படுகின்றன. இத்தொகைகளிலுள்ள பணத்தை ஜனாதிபதி தன் விருப்பம்போல் செலவுசெய்துகொள்ளலாம். எனவே, ஜனாதிபதி தன்னை எதிர்க்கும் எவரையும், பணத்தை வாரி இறைப்பதன் வாயிலாகத் தோற்கடிக்க முடியும். ஆகையால் 'அவருக்கு நல்ல பிள்ளையாக நடந்து கொள்வதே மேல்' என்ற கருத்து பிலிப்பைன் அரசியல்வாதிகளிடையே காணப்படுகிறது.

அரசியலிலுள்ள செல்வாக்கு, அரசியலமைப்பு தரும் ஆதாரம் ஆகியவைகளின் துணையால் தன் திட்டங்களை சட்ட மன்றம் நிறைவேற்றுமாறு செய்ய ஜனாதிபதியால் முடியும். ஆட்சித்துறைத் திட்டங்களுக்கு காங்கிரஸ் முதலிடம் தருகிறது. நிதிகளை கவனமாக விநியோகிப்பதன் மூலமாகவும், நியமன அதிகாரத்தைச் சாமர்த்தியமாகப் பயன்படுத்துவதன் வாயிலாகவும், அத்திட்டங்களுக்குக் காங்கிரசில் பேராதரவு கிடைக்குமாறு செய்யலாம், ஆனால், வாக்காளர்களின் முன்னேற்றக் கருத்துகள், செல்வாக்குக் குழுக்கள் காரணமாக காங்கிரசும் இப்போது மாறி வருகிறது. சில சமயங்களில் நிர்வாகத்தின் திறமை குறைவு, இலஞ்ச ஊழல் காரணமாகக் கூட சட்டத்துறைக்கும் நிர்வாகத்துறைக்குமிடையே வேறுபாடுகள் ஏற்படுகின்றன. தனியாள் தலைமையிலும் இப்போது மோகம் குறைந்து வருவதோடு, சமீப காலங்களில் ஜனாதிபதி பதவியிலிருந்தவர்கள்மேல் நம்பிக்கையின்மையும் ஏற்பட்டு வருகிறது. இத்தகைய மாறுதல்களுக்கான காரணங்கள் என்னவென்பதை இப்போது காணலாம்.

பிலிப்பைன் ஜனாதிபதிகளுக்கு அரசியலில் இருக்கும் செல்வாக்குக் காரணமாக சட்டமன்றத்தில் பெரும்பான்மை கிடைத்து வந்தது. அதனால் அவர்கள் தங்களுடைய ஆட்களை சட்டமன்றத்தில் முக்கியப்பணிகளுக்கு நியமித்து, அவர்கள் துணைகொண்டு சட்டங்களை நிறைவேற்றிவிடுகின்றனர். எனவே, இயற்றப்படும் சட்டங்கள்பற்றிய சட்டமன்ற விவாதங்கள் மக்களுக்கு தெரியாமல் போய்விட்டன. இங்ஙன மிருந்தபோதும் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட பல மசோதாக்கள் ஜனாதிபதிகளால் நிராகரிக்கப்பட்டு வந்திருக்கின்றன என்பது இங்கு அறியத்தக்கது. அதேபோல, நிர்வாகம் விரும்பிய மசோதாக்களையும் சட்டமன்றம் நிறைவேற்ற மறுத்திருக்கிறது.

ஜனாதிபதி எந்தவொரு மசோதாவையும் தன் மறுப்பாணை அதிகாரத்தைக் கொண்டு நிராகரிக்கலாம். அவ்வாறு நிராகரிக்கப்பட்ட மசோதா சட்டமன்றத்தால் அதன் இருசபைகளிலும் தனித்தனியே மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூன்றிலிரண்டு பங்கு பெரும்பான்மை பலத்தோடு மீண்டும் நிறைவேற்றப்படுமானால், ஜனாதிபதி மறுப்பாணை ரத்தாகிவிடும். எனவே, ஒன்பது செனட்டர்கள் அல்லது முப்பத்தைந்து பிரதிநிதிகள், சபை உறுப்பினர்கள் ஜனாதிபதியின் விருப்பத்திற்கெதிராகச் சட்டமன்றம் நடப்பதைத் தடுத்துவிடமுடியும். பெரும்பாலான மசோதாக்களை காங்கிரஸ் கூட்டத்தொடர் முடியுந்தருவாயில் நிறைவேற்றுவதால் அவைகளை ஜனாதிபதி எளிதில் நிராகரிக்க முடிவதோடு, அவை மீண்டும் நிறைவேற்றப்படக்கூடிய வாய்ப்பு காங்கிரசின் அடுத்த கூட்டம் நடைபெறும்வரை ஒத்திவைக்கப்படுமாறும் செய்யப்பட்டுவிடுகிறது. அதற்கிடையில், ஜனாதிபதி தன் ஆதரவாளர்களின் உதவியினாலும், கட்சிப் பிரமுகர்களின் துணையாலும் தனக்கு விருப்பமானவகையில் மசோதாவொன்றைக் கொண்டுவருமாறு செய்யமுடிகிறது.

சட்டமன்றம் ஒத்திவைக்கப்பட்டதுமுதல் ஒருமாத காலத்திற்குச் சட்டசம்பந்தமான வேலைகள் மிக அதிகமாகவும், கெடுபிடியாகவுமிருக்கிறது. ஏனெனில், ஒத்திவைக்கப்பட்ட தேதியிலிருந்து முப்பது நாட்களுக்குள் ஜனாதிபதியால் நிராகரிக்கப்படாமல் ஆனால், கையெழுத்தாகாத மசோதாக்கள் அனைத்தும் சட்டமாகிவிடுகின்றன. சட்டமன்றம் தொடரிலிருக்கும்போது நிறைவேற்றப்பட்டு ஜனாதிபதிக்கு அனுப்பப்படும் மசோதாக்கள், அவை அவ்வாறு அனுப்பப்பட்ட தேதி

முதல் இருபது நாட்கள் கழித்து ஜனாதிபதியால் நிராகரித்து அனுப்பப்படாதிருந்தால் அவைகள் தாமாகவே சட்டங்களாகி விடுகின்றன. இத்தகைய சட்டசம்பந்தமான அலுவல்கள் 1960ஆம் ஆண்டின் தொடரின்போது உச்ச கட்டத்தி லிருந்தன. அப்போது முப்பது நாள் கெடுவுக்குப்பிறகு ஒரு வாரம் ஆகியும் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட மசோதாக் கள் பற்றிய தன் நடவடிக்கையை ஜனாதிபதி அறிவிக்காதிருந் தார். அம்மசோதாக்களில் வரவு-செலவுத் திட்டத்தை ஏற்றுக் கொண்டு கையெழுத்திட்டார். காங்கிரசால் அனுமதிக்கப் பட்டத்தொகையிலிருந்து பத்து இலட்சம் பீசாக்களைக் (Pesos) குறைத்து, பொதுப்பணி நிதி ஒதுக்கீடுகளை ஏற்றார். நான்கு இதர முக்கியமான மசோதாக்களை மறுப்பாணை செய்தார். அவைகளாவன : (1) அரிசி, தானியத் தொழில் பற்றிய மசோதா (2) இலஞ்ச ஒழிப்பு மசோதா (3) பிலிப்பைன் சர்க்கரைக் கழகத்திற்கு சர்க்கரை பங்கொதுக்கீடு நிர்வாகத்தை (Sugar Quota Administration) மாற்றுவதுபற்றிய மசோதா (4) ஜப்பானியப் போர் இழப்பீடு ஒப்பந்தத்திற்குக் (Japanese Reparations Agreement) கொண்டுவரப்பட்ட மாற்றம் பற்றிய மசோதா.

நிராகரிக்கப்பட்ட மசோதாக்கள், அவைகள் ஏன் நிராகரிக்கப்பட்டன என்ற காரணங்களோடு ஜனாதிபதி களால் திரும்ப அனுப்பப்பட்டிருக்கின்றன. சில சமயங்களில் அவைகளுக்குப் பதிலாகத் திருத்தியமைக்கப்பட்ட மசோதாக் களும் அனுப்பப்படுவதுண்டு. இந்தமுறை ஜனாதிபதி கியூரினோவால் பின்பற்றப்பட்டதாக உரோமானி (Romani) என்பவர் அவருடைய 'பிலிப்பைன் ஜனாதிபதி' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். 1960ஆம் ஆண்டு வரையிலும் ஜனாதிபதி யால் நிராகரிக்கப்பட்ட மசோதாக்களை மீண்டும் நிறைவேற்று வதற்கு அவ்வளவாக முயற்சிகள் மேற்கொள்ளப்படவில்லை யெனினும், ஜனாதிபதி கார்சியாவினால் மறுக்கப்பட்ட இரு மசோதாக்கள் தேவையான பெரும்பான்மை வாக்குகளால் நிறைவேற்றப்பட்டன. அவைகள் இலஞ்ச ஒழிப்பு மசோதா, அரிசி, தானிய தொழில்கள் மசோதா ஆகியவைகளாகும்.

சட்டமன்றங்களும் அவற்றின் பங்கிற்கு நிர்வாகத்துறை யால் வேண்டப்பட்ட மசோதாக்களை நிறைவேற்ற மறுத்திருக் கின்றன அல்லது நிறைவேற்றினாலும் அவற்றின் நோக்கங்களை அடையமுடியாதவகையில் பல திருத்தங்களோடு ஏற்றுக் கொண்டிருக்கின்றன. குறிப்பாக, நிலச்சீர் திருத்தம்பற்றிய

மசோதாக்கள் அத்தன்மையில் நடத்தப்பட்டிருக்கின்றன. நிர்வாகம் அனுப்பிய மசோதாக்கள்பற்றிய பரிசீலனை நிறை வேற்றத்திற்காக, சட்டமன்றத்தின் தனித்தொடர்கள் நடத்தப்பட்டிருக்கின்றன. 1963ஆம் ஆண்டு இறுதியில் முறைப்படியாகக் கூட்டப்பட்ட செனட் தொடர் வரவு-செலவுத் திட்டத்தை நிறைவேற்றாமலேயே கலைந்துவிட்ட தால், அதை நிறைவேற்றுவதற்காகத் தனித்தொடர் கூட்டப் படவேண்டியதாயிற்று என்பதை இங்கு உதாரணமாகக் கூறலாம். தனித்தொடர்களின் நிகழ்ச்சிநிரல்களை முடிவு செய்வதற்கு காங்கிரஸ் உறுப்பினர்களுக்கிடையிலும், கட்சித் தலைவர்களுக்கிடையிலும் விரிவான பேச்சுவார்த்தைகள் நடைபெறவேண்டியதாகவிருக்கிறது. 1955-லும் 1963-லும் கொண்டுவரப்பட்ட முக்கியமான நிலச்சீர்திருத்த மசோதாக் கள் பற்றி பெரிய அளவில் விளம்பரம் செய்யவேண்டியிருந்த தோடு, சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அவைகளை நிறை வேற்றவேண்டிய அவசியம்பற்றி விளக்க வேண்டியிருந்தது. 1963இல் நிலச்சீர்திருத்த மசோதாவை நிறைவேற்றுவதற் காக ஜனாதிபதி மகாபகல் சட்டமன்றத்தின் சிறப்புக்கூட்ட மொன்றை ஆறு நாட்களுக்குக் கூடுமாறு செய்தார். அம் மசோதா, பலவகைகளாலும் திருத்தப்பட்டு நிறைவேற்றப் படுவதற்கு செனட் ஏழு தடவைகள் நீடிக்கப்படவேண்டி யிருந்ததோடு இருபத்தெட்டு நாட்களாயின. இத்தனைக்கும் அம்மசோதா 'அவசரமானது' என்று ஜனாதிபதியால் அறிவிக்கப்பட்டிருந்தது. சாதாரண கூட்டத்தில் மசோதா நிறைவேற்றப்படாததால், சிறப்புக்கூட்டம் கூட்டப்பட வேண்டியதாயிற்று. சிறப்புக்கூட்டம் கூட்டப்படுவதற்கு எதிர்ப்பு பலமாக இருந்தது. சிறப்புக்கூட்டங்கள் இப்போது மாமூலாகக் கூட்டப்பட்டு வருகின்றன. அத்தகையக் கூட்டங் களில், சர்ச்சைக்கிடமான திட்டங்கள் பற்றிய மசோதாக்களே பெரும்பாலும் நிறைவேற்றப்படுகின்றன என்பதை அறிதல் அவசியமாகும்.

ஜனாதிபதியின் தேர்தல்பற்றிய ஏற்பாடுகளும் பதவிக் காலமும் அறியத்தக்கவைகளாகும். ஏனெனில், இரு தடவை களில் ஜனாதிபதி பதவிக்கான தேர்தல்கள் அரசியல் ரீதியாக மக்களின் கவனத்தை வெகுவாக ஈர்த்திருக்கின்றன. அவர் நேரிடைத் தேர்தலில் வாக்காளர்களால் நான்காண்டு பதவிக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஒருவர் எட்டாண்டு கள் தான் ஜனாதிபதியாக இருக்கலாம். பதவிக்காலம்பற்றிய அரசியலமைப்பு வாசகம் மிகவும் முக்கியமானது. ஏனெனில்,

அது இரு தடவை என்று குறிப்பிடாமல் எட்டு ஆண்டுகள் என்று வரையறை செய்கிறது. 'எந்த ஒரு நபரும் தொடர்ந்தாற்போல எட்டாண்டுகளுக்குமேல் ஜனாதிபதியாகப் பணியாற்ற முடியாது. சொல்லப்பட்ட அப்பணியின் காலம், அவர் எந்தத் தேதியில் ஜனாதிபதியாகப் பதவியேற்கிறாரோ அதுமுதல் கணக்கிடப்படும்' என்று அரசியலமைப்பின் ஏழாம் விதியின் ஐந்தாம் பிரிவு கூறுகிறது.

அரசியலமைப்பின் இவ்வாசகம் ஜனாதிபதி அரசியலுக்கு அப்பாற்பட்டவராக ஆனால், அதேபோதில் சிறந்த அரசியல் தந்திரியாக இருக்கவேண்டுமென்னும் கருத்தை வற்புறுத்துவதாக அமைகிறதென ஆய்வாளர்கள் கூறுகிறார்கள். அதனால் எழுந்த சிக்கலானப் பிரச்சினைகளைக் கருத்தில்கொண்டு வாசகம் மாற்றியமைக்கப்படவேண்டுமென ஒருசாரார் வற்புறுத்தி வருகிறார்கள். அவ்வாசகத்தை அவ்வாறே பின்பற்றினால் ஜனாதிபதியாக இருக்கும் ஒருவர், பதவிக்காலம் முடிவதற்கு முன்பாகவே இறந்து விடுவாரானால், துணை ஜனாதிபதியாக இருப்பவர் ஜனாதிபதியாவார். மீண்டும் அவர் தொடர்ந்தாற்போல் இருமுறை தேர்ந்தெடுக்கப்படுவாரானால் மூன்றாவது தடவைத் தேர்தலுக்குப்பிறகு நான்காண்டுகள் சாதாரணமாகப் பதவிவகிக்கலாமெனினும், எட்டாண்டுகளுக்கு மேல்ஆகிவிடும். இது அரசியலமைப்பு வாசகத்திற்கு மாறானது. சட்டத்திற்கு எதிரானது. எனவே, இங்கு எழுகின்ற பிரச்சினை அவர் எட்டாண்டுகள் ஆனதும் பதவியை விட்டு விலக வேண்டுமா, வேண்டாமா என்பதாகும். அரசியலமைப்புப்படி விலகத்தான் வேண்டும். ஆனால், இது விசித்திரமானதாக இருக்கிறது. எனவே, பதவிக்காலம் பற்றிய அரசியலமைப்பு விதியை மாற்ற வேண்டும் என்பதற்கு இப்போது அந்நாட்டில் முயற்சிகள் எடுத்துக்கொண்டு வருகிறார்கள். அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்ததிலிருந்து இருமுறை துணை ஜனாதிபதியாக இருந்தவர்கள் ஜனாதிபதி இறந்ததும் அப்பதவியை வகித்து, அடுத்தாற்போல இரண்டாவது தடவையாக, தேர்தலில் வெற்றிபெற்று, முழுப் பதவிக்காலமும் ஜனாதிபதியாக இருந்திருக்கிறார்கள். ஆனால், மூன்றும் தடவையாக அவர்கள் போட்டியிட்டபோது தோற்று விட்டார்கள். ஜனாதிபதியாக இருந்த ராக்சாஸ் 1948இல் இறந்தபோது கியூரினோ ஜனாதிபதியானார். 1957இல் மக்சாய்சாய் இறந்தபோது கார்சியா ஜனாதிபதியானார். இருவரும் இரண்டாம் முறையும் ஜனாதிபதியானார்கள். ஆனால், மூன்றாவது தடவையாக,

தேர்தலில் நின்றபோது இருவரும் தோற்றுப்போனார்கள். ஆகையால் இவ்விஷயத்தில் அரசியலமைப்பை மாற்றுவதற்கான உடனடித்தேவை ஏற்படவில்லை. ஆனால், மேற்கூறப்பட்ட இருவருமோ அல்லது ஒருவரோ அல்லது வேறு எவராவது பிற்காலத்தில் மூன்றும் தடவையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் ஏற்படக்கூடியச் சிக்கலைத் தவிர்ப்பதற்கு அரசியலமைப்பை மாற்றுவது நல்லது என்று தோன்றுகிறதென வாதிக்கப்படுகிறது.

# 4. சட்டமன்றம்

இரண்டாம் உலகப் போருக்குப்பிறகு சட்டமன்றம் மிகச் சீரியப் பணியாற்றிவருவதோடு, நிர்வாகத்தைச் சார்ந்திராமல் சுதந்திரமாகச் செயலாற்றும் தன்மையையும் பெற்று வருகிறது. கியூசான் ஜனாதிபதியாக இருந்தபோது சட்ட மன்றத்தைக் கட்டுப்படுத்தும் திறமையைப் பெற்றிருந் தாரென்றாலும் அவ்வப்போது அதனுடன் போராட்டங்களை யும் நடத்த வேண்டியிருந்தது. 1940இல் இருமன்றங்களைக் கொண்ட சட்டமன்றம் ஏற்படுத்தியபோது தேசிய மட்டத்தில் புகழ்பெற்ற தலைவர்களையும் அவர்களைத் தேர்ந் தெடுப்பதற்கான தொகுதிகளையும் ஏற்படுத்தும் பிரச்சினை களைச் சமாளிக்க வேண்டியிருந்தது. செனட் இருபத்து நான்கு உறுப்பினர்களைக் கொண்டதாக அமைக்கப்பட்டது. அவர்களின் மொத்தப் பதவிக்காலம் ஆறாண்டுகள். அவர்க களில் மூன்றிலொரு பங்கினர் இரண்டாண்டுகளுக்கொரு முறை பதவியிலிருந்து விலகவேண்டும். பிலிப்பைன் செனட்டர்களின் பதவிக்காலக்காப்பு அமெரிக்க செனட்டர் களுக்கு இருப்பதைவிடக் குறைவாகும். செனட்டராக வெற்றி பெறுவதற்கு, செனட்டர் ஒருவர் உச்சத்திலுள்ள எட்டு பேர்களில் ஒருவராக இருக்கவேண்டும் அல்லது பதினாறு பேர்களில் ஒருவராகவாவது இருக்கவேண்டும். அவ்வாறு இடம் பெறாவிட்டால் திரும்பவும் செனட்டரா வதற்குக் கட்சியினால் தேர்ந்தெடுக்கப்படக்கூடியச் சாத்தியக் கூறு பிரகாசமாக இருக்காது. கட்சியினால் தேர்வு செய்யப் பட்ட பிறகும் வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படுவதற்குக் குறைந்தது பதினொரு பெரிய தீவுகளிலும், பல சிறிய தீவுகளிலும் பிரசாரம் செய்யவேண்டுமென்பதோடு நிறைய பொருள் செலவு செய்யவேண்டும். அங்ஙனம் செய்தால்

தான் முதல் எட்டு பேர்களில் ஒருவராக வரக்கூடுமென்ப தோடு செனட்டராகவும் வரமுடியும்.

பிரதிநிதிகள் மன்றம் 104 உறுப்பினர்களைக் கொண்டது. இந்த உறுப்பினர்கள் மக்கள் தொகையடிப்படையில் மாநிலங் களிலுள்ள மாவட்ட தேர்தல்தொகுதிகளிலிருந்து தேர்ந் தெடுக்கப்படுகிறார்கள். இந்த மாவட்டத்தொகுதிகள் ஒரே மாதிரியாக இல்லாததோடு மக்கள் தொகையடிப்படையும் வேறுபடுகிறது. அதாவது மாவட்டத்தேர்தல் தொகுதிகளின் மக்கள்தொகை, எண்ணிக்கையடிப்படையில் சமமாக இல்லை. சான்றாக, பாட்டானஸ் (Batanes) தொகுதியின் மக்கள் தொகை 10,309 ஆக இருந்தபோது, ரிசாலின் முதல் மாவட்டம் 11,79,819 மக்கள்தொகையையும் இரண்டாவது மாவட்டமான காபிஸ் (Capiz) 95,990 மக்கள் தொகையையும் கொண்டதாகவிருந்தன. நீகிரோஸ் ஓரியண்டல் மாவட்டத்தின் தொகை 6,20,430 ஆகும். ரிசாலின் (Rizal) மக்கள்தொகை செபுவின் (Cebu) மக்கள்தொகையைவிட அதிகமாக இருந்தும் செபுவுக்கு ஏழுஇடங்களும், ரிசாலுக்கு இரண்டு இடங்களுமே தரப்பட்டன. இத்தகைய பொருளற்ற தொகுதிமுறையை மாற்றியமைப்பதற்கும் சட்டமன்றத்தின் அதிகபட்ச எண் ணிக்கையான 120 இடங்களையும் பூர்த்திசெய்வதன் வாயிலாக முரண்பாடான பிரதிநிதித்துவ முறையை அகற்றுவதற்கும் 1961இல் கொண்டுவரப்பட்ட மசோதாவை அரசியல் சட்ட பூர்வமானதல்லவென்று உச்சநீதிமன்றம் விலக்கிவிட்டது. பிரதிநிதிகள்மன்ற உறுப்பினர்களின் பதவிக்காலம் நான் காண்டுகளாக இருப்பதால், அவர்கள் தொகுதிமக்களோடு அடிக்கடிதொடர்பு கொண்டு, மீண்டும் தேர்தலில் வெற்றி பெறுவதற்கான வாய்ப்புகளை ஏற்படுத்திக்கொள்ள வேண்டி யிருக்கிறது. 'அதிகாரப்பூர்வமற்ற' பலர் தேர்தல்களில் போட்டியிடுவதால் பல வாக்குகள் அவர்களுக்குப்போய்விடு கின்றன. மிக அதிகமான வாக்குகளை எவர் பெறுகிறாரோ, அவரே தேர்தெடுக்கப்படுவதால் பல பிரதிநிதிகள் பெரும் பான்மையான வாக்குகளைப் பெறுவதன் மூலமாகத் தேர்ந் தெடுக்கப்படுவதில்லை.

காங்கிரசின் முறைப்படியான கூட்டத்தொடர் ஜனவரி மாதத்தில் வரும் நான்காவது திங்கள்கிழமையன்று துவங்கி 100 நாட்கள் நடைபெறுகிறது. ஒவ்வொரு மன்றமும் அதன தன் அலுவலர்களைத் தானே தேர்ந்தெடுத்துக்கொள்வதோடு, நடைமுறை சம்பந்தப்பட்ட விதிகளையும் தானே ஏற்படுத்திக்

கொள்கிறது. செனட் ஒரு தலைவரையும் (President), சிறுபான்மை பெரும்பான்மைத்தலைவர்களையும், தற்காலிகத்தலைவரொருவரையும் (President Protempore) தேர்ந்தெடுக்கிறது. பிரதிநிதிகள் மன்றம் சபாநாயகர் ஒருவரையும், சிறுபான்மை, பெரும்பான்மைத் தலைவர்களையும் தேர்ந்தெடுக்கிறது. நிகழ்ச்சி நிரலைத் தயாரிப்பதிலும், குழுக்களின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதிலும் அதிகாரமிருப்பதால் ஒவ்வொரு மன்றத்தின் தலைமை அலுவலரும் சிறந்த செல்வாக்கையும், உறுப்பினர்களைத் தன்வசப்படுத்தும் திறமையையும் பெறுகிறார். முன்பெல்லாம் எந்தக்கட்சி நிர்வாகத்தைக் கைப்பற்றியதோ அந்த கட்சி காங்கிரசில் பெரும்பான்மையைப்பெற முடிந்தது. ஜனாதிபதியும் காங்கிரஸ் தலைவர்களைக் கட்டுப்படுத்தவும், தன்னை அவர்கள் ஆதரிக்குமாறு செய்யவும் முடிந்தது. இருப்பினும் சட்டமன்றத்தலைவர்கள் ஜனாதிபதியின் திட்டங்களைப் பலஹீனப்படுத்தவும், நிராகரிக்கவும் முடிந்தது. 1945-46இல் எவ்வாறு ஆஸ்மேனுவின் திட்டங்களை ராக்சாஸ் தடை செய்ய முடிந்ததென்பதை பிறிதோரிடத்தில் நாம் கண்டோம். அதே மாதிரியான சச்சரவு தான் கியூரினோவுக்கும் சபாநாய கருக்கும் ஏற்பட்டது. 1960இல் கார்சியாவுக்கும் ரோடிரிகசுக்கும் ஏற்பட்ட தகராறும் மேற்சொன்னவைகளைப் போன்றதேயாகும். இந்த தகராறுகளில் சம்பந்தப்பட்டிருந்த ஜனாதிபதியும் சட்டமன்றத் தலைவரும் ஒரே கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

எல்லாவகையான பணமசோதாக்களும் கீழ்சபையில் அதாவது பிரதிநிதிகள் சபையில்தான் முதலில் விவாதிக்கப்படுகின்றன. அத்தகைய மசோதாக்களுக்கு செனட் திருத்தங்கள் அல்லது மாற்றங்களைக் கொண்டு வரலாம். மசோதாக்கள் காங்கிரஸ் உறுப்பினர்களால் அல்லது நிர்வாகத்தைச் சேர்ந்தவர்களால்தயாரிக்கப்படலாமெனினும்சட்டமன்றத்தில், உறுப்பினர்களால்தான் தாக்கல் செய்யப்படவேண்டும். ஆட்சித் துறையைச் சேர்ந்தவர்களுக்கு காங்கிரசில் பெரும்பான்மை பலம் இருக்குமானல், மசோதாக்கள் பெரும்பாலும் மாற்றங்கள் இல்லாமல் நிறைவேறுகின்றன. ஆனல், புதுப்புது சமூக-பொருளாதார நடவடிக்கைகளில் அரசாங்கம் ஈடுபடுகின்றபோது புதுப்புது நலக்குழுக்கள் தோன்றுவதால் ஏற்படும் சச்சரவுகள் காரணமாக சில சமயங்களில் நிர்வாகம் வலுவிழந்து காணப்படுகிறது. சட்டத்துறையின் முக்கியமான அலுவல் நிர்வாகத்துறை விழையும் அம்சங்களைக்

கொண்ட சட்ட ஆதாரத்தை ஏற்படுத்தித் தருவதாகும். அத்தகைய அம்சங்களைக் கொண்ட மசோதாக்கள் புதிய குழுக்களின் விருப்பு வெறுப்புகளையும் சமாதானம் செய்து, அரவணைத்துச் செல்லும் தன்மையனவாக இருப்பதால் மோதல்கள் அதிகமாகின்றன. இருப்பினும், பெரும்பாலான மசோதாக்கள் சிற்றூர்கள் அல்லது ஊராட்சிகளின் பெயர் மாற்றம்பற்றிய முக்கியமற்றவைகளாக இருக்கின்றன. அவைகளில் பல நிறைவேற்றப்படுவதுமுண்டு. சில சமயங்களில் குழு நிலையிலேயே மடிந்துவிடுவதுமுண்டு. சான்றாக, பிலிப்பைனின் நான்காவது காங்கிரசின் இரண்டாவது கூட்டத்தொடரில் நிறைவேற்றப்பட்ட முப்பது மசோதாக்களின் விபரம் 1959ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 21ஆம் தேதி வெளியான அரசிதழில் (Gazette) தரப்பட்டிருக்கிறது. அவைகளில் பன்னிரண்டு புதுசிற்றூர்களை (barrios) ஏற்படுத்தின. பதினேழு, பள்ளிக்கூடங்கள், நகராட்சிகள், சிற்றூர்கள், தெருக்கள், ஆகியவற்றின் பெயர்களை மாற்றியமைத்தன. ஒரு மசோதா சிற்றூரொன்றை இரண்டாகப் பிரிப்பதைப் பற்றியதாகவிருந்தது. சபை அதனுடைய 1962ஆம் ஆண்டுத்தொடரில் செபு மாநிலத்தை இரண்டாகப் பிரிக்கும் பிரேரணையை விவாதித்தது. அப்பிரேரணை செபு மாநிலத்தைச்சேர்ந்த பல சட்டமன்ற உறுப்பினர்களால், அம்மாநிலத்தைச்சேர்ந்த ஆஸ்மேனுவின் (Junior) ஆதிக்கத்தையும் ஆதரவையும் கெடுப்பதற்காகக் கொண்டு வரப்பட்டது. இவ்வாறு எல்லைகள் மாற்றியமைக்கப்படும் முறை அரசியல் அதிகாரத்தை மாற்றியமைப்பதற்காக என்று கருதப்படுகிறது. ஆனால், அத்தகைய மசோதாக்கள் ஆட்சித்துறையினர் சட்டமன்றம் நிறைவேற்றவேண்டுமென்று விரும்பும் மசோதாக்களின் பரிசீலனையையும், நிறைவேற்றத்தையும் ஒத்திவைப்பதற்காக என்பது மட்டும் தெளிவாகிறது.

மசோதாவொன்று சபையில் அறிமுகப்படுத்தப்பட்டு அதன் பெயர் நாட்காட்டியில் (Calendar) குறிக்கப்பட்டதும், முதல் வாசிப்பு (First Reading) முடிகிறது. அதன்பிறகு அம்மசோதா காங்கிரசின் குழுவினால் பரிசீலனை செய்யப்படுகிறது. குழுக்கள் மூன்று வகைப்படும். அவைகளாவன; அமெரிக்கக் காங்கிரசிலுள்ளது போன்ற நிலைக்குழுக்கள்; அவைகள் கூட்டத்தொடரின் ஆரம்ப நாட்களில் அமைக்கப்படுகின்றன. இரண்டாவது பொறுக்குக் குழுக்கள்; அவைகள் ஒவ்வொரு மன்றத்தாலும் தனித்தனியாகப் புலன் விசாரணை

செய்வதற்காக அமைக்கப்படுகின்றன. மூன்ருவதாக முழு மன்றக் குழுக்கள்; அதாவது மன்ற உறுப்பினர்கள் அனைவரும் குழுவாக அமருவது. மன்றமே குழுவாகக்கூடும்போது, மன்றத்தின் விதிகள் பின்பற்றப்படுவதில்லை. உறுப்பினர்கள் அவரவர் விருப்பப்படி விவாதத்தில் பங்கெடுத்துக் கொள்ளலாம்.

அமெரிக்காவிலுள்ளதுபோல, பிலிப்பைனில் நிலைக்குழுக்களின் பணி அவ்வளவு முக்கியமானதாக இல்லை. அதற்குக் காரணம் பலம் பொருந்திய நிர்வாகத்துறையிருப்பதும், கட்சிக்குழுக்களே சட்டசம்பந்தமான பல அம்சங்களையும் விவாதித்துவிடுவதுமாகும் என்று சொல்லப்படுகிறது. அடிக்கடி மாறிவிடுவதாலும், நெடுங்காலப் பணியடிப்படையிலான அனுபவத்திற்கு முதலிடம் தரப்படாததாலும் குழுத் தலைவர்கள் சட்டத்துறையில் செல்வாக்கில்லாமலிருக்கிருர்கள். குழுக்கள் நிர்வாகத்தினரைப்பற்றி காங்கிரஸ் உறுப்பினர்கள் கொண்டுவரும் குற்றச்சாட்டுகளை விசாரிப்பதிலும், குறைகளைத் தேடிக்கண்டுபிடிப்பதிலுமே பெரும்பாலும் ஈடுபடுகின்றன. சில குழுக்கள் இலஞ்ச ஊழல்பற்றியக் குற்றச் சாட்டுகளை ஆய்வதற்கும், தேசிய நிலையில் செல்வாக்கும், புகழும்பெற விரும்பும் செனட்டர்களுக்கு விளம்பரம் செய்யும் பணியையும் மேற்கொள்கின்றன. இதற்கு, எடுத்துக் காட்டாக, செனட்டின் 'நீல நாடாக்குழுவைக்' (Blue Ribbon Committee) கூறலாம். பணப்பங்கீட்டுக் (Appropriation) குழுக்களைப் போன்றவை அவற்றினுடைய உறுப்பினர்களுக்கு, பொதுப்பணித்திட்டங்களிலும் ஒதுக்கீடுகளிலும் முக்கியமான பொறுப்புகளைத் தந்து செல்வாக்குப்பெற உதவுகின்றன.

மசோதாவைப் பரிசிலனை செய்யும்போது குழுக்கள் கூட்டங்களை நடத்தி சாட்சிகளை விசாரிக்கின்றன. பெரும்பாலான மசோதாக்கள் குழுக்களின் பரிசிலனைக்குப் பிறகு சட்டமன்றத்திஞல் விவாதித்து நிறைவேற்றப்படுவதற்கு வருவதில்லை. ஆனுல், ஆட்சித்துறையால் அனுப்பப்படும் மசோதாக்களை குழுக்கள் மாறுதல்கள் அதிகமில்லாமல் சட்ட மன்றப் பரிசிலனைக்கு அனுப்பிவிடுகின்றன. சிலசமயங்களில் பல மசோதாக்களை ஒன்று சேர்த்து ஒரே மசோதாவாக அனுப்புவதுண்டு. வேறுசிலசமயங்களில் பரிசிலனைக்கு அனுப்பப்பட்ட மசோதாவுக்குப் பதிலாக மாற்று மசோதாவொன்றை தயாரித்தும் அனுப்புவதுண்டு. குழுக்களால்

அனுப்பப்படும் மசோதாக்கள், மன்றநாட்குறிப்பில் சேர்க்கப்பட்டதும் இரண்டாவது வாசிப்பு முடிவடைகிறது. நாட்குறிப்பில் மசோதாக்கள் பெறும் இடத்தைப் பொறுத்து அவைகள் முழுமன்றத்தால் விவாதிக்கப்பட்டு நிறைவேற்றப்படும் அல்லது மன்றக் கூட்டத்தொடர் முடியும்போது மசோதாக்களின் ஆயுளும் முடிந்துவிடும். மசோதாக்களுக்கு ஒதுக்கப்படும் இடங்கள் சட்டமன்றத்தலைவர்களால் முடிவு செய்யப்படுவதால், மன்றத்தில் பெரும்பான்மைபலம் பெற்றிருக்கும் கட்சியின் விருப்பம் மேலோங்கியிருக்குமென்றும், அதற்குத் தகுந்தபடி இடங்கள் ஒதுக்கப்படுகின்றனவென்றும் எளிதில் அறிந்து கொள்ளலாம். மசோதா விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும்போது, விவாதம் எத்தன்மையதாக இருக்க வேண்டும், குறை, நிறைகள் பற்றி எத்தனை சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படவேண்டுமென்பதையெல்லாம் சபையே முடிவுசெய்யும். அதன்பிறகு மசோதாபற்றிய பொதுவிவாதமும் மாற்றங்கள்பற்றிய பரிசீலனையும் நடைபெறுகிறது. இக்கட்டங்களைக் கடந்து இறுதி வடிவம் பெறும் மசோதா அச்சடிக்கப்பட்டு, நிறைவேற்றப் படுவதற்கென்று தீர்மானிக்கப்பட்டுள்ள நாளுக்குக்குறைந்தது மூன்று நாட்களுக்கு முன்பு அதன் படிகள் உறுப்பினர்கள் கைக்குக்கிடைக்குமாறு செய்யப்படுகிறது. குறிப்பிடப்பட்டுள்ள நாளன்று மசோதாவின் பெயர் சபையில் உரைக்கப்பட்டு அதன்மேல் வாக்கெடுக்கப்படுகிறது.

ஒரு சபையில் அம்மசோதா நிறைவேற்றப்படுமானல் அதன்பிறகு அது பிறிதொரு சபைக்கு அனுப்பப்படுகிறது. அங்கு மசோதா மேலும் மாற்றப்படலாம். மாற்றங்களோடு கூடிய அது அம்மாற்றங்கள் வேண்டுமா அல்லது வேண்டாமா என்பது பற்றிய கருத்து வேறுபாடுகள் தீர்க்கப்படும்வரை சுற்றிச்சுற்றி வரும். இந்த நடைமுறையைத் தளர்த்தி எளிதாக்கும் நோக்கத்தோடு கூட்டு மாநாட்டுக்குழு முறை (Joint Conference Committee System) பெரும்பாலும் பின்பற்றப்படுகிறது. இருசபைகளாலும் அம்மசோதா நிறைவேற்றப்படுகிறபோது அது ஜனதிபதியின் இசைவுக்கு அனுப்பப்படுகிறது. அவர் அதை ஏற்கலாம் அல்லது மறுப்பாணை அதிகாரத்தைப் பயன்படுத்தி நிராகரிக்கலாம். ஜனதிபதியாலும் ஏற்கப்பட்டால் குடியரசின் எத்தனையாவது சட்டமென்பதைக் குறிக்கும் வகையில் அதற்கொரு எண் கொடுக்கப்பட்டு அரசிதழில் அச்சிட்டு வெளியிடப்பட்டு, பதினைந்து

நாட்களுக்குப்பிறகு நடைமுறைக்கு வருகிறது. மேலே விவரிக்கப்பட்டுள்ள சட்ட ஆக்கம் பற்றிய முறை தெளிவேற் படுத்துவதற்கு மாருக தெளிவற்ற தன்மையதாக இருக்கிற தென்பது ஒருசிலரின் கருத்தாகும். ஏனெனில் சட்டமன்றம், சொற்பொழிவுகள், குற்றச்சாட்டுகள், மறுப்புகள், சில சமயங்களில் மற்போர்களின் தாயகமாக இருக்கிறதே தவிர, சட்ட ஆக்கம் எந்த நிலையில் இருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்வதற்கு உதவுவதாக இல்லை. பெருமளவிலான வேலை ஆண்டின் இறுதியில் கூடும் கூட்டத்தொடர்களில்தான் நடை பெறுகிறது. நூற்றுக்கணக்கான மசோதாக்கள் அவசரம் அவசரமாக அக்கூட்டங்களில்தான் நிறைவேற்றப்படுகின்றன. இதில் வேடிக்கையானதோர் அம்சம், வேலைநேர முடிவைக் காட்டும் கடிகாரத்தின் முட்கள் மசோதாக்கள் நிறைவேற்றப் படும்வரை நிறுத்திவைக்கப்படுவதாகும். நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் சம்பந்தப்பட்ட கருத்து வேறுபாடுகளும் இதர அம்சங்களும் சட்டமன்றத்திலோ அல்லது சட்டமன்றக் குழுக் களிலோ விவாதிக்கப்பட்டு, தீர்க்கப்படாமல் அவைகளுக்கு வெளியே செனட் தலைவர் அலுவலகத்திலோ அல்லது சபாநாயகர் அலுவலகத்திலோ கட்சியிலுள்ள பல குழுக் களாலும் பரிசீலனை செய்யப்பட்டு முடிவெடுக்கப்படுகின்றன. மசோதாக்களுக்கு ஆதரவைத் தேடுவதற்கு உதவி செய்பவை நிர்வாகத்துறை அல்லது ஜனாதிபதி உறுப்பினர்களுக்கு அல்லது கட்சித்தலைவர்களுக்கு உத்தியோகம் அல்லது பொருளாதாரத்துறையில் காட்டும் பரிவும், பொதுப்பணி நிதியிலிருந்து அளிக்கப்படும் உதவிகளுமாகுமெனச் சொல்லப் படுகிறது.

இங்கு நாம் எவ்வாறு சட்டபூர்வமான அதிகார நிறுவனம் சட்டமன்றத்தின் பணியைக் கட்டுப்படுத்துகிறதென்பதை எடுத்துக்காட்ட முயற்சி செய்துள்ளோம். நிர்வாகத்துறை சட்டபூர்வமான அதிகாரத்தைப் பெற்றிருப்பதனுலும், அரசி யலில் செல்வாக்குடையதாக இருப்பதனுலும் தன்னுடைய அரசியல் செல்வாக்கைக் காப்பாற்றிக்கொள்வதற்காக சட்ட மன்ற உறுப்பினர் ஜனாதிபதியிடமுள்ள பொருளாதார வசதி களைத் தொடர்ந்துபெறவேண்டியவராக இருக்கிருர். அங்ங னமே, சட்டமன்ற உறுப்பினர்களின் ஆதரவைப் பெறுவதற் காக ஜனாதிபதியும், பதவியினுல் கிடைக்கும் அதிகாரத்தையும் வசதிகளையுங்கொண்டு அவர்களின் ஆதரவைத் தேடிக் கொள்ள வேண்டியவராக இருக்கிருர். எனவே, கொள்கை

அல்லது திட்டங்களைப்பற்றி அவர்கள் அதிகமாகக் கவலைப் படுவது கிடையாது.

கொள்கைபற்றிய பிரச்சினைகளில் சட்டமன்றம் முன் பெல்லாம் பழமைவாதப்போக்குடையதாக இருந்தது. நிலச்சீர்திருத்தம், தொழிலாளர் சம்பந்தப்பட்ட சட்டங்களை சட்டமன்றங்கள் அடியோடு எதிர்த்தன அல்லது தீவிரமான மாற்றங்களைக் கொண்டுவந்து அவைகளின் நோக்கங்கள் நிறைவேருமல் செய்திருக்கின்றன. தொழிலாளர்பற்றிய பெரிய சட்டங்கள் அமெரிக்க வற்புறுத்தலாலும், ஹக் இயக்கத்தாலெழுந்த பயத்தாலும் நிறைவேற்றப்பட்டன வென்பது இங்கு அறியத்தக்கதாகும். இராணுவ அபாயம் அகன்றதும் சட்டமன்றம் பழையமாதிரி நடக்க ஆரம்பித்தது. ஆனால், தொழிற்குழுக்கள் வற்புறுத்தலைத் தட்டமுடியாததால் இப்போது பழமைவாதங்குறைந்து மாறுதல் ஏற்றுக் கொள்ளப்பட்டு வருகிறது. சட்டமன்ற நடவடிக்கைகள் என்னவென்று தெரியாததாலோ அல்லது அதில் ஆர்வமேற் படுமுறையில் அதன் நடவடிக்கைகள் இல்லாததாலோ பொதுமக்கள் இத்துறையில் போதுமான அக்கறை இல்லா திருக்கிறார்கள். சான்றாக, மக்சாய்சாய் ஜனாதிபதியாக இருந்தபோது வேளாண்மைச் சீர்திருத்தம் சம்பந்தப்பட்ட பலசட்டங்கள் நிறைவேற்றப்பட்டபோதும், பொதுமக்கள் அவைகளை அறிந்திருக்கவில்லை அல்லது அக்கறை காட்ட வில்லை என்பதைக்கூறலாம்.

# 5. நீதித்துறை

சமூகம் அரசியல் சார்புடையதாக இருப்பதால் நீதியும் அரசியல் தன்மை வாய்ந்ததாக இருக்கவேண்டியிருக்கும். பிலிப்பைனிலும் இதர நாடுகளைப்போல நீதித்துறையில் இலஞ்சஊழலும், பட்சபாதத் தன்மையும் காணப்படுகிறது ஆனால், மிக முக்கியமான அம்சங்கள், உயர் மட்டத்தி லுள்ள நீதி மன்றங்களின் அந்தஸ்து எத்தகையதென்பதும் சட்டத்தின்மேல் மக்களுக்குள்ள ஆர்வமும், அதை மதித்து நடக்குந்தன்மையும் எந்த அளவிற்கு நீதித்துறைக்கு மதிப்பைத் தேடித் தருகின்றன என்பவையாகும். ஆனால், பிலிப்பைனியர்களின் பொதுவான கருத்து சட்டங்கள் மனிதர்களுக்கு ஈடாகமாட்டா என்பதேயாகும். தனியொரு தலைவன்தான் நீதியை நிலைநாட்டமுடியுமேயல்லாது, சட்ட மல்ல. பிலிப்பைன் நீதியியல் நீண்ட வரலாற்றுச் சிறப்புடைய தென்றாலும், பெரும்பாலான குடிமக்களுக்கு அது பொரு ளற்றதாகத் தோன்றுகிறதென்பதை அறிதல் அவசியமாகும்.

ஸ்பானியர்கள் ஆதிக்கம் செலுத்திய காலத்திலேயே, நகராட்சி, மாநில, தேசியமட்டங்களில் நீதிமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. மக்கின்லேயைத் (Mckinley) தலைவராகக் கொண்ட பிலிப்பைன் கழகத்தின் அறிவுரைகளுக்கேற்ப அமெரிக்கமுறை அடிப்படையில் நீதிமன்றங்கள் அமைக்கப் பட்டன. ஆகையால், பிலிப்பைனுக்கு என அரசியலமைப்பு எழுதப்படுவதற்கு முன்பே அங்கு உச்சநீதிமன்றமொன்றும், மாநிலத் தலைநகரங்களில் பல முதல் நிலை நீதிமன்றங்களும் (Courts of First Instance) இருந்தன. நகரங்களில் அமைதிகாண நீதிபதிகளும் (Justices of the Peace) இருந்தனர். இதன் விளைவாக, பிலிப்பைன் நீதியியல் வளமிக்கதாகவும், பல முன் வழக்கங்களையுமுடையதாகவும் இருக்கிறது.

பிலிப்பைன் உச்சநீதிமன்றம் ஆரம்பத்தில் அமெரிக்க செனட்டின் அனுமதியுடன் அமெரிக்க ஜனாதிபதியால் நியமிக்கப்பட்டது. கீழ்மட்ட நீதிமன்றங்களின் நீதிபதிகள், பிலிப்பைன் செனட்டின் அனுமதியின்பேரில் கவர்னர்-ஜெனரலால் நியமிக்கப்பட்டனர். உச்சநீதிமன்றத்திலிருந்த பெரும்பாலான நீதிபதிகள் அமெரிக்கர்களேயென்றாலும், ஆரம்பம் முதலே பிலிப்பைனைச்சேர்ந்தவர்களும் அதில் நீதிபதிகளாக இருந்து வந்திருக்கிறார்கள். கீழ்நிலை நீதிமன்ற நீதிபதிகளனைவரும் பிலிப்பைனியர்களாக இருந்து வந்திருக் கிறார்கள். அமெரிக்க உச்சநீதிமன்றம் பிலிப்பைன் உச்சநீதி மன்றத்தால் பைசல் செய்யப்பட்ட சில வழக்குகளில் மேல் முறையீட்டதிகார எல்லையைப் பெற்றிருந்தது.

அமெரிக்க நிர்வாகத்தால் ஏற்படுத்தப்பட்ட உச்சநீதி மன்றமும் இதர நீதிமன்றங்களும், பிறகு எழுதி ஏற்றுக் கொள்ளப்பட்ட அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டு, இப் போது பிலிப்பைன் நீதித்துறையாகத் திகழ்கிறது. எல்லா நீதிபதிகளும் ஜனாதிபதியால் நியமனக் கழகத்தின் பரிந்துரை யடிப்படையில் நியமிக்கப்பட்டு நன்னடத்தையிருக்கும் வரை யிலும், எழுபது வயதையடையும்வரை பதவியிலிருக்கிறார்கள். ஓய்வுபெறும் வயதையடைவதற்கு முன்பே நோய்வாய்ப்பட்டு, பணியாற்ற முடியாமற்போனாலும் பதவி விலக வேண்டும். உச்சநீதிமன்றம் நீங்கலாக இதர எல்லா நீதிமன்றங்களின் அதிகாரங்களும் சட்டமன்றத்தால் வரையறை செய்யப் படுகின்றன. உச்சநீதிமன்றத்தின் அதிகார எல்லை அரசிய லமைப்பில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

உச்சநீதிமன்றத்தின் நீதிப்புனராய்வு அதிகாரம் அமெரிக்க ஆட்சி காலத்திலேயே ஏற்றுக்கொள்ளப்பட்டு இன்றும் நடை முறையிலிருந்து வருவதாகும். இந்த உரிமை அரசிய லமைப்பால் அதற்கு உத்திரவாதமளிக்கப்பட்டு, 1948ஆம் ஆண்டு நீதித்துறைச்சட்டத்தால் விளக்கப்பட்டிருக்கிறது. திருச்சபைக்கும் வட்டார ஆட்சிகள், தேசிய அரசுகளுக்கு மிடையே தோன்றும் சச்சரவுகளிலும், மருத்துவமனைகள், கான்வெண்டுகளுக்காகப் பயன்படுத்தப்படும் நிலங்கள் உரிமை பற்றியெழும் வழக்குகளிலும் உச்சநீதிமன்றம் மூல அதிகார எல்லை உடையதாக இருப்பதோடன்றி முதல் நிலை நீதிமன்றங்களோடு பொது அதிகார எல்லையையும் பெற்றிருக்கிறது.

ஐயத்திற்கிடமில்லாதவாறு உச்சநீதிமன்றம் பிலிப்பைனில் உயரிய இடத்தைப் பெற்றிருக்கிறது. அதன் நீதிபதிகள் இதர உயர் அதிகாரிகளுக்குச் சமமான கௌரவம் வழங்கப்பட்டிருப்பதோடு, அந்த அளவு மரியாதையும் அளிக்கப்படுகிறார்கள். கூடுமானவரையிலும் உச்சநீதிமன்றமும், இதர நீதிமன்றங்களும் அரசியலால் உந்தப்படாமல் சுதந்திரமாகச் செயலாற்றி வருகின்றன எனலாம். ஆனால், அவைகள், தனியார் உடைமைகளைக் காப்பாற்றும் பொறுப்பையும், சமூகத்தில் செல்வாக்குடையவர்களது சலுகைகளையும் நிலைநாட்டுவதில் அக்கறையையுமுடையவைகளாக இருக்கின்றன என்ற கருத்து நிலவுகிறது.

வழக்குகளின் எண்ணிக்கை பிலிப்பைனில் அதிகமாக இருக்கின்றன. அவைகளைப் பைசல் செய்வதில் நீதிமன்றங்கள் விரைவாகப் பணியாற்ற முடியவில்லையென்பதோடு, பைசல் செய்வதற்காக விதிக்கப்பட்டிருக்கும் முறையும் விரும்பத்தக்கதாக இல்லை. நீதிமன்றத்தில் வழக்குத் தொடருவதொன்றினாலேயே அந்தஸ்த்தும், முக்கியத்துவமும் ஏற்படுவதால் சாதாரண விஷயங்களுக்குக்கூட பலரும் நீதிமன்றத் தீர்ப்பை நாடுகின்றனர். இதை விரிவாக்கும் தன்மையிலிருக்கிறது அங்குள்ள வழக்கறிஞர்களின் எண்ணிக்கை.

வேளாண்மைத்துறைச் சீர்திருத்தங்களுக்காகவும், தொழில் துறையில் உறவுகளைச் சீர்படுத்துவதற்காகவும் தனி நீதிமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டிருப்பினும், அவைகளும் திறமையாகச் செயலாற்றுவதில்லை. வழக்குகள் அந்நீதிமன்றங்களால் தீர்க்கப்படுவதற்கு பல ஆண்டுகள் ஆவதால் வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள் நீதிமன்றங்களுக்கு வெளியிலேயே தங்களுடைய தகராறுகளைத் தீர்த்துக்கொள்கிறார்கள். நீதிமன்றங்கள் வழக்குகளைப் பைசல் செய்யாமல் அவ்வப்போது தள்ளிப்போடுவதால் ஏற்படும் காலதாமதத்தைப் பயன்படுத்திக்கொண்டு, உடனடியாகத் தீர்வு வேண்டாதவர்களும் ஆனால், அதேசமயத்தில் சண்டை போட்டுக்கொள்வதை தள்ளிவைக்க விரும்புபவர்களும், வழக்குத் தொடரும் வழக்கத்தை மேற்கொள்கிறார்கள். மேலும் வழக்குகளைத் தொடர்ந்து நீதிமன்றங்களில் நடத்துவதற்காகும் செலவு மிதமிஞ்சியிருப்பதால் சிலருக்கு அது நன்மையையும், பலருக்குத் தீமையையும் தருகிறது. சக்தியில்லாதவர்கள் வழக்கைத் தொடர்ந்து நடத்த வசதியில்லாததால் சமரசம் செய்து

கொள்ள வேண்டியவர்களாகிறார்கள். தன் கௌரவம், குடும்ப கௌரவம் ஆகியவை பாதிக்கப்படும் நிகழ்ச்சிகள் ஏற்படும்போது பலர் பெயரைக் காப்பாற்றிக்கொள்வதற்காக நீதிமன்றங்களில் வழக்குத் தொடர்கிறார்கள்.

பிலிப்பைனில் உச்சநீதிமன்றம் சிறந்த நீதிமன்றமாகக் கருதப்பட்டு மதிக்கப்படுகிறது. சட்டபூர்வமான நிலையங்களுக்கும் தனிப்பட்டநிறுவனங்களுக்குமிடையிலோ அல்லது நிர்வாகத்துறைக்கும் சட்டத்துறைக்குமிடையிலோ வழக்குகள் ஏற்படுமானால் அவை அதன் பரிசிலனைக்குக்கொண்டு வரப்படுகின்றன. அரசியலமைப்புச்சட்டம் சம்பந்தப்பட்ட சட்ட நுணுக்கப் பிரச்சினைகளும் உச்சநீதிமன்றத்தால் கவனிக்கப்படுகின்றன. வழக்குரைஞர்களில் பெரும்பாலோர் அரசியல்வாதிகளாக இருப்பதால், அவர்கள் ஆதரிக்கும் அல்லது எதிர்க்கும் சட்டங்கள் அல்லது நிர்வாக ஆணைகள் அரசியல் சட்ட சம்பந்தமானவையா என்பதை முடிவுசெய்வதற்கு வழக்குகள் தொடர்வது சாதாரணமானதாக இருக்கிறது.

நீதிமன்றத்தின் தீர்ப்பு எத்தகையதாக இருந்தாலும் அதை ஏற்று, அதன்படி நடப்பது அந்நாட்டில் அரசியல்வாதிகளிடையிலும், பொதுமக்களிடத்திலும் காணப்படும் பண்பென்று சொல்லலாம். சான்றாக, அதற்கு முன்பிருந்த நிர்வாகம் நள்ளிரவில் (கடைசிநாளன்று) செய்த பல நியமனங்களை மக்பகல் தலைமையிலான புது நிர்வாகம் ஏற்றுக்கொள்ள மறுத்து சச்சரவிட்டு வந்தது. அச்சமயத்தில் உச்சநீதிமன்றம் மக்பகல் செய்த பலநடவடிக்கைகள் சரியானவையல்லவென்று தீர்ப்பளித்தது. அதைத்தொடர்ந்து மக்பகல் பொதுவாக உச்சநீதிமன்றத்தையும் குறிப்பாக தனிப்பட்டவொரு நீதிபதியையும் குறைகூறித்தாக்கினாரென்றாலும், நீதிமன்றத்தின் தீர்ப்பைப் புறக்கணித்து நடக்கவில்லையென்பதைக் குறிப்பிடலாம்.

பிலிப்பைன் நீதிமன்றங்களைப்பற்றிய முக்கியமான அம்சம் அவைகள் அமெரிக்க உச்சநீதிமன்றத்தைப்போல 'சட்டமியற்றுவதில்லை' என்பதாகும். உயர்மட்டங்களிலுள்ள நீதிமன்றங்கள் அரசியல் சக்திகளால் உந்தப்படாமல் சட்ட அடிப்படையில் நீதிவழங்குகின்றன. எனவே; அவைகளின் தீர்ப்புகளின் தரமும் உயர்வும் போற்றப்படுகின்றன.

# 6. வட்டார அரசாங்கம்

பிலிப்பைனில் அரசாங்கம் ஒற்றையாட்சி முறையைச் சேர்ந்தது. அதனால் வட்டார அரசாங்கங்கள் மணிலாவைத் தலைநகராகக்கொண்டு செயல்படும் தேசிய அரசாங்கத்தைச் சார்ந்து இயங்குகின்றன. இவ்வாறு அவ்வரசாங்கங்கள் தன்னாட்சி அதிகாரமில்லாதிருப்பதால் மதிப்பற்றவைகளாக இருக்கின்றன. அவ்வரசாங்கங்களின் ஆட்சிப்பகுதியில் வாழும், அரசியலில் ஆர்வமும், முன்னணிக்கு வரவேண்டுமென்னும் நோக்கமுமுடைய இளைஞர்கள் மணிலாவுக்குச் செல்கிறார்கள். அதனால், வட்டாரங்களிலுள்ள சிறந்த தலைவர்களின் சேவை வட்டாரங்களுக்குக் கிடைக்காமல் போய்விடுகிறது. இதனால் தன்னாட்சி அரசாங்கத்தில் ஏற்படும் பிரச்சினைகளைச் சமாளிப்பதில் ஏற்படக்கூடிய நேரிடை அனுபவம் பெரும்பான்மையான மக்களுக்குக் கிடைக்காமல் போய்விடுகிறது. இதை அரசியல் முன்னேற்றத்திற்குத் தடையாகவும், நாட்டுப்புறமக்களிடையே வெறுப்பையும், சார்ந்திருக்கும் தன்மையையும் வளர்க்கும் போக்காகவும் இளந்தலைமுறையைச்சேர்ந்த தலைவர்கள் கருதுகிறார்கள். உண்மையான அதிகாரங்களோடு கூடிய வட்டார அரசாங்கங்கள் ஏற்படுத்தப்பட்டு, அவைகளில் மக்கள் நேரிடையாகப் பங்குகொள்ளும் வாய்ப்பு அளிக்கப்படுமானால், வேண்டுவோருக்கும், ஆதரவாளர்களும் பரிந்து நன்மையைச் செய்யுந் தன்மையையுடைய அரசாங்கத்தையும், நோக்குகளையும் மாற்றப் பெரிதும் உதவியாக இருக்குமென்றும் கருதுகிறார்கள். இத்தகைய அரசியல்வாதிகளில் பலர் மக்சாய் சாய் நிர்வாகத்தில் முக்கியப்பங்கேற்றவர்களும், அவர், வட்டாரத் தன்னாட்சியை அடையவேண்டிய முக்கியமான கொள்கையாக ஏற்றுக்கொள்ள ஊக்கந்தந்தவர்களுமாவார்கள். இப் போராட்டத்தின்விளைவாக, 1950ஆம் ஆண்டுக்குப்பிறகு,

காங்கிரஸ் உறுப்பினர்களின் எதிர்ப்புக்கிடையிலும் இக்கொள்கை ஏற்கப்பட்டு, இரண்டு வட்டாரத் தன்னாட்சி மசோதாக்கள் நிறைவேற்றப்பட்டன. இவைகளிலொன்று மாநில, நகராட்சிகளின் அதிகாரத்தை அதிகரித்து, பரந்த பொருளாதாரச் சுதந்திரத்தையும் வழங்கியது. பிறிதொன்று சிற்றூர்களுக்கு வரையறை செய்யப்பட்ட சுயாட்சியை அளித்தது. இச்சட்டங்கள் பெருத்த மாறுதல்களை ஏற்படுத்தக் கூடியவைகளாக இல்லாவிட்டாலும் அரசியல் முன்னேற்றத்தில் புதுத்திருப்பத்தைக் குறிப்பிட்டு காட்டுபவைகளாக அமைந்தன.

வட்டார அரசாங்கத்தின் அதிகாரங்கள் அரசியலமைப்பால் அல்லது சட்டத்துறையால் வழங்கப்படுகின்றன. மாநிலங்கள், நகராட்சிகள், தனித்தன்மை வாய்ந்த நகரங்கள் (Chartered Cities), சிற்றூர்கள்யாவும் (Barrios) சட்டத்தால் உருவாக்கப்படுகின்றன.

'சட்டப்படி மாநிலங்களும், நகரங்களும், தனித்தன்மை வாய்ந்த நகரங்களும் இருவகைத் தன்மையுடையவைகளாக இருக்கின்றன. ஒரு பக்கம் அவைகள் தேசிய அரசாங்கத்தின் பிரதிநிதிகளாக இருந்து கலப்பற்ற அரசாங்கப் பணிகளைச் செய்கின்றன. மறுபக்கம், அவைகள் மக்களுடைய பொதுத்தேவைகளைப் பெற்றுத்தருவதற்காக அமைக்கப்படும் தனிநிறுவனங்களின் எதிரொலி போன்ற அமைப்புகளாக இருக்கின்றன' என்று ஜோஸ் அருகோ என்பவர் கூறுகிறார்.[1]

மாநிலங்கள் நிரந்தரமான தனி அல்லது பிலிப்பைனிய கிறிஸ்துவர்களை முக்கியமாகக் கொண்டவை, கிறிஸ்துவர்கள் அல்லாதவர்களை முக்கியமாகக் கொண்டவையென்று வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன. நிரந்தர மாநிலங்கள், நான்கு ஆண்டு பதவிக்காலத்திற்கு தேர்ந்தெடுக்கப்படும் கவர்னர்களாலும், மூன்று உறுப்பினர்களைக் கொண்ட மாநிலக் கழகங்களாலும் நிர்வகிக்கப்படுகின்றன. கவர்னர் பதவிக்கான தேர்தல்களில் கிடைக்கும் வெற்றி மூன்று முக்கியமான கூறுகளின் கலப்பைப் பொறுத்ததாகும். இந்த மூன்றிலொன்று பிரதானமான இடத்தைப் பெறவும்கூடும். அவை

---

[1] Jose M. Aruego, Philippine Government in Action (Manila : University Publishing Company INc, 1954) PP 604-605

களாவன : வாக்காளர்களிடையே தனிப்பட்ட முறையிலுள்ள செல்வாக்கு, குடும்பத்தின் செல்வாக்கு, கட்சி ஆதரவு. கட்சியாதரவென்பது தேசிய அரசாங்கத்தினுல் பல நிதிகளி லிருந்து அளிக்கப்படும் உதவியென்பதை விவரிக்கத் தேவை யில்லை. வேட்பாளர்கள் உண்மையாகவே அவரவர்கள் வாழுகின்ற பகுதிகளைச் சேர்ந்தவர்களாகவும் செல்வாக்குடை யவர்களாவும் இருக்கலாம். நல்ல குடும்பங்களைச் சேர்ந்தவர் களாக இருக்கலாம். அல்லது தேசிய மட்டத்திலுள்ள கட்சி யின் நிர்வாகக்குழுவினுல் பொறுக்கியெடுக்கப்பட்டு மாநிலங் களின் மீது திணிக்கப்பட்டவர்களாக இருக்கலாம்.

மாநில நிதிகளிலிருந்து ஊதியம் வழங்கப்படும் இதர அலுவலர்களும் பணியாளர்களும் கவர்னரால் நியமிக்கப்படு கிறுர்கள். அவருடைய மாநிலத்திலுள்ள நகராட்சி அரசாங் கங்களின் ஊழியர்களை நியமிப்பதிலும், மேற்பார்வை செய் வதிலும் வரம்பிற்குட்பட்ட அதிகாரத்தை அவர் பெற்றிருக் கிறுர். அதிகாரத்தைப் பன்முகப்படுத்துவதையும், வட்டார அரசாங்கங்களின் வரிவிதிக்கும் அதிகாரங்களை அதிகரிப்பதை யும், ஊராட்சிக் கழகங்களை ஏற்படுத்துவதையும் நோக்கங் களாகக் கொண்ட சட்டமியற்றப்பட்டிருக்கிறது. எனினும் தேசிய அரசாங்கத்தின் செல்வாக்கு இன்னும் மேலோங்கி யிருக்கிறது. அதற்கு, பெரும்பாலான முக்கிய மாநில அலுவலர்களான, பொறியியல் வல்லுனர், ஆவணப் பதிவாளர், சுகாதார அலுவலர்கள், பள்ளிக்கூட மேற் பார்வையாளர்கள் போன்ற பலரும் மணிலா அரசாங்கத்தால் நியமிக்கப்படுவதைக் காரணமாகக் கூறலாம். இவ்வலுவலர் கள் தேசிய அரசாங்கத்தின் நேரடி மேற்பார்வையில் பணியாற்றுகிறுர்கள். எனவே, கவர்னரின் நிலைமை, மக்களிடத்தில் வாக்குகளைப் பெறுவதற்கு அவருக்குள்ள செல்வாக்கையும், அந்த அடிப்படையில் தேசிய அரசாங் கத்தின் நிர்வாக நிலையங்களுடனும், அரசியல்வாதிகளுடனும் பேரம் பேசுவதற்கு இருக்கும் திறமையைப் பொறுத்ததாகும். தன்னுடைய மாநில பதவியைத் தக்கவைத்துக் கொள்வதற்கு கவர்னர் தேசிய மட்டத்திலுள்ள அரசியல்வாதிகளிடம் தன் செல்வாக்கை வளர்த்துக் கொள்ள வேண்டியிருப்பதோடு செனட்டர்களுடனும், பிரதிநிதிகளுடனும் கூட்டுச்சேர வேண்டியிருக்கிறது. தன்னுடைய பகுதியில் வாக்குகளைப் பெறுவதற்குத் தனக்கு இருக்கும் சக்தியைக் கொண்டு அவர் களிடமிருந்து தேர்தலுக்குத் தேவைப்படும் பொருளுதவியை யும் பெறவேண்டியிருக்கிறது.

மாநில அரசியல் என்பது தேசிய அரசியல்வாதிகள் யாராவது ஒருவரால் ஆதரிக்கப்பட்ட, முன்னுக்கு வர வேண்டும் என்பதில் ஆர்வமுடைய வட்டாரப் பிரமுகர்களுக் கிடையே, வெளிப்படையாகவும் தொடர்ந்தாற்போலும் நடை பெறும் போராட்டமாகும். தேசிய அரசியல் சச்சரவுகள், மாநில மட்டத்தில் செல்வாக்குடைய பிரமுகர்களிடையிலும் ஆதரவு அடிப்படையிலும் நடைபெறுகின்றன. பொதுப் பணித்துறைகளுக்கு வேலை செய்வதற்கு வேண்டிய ஆட்களைத் தேடுவது, மணிலாவுக்காக, அதன் கீழ்ப்பணியாற்றும் பொறியியல் வல்லுநரின் பணியாகும். மத்திய அரசாங்கத்தின் கட்டளைகளுக்கேற்ப அவர் வேலைகளைப் பகிர்ந்தளிக்கிறார். குறுகியகாலத் திறமை, தேவையில்லாத வேலைகள் தேர்தல்களைப் பொறுத்தவரையிலும் முக்கியமானவை. அவ் வேலைகளுக்கு ஆட்களைச் சேர்த்து அமர்த்தும் பொறுப்பை கவர்னர் மேயர்களுக்கு வழங்குகிறார். இது தேர்தல் காலங் களில் மேயர்களுடைய உதவி, செல்வாக்கைக்கொண்டு வாக்குகளைப்பெற்று வெற்றி பெறுவதற்கான சாதனமாகப் பொதுவாகக் கருதப்படுகிறது. கவர்னர்களாக இருப்பவர்கள், இத்தகைய சூழ்நிலைகளில், தாங்கள் மாற்றுக் கட்சியி லிருந்தால், அதனின்றும் விலகி, எந்தக்கட்சியில் வெற்றி பெரும் வாய்ப்பிருக்கிறதோ அந்தக் கட்சியில் சேர்ந்து கொள்கிறார்கள். மாநிலமட்டத்திலுள்ள அரசியல்வாதிகள் தேசியமட்டத்திலுள்ள தலைவர்களின் ஆதரவில்லாமல் செல்வாக்கு பெறமுடியாது. ஏனெனில், தேசிய மட்டத்தில் என்னென்ன லாபம் தரும்பணிகள் இருக்கின்றனவோ, அவை களில் முடிந்தவற்றையெல்லாம் மாநிலத்திற்குக் கவர்னர் பெற்றுத்தரவேண்டியது அவசியமாகிறது. இவ்வாறு, மாநில அரசியலென்பது, பதவிக்கும் பொருளுக்கும் ஆசைப் படும் வட்டாரத் தலைவர்களிடையிலான பூசல்கள் என்ற தன்மைக்குக் குறைந்துவிட்டிருக்கிறது. மாநிலமட்டத்தில் செலுத்தப்படுவதற்குள்ள அதிகாரம் குறைவாக இருப்பதால், அம்மட்டத்திலுள்ள அரசியல் தன்மையுடைய பதவிகளில் இருப்பவர்கள், ஒன்று முன்னுக்கு வரவேண்டுமென்னும் நோக்கமுடையவர்களாக இருக்கவேண்டும் அல்லது தேசிய மட்டத்திலுள்ள தலைவர்களின் கையாட்களாக இருந்து உதவி செய்பவர்களாக இருக்க வேண்டும்.

அடுத்த மட்டத்திலுள்ள அரசாங்கம் நகராட்சியாகும். நகராட்சி, அமெரிக்காவிலுள்ள கவுண்டிக்குச் (County) சமமானது. ஒவ்வொரு நகராட்சியிலும் ஒரு மேயரும், ஒரு

துணைமேயரும், கவுன்சிலர்களும் இருக்கிறார்கள். இவர்கள் வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். நகராட்சியின் கருவூலக் காப்பாளர் மாநில கருவூலக் காப்பாளரால் நியமிக்கப்படுகிறார். இதர அலுவலர்களான, தலைமைக் காவலர் (Chief of Police), அமைதிக்கான நீதிபதி, சுகாதார அலுவலர் ஆகியோர் ஜனாதிபதியால் நியமிக்கப்படுகின்றனர்.

நகரம், பல சிற்றூர்களாகப் (வார்டுகள்) பிரிக்கப்பட்டிருக்கிறது. நகரமன்ற உறுப்பினர் ஒவ்வொருவரும் பல வார்டுகளை நேரிடையாக மேற்பார்வை செய்கின்றனர். 1960ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி சிற்றூர் தன்னாட்சிச்சட்டம் (Barrio Autonomy Act) நடைமுறைக்கு வருவதற்கு முன்பு, ஒவ்வொரு சிற்றூரிலும் அரசாங்கத்தின் பிரதிநிதியாகப் பணியாற்றுவதற்கு ஒரு சிற்றூர் அலுவலரை (barrio lieutenant) நகரமன்ற உறுப்பினர் நியமிப்பார். மேற்சொல்லப்பட்ட புதுச்சட்டம் வருவதற்கு முன்பு நகரமன்றக் கூட்டங்கள் தான், பிரதிநிதித்துவ அரசாங்கத் துறையில் பெரும்பாலான பிலிப்பைனியர்களுக்குக் கிடைத்த அனுபவமாகும். அக்கூட்டங்களுக்கு நிறையபேர் வந்து கலந்து கொண்டனர். அக்கூட்டங்களில், சம்பந்தப்பட்ட பகுதிக்குத் தொடர்புடைய விஷயங்கள் விவாதிக்கப்படும்போது, மேயர்களுக்கும், மன்ற உறுப்பினர்களுக்குமிடையே பல சுவையான வாக்குவாதங்கள் நடைபெற்றன. மன்றத்தின் சட்டங்கள் அதன் முடிவுகளாக அல்லது ஆணைகளாக பதிவு செய்யப்பட்டு நடைமுறைபடுத்தப்பட்டன. மன்றத்திற்குத் தேவையான நிதிகள் தேசிய அரசாங்கத்தினால் வழங்கப்பட்ட மான்யங்கள் மூலமாகவும் அதிகாரம் வழங்கப்பட்ட துறைகளில் வசூல் செய்யப்பட்ட வரித்தொகைகள் மூலமாகவும் கிடைத்தன.

புதிய சிற்றூர் தன்னாட்சிச் சட்டத்தின் முக்கிய நோக்கம் பிலிப்பைனியர்களுக்குத் தங்களைத் தாங்களே ஆட்சி செய்து கொள்வதில் பயிற்சி அளிப்பதும், தாங்களே தேவையானவற்றைப் பெறுவதற்கு ஊக்கமளிப்பதும், தேசிய அரசாங்கத்தைச் சார்ந்திருக்கும் போக்கைத் தவிர்ப்பதுமாகும். புதிய சட்டம் சிற்றூர்களுக்கு அவைகளுடைய மன்ற உறுப்பினர்களையும், சிற்றூர் தலைவர்களையும் அவைகளே தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உரிமையும், தேவையான ஆணைகளையும், சட்டங்களையும் அவைகளே பிறப்பித்துக்கொள்ளும்

உரிமையும், வரிகளை விதித்து அவைகளை வசூலிக்கும் உரிமையும் வழங்கி, அறிவித்து சட்டபூர்வமான தன்மையுடையப் பகுதிகளாக அறிவித்த சிற்றூர் மன்றம், சிற்றூரில் குறைந்த பட்சம் ஆறுமாதகால உறையுள்பெற்ற, வாக்காளர்களாவதற்கான தகுதிகள் பெற்ற எல்லாநபர்களையும் கொண்டதாகும். அம்மன்றம், ஆண்டுக்கொருமுறை கூடி, சிற்றூரின் நிதிநிலைமைகள், நடவடிக்கைகள் பற்றிய அறிக்கையை விவாதித்து ஏற்கும்.

இந்த சிற்றூர் அதிகாரிகளை மேற்பார்வை செய்யும் அதிகாரம் நகராட்சித் தந்தைக்கும் (மேயர்), நகரமன்றத்திற்கும் தரப்பட்டிருந்தாலும், மக்கள், அவர்களுடைய விஷயங்களைப் பொறுத்தவரையிலும் இப்போது அதிக ஈடுபாடுடையவர்களாகவும் செல்வாக்குடையவர்களாகவுமிருக்கிறார்கள். சிற்றூர் அலுவலர், சட்டத்தை நடைமுறைப்படுத்தும் நிர்வாக அதிகாரியாகப் பணியாற்றுவதோடு, அவர் தன்னை யார் தேர்ந்தெடுத்தார்களோ அவர்களுக்கு நேரிடையாகப் பொறுப்புடையவராகவுமிருக்கிறார். சிற்றூர் கழகம், பொது வேலைகளைச் செய்யவும், பராமரிக்கவும் அதிகாரம் தரப்பட்டிருப்பதோடு, பொருளாதாரத்தை வளர்க்கும் இதரத் தொழில்களுக்கு மேல்மட்டங்களிலுள்ள அரசாங்க நிறுவனங்களோடு தொடர்பு கொள்ளவும், ஒத்துழைக்கவும், உதவி பெறவும் வசதி செய்து தரப்பட்டிருக்கிறது. இவ்வாறு, வட்டாரங்களிலுள்ளவர்கள் துவக்க நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவும், அரசாங்கத்தில் பங்கெடுத்துக் கொள்ளவும், ஊக்கமும் வாய்ப்புகளும் தரப்பட்டபோதிலும், போதிய நிதிவசதியில்லாததால் திட்டங்களைக் கொண்டு வந்து நிறைவேற்றும் நிலைமை இல்லை. சிற்றூர்கள், தானாகமுன் வந்து தருபவர்களிடமிருந்தும் பொருட்கிடங்குகள், விளம்பரச் சாதனங்கள், கோழிச்சண்டைகள் போன்றவற்றிற்கு அளிக்கப்படும் அனுமதி வாயிலாகவும் பணம் பெறுகின்றன. மேலும் அவைகளுக்கு மேல்மட்டத்திலுள்ள அரசாங்கங்களிடமிருந்தும் மான்யங்கள் கிடைக்கின்றன. மனைகள் விற்கப்படுவது அல்லது வாங்கப்படுவதற்குப் போடப்படும் வரித்தொகையிலிருந்தும் இந்த சிற்றூர்களுக்கு பங்கு தரப்படுகிறது. எனினும் நிதித்தட்டுப்பாடுகள் வட்டார அரசாங்கத்தின் அதிகாரத்தை வெகுவாகப்பாதிக்கின்றனவெனலாம்.

அச்சட்டம் நடைமுறைக்கு வந்து அதிககாலமாகாததால் அதனுடைய பயன்களைப்பற்றி இப்போது திட்டவட்டமாக

எதுவும் கூறுவதற்கில்லை. சிற்றூர்மக்கள், அவர்களுக்குத் தரப்பட்டிருக்கும் தன்னுட்சியைப்பற்றி மகிழ்ச்சியும் ஆர்வமும் உடையவர்களாக இருந்தாலும், திட்டங்களைத்தீட்டி அவைகளைச் செயற்படுத்துவதற்கு ஆகும் செலவையும், பணப் பொறுப்பையும் பற்றிய தெளிவான அறிவுடையவர்களாக இல்லை. தேசியமட்டத்திலுள்ள தலைவர்களால் ஆதரிக்கப் பட்டு நிதிபெற்று, அதைப்பொறுப்பில்லாத வகையில் செலவழித்துப்பழக்கப்பட்டுவிட்ட பிலிப்பைனியர்கள், முன் னேற்றத்திற்கான அவர்களுடைய பொறுப்பை இன்னும் சரிவர உணரவில்லை என்ற கருத்துநிலவுகிறது.

# 7. பொதுத்துறை அலுவல்

நவீன அரசாங்கத்தின் முக்கியமான தேவைகளில் ஒன்று, சட்டமன்றமும், நிர்வாகத்துறைகளும் ஏற்றுக் கொண்ட கொள்கைகளை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கு அவசியமான பயிற்சியளிக்கப்பட்ட திறமைமிக்க ஆட்சித்துறையென்று சொல்லலாம். அத்தகைய ஆட்சித் துறையும், அலுவலர்களும், வளர்ந்துவரும் நாடுகளில் போதுமான அளவிற்கு இல்லாததைப் பொருளாதாரத்துறை நிபுணர்கள் ஒரு பெரியகுறையாகச் சொல்கிறார்கள். பிலிப் பைனில் பொதுத்துறை, அலுவல்துறை சமூகத்தைப்போல அரசியல் சார்புடையதாக இருக்கிறது. ஜனுதிபதியும், சட்ட மன்ற உறுப்பினர்களும், அரசியல்வாதிகளும் பலவகைப்பட்ட உதவிகளையும், சலுகைகளையும் அளிப்பதன் மூலமாக பொதுத் துறை அலுவலர்களைத் தங்கள் நோக்கங்களை அடைவதற்குப் பயன்படுத்தி வருகிறார்கள். ஒருகாலத்தில் அமெரிக்காவி லிருந்ததுபோல, பிலிப்பைனிலும் தகுதிமுறை பொதுத் துறை, அலுவல்துறை ஏற்படவேண்டுமென்பதும், அத்துறை அரசியலை சீர்திருத்தம் செய்யவேண்டுமென்பதும், இப்போது உயர்ந்த நோக்கமாகி வருகிறது. ஆனால், இந்நோக்கத்தை அடைவதை தடைசெய்வதாக இருக்கின்றன. அந்நாட்டில் பரம்பரையாக மக்களிடையே காணப்படும் பழக்கங்களும், வேலையில்லாத் திண்டாட்டமும் அமெரிக்கர்கள் காலத்தில் பொதுத்துறை, அலுவல்துறையை பிலிப்பைனியர்கள் மயமாக்கும் திட்டம் மேற்கொள்ளப்பட்டதிலிருந்து, அங்கு கல்விமுறையும், மக்களினுடைய கருத்தும் அரசாங்கத்தில் வேலையைப்பெறுவதை அடிப்படையாகக் கொண்டிருக் கின்றன.

அமெரிக்கர்களின் முதல் பதினைந்தாண்டு ஆட்சிக்காலத் தின்போது பொதுத்துறை அலுவலுக்கான ஆட்சேர்ப்பு,

நன்கு நிலைநாட்டப்பட்ட ஒழுங்குமுறைகளையும், பயிற்சிக் காலங்களையும் தரத்தையும் அடிப்படையாகக் கொண்டு செய்யப்படுகிறது. கொள்கையை உருவாக்குவதற்குப் பொறுப்பேற்றிருந்த உயர்ந்த அலுவலகங்கள் அமெரிக்கர் களின் கட்டுப்பாட்டிலிருந்தன. அவர்கள், குறிக்கோளை அடைவதை நோக்கமாகக் கொள்ளாத அரசியல் காரணங் களுக்காக, பொதுத்துறை அலுவல்துறை பயன்படுத்தப்படு வதை ஏற்காமல், சுதந்திரமான கொள்கையைப் பின் பற்றினர். ஆனால், ஆஸ்மேனாவைத் தலைவராகக் கொண்ட தேசியக்கட்சி போலிப்பாராளுமன்ற முறையொன்றை பிலிப் பைனில் ஏற்படுத்தியபோது அவர்களும், அதிகாரத்துவத் துறைக்கான நியமனங்களில் செல்வாக்கைப் பெற்றனர். இத்தகைய சலுகைமுறை நியமனத்தால் தேசியக் கட்சிக்குக் கிடைத்த செல்வாக்கு, அது ஆட்சித்துறையைக் கட்டுப்படுத் தவும் கொள்கையை நடைமுறைப் படுத்துவதைத் தன் விருப்பம்போலச் செய்யவும் உதவியது. பிற்காலத்தில் பொதுத்துறை அலுவல்துறையின் சுதந்திரத்தையும், திறமையையும் மீண்டும் நிலைநாட்டுவதற்கு முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டனவென்றாலும், பள்ளிக்கூடங்களும், கல்லூரி களும் அதிகமானதால் அவைகளிலிருந்து வெளிவந்தவர்கள் அதிகாரவர்க்கத்தில் இடம்தேட ஆரம்பித்ததால் அம்முயற்சி கள் பலன் தரவில்லை. முன்புமாதிரியே வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் என்ற அடிப்படையில் வேலைகள் தரப்பட்டன. குறிக்கோளை அடைய உதவும் தேர்வுமுறைக்குப் பதிலாக சலுகை முறையில் நியமனங்கள் செய்யப்பட்டன.

பிலிப்பைன் சுதந்திரம் பெற்றவுடனே அதுகாறும் பின் பற்றப்பட்டுவந்த இந்த பழக்கங்கள் குறைவதற்குப்பதிலாக வலுப்பெற்று வளர்ந்தன. பொதுத்துறை அலுவல்துறை பிலிப்பைனியர்கள் மயமாக்கப்பட்ட பின்னர் மாநிலங்களில் இருந்த இளைஞர்கள் தைரியமாக வேலைக்கு சிபாரிசு தேடிப் பெற முயன்றனர். வேலைக்கு அத்தியாவசியமாகக் கருதப் பட்ட பட்டத்தையும், சோதனைகளுக்குத் தேவையான பயிற்சிகளையும் அளிக்கவல்ல கல்விக்கூடங்களும், கல்லூரி களும், பல்கலைக்கழகங்களும் காளான்கள்போல விரைவில் தோன்றலாயின.

மிக உயர்ந்த மட்டத்திலிருக்கும் ஆட்சித்துறைப் பதவி களுக்கான அலுவலர்கள் நியமனம், ஆட்சித்துறைகளில் செயலாளர்களாக இருந்தவர்களது ஆதரவால் மட்டுமல்லாது

பெரும்பாலும் காங்கிரஸ் உறுப்பினர்கள் அல்லது சில சமயங்களில் ஜனாதிபதியின் ஆதரவால் அல்லது பரிந்துரையடிப் படையில் செய்யப்படுகிறது. பல துறைகளின் வரவு-செலவுத் திட்டம் காங்கிரசின் ஆதரவைப் பொறுத்திருப்பதால், அவ்வப்போது இருக்கும் அரசியல் போக்குக்கேற்ப நியமனங்கள் செய்யப்படுகின்றது. ஏறத்தாழ இதே நிலைமை இதர நாடுகளிலுமுள்ளதெனலாம். அமெரிக்காவிலும் இம்முறை கையாளப்பட்டு வருகிறதென்பது, காங்கிரசினால் நியமிக்கப் படும் குழுக்களின் தலைவர்களுக்கும், நிர்வாகத்துறைப் பணியாளர்களுக்குமிடையே இருந்துவரும் நெருங்கிய தொடர்புகளிலிருந்து தெரியவருகிறது. தனிப்பட்ட முறையில் விரும்பப்படும் நன்மைக்கு அரசாங்கப் பதவியைக் கருவியாகக் கொள்ளும்முறை பொதுவாக வாழ்க்கைமுறையாக ஆகிவிட்டதென்று சொல்லலாம்.

சில சமயங்களில் சட்டமன்ற உறுப்பினர்கள், தன் கட்சிக்காரருக்காக வாதாடும் வழக்கறிஞரைப்போல, அரசாங்க அலுவலகங்களுக்குச் சென்று தன்னால் சிபாரிசு செய்யப்படும் நபர்களுக்கு வேலைகள் தரவேண்டுமென்று வற்புறுத்துவார்கள். அதிகாரிகளும், உறுப்பினர்கள், தங்கள் துறைபற்றிய மான்யக் கோரிக்கைகள் சட்டமன்றத்தில் விவாதத்திற்கு வந்தபோதும், வாக்கெடுக்கப்பட்டபோதும் நடந்துகொண்டதற்கேற்ப அவர்களுடைய பரிந்துரைகளை ஏற்றுக்கொள்வார்கள் அல்லது நிராகரிப்பார்கள். அரசியல்முறை அலுவலர்களிடமிருந்தோ அல்லது ஜனாதிபதி போன்ற தலைவர்கள் அல்லது அவர்களுடைய உறவினர்கள், நண்பர்கள் போன்றவர்களிடமிருந்தோ கடிதங்கள் கொண்டு வருபவர்களுக்கும் இடம் பொருள் ஏவல் கருதி வேலைகள் தரப்படுவதோ அல்லது தரப்படாததோ செய்யப்படுகின்றன. வேறு சிலர் தாங்கள் செய்யும் உதவிக்காக ஊதியம் பெற்றுக்கொண்டு, முயற்சி செய்து வேலை வாங்கித் தருகின்றனர். இவ்வாறு பல்வேறு வகைப்பட்டவர்களாலும் அணுகப்படும்போது, கீழ்மட்டத்திலுள்ள அலுவலர்கள் அவர்களுடைய விண்ணப்பங்களையும் மற்றவைகளையும் துரிதமாக இடம் விட்டு இடம் செல்லுமாறு அனுப்ப 'மாமூல்' கேட்டுப் பெற்றுக்கொண்டு தான் செய்கின்றனர்.

கடந்தகால ஊழியச் சம்பளப் பிரச்சினை, (Back-Pay) சூதாட்டக்காரர்களையும், ஊதியம் நிர்ணயம் செய்பவர்களையும் கொண்ட பெரியதோர் கூட்டத்தையே தோற்றுவித்து விட்டது. இந்நிலைமை, இரண்டாம் உலகப் பெரும்போருக்குப்

பிறகு கூடிய காங்கிரசின் முதல் கூட்டத்தொடர், போர்க் காலத்தின்போது அரசாங்கத்தில் வேலைபார்த்தவர்களுக்கு ஊதியம் வழங்கப்படும் என்று அறிவிக்கும் சட்டமொன்றை இயற்றியதால் தோன்றியதாகும். 1941ஆம் ஆண்டு நவம்பர் மாதம் தேர்தல் நடைபெற்றது முதல் 1946ஆம் ஆண்டு பதவியேற்கும் வரையிலான காலத்திற்குச் சேரவேண்டிய ஊதியத்தொகையை அதன் உறுப்பினர்களுக்கு வழங்கும் தீர்மானமொன்றை காங்கிரஸ் இயற்றிக்கொண்டது. அத்தொகையை அளிப்பதற்கு அரசாங்கத்திடம் தேவைப் பட்ட பணமில்லாததால், அது, இயற்றப்பட்ட சட்டப்படி தகுதிபெற்றவர்களுக்கெல்லாம் ‘கடந்தகால ஊதியத்தொகை’ சான்றிதழ்களை வழங்கியது. அங்ஙனமே, இதர பலருக்கும் அத்தகைய சான்றிதழ்கள் அளிக்கப்பட்டன. அரசாங்கத்தின் சேமிப்பு நிதியிலிருந்த தொகை குறையக்குறைய, மேற் சொல்லப்பட்ட சான்றிதழ்கள் மேலும் மேலும் வழங்கப் பட்டன. அவ்வாறு சான்றிதழ்கள் வழங்கப்பட்டவர்களில் யார் யாருக்கு, எப்போது, எவ்வளவு தொகை அச்சான்றிதழ் களுக்காக வழங்கப்படவேண்டுமென்பதில் அவ்வப்போது ஐயப்பாடுகளும், சச்சரவுகளும் ஏற்பட்டன. நிலைமை பரவலாகிவிட்டபோது, சான்றிதழ்கள் பெற்றிருந்தவர்கள் அவ்விதழ்களில் குறிக்கப்பட்டிருந்த தொகைகளைப் பெறுவதில் இடர்ப்பாடுகளும் காலதாமதமும் ஆனபடியால் பல தரகர்களை நாடலானார்கள். அரசியலிலும், அரசாங்கத்திலும் இதர துறைகளிலும் செல்வாக்குடையவர்களாக இருந்தவர்களும், அத்தகைய செல்வாக்கு இருந்ததாக நடித்தவர்களும் உதவ முன்வந்தார்கள். ஆனால், அத்தரகர்கள், அவர்களுடைய உதவி, சேவைகளுக்காகச் சான்றிதழ்களில் குறிக்கப் பட்டிருந்த தொகைகளில் 30 அல்லது 40 விழுக்காடு அவர் களுக்குப்போக பாக்கியைச் சம்பந்தப்பட்டவர்களுக்கு வாங்கித் தந்தார்கள்.

சுருக்கமாகக் கூறவேண்டுமானால், யார் நாணயமானவர்கள் யார் நாணயமற்றவர்கள், அயோக்கியர்கள் என்று வேறு படுத்திக் காட்டமுடியாத அளவுக்கு அரசாங்க நிர்வாகம் ஊழல் மலிந்திருந்தது. ஊழலையகற்றும் வழியென்ன வென்பதுவும் தெரியவில்லை. பொதுத்துறை அலுவல் பணி யாளரின் நாணயமற்ற போக்கை மாற்றிப் போருக்குமுன் அவர்கள் எவ்வாறு இருந்தார்களோ அவ்வாறு அவர்களைக் கொண்டு வருவதற்கான பல நிகழ்ச்சிகள் 1949ஆம் ஆண்டு தேர்தல் நடைபெற்றபோதும் அதற்கு முன்பும் ஏற்பட்டன.

அச்சீர்திருத்த இயக்கத்தின் ஒரு பகுதி இராமோன் மக்சாய்சாயைச் சுற்றி எழுந்தது. அவருடைய நிர்வாகம் பொதுத்துறை அலுவலைச் சீர்திருத்தியமைப்பதை நோக்கமாகக்கொண்டு பணியாற்றவேண்டுமென்று நெடுங்காலமாக பொதுத்துறை அலுவல் பணியிலிருந்தவர்கள் கருதினார்கள். அவர்கள் அமரிக்க பொதுத்துறை அலுவல்பாணியில் பழக்கப் பட்டவர்களாதலால் கைக்கூலி, திறமையின்மை போன்ற தீமைகளை அகற்றவேண்டுமென்றனர். அவர்களைப்போலவே, நடுத்தர வகுப்பு மக்களும், ஏழைகளும் தங்கள் பணம் விரயமாவதையும், பல தொல்லைகள் ஏற்படுவதையும் கருதி, அத்தகைய முறை தவறான செயல்கள் ஒழியவேண்டுமென வற்புறுத்தி வந்தனர்.

பிலிப்பைன் பல்கலைக்கழக பொதுத்துறை ஆட்சியியல் கழகம் 1952ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. அக்கழகம், பொதுத்துறை அலுவல் எங்ஙனம் சீர்திருத்தப்படலாம் என்பதற்கான வழிவகைகளையும், பணியிலுள்ளோருக்கானப் பயிற்சி முறைகளையும் ஆராய்ந்து பல யோசனைகளை வெளியிட்டது. அந்த யோசனைகளின் விளைவாக 1959ஆம் ஆண்டு பொதுத்துறை அலுவல் சட்டம் கொண்டு வரப்பட்டது. அச்சட்டத்தின் அடிப்படையில், அரசாங்க நிர்வாகத்தில் பணிபுரிபவர்களுக்குப் பயிற்சியளிக்கும் பொறுப்பு பொதுத் துறை ஆட்சியியல் கழகத்திற்களிக்கப்பட்டது. சட்டமன்ற உறுப்பினர்கள், அக்கழகத்தின் உறுப்பினர்கள், அலுவலர்கள் ஆகியோரது ஆலோசனை, உதவியைக்கொண்டு சட்டம் தயாரிக்கலானார்கள். பொதுத்துறை அலுவல் சட்டம், பொதுத்துறை அலுவலில் சேரவேண்டியவர்களுக்கு இருக்க வேண்டிய தகுதிகள், அதிகாரங்கள், கடமைகள் போன்ற பல்வேறு அம்சங்களையும் விளக்கியதோடு தகுதியடிப்படையில் பணியாளர்கள் தேர்ந்தெடுக்கப்படவேண்டிய அவசியத்தையும் அவர்கள் பொறுப்புடனும், நாணயத்துடனும், திறமையுடனும் செயலாற்றவேண்டியதன் அத்தியாவசியத்தையும் குறிப்பிட்டுக்காட்டியது. பொது அலுவல்கழகம் (Commission of Civil Service) அச்சட்டத்தில் கண்டுள்ள பல அம்சங்களும் நடைமுறைக்கு வருவதை உறுதிசெய்ய வேண்டும் என்றெதிர் பார்க்கப்பட்டது. மேற்சொல்லப்பட்ட முயற்சிகள் எந்த அளவிற்கு வெற்றியைத் தேடித்தரும், அதனால் என்னென்ன பலன்கள் ஏற்படுமென்பதெல்லாம் இனிமேல்தான் தெளிவாகும்.

# 8. அரசியல் கட்சிகள்

அரசாங்கம் சரியான முறையில் இயங்குவதற்கு அரசியல் கட்சிகள் இன்றியமையாதவை. குறிப்பாக, ஜனநாயகமுறையில் எங்கெல்லாம் அரசாங்கம் அமைக்கப்பட்டிருக்கிறதோ அங்கெல்லாம் அரசியல் கட்சிகளே பொது மக்களின் விருப்பு வெறுப்புகளைத் தெரிந்துகொண்டு அதற்குத் தகுந்தாற்போல தங்களின் கொள்கைகளையும் திட்டங்களையும் வகுத்துக்கொண்டு அவர்கள் ஆதரவுபெற்று ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றுகின்றன. சில சமயங்களில், கட்சிகளே சில கொள்கைகளை மக்கள் முன்வைத்து அவைகளை மக்கள் ஆதரிக்குமாறு அல்லது எதிர்க்குமாறு செய்கின்றன. இவையெல்லாவற்றையும்விட, அமைதியான, சட்டபூர்வமான முறையில் பதவியிலிருக்கும் அரசாங்கமொன்றையகற்றி, பிறிதொரு அரசாங்கம் பதவியேற்குமாறு செய்வதும் அரசியல் கட்சிகளேயாகும்.

அமெரிக்காவிலும் வேறு சில நாடுகளிலுமுள்ளதுபோல பிலிப்பைனில் அரசியல் கட்சிகள் சுதந்திரம் கிடைத்தபிறகு தோன்ருமல் சுதந்திரம் கிடைப்பதற்கு முன்பாக, அந்நியர்கள் ஆட்சி நடைபெற்றபோது அதையெதிர்த்து சுதந்திரம் பெறுவதற்காகத் தோன்றியவைகளாகும். அந்நாட்டு கட்சிகளுள் தேசியக்கட்சி (Nacionalista Party) முதன்மையானதாகும். அது சுதந்திர இயக்கத்தோடு மக்களுடைய சமூக, பொருளாதார முன்னேற்றத்தையும் இணைத்து செயலாற்றி வந்தது.

முதல் நோக்கில், பிலிப்பைனில் தேசியத்தன்மை வாய்ந்த இரு கட்சிமுறையிருப்பதாகத் தோன்றும். ஆனல், சற்று கூர்ந்து நோக்கினல் அவை இரண்டும் இரண்டு கட்சிகளல்லவென்றும் பல குழுக்களின் கூட்டுகளேயென்றும் தெரியவரும்.

அக்கூட்டுகள் தேர்தலில் வாக்குகளைப் பெறுவதற்காக பிரச்சினைகளை வைத்ததல்லாமல் தனியாட்களைச் சுற்றி யெழுந்தவை என்பது உண்மையாகும். கடந்த காலத்தில் அக்குழுக்கள் நிலப்பிரபுக்களால் தோற்றுவிக்கப்பட்டு, அவர்களுடைய ஆதரவில் இயங்கி வந்தன. ஆனால், தற்போது அங்கு பல குழுக்கள் தோன்றி ஒவ்வொன்றும் ஒரு அரசியல் தலைவரைச் சுற்றி இயங்குகிறது. இந்த அரசியல் தலைவர்கள் தேசிய மட்டத்திலுள்ள தலைவர்களோடு பேரம் பேசி அவர்கள் உதவியோடு தத்தம் பகுதிகளில் அலுவலகங்களை ஏற்படுத்திக்கொள்வதோடு அவர்களுக்கு வாக்குகளையும் பெற்றுத் தருகிறார்கள். எனவே, பிலிப்பைனில் கட்சி உறுப்பினர்களிடையே கட்சிக்கட்டுப்பாடு இல்லாததோடு கட்சிப்பற்றும் கிடையாது. அதிகாரத்திற்காக தனி நபர்கள் சண்டை போட்டுக்கொள்வது அடிக்கடி ஏற்படுகிறது. ஆகையால் கட்சிக்கென்று கொள்கை இல்லாமல் போவதோடு அதைப்பற்றிப் பேசவேண்டிய அவசியமும் ஏற்படுவதில்லை. அரசியல் நடவடிக்கைகள் அனைத்தும் பொருளாதார லாப நோக்கில் நடைபெறுவதால் கட்சிகளுக்கிடையே சிறப்பம்சங்களைக் காண்பது அரிதாக இருக்கிறது.

பிலிப்பைனியக் கட்சிமுறையில் பலத்தை வலியுறுத்தும் அம்சங்களும் பலமின்மையை எடுத்துக்காட்டும் அம்சங்களும் இருக்கின்றன. அரசாங்க நிறுவனங்களைக் கட்டுப்படுத்தி தேவையானவற்றைப் பெறுவதென்பது கட்சிக்கு எளிதாக இருக்கவில்லை. அதற்குப் பதிலாக, ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றுவதற்குத் தலைவர்களிடையே நடைபெறும் போட்டாபோட்டியில் கட்சிகளைச் சேர்ந்த பலரும் அவர்களுக்கு உதவியாக இருந்து அதன் மூலமாக நன்மைகளைப் பெற்று வருகிறார்கள். இவ்வாறு கட்சிகளுக்கென்று தனித் தனிக் கொள்கைகளும் திட்டங்களும் இல்லாததால் அரசியலில் ஈடுபடுகின்றவர்கள் அவ்வப்போதுள்ள சூழ்நிலைகளுக்கேற்ப எந்தப் பக்கம் அல்லது யார் பக்கம் சாய்ந்தால் வெற்றியும், லாபமும் கிட்டுமோ அந்தப்பக்கம் சேர்ந்து விடுகிறார்கள். பொருளாதார முன்னேற்றத் திட்டங்களிலும் சட்டமியற்றுவதிலும் நாட்டுப்புற பிலிப்பைனியர்களுக்கு அவ்வளவாக அக்கறை கிடையாது. அவர்களுக்கு வேண்டியதெல்லாம் பள்ளிக்கூடக் கட்டிடமோ அல்லது இணைப்பு சாலைகளோதான்.

தேர்தலில் வாக்காளர்களின் ஆதரவைத்தேடும் கட்சிகள் அரசாங்கத்திற்கும் குடிமக்களுமிடையே தேசிய மட்டத்தி

லிருந்து சிற்றூர் மட்டம்வரை தரகர்கள்போல பணியாற்றி வந்திருக்கின்றன. தனக்கென முறைப்படியானதும் சட்டபூர்வ மானதுமான பேர அதிகாரமில்லாத வட்டார அரசாங்கம் பிலிப்பைனிய அரசியல்முறையில் உண்மையானதோர் பகுதி யாகும். தேசியத் தலைவர்களுக்கும், குழுக்களுக்குமுள்ள பேரச் சக்தி வட்டார அரசியலை ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. பிலிப்பைனியக் கட்சிகள் கொள்கைகளை அடையும் நோக்கத்திற்காகப் பாடுபட்டு வெற்றி பெறுவிட்டாலும், பொருளுள்ள முறையில் அரசியலில் ஈடுபட்டு வெற்றி பெற்றிருக்கின்றன. எனினும், சமீபகாலங்களில் கட்சிகளின் நோக்கத்திலும், கொள்கையிலும், தனிப்பட்ட தலைவர் களுக்கு விசுவாசமாக இருக்குந்தன்மையிலும், அரசாங்கத் தைப் பொறுத்தவரையிலும் கட்சி ஆற்றவேண்டிய பணியிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. இதர நாடுகளில் அரசியல் கட்சிகள் அமைக்கப்படும் முறையும் அவைகளின் செயல் முறைகளும் பிலிப்பைனிலும் பின்பற்றப் படுவதற்குத் தேவையான முயற்சிகள் எடுத்துக்கொள்ளப் பட்டு வருகின்றன.

ஸ்பானியர்களின் ஆட்சிக்காலத்திலேயே கட்சிகள் ஏற்பட்டனவென்றாலும் அதிகாரப் பூர்வமான அரசியல் கட்சிகள் அமெரிக்கர்களின் ஆதரவில்தான் தோன்றின. அந்நாட்டில் அரசியல்கட்சிகளின் தோற்றம், வளர்ச்சிபற்றிய பல முக்கியமான செய்திகள் ஹேடன் என்பவரது நூலில் விளக்கமாகத் தரப்பட்டுள்ளன.[1] முதன் முதலில் அந்நாட்டில் தோன்றிய கட்சி 'கூட்டாட்சிக்கட்சி' (Partido Federalista) என்பதாகும். அது 1900ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் செயற் படத்துவங்கியது. அக்கட்சியினுடைய நோக்கம், அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குட்பட்ட அரசாக பிலிப்பைன் ஏற்பட வேண்டுமென்பதேயல்லாது முழுச்சுதந்திரமல்ல. ஆனால், முழுச்சுதந்திரம் வேண்டுமென்றக் கோரிக்கையோடு பல கட்சி கள் தோன்றியபோது அக்கட்சி இருந்த இடந்தெரியாமல் போய்விட்டது.

இதற்கிடையில், குறிப்பிட்ட சில மாநிலங்களைக் கேந்திர மாகக்கொண்டு உடனடியாகச் சுதந்திரம் வேண்டுமென்று வற்புறுத்திப் பலகுழுக்கள் தோன்றின. 1907ஆம் ஆண்டில் தேசிய சட்டசபையொன்றிற்கான உறுப்பினர்களைத் தேர்ந்

---

1 Hayden: The Philippines. Part II.

தெடுப்பதற்கு தேர்தல்கள் நடைபெறும் என்ற அறிவிப்பு வெளியானதும் அக்குழுக்கள் யாவும் ஒன்று சேர்ந்து உடனடிச் சுதந்திரத்தை அடிப்படை நோக்கமாகக் கொண்ட தேசியக் கட்சியைத் (Partido Nacionalista) தோற்றுவித்தன. நடைபெற்ற தேர்தலில் இந்த தேசியக்கட்சி பெரிய வெற்றி பெற்றதால் பிலிப்பைனியர்கள் சுதந்திரம் பெறுவதில் மிகுந்த ஆர்வமுடையவர்களாக இருக்கிறுர்களென்பது தெளிவாயிற்று. அதுமுதல், பிலிப்பைனியர்கள் தங்களைத் தாங்களே கேட்டுக்கொண்ட கேள்வி சுதந்திரம் கிடைக்குமா அல்லது கிடைக்காதா என்பதல்ல; ஆனால், எவ்வளவு சீக்கிரமாக அது கிடைக்குமென்பதேயாகும். கட்சி அரசாங்கம் அமைப்பதில் ஆர்வமுடையதாக இல்லை. ஏனெனில் அரசாங்கம் இறைமையதிகாரமுடைய பிறிதொரு அரசாங்கத்திற்குக் கீழ்ப்பட்டதாக இருந்தது. வாக்காளர்களுக்கும் கட்சிகளுக்கும் பொறுப்புடையதாக இருக்கவில்லை.

தேர்தல்களும் பணக்காரர்களாலும், நிலப்பிரபுக்களாலும் கட்டுப்படுத்தப்பட்டதால் அவர்கள் ஆதரவு பெற்றவர்கள் அல்லது கட்சிகளே வெற்றிபெறும் வாய்ப்பிருந்தது. இத்தகையவர்களே தேசியக்கட்சியில் முக்கியமான தலைவர்களாக இருந்ததோடு பல கட்சிப் பதவிகளையும் பெற்றிருந்தனர். இவர்கள் தங்களுடைய முன்னேற்றத்தில் மிகுந்த அக்கறையுடையவர்களாக இருந்தார்களேயல்லாது சுதந்திரம் பெறுவதில் அல்ல. எனவே, குடியானவர்களும், நடுத்தர வகுப்பு மக்களும் ஏமாற்றமடைந்து, சக்தலிஸ்தா (Sakdalista) கம்யூனிஸ்டுகள் போன்றவர்களால் நடத்தப்பட்ட தீவிர இயக்கங்களில் சேர்ந்தார்கள்.

அரசியல் அதிகாரமாற்றம் ஆரம்பத்தில் மெதுவாக இருந்தாலும் 1916ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட ஜோன்ஸ் சட்டத்தின் விளைவாகத் தீவிரமடைந்தது. அரசாங்க அமைப்பு சீர்திருத்தியமைக்கப்பட்டது. தேசியக் கட்சியைச்சேர்ந்த ஆஸ்மேனு சட்டசபையின் சபாநாயகரானுர். பிறகு படிப்படியாக பிரதம மந்திரிக்குச் சமமான பதவியொன்றை ஏற்படுத்துமாறு செய்து அதைத் தாமே ஏற்று அரசியலிலும் அரசாங்கத்திலும் பலமான இடத்தைப் பிடித்துக்கொண்டார். அதேசமயத்தில் ஆஸ்மேனு, தன்னுடைய இணைபிரியாத் தோழனை கியூசானை மறந்துவிட்டார். கியூசான் அதைப் பொருட்படுத்தாமல் சமயம்பார்த்து–குறிப்பாக சட்டமன்றத்தின் பிறிதொரு அங்கமாக செனட் ஏற்படுத்தப்பட்டபோது–

அதன் தலைவர் பதவிக்கு நின்று வெற்றிபெற்று தன் நிலைமையைப் பலப்படுத்திக்கொண்டு ஆஸ்மேனுவுடன் சவாலுக்குத் தயாரானார்.

அதன் பிறகு 1921ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் தனி நபர் சர்வாதிகாரத்தை ஏற்படுத்த ஆஸ்மேனு முயற்சி செய்கிறாரென்று கியூசான் அவர்மீது குற்றஞ்சாட்டியதோடு, கட்சியிலும் அரசாங்கத்திலும் கூட்டுத்தலைமையை (Collective Leadership) ஏற்படுத்த வேண்டுமென்று கிளர்ச்சி செய்தார். இந்த இருவர்களுக்கிடையிலான மோதல் பிறகு நடந்த தேர்தல்களில் அதுவரையிலும் எவரும் கண்டிராத அளவிற்கு உச்சக்கட்டத்தையடைந்தது. இச்சூழ்நிலை மணிலாவைக் கேந்திரமாகக்கொண்ட ஜனநாயகக்கட்சி (Partido Democrata) தோன்றுவதற்குத் துணைபுரிந்தது. இப்புதியகட்சிக்கு நகர்ப்புற நடுத்தரமக்களும், வேலைகளிலிருந்தவர்களும் ஆதரவு தந்தார்கள். ஒருபுதிய எதிர்க்கட்சி ஏற்படுமென்று பலரும் எதிர்பார்த்தார்கள். வேறுசிலர் கியூசான் ஆதரவாளர்களும் ஜனநாயகக்கட்சியினரும் ஒன்று சேர்ந்துவிடுவார்கள் என்று எண்ணினார்கள். ஆனால், அதற்கு மாறாக தேசியக்கட்சியின் இருபிரிவினரும் ஒன்றுசேர்ந்து அதன் பழைய தலைமை அரசாங்கத்தில் பிலிப்பைனியர்களின் பங்கை மீண்டும் நிலைநாட்டினர். இந்நிகழ்ச்சியை, மக்கள் நம்பிக்கைக்கு இழைத்த துரோகமென்று ஜனநாயகக்கட்சியினர் குற்றஞ் சாட்டினர்.

இதற்குப்பிறகு 1924ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தேசியக் கட்சி திருத்தியமைக்கப்பட்டு பலப்படுத்தப்பட்ட தேசியக் கட்சி (Partido Nacionalista Consolidado) என்ற பெயரோடு செயற்படத்தொடங்கியது. அதன் தலைவராக கியூசானும், துணைத்தலைவராக ஆஸ்மேனுவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஆனால், ஜனநாயகக்கட்சியினர் அவர்களுடைய எதிர்ப்பைக் கைவிடவில்லை. எனினும் 1926ஆம் ஆண்டிற்குப் பிறகு ஜனநாயகக்கட்சியினர் தேசியக்கட்சியினருடன் சேர்ந்து அரசியல் சீர்திருத்தத்தைக் கைவிடவிரும்பிய தளபதி லியோனார்டு உட் (General Leonard Wood) என்ற கவர்னர்-ஜெனரலின் திட்டப்படி தேசிய மேலாண்மைக் கழகத்தில் (National Supreme Council) பங்கெடுத்துக்கொண்டதிலிருந்து, அவர்கள் செல்வாக்கு சரிந்தது. 1928ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தல்களில் அவர்கள் அடியோடு தோற்கடிக்கப்பட்டதைத் தொடர்ந்து 1933ஆம் ஆண்டில் அக்கட்சி கலைக்கப்பட்டது.

1933-34-ல் கொண்டுவரப்பட்ட சுதந்திரம் பற்றிய மசோதா மீது ஏற்பட்ட சச்சரவில் தேசியக்கட்சியின் தலைமை மீண்டும் பிளவுப்பட்டது. எனினும், அப்பிளவு தேசிய இயக்கத்தின் தலைவரென்னும் கியூசானின் செல்வாக்கை மேலும் உயர்த்தியது. 1934ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலில் கியூசான் குழுவினருக்கு அபரிமிதமான வெற்றி கிடைத்தது. ஆஸ்மேனாவைச் சேர்ந்த குழுவினருக்கு செனட்டில் பதினொரு இடங்களில் மூன்று இடங்களும், பிரதிநிதிகள் சபையில் எண்பத்தொன்பது இடங்களில் பத்தொன்பது இடங்களுந்தான் கிடைத்தன.

இத்தேர்தலில் நிகழ்ந்த ஆச்சரியம் மத்திய லூசான் பகுதியில் செல்வாக்குடையதாக இருந்த சக்தலிஸ்தா கட்சி புதிய எதிர்க்கட்சியாகத் தோன்றியதாகும். அக்கட்சி 1934ஆம் ஆண்டுத் தேர்தலில் பிரதிநிதிகள் சபையில் மூன்று உறுப்பினர்களையும், ஒரு மாநிலக் கவர்னரையும், பல முனிசிபல் தலைவர்களையும், துணைத்தலைவர்களையும் கவுன்சிலர்களையும் பெற்றது. அக்கட்சியைச் சேர்ந்தவர்கள் வரிகளைக் குறைக்கவேண்டுமென்றும், நாட்டுப்புற மக்களின் ஏழ்மை நிலையை அகற்றவேண்டுமென்றும், உடனடியாகச் சுதந்திரம் அளிக்கவேண்டுமென்றும் வற்புறுத்தினர். அவர்களுடைய வெற்றி மணிலாவிலிருந்தவர்களுக்கு அச்சத்தை ஏற்படுத்தியதோடு மேல், நடுத்தர வகுப்பு மக்களுடைய கொள்கைகளுக்கு அவருடைய கொள்கைகள் மாறுபட்டவைகளாகத் தோன்றின.

இச்சூழ்நிலையில் தேசியக்கட்சியின் இரு குழுக்களும் மீண்டும் ஒற்றுமையாக இயங்கவேண்டுமென்றும் அப்போது தான் சக்தலிஸ்தா இயக்கத்தையொடுக்க முடியுமென்றும் வாதம் செய்யப்பட்டது. செனட்டர் ஜுவான் சுமுலாங் (Juan Sumulong) என்பவரது சமரச முயற்சியினால் இரு குழுக்களும் ஒன்றுபட்டு கியூசானை ஜனாதிபதி பதவிக்கும், ஆஸ்மேனாவை துணை ஜனாதிபதி பதவிக்கும் நிறுத்தி ஆதரித்து வெற்றி பெற்றன.

பிலிப்பைன் அரசியல் வரலாறு இவ்வாறு தனிப்பட்டோரைச் சுற்றி அமைந்ததற்கு இரு காரணங்களுண்டு. அவைகளில் முதலாவது, அரசியல் கட்சி தோன்றுவதற்குச் சாதகமாக இருந்த சூழ்நிலைகள். இரண்டாவது, சுதந்திரப்

போராட்டத்தின் ஆரம்பக்கட்டத்தில் போராட்டத்தை இரு மாபெருந்தலைவர்கள் தலைமையேற்று நடத்தியது. இவை காரணமாகத்தான் ஒரு கட்சிமுறையும், கட்சிக்கு நன்றி யுடைமை என்பதற்குப்பதிலாக, தனிப்பட்டோரிடம் நன்றி யுடைமை என்ற பண்பும் ஏற்பட்டன என்று திட்டவட்ட மாகச் சொல்லலாம். மேலும், ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்தவர்கள் கட்சியினுடைய தனித்தன்மையையும், சுதந்திரத்தையும் நிலைநாட்டத் தவறியதையும் குறிப்பிடலாம். தேசியக்கட்சிக்கு அதனுள் ஏற்பட்ட எதிர்ப்புகளெல் லாம் தலைவர்களுக்கெதிராக ஏற்பட்டவைகளேயல்லாமல் கொள்கைகளுக்கெதிராகவல்ல. இத்தகைய சந்தர்ப்பங்களில் கட்சி ஒற்றுமை, கட்சி விசுவாசம் என்பவையெல்லாம் நிரந்தரமானவைகளாக இருக்க முடியாது. அல்லாமலும், பிலிப்பைன் அரசாங்கத்தில் நிர்வாகம் பலமிக்கதாக ஏற்படுத்தப்பட்டதால் கட்சி நடவடிக்கைகளுக்கு ஆதரவு கிட்டவில்லை என்பதும் ஒரு காரணமாகும்.

ஆனால், இரண்டாவது உலகப்போருக்குப்பிறகு ஒரு கட்சி முறை மறைந்து, இரு கட்சிமுறை ஏற்பட்டது. இம் மாறுதலுக்கு, நாட்டுப்புற மக்கள் அரசியலில் அதிக ஆர்வம் காட்டியதையும், குடிமக்கள் தங்களுடைய பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்வதற்கு உதவி தேடி மணிலாவிற்குச் சென்றதையும், பலவகைப்பட்ட பின்னணிகளிலிருந்து இளைஞர்கள் பலர் அரசியலில் நுழைந்ததையும் காரணங் களாகக் குறிப்பிடலாம்.

மேற்சொல்லப்பட்டவைகளோடு போர்க்காலத்தில் ஏற் பட்ட சீர்கேடுகளும், தற்காலிகமாக பழைய தலைவர்கள் பிலிப்பைன் அரசியலிலிருந்து உடந்தைக் குற்றச்சாட்டுகள் காரணமாக விலகியிருந்ததும் ஆக்கிரமிப்பை எதிர்த்து பிலிப்பைனியர்கள் காட்டிய வீரத்தினால் ஏற்பட்ட பெரு மிதமும், ஒற்றுமையுணர்வும் மேற்சொல்லப்பட்ட மாறுதல் களுக்கு முக்கியமான சூழ்நிலைகளாகும். அரசியலில் நுழைந்த புதியவர்கள் இரு பிரிவுகளைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். முதலாவது பிரிவினர், அந்திக்கடை வியாபாரிகள். நேர்வழி யில்லாமல் தவறான வழியில் விடுதலைப் போராட்டக் காலத்தில் பொருளீட்டியவர்கள். இவர்களில் பலர் செல்வந்தர் களாக இருந்ததால் அரசாங்க உத்தியோகங்களையும், அரசியல் பதவிகளையும் பெற்று, தங்களுடைய வியாபாரத் திற்கு அரசாங்க ஆதரவைத் தேடினார்கள்.

இரண்டாவது பிரிவினர் உண்மையான தலத்தலைவர்களும், கொரில்லாக்களின் தலைவர்களும், போர்க் காலத்தின் போது நாட்டின் பல பாகங்களிலும் நிலவிய குழப்ப நிலையை யகற்றப் பாடுபட்டத் தலைவர்களுமாவர். அவர்கள் தத்தம் பகுதிகளில் மக்களிடையே செல்வாக்குடையவர்களாக இருந்ததால் கட்சி வேட்பாளர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டு சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். ஆனால், அவர்களுக்கு சாதகமான நிலைமையில்லா திருந்தது. ஏனெனில், அவர்களுக்கு முதிய கட்சித்தலைவர்களுக்கிருந்த அனுபவமோ அல்லது பணவசதியோ இல்லை. மேலும், அரசியலுக்குத் தேவையான திறமையும் அவர்களுக்குக் கிடையாது. எனவே, இருந்த நிலைமை (Status quo) தொடர்ந்து இருந்து வர அவர்கள் அனுமதிக்கவேண்டியிருந்தது. ஆனால், அவ்வாறு செய்யாத ஒருவர் இராமோன் மக்சாய்சாய் என்பவரென்று சொல்லலாம். அவர், சூழ்நிலைகள் பல ஒன்று சேர்ந்ததாலும், அரசியலில் தனக்கிருந்த நுண்ணறிவாலும் கடந்த காலத்திலிருந்த முதியவர்களின் அரசியல்முறைக்கு சவால் விடுத்து வெற்றி கண்டார். இருப்பினும் பழையமுறை அடியோடு கைவிடப்படவில்லை.

ஆனால், தனிப்பெருந்தலைவராகத் திகழ்ந்த கியூசான் இறந்தபோது நாட்டுத்தலைமையில் சூன்யம் ஏற்பட்டது. நாட்டில் நிலவிய பிரச்சினைகளின் விஸ்வரூபமும் அவற்றிற்கானத் தீர்வும் கட்சியினரிடையே தவிர்க்கமுடியாத போராட்டத்தைத் தோற்றுவித்தது. 1946இல் பலகுழுக்களுக்கிடையே ஏற்பட்ட அதிகாரத்திற்கானப் போராட்டம், போட்டிக்கொள்கையை அடிப்படையாகக்கொண்ட இருகட்சி தேர்தல்களை ஏற்படுத்தியது. அது அந்நாட்டில் இன்றுவரை தொடர்ந்திருந்து வருகிறது. உண்மையான பிரச்சினைகள் கட்சிகளிடையே பிளவை ஏற்படுத்தின என்று சொல்லுவதன் பொருள், எதிர்க்கட்சியின் தொடர்ந்த இயக்கம் இன்றியமையாததாயிற்று என்பதாகும். இரு கட்சியமைப்பிலும் தனி நபருக்கு நன்றியுடைமையென்ற பழைய வழக்கம் கைவிடப்படவில்லையென்றாலும் கட்சிகளின் நடவடிக்கைகளுக்கும், வேண்டியவர்களுக்குத் தேவையானவற்றைச் செய்வதற்கும் வரம்புண்டென்ற முன்னேற்றம் அரசியலில் காணப்பட்டது. இது படிப்படியாகக் கட்சியமைப்பிலும், அரசியலிலும் பல சீர்திருத்தங்கள் ஏற்படக் காரணமாக இருந்தது.

பிலிப்பைனில் கட்சிகளை நன்முறையில் அமைப்பது மிகவும் அவசியமாகும். ஏனெனில் அங்குள்ள வாக்காளர்கள்

சுமார் 1,000 தீவுகளில் சிதறுண்டிருக்கிறார்கள். அவர்களிடம் கருத்துகளை எடுத்துச்சொல்லி சாதக அல்லது பாதகமான நிலைமைகளைத் தோற்றுவிப்பதற்குக் கட்சி அமைப்பு அவசியமாகும். இதற்கு கட்சிகளுக்கு நிறையத் தொண்டர்களும், பொருள்வசதியும், வாகனவசதியும் தேவைப்படும். இவையெல்லாமிருந்தபோதிலும் வெற்றிகரமாக அரசியல் கட்சிகளைத் தொடர்ந்து செயற்படுமாறு செய்வது அவ்வளவு எளிதானதல்ல.

# மேலும் படிக்க வேண்டிய நூல்கள்


| | | |
|---|---|---|
| Almond and Coleman | : | Politics of the Developing Areas |
| Arturo M. Tolentino | : | The Government of the Philippines |
| Grassholtz, Jeam | : | Politics in Philippines |
| John Romani | : | The Philippine Presidency |
| Rivera and Mc Williams | : | The Rural Philippines |



மலேசிய இராச்சியங்கள்
பெர்லிஸ்
கோட்டா பாரு
1. பிதுரங்கு
2. கெலாண்டன்
3. செலாங்கூர்
4. நகரி செம்பிலான்
தென் சீனக் கடல்
பஹாங்
கோலாலம்பூர்
சிங்கப்பூர்
சுமத்ரா
ஜெசில்டன்
சபா
புருனி
சாரவாக்
போர்னியோ

# 1. மலேசிய அரசாங்கமும் அரசியலும்

**முன்னுரை**

தென்கிழக்கு ஆசியாவின் மலாயாதீபகற்பம் என்னும் பகுதியின் தென்கோடியிலுள்ள பகுதியும் போர்னியோ தீவின் வடகோடியிலுள்ள ஒரு சிறுபகுதியுந்தான் மலேசியா என்றழைக்கப்படும் நாடாகும். அது தெற்கே ஏறத்தாழ பூமத்தியரேகைப் பகுதிவரையிலும் பரவியிருக்கிறது. அதன் தெற்குமுனையில் கால்விரல்போல கடலால் பிரிக்கப்பட்டுள்ள பகுதி சிங்கப்பூர் என்றழைக்கப்படும் சிறுநாடு. 1963இல் மலேசியா ஏற்படுத்தப்பட்டபோது சிங்கப்பூரும் அதனோடு சேர்த்துக்கொள்ளப்பட்டது. ஆனல், 1965ஆம் வருடம் ஆகஸ்டு மாதம் அது மலேசியக் கூட்டாட்சியிலிருந்து பிரிந்து தனி நாடாகியது. வடக்கே முன்பு சையாம் (Siam) எனப்பட்ட தாய்லாந்து இருக்கிறது. மேற்கிலும் தெற்கிலும் இந்தோனேசியாவின் சுமத்ரா, ரியோ போர்னியோவின் இதர பகுதிகளுள்ளன. கிழக்கே பிலிப்பைனைச் சேர்ந்த பலாவன் (Palawan) தீவும் இதர சிறு சிறு தீவுகளுமுள்ளன.

மலாயா தீபகற்பத்தின் மேற்கு கிழக்குப்பகுதிகள் கடற்கரைப் பிரதேசங்களாகும். இவை இரண்டிற்குமிடையே மத்திய மலைத்தொடருள்ளது. மலாயா இயற்கையழகு கொழிக்கும் நாடாகும். ஒருபக்கம் அடர்ந்த காடுகளும் மறுபக்கம் நெல் விளையும் பகுதிகளுமிருக்கின்றன. அதன் கிழக்குப்பகுதியில் எழில் தவழும் மணற்பரப்புக்களுமிருக்கின்றன. இயற்கையின் பல வண்ணங்களைப்போலவே அங்கு வாழும் மக்களும் பல இனத்தவராகவும், சமயத்தவராகவும், பண்பாடுடையவர்களாகவுமுள்ளனர். இவ்வளவு சிறிய

பகுதியில் பல்வகைப்பட்டோர் வாழ்கின்றனரென்பது ஓர் அதிசயமேயாகும். எனினும் அங்கு பழம்பெருமை வாய்ந்த கட்டிடங்களும், சிற்பங்களும் குறைவேயாகும். அங்கு இதர நாடுகளைப்போல சிறப்பிலக்கியங்களும் கிடையாது.

மலாயா, சாரவாக், வடபோர்னியோ, (சபா–Sabha) சிங்கப்பூர் ஆகிய பகுதிகளைக்கொண்ட புதிய மலேசியக் கூட்டாட்சி நாடு 1963ஆம் ஆண்டில்தான் ஏற்படுத்தப் பட்டது. இக்கூட்டாட்சியின் முக்கிய பகுதியான மலாயா கூட 1957 வரையிலும் சுதந்திர நாடாக இருக்கவில்லை. சிங்கப்பூர் சுதந்திர நாடாக இருந்ததெனினும் வெளி விவகாரக் கொள்கையும் பாதுகாப்புத் துறையும் ஆங்கில அரசாங்கத்தாலேயே நிர்வகிக்கப்பட்டன. மலேசி யாவின் மொத்தப் பரப்பளவு சுமார் 1,29,000 சதுர மைல் களே என்பதிலிருந்து அது சிறிய நாடென்பது புலனாகிறது. சிங்கப்பூர் பிரிந்து சென்றபிறகு அதன் மக்கள் தொகை 90 லட்சத்திற்கும் சற்று அதிகமாக இருந்தது. இந்தோனேசியா, பிலிப்பைன், தாய்லாந்து, வியட்நாம், இலாவோஸ், கம்போடியா, பர்மா ஆகிய இதர ஆசிய நாடுகளிலிருந்த பிரச்சினைகளைப் போன்றவையே மலேசியாவின் பிரச்சினை களுமாகும். அவைகளைப்போல (தாய்லாந்து நீங்கலாக) மலேசியாவும், ஐரோப்பியர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. இருப்பினும் மனக்கசப்பில்லாத வகையில் அது சுதந்திரம் பெற்றது. வளர்ந்துவரும் நாடுகளில் பொதுவாகக் காணப் படும் பொருளாதாரப் பிரச்சினைகள் அங்கும் காணப்படு கின்றன. குறிப்பாக, அதன் பொருளாதார முன்னேற்றம் முக்கிய பொருளான இரப்பர் ஏற்றுமதியோடு பிணைக்கப் பட்டிருக்கிறதெனலாம். இப்பிரச்சினையோடு ஆண்டொன் றிற்கு மூன்று விழுக்காடு வீதம் வளர்ந்துவரும் மக்கள் தொகைப் பெருக்கமும் சேருகிறது. வெளிப்படையாகத் தெரியாத பிறிதொரு பிரச்சினை, அந்நாட்டை நவீனப்படுத்து வதிலுள்ள இடர்ப்பாடுகளெனலாம். மலேசியாவின் முக்கியப் பிரச்சினை 'முன்னேற்றம் பற்றிய மேலைநாட்டு கருத்து களோடு' வழக்கமான முறைகளைப் பொருத்தி முன்னேற்றம் காண்பதெவ்வாறு என்பதேயாகும்? பழமையான பிடிப்பு களோடு மோதல்கள் ஏற்படும்போது எந்த அளவிற்கு நவீனப்படுத்தும் முயற்சியில் ஈடுபடுவது? என்பதுமாகும். மேலும், இதர நாடுகளைப்போல, மலேசியாவும் கம்யூனிஸ்டு களின் நாசவேலைகளையும், தொந்தரவுகளையும் சமாளிக்க

வேண்டியிருந்தது. 1948ஆம் ஆண்டு முதல் 1960ஆம் ஆண்டு வரையிலும் கம்யூனிஸ்டுகளின் நடவடிக்கைகள் காரணமாக மலேசியா 'நெருக்கடி நிலைமையில்' இருந்ததென்பது குறிப்பிடத்தக்கது.

அண்டை நாடுகளோடு இத்தனை அம்சங்களில் ஒற்றுமை காணப்பட்டாலும், மலேசியா அதற்கெனவொரு தென்கிழக் காசியாவிலுள்ள நாடுகளுக்கில்லாத தனித்தன்மையைப் பெற்றிருக்கிறது. பல இனமக்கள் கலப்பினாலும், அதனுடையப் பொருளாதாரத்தினாலும், அரசியலமைப் பாலும், குடியாட்சி அரசாங்கமுறையாலும், கட்சியமைப் பாலும் அது தன் பக்கத்து நாடுகளினின்றும் மாறுபட்டிருக் கிறது.

மேற்சொல்லப்பட்டவைகளையெல்லாம்விட மலேசியாவின் பொருளாதாரத்தையும், அரசியலமைப்பையும் ஜனநாயக முறையின் வளர்ச்சியையும் அரசியல் கட்சிகளின் முறையையும் புரிந்துகொள்வதற்கு உதவியாகஇருப்பது அந் நாட்டின் இன அமைப்பெனலாம். கீழே கொடுக்கப்பட்டுள்ள வரைகட்டம் இன அமைப்பு எவ்வளவு சிக்கலானதாக இருக்கிறதென்பதை விளக்குகிறது.

*1960ஆம் ஆண்டில் மலேசியாவின் மக்கள் தொகை (ஆயிரம் என்ற அடிப்படையில்)*

| | மலாய் இனத்தவர் | சீனர்கள் | இந்தியர்களும் பாகிஸ்தானியர்களும் | மலாய் இனத்தை சேராத சபா சாரவாக் பகுதியினர் | மற்றவர்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| மலாயா | 3461 | 2552 | 773 | — | 123 | 6909 |
| சாரவாக் | 129 | 229 | 2 | 378 | 6 | 744 |
| சபா (வட போர்னியோ) | 25 | 105 | 3 | 283 | 39 | 455 |
| | 3615 | 2886 | 778 | 661 | 168 | 8108 |

மேலுள்ள வரைகட்டம் புரிந்து கொள்ளத்தக்க வகையில் எளிதாக்கப்பட்டதாகும். மலாயாவிலுள்ள மலாய் இனத்தவர் களில் இந்தோனேசியாவைச் சேர்ந்தவர்களும், 45,000 ஆதிக்

குடிகளும் உள்ளனர். சபா, சாரவாக்கிலுள்ள மலாய் இனத்தைச் சேராதவர்களில் வெவ்வேறு மொழிகளைப் பேசும் பல பழங்குடி வகுப்பினரும் சேர்த்துக் கணக்கிடப்பட்டிருக்கிறார்கள். வரை கட்டத்தை விளக்கும் வகையில், சீனர்களில் பெரும்பகுதியினர் நகரங்களில் வசிப்பவர்கள் என்பதையும், வடகிழக்குக் கடற்கரையில் வாழ்பவர்களில் பெரும்பாலோர் மலாய் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும்.

புரியுமாறு இருக்கவேண்டும் என்பதற்காகச் செய்யப் பட்டுள்ள இந்தப் பிரிவின்படி பார்த்தாலும் எந்தவொரு இனத்தவருக்கும் மொத்த மக்கட்தொகையில் பெரும்பான்மை பலம் இல்லையென்பது தெரியவரும். சீனர்கள் 36 விழுக்காடும், மலாய் இனத்தவர் 45 விழுக்காடாகவும் இருக்கின்றனர். மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது எந்தவொரு இனத்தவருக்கும் பெரும்பான்மையில்லாததால் அங்கு சமநிலை தடையீடுகள் இருக்கக்கூடுமென்று தோன்றும். எனினும், மலாய் இனத்தவர், அரசாங்கத்திலும், நாட்டிலும் இதர பல துறைகளிலும் தங்களுக்குச் சிறப்பிடம் வேண்டுமெனக் கருதுகின்றனர். அதற்கு அவர்கள் கூறும் காரணம் அவர்கள் அந்த நாட்டின் பூர்வகுடிகள் என்பதாகும். இங்கிலாந்து நாட்டின் குடியேற்ற நாடாக மலாயா இருந்தபோது ஆங்கிலேயர்கள் அவ்வாதத்தை எற்றுக்கொண்டனரென்பதும், அந்த அடிப்படையில்தான் அரசாங்க அமைப்பு அங்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிறதென்பதும் அறியத்தக்கவையாகும்.

மலேசியாவில் அரசியல், பொருளாதாரம் அல்லது வேறு எந்தப்பொருள் அல்லது பிரச்சினையாக இருந்தாலும் அதில் இன அடிப்படை நோக்கு காணப்படுகிறது. இவ்வாறு இன அடிப்படையில் செய்யப்படும் பரிசீலனைகளின் முடிவுகள் பொதுமக்கள் தெரிந்து கொள்ளுமாறு அறிவிக்கப்பட வேண்டுமா, வேண்டாமா என்பதுபற்றி கருத்து வேறுபாடு இருந்து வருகிறது. வெளியே சொல்லப்பட்டாலும், படா விட்டாலும் அத்தகைய கணக்கீடுகள் அவசியம் என்பதை மறுக்க முடியாது. இந்த இனப்பிரச்சினை எந்த அளவிற்கு தலைதூக்கியிருக்கிறதென்பதற்குப் பிலிப்பைனிலும், இந்தோனேசியாவிலும் சீனர்களைப்பற்றி அந்நாட்டினர் கவலைப் படுவதை உதாரணமாகக் கூறலாம். அந்நாட்டினருடைய கவலையெல்லாம் சீன இனத்தவரை எவ்வாறு இதர இனத்தாரோடு கலந்து பழகுமாறு செய்வது என்பதேயாகும்.

எனினும், அந்நாடுகளிலுள்ள சீனர்களின் எண்ணிக்கை மொத்த மக்கள் தொகையில் ஐந்து விழுக்காட்டிற்கும் குறைவே. ஆனால், மலேசியாவிலோ அவர்கள் 36 விழுக் காட்டினர்களாக இருக்கிறார்கள். இத்தனை மக்களை வைத்துக் கொண்டு அவர்கள் சிறு சிறு வியாபாரங்களில் ஈடுபடுவதைத் தடைசெய்வதோ அல்லது நாட்டை விட்டுத்துரத்துவதோ பின்பற்றக்கூடிய முறைகளாகமாட்டா. இருப்பினும், அவர் களை மக்களோடு, தாய்லாந்தைப்போல ஒன்றறக்கலந்து விடுமாறு செய்வதும் அவ்வளவு எளிதாக இருக்கவில்லை. இன அடிப்படையில் தாய்லாந்தியரும் சீனரும் நெருக்கமானவர்கள். ஆனால், மலாய்க்காரர்களும் சீனர்களும் அவ்வாறல்ல. அதிலும் அனேகமாக எல்லா மலாய்க்காரர்களும் முஸ்லிம்கள் என்னும் போது இனக்கலப்பு சாத்தியமாக இருக்கவில்லை. இந்த பிரச்சினையோடு கணிசமான எண்ணிக்கையினராகவுள்ள இந்தியர்களும் பாகிஸ்தானியர்களும், பங்களாதேசத்தவரும் போர்னியோ பிரதேசப் பழங்குடி மக்களும் வேறு சேருகின்ற போது பிரச்சினை மலைபோல பெரியதாகிவிட்டிருப்பதோடு எளிதில் தீர்க்கமுடியாததாகவுமிருக்கிறது.

இந்த இனப்பிரச்சினைக் காரணமாக சிக்கல் மிகுந்த மொழிப்பிரச்சினையும் தோன்றியிருக்கிறது. எல்லா இனங்களையும் சேர்ந்த மேட்டுக்குடியினர் மலாய் மொழியோடு அரசாங்க மொழியாக இருக்கும் ஆங்கிலம் பேசுகின்றனர். ஆனால், இதரர்களோடு தொடர்பு கொள்வது கடினமாக விருக்கிறது. சான்றாக, கடைகளிலும், சந்தைகளிலும், தெருக்களிலும் புழங்கும் மக்களிடம் பேசுவது இயலாததாகி விடுகிறது. அங்குள்ள சீனர்கள் 'மந்தாரின்' உருவத்திலுள்ள சீன மொழியையும், மலாய்க்காரர்கள் மலாய் மொழியையும், இந்தியர்கள் தமிழையும் சாரவாக்கிலுள்ளவர்கள் 'இபன்' (Iban) மொழியையும் பேசுகின்றனர். 1967-லிருந்து போர்னியோ பகுதிகள் நீங்கலாக மலேசியா முழுவதற்கும் மலாய்தான் தேசிய மொழியாக இருக்கிறது. இம்மொழிப் பிரச்சினை அரசாங்க அலுவலகங்களிலும் கல்வி நிலையங் களிலும் மக்களிடையே கருத்து வேற்றுமைகளையும், சச்சரவு களையும் தோற்றுவித்து வருகிறது. இருப்பினும் மலேசியர் கள் இப்பிரச்சினையை சுமுகமாகத் தீர்ப்பதற்கு முயற்சித்து வருகின்றனர்.

மேற்சொல்லப்பட்ட இன, மொழி வேறுபாடு பிரிந்து காணப்படும் மக்கள் சமயத்தாலும் வேறுபட

கின்றனர். அநேகமாக மலாய் இனத்தைச் சேர்ந்த எல்லோருமே முஸ்லீம்களாக இருக்கும்போது, சீனர்கள் கிறிஸ்துவர்களாக, பௌத்தர்களாக, கன்பூசியர்களாக இருக்கிறார்கள். இதரர்களில், இந்தியர்களும், பாகிஸ்தானியர்களும் பங்களா தேசத்தவரும் பெரும்பாலும் முஸ்லிம்களாக இருக்கிறார்கள். போர்னியோ பிரதேசங்களைச் சேர்ந்தவர்களும் பெரும்பாலும் முஸ்லிம்களேயாவர். சமயத்தால் வேறுபட்ட மக்கள் பலரும் அங்கு வாழ்வதால் ஏற்படக்கூடிய தொந்தரவுகளுக்கு சமயமும் காரணமாகி விடுகிறது. 1964-லில் சிங்கப்பூர் மலேசியாவின் பகுதியாக இருந்தபோது அங்கு ஏற்பட்ட இனக்கலகத்தைக் குறிப்பிடலாம். இந்தோனேசியாவைச்சேர்ந்த சதிகாரர்கள் அக்கலகத்தில் முக்கியப் பங்கு எடுத்துக்கொண்டனரென்பதோடு சமய சம்பந்தமான ஊர்வலம் சென்றபோதுதான் அந்தக் கலகம் ஏற்பட்டதென்பதும் முக்கியமானதாகும்.

இங்கு மொழியும், கல்வியும் தேசிய உணர்ச்சியோடு பின்னப்பட்டிருப்பதைக் குறிப்பிடுதல் பொருத்தமாகும். தென்கிழக்காசியாவில், மலேசியாவில் தேசிய உணர்ச்சி சற்று காலந்தாழ்ந்துதான் ஏற்பட்டது. இதற்கு முக்கிய காரணங்களாக இரண்டைக் குறிப்பிடலாம். முதலாவது ஆங்கிலேயர்கள் தங்களுடைய ஆட்சியைச் சுதேச அரசர்கள் மூலமாக செலுத்தியதால் காலனி ஆதிக்க எதிர்ப்பு வலுப்பெறவில்லை. இரண்டாவது, பல இனங்களும் கலந்திருந்த மக்கள் தொகை தேசிய உணர்ச்சியைத் தூண்டுவதாக இல்லை.

இன வேறுபாடுகள் பொருளாதாரத் துறையில்தான் மிகத்தெளிவாகத் தோன்றுகின்றன. சீனர்கள் கடும் உழைப்புக்கும் சிக்கனத்திற்கும் பெயர் பெற்றவர்கள். 'தன் கையே தனக்குதவி' என்ற பழமொழிக்கேற்ப பிறரை எதிர்பாராமல் எதையும் தேடிப் பெறக்கூடியவர்கள். உள்ளதைக் கொண்டு வாழ்க்கையை அமைத்துக்கொண்டு திருப்தியடையக் கூடியவர்கள். ஆனால், மலாய் இனத்தவரோ நன்றாக உண்டு களிப்பதில் ஆர்வமுடையவர்கள். அவர்களுக்குத் தேவையான அரிசியோ அதிக துன்பமில்லாமல் கிடைக்கக் கூடியதாக இருக்கிறது. எனினும், அவர்களை வேலைகளில் அமர்த்தி ஊக்குவித்து விட்டால் மலைபோன்ற சாதனைகளையும் இன்முகத்தோடு சாதிக்கவல்லவர்கள். சீனர்களுக்கும், மலாய்காரர்களுக்குமிடையே காணப்படும் இத்தகைய ஆழ்ந்த வேறுபாடு எளிதில் எவரும் அறியக்கூடிய

தாகும். சீனர்கள் பெரும்பாலும் தென்சீனுவிலிருந்து தென் கிழக்காசியப் பகுதிகளில் குடியேறியவர்கள். ஆனால், மலாய்க் காரர்களோ சீனர்களுக்கு மாறானவர்கள். நாட்டுப்புறங் களில் வாழ்கிறவர்கள். சீனர்கள் நகரங்களில் வாழ்கிறவர் கள். எனவே, அறைகூவல்களைக்கண்டு நடுங்காது, சமாளித்து முன்னேறி வருபவர்கள். அதனால் தொழிலிலும், வாணிபத் திலும் அந்நியர்களுக்கிடையிலும் மலாய்க்காரர்களைவிட முன்னணிக்கு வந்தவர்கள்.

சுதந்திரம் கிடைப்பதற்கு முன்பும், கிடைத்த பின்னரும் மலாய் இனத்தவரின் பொருளாதார நிலைமையைச் சீர்திருத்த பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அவர்களை வியாபாரத்தில் பயிற்றுவிப்பதற்கும் தேவையான மூலதனம் எளிதில் கிடைப்பதற்கும் பல திட்டங்கள் ஆரம்பிக்கப் பட்டன. குறிப்பாக, சுதந்திரத்திற்குப்பிறகு, நாட்டுப்புற முன்னேற்றத்திற்கும் நிலச்சீர்திருத்தத்திற்கும் பெரிய அளவில் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. 1957ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்த அரசியலமைப்பு குறிப்பிட்ட சிலவகைத் தொழில்களைச் செய்வதற்கு மலாய்க் காரர்களுக்குப் பாதுகாப்பு வழங்கியது. அப்பாதுகாப்பு ஏற்பாடுகள் 1963ஆம் ஆண்டு மலேசியா ஏற்படுத்தபட்டப் பிறகும் தொடர்ந்து நீடிக்கப்பட்டன. அதே சமயத்தில், மலாய்க்காரர்களைவிடப் பின்தங்கிய நிலையிலிருந்த போர்னி யோப் பகுதியைச்சேர்ந்த பூர்வீகக்குடிகளின் பொருளாதார மேம்பாட்டை அதிகப்படுத்துவதற்கும் நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டன. ஆனால், அத்திட்டங்கள் நீண்டகால அடிப்படையிலமைந்தவைகளாகும்.

மலேசியாவின் பொருளாதாரம் தனித்தன்மை வாய்ந்தது. அதனுடைய தனி நபர் சராசரி வருமானம் சிங்கப்பூர் நீங்கலாக இதர ஆசிய நாடுகளின் சராசரி வருமானத்தைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறது. மலேசி யாவினுள்ளேயே அச்சராசரி வருமானம் மாறுபடுகிறது. 1961ஆம் ஆண்டுக் கணக்குப்படி மலாயாவினுடைய ஆண்டு வருமானம் அமெரிக்க டாலரில் 270 டாலர்களாகும். சிங்கப்பூரின் வருமானம் 430 டாலர்களாகும். சாரவாக்கின் வருமானம் இதர ஆசிய நாடுகளின் வருமானத்தைக் காட்டிலும் மிக அதிகமானது. மலேசியாவில் சத்துள்ள உணவுப்பொருள்கள் இல்லாததால் மக்கள் ஆரோக்கியமான வர்களாக இல்லாவிட்டாலும், பட்டினிச் சாவுகள் கிடையாது.

பொதுவாக, தென்கிழக்காசிய நாடுகள் பொருளாதாரத் துறையில் உயர் வாழ்க்கைத்தரமுடையவைகளாக இருக்கின்றன.

இருப்பினும், மலேசியாவின் பொருளாதாரமும் சுபிட்சமும் உறுதியானதாக இருக்கவில்லை எனக் கருதப்படுகிறது. அதிகமான அளவில் இரப்பரையும், தகரத்தையும் (Tin) வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தால்தான் அந்நாட்டின் பொருளாதாரம் பாதிக்கப்படாமல் இருக்கும் என்றும் சொல்லப்படுகிறது. மலேசியாதான் இப்போது எல்லா நாடுகளையும்விட, அதிகமாக இயற்கை இரப்பரை உற்பத்தி செய்கிறது. அந்நாட்டிலுள்ள விளைபொருள்களில் இரப்பர் கால்பங்காகும். பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுவதில் கிடைக்கும் வருமானத்தில் இரப்பர் மூலமாகக் கிடைக்கும் வருமானம் பாதியாகும். ஆனால், இதர நாடுகள் உற்பத்திசெய்யும் இரப்பரினால் ஏற்படும் வியாபாரப் போட்டியினால், மலேசிய இரப்பர் வியாபாரம் பாதிக்கப்படுகிறது. இதைப்போலவே தகரத்தின் விலையும், அமெரிக்க நாட்டுப் போட்டியினால் குறைந்து வருவதோடு, தகர உற்பத்தியும் இப்போது கணிசமாகக் குறைந்துகொண்டே வருகிறது,

எனவே, மலேசியாவின் பொருளாதாரத்தைக் காப்பாற்றுவதற்கு இதர தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. அவைகளில் முதலாவதாக, குடியானவர்கள் இரப்பர் உற்பத்தியில் அதிகக் கவனம் செலுத்துவதற்குப் பதிலாக எண்ணெய் உற்பத்திக்குத் தேவையான வித்துக்களையும் இதர பொருள்களையும் பயிரிடத் தொடங்க ஊக்குவிக்கப்படுகிறார்கள். இரண்டாவதாக, சாயங்கள், வர்ணங்கள், தீப்பெட்டிகள், சிகரெட்டுகள், சோப்புகள், மருந்துப் பொருள்கள், ஊர்திகளுக்குத் தேவைப்படும் டயர்கள் ஆகியவைகளை உற்பத்திசெய்யும் தொழிற்சாலைகள் ஆரம்பிப்பதற்கும் அவைகளின் உற்பத்தியைப் பெருக்குவதற்கும் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றன. மலேசியா ஏற்படுத்தப்பட்டது முதல் சாரவாக், சபா பகுதிகளுக்கும் அத்தொழில்கள் விஸ்தரிக்கப்பட்டு வருகின்றன. இரப்பர், டின் பொருள்களினால் சிறந்த முறையில் இருக்கும் பொருளாதாரம் எதிர்காலத்தில் எப்படி இருக்கும் என்று தெளிவாகச் சொல்ல முடியாததால், மேற் சொல்லப்பட்ட துறைகளில் கவனம் செலுத்துவது அவசியமாகியிருக்கிறது.

சட்டம், அரசாங்கம் ஆகியதுறைகளில் மலேசியா மிகச் சிறப்பாக இருக்கிறது. அமெரிக்கா அல்லது ஆஸ்திரேலியாவைப்போல அது ஒரு கூட்டாட்சி நாடாக இருந்தாலும், கூட்டாட்சியின் அம்சங்கள் அல்லது சாரங்கள் என்று கருதப் படுபவைகளில் பலவற்றை அது ஏற்றுக்கொள்ளவில்லையெனத் தெரிகிறது. மலேசியக் கூட்டாட்சியிலுள்ள சாரவாக், சபா என்ற இரு இராச்சியங்கள் இதர இராச்சியங்களினின்றும் மாறுபட்ட அதிகாரங்களைப் பெற்றிருக்கின்றன. அங்ஙனமே, சிங்கப்பூரும் மலேசியாவில் அங்கம் வகித்த வரையிலும் தனிமுறையில் நடத்தப்பட்டது. இத்தனித்தன்மை, அந்தந்தப் பகுதிகளில் காணப்பட்ட நாகரிகம், முன்னேற்றம் ஆகியவைகள் மலேசியாவின் இதர பகுதிகளிலிருந்தவற்றினின்றும் மாறுபட்டிருந்ததால், அளிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

தென்கிழக்காசியாவில் பிலிப்பைனையும், சிங்கப்பூரையும் தவிர மலேசியா ஒன்றுதான் ஜனநாயக அடிப்படையில் தேர்தல்களை நடத்துகிறது. ஆனால், அரசியல் கட்சி முறையைப் பொறுத்தவரையிலும் மலேசியா, பிலிப்பைனினின்றும் விசேஷமாக மாறுபடுகிறது. பிலிப்பைனில் நாடுமுழுவதிலுமுள்ள தேசியக்கட்சிகள் இருக்கின்றன. மலேசியாவில் கட்சியமைப்பு வட்டாரத் தன்மையுடையதாக இருக்கிறது. இதற்கு ஒருவகையில் சபாவிலும், சாரவாக்கிலும் காலந்தாழ்ந்து அரசியல் மாற்றம் நிகழ்ந்ததைக் காரணமாகக் கூறலாம். ஆனால், மலாயாவின் உட்பகுதிகளில் இப்போதும் கட்சிகள் வட்டாரங்களின் ஆதரவைச்சார்ந்துதான் இருக்கின்றன. ஆரம்பத்தில் 1963இல் மலேசியா ஏற்படுத்தப்பட்டபோது, சிங்கப்பூரில் ஆளுங்கட்சியாக இருந்த மக்கள் செயல் கட்சி (People's Action Party) அதன் செல்வாக்கை மலேசியா முழுவதும் வளர்க்க முயன்றபோது, அரசியல், இன நடவடிக்கைகள் அதிகமாகிக் கலகங்கள் ஏற்பட்டன. அதற்குப் பரிகாரமாக சிங்கப்பூர் மலேசியக் கூட்டாட்சியிலிருந்து விலக வேண்டிவந்தது.

வெளிச்சக்திகளின் செல்வாக்கையும், ஊடுருவலையும் நிராகரிப்பதோ அல்லது அவைகளைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிடுவதோ முடியாது. மலேசியா போன்ற சிறிய நாட்டில் வாழும் மக்கள், தங்கள் இனத்தைச் சார்ந்த மக்கள் ... கடந்த பகுதிகளில் என்ன செய்கிறார்கள் என்பதனாலும் உ

படுகின்றூர்கள். இது ஒன்றல்லது இரண்டு தலைமுறை களாகவே மலேசியாவில் குடியேறி வாழும் சீனர்கள், இந்தியர்களைப்பொறுத்தமட்டிலும் உண்மையாகும். ஆனால், மொழியாலும், மதத்தாலும், சிலசமயங்களில் உறவின் முறையாலும் இந்தோனேசியர்களோடு தொடர்புள்ள மலாய்களும் இதற்கு மாறானவர்கள் அல்லவென்பதும் உண்மையாகும். மேலும் 1963ஆம் ஆண்டு முதல் இந்தோனேசியா மலேசியாவிற் கெதிராக 'மோதுங் கொள்கையை'ப் பின்பற்றியது. அக்கொள்கை ஆயுதந்தாங்கி மலேசியாவுடன் சண்டைபோடு மளவுக்கு மக்களுக்கு ஊக்கம் அளித்ததோடு, மலேசியாவில் நாசவேலைகளில் ஈடுபடுவோருக்கும் உற்சாகமளித்தது. இந்த கொள்கைக்கு முக்கியக் காரணம் மலேசியா ஏற்படுத்தப் பட்டதுதான். ஆனால், இக்கொள்கை, இந்தோனேசியாவில் ஏற்பட்டிருந்த பொருளாதாரக் குழப்பம், திறமையின்மை ஆகியவற்றிலிருந்து மக்களுடைய கவனத்தை வேறுபக்கம் திருப்புவதற்கும், அகண்ட இந்தோனேசியா (Greater Indonesia) என்ற போர்வையின் கீழ் நாடு பிடிக்கும் கொள்கையில் ஆர்வத்தை வளர்ப்பதற்கும் துணைபுரிந்தது. காரணங்கள் என்னவாக இருந்தாலும் அக்கொள்கை மலேசியாவை கணிசமாகப் பாதித்தது. அது, மலேசியாவில் குறிப்பாக சாரவாக்கிலிருந்த சீனர்கள் நாசவேலைகளில் ஈடுபடுவதற்கு ஊக்கமளித்தது. இனக்கலகங்களை ஏற்படுத்தியது. இவை காரணமாக பாதுகாப்புச் செலவு அதிகரிக்கப்பட்டபோது பொருளாதார முன்னேற்றம் தடைப்பட்டது. மலேசியாவை விடப் பத்து மடங்கு அதிகமான மக்கட்தொகையையுடையதாகவிருந்த இந்தோனேசிய எதிரியைச் சமாளிக்கப் போதுமான வசதியில்லாத காரணத்தால், மலேசியாவானது பிரிட்டன், ஆஸ்திரேலியா, நியூசிலாந்து ஆகிய நாடுகளின் இராணுவ உதவியைச் சார்ந்திருக்க வேண்டியிருந்தது. எனவே, மலேசியா சுதந்திர நாடல்ல, இங்கிலாந்தின் குடியேற்ற நாடுதான் என்று இந்தோனேசியா மலேசியாவைக் கடுமையாகத் தாக்கிப் பேசமுடிந்தது.

இத்தகைய எதிர்ப்புக்களுக்கிடையே, மலேசியா எவ்வாறு தொடர்ந்து தன் சுதந்திரத்தை நிலைநாட்டிக் கொள்ள முடிந்தது என்பது பலருக்கும் ஆச்சரியமாக இருக்கும். 1965ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் சிங்கப்பூர் மலேசியக் கூட்டாட்சியமைப்பிலிருந்து பிரிந்து சென்றபோது, மலேசியாவின் எதிர்காலம்பற்றி பலரும் அச்சங்கொண்டார்கள்.

ஆனால், அதேசமயத்தில் இந்தோனேசியாவின் 'எதிர்க்கும் கொள்கை' நீக்கிக்கொள்ளப்படும் என்ற அறிவிப்பு 1966ஆம் ஆண்டு ஜூன்மாதம் வெளியிடப்பட்டபோது சிறிது நம்பிக்கையேற்பட்டது. அடுத்து வரும் அத்தியாயங்களில் மலேசியாவின் அரசியல், சட்டபூர்வமான நிலையங்களைப் பற்றியும், எவ்வாறது தன் சுதந்திர இயக்கத்திற்குப் பாடுபட வேண்டியிருந்ததென்பதைப் பற்றியும் விரிவாகக் காணலாம்.

# 2. 1945-வரையிலும் மலாயாவின் வரலாறு

மலேசியா பழம்பெரும் வரலாற்றுச் சிறப்புடையது. அங்கு கிறிஸ்துவ சகாப்தம் தோன்றுவதற்கு முன்னரே மக்கள் வாழ்ந்திருந்தனர். அவர்கள் இந்தியாவுடனும், சீனுவுடனும் வணிகத் தொடர்புடையவர்களாக இருந்திருக்கின்றனர். மலேசியாவிலிருந்த புராதன இராச்சியங்களில் முக்கியமானது இலங்கசுகா என்பதாகும். அந்த இராச்சியம் கம்போடியாவில் புனுனைத் (Fou–nan) தலைநகராகக் கொண்டிருந்த பேரரசுக்குக் கட்டுப்பட்டதாக இருந்திருக்கக்கூடுமென்று வரலாற்று ஆசிரியர்களால் கருதப்படுகிறது. அப்பேரரசு வீழ்ச்சியுற்றபிறகு மலாயாவின் மேற்குக் கடற்கரையோரப் பகுதிகளிலிருந்த இலங்கசுகா, கேடா, (Kedah) போன்ற இராச்சியங்கள், பௌத்தம், இந்து போன்ற சமயங்களால் ஈர்க்கப்பட்டு சுமத்ராவில் பலம்பாங்கைக் (Palembang) கேந்திரமாகக் கொண்டு பேரரசொன்றை நிறுவி ஆட்சி செய்த திருவிசயன் என்ற அரசருக்குக் கப்பங் கட்டுபவைகளாக இருந்தன. பதிமூன்று, பதினான்கு ஆகிய நூற்றாண்டுகளில் திருவிசயன் அதிகாரம் மங்கிப்போன காலத்தில் ஜாவாவை அடிப்படையாகக்கொண்ட மஜாபகிட்டு (Majapabit) பேரரசெழுந்து மலாயாவின் பகுதிகளையும் ஆண்டது. அதன் பிறகு கி. பி. 1400இல் பலம்பாங்கைச் சேர்ந்த அனுதை இளவரசரொருவர், இக்காலத்தில் சிங்கப் பூரென்றழைக்கப்படும் அந்தக் காலத்து டிமாசெக்கில் (Temasek) கொஞ்ச காலந்தங்கிவிட்டுப் பிறகு மலாக்கா (Malacca) சென்று அங்கு தன்னை அரசர் என்று பிரகடனப் படுத்திக் கொண்டாரென்று மலாயாவில் பரம்பரையாக வழங்கும் செய்திகள் கூறுகின்றன. அவர் தன்னை சையாமின்

(Siam) தாக்குதலிலிருந்து காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு சீனவின் அங்கீகாரத்தைப் பெற்றார். இதற்குச் சுமார் நூறுண்டுகளுக்கு முன்னரிருந்தே சுமத்திராவிலும் வடமலாயாப் பகுதிகளிலும் பரவியிருந்த இஸ்லாமியச் சமயத்தை மேகாத் இஸ்கந்தர் ஷா (Megart Iskander Shah) என்ற பெயரோடு அவ்வரசர் முகமதிய மதத்தைத் தழுவினர். அந்த நூற்றுண்டின் அடுத்த ஆண்டுகளில் சையாமின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் மலாயா தீபகற்பத்தின் அண்மையிலிருந்த இராச்சியங்களில் தன் ஆதிக்கத்தை மலாக்கா இராச்சியம் விரிவுபடுத்தியது. அவ்வரசு திருவிசயப் பேரரசின் வாரிசாக சுமத்ரா, இந்தியா, அரேபியா, பாரசீகம், சீன ஆகிய நாடுகளோடு வணிகம் செய்து வந்தது. வணிகத்தின் அடிச்சுவட்டைப் பின்பற்றி சமயம் வந்தது. விரைவில் மலாக்கா முகமதிய மதத்தின் தலைமைப் பீடமாக மாறியது. மலாயா பற்றி மேலே சொல்லப்பட்ட வரலாறு 'தென்கிழக்கு ஆசியாவின் வரலாறு' என்ற நூலின்கண், டி. ஜி. இ. ஹால் என்பவரால் விளக்கியுரைக்கப்பட்டிருக்கிறது.

### அயல்நாட்டார் வருகையும் ஆட்சியும்

மலாக்கா அரசு உச்சநிலையிலிருந்தபோது தூரகிழக்குப் பகுதிகளோடு வியாபாரம் செய்யும் நோக்கத்தோடு வணிக வழியொன்றை நிறுவ முயன்று வந்த போர்த்துக்கீசியர்களுக்கு அது பணிய நேர்ந்தது. 1948இல் இந்தியா வந்தடைந்த வாஸ்கோடகாமாவுக்குப் பிறகு 1509இல் போர்ச்சுகலிலிருந்து அல்புகர்க்கு (Albuquerque) என்பவர் கப்பற்படையொன்றை மலாக்காவுக்கு அனுப்பினர். அதற்கு இரண்டாண்டுகள் பின்னர் அவரே மலாக்காத்துறைமுக நகரத்தைப் பிடித்தார். மலாக்கா அரசகுடும்பம் தெற்குப் பகுதிக்குச் சென்று இறுதியாக ஜோஹோரில் (Johore) புதிய தலைநகரத்தை நிறுவியது. போர்த்துகீசியர்கள் ஆரம்பத்திலிருந்தே அங்கு படைத்தளமொன்றை அமைத்துக் கொண்டிருக்கவில்லை. அதனல், அவர்கள் ஜோஹோரின் தாக்குதல்களுக்கும், வடசுமத்ராப் பகுதியிலிருந்த முகமதியர்களின் தாக்குதல்களுக்கும் ஆளாயினர். அச்சமயத்தில் வியாபாரத்தை நோக்கமாகக்கொண்ட டச்சுக்காரர்களும் 1606இல் போர்த்துகீசியர்களின் கடற்படையைத் தாக்கித் தோற்கடித்தனர். அதனல் டச்சுக்காரர்களுக்கு உடனடியான ஆதாயமெதுவுமில்லாவிட்டாலும் 1619ஆம் ஆண்டுக்

காலத்தின்போது அவர்கள் படேவியா, (Batavia) ஜாவா (Java) போன்ற பகுதிகளில் இடம் பிடித்துக்கொள்ள முடிந்தது. 1641இல் டச்சுக்காரர்கள் மலாக்காவை இறுதியாகக் கைப்பற்றியபோது அவர்களுடைய முக்கிய நோக்கம், மலாக்காவை வர்த்தக இணைப்புமுறையொன்றின் பகுதியாகச் செய்வதும், போர்த்துகீசியர்களின் வணிகத்திற்கு வசதியில்லாமல் செய்வதுமாகும்.

அடுத்த ஒரு நூற்றாண்டுக்காலத்திற்கு, டச்சுக்காரர்கள் மலாக்காவைச் சுற்றியிருந்த பகுதிகளில் கிடைத்த தகரம் போன்ற பொருள்களின் ஏகபோக வியாபாரத்தைப் பெறுவதை நோக்கமாகக்கொண்டு அதற்குத் தகுந்தாற்போல இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டனர். இதற்கிடையில் பதினெட்டாம் நூற்றாண்டில் பியுகிகள் (Bugis) ஜோஹோர் அரசைத்தாக்கி தங்கள் ஆட்சியை ஏற்படுத்தினர். அந்த பியுகிகள் ரியோவை (Rio) முக்கியமான இடமாகக்கொண்டு ஆண்டு வந்தனர். 1785இல் டச்சுக்காரர்கள் படை பலத்தின் துணைகொண்டு, பியுகிகளின் ஆட்சியைத் தற்காலிகமாக நிறுத்தி, ரியோவில் தங்கள் பிரதிநிதியொருவரைத் (Resident) திணிப்பதில் வெற்றி பெற்றனர்.

அதன் பிறகு வடமலாய்ப் பகுதியிலிருந்த கேடா, கெலாந்தன் (Kelantan) டிரெங்கானு (Trengganu) இராச்சியங்கள் சையாம் ஆட்சியின்கீழ் வந்தன. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக்காலத்தில் ஆங்கிலேயர்கள் தோன்றினர். அவர்களும், இதர ஐரோப்பியர்களைப்போல வியாபார நோக்கத்துடன் வந்தனரென்றாலும், முக்கியமாக சீனாவுடன் வியாபாரத்தைப் பெருக்குவதற்கு குடியிருப்புகளுக்கானத் தகுந்த இடங்களைத் தேர்ந்தெடுத்தமைப்பதும், பிரெஞ்சுக்காரர்கள் இந்துமா கடலில் ஆதிக்கம் பெறாமல் தடுப்பதும் அவர்களின் குறிக்கோள்களாக இருந்தன. அப்போது, சையாமியர்களுக்கு எதிராக உதவி பெறுவதில் ஆர்வமுடையவராக இருந்த கேடாவின் சுல்தான், கிழக்கிந்திய வர்த்தகக் கம்பெனியின் சார்பாகச் செயலாற்றி வந்த தலைவர் பிரான்சிஸ் லைட் (Captain Francis Light) என்பவருக்கு 1786ஆம் ஆண்டு பினாங்குத்தீவைக் குத்தகைக்குத் தந்தார். அதற்குக் கைமாறாக ஒரு பெரிய தொகையை ஆண்டுதோறும் சுல்தானுக்குத் தந்துவர கம்பெனி ஒப்புக்கொண்டது. ஆனால், கேடா இராணுவ உதவிக்கான வாக்குறுதியைப் பெறத்தவறிவிட்டது. அதனால்,

சையாமியர்கள் 1821இல் கேடாவைத்தாக்கி வெற்றி பெற்று அதை 1842 வரை நேரிடையாக ஆட்சி செய்துவந்தனர்.

டச்சுக்காரர்களுக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்கும் நடந்த போரின் விளைவாக 1795ஆம் ஆண்டு ஆங்கிலேயர்கள் மலாக்காவையும் பினங்குடன் இணைத்துக்கொண்டனர். பிறகு அது டச்சுக்காரர்களுக்கு 1824ஆம் ஆண்டின் ஆங்கிலேய-டச்சுக்காரர்கள் ஒப்பந்தப்படி திருப்பித்தரப்பட்டதென்றாலும், மாறாக சுமத்ராவிலிருந்த பென்கூலன் (Bencoolen) என்ற இடத்தை ஆங்கிலேயர்கள் பெற்றனர். இதனால், டச்சுக்காரர்களுக்கு மலாயாவில் அதற்குப்பிறகு பாத்தியம் கிடையாதென்பது முடிவாயிற்று. அதே சமயத்தில் ஆங்கிலேயர்களின் செல்வாக்கு சிங்கப்பூருக்கும் பரவியது. அவ்வளவாக மக்கள் அதிகமாக இல்லாத சிங்கப்பூர் தீவு கம்பெனி ஊழியத்தில் தன் உழைப்பால் உயர்ந்த சர் ஸ்டாம் போர்டு (Sir Stam Ford) என்பவரால் 1819ஆம் ஆண்டு பிற்காலத்தில் பிரபலமடைவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. சிங்கப்பூர் ஒரு சுதந்திரத்துறைமுகமாக வேண்டுமென்பது ஸ்டாம்போர்டின் எண்ணமாகும். இந்த அவருடைய எண்ணம் எந்த அளவிற்கு வெற்றி பெற்றிருக்கிறது என்பது அதன் மக்கள் பெருக்கத்திலிருந்தும் வியாபார வளர்ச்சியிலிருந்தும் தெரியவரும். சிங்கப்பூர், பினங்கு, மலாக்கா ஆகிய நீர்ப்பாங்குப் பகுதிகள் (Straits Settlement) மூன்றும் 1826இல் இணைக்கப்பட்டு இந்தியாவிலிருந்து ஆட்சி செய்யப்பட்டன. இந்த மூன்று இராச்சியங்களில் சிங்கப்பூர் அபரிமிதமான வளர்ச்சியையடைந்தது. ஆனால், மலாக்காவின் வளர்ச்சி மெதுவாகவே இருந்தது. 1832இல் பினங்கிற்குப் பதிலாக, சிங்கப்பூர் 'நீர்ப்பாங்குப் பகுதிகளின்' தலைநகரமாக ஆக்கப்பட்டது. 1826இல் கேடா, கெலாந்தன், டிரெங்கானு இராச்சியங்கள் சையாமுக்குக் கட்டுப்பட்டவை என்பதை ஏற்றுக்கொண்டபோது, இதரத்தீபகற்பப் பகுதிகள் ஆங்கிலேயர்களின் ஆட்சிக்குட்பட்டவை என்பது உறுதியாயிற்று. அப்போது ஆங்கிலேயர்கள் 'நாடு பிடிக்கும் கொள்கை'யில் ஆர்வமுடையவர்களாக இல்லாதிருந்தனர். ஏனெனில், அத்தகைய கொள்கையை நடைமுறைக்குக் கொண்டுவர நிறைய பணம் தேவைப்பட்டிருக்கும். சுயதேவைக்கும் அதிகமாக வருமானமில்லாத மலாயாவின் பொருளாதாரம் அத்தேவையைப் பூர்த்தி செய்யமுடியாது என்பதோடு ஆங்கிலேயர்களின் நோக்கம் சையாமியர்கள் அவர்களுடையச் செல்வாக்கை

இப்பகுதிகளில் வளர்க்கமுடியாமல் செய்வதும், கடற் கொள்ளைக்காரர்களின் கொட்டத்தையடக்குவதுமேயாகும்.

**சுதேச அரசாங்கம்**

மேற்குக் கடற்கரையோர இராச்சியங்களில் எத்தகைய ஆட்சி நடைபெற்றதென்பதை ஜே. எம். கல்லிக் என்பவர் விளக்கமாக எழுதியுள்ளார்.[1] அப்பகுதி இராச்சியங்களில் ஆங்கிலேயர்கள் நேரிடையாக ஆட்சி செய்யாமல் அங்கிருந்த சுல்தான்களை அரசர்களாக ஏற்று அவர்களுடைய ஆடம்பர முறைகளை அனுமதித்து அவர்கள் மூலமாக தங்கள் கட்டுப் பாட்டைச் செலுத்தி வந்தனர். இவ்வாறு ஆங்கிலேயர்கள் செய்ததற்குக் காரணம், சுதேச அரசர்கள்தான் மக்க ளிடத்தில் ஒற்றுமையை வளர்த்து நிலைநாட்ட முடியுமென்ப தாகும். இந்த சுதேச அரசர்களுக்கும் கீழே பல தலைவர்கள் (Chiefs) இருந்தனர். அவர்கள், அரசர்கள் தங்கள் அதிகாரத்தில் குறுக்கிடாமல் இருந்தவரையிலும் தங்கள் விருப்பம்போல நடந்தனர். மலாயாக் குடியானவர்களிடம் வரி வசூல் செய்தனர். வரித்தொகையின் ஒரு பகுதியை அரசர்களுக்கும் தந்தனர். நீர்ப்போக்குவரத்துகளை ஒழுங்கு படுத்தி சுங்கம் வசூலித்தனர். சுருக்கமாக சொல்லவேண்டு மானல் அத்தலைவர்களின் ஆதரவில்லாமல் மலாயாவில் எவரும் எதுவும் செய்யமுடியாதென்ற நிலைமை இருந்து வந்தது. அவர்கள் தங்களைச்சுற்றி எப்போதும் போர் செய்யவல்ல ஆட்களை வைத்துக்கொண்டிருந்தனர். இதில் முக்கியமாகக் கவனிக்கவேண்டியது யாதெனில், அங்கு பஞ்ச மென்பதே கிடையாது. மக்கள்தொகை குறைவாக இருந்தது. நீர்வளம் மிகுந்திருந்தது. எனவே, விருப்பம்போல தலைவர் கள் அதிகாரம் செலுத்தமுடிந்ததென்பதாகும்.

**ஆங்கிலேய விஸ்தரிப்பும் மறைமுக ஆட்சியும்**

ஆனால், ஆங்கிலேயர்கள் இத்தகைய கொள்கையை மலாயாவின் உள்நாட்டுப்பகுதிகளை பொருத்தவரை பின்பற்ற வில்லையென்பது தெளிவு. தலைவர்களுடைய சர்வாதிகார-குழப்ப ஆட்சி தங்களுடைய வணிகத்திற்குத் தடையாக இல்லாதிருந்தவரை அதை அனுமதித்து வந்தனர். ஆனால், பத்தொன்பதாம் நூற்றாண்டின் மையக்காலத்தில் மலாய்

[1] J. M. Gullick, Indigenous Political Systems of Western Malaya, 1958.

இனத்தவர் தங்களுக்குள் அடிக்கடி சண்டை போட்டுக் கொண்டதனால் நிலைமை மாறியபோது, ஆங்கிலேயர்களும் அவர்களுடைய கொள்கையை மாற்றிக்கொண்டனர். மேலும், பெராக்கிலும் (Perak), செலாங்கோரிலும் (Selangor) பல தகரச் சுரங்கங்களில் உற்பத்தி அதிகரித்தது. சீனர்கள் அவைகளில் பெருமளவில் ஈடுபட்டிருந்தனர். பொருளாதாரத் துறையில் அதிக வருவாய்க்கானத்துறைகள் புதியனவாக ஏற்பட்டதால் அரசர்களுக்கும், தலைவர்களுக்குமிடையே ஒரு புறமும், சீனர்களுக்கும், மலாய் இனத்தவர்களுக்குமிடையே மறுபுறமும் சண்டை வலுப்பெற்றது. சூழ்நிலை பொருத்தமாக அமையவே, ஆங்கிலேயர்கள், தங்கள் நலனைப்பேணி பாதுகாக்கும் திட்ட அடிப்படையில், சந்தர்ப்பத்திற்குத் தகுந்தாற்போல சுதேச அரசர்களுடன் சேர்ந்து கொள்வதும் அவர்களை எதிர்ப்பதுமாக இருந்தனர். 1873இல் 'நீர்ப்பாங்கு பகுதிகளின்' கவர்னராக பதவியேற்ற சர் ஆண்ட்ரூ கிளார்க்கு (Sir Andreu Clarke) என்பவர், உள்நாட்டுப் பகுதி இராச்சியங்கள் ஒவ்வொன்றிற்கும் ஆங்கிலப் பிரதிநிதியொருவரை நியமித்து, அப்பிரதிநிதியின் சொற்படி இராச்சிய சுல்தான் ஒவ்வொருவரும் ஆட்சி நடத்தவேண்டுமென்பதை பல எதிர்ப்புகளுக்கிடையில் ஏற்படுத்தினார். இவ்வாறு பிரதிநிதி ஆலோசனை அடிப்படையில் ஆட்சி நடத்தப்பட்ட இராச்சியங்கள், பெராக்கு (berak), செலாங்கோர், பகாங்கு (Pahang), நேகரி செம்பிலான் (Negri Sembilan) ஆகியவைகளாகும்.

இந்த நான்கு இராச்சியங்களும் 'நீர்ப்பாங்கு பகுதி' இராச்சியங்களிலிருந்த சுதேச ஆட்சிக்கு நேர்மாறான மறைமுக ஆட்சிக்கு எடுத்துக் காட்டுகளாகும். இத்தகைய ஆங்கிலேய மறைமுக ஆட்சிமுறை மலேயாவில்தான் தோன்றியதென்றும்-அடிக்கடி சொல்லப்படுவதுபோல-ஆப்பிரிக்காவில் தோன்றியதல்லவென்றும் 'மலாயாவின் அடிச்சுவடுகள்' என்ற நூலில் சர் பிராங் சுவெட்டன் காம் என்பவர் குறிப்பிட்டிருக்கிறார்.[1] 'மறைமுக ஆட்சியின் நன்மைகளாவன: காலனி ஆதிக்க நாட்டைப் பொறுத்த வரை பொருளாதாரச் சிக்கனம் கிட்டுகிறது. ஆளப்படுபவர்கள் காலனி ஆதிக்க அரசின் ஆட்சிக்கெடுபிடியைத் தெளிவாக அறிய முடியவில்லை.'[2] இருப்பினும் இரண்டாவதாகச் சொல்லப்பட்ட 'நன்மை' தெளிவற்றதாகும்.

[1]Footprints in Malaya (London : Hutchinson) P. 101

[2]Rupert Emerson, Malaysia, A Study in direct and indirect Rule. P. 7

ஏனெனில், மறைமுக ஆட்சி முன்னேற்றத்திற்குத்தடை விளைவிக்கக்கூடியதோடல்லாது மக்களுக்குச் சேரவேண்டிய நன்மைகளைத் தடுத்து விடுகிறதென்று கருதப்படுகிறது.

**கூட்டாட்சியமைப்பில் இருந்த இராச்சியங்களும் அதற்கு வெளியே இருந்த இராச்சியங்களும்—அதிகாரம் பன்முகப்படுத்தப்படல்.**

நான்கு இராச்சியங்களில் மறைமுக ஆட்சிமுறை ஏற்படுத்தப்பட்டபோது அவை ஒவ்வொன்றிலுமிருந்த ஆங்கில அரசாங்கப் பிரதிநிதி நிர்வாகத்தைத் தன் விருப்பம் போல நடத்த முற்பட்டதால் அவற்றிற்கிடையே நிர்வாக இணைப்பேற்படுத்துவது அவசியமாயிற்று. எனவே, அந்த இராச்சியங்கள் 1895இல் 'கூட்டாட்சியாக' அமைக்கப் பட்டன. அக் கூட்டாட்சி, பலராலும் ஏற்கப்பட்ட கூட்டாட்சித் தத்துவ அடிப்படையில் அமைக்கப்படவில்லை யென்பது இங்கு தெளிவாக்கப்படவேண்டும். ஏனெனில் அவ்வமைப்பில் கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் இராச்சிய அரசாங்கங்களுக்குமிடையில் அதிகாரப்பங்கீடு எதுவும் செய்யப்படவில்லை. அந்த நான்கு இராச்சியங்களின் அரசர் களும் ஆங்கில அரசாங்கப் பொதுப்பிரதிநிதி (Resident General) யொருவரை ஏற்கவும் அவருடைய ஆலோசனைப்படி நடக்கவும் சம்மதித்தனர். மலாய் மதம், பழக்க வழக்கங்களில் அரசர்கள் சுதந்திரமாக நடந்துகொள்ள அனுமதிக்கப்பட்டார்கள். அந்த இராச்சியங்களிலிருந்த நான்கு பிரதிநிதிகளும் பொதுப் பிரதிநிதிக்கு பொறுப்புடைவர்களாக்கப்பட்டனர். பொதுப் பிரதிநிதி 'நீரப்பாங்குப் பகுதி' கவர்னருக்கு பொறுப் புடையவராகச் செய்யப்பட்டார். கவர்னர் அந்த நான்கு இராச்சியங்களின் கூட்டாட்சிக்கு உயர் ஆணையாளராக (High Commissioner) நியமிக்கப்பட்டார். அந்த நான்கு இராச்சியங் களிலிருந்த ஒவ்வொரு முக்கியமான துறைக்கும் தனியொரு ஆட்சித்துறைத் தலைவர் நியமிக்கப்பட்டு அவர் பொதுப் பிரதிநிதிக்கு பொறுப்புடையவராக்கப்பட்டார். இதனால் நான்கு இராச்சியங்களிலும் ஒரேமாதிரியான கொள்கைகளும், நடவடிக்கைகளும் பின்பற்றப்படுவதற்கு வழியேற்பட்டது. 1909இல் அரசர்கள், பொதுப் பிரதிநிதி, நான்கு பிரதிநிதி கள், கவர்னரால் நியமிக்கப்பட்ட உத்தியோகச் சார்பில்லாத நான்கு உறுப்பினர்கள் ஆகியோரைக் கொண்ட கூட்டாட்சி மன்றம் (Federal Council) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. மலாய் இராச்சியங்களின் கூட்டாட்சிக்கு உயர் ஆணையாளர் என்ற முறையில் கவர்னர் அதற்குத் தலைமை வகித்தார். 1911இல்

பொதுப் பிரதிநிதிப்பதவி கைவிடப்பட்டு, அப்பதவி சார்ந்த அலுவல்கள் 'தலைமைச் செயலர்' ஒருவருக்குத் தரப்பட்டன. இம்மாற்றங்கள், ஆட்சித்துறை அதிகாரக்குவிப்புக்கு வகை செய்யும் என்று பயந்த அரசர்களின் எண்ணத்தைச் சரிசெய் வதற்காகக் கொண்டுவரப்பட்டவையெனச் சொல்லலாம். ஆனால், நடைமுறையில் அவை நேர் எதிரான விளைவை ஏற்படுத்தின. இராச்சியங்களின் சட்ட அதிகாரங்கள் குறைந்தன. 1877இல் பெராக்கில் ஆரம்பித்து எல்லா இராச்சியங்களிலும் இராச்சிய மன்றங்கள் ஏற்பட்டிருந்தன. இராச்சிய மன்றங்களில் ஆங்கிலப் பிரதிநிதியும், அரசரும் உறுப்பினர்களாக இருந்தனர். அவை இராச்சியங்களுக்குச் சட்டமியற்றும் அதிகாரம் பெற்றிருந்தன. ஆனால், புதியதாக ஏற்படுத்தப்பட்டக் கூட்டாட்சி மன்றம் இயற்றிய சட்டங்கள் கூட்டாட்சியிலிருந்த இராச்சியங்களனைத்திலும் செல்லுபடி யாகுமென அறிவிக்கப்பட்டது. இராச்சிய மன்றங்கள் இயற்றிய சட்டங்கள் கூட்டாட்சி மன்றம் இயற்றிய சட்டங் களுக்கு மாறுபட்டவைகளாக இருந்தால் அவை செல்லுபடி யாகமாட்டா. மேலும், அரசர்கள் கூட்டாட்சி மன்றத்தில் உறுப்பினர்களாக இருந்ததால் தங்கள் அதிகாரங்கள் அதிகரிக்கவில்லையென்பதையும் உணர்ந்தார்கள். இதற்கு முக்கியக் காரணம், அரசர்கள் அம்மன்றத்தின் விவாதங்களில் தாராளமாகப் பங்கெடுத்துக்கொள்வது அவர்களின் அந்தஸ் திற்குக் குறைவானதென்ற எண்ணமேயாகும். 1927ஆம் ஆண்டு முதல் அவர்கள் அம்மன்றத்தில் அங்கம் வகிக்கவில்லை. அதற்குப் பதிலாக அரசர்களின் தர்பார் (Durbar of Rulers) ஒன்று அரசர்களையும், உயர் ஆணையாளரையும், கூட்டாட்சிச் செயலரையும் உறுப்பினர்களாகக் கொண்டு அமைக்கப் பட்டது. இம்மன்றம், தற்போதைய அரசியல்மைப்பின் பகுதியாக விளங்கும் 'அரசர்கள் மாநாட்டின்' (Conference of Rulers) முன்னோடியாகும்.

1904இல் இங்கிலாந்தும் பிரான்சும் செய்துகொண்ட உடன்படிக்கைக்குப் பிறகு ஆங்கிலேயர்களுக்கு பிரெஞ்சுக் காரர்களின் தொந்தரவு இல்லாமல் போயிற்று. அதன் பிறகு 1907இல் நான்கு வடபகுதி இராச்சியங்களும் ஆங்கிலேயர் களின் ஆட்சிக்குக் கீழ்வந்தன. அவைகள் ஆங்கில ஆலோசகர் களை ஏற்றன. 1914இல் ஜோஹோர் சுல்தானும் ஆங்கிலேயர் களின் நட்பை வரவேற்றார். இந்த ஐந்தும் அதாவது கேடா (Kedah), பெர்லிஸ் (Perlis), கெலாண்டன் (Kelantan), டிரெங்கானு (Trengganu), ஜோஹோர் (Johore) இராச்சியங்

களும் கூட்டாட்சியில் சேராத இராச்சியங்களாக நடத்தப்பட்டன.

இரண்டாம் உலகப்போருக்கு முன்பு மேலும். பல அரசியல் மாற்றங்கள் நிகழ்ந்தன. ஆனால், அவை நீர்ப்பாங்கு பகுதிகள், கூட்டாட்சி மலாய் இராச்சியங்கள், கூட்டாட்சியில் சேராத இராச்சியங்கள் என்று மூன்று பிரிவுகளாகக் காணப்பட்ட அமைப்பை அழித்து விடவில்லை. இருப்பினும், கூட்டாட்சிக்கு வெளியேயிருந்த இராச்சியங்களை கூட்டாட்சியினுள் கொண்டுவரவேண்டுமென்பதுதான் ஆங்கிலேயர்களுடைய நோக்கமாக இருந்தாலும், அதை வலுக்கட்டாயமாக ஏற்படுத்த முயலாமல், கூட்டாட்சியினுள் பல முன்னேற்றங்களை ஏற்படுத்தி, அதனால் அவைகளைக் கவர்ந்து அதைச் செய்யவேண்டுமென்று கருதினர். எனவே, ஆங்கிலேயர்கள் கூட்டாட்சியினுள் இருந்த இராச்சியங்களில் அதிகாரப் பன்மைக்கொள்கையைப் பின்பற்றினர். அதனால் கூட்டாட்சி வரவு-செலவுத் திட்டத்திற்குப் பதிலாக இராச்சிய வரவு செலவுத் திட்டங்கள் ஏற்பட்டன. இராச்சிய நிர்வாகம் பலப்படுத்தப்பட்டது. 1935இல் தலைமைச் செயலருக்குப் பதிலாக அந்தஸ்தில் குறைவான கூட்டாட்சிச் செயலர் நியமிக்கப்பட்டார். இந்த அதிகாரப் பன்மைத்திட்டம் கூட்டாட்சி மன்றத்திலிருந்த ஐரோப்பிய, சீன உறுப்பினர்களால் எதிர்க்கப்பட்டது. அவர்கள், கூட்டாட்சியிலிருந்த இராச்சியங்களைக் கட்டுப்படுத்த முடியாமல் போய்விடுமென்றும், நிதிஸ்திரத்தன்மை பாதிக்கப்படுமென்றும், வணிகத்திற்கான சாதக சூழ்நிலைகள் குறைந்து போகுமென்றும் பயந்தனர். மேலும், தலைமைச் செயலரின் அதிகாரம் குறைக்கப்படுவதால் யார் அல்லது எந்த நிறுவனம் தலைமைச் செயலரிடமிருந்து பிடுங்கப்பட்ட அதிகாரங்களைப் பெறக்கூடுமென்பதும் தெளிவாகவில்லை. அதனால் அது உயர் ஆணையாளரின் ஆதிக்கத்தை அதிகப்படுத்தாதா என்ற வினா எழுந்தது. இந்தக் கருத்தில் அதிகாரக்குவிப்பு எழாதா என்று கேட்கப்பட்டது. இப்படிப் பல பிரச்சினைகள் ஏற்பட்டதால், கூட்டாட்சியில் நிலைமை சீர்திருந்தவில்லை. அதனில் சேராத நாடுகள் அதன் பிறகும் தனியாகவே இருந்தன. மலாயாவிலிருந்த மூன்று பகுதிகளுக்கும் 'நீர்ப்பாங்கு பகுதிகளின்' கவர்னரே தலைவராக இருந்ததோடு அவற்றின் நிர்வாகத்திற்கும் ஆங்கில அரசாங்கத்திற்கும் பொறுப்பேற்றார்.

அரசியல் மாற்றங்கள் பல ஏற்பட்டபோதிலும் இரண்டாம் உலகப்போருக்கு முன்பு வரையிலும் அங்கு

ஜனநாயக அடிப்படையிலானத் தேர்தல் நடைபெறும் அறி குறிகள் கிடையாது. மேற்கத்திய கருத்துகள் பிரபலமாக இருந்த 'நீர்ப்பாங்கு பகுதி'யில் முடியாட்சித் தன்மை குடி யேற்ற அரசாங்கம் ஏற்பட்டிருந்தது. அங்கு கவர்னரையும், ஆலோசனை வழங்கும் தன்மையுடைய நிர்வாகக் கழகத்தையும், சட்டமன்றத்தையும் கொண்ட அரசாங்கம் செயல்பட்டது. இந்த இரண்டு மன்றங்களிலும் உத்தியோகச் சார்பற்றவர் கள் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டு பணியாற்றினர். சட்டமன்ற உறுப்பினர்களில் உத்தியோகச் சார்பற்ற இருவர் சிங்கப்பூர், பினுங்கு வர்த்தகக் கழகங்களால் தேர்ந்தெடுக்கப் பட்டனர். கொள்கையளவில் மேற்கூறப்பட்ட இரு மன்றங் களின் ஆலோசனைகளை கவர்னர் ஏற்றுக்கொள்ளவேண்டு மென்ற அத்தியாவசியம் கிடையாதெனினும் உத்தியோகச் சார்பற்ற உறுப்பினர்கள் வட்டார நலன்களைப் பாதுகாக்கும் பிரதிநிதிகளாக இருந்ததால் அவர்களின் அறிவுரைகளைக் கவர்னர் ஏற்றுக்கொண்டார்.

### பொருளாதார முன்னேற்றமும்-சீனர்கள், இந்தியர்கள் குடியிறக்கமும்

'நீர்ப்பாங்கு பகுதி'க்கப்பாலிருந்தப் பகுதிகளின் பொருளாதார முன்னேற்றம் ஆரம்பத்தில் தகரத்தை ஆதாரமாகக் கொண்டிருந்தது. ஆனல், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பரிட்சார்த்தமாகப் பயிரிடப் பட்ட ரப்பர், நெய்யாவி வாகனங்களுக்குத் தேவையான இரப்பர் உருளைகளை (Tyre) தயாரிப்பதற்குப் பயன்பட்டதால் அப்பொருளுற்பத்தி உச்ச கட்டத்தை எட்டி ரப்பர் உருளை உற்பத்தித் தொழிலும் வளர்ச்சி பெற்றது. எனவே, அது முதல் பொருளாதாரம் தகரத்தையும், ரப்பரையும் ஆதார மாகக்கொண்டமைந்தது. ஆனல், 1930இல் பொருளாதார மந்தம் உலக முழுவதையும் வாட்டி எடுத்தபோது, மலாயா வையும் அது விடவில்லை. தகர, ரப்பர் தொழில்கள் பாதிக்கப் பட்டன. இது ஒருபுறமிருக்க மறுபக்கம் மலாயாவிற் குள்ளேயே கூட்டாட்சியில் அங்கம் வகித்த நாடுகளிலும், அதற்கு வெளியே இருந்த நாடுகளிலும்கூட பொருளாதார முன்னேற்றம் ஒரே மாதிரியாக இருக்கவில்லை. கூட்டாட்சியில் இருந்த நாடுகளில் ஒன்றுன பகாங் பின்தங்கியிருந்தது போல, கூட்டாட்சியில் சேராதவைகளில் கெலாண்டன், டிரெங்கானுவிலும் பொருளாதார முன்னேற்றம் இதர நாடு களில் இருந்த அளவிற்கு ஏற்படவில்லை.

பொதுவாக மலாயாவின் பொருளாதார முன்னேற்றம் மலாய்கள் அல்லாத ஐரோப்பியர்களாலும் சீனர்களாலும் சாதிக்கப்பட்டதெனலாம். ஐரோப்பியர்களும், சீனர்களும் பொருள் சேர்த்துக்கொண்டு, தங்கள் தாயகத்திற்குத் திரும்பிச் செல்வதில் நாட்டமுடையவர்களாக இருந்தனர். ஆனால், 'நீர்ப்பாங்கு பகுதி' களில் குடியேறிய சீனர்களில் பலர் கலப்புமணம் செய்துகொண்டு தாங்கள் குடியேறிய இடங்களிலேயே நிரந்தரமாகத் தங்கினர். அவர்கள் சிறுசிறு தொழில்களிலும் ஈடுபட்டு பொருள் ஈட்டினார்கள். இதர நாடுகளைப்போல அல்லாமல் மலாயாவில் குடியேறிய சீனர்கள் மொத்த மக்கள் தொகையில் கணிசமான எண்ணிக்கையினராக இருந்தனர்.

ஆங்கிலேயர்களையும், சீனர்களையும்போல அந்நாட்டில இந்தியர்களும் குடியேறினார்கள். அவர்களில் தமிழர்கள் பெரும்பாலோராகவும், தமிழர் அல்லாதவர் சிறுபான்மையோராகவும் இருந்தனர். மத அடிப்படையில் அவர்களில் முகமதியர்கள் பலர்; சீக்கியர்கள் சிலரென்று இருந்தார்கள். இந்தியர்கள் அங்கு குடியேறினார்கள் என்று சொல்வதைவிட இறக்குமதி செய்யப்பட்டார்கள் என்று சொல்வதுதான் பொருத்தமாகும். இறக்குமதி செய்யப்பட்டவாறே அவர்கள் மீண்டும் அவர்களுடைய நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப் பட்டார்கள். இதனால் அவர்கள் மனிதத்தன்மையுடையவர்களாக நடத்தப்படாமல் ஆடுமாடுகள்போல பயன்படுத்தப் பட்டனர். ஆனால், அத்தகைய முறையில், இந்திய அரசாங்கத்தின் அக்கறை, தலையீடு காரணமாக பிறகு மாறுதல் ஏற்பட்டு முன்னேற்றம் காணப்பட்டது.

இரண்டாம் உலகப் போருக்குப்பின்பு அந்நாட்டில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள் ஜப்பானியப் படையெடுப்பின் விளைவுகளாகும். மலாயாவைப் பாதுகாக்கும் நோக்கத்தோடு சிங்கப்பூர் கடற்படைத்தளம் அமைக்கப்பட்டதென்றாலும், ஜப்பானியப் படையெடுப்பைத் தடுத்து அந்நாட்டைக் காப்பாற்ற முடியவில்லை. இதற்கு முக்கியக் காரணமாகப் பொதுவாகச் சொல்லப்படும் சமாதானம் ஜப்பானியர்கள் திடீரென்று மலாயாவையும், இதர தென்கிழக்காசிய நாடுகளையும் தாக்குவார்களென்று ஆங்கிலேயர்கள் எதிர்பார்க்கவில்லையென்பதும், ஒரே சமயத்தில் பல போர்முனைகளில் போரிடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமென்று அவர்கள்

கருதவில்லையென்பதுமாகும். இதற்கு மற்றுமொரு முக்கிய மான காரணம், ஆங்கிலேயர்கள், போரைத் திறம்பட நடத்தி வெற்றி வாய்ப்பை ஏற்படுத்திக்கொள்ளும் வகையில் அந்நாட்டு மக்களுடைய ஒத்துழைப்பைக் கோரிப் பெறவில்லை யென்பதுமாகும். எனவே, ஆங்கிலப் போர்ப்படையிலிருந்த வீரர்களைவிட அதிகமான வீரர்களைக் கொண்டிருந்த ஜப்பானியப் படைகள் மலாயாவை விரைவில் பிடித்து ஜப்பானிய மேலாதிக்கத்தை அங்கு ஏற்படுத்திவிட்டன. ஆங்கிலேயர்களின் போக்கில் வெறுப்புற்றிருந்த பல மலாய் களும், எங்கு தங்கள் உடைமைகள் பறிபோய் உயிருக்கு ஆபத்து ஏற்படுமோ என்று பயந்தவர்களும், ஜப்பானிய ஆக்கிரமிப்பு அரசாங்கத்திற்கு உடந்தையாய் இருந்து உதவி செய்தனர். எனினும், மலாயாவின் தகர, ரப்பர் தொழில் களுக்கு ஏற்பட்ட சேதமும், பொருளாதார நெருக்கடியும் தவிர்க்க முடியாதவைகளாகிவிட்டன. உணவுப் பொருள் தட்டுப்பாடும், பட்டினியும் ஏற்பட்டதோடு பணவீக்கமும் உச்சகட்டத்தையடைந்தது. இந்தக் காரணங்களாலும், அமெரிக்கர்கள் போரில் ஈடுபட்டு ஜப்பானை அணுகுண்டு களால் தாக்கி, சரணடையச் செய்ததாலும், ஜப்பானின் மலாய் நாட்டு ஆக்கிரமிப்பு முடிவுக்கு வந்தது.

# 3. மலாயாவின் பிரச்சினைகள்

ஜப்பானிய ஆக்கிரமிப்புக்கு முன்பு வரையிலும், ஆங்கிலேயர்களுடைய ஆட்சியின்போது வெளிப்படையாக ஏற்படாத இனப் பிரச்சினைகள் ஆக்கிரமிப்புக் காலத்தின் போதும், அதற்குப் பிறகும் முழு அளவில் தோன்ற ஆரம்பித்தன. இதற்கு முக்கியக் காரணம் அந்நாட்டின் பல பகுதிகளிலும் அதாவது 'நீர்ப்பாங்குப் பகுதி' கூட்டாட்சி அமைப்பில் சேர்ந்திருந்த, சேராதிருந்த இராச்சியங்களில் வெவ்வேறு வகைப்பட்ட அரசாங்கங்கள் இருந்ததாகுமெனச் சொல்லப்படுகிறது. அங்குத் தேர்தல்களோ அல்லது மக்கள் ஆதரவு பெற்ற இயக்கங்களோ கிடையா. பன்மைச் சமுதாயத்திற்கு மலாயா சிறந்ததோர் எடுத்துக்காட்டாக இருந்தது. அந்நாட்டு மக்கள் இன அடிப்படையில் மட்டுமல்லாது, மொழி, மத, பழக்கவழக்க அடிப்படைகளிலும் மாறுபட்டு பிளவுபட்டுக் காணப்பட்டார்கள். 'அவர்களுக்கிடையே பொதுவாகக் காணப்பட்ட அம்சம் அவர்களெல்லோரும் ஒரே நாட்டில் வாழ்ந்தார்கள்-வாழ்கிறார்கள் என்பதுதான்' என்று, எப். எச். எச். கிங் என்பவர் அவருடைய 'புது மலாய் இனம்' என்ற நூலில் கூறுகிறார்.

போருக்கு முன்பு அங்கு ஏற்படுத்தப்பட்டிருந்த அரசாங்கம் சிக்கல் மிக்கதாக இருந்ததெனினும், அரசியலைப் பொறுத்தவரை ஆங்கிலேயர்களுக்கு அவ்வளவாகக் கஷ்டமெதுவுமில்லை. மக்கள் சீனர்களென்றும், இந்தியர்களென்றும், மலாய்களென்றும் பிரிந்திருந்ததால் அவர்கள் 'தன்னாட்சி' பெறத் தகுதியற்றவர்கள் என்று ஆங்கிலேய அரசாங்கம் சொல்லி வந்தது. அதற்குத் தகுந்தாற்போல அங்கு மலாய்களுக்கெனவும், சீனர்களுக்கெனவும், இந்தியர்களுக்கெனவும் தனித்தனிக் கட்சிகள் இருந்ததோடு இவர்

களுக்குத் தனித்தனிச் சலுகைகளும் வழங்கப்பட்டன. ஆனால், தன்னாட்சிக்கு அவர்கள் தகுதிபடைத்தவர்களல்ல என்ற வாதத்தை ஏற்கமுடியாத அப்பன்மைச் சமூகத்தின ரிடையே 1953ஆம் ஆண்டில் பல இனமக்களுக்காகவும் தனித் தனியாக ஏற்பட்ட கட்சிகளின் கூட்டொன்று துங்கு அப்துல் ரஹ்மான் என்ற இளவரசரொருவர் தலைமையில் ஏற்பட்டது. அக்கூட்டில் சேர்ந்த கட்சிகளாவன : ஐக்கிய மலாய் தேசியக் கட்சி, மலாய் சீனக்கட்சி, மலாய் இந்தியர்கட்சி. அக்கூட்டு 1954இல் நடைபெற்ற பல வட்டாரத்தேர்தல்களில் வெற்றி பெற்றவாறே, 1955ஆம் ஆண்டு சட்டமன்றத்திற்கு நடை பெற்ற தேர்தல்களிலும் 52 இடங்களில் 51 இடங்களைப் பிடித்துப் பெரும்பான்மை பலம் பெற்ற கட்சியாக எழுந்தது. எனவே, கூட்டுக்கட்சியின் தலைவரான துங்கு அப்துல் ரஹ்மான் முதல் மந்திரியாக நியமிக்கப்பட்டு அமைச்சரவை யொன்றை நிறுவினர்.

இந்நிகழ்ச்சிகள் ஏற்படுவதற்கு முன்பும், இரண்டாம் உலகப்போர் முடிவுற்றபிறகுமான இடைக்காலத்தில், சிங்கப்பூர் நீங்கலாக இதர எல்லா மலாய் பகுதிகளிலு மிருந்த இராச்சியங்களெல்லாம் இணைக்கப்பட்ட 'ஐக்கிய மலாயா'வை ஆங்கில அரசாங்கம் ஏற்படுத்தியதென்பதும், அது இரண்டாண்டுகள்தான் நீடித்ததென்பதையும் இவ் விடத்தில் குறிப்பிடுவது அவசியமாகும். அதைத் தொடர்ந்து 1948இல் கூட்டாட்சி ஒப்பந்தமொன்று ஏற்பட்டது. அவ் வொப்பந்தப்படி 1948இல் மலாயா கூட்டாட்சி ஏற்பட்ட தோடு, அங்கு ஆங்கில உயர் ஆணையாளரையும், நிர்வாகக் கழகத்தையும், சட்டமன்றத்தையும் கொண்ட மத்திய அரசாங்கமொன்றும் அமைக்கப்பட்டது. மலாய் இனத்தவர் அல்லாதவர்களுக்கும் குடிமையுரிமை அளித்து, அவர்களையும் மலாயாவின் குடிகளாக, பூரண சுதந்திரத்தோடு அதன் நடவடிக்கைகளில் ஈடுபடுவர்களாகச் செய்வதற்கான ஏற்பாடு களும் அந்த ஒப்பந்தத்தில் இணைக்கப்பட்டன. அவ்வொப்பந் தத்தின் முக்கியமான மற்றுமோர் அம்சம் அரசர்கள் கழக (Conference of Rulers) மொன்றுக்கு வகைசெய்யப்பட்டதாகும்.

மலாயாக் கூட்டாட்சி ஏற்படுத்தப்பட்ட சூட்டோடு சூட்டாக கம்யூனிஸ்டுகளால் நெருக்கடி நிலைமையொன்று தோற்றுவிக்கப்பட்டது. அதைச் சமாளிப்பதற்காக அங்கு 'அவசர நிலைமைப் பிரகடனம்' பிறப்பிக்கப்பட்டு, 1960ஆம் ஆண்டுவரை நடைமுறையிலிருந்தது. ஆனால், 1955ஆம்

ஆண்டின்போதே கம்யூனிஸ்டுகளின் கலகமும், கொரில்லாப் போர்களும் அரசாங்கம் எடுத்துக்கொண்ட இராணுவ, பொருளாதார நடவடிக்கைகள் காரணமாக அடக்கப்பட்டு, நாட்டில் அமைதி ஏற்படுத்தப்பட்டது.

**1957ஆம் ஆண்டின் அரசியலமைப்பு**

கூட்டுக்கட்சிகளின் வெற்றியைத் தொடர்ந்து 1956ஆம் ஆண்டில் அரசியலமைப்பு மாநாடொன்று நடைபெற்றது. அம்மாநாட்டில் கூட்டுக்கட்சிகளின் பிரதிநிதிகளும், அரசர்களின் பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர். அம்மாநாடு மலாயா 1957ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்திற்குள் சுதந்திர அரசாக ஆகவேண்டுமென்றும், அது காமன்வெல்த்தினுள் இருக்கவேண்டுமென்றும், நகல் அரசியலமைப்பை எழுதுவதற்கு அரசியலமைப்புக்கழகமொன்று (Constitutional Commission) அமைக்கப்படவேண்டுமென்றும் முடிவு செய்தது. அரசியலமைப்புக்கழகத்திற்குத் தலைவராக இங்கிலாந்து நாட்டு நீதிபதியான ரீட்பிரபு (Lord Reid) நியமிக்கப்பட்டார். அதில் இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, இந்தியா, பாகிஸ்தான் ஆகிய நாடுகள் ஒவ்வொன்றிலிருந்தும் ஒரு பிரதிநிதி வீதம் நான்கு பேர்கள் உறுப்பினர்களாகப் பணியாற்றினார்கள். அக்கழகம் 1957இல் அதன் அறிக்கையைச் சமர்ப்பித்தது. ஆனால், அவ்வறிக்கையில் செய்யப்பட்டிருந்த சிபாரிசுகள் அரசர்களும், கூட்டுக் கட்சிகளும் கொண்டுவந்த மாற்றங்களோடு ஏற்றுக்கொள்ளப்பட்டன.

1957ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 31ஆம் தேதி மலாயா சுதந்திரம் (Merdeka) பெற்றது. அதே நாளிலிருந்து புதிய அரசியலமைப்பும் நடைமுறைக்கு வந்தது. அவ்வரசியலமைப்பு இங்கிலாந்தில் அல்லது இந்தியாவிலுள்ளதுபோல 'பாராளுமன்ற முறை'யைச் சேர்ந்ததாகும். எனவே, அதிகாரம் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை பலமுடைய கட்சியால் அமைக்கப்படும் அமைச்சரவையால் செலுத்தப்படும் என்பது தெளிவாகும். நாட்டுத் தலைவர் (Yangdi-Pertuan) அரசியல் சார்பற்றவராகவும் அமைச்சர்கள் ஆலோசனைப்படி நடப்பவராகவுமிருக்கிறார். சட்டமன்றத்தில் இருசபைகள் இருக்கின்றன. அவைகளிலொன்று வாக்காளர்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படுவதாகும். நடுநிலை பிறழாத சுதந்திர நீதித்துறையும் இதர சிறப்பம்சமாகும். அரசியலமைப்பு இந்தியாவிலுள்ளவாறு கூட்டாட்சித்

தன்மையுடையதாகும். எனினும், நடைமுறையில் மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்கள், கூட்டாட்சியில் அங்கம் வகிக்கும் இராச்சியங்களின் அதிகாரங்களைவிட அதிக மானவையாகும். கூட்டாட்சி ஏற்படுத்தப்பட்டதற்கான முக்கிய காரணங்கள் அங்கு அரசர்கள் பலர் இருந்ததும், 1946ஆம் ஆண்டில் ஐக்கிய மலாயா திட்டத்திற்கு ஏற்பட்ட எதிர்ப்பும் கதியும் மீண்டும் ஏற்படக்கூடாதென்பவை களாகும். மத்திய அரசாங்கத்திற்கும் இராச்சிய அரசாங்கங் களுக்குமிடையே ஒருங்கிணைப்பையும் ஒற்றுமையையும் ஏற்படுத்துவதற்காக தேசிய நிலக்கழகம் (National Land Council) போன்ற பல நிறுவனங்கள் அமைக்கப்படுவதற்கு அரசியலமைப்பில் தேவையான ஏற்பாடுகள் செய்யப் பட்டிருக்கின்றன.

**அரசியலமைப்பை மாற்றும் முறை**

அரசியலமைப்பை மாற்றுவதற்கான முறை 159ஆம் விதியின் ஒன்ருவது, மூன்ருவது உட்பிரிவுகளில் எடுத்துரைக் கப்பட்டிருக்கின்றது. பாராளுமன்றத்திலுள்ள ஒவ்வொரு சபையிலும் அதன் மொத்த உறுப்பினர்களின் மூன்றிலிரண்டு பங்கு உறுப்பினர்களின் ஆதரவுடன் அரசியலமைப்புக்கு மாற்றங்கள் கொண்டு வரப்படலாம். அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ளவாறு, நீதிமன்றங்கள் அரசியலமைப்பின் காப்பாளர்களாக இருக்கின்றன. மத்தியப் பாராளுமன்றத் தாலோ அல்லது இராச்சிய சட்டசபைகளாலோ இயற்றப் படும் சட்டமொன்று அரசியலமைப்புக்கு மாருனதென நீதிமன்றம் அறிவிக்குமாளுல் அது செல்லுபடியாகாது.

இதர அரசியலமைப்புகளில் காணப்படாத மலாய் நாட்டு அரசியலமைப்பின் முக்கியமான அம்சம், அரசர்கள் கழக மொன்றுக்கு வகைசெய்திருப்பதும் கூட்டாட்சியின் தலைவ ரான அரசர், அரசர்கள் குழுவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு மக்களாட்சிக் கொள்கைகள் அடிப்படையில் செயலாற்றுமாறு செய்யப்பட்டிருப்பதுமாகும். பிறிதொரு முக்கியமான அம்சம் அரசியல் கட்சிகளுக்கிடையே 'பேரம்' (Bargain) நடத்துவதற் கும் அதன் விளைவாக உரிமைகளையும், சலுகைகளையும் பெறு வதற்குச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடாகும். சான்ருக, மலாய் இனத்தைச்சாராதவர்கள் முழுக்குடிமையுரிமை பெற்ற வர்களாகக் கருதப்படுவதற்கு, அவர்கள் மலாய் இனத்த வரின் தனித்தன்மையும், பழக்கவழக்கங்களையும் தொடர்ந்து

இடையூறில்லாமல் பெற்று அனுபவிப்பதற்கு இணக்கமுடையவர்களாக இருக்கவேண்டுமென்பதாகும். ஆனால், 1957ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 31ஆம் தேதியும் அதற்குப்பிறகும் மலாய் நாட்டில் பிறந்தவர்கள் அந்நாட்டுக் குடிகளாகக் கருதப்படுவார்கள் என்பதை அரசியலமைப்பு தெளிவாக்குகிறது.

அரசியலமைப்பின் 153ஆம் விதி மலாய் இனத்தவரின் தனித்தன்மையை பாதுகாக்கும் பொறுப்பை யாங்தி-பர்த்துவானிடம் (Yang di-Pertuan) ஒப்படைத்திருக்கிறது. அவ்விதியின்படி, நாட்டுத்தலைவர் (அமைச்சரவை ஆலோசனைபடி) நியாயமான அளவிற்கு மலாய் இனத்தவர்களுக்கு (1) அரசாங்கப் பணித்துறைகளில் இடங்களை ஒதுக்கி வைக்கவும் (2) உதவிச்சம்பளங்கள் வழங்கவும், கல்வி, பயிற்சி ஆகியத் துறைகளில் சலுகைகளைத் தரவும் (3) கூட்டாட்சி சட்ட அடிப்படையில் வியாபாரத்திற்கு வழங்கப்படும் பர்மிட்டுகள் அல்லது அனுமதிகள் ஆகியவற்றில் தனிச்சலுகைக் காட்டவும் அதிகாரம் தரப்பட்டிருக்கிறார்.

153ஆம் விதி பரந்த அடிப்படையில் அமைந்திருக்கிறது. அது, நடைமுறையில் அதுகாறும் வழக்கத்திலிருந்து வந்தவைகளைத் தொடர்ந்து மலாய் இனத்தவருக்கு அளிப்பதற்கு சட்டபூர்வமாக வகைசெய்கிறது. அது ஆச்சரியப்படத்தக்கதோ அல்லது இயற்கை நியதிக்கு மாறானதோ அல்ல. ஏனெனில், மலாய் இனத்தவர் மற்றவர்களைவிட அதிக எண்ணிக்கையினராக இருந்தாலும், பொருளாதாரத் துறையில் முன்னேற்றமடையாதவர்கள். அந்த நாட்டுப் பூர்வீகக்குடிகள் முன்னேற்றமடையவேண்டும் என்ற நோக்கத்தில் செய்யப்பட்டிருக்கும் இந்த ஏற்பாடு நியாயத்திற்கு விரோதமானதல்ல. இதில் கவனிக்கவேண்டிய பிறிதொரு அம்சம், மலாய் இனத்தவர் என்று மட்டுமல்லாமல், இதர சிறுபான்மைச் சமூகத்தினருக்கும் நீதி கிடைக்கும் வகையில் அவ்விதி அமைந்திருக்கிறதென்பதும், அதனால் பல நன்மைகள் விளைந்திருக்கின்றனவென்பதுமாகும்.

**ஆதாரச் சுதந்திரங்கள்**

அரசியலமைப்பு 10 (1)-ஆம் விதிப்படி ஒவ்வொரு குடிமகனுக்கும் குறிப்பிட்ட சில உரிமைகளை வழங்குகிறது. அவைகளில், பேச்சுச்சுதந்திரம், அமைதியாகக்கூடும் சுதந்திரம், கழகம் அமைக்கும் சுதந்திரம் குறிப்பிடத்

தகுந்தவைகளாகும். ஆனால், பொதுஅமைதி, பாதுகாப்பு போன்ற காரணங்களுக்காகப் பாராளுமன்றம் அச்சுதந்திரங்களை கட்டுப்படுத்தலாம் என்பதையும் அவ்விதி எடுத்துரைக்கிறது. கட்டுப்பாடுகளை விதித்துப் பிறப்பிக்கப்படும் சட்டம் எதனால் அக்கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன என்ற காரணங்களை எடுத்துக்காட்டவேண்டும் என்பது தெளிவாக்கப்பட்டிருக்கிறது. கட்டுப்பாடுகள், நாட்டுத்தலைவருக்கு எதிராகவோ அல்லது அரசாங்கத்திற்கு எதிராகவோ மக்களில் சிலரோ அல்லது பலரோ பல விரும்பத்தகாத நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார்கள் என்பதற்காகவோ அல்லது ஒருசில வகுப்புக்களை அல்லது பிரிவுகளைச் சேர்ந்த மக்கள் வேறுசில வகுப்புக்களை அல்லது பிரிவுகளைச் சேர்ந்த மக்களுக்கெதிராகப் பிரசாரம் அல்லது துவேஷம் செய்கிறார்கள் என்பதற்காகவோ அல்லது கலகம் செய்கிறார்கள் என்பதற்காகவோ விதிக்கப்படலாமென்று அரசியலமைப்பின் 149 (1) விதி கூறுகிறது. அரசியலமைப்புச் சட்டத்தின் இந்தப் பகுதியின் துணைகொண்டோ அல்லது அவசரச் சட்டங்கள் அடிப்படையிலோ 'தடுப்புக்காவல்' (Preventive detention) அதாவது நீதிமன்றங்களில் வழக்குத் தொடராமல் கைது செய்து சிறையில் வைக்கும் நடவடிக்கையை எவர்மேலும் எடுப்பதற்கு அரசாங்கத்திற்கு உரிமையுண்டு. இத்தகைய நடவடிக்கை எடுக்கப்படும்போது, சட்டப்படி [ விதி 5 (1) ] அளிக்கப்பட்டிருக்கும் தனிநபர் சுதந்திரம் பாதிக்கப்படுகிறது. மேற்கூறப்பட்டக் காரணங்களுக்காகக் கைது செய்யப்படுபவர் எவரும் மேல்முறையீட்டடிப்படையில் விடுதலை செய்யப்படவேண்டுமென வழக்குத் தொடரமுடியாது. எனினும் கைது செய்யப்பட்டவர், அதற்கான காரணங்களை அறியவும், அந்தக் காரணங்கள் சரியானவையல்ல என்ற அடிப்படையில் தன் கட்சியை எடுத்துக்கூறி விண்ணப்பித்துக் கொள்ளவும் வசதி செய்து தரப்பட்டிருக்கிறது. அவ்வாறு கைது செய்யப்பட்டவர்களிடமிருந்து வரும் விண்ணப்பங்களைப் பரிசிலனை செய்து எடுத்துக் கொள்ளப்படவேண்டிய நடவடிக்கைகளைப் பரிந்துரைப்பதற்கு மூன்று பேர்கள் அடங்கிய கழகமொன்று நிறுவப்படும். கைது செய்யப்பட்ட ஒருவர் குடியுரிமை பெற்றவராக இருப்பாரானால் சாதாரணமாக மூன்றுமாத காலத்திற்குமேல் சிறையில் வைக்கப்படமாட்டார். ஆனால், 1960ஆம் ஆண்டில் இயற்றப்பட்டு 1962ஆம் ஆண்டில் திருத்தியமைக்கப்பட்ட உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின்படியோ (Internal Security Act)

அல்லது 1958ஆம் ஆண்டு பொது அமைதி (பாதுகாப்பு) சட்டத்தின் [Public Order (Preservation) Ordinance] படியோ அல்லது 1959ஆம் குற்றத்தடுப்புச் சட்டத்தின் (Prevention of Crime Ordinance) படியோ கைது செய்யப்பட்டு, சிறையிலிடப் படுபவரெவரும் மேற்கூறப்பட்ட காலக்கெடு முடிவடைந்ததும் விடுவிக்கப்படமாட்டார். அங்ஙனமே, மூவர் பரிசீலனைக் கழகத்தால், விடுதலை செய்யப்படக்கூடாதென்று பரிந் துரைக்கப்பட்டவர்களும் விடுவிக்கப்பட மாட்டார்கள். அரசியலமைப்பின் 150 விதி சட்டத்தின் தன்மையையும் சக்தியையுமுடைய அவசரச் சட்டங்களைப் பிறப்பிப்பதற்கு நிர்வாகத்திற்கு அதிகாரம் வழங்குகிறது. ஆனால், அச் சட்டங்களை பாராளுமன்றத்தின் இருசபைகளும் நிறை வேற்றும் தீர்மானங்கள் விலக்கி விடலாம். மேலே சொல்லப் பட்ட விதியின் ஆதாரத்தில் இயற்றப்படும் சட்டங்கள் ஆதாரச் சுதந்திரங்கள்பற்றிய அரசியல் சட்ட விதிகளுக்குப் புறம்பானவையாக இருந்தாலும் செல்லுபடியாகும் என்று சொல்லப்படுகிறது. அவ்விதி வழங்கும் சில அதிகாரங்கள் வரம்புக்கும் அதிகமானவை என்பது முக்கியமான மற்று மொரு அம்சம். சான்றாக, கூட்டாட்சியிலுள்ள இராச்சியங் களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் எல்லாப் பொருள்கள்பற்றியும் பாராளுமன்றம் சட்டமியற்றுவதற்கு அதிகாரம் தரப்பட்டி ருப்பதைக் கூறலாம். அங்ஙனமே தேர்தல்கள் நடைபெறு வதைத் தற்காலிகமாக நிறுத்திவைக்கலாம். ஆனால், நடை முறையில் 1960ஆம் ஆண்டு வரையிலும், அதற்குப்பிறகு 1964ஆம் ஆண்டு முதலும் நெருக்கடி நிலைமைப்பிரகடனம் அமுலிலிருந்தபோது வெகு சில துறைகளிலேயே பாராளு மன்றம் சட்டங்களியற்றியது என்பது குறிப்பிடத்தக்கது. எனினும், அரசாங்க மாற்றத்திற்கு வகைசெய்த அரசிய லமைப்புத் திருத்தமொன்று நிறைவேற்றப்பட்டதை எதிர்த்து சாரவாக்கில் கிளர்ச்சி நடைபெற்றபோது 1966ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் நெருக்கடிகால அதிகாரங்களை அரசாங்கம் பயன்படுத்தியது.

அரசியலமைப்பு அளிக்கும் ஆதாரச் சுதந்திரங்கள் அரசிய லமைப்பினாலேயே கட்டுப்படுத்தப்படுகின்றன என்பது மேற் கூறப்பட்டவைகளிலிருந்து தெளிவாகும். இக்கட்டுப்பாடு எவ்வளவு முக்கியமானதென்பது, மலாயா சுதந்திரம் பெற்றதி லிருந்து 1960ஆம் ஆண்டுவரையிலும் கம்யூனிஸ்டுகளின் கலகத்தையும், அதற்குப்பிறகு 1963ஆம் ஆண்டு சமயத்தில்

மலாயாவை இந்தோனேசியா எதிர்த்து வந்ததையும் அறியும் போது தெளிவாகிறது. எனினும், எழும் பிரச்சினைகளையும், எதிர்ப்புகளையும் சமாளிப்பதற்கு எவ்வளவு விரைவாக அரசாங்கம் கட்டுப்பாடுகளை விதிக்கிறதோ, அவ்வளவு விரைவாக அத்தகைய சூழ்நிலைகள் மறைந்து அமைதி ஏற்படும் போது அக்கட்டுப்பாடுகளை அரசாங்கம் விலக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

**சிங்கப்பூர்**, 1945-1965

இரண்டாவது உலகப் பெரும் போருக்குப்பிறகு சிங்கப்பூர் மலாயாவினின்றும் பிரிக்கப்பட்டதெனினும் அது அங்கு வேறுமாதிரியான அரசியல் பிரச்சினையைத் தோற்றுவித்தது. மக்கள்தொகையில் முக்கால் பகுதியினர் சீனர்களாக இருந்தனர். மலாயாவில் இருந்ததுபோல அரசாங்க அமைப்பெதுவும் அங்கு இல்லாததால் சுயாட்சி அரசாங்கமொன்று ஏற்படுத்தப்படுவதற்கான நிலையங்களை உருவாக்குவது கடினமாக இருந்தது. ஆங்கில அரசாங்கத்தின் கருத்துப்படி அங்கு சுயாட்சி அரசாங்கம் ஏற்படுத்தப்பட்டு இயங்குவது முடியாததாக இருந்தது. மொத்த மக்கள் தொகையும் பத்து லட்சத்தை அதுவரையிலும் தாண்டவில்லை. சுதந்திரம் அளிக்கப்பட்டால் அது மலாயாவைச் சார்ந்துதான் இருக்கவேண்டியிருக்கும் என்பது தெளிவாகியது. அல்லாமலும், ஆங்கில அரசாங்கம் தொடர்ந்து அங்கு கடற்படைத் தளத்தை வைத்திருப்பதற்கும் எதிர்ப்பு ஏற்படக்கூடும் என்று தோன்றியது. மேலும், சீனர்களுக்குச் சலுகைகள் தரப்படாமல் அரசாங்கத்தின் மீதானக் கட்டுப்பாட்டை ஆங்கில அரசாங்கம் பெறுவது முடியாததாகும் என்பதும் தெளிவாகியது. எனினும், ஆங்கில அரசாங்கம் அதற்கேயுரிய குடியேற்றப் பாணியில் சுதந்திரம் அளிப்பதற்கு முன்பு சுயாட்சி அரசாங்க முறைகளைத் தோற்றுவித்துத் தேர்தல்களை நடத்தியது.

ஆரம்பத்தில் உத்தியோகச் சார்புடையவர்களையும் அச்சார்பற்றவர்களையும் கொண்ட சட்டமன்றமொன்று அந்நாட்டில் ஏற்படுத்தப்பட்டது. 1948லும் 1951லும் சட்டமன்றத்தேர்தல்கள் நடைபெற்றன. அப்போது சீனர்களில் பலர் வாக்காளர்களாகத் தங்களைப் பதிவு செய்துகொள்ளாதிருந்ததால், மிதவாதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அரசாங்கம் அமைத்தனர். அந்த மிதவாதிகளில் ஒருவரான மார்ஷல்

என்பவர் முதலிலும், அவர் இராஜிநாமா செய்தபோது 1957இல் லிம் யூ ஹாக் (Lim Yew Hock) என்பவரும் முதன் மந்திரியாயினர். மார்ஷல் சிறந்த வழக்கறிஞராக இருந்தாலும் சுதந்திரம் பெறுவதை நோக்கமாகக்கொண்ட ஆங்கில அரசாங்கத்துடனுனப் பேச்சு வார்த்தைகளில் வெற்றிபெற முடியவில்லை. ஆனால், லிம் யூ ஹாக் முதன் மந்திரியாக இருந்த போது, பொது அமைதி, பாதுகாப்பு ஆகியவைகளைப் பராமரிப்பதற்காக மூன்று ஆங்கில நாட்டவரையும், சிங்கப்பூரைச்சேர்ந்த மூன்று பேர்களையும், மலாயாவைச் சேர்ந்த ஒருவரையும் கொண்ட பாதுகாப்புக் குழுவொன்று சீனர்களில் தீவிரவாதிகளாக இருந்தவர்களினால் ஏற்படுத்தப் பட்டக் கலகங்களையும், எதிர்ப்புகளையும் சமாளிப்பதற்கு அமைக்கப்பட்டது. லிம் யூ ஹாக் தீவிரவாதிகளை ஒடுக்குவதற்குத் தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டார். அதனால், அவர் சீனர்களது பண்பாட்டையே ஒழிக்க விரும்பினார் என்ற கருத்து மக்களிடையே பரவி விட்டது.

1959ஆம் ஆண்டு நடைபெற்றத் தேர்தலில் சீனர்கள் இந்தியர்களின் ஆதரவுபெற்ற மக்கள் நடவடிக்கைக் கட்சி (People's Action Party) சட்டமன்றத்திலிருந்த 51 இடங்களில் 43 இடங்களைப் பிடித்து பெரும்பான்மைக் கட்சியாகத் தோன்றியது. அதன் தலைவர் லீ குவான் யூ (Lee Kuan Yew) என்பவராவார். அவர் கேம்பிரிட்ஜில் வழக்கறிஞர் பட்டம் பெற்ற சிறந்த அறிஞர். அவரே முதன் மந்திரியாகி அமைச்சரவையையும் அமைத்தார். எனினும், விரைவில் அவரது கட்சியிலிருந்த கம்யூனிச அனுதாபிகளுக்கும் மற்றவர்களுக்குமிடையேயிருந்த கருத்து வேற்றுமை அவர்களுக்கிடையே பூசல்களையும், பிரிவுகளையும் தோற்றுவித்தது. அதனால், 1961ஆம் ஆண்டு நடைபெற்ற இடைத்தேர்தல்களின் முடிவு அக்கட்சிக்கு அதிர்ச்சியைத் தந்தது. அதற்குப் பிறகு கம்யூனிச அனுதாபிகள் பிரிந்து சென்று தனியாக பாரிசன் சோஷலிஸ்டுகள் (Barisan Socialists) என்ற பெயரில் தனிக்கட்சியொன்றை அமைத்துக் கொண்டனர். இருப்பினும் 1963ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தல்களில் மக்கள் நடவடிக்கைக்கட்சி, மலேசியாவில் சிங்கப்பூர் சேர வேண்டும் என்ற பிரச்சினையை சாமர்த்தியமாகக் கையாண்டதன் மூலம், பெரும்பான்மை பலத்தைப் பெற்றது.

மலாயாவுடன், சிங்கப்பூர் இணைவதன் வாயிலாக, சிங்கப்பூர் சுதந்திரம் பெற்று விடும் என்ற கருத்து அங்கிருந்த

எல்லாக் கட்சிகளிடையிலும் நிலவியது. எனவே, 1963ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் சிங்கப்பூர் மலாயாவுடன் இணைந்து, மலேசியா என்ற கூட்டாட்சி ஏற்பட்டது எனினும், சிங்கப்பூர் அரசாங்கத்திற்கும், கூட்டாட்சி அரசாங்கத்திற்குமிடையே தீர்க்க முடியாத கருத்து வேற்றுமைகளும் மோதல்களும் ஏற்பட்டதால், 1965ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் சிங்கப்பூர், கூட்டாட்சியினின்றும் பிரிந்து தனி சுதந்திர நாடாகியது.

# 4. மலேசியக் கூட்டாட்சி அமைப்பு

1961ஆம் ஆண்டு மே மாதம்தான் மலாயா, சிங்கப்பூர், சாரவாக், வடபோர்னியோ போன்ற பகுதிகளையெல்லாம் இணைத்து, மலேசியா என்னும் கூட்டாட்சி ஏற்படுத்த வேண்டுமென்று அதிகாரப் பூர்வமாகப் பிரேரபிக்கப்பட்டது. ஆனால், கூட்டாட்சியில் சேர்க்கப்படவேண்டியிருந்த வட போர்னியோ, சாரவாக் போன்ற பகுதிகளின் பொருளாதார முன்னேற்றத்தைப்பற்றியும், அவைகளினுடைய பிரச்சினைகளைப்பற்றியும் தெரிந்துகொண்டிருக்கவேண்டியவர்களுக்கே அவ்வளவாகத் தெரியாதிருந்தது என்று சொல்லப்படுகிறது. பொதுவாக 1961இல் எந்த அளவிற்கு அவை 'பின்தங்கியவைகளாக' இருந்தன என்பது கூட்டாட்சியேற்பட்டபிறகுதான் அவர்களுக்குத் தெரியவந்தது. இனி மலேசியாவின் தோற்றத்தைப்பற்றிக் கவனிப்போம்.

1961ஆம் ஆண்டு மே மாதம் 27ஆம் தேதியன்று மலாயா, சிங்கப்பூர், வடபோர்னியோ, சாரவாக், சாத்தியப்படுமானல் புருனி ஆகியவைகளையெல்லாம் இணைத்து, மலேசியக் கூட்டாட்சியொன்றை ஏற்படுத்தவேண்டுமென்று முதன் முதலில் துங்கு அப்துல் ரஹ்மான் அறிவித்தார். பல விவாதங்களுக்கும், பேச்சு வார்த்தைகளுக்கும் பிறகு சம்பந்தப்பட்ட இராச்சியங்கள் கூட்டாட்சியில்சேர இணக்கம் தெரிவித்ததும், ஆங்கிலநாட்டு அரசாங்கத்தின் சம்மதத்துடன், மலாயாவின் அரசியலமைப்பை மாற்றியமைக்கும் திருத்தச்சட்டம் 1963ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்டது. கூட்டாட்சி 1963ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 31ஆம் தேதி துவங்கவேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டதெனினும் பிலிப்பைன், கெலாண்டன் போன்ற நாடுகள் ஆட்சேபித்ததால் தள்ளிப்போட வேண்டியதாயிற்று. எனினும், அவற்றின் ஆட்சேபங்கள் நிராகரிக்கப்பட்டு 1963ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 16ஆம் நாள் மலேசியா முறைப்படி தொடங்கிவைக்கப்பட்டது.

மலேசியக்கூட்டாட்சி, கூட்டாட்சித்தன்மைகள் அனைத்துமுடைய சிறந்தக் கூட்டாட்சியென்று சொல்லமுடியாது. குடிமையுரிமை, சமயம், உயர்நீதிமன்றத்தின் அமைப்பு, அதன் அதிகார எல்லைகள் ஆகியவைகளைப் பொறுத்தவரை இராச்சியங்களுக்கிடையே சமத்துவ நிலைமையில்லாமல், வேறுபாடுகள் இருக்கின்றன. இவ்விஷயங்களில் சம்பந்தப்பட்ட இராச்சியம் அல்லது இராச்சியங்களின் சம்மதமில்லாமல் கூட்டாட்சி அரசியலமைப்பு மாற்றப்படமுடியாது. இராச்சியங்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் ஒரேமாதிரியாக இல்லாதிருப்பது பிறிதொரு அம்சமாகும். இராச்சியங்களுக்குத் தரப்பட்டிருக்கும் சுயாட்சியின் தன்மை, அங்கு தேசிய ஒற்றுமை ஏற்படுவதற்கு மிக அதிக காலம் பிடிக்குமென்பதை எடுத்துக்காட்டுகிறது. எதிர்காலத்தில் எடுத்துக் கொள்ளப்படும் அரசியல் சட்ட மாற்றங்களில் போர்னியோ மக்களுக்குப் பெரும்பங்கு இருக்குமென்று கருதப்படுகிறது. எனினும், பலாத்கார முறையிலல்லாது அமைதியான முறையில் மலேசியா ஏற்படுவதற்கு அத்தகைய சலுகைகளும், சுதந்திரமும் கூட்டாட்சியில் அங்கம் வகிக்கும் நாடுகளுக்கு அளிக்கவேண்டியது அவசியமாயிற்று.

### அரசியலமைப்பும் கூட்டாட்சித்தத்துவமும்

மலேசியாவில் பல இனங்களைச் சேர்ந்த மக்கள் இருப்பது அது கூட்டாட்சியாக இருப்பதற்குக் காரணம் என்று கருதப்படுகிறது. ஆனால், கெலாண்டனிலும், டிரெங்கானுவிலும் தான் 90 சதவிகிதத்தினர் மலாய் இனத்தவர்கள் இருக்கிறார்கள். மற்ற இராச்சியங்களில் பல இனத்தவரும் கலந்து வாழ்கிறார்கள். எனவே, ஒரே இனமக்களைக்கொண்ட இராச்சியங்களின் எல்லைகளை வகுப்பதென்பது முடியாது என்பது அந்தக் காரணம் பொருத்தமற்றதென்பதை விளக்குகிறது. இரண்டாவது காரணம் அங்கு பல அரசர்கள் இருக்கிறார்கள் என்பதும் அவர்களுடைய பரம்பரையான அதிகாரங்கள் பறிபோய்விடக்கூடாதென்பதாகும். ஆனால், மலேசியாவில், கூட்டாட்சி அரசாங்கம் மாநில அரசாங்கங்களைவிட சக்தி வாய்ந்ததாக அமைக்கப்பட்டிருக்கிறது. எனவே, இராச்சியங்களின் தன்னாட்சித்தன்மை கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்களால் கட்டுப்படுத்தப்படலாம். எந்த அளவிற்கு மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கங்களைவிட பலம் பொருந்தியதாக இருக்கிறதென்பது பின்வருவனவற்றிலிருந்தும் தெளிவாகும்.

அரசியலமைப்பிற்கு மாற்றங்கள் கொண்டுவருவதில் வரம்பிற்குட்பட்ட பணியே இராச்சியங்களுக்குத் தரப்பட்டிருக்கிறது. பொதுவாக அரசியலமைப்புத் திருத்தங்கள் பாராளுமன்றத்தின் இருசபைகளிலும் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூன்றிலிரண்டு பங்கு உறுப்பினர்களின் ஆதரவோடு நிறைவேற்றப்பட்டால் அவைகள் நடைமுறைக்கு வந்துவிடுகின்றன. ஒருசில மாற்றங்களுக்கு மூன்றிலிரண்டுபங்கு பெரும்பான்மை தேவையில்லை. சான்றாக, புதிய இராச்சியங்களை கூட்டாட்சியில் சேர்த்துக்கொள்வதற்கு இந்தமுறை பின்பற்றப்பட்டால் போதுமானது. மாற்றங்கள் நிறைவேற்றப்படுகின்ற எந்தக் கட்டத்திலும் இராச்சியங்களுக்கு எப்பணியும் கிடையாது. அதாவது கூட்டாட்சி அரசாங்கம் நிறைவேற்றும் மாற்றங்கள்பற்றிய சட்டங்களைத் தடுப்பதற்கோ அன்றி நிராகரிக்கவோ எந்த இராச்சியத்திற்கும் அதிகாரம் கிடையாது. எனினும், இராச்சிய அரசாங்கங்களுடைய எல்லைகள் நிர்ணயஞ் செய்யப்பட்டவைகளாகும். அவைகளை மாற்றியமைப்பதற்கு சம்பந்தப்பட்ட இராச்சிய சட்டசபையில் சட்டம் இயற்றப்பட்ட பிறகே மத்தியப் பாராளுமன்றம் அத்தகைய சட்டங்களால் அரசியலமைப்பைத் திருத்தலாம். பாராளுமன்றத்தில் இராச்சியங்களின் பிரதிநிதிகள் இருக்கிறார்களென்பதும், அவர்கள் இராச்சியங்களின் உரிமைகளைப் பாதுகாக்கக் கடமைப்பட்டவர்களென்பதும் உண்மையேயானாலும், எந்த அளவிற்கு அவர்கள் பாராளுமன்றத்தைக் கட்டுப்படுத்த முடியும் என்பது சந்தேகத்திற்கிடமானதாகும். வேறு சில மாற்றங்கள் அரசர்கள் கழகத்தில் அங்கம் பெற்றிருக்கும் அரசர்கள் சம்மதமின்றி பிரேரபிக்கமுடியாது. ஆனால், அவைகள் அரசர்களுடைய அதிகாரங்களையும், சலுகைகளையும் பற்றியவைகளேயாகும்.

இராச்சியங்கள், கூட்டாட்சியிலிருந்து பிரிந்து செல்வதற்கு ஏதுவாக அரசியலமைப்பில் தெளிவான ஏற்பாடு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், குறிப்பிட்ட எந்தவொரு இராச்சியமும் ஒருதலைப்பட்சமாக பிரிந்து செல்வதற்கு நிச்சயமாக முடியாது. எனினும், மலாயாவில் பிறகு சேர்ந்த போர்னியோ இராச்சியங்களும், சிங்கப்பூரும் பிரிந்து செல்வதற்குத் தடையிருக்க முடியாதென்ற கருத்து மேலோங்கியிருக்கிறது. எந்த அரசியலமைப்பு மாற்றச் சட்டங்கள் உதவியுடன் அவைகள் கூட்டாட்சியில் சேர்த்துக்

கொள்ளப்பட்டனவோ, அம்மாற்றச் சட்டங்களை மூன்றிரண்டு பங்கு உறுப்பினர்களின் ஆதரவு பெற்று ரத்து செய்வதன் மூலம் அவை பிரிந்து செல்ல வகை செய்யலாம். இந்த அடிப்படையில்தான் 1965ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 9-ந்தேதி எதிர்ப்பெதுவுமில்லாது, கூட்டாட்சி பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட மாற்றத்தினுல் சிங்கப்பூர் தனியாகப் பிரிந்து சென்றது என்பது இவ்விடத்தில் அறியத் தக்கதாகும்.

சட்டமியற்றும் அதிகாரம் கூட்டாட்சி அரசாங்கத்திற்கும், மாநில அரசாங்கங்களுக்குமிடையே அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ளவாறு பகிர்ந்தளிக்கப்படவில்லை. ஆனுல், இந்திய முறையடிப்படையில் மூன்று அதிகாரப் பட்டியல்கள் இருக்கின்றன. அவைகள் கூட்டாட்சி, இராச்சிய, பொதுப்பட்டியல்கள் என்பனவாகும். இம் மூன்று பட்டியல்களில் அடங்காத அதிகாரங்கள் இருக்குமானுல் அவைகள் இராச்சியங்களைச் சேரும் என்று அந்நாட்டு அரசியலமைப்பு கூறுகிறது. ஆனுல், முதல் மூன்று பட்டியல்களில் சேர்க்கப்பட்டுள்ள அதிகாரங்கள் போக எஞ்சியுள்ள அதிகாரங்கள் உண்மையில் எதுவுமில்லை என்று சொல்லப் படுகிறது.

அதிகாரப் பட்டியல்களை மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போதே, இராச்சியங்களுக்குத்தரப்பட்டிருக்கும் அதிகாரங்களைக் காட்டிலும் கூட்டாட்சி அரசாங்கத்திற்குத்தரப் பட்டிருக்கும் அதிகாரங்கள் மிக அதிகமானவையென்பது தெளிவாகும். இராச்சியங்கள், சுரங்கம் உள்ளிட்ட நிலம், வேளாண்மை, காடுகள் போன்ற இயற்கை வளங்களின் முன்னேற்றத்தைப் பற்றிய அதிகாரங்களைப் பெற்றிருக்கின்றன. எனினும், மத்திய அரசாங்கமும் நிலம் சம்பந்தப் பட்ட அதிகாரத்தைப் பெற்றிருக்கிறது. ஆனுல், சிங்கப்பூர், கூட்டாட்சியில் அங்கம் வகித்தபோது அதற்கிருந்த அதிகாரங்கள் உண்மையில் அதிகமானவை. மேலும், பொதுப்பட்டியலிலுள்ள இனங்களில் கூட்டாட்சி அரசாங்கம் சாதகமான அதிகாரமுடையதாக இருக்கிறது. பொதுப்பட்டியலிலுள்ள ஏதேனுமொரு இனம்பற்றி, கூட்டாட்சி சட்டமொன்றை இயற்றுமானுல் அச்சட்டம் இராச்சிய சட்டத்திற்குப்பிறகு இயற்றப்பட்டதாக இருந்தாலும், இராச்சியசட்டம் கூட்டாட்சிச் சட்டத்திற்கு மாறுபாடான அம்சங்களையுடையதாக இருக்குமானுல், கூட்டாட்சி சட்டமே செல்லுபடியாகும்.

கூட்டாட்சி, இராச்சியப் பட்டியலிலுள்ள இனங்களிலும் சட்டமியற்றலாம். உதாரணமாக இராச்சியங்கள் இயற்றும் சட்டங்கள் ஒரே மாதிரியானவையாக இருக்கவேண்டுமென்பதற்காகக் கூட்டாட்சிப் பாராளுமன்றம் சட்டம் இயற்றலாம். இத்தகைய அம்சங்கள் அரசியலமைப்பின் 150ஆம் விதியில் முக்கியமாகக் காணப்படுகின்றன. நெருக்கடி நிலைமைப் பிரகடனம் அமுலில் இருக்கும்போது, முகம்மதியச்சட்டம் அல்லது வழக்கம்போன்றவை நீங்கலாக இதர எல்லாத் துறைகளிலும் அவைகள் இராச்சியப்பட்டியல்களைச் சேர்ந்தவைகளாக இருந்தாலும், மத்தியப் பாராளுமன்றம் சட்டங்கள் இயற்ற அதிகாரமுடையதாகும். இந்தமுறை 1966ஆம் ஆண்டு சாரவாக்கில் அரசியல் நெருக்கடி ஏற்பட்டபோது கூட்டாட்சி அரசாங்கத்தினுல் பின்பற்றப்பட்டது.

கூட்டாட்சிப் பாராளுமன்றத்தைக் காட்டிலும் கூட்டாட்சி அரசாங்கம் இராச்சியங்கள்மேல் அதிகமான கட்டுப்பாடுகளைப் பெற்றிருக்கிறது. போர்னியோ இராச்சியங்கள் நீங்கலாக இதர இராச்சியங்களிலுள்ள இராச்சிய வேளாண்மை, காட்டு அலுவலர்கள் கூட்டாட்சி அரசாங்கத்திடமிருந்து தொழில் சம்பந்தப்பட்ட ஆலோசனையைப்பெறவேண்டும். இவ்வலுவலர்கள் இராச்சியப் பொது அலுவல்துறையைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் பதவி உயர்வு பெறுவதற்கு கூட்டாட்சி அரசாங்கத்தைச் சார்ந்திருக்கவேண்டியிருப்பதால், அவர்களை கூட்டாட்சி அரசாங்கம் கட்டுப்படுத்துவது எளிதாக இருக்கிறது. இராச்சியங்களில் கூட்டாட்சி அரசாங்கம் விசாரணைகளையும், சர்வேக்களையும் நடத்தலாம். இராச்சியங்கள் கடன் வாங்குவதையும், மத்திய அரசாங்கம் கட்டுப்படுத்துகிறது. நெருக்கடிநிலைமைப் பிரகடனம் அமுலிலிருக்கும்போது இராச்சிய சட்ட அலுவல்கள்பற்றி கூட்டாட்சி அரசாங்கம் உத்திரவு பிறப்பிக்கலாமென்பதோடு, இராச்சிய அரசாங்கங்கள் அல்லது அலுவலர்களுக்கு ஆணைகளைப் பிறப்பித்து அவ்வாறு நடக்கவேண்டுமென்று வற்புறுத்தலாம்.

கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் இராச்சிய அரசாங்கங்களுக்குமிடையிலான ஒத்துழைப்பு பல வழிகளில் பெறப்படுகிறது. சிலவகைகளில், ஒத்துழைப்பு என்பது கூட்டாட்சி அரசாங்கத்தின் ஆணைகளையும், சட்டங்களையும் நிறைவேற்றுவது என்று சொல்லப்படுகிறது. இவ்விருவகை அரசாங்கங்களிடையிலான ஒத்துழைப்பை வளர்க்கும்

முறையில், இவையிரண்டும் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கும் இரண்டு கொள்கைகளை உருவாக்கும் கழகங்கள் அமைக்கப் பட்டிருக்கின்றன. அவைகள் தேசிய நிலக்கழகம், தேசிய வட்டாரக்கழகம் (National Council for Local Government) என்பனவாகும். மூன்றாவதாக, தேசிய நிதிக்கழகமொன்றும் (National Finance Council) இருக்கிறது. எனினும், இக்கழகம் கொள்கைகளை உருவாக்கமுடியாதென்பதோடு, மத்திய அல்லது மாநில அரசுகளைக் கட்டுப்படுத்தவும் முடியாது. இவையல்லாமல், இரண்டுவகை அரசாங்கங்களுக்கிடையே ஒத்துழைப்பை ஏற்படுத்துவதற்கு, வேறு பல ஏற்பாடுகளும் அரசியலமைப்பில் இருக்கின்றன.

மொத்தத்தில் கூட்டாட்சியின் அதிகாரங்கள் முதலி லிருந்த பதினோரு இராச்சியங்களின் அதிகாரங்களைவிட அதிக மானதாகும். இருப்பினும், கூட்டாட்சிப் பிரதமர் போது மான அதிகாரமில்லையென்று ஒரு சமயம் குறைபட்டுக் கொண்டார். 1961ஆம் ஆண்டு டிரெங்கானு இராச்சிய அரசாங்கம், இராச்சிய சட்டசபையையும் நிர்வாகக்கழகத்தை யும் கூட்டவேண்டிய காலங்களிலெல்லாம் கூட்டாதபோது, அதை வழிக்குக் கொண்டுவருவதற்காக தற்காலிகமாக அதை நிறுத்தி வைக்கக் கூட்டாட்சிக்கு அதிகாரமில்லை என்பது தெளிவாயிற்று. இத்தகைய அதிகாரம் இந்தியாவில் மத்திய அரசாங்கத்திற்கு இருக்கிறதென்பதும், அதை இந்திய அரசாங்கம் அவ்வப்போது பயன்படுத்தி வருகிறது என்பதும் இவ்விடத்தில் அறியத்தக்கது.

இதர இனங்களில் இராச்சிய அரசாங்கங்களின் அதிகாரம், கூட்டாட்சிக்கு உள்ளதைவிட குறைவாக இருப்பதைப்போலவே நிதிஅதிகாரங்களும் குறைவாக உள்ளன. கூட்டாட்சிக்குக் கிடைக்கும் வருமானத்தில் நான்கில் ஒரு பங்குதான் இராச்சியங்கள் எல்லாவற்றின் கூடுதல் வருமானம் என்று தெரிகிறது. இராச்சிய வரவு-செலவுத்திட்டத்தில் காட்டப்படும் வருமானத்தில் மூன்றி லொருபங்கு கூட்டாட்சியிடமிருந்து கிடைப்பதாகும். இராச்சியங்களின் வருமானம் பல துறைகளிலிருந்து கிடைக்கிறது. அவைகளில் சுரங்கங்கள், காடுகள், புதையல் கள் போன்றவற்றிற்கு வழங்கப்படும் அனுமதிகள் மூலமாகக் கிடைக்கும் வருவாய் கணிசமானது. கூட்டாட்சி, இராச்சியங் களுக்கு மக்கள் தொகை அடிப்படையிலும், சாலைகளின் நீளம் அவற்றின் பராமரிப்புத் தேவையடிப்படையிலும் மான்யங்

களை வழங்குகிறது. போர்னியோ இராச்சியங்கள் விசேஷ வரி விதிப்பு அதிகாரங்களைப் பெற்றிருக்கின்றன. அவைகளில் விற்பனை வரி போடுவதற்கு அவைகளுக்குள்ள அதிகாரம் முக்கியமானது. இந்த இராச்சியங்கள், ஏற்றுமதி, இறக்குமதி வரித்தொகைகளிலிருந்தும் பங்கு பெறுகின்றன.

கூட்டாட்சிக்கும் இராச்சியங்களுக்குமிடையிலான நல்லுறவுகள் அரசியலமைப்பில் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகள் மூலமாக மட்டும் அல்லாமல் அரசியல் கட்சிகளிலுள்ள உறுப்பினர்களிடையே ஒற்றுமையையும், நல்லுணர்வையும் வளர்ப்பதன்மூலமாகப் பெறப்படுகிறது.

# 5. நிர்வாகத்துறையும் அதன் பணிகளும்

கூட்டாட்சி நிர்வாகத்துறை யாங் தி-பர்த்துவான் அகாங்கையும், பிரதம மந்திரியைத் தலைவராகக்கொண்ட அமைச்சர்கள் கழகத்தையும் கொண்டதாகும்.

**யாங் தி-பர்த்துவான் அகாங்கு** (Yang di-Pertuan Agong)

கூட்டாட்சியின் தலைவர் யாங் தி-பர்த்துவான் அகாங்கு ஆவார். தலைவராக ஆக்கப்பட்டவர் (He who is made Lord) என்பது அதன் பொருளாகும். அவர் சட்ட, நிர்வாக, நீதி சம்பந்தப்பட்ட அதிகாரங்களின் பிறப்பிடமாகக் கருதப்படுகிறார். பாராளுமன்றத்தினால் இயற்றப்படும் மசோதாக்கள் அவரின் இசைவு பெற்றபிறகே சட்டமாகமுடியும். அமைச்சரவை அவர் பெயரால் அவருடைய அதிகாரத்தின் ஆதரவில் செயலாற்றுகிறது. நீதிபதிகளை அவரே நியமிக்கிறார். நீதிமன்றங்கள் 'அவருடைய' நீதிமன்றங்கள். அவர் கூட்டாட்சியிலுள்ள அனைத்துமக்களின் தலைவராக, முதலிடத்தைப் பெறுகிறார் என்பது அவருடைய சிறப்பாகும்.

நிகழ்முறையில் இத்தனை அதிகாரங்களையும் அவரே செலுத்துகிறார் என்பது இல்லை. இவ்வம்சத்தில் அவர் இங்கிலாந்துநாட்டு அரசியாரை ஒத்திருக்கிறார். அரசியலமைப்பு அவரைப் பலவகைகளில் கட்டுப்படுத்துகிறது. அனேகமாக எல்லாத்துறைகளிலும் அவர் அமைச்சரவை ஆலோசனைப்படிதான் நடக்கவேண்டும் (அ. விதி. 40 (1)). அமைச்சரவை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையுடைய பிரதிநிதிகள் சபையின் (House of Representatives) ஆதரவைப் பெற்றிருக்கவேண்டும். எனவே, அரசர் (தலைவர்)

சட்டபூர்வமான தலைவரேயன்றி, சகல அதிகாரங்களையும் எதேச்சாதிகாரமான தன்மையில் செலுத்தி ஆளும் அரசரல்லர். அமைச்சரவையின் முடிவுகளையெல்லாம் அவர் ஏற்றுக்கொள்ளவேண்டும். இம்முடிவுகளெடுக்கப்படுவதற்கு முன்பு அவர் கலந்தாலோசிக்கப்படுகிறார். அவர் விரும்பினால் அறிவுரைகள் வழங்கலாம். எடுக்கப்படும் முடிவுகள் அவருக்குத் தெரிவிக்கப்படுகின்றன. இது அவருடைய அதிகாரத்திற்கு இருக்கும் எல்லையை விளக்குகிறது. முதலில் அரசராக இருந்தவர் இறந்தபோது 'எந்தக்காலத்திலும் அரசாங்கத்தின் நடைமுறைகளில் அவர் தலையிட முயற்சித்ததே கிடையாது' என்று அவரைப் பிரதம மந்திரி பாராட்டிப்பேசினார்.

சில விஷயங்களில் அரசர் தன் உசித அதிகாரத்தைப் பயன்படுத்தலாம் (அ. விதி. 40 (2) ), அவ்வாறு அவர் உசித அதிகாரத்தைப் பயன்படுத்தும் சந்தர்ப்பங்கள், தேர்தல் களுக்குப் பிறகு பிரதம மந்திரியை நியமிக்கும்போதும், பாராளுமன்றத்தின் ஆதரவை இழந்த பிரதம மந்திரியின் சிபாரிசின்பேரில் அவைக் கலைக்க மறுக்கும்போதும் ஏற்படு கின்றன. குறிப்பாக பிரதிநிதிகள் சபையில் எந்தவொரு கட்சி யும் அறுதிப்பெரும்பான்மை பலம்பெறாமல், ஒன்றுக்கு மேற் பட்ட கட்சிகள் சேர்ந்து அமைச்சரவை அமைக்கவேண்டிய சூழ்நிலை ஏற்படும்போது, அவருடைய கருத்துப்படி யாரை பிரதமராக நியமித்தால் அரசாங்கம் ஸ்திரமாக இருக்குமோ, அவரை பிரதம மந்திரியாகப் பதவியேற்று அமைச்சரவை அமைக்குமாறு சொல்லலாம். அவ்வாறே, பிரதிநிதிகள் சபையின் ஆதரவையிழந்த பிரதம மந்திரி அவைக் கலைத்து விட்டு, மறுதேர்தல் நடத்துமாறு கேட்டுக்கொண்டால் அதை அவர் ஏற்கலாம்; அல்லது மறுக்கலாம். மறுத்தால் பிரதம மந்திரி தன் பதவியை ராஜினாமா செய்யவேண்டும். அரசர் பிறிதொரு கட்சியின் தலைவரை அரசாங்கம் அமைக்குமாறு கேட்டுக்கொள்ளலாம். அரசியலமைப்பு 55 (3) ஆம் விதி இந்த அதிகாரத்தை அரசருக்கு வழங்குகிறது. ஆனால், இந்த உசித அதிகாரத்தைப் பயன்படுத்துவதற்கு அரசருக்கு அதிக வாய்ப்புகள் இதுவரை கிடைக்கவில்லை. எனினும், அரசர் பொம்மையொன்றுக்கு ஒப்பானவர் என்றும் சொல்லிவிட முடியாது.

அரசர் அமைச்சரவைக்கு ஆலோசனை கூறலாம். அதை அமைச்சரவை ஏற்பதைப்பற்றியோ, நிராகரிப்பதைப்

பற்றியோ கவலைப்படவேண்டியதில்லை. அவர் நாட்டின் சின்னமாக விளங்குவதால் மக்களிடையே ஒற்றுமை ஏற்படுவதோடு, அவர்கள் நாட்டிடம் பற்றுதலுடையவர்களாக இருக்கிறார்கள்.

அரசர், ஐந்தாண்டுப் பதவிக்காலத்திற்கு அரசர்கள் கழகத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகிறார். அரச பதவி, அக்கழகத்தில் அங்கம் வகிப்பவர்களிடையே வழக்காறடிப் படையில், சுழல்முறையடிப்படையில் செல்கிறது. இதனால் அரசர்கள் கழகத்திலுள்ளவர்கள் அனைவரும் கூட்டாட்சியின் தலைவராக ஆவதற்குச் சந்தர்ப்பமிருக்கிறது. அரசர்கள் கழகத்தில் ஒன்பது அரசர்களே உறுப்பினர்களாக இருக்கிறார்கள் என்பதும், தேர்தல் அவர்களுக்குள்ளேயே அவர்களாலேயே நடத்தப்படுகிறது என்பதும் கவனிக்கத்தக்கது. அரசர்கள் கழகத்தைச் சேர்ந்த எவராவது வயதுக்கு வராதவராக இருந்தாலோ அல்லது தலைமைப்பதவி வேண்டாமென்று கூறிவிட்டாலோ, வரிசைப்படி அடுத்தவர் கூட்டாட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவார்.

அரசர் தேர்வில் காணப்படும் மற்றுமொரு சிறப்பம்சம் வரிசைப்படித் தேர்ந்தெடுக்கப்படவேண்டிய ஒருவரை, அரசர்கள் கழகம் தலைவர் பதவிக்குத் தகுந்தவரல்ல என்று முடிவு செய்யுமானால் அடுத்தாற்போலவுள்ள ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவார். எனவே, சுழல்முறையடிப்படையில் தகுதியில்லாத ஒருவர் கூட்டாட்சி அரசராக வந்துவிடமுடியாது. 1957ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களில் முதல் அரசர் தேர்ந்தெடுக்கப்பட்டபோது முதுநிலைவிதிப்படி (Seniority Rule) எண்பத்து நான்குவயதான ஜோஹோர் சுல்தான்தான் அப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கவேண்டும். ஆனால், அவர் தாம் போட்டியிடாமல் விலகிக்கொண்டார். அடுத்ததாக, பஹாங் சுல்தான் இருந்தார். அவர் தலைவர் பதவிக்குப் பொருத்தமற்றவர் என்ற கருத்து நிலவியதால் நெகரி செம்பிலான் சுல்தான்தான் இறுதியில் கூட்டாட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் எட்டுக்கு ஒன்று என்ற வாக்குகள் பெரும்பான்மையில் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், சில சமயங்களில் ஒன்பது பேர்களில் யாராவது இருவர் கூட்டத்திற்கு வராமல்போனால், நான்கு பேர்களின் ஆதரவு இருந்தாலும் ஒருவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படலாம். ஆனால், குறிப்பிட்ட ஒருவர் கூட்டாட்சிக்குத் தலைவராகத்

தேர்ந்தெடுக்கப்படுவதற்குத் தகுதியற்றவர் என்னும் தீர்மானத்திற்குக் குறைந்தது ஐந்து வாக்குகள் தேவையாகும்.

கூட்டாட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படும் அரசரொருவர் அப்பதவியை ஏற்றதும் அவரது சொந்த இராச்சியத்தின் அரசராகத் தொடர்ந்து இருக்கமுடியாது. அப்போது அவருக்குப் பதிலாக வேறு ஒருவர் அந்த இராச்சியத்தின் தலைவராக நியமிக்கப்படுவார். இருப்பினும் மத விஷயங்களிலும், இராச்சிய அரசியலமைப்பை மாற்றுவதிலும் அரசரது இசைவின்றி எதையும் செய்யமுடியாது என்று அரசியலமைப்பின் 34ஆம் விதி கூறுகிறது.

கூட்டாட்சி அரசருக்குத் துணைத்தலைவர் ஒருவரும் இருக்கிறார். அவர் திம்பலான் யாங் தி-பர்த்துவான் அகாங்கு (Timbalan Yang di–Pertuan Agong) என்றழைக்கப்படுகிறார். தலைவர் நோய்வாய்ப்பட்டிருப்பதனாலோ அல்லது வெளிநாடு சென்றிருப்பதனாலோ தன் கடமைகளையாற்ற முடியாதிருக்கும் போது, துணைத்தலைவர் அக்கடமைகளைச் செய்வார். அக்காலத்தில் அவருக்குத் தலைவருக்குள்ள உரிமைகள், சலுகைகள், சிறப்புகள் யாவும் தரப்படும். மேலும் கூட்டாட்சி அரசர் இறந்து மறு அரசர் தேர்ந்தெடுக்கப்படும் வரையிலும், அவரே அரசராக இருந்துவருவார். 1960ஆம் ஆண்டு மே மாதத்திலும், 1960ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலும், 1965ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலும் நடைபெற்ற தேர்தல்களில் துணைத்தலைவரே தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். முதல் இரண்டு தலைவர்களும் அவர்களுடைய பதவிக்காலமான ஐந்தாண்டுகள் முடிவதற்கு முன்பாகவே இறந்துவிட்டனர். முதல் அரசர் மூன்றாண்டுகளுக்குள்ளாகவே காலமானார். இரண்டாமவர் ஆறுமாத காலத்தில் இயற்கை யெய்தினார். மூன்றாமவர்தான் ஐந்தாண்டுக் காலத்திற்குப் பதவி வகித்தார்.

**அமைச்சர்கள் கழகம்**

நாட்டின் செயற்பூர்வமான அரசாங்கம் பாராளுமன்றத்திலுள்ளப் பெரும்பான்மைக் கட்சியினால் அமைக்கப்படும் அமைச்சரவையின் கையிலிருக்கிறதெனலாம். எனவே, அமெரிக்காவிலுள்ளவாறல்லாமல், மலேசியாவில் அமைச்சர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களாக இருக்கவேண்டும். பெரும்பாலான அமைச்சர்கள் பிரதிநிதிகள் சபையைச்

சேர்ந்தவர்கள். மற்றவர்கள் செனட்டைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம். இருப்பினும் அமைச்சர்களும், உதவி அமைச்சர்களும் பாராளுமன்றத்தின் இருசபைகளின் நடவடிக்கைகளில் கலந்துகொண்டு பேசலாம்.

அமைச்சரவை உறுப்பினர்கள் யாங் தி-பர்த்துவான் அகாங்கினுல் பிரதமரின் ஆலோசனைப்படி நியமிக்கப் படுகிறார்கள். பிரதமர் அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதில் பெருமளவுச் சுதந்திரம் பெற்றிருக்கிறாரென்றாலும், அரசியல், நிர்வாகத் திறமையுடையத் தன் கட்சியைச் சேர்ந்தவர்களையும், செல்வாக்குடையவர்களையும் புறக்கணித்து, தன் விருப்பம்போல எவரையும் அமைச்சராக நியமிக்க முடியாது. அவ்வாறே, சீன இந்தியப் பிரிவினர்களுக்குப் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டியதையும் கவனத்தில் கொள்ளவேண்டும். சாரவாக், சபா இராச்சியங்களின் அலுவல்களைக் கவனிப்பதற்கெனவும் தனித்தனி அமைச்சர்கள் நியமிக்கப்படுவதும் அவர் கவனத்தில் கொள்ளவேண்டும்.

நீதியமைச்சரும், வர்த்தகத் தொழில் அமைச்சரும் சீன இனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கவேண்டுமென்பது இப்பொழுது வழக்காறுகியிருக்கிறது. இதர அமைச்சர்கள் மலாய் இனத்தவர்களாக இருந்தாலுமிருக்கலாம்; அவ்வாறு இல்லாமலுமிருக்கலாம்.

அமைச்சரவையில் அதிகமான எண்ணிக்கையினர் உறுப்பினர்களாக இருக்கக்கூடாதென்பது பொதுவான கருத்து. அதிகமானவர்கள் இருந்தால் கொள்கைபற்றிய விவாதங்கள் சரிவர நடைபெறாது என்பது காரணமாகச் சொல்லப் படுகிறது. எனவே, ஒரே அமைச்சர் பல துறைகளுக்குத் தலைவராக இருப்பது அங்கு நடைமுறையிலிருக்கிறது. சில சமயங்களில் இலாக்காப் பொறுப்பற்ற அமைச்சர்களும் நியமிக்கப்படுகிறார்கள். அத்தகைய அமைச்சர்கள் பொதுவாக வெளி நாடுகளோடு மலாயா சம்பந்தப்பட்ட பிரச்சினைகளைத் தெரிந்துகொண்டு, அவைகளைப் பைசல் செய்வதற்கெனக் கருதப்படுகிறது. மேலும், அவர்கள் அரசாங்கச் சார்பற்ற ஆனால், கட்சிச் சார்புடைய அலுவல்களைக் கவனிப்பதற்காக வென்றும் தெரிகிறது.

அமைச்சரவை உறுப்பினர்களின் எண்ணிக்கை குறைக்கப் படலாம். அல்லது கூட்டப்படலாம். அங்ஙனமே, அமைச்சரகங்

களின் பணிகளும் அவ்வப்போது பிரித்து அளிக்கப்படலாம். சான்ருக, பொதுநலப்பணி தொழில் அமைச்சரகத்திலிருந்து பிரித்து, 1959இல் சுகாதார அமைச்சரகத்திற்கு அளிக்கப்பட்டு, பிறகு 1962இல் மீண்டும் அப்பணி தொழிலமைச்சரகத்திடமே சேர்க்கப்பட்டது. 1964இல் அது தனி அமைச்சரகமாக அமைக்கப்பட்டது. சில சமயங்களில் அமைச்சரகங்களின் பணிகள் அரசியல் காரணங்களுக்காகவும் மாற்றப்படலாம். இதற்கு எடுத்துக்காட்டாக, 1959இல் ஏற்படுத்தப்பட்ட நாட்டுப்புற முன்னேற்ற அமைச்சரகத்தைக் (Ministery of Rural Development) கூறலாம்.

அமைச்சர்கள் கழகத்தில் உதவியமைச்சர்களும் இருக்கிறார்கள். இவர்கள் 1955ஆம் ஆண்டு முதலே நியமிக்கப்பட்டு வந்தபோதிலும் 1960இல்தான் அவர்கள் நியமனம் பற்றிய தெளிவான ஏற்பாடுகள் செய்யப்பட்டது. உதவி அமைச்சர்களும் பாராளுமன்ற உறுப்பினர்களாக இருத்தல் வேண்டும். அவர்கள் அமைச்சர்களுக்குக் (Cabinet Ministers) கட்டுப்பட்டவர்கள். 'அவர்கள், அமைச்சரகங்களை நடத்துவதிலும், அதிகாரங்களைச் செலுத்துவதிலும் அமைச்சர்களுக்கு உதவி புரிவார்கள்' என்று அரசியலமைப்பின் 43-எ ஆம் விதி கூறுகிறது. அவர்கள் போதுமான பயிற்சி பெற்ற பிறகு முழு அந்தஸ்துடைய அமைச்சர்களாகப் பிற் காலத்தில் நியமிக்கப்பட்டாலும் படலாம்.

1964ஆம் ஆண்டில் அரசியலமைப்பிற்குக் கொண்டுவரப்பட்ட மாற்றம் (அ. விதி. 43பி) பாராளுமன்றச் செயலாளர்களும், அரசியல் செயலாளர்களும் (Political Secreteries) நியமிக்கப்படுவதற்கு வகைசெய்தது. மலேயா கூட்டாட்சியாக அமைக்கப்பட்டபிறகு அமைச்சர்களுடையவும், உதவியமைச்சர்களுடையவும் கடமைகளும், பணிகளும் அதிகரித்துவிட்டபடியால் அவர்களுக்குத் துணைபுரிவதற்காக பாராளுமன்றச் செயலாளர்களும், அரசியல் செயலாளர்களும் நியமிக்கப்படவேண்டியது இன்றியமையாததாகிவிட்டது. பாராளுமன்றச் செயலாளர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களாக இருக்கவேண்டும்; ஆனால், அரசியல் செயலாளர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களாக இருக்கவேண்டியதில்லை. இவர்களின் பணிகள் தெளிவாகச் சொல்லப்படவில்லை. எனினும், முதலாவதாகச் சொல்லப்பட்டவர்கள் அரசாங்கம் சம்பந்தப்பட்ட பணிகளிலும், இரண்டாவதாகச் சொல்லப்பட்டவர்கள் பொதுமக்கள் தொடர்புடைய பணிகளிலும் அமைச்சரவைக்கு

உதவுவதற்காக நியமிக்கப்படுகிறுர்கள். இவ்வாறு பதவிகள் ஏற்படுத்தப்படும் வேகத்தையும், அவைகளை பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு அளிப்பதையும் குறைகூறும் நோக்கத்தில் குறிப்பிடுபவர்கள், பதவியில்லாத பாராளுமன்ற உறுப்பினர்களே இனி இருக்கமாட்டார்கள் என்று கூறுகிறுர்கள்.

**அமைச்சரவை நடைமுறையும், பிரதமரும்**

அமைச்சரவை வாரத்திற்கொருமுறை கூடுகிறது. அதன் கூட்டத்திற்குப் பிரதமரும், அவர் இல்லாதபோது துணைப் பிரதமரும் தலைமை வகிப்பர். பிரதமரின் துறையிலுள்ள நிரந்தரச் செயலாளர்தான் அமைச்சரவைக் கூட்டங்களைக் கூட்டுவதற்கும், அதன் நிகழ்ச்சி நிரலைத் தயாரிப்பதற்கும், அமைச்சரவை நடவடிக்கைகள்பற்றிய குறிப்புக்களைச் சேகரித்துப் பாதுகாப்பதற்கும், அதன் முடிவுகளை சம்பந்தப்பட்ட அரசாங்க நிறுவனங்களுக்கு அனுப்பவும் பொறுப்புடையவராவார். விவாதங்களைப்பற்றிய ஆவணங்கள் எவையும் பராமரிக்கப்படுவதில்லை. அமைச்சரவைக் குறிப்புக்களெல்லாம் சம்பந்தப்பட்ட அமைச்சர்களும், அதிகாரிகளும் அவைகளில் கண்டுள்ளவற்றைச் செயலுக்குக் கொண்டு வருவதற்குதவும் அறிக்கைகளேயாகும். அவைகள் பொது மக்களுக்குத் தெரிவிக்கப்படுவதில்லை. எனவே, அமைச்சரவை நடைமுறைபற்றிய செய்திகள் மிகச்சிலவேயாகும் என்பது தெளிவாகும். இதைப்போலவே, அமைச்சரவைக் குழுக்கள் செய்த முடிவுகளும், அவைபற்றியக் குறிப்புக்களும் மிகக் குறைவாகவே கிடைக்கின்றன. எனினும், 1959ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பின்வரும் அமைச்சரவைக் குழுக்கள் அமைக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. அவைகள் வருமாறு: பாதுகாப்பு, உள்நாட்டுப் பாதுகாப்பு, பொருளாதாரம், சமூகப்பணிகள், துப்பறிதலும் நாசவேலைகள் எதிர்ப்பும், ஆட்கள் நியமனம், மலேயர்கள் மயமாக்கல்.

அமைச்சரவையில் பிரதமரே எல்லாம் வல்லவர் என்பது தெளிவாகிறது. 'அவர் அமைச்சர்களைக் கூலிக்கமர்த்தவும் விலக்கவும் அதிகாரம் பெற்றிருக்கிறுர்'. அவர் அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமை வகிக்கிறுர். வெளிநாட்டுப் பிரதிநிதிகளுடன் பேச்சுவார்த்தைகளை மேற்கொள்ளும் தலைமைப் பிரதிநிதி அவரே. இதற்கு அவர் வெளிவிவகார இலாகா பொறுப்புடையவராக இருக்கவேண்டிய அவசியமில்லை. ஏதாவதொரு திட்டமோ, வேலையோ தீவிரமாக நிறைவேற்றப்

படவேண்டுமானல், அது அவரது அமைச்சரகத்தின்கீழ் கொண்டுவரப்படும். ஆனால், இவையெல்லாவற்றிற்கும் அரசியலமைப்புப்படி அவருக்கு உரிமை வழங்கப்பட்டிருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கமுடியாது. அவரது பணிகள் பலவும், அவர் கட்சிக்குத் தலைவராக இருப்பதால் கிடைக்கும் செல்வாக்கு, ஆதரவு, ஒத்துழைப்பு ஆகியவற்றின் உதவியால் சாத்தியமாகின்றனவென்றால் தவருகாது. இத்தகைய சிறப்புக்களைப் பெறுவதற்கு பிரதமராக இருப்பவரும் சீலமிக்க வராக, ஆளுமையுடையவராக இருக்கவேண்டுமென்று சொல்லத்தேவையில்லை. இதெல்லாம் எந்த அளவிற்குப் பொருந்தும் என்பது, 1959ஆம் ஆண்டில் கட்சிப்பணியில் ஈடுபட்டு, கட்சியைப் பலப்படுத்தவேண்டுமென்பதற்காக துங்கு அப்துல் ரஹ்மான் பிரதமர் பதவியிலிருந்து நான்கு மாத காலத்திற்கு விலகி, துன்ரசாக் பிரதமராக இருந்தபோது ஏற்பட்ட மாற்றத்திலிருந்து நன்ருகத் தெரிகிறது.

அரசியலமைப்புப்படி, பிரதமர் அந்நாட்டின் சட்டபூர்வ மான குடிமகளுக இருக்கவேண்டும். பதிவு செய்துகொண்ட குடிமகளுக இருந்தால் போதாது. அவர் பிரதிநிதிகள் சபையில்தான் உறுப்பினராக இருக்கவேண்டும். பிரதமர் எந்தவொரு இனத்தைச் சேர்ந்தவராக வேண்டுமானுலும் இருக்கலாமென்ருலும், மலாய் இனத்தைச்சேராத ஒருவர் அங்கு பிரதமராக வருவதென்பது சாத்தியமானதல்ல.

துணைப் பிரதம மந்திரி பதவிக்கு அரசியலமைப்பில் ஆதாரம் கிடையாது. இருந்தாலும், அங்கு அப்பதவி நடை முறையில் இருந்து வருகிறது. துங்கு அப்துல் ரஹ்மான் கருத்துப்படி, 'உதவிப்பிரதமர், பிரதம மந்திரி நாட்டில் இல்லாதபோதும், அவர் நாட்டில் இருக்கும்போதும் அவருடைய கடமைகளையும், பணிகளையும் நிறைவேற்று வதற்கு உதவி செய்யவேண்டும்'. இவைகளைத்தவிர அவருக்கு வேறு அலுவல்கள் எதுவும் கிடையாது.

அரசியலமைப்பின் 43ஆம் விதிப்படி அமைச்சரவை பாராளுமன்றத்திற்குக் கூட்டுப்பொறுப்புடையது. ஆனல், நிகழ்முறையில் அது பிரதிநிதிகள் சபைக்குத்தான் அப்பொறுப்புடையதாகவிருக்கிறது. ஒவ்வொரு அமைச்சரும் மற்ற அமைச்சர்களாலும், மற்ற அமைச்சர்கள் ஒவ்வொரு அமைச்சராலும் ஆதரிக்கப்படவேண்டும். இதைப் பின்பற்றத் தவறும் அமைச்சரெவரும் பதவியை இராஜிளுமாச் செய்தல்

வேண்டும் (அ. விதி. 43 (5), இக்கூட்டுப்பொறுப்பு பற்றிய பிரச்சினை 1962இல் எழுந்தது. அப்பொழுது பிரதம மந்திரி அமைச்சர்களின் இலாகா பொறுப்புகளை மாற்றியமைத்தார். இந்த மாற்றத்தில் அப்துல் அஜீஸ் பின் ஐசக் என்பவரிட மிருந்து வேளாண்மை, கூட்டுறவுத்துறைகள் பிடுங்கப்பட்டு, அவற்றிற்குப்பதிலாக சுகாதாரத்துறை அளிக்கப்பட்டது. இதை அவர் எதிர்க்க முயற்சிசெய்தாரெனினும் இறுதியில் பதவியிலிருந்து ராஜினமா செய்ய நேர்ந்தது. இதைத் தொடர்ந்து அவருக்கும், இதர அமைச்சர்களுக்குமிடையே ஏற்பட்ட சச்சரவில் பல விஷயங்களில் அவருக்கும் மற்றவர் களுக்குமிடையே கருத்துவேற்றுமை இருப்பது தெரிய வந்தது. அவர் தன் துறையில் நிறைவேற்றப்படவேண்டி யிருந்த திட்டங்களுக்குத் தேவையான முதலீட்டை அளிக் காமல் நிதியமைச்சர் தடைசெய்தாரென்று குற்றஞ் சாட்டினர். ஆனல், நிதியமைச்சரோ அஜீஸ் நிர்வாகத்தைச் சரியாகச் செய்யவில்லையென்று குற்றஞ்சாட்டினர். இதை யல்லாமல், வெளிவிவகாரக் கொள்கையிலும் கருத்து வேற்றுமை இருந்தது. அரசாங்கம் இங்கிலாந்து நாட்டுக்குச் சாதகமான கொள்கையைப் பின்பற்றியது என்று நினைத்தார். இதையொட்டி பிரதம மந்திரி அஜீசை அதே ஆண்டு அக்டோபர் மாதத்தில் பதவிநீக்கம் செய்தார்.

இந்தப் பிரச்சினைதான் அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பை மலேசியாவில் இறுதியாகத் தீர்மானிக்க உதவியது. மாறுபட்டக் கருத்துடைய எவரும் அமைச்சர வையில் இருந்தால் அவர் அமைச்சரவையினல் முடிவு செய்யப்படும் கொள்கைகளை ஏற்றுக்கொண்டு, அதன்படி நடக்கவேண்டுமென்றும், அவ்வாறு நடக்கமுடியாதவருக்கு அமைச்சரவையில் இடம் கிடையாதென்றும் பிரதமர் திட்ட வட்டமாக அறிவித்தார். சில சமயங்களில் கட்சியில் தலைவர் களுக்கிடையே ஏற்படும் வேற்றுமைகளும், பூசல்களும் அமைச்சரவையின் கூட்டுப்பொறுப்பைப் பாதிக்கிறது என்று சொல்லப்படுகிறது.

கூட்டாட்சி மட்டத்தில் தலைவரும் (அரசரும்) நிர்வாகக் கழகமும் (Cabinet) இருப்பதுபோலவே இராச்சியங்களில் அரசர்களும் (ஒன்பது இராச்சியங்களில் மட்டும்), நான்கில் கவர்னர்களும் தலைவர்களாக இருக்கின்றனர். அவை ஒவ்வொன்றிலும் அமைச்சரவையொன்றிருக்கும். அதன் தலைவர் மந்திரி பேசார் (Mentri Besar) என்று சொல்லப்படும் முதலமைச்சராவார். இவ்வமைச்சரவை ஆலோசனைப்படி

தான் இராச்சியத்தலைவர் நடக்கவேண்டும். ஒவ்வொரு இராச்சியத்திலும் சட்டசபையொன்றுமுண்டு. நிர்வாகக் கழக மென்று அழைக்கப்படும் அமைச்சரவை, சட்டசபை மூலமாக மக்களுக்குப் பொறுப்புடையதாக இருக்கிறது. இதர அம்சங்களில் இராச்சிய நிலையங்கள், கூட்டாட்சி நிலையங் களைப்போன்ற பொறுப்புக்களையும் கடமைகளையுமே ஒத்திருக் கின்றன.

**ஆட்சியாளர் பேரவை** (Conference of Rulers)

ஆட்சியாளர் பேரவை 1948முதல் 1957வரையிலுமிருந்த அரசர்கள் தர்பாரையும் (Durbar of Rulers), அதற்குப்பிறகு ஏற்படுத்தப்பட்ட அரசர்கள் கழகத்தையும் போன்றது. இந்த இரண்டு நிறுவனங்களைப் போலல்லாமல், ஆட்சியாளர் பேரவை அரசர்களையும், கவர்னர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டதாகும். அந்த நான்கு கவர்னர்களும் பினாங்கு, மலாக்கா, சபா (1963முதல்), சாரவாக் ஆகிய இராச்சியங் களைச் சேர்ந்தவர்கள்.

இந்தப் பேரவை, ஒரு சில விஷயங்களைப் பொறுத்த வரையிலும் பாராளுமன்றத்தின் மூன்றாவது சபையாக இருக்கிறதென்று கருதுகிறார்கள். இத்தலைப்பிலான பேரவையின் அதிகாரங்கள் அரசியலமைப்பின் 38ஆம் விதியிலும், 5-வது அட்டவணையிலும் விரிவாகத் தரப் பட்டிருக்கின்றன. ஆட்சியாளர்களின் அந்தஸ்தைப் பாதிக்கும் சட்ட ஆக்கம், முகமதியமதம் சம்பந்தப்பட்ட சட்டங்களை ஏற்றுக்கொள்ளல் அல்லது நிராகரித்தல், யாங்தி-பர்த்துவான் அகாங்கைப் பதவியிலிருந்து விலக்கல் அல்லது தேர்ந்தெடுத்தல் போன்ற விஷயங்களில் ஆட்சியாளர் பேரவையைச் சேர்ந்த உறுப்பினர்கள் தங்கள் விருப்பப்படி நடந்து கொள்ளலாம். தேசியக் கொள்கைகளைப்பற்றி விவாதம் நடத்தும்போது அவர்களுக்கு உதவியாக பிரதம மந்திரியும், முதல் மந்திரிகளும் கூட்டத்தில் கலந்து கொள் வார்கள். மலாய் இனத்தவரைப் பாதிக்கும் தேசியக் கொள்கை எதையும்பற்றி முடிவுசெய்வதற்கு முன்பாக ஆட்சியாளர்களைக் கலந்தாலோசிக்க வேண்டும் என்று அரசியலமைப்புக் கூறுகிறது. ஆட்சியாளர் பேரவையின் அலுவல்கள் பெரும்பாலும் மதத்தையும், விவாகரத்தையும், பலதாரமணம் பற்றியும் இருக்கின்றன. இப்பேரவை நாட்டில் ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்த்துவைப்பதற்கு அரசாங்கத் திற்கு உதவியாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

# 6. கூட்டாட்சிப் பாராளுமன்றமும் இராச்சிய சட்டமன்றங்களும்

**கூட்டாட்சிப் பாராளுமன்றம்**

மலேசியப் பாரளுமன்றம் இங்கிலாந்து நாட்டுப் பாராளுமன்ற அடிப்படையில் அமைக்கப்பட்டிருக்கிறது. பாராளுமன்றத்தில்தான் சட்டங்கள் இயற்றப்படுகின்றன. கூட்டாட்சித் தலைவர் பாராளுமன்ற நடவடிக்கைகளில் ஆங்கிலநாட்டு அரசர் அல்லது அரசியாரைப்போலவே தீவிர மான பங்கேற்பதில்லை. நிர்வாகத்துறையும், அரசாங்கமும் பாராளுமன்றத்திற்கு பொறுப்புடையவை. அதன் ஆதர வில்லாமல் அவை இயங்க முடியாது. பாராளுமன்றத்தி லுள்ள பெரும்பான்மைக் கட்சியினரும், நிர்வாகத்துறையைச் சேர்ந்தவர்களும் ஒரே கட்சியைச் சேர்ந்தவர்களாக இருப்பதால் சட்டத்துறை அதிகாரமும் நிர்வாகத்துறை அதிகாரமும் ஒன்ருக இணைக்கப்பட்டிருக்கின்றன. எனினும், மலேசியப் பாராளுமன்றம் ஆங்கிலப் பாராளுமன்றத்தி னின்றும் ஓர் அம்சத்தில் வேறுபட்டிருக்கிறது. ஆங்கிலப் பாராளுமன்றம் உச்ச அதிகாரமுடையது. அதனுடைய சட்டங்கள் செல்லத்தகாதவையென நீதிமன்றங்களாலும் சரி இதர நிறுவனங்களாலும் சரி அறிவிக்கப்பட முடியாது. மலேசியப் பாராளுமன்றம் மேலாண்மை (உச்ச) அதிகார முடையதன்று. அது அரசியலமைப்பிற்குட்பட்டது. அதனுடைய சட்டங்கள் அரசியலமைப்பு விதிகளுக்கு மாறு பட்டவைகளாக இருக்குமாஞல் செல்லத்தகாதவையென்று நீதிமன்றங்கள் அறிவிக்கலாம். அரசியலமைப்பின் உச்சத் தன்மை அதன் நான்காம் விதியிலும், சட்டங்களின் செல்லு படியாகுந்தன்மையைத் தீர்மானிக்கும் நீதிமன்றங்களுக்கான

அதிகாரம் அதன் 128ஆம் விதியிலும் அறிவிக்கப்பட்டிருக்கின்றன.

கூட்டாட்சிப் பாராளுமன்றம், தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சபையையும், (House of Representatives) செனட்டையும் கொண்ட இருமன்ற அமைப்பாகும். செனட் பிரதிநிதிகள் சபையைப்போல தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக்கொண்டதல்ல. இருசபைகளின் உறுப்பினர்களின் தனித்தனி மொத்த எண்ணிக்கை அரசியலமைப்பில் தரப்பட்டிருக்கிறது. தற்பொழுதுள்ள அமைப்பில் இரு சபைகளும் புதியனவென்று சொல்லலாம். எவ்வாறு அவைகள் இப்போதுள்ள அமைப்பைப் பெற்றனவென்பதைக் கீழே சுருக்கமாகக் காணலாம்.

பிரதிநிதிகள் சபையின் முன்னோடியாக 1909இல் ஏற்பட்ட கூட்டாட்சிமன்றத்தைக் (Federal Council) கூறலாம். கூட்டாட்சி மலாய் இராச்சியங்களைச் சேர்ந்த நான்கு அரசர்களையும் நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களையுங்கொண்ட அம்மன்றத்திற்கு உயர் ஆணையாளர் (ஆங்கில அரசாங்க) தலைமை வகித்தார். 1927இல் அரசர்களுக்குப் பதிலாக நான்கு உத்தியோகச் சார்பற்ற உறுப்பினர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். இதற்குப்பிறகு 1948இல் எழுபத்தைந்து உறுப்பினர்களைக்கொண்ட சட்டமன்றமொன்று ஏற்படுத்தப்பட்டது. அரசாங்கத்தில் பதவி வகித்த பதினொன்கு உறுப்பினர்களோடு, இராச்சியங்களிலிருந்து பதினொரு உறுப்பினர்களும், ஐம்பது உத்தியோகச் சார்பற்ற உறுப்பினர்களும் அதிலிருந்தார்கள். இது பாராளுமன்ற அமைப்பில் ஒரு முன்னேற்றமாகக் கருதப்படலாம். ஏனெனில், அதில் ஐம்பது தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் இருந்தார்கள். 1953இல் மற்றுமொரு மாற்றம் ஏற்பட்டது. அம்மன்றத்திற்கு ஆங்கில உயர் ஆணையாளர் தலைமை வகிப்பதற்குப் பதிலாக நியமனம் செய்யப்பட்ட சபாநாயகர் ஒருவர் தலைமை வகித்தார். படிப்படியாக அதன் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளாக இருந்தார்கள். 1959இல் தான் அம்மன்றம் தற்போதுள்ளவாறு இருசபைகளைக் கொண்டதாக உருப்பெற்றது.

**பிரதிநிதிகள் சபை** (Dewan Ra'ayat)

பிரதிநிதிகள் சபையின் மலாயாவைச் சேர்ந்த உறுப்பினர்கள் அனைவரும் மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படு

பவர்கள். போர்னியோ இராச்சியங்களைச் சேர்ந்தவர்கள் அந்தந்தப் பகுதிகளின் சட்டசபைகளால் தேர்ந்தெடுத்து அனுப்பப்படுபவர்கள். பிரதிநிதிகள் சபை பலவசதிகளும் அடங்கிய நவீன அழகிய செவ்வக வடிவமுள்ள கட்டடத்தில் 1963ஆம் ஆண்டுமுதல் தன் கூட்டங்களை நடத்துகிறது.

**பிரதிநிதிகள் சபையின் நடைமுறை**

பொதுமக்கள் சபையைப்போல அல்லாமல் இந்தப் பிரதிநிதிகள் சபையின் உறுப்பினர்களுக்கு தனித்தனி இருக்கைகள் தரப்பட்டிருக்கின்றன. சபையின் அலுவல்களும் நிகழ்த்தப்படும் பேச்சுக்களும் ஆங்கிலம் அல்லது மலாய் மொழியில் இருக்கவேண்டும். ஆனால், 1967ஆம் ஆண்டிலிருந்து சபா, சாரவாக் இராச்சியங்களிலிருந்துவரும் பிரதிநிதிகளைத் தவிர மற்றவர்கள் மலாய் மொழியில்தான் பேசவேண்டும். சபா, சாரவாக் பிரதிநிதிகளுக்குத் தரப்பட்டிருக்கும் இச்சலுகை 1973ஆம் ஆண்டு வரையிலும்தான் என்று கூட்டாட்சி அரசியலமைப்பின் 152, 161ஆம் விதிகள் கூறுகின்றன. சபையில் நிகழ்த்தப்படும் சொற்பொழிவு ஆங்கிலம் அல்லது மலாய்மொழியில் இருந்தால் அது அடுத்த மொழியில் உடனுக்குடன் இயந்திரச்சாதன உதவியுடன் மொழிபெயர்க்கப்பட்டு ஒலிபெருக்கி வாயிலாக ஒலி பரப்பப்படும். ஆனால், பேச்சுக்களின் உத்தியோகபூர்வமான படிகள் அவை எந்த மொழியில் நிகழ்த்தப்படுகின்றனவோ அந்த மொழியிலேயே தரப்படுகின்றன. இரண்டு மொழிகளும் தெரிந்த உறுப்பினர்கள் இரண்டிலும் பேசலாம். அவ்வாறே, அமைச்சர்களும் ஆங்கிலத்திலும், மலாய்மொழியிலும் தங்கள் பதில்களை அல்லது சொற்பொழிவுகளைத் தருவர்.

இரண்டு தேர்தல்களுக்கு இடைப்பட்ட பாராளுமன்றத்தின் ஆயுட்காலம் பல தொடர்களாக (Sessions) பிரிக்கப்படுகிறது. ஒரு தொடர் கூட்டாட்சித்தலைவரால் தொடங்கி வைக்கப்படுவதுமுதல் ஒத்திவைக்கப்படுவது (Prorogation) வரையெனக் கணக்கிடப்படுகிறது. பொதுவாக ஒரு தொடர் ஓராண்டுக்காலம் நீடிக்கிறதெனினும் பாராளுமன்றம் அதன் கூட்டத்தைத் தொடர்ந்து நடத்துவதில்லை. அதற்கு மாறாக, வரவு-செலவுத்திட்டத்தைப் பரிசீலனை செய்யும்போது தவிர, இதர சமயங்களில் அதன் கூட்டம் ஒருவாரத்திற்குத்தான் பெரும்பாலும் நடைபெறுகிறது. ஓராண்டுக்காலத்தில் பாராளுமன்றம் அதிகப்பட்சமாக ஐம்பது அல்லது அறுபது நாட்களுக்குத்தான் கூடுகிறது.

பிரதிநிதிகள் சபையின் கூட்டத்திற்கு சபாநாயகரும் அவர் இல்லாதபோது துணைச் சபாநாயகரும் தலைமை வகிக்கிறார். முதலில் சபாநாயகர் சபையின் உறுப்பினராக இருக்க வேண்டும். ஆனால், 1964ஆம் ஆண்டு அரசியலமைப்புக்குக் கொண்டுவரப்பட்ட மாற்றச் சட்டமொன்றின்படி சபையில் உறுப்பினராக இல்லாத ஒருவர் சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். சபையின் அலுவல்களை நடத்திவைக்கும்போது, குழுவொன்றினால் வரையப்பட்டு, சபையினால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கும் விதிகளை உறுப்பினர்கள் பின்பற்றி நடக்குமாறு சபாநாயகர் செய்வார். சபை விதிகளில் அடங்காத பிரச்சினைகள் அல்லது சிக்கல்கள் எழுமானால் அவரே அதை முடிவு செய்வார். சபாநாயகரின் முடிவுகள் இறுதியானவை. சபாநாயகரும், உதவிசபாநாயகரும் அரசாங்கத்தின் சம்மதத்தோடு பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டபோதிலும் மனிதர்களால் எந்த அளவிற்கு முடியுமோ அந்த அளவிற்கு நடுநிலைதவறாது நடந்து கொள்கிறார்கள்.

சபையின் விதிகள் ஆங்கில நாட்டுப் பொதுமக்கள் சபையின் விதிகளை முன்மாதிரியாகக் கொண்டிருக்கின்றன. சிலர், பொதுமக்கள் சபையின் விதிகளைக் கண்மூடித்தனமாகக் காலவரையறையின்றி பின்பற்றாமல் உள்நாட்டு நிலைமைகளுக்கும், வழக்கங்களுக்கும் தகுந்தாற்போல அவைகளை ஏற்படுத்திக் கொள்ளவேண்டுமென்று கூறுகிறார்கள். இந்த வழியில் அவ்விதிகள் மாறுதலடைவதற்கு இன்னும் சிறிது காலமாகலாம். எனினும், ஆங்கில முறையினின்றும் மாறுபட்ட முறையும் அங்கு பின்பற்றப்படுகிறது. அம்முறை சபையில் நிகழ்த்தப்படும் உரைகளின் காலத்தைக் கட்டுப்படுத்துவதைப் பற்றியதாகும். இக்கட்டுப்பாடு பல இனமக்களைக் கொண்ட மலாயாவில் ஆத்திரத்தையும், வெறுப்பையும் தோற்றுவிக்கக் கூடுமென்று கருதப்படுகிறது.

சபையின் பணிகளுள் முக்கியமானது சட்டமியற்றுவது. மசோதாக்களுக்கு வாக்களிப்பதில் உறுப்பினர்கள் கட்சியின் ஆணைகளை மீறமுடியாது. அமெரிக்காவில்கூட மலாயாவிலுள்ளதுபோல் கட்சிக் கட்டுப்பாடு கெடுபிடியாக இல்லையென்று சொல்லலாம். கட்சிக் கட்டுப்பாட்டைமீறி ஓரிரண்டு முறைகளுக்கு மேல் வாக்களிக்கும் உறுப்பினர்கள் கட்சியில் தொடர்ந்து உறுப்பினர்களாக இருக்க அனுமதிக்கப்படமாட்டார்கள். உறுப்பினர்களும் கட்சியின் பரந்த கொள்கை

களைத் தாக்கி அல்லது குறைகூறிப் பேசுவதினின்றும் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொள்கிறார்கள். அவர்கள் பெரும்பாலும் தத்தம் தொகுதிகளுக்கு வேண்டியவைகளைப் பற்றியே பேசுகிறார்கள். தேசியக் கொள்கைகளில் அவர்களுக் கேதேனும் கருத்துவேறுபாடோ அல்லது குறையோ இருக்கு மாறல் சபையில் நடைபெறும் விவாதங்களில் அதைக் குறிப் பிடாமல் கட்சிக் கூட்டங்களில் அதைப்பற்றி விவாதிக்கிறார் கள் அல்லது தனிப்பட்ட முறையில் சம்பந்தப்பட்ட தலைவர் களிடம் சொல்கிறார்கள்.

ஒவ்வொரு கூட்டத்தொடரிலும் இருபது முதல் முப்பது மசோதாக்கள் நிறைவேற்றப்பட்டு செனட்டுக்கு அனுப்பப் படுகின்றன. இந்த மசோதாக்கள் எல்லாம் அரசாங்கத்தினால் தாக்கல் செய்யப்படுபவைகளாகும். இங்கிலாந்திலுள்ளது போல சில சமயங்களில் தனி உறுப்பினர்களும் ஏதேனுமொரு பொருள்பற்றி மசோதாக்களைக் கொண்டுவரலாம். ஆனால், இதுவரையிலும் இவ்வாறு ஏற்படவில்லை.

மசோதாக்கள் நிறைவேற்றத்தில் பல கட்டங்கள் இருக் கின்றன. இவ்விஷயத்தில் பிரதிநிதிகள் சபை அமெரிக்க முறையைப் பின்பற்றாமல் இங்கிலாந்து நாட்டுமுறையைப் பின்பற்றுகிறது. எனினும், பெரும்பாலான மசோதாக்கள் இங்கிலாந்து நாட்டிலுள்ளவாறு, குழுக்களின் பரிசீலனைக்கு அனுப்பப்படாமல், சபையே குழுவாக அமர்ந்து பரிசீலனை செய்து முடித்ததும் நிறைவேற்றப்படுகின்றன. குழுக்களின் பரிசீலனைக்கு விடப்பட்ட மசோதாக்கள் சிலவேயாகும். அவைகளில், 1960ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட சிறு குற்றங்கள் மசோதாவைக் (Minor Offences Bill, 1960) குறிப்பிடலாம்.

**செனட் (Senate)**

செனட்டில் (Dewan Negara) 58 உறுப்பினர்கள் இருக் கிறார்கள். இருபத்தாறு உறுப்பினர்கள் பதின்மூன்று இராச்சியங்களைச்சேர்ந்த சட்டசபைகளால் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள். முப்பத்திரண்டு உறுப்பினர்கள் யாங்தி- பர்த்துவான் அகாங்கினால் நியமிக்கப்படுகிறார்கள். நியமன உறுப்பினர்களின் எண்ணிக்கை 1964இல்தான் 22-லிருந்து 32-ஆக உயர்த்தப்பட்டது. இந்த முப்பத்திரண்டு பேர்களும், தொழில், வர்த்தகம், வேளாண்மை, கலாச்சார நடவடிக்கை

கள், சமூகப்பணி போன்றவற்றில் சிறந்து விளங்குபவர்கள், அல்லது சிறப்புப் பணியாற்றுபவர்களிலிருந்து நியமிக்கப் படுபவர்களாவர். இன அடிப்படையில் சிறுபான்மையோராக இருப்பவர்களுக்கு பிரதிநிதித்துவம் கிடைக்கும் வகையிலும் சிலர் நியமிக்கப்படுகிறார்கள். செனட்டர்களின் பதவிக் காலம் ஆறாண்டுகளாகும். ஆனால், நியமன உறுப்பினர்கள் அனைவரும் ஆறாண்டுகாலத்திற்கு நியமிக்கப்படுவதில்லை. சிலர் அதைவிடக் குறைந்த காலத்திற்கு நியமிக்கப் படுகிறார்கள். ஏனெனில் அப்போதுதான் எல்லா உறுப்பினர் களின் பதவிக்காலமும் ஒரே சமயத்தில் முடிவுறுதென்ப தாகும்.

சட்டசபைகளால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் எத்தகுதி அடிப்படையில் எந்த முறையடிப்படையில் தேர்ந்தெடுக்கப் படுகிறார்களென்று தெளிவாகச் சொல்வது கடினமாகும். ஆனால், நியமன உறுப்பினர்கள் எந்த அடிப்படையில் நியமிக்கப்படுகிறார்கள் என்று சொல்லி விடலாம். சான்றாக, இலங்கையர்களுக்கும், ஆசிய ஐரோப்பியர்களுக்கும் (மலாயாவின் குடிமையுரிமை பெற்றவர்கள்) பிரதி நிதித்துவம் தரப்படுவது போலவே, முகமதியர்கள் உள்ளிட்ட இந்திய வம்சாவளியினருக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்படுகிறது. வர்த்தகம், இரப்பர் தொழிற்துறை களைச் சேர்ந்தவர்களுக்கும் பிரதிநிதித்துவம் தரப்படுகிறது. பெரும்பாலும் அரசியலிலிருந்து ஓய்வு பெற்றவர்கள் அல்லது ஈடுபாடில்லாதவர்கள் செனட்டர்களாக நியமிக்கப் பட்டாலும், இப்போது அரசியலில் தீவிரவாதிகளாக இருப்பவர்களும் நியமிக்கப்படுகிறார்கள்.

ரீட்குழு (Reid Commission) சிபாரிசு செய்தபடி, செனட் உறுப்பினர்கள் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்று இப்போது வற்புறுத்தப்படுகிறது. ஆனால், இது செனட் தொடர்ந்து இருக்க உதவுமா என்பதைத் தெளிவாகச் சொல்வதற்கில்லை. எனினும், ஜனநாயகமுறை அதிலும் குறிப்பாக கூட்டாட்சிமுறை பின்பற்றப்படுகின்ற நாடுகளில் இருமன்றமுறை அவசியமென்பதை மறந்து விடுவதற்கில்லை.

பெரும்பாலும் மேல்சபைகள், கீழ்ச்சபைகளால் அவசரம் அவசரமாக நிறைவேற்றப்படுகின்ற மசோதாக்களின் நிறை வேற்றத்தைத் தடுத்து நிறுத்துவதற்காகவென்று கருதப்

பட்டபோதிலும், மலேசியாவில் செனட், கீழ்ச்சபை நிறைவேற்றியதை அவ்வாறே எதிர்ப்பில்லாமல் நிறைவேற்றி வருகிறதெனச் சொல்லப்படுகிறது. ஏட்டளவில், செனட்டின் அதிகாரங்கள், நிதி அதிகாரத்தைத் தவிர, பிரதிநிதிகள் சபையின் அதிகாரங்களுக்குச் சமமானவை என்றிருந்தாலும், செனட் அவ்வதிகாரங்களை செலுத்துவதில்லை. சான்றாக, உத்தியோகச் சார்பற்ற மசோதாக்களை செனட் துவக்கி வைத்து விவாதிக்கலாமென்றிருந்தாலும், அது இதுகாறும் அவ்வாறு செய்வதில்லை. அல்லாமலும், செனட்டில் நடைபெறும் விவாதங்கள் சுருக்கமானவைகளாகவும், உப்பு சப்பில்லாதவைகளாகவுமிருக்கின்றன.

செனட் இராச்சியங்களின் உரிமைகளை நிலைநாட்டுவதாக, இருக்கவேண்டுமெனலாம். ஆனால், மலேசிய செனட் அவ்வாறில்லாமல், அரசாங்கத்தோடு ஒட்டிச் செயலாற்றுவதாக இருக்கிறது. இது இதர கூட்டாட்சிகளில் மேல் மன்றங்கள் ஆற்றும் பணிகளுக்கு மாறுபட்டதாக இருக்கிறதென்பதில் ஐயமில்லை.

**இராச்சிய சட்டசபைகள்**

இராச்சியங்களின் அதிகாரங்கள் மிகக் குறைவானவையாக இருப்பதால், அவை அரசாங்கத்துறையிலாற்றும் பணிகளும் சிலவே. அரசியலமைப்புப்படி கூட்டாட்சி நிர்வாகத்துறைக்கும் பாராளுமன்றத்திற்கும் எத்தகைய தொடர்புகளுண்டோ அத்தகைய தொடர்புகளே இராச்சிய நிர்வாகத்துறைக்கும் சட்டசபைக்குமிருக்கின்றன. அதாவது, இராச்சிய நிர்வாகத்துறை சட்டசபைக்கு பொறுப்புடையதாகுமென்பதாகும். சட்டசபையின் ஆதரவில்லாமல் பதவியில் நிர்வாகம் (அமைச்சரவை) ஒட்டிக்கொண்டிருக்க முடியாது. இருப்பினும், நிர்வாகம், சட்டசபையிலுள்ளப் பெரும்பான்மைக் கட்சியின் படைப்பாதலால் இரண்டிற்குமிடையே ஒற்றுமையும், நேசமும் நிலவுகின்றனவெனலாம்.

ஒவ்வொரு இராச்சியத்திலும் ஒரேயொரு சபையையுடைய சட்டசபை இருக்கிறது. மலாயாப் பகுதியைச் சேர்ந்த இராச்சியங்களில் சட்டசபைகளில் உறுப்பினர் தொகை பலவாறாக இருக்கிறது. சான்றாக, பெர்லிசில் (Perlis) மொத்த உறுப்பினர் தொகை பன்னிரண்டாக இருக்கும்போது பெராக்கில் (Perak) நாற்பதாக இருக்கிறது. சட்டசபையின் நடைமுறை கூட்டாட்சிப் பாராளுமன்றத்தி

லுள்ளதைப்போன்றதாகும். பெரும்பாலான சட்டசபைகள் ஓராண்டு காலத்தில் நான்கல்லது ஐந்து தடவைகளே கூடுகின்றன. அக்கூட்டங்கள்—வரவு-செலவுத் திட்டத்தை விவாதிப்பதற்காகக் கூட்டப்படுவதைத்தவிர-மிகக் குறுகிய காலத்திற்கே நடைபெறுகின்றன. இராச்சியங்களுக்குள்ள முக்கியமான அதிகாரம் நிலத்தைப்பற்றியதாகும். எனவே, நிலம்பற்றிய விவாதங்கள் சட்டசபைகளில் விரிவாக நடைபெறுகின்றன. சட்டசபையின் கூட்டங்களில் வாக்களிக்கும் உரிமையில்லாமல் இராச்சியச் செயலாளரும், இராச்சியச் சட்ட ஆலோசகரும், இராச்சிய நிதி அலுவலரும் கலந்து கொள்ளலாம்.

# 7. வட்டார அரசாங்கமும் நீதித்துறையும்

## வட்டார அரசாங்கம்

மலாயாவின் வட்டார அரசாங்கம் சிக்கல் நிறைந்தது. ஆனால், மூன்று கருத்துக்களை நினைவில் கொள்வோமானால் அதன் பரந்த அடிப்படைகளைத் தெரிந்துகொள்வது சற்று சுலபமாக இருக்கும். முதலில் மலாயாவின் ஒரு சிறிய பகுதி தான் வட்டார அரசாங்கங்களின் கீழிருக்கின்றன. அதாவது, குறிப்பிட்ட எந்தப் பகுதியின் பணிகளையும் நிர்வகிப்பதற்கு தனித்தனி நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அத்தகைய பகுதி பெரும்பாலும் நகர்ப்புறமாக இருக்கிறது. மலாயாவின் பெரும்பாலான பகுதிகள் வட்டார அல்லது பிராந்திய அரசாங்கங்களைச் சேராத ஆனால், கூட்டாட்சி அரசாங்கத்தைச் சேர்ந்த அதிகாரிகளால் நிர்வகிக்கப்படு கின்றன. இரண்டாவதாக, வட்டார அரசாங்கமுறை மக்களின் வேண்டுகோளுக்கிணங்க அமைக்கப்படாமல் உயர் மட்டத்திலிருந்து திணிக்கப்பட்டிருக்கிறது. அத்தகைய அரசாங்கம் இதர நாடுகளிலுள்ள அம்சங்களையுடையதாக இருக்கிறதேயல்லாமல் மலாயாவின் தன்மைக்கேற்ப இல்லை. உதாரணமாக மாவட்ட அலுவலரொருவர் நியமிக்கப்படு வதும் அத்தகைய அலுவலர் ஒருவர் நியமிக்கப்படுவது அந்நியர் முறையையொட்டியதாகுமென்று சொல்லப்படு கிறது. இப்பொழுதும்கூட வட்டார அரசாங்கத்தில் நியமிக்கப் பட்ட உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களு மிருப்பதைக் காணலாம். இதுவொரு விநோதமெனப்படு கிறது. மூன்றாவதாக, மேலமைப்பைப் பொறுத்தவரையிலும் இங்கிலாந்து நாட்டு முறையையொத்திருக்கிறது. ஆனால், இவையிரண்டு அமைப்புகளுக்குமிடையே பல முக்கியமான

வித்தியாசங்கள் இருக்கின்றன. அவைகளில், மலாயாவில் வட்டார அரசாங்கங்களுக்கு தன்னாட்சி அதிகாரம் தரப் படாததைக் குறிப்பிடலாம். வட்டார அரசாங்கங்களின் பணிகள் அதிகாரிகளால், குறிப்பாக மாவட்ட அலுவலரால் செய்யப்படுகின்றன.

மாவட்ட அலுவலர்களை நியமிக்கும்முறை ஆங்கிலேயர் களால் ஏற்படுத்தப்பட்டதாகும். மலாயாவில் அத்தகைய அதிகாரிகள் தற்போது எழுபது பேர்கள் இருக்கிறார்கள். முன்பெல்லாம் மாவட்ட அதிகாரிகளின் பொறுப்பு நிலநிர்வாக மாக இருந்தது. இப்போதும் அவர்களுக்கு மாஜிஸ்டிரேட்டு களுக்குள்ள கடமைகளும் அதிகாரங்களுமிருக்கின்றன. ஆனால், அவர்கள் நீதிப்பணிகளைச் செய்வதில்லை. அவர்களுக்கு கீழே உதவி மாவட்ட அலுவலர்கள் இருக்கிறார்கள். இவர்கள் ஒவ்வொருவரும் ஒரு துணை மாவட்டத்திற்குப் பொறுப்பு வகிப்பதோடு மாவட்ட அலுவலருக்கு உதவியாகவும் இருக் கிறார்கள். மலாயாவிலுள்ள 1,100 முகிம்கள் (மாவட்டங்கள்) ஒவ்வொன்றிலுமுள்ள பெங்குலு (Penghulu) என்ற தலைவர்கள் அதிகாரவர்க்கத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுவதோடு அவர்கள் அனைவரும் இராச்சிய அரசாங்கத்தினால் நியமிக்கப் படுகிறார்கள். இவர்களுக்கு கீழ் ஊதியம்பெறாத சிற்றூர் தலைவர்கள் இருக்கிறார்கள். சுதந்திரத்திற்கு முன்பு மாவட்ட அதிகாரிதான் முக்கியமானவர். அவரால்தான் எதையும் செய்துதர முடியுமென்று குடியானவர்கள் கருதினார்கள். ஆனால், இப்போது ஜனநாயக அமைப்பில் அனாவசியமானவ ராகத் தோன்றுகிறார். இருப்பினும், மாவட்ட அதிகாரி நாட்டுப்புறங்களில் இப்போதும் ஒரு முக்கியபுள்ளியாகவே இருக்கிறார். நாட்டுப்புறங்களின் முன்னேற்றம் முக்கியமாகக் கருதப்பட்டு அதற்கான நடவடிக்கைகள் சமீபகாலங்களில் எடுக்கப்பட்டு வருவதால் மாவட்ட அதிகாரியின் பணி புதுத் திருப்பத்தைப் பெற்றிருக்கிறது. ஒவ்வொரு மாவட்டத்திலு முள்ள நாட்டுப்புற முன்னேற்றம் பற்றிய குழுவில் மாவட்ட அதிகாரி தலைவராக இருக்கிறார். முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றத் தவறும் மாவட்ட அதிகாரிகள் இதர இடங் களுக்கு மாற்றப்பட்டு மாற்று அதிகாரிகள் அவர்களின் இடங் களில் நியமிக்கப்படுகிறார்கள்.

1945ஆம் ஆண்டுக்கு முன்பு வரையிலும் நகரவாரியங்கள் (Town Boards) இருந்தன. ஆனால், பினாங்கு, மலாக்கா ஆகியவைகள் நகராட்சிகளாக இருந்தன. நாட்டுப்புறப்

பகுதிகளில் நாட்டுப்புற வாரியங்கள் இருந்தன. நகரவாரியங்கள் அரசாங்க நிறுவனங்களாகும். அவைகள் தல அலுவல்களைக் கவனித்துக்கொண்டன. அவைகளின் தலைவர்கள் நியமனம் செய்யப்பட்டவர்கள். நகரவாரியங்களின் தலைவர்கள் பெரும்பாலும் மாவட்ட அதிகாரிகளாவர். பொறியியல் வல்லுனர்களும், சுகாதார அலுவலர்களும் உத்தியோகத்தின் காரணமாக அவற்றில் உறுப்பினர்களாக இருந்தனர். அதே போதில், நகரவாரியங்களுக்கு உத்தியோகச் சார்பற்றவர்களும் வட்டாரங்களுக்குப் பிரதிநிதித்துவம் தரப்படவேண்டுமென்பதற்காக நியமிக்கப்பட்டார்கள். ஆனால், இரண்டாம் உலகப்போருக்குப் பிறகு வாரியங்களின் பெரும்பாலான பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்கிறார்கள். அவைகளுக்கு அதிக அதிகாரங்கள் குறிப்பாக நிதியதிகாரங்கள் அளிக்கப்பட்டு, தன்னாட்சித்தன்மையுடன் இயங்குவதற்கு வேண்டிய உரிமைகளும் தரப்பட்டிருக்கின்றன. இருப்பினும் அந்த வாரியங்களில் ஏற்பட்ட அல்லது ஏற்பட்டுவரும் முன்னேற்றங்களும் மாறுதல்களும் சீரானவையாக இல்லாததால் பல சிக்கல்களைத் தோற்றுவித்து வருகின்றன எனச் சொல்லப்படுகிறது. வாரியங்களின் சுதந்திரம், அமைப்பு, நிதிநிலை, அதிகாரங்கள் ஆகியவைகளை 1950ஆண்டிலும் 1954ஆம் ஆண்டிலும் இயற்றப்பட்ட சட்டங்கள் எடுத்துக் காட்டுகின்றன. இச்சட்டங்கள் அடிப்படையில் வாரியங்களின் உறுப்பினர்களனைவரும் இப்போது தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருப்பதோடன்றி அவற்றின் தலைவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாகவே இருக்கின்றனர்.

மலாயாவிலுள்ள வட்டார அரசாங்கங்கள் எந்த அளவிற்கு சிக்கல் நிறைந்தவைகளாக இருக்கின்றன என்பது கீழே கொடுக்கப்பட்டுள்ள பலவகைப்பட்ட அமைப்புக்களினால் தெரியவரும்.

| | | எண்ணிக்கை |
|---|---|---|
| நகரங்கள்; | நகராட்சிகளுக்குள்ள தன்மையும் அதிகாரங்களுந்தான் இவைகளுக்கு மிருக்கின்றனவென்றாலும் அவைகளைவிட உயர்ந்த தகுதியுடையவைகளாகும். | 1 |
| நகராட்சிகள் | (குலாலம்பூரையும் சேர்த்து) | 3 |
| நகரவாரியங்கள் | (நிதித்தன்னாட்சி பெற்றவை) | 25 |

நகரவாரியங்கள் (நிதித்தன்னுட்சியற்றவை) 11

நாட்டுப்புற மாவட்ட மன்றங்கள் (நிதித்தன்னுட்சி பெற்றவை) இவை பினங்கிலும், மலாக்காவிலும் தான் உள்ளன. 4

நாட்டுப்புற மாவட்ட மன்றங்கள் (நிதித் தன்னுட்சி பெருதவை) பினங்கிலும் மலாக்கா விலும் தான் உள்ளன. 3

வட்டார மன்றங்கள்: புதுக்கிராமங்களிலுள்ளவை. 296

புது கிராமக்கழகங்கள்: ,, 181

வட்டார நிறுவனங்களின் பெயர்கள் தெளிவை ஏற்படுத்துவதற்குப் பதிலாக குழப்பத்தையே தோற்று விக்கின்றன. பொதுவாக, வட்டார அரசாங்கங்களனைத்தும் அரசியல் சட்டபடி இராச்சிய அரசாங்கத்திற்குக் கட்டுப் பட்டவைகளாகும். ஆரம்பத்தில் சொல்லப்பட்ட அதிகாரி களனைவரும் இம்மன்றங்களின் நடவடிக்கைகளில் கலந்து கொள்கிருர்கள். இவர்களது உழைப்பும், ஆலோசனையும் இல்லாமல் வாரியங்கள் செயல்பட முடியாது. நிதித்துறையில் தன்னுட்சியுடைய வாரியங்கள்கூட அவைகளின் வரவு-செலவுத்திட்டத்தை அரசாங்கத்திற்கு முன்கூட்டியனுப்பி அதன் இசைவைப் பெற்ற பின்னர்தான் அவற்றின் கூட்டங்களில் தாக்கல் செய்து விவாதித்து நிறைவேற்றலாம். எனவே, வட்டார அரசாங்க்ங்கள் இராச்சிய அரசாங்கங்களைச் சார்ந்திருக்கின்றன என்பது தெளிவாகிறது. ஆனுல், கூட்டாட்சியின் தலைநகரமாக விளங்கும் குலாலம்பூர் அரசாங்கம் இதர வட்டார அரசாங்கங்களைப்போல, அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டதல்ல. அதன் நிர்வாகம் கூட்டாட்சித் தலைவரால் நியமிக்கப்பட்டு, உள்துறை அமைச்சரின் நேரிடைக் கட்டுப்பாட்டிலிருக்கும் ஆணையாள ரால் நடத்தப்படுகிறது.

வட்டார அரசாங்கங்களின் வருவாய் பல துறைகளில் இருந்து கிடைக்கிறது. சொத்துக்களுக்கு விதிக்கப்படும் வரி மிக முக்கியமானது. உணவு விடுதிகள், கேளிக்கை நிலையங்கள், மோட்டார் வாகனங்கள் நீங்கலாக இதர ஊர்திகள் ஆகியவை களுக்கு அளிக்கப்படும் அனுமதிகள் இதர வருவாய் துறை களாகும். இவையல்லாமல் அரசாங்கத்திடமிருந்தும் அவை களுக்கு மான்யங்கள் கிடைக்கின்றன,

வட்டார அரசாங்கங்களின் பணிகள் பலவகைப் பட்டவை. அவைகளில் பொதுச்சுகாதாரம், செய்திச் சாதனங்கள் ஒரு சிலவற்றின் பணிகளாகும். வேறு சில, சுகாதாரம் தண்ணீர், கால்நடை மருத்துவம், நகர முன் னேற்றம், கட்டடம் போக்குவரத்து, வாகனங்கள், தீயணைக்கும்படை, பொது மராமத்து, மின்வசதி அளித்தல் சம்பந்தப்பட்ட பணிகளைச் செய்கின்றன.

பொதுவாக, மலாயாவில் அரசாங்கத்திற்கும் வட்டார நிறுவனங்களுக்குமிடையே நல்லுறவு இருக்கிறது. இதற்கு அடிப்படையாக விளங்குவது இவ்விருவகை அரசாங்கங் களிலும் அரசியல் கட்சிகளுக்குப் பங்கு தரப்பட்டிருப்ப தென்று சொல்லப்படுகிறது.

**நீதித்துறை**

மலாயாவில் இப்போதுள்ள நீதித்துறையமைப்பு ஆங்கிலேயர்களின் ஆட்சி காலத்தில் ஏற்பட்டதாகும். 1957ஆம் ஆண்டில் நடைமுறைக்கு வந்த அரசியலமைப்பு நடைமுறையிலிருந்து வந்த முறையை ஏற்றுக்கொண்டது அவ்வரசியலமைப்பின்படி அந்நாட்டில் ஓர் உச்சநீதி மன்றமும் அதற்குக்கீழ் அதற்குக் கட்டுப்பட்டியங்கும் இதர நீதிமன்றங்களும் இருக்கின்றன. உச்சநீதிமன்றத்திற்கு அடுத்த கீழ் மட்டங்களிலுள்ள நீதிமன்றங்கள் கூட்டாட்சி சட்ட ஆதாரத்தில் அமைக்கப்படுகின்றன.

உச்சநீதிமன்றம் இரு பிரிவுகளைக்கொண்டதாக ஏற் படுத்தப்பட்டிருக்கிறது. அவை உயர்நீதிமன்றம், மேல் முறையீட்டு நீதிமன்றம் என்பவையாகும். உயர்நீதிமன்றம் ஒரேயொரு நீதிபதியைக்கொண்டது. மேல்முறையீட்டு நீதிமன்றத்தில் இரண்டு அல்லது மூன்று நீதிபதிகளிருப்பர். உச்சநீதிமன்றத்தின் தீர்ப்புக்கு எதிராக லண்டனிலுள்ள பிரிவி கவுன்சிலின் நீதிக்குழுவுக்கு மேல்முறையீடு செய்து கொள்ளலாம். உச்சநீதி மன்றத்திற்குக் கீழ் செஷன்ஸ் நீதி மன்றங்களும், மாஜிஸ்டிரேட்டு நீதிமன்றங்களும் பெங்குலு என்ற நீதிமன்றங்களும் இருக்கின்றன. இவைகளினுடைய அதிகார எல்லைகள் வரையறை செய்யப்பட்டிருப்பதோடு அதிகாரங்களும் தெளிவாக்கப்பட்டிருக்கின்றன. இவை களல்லாமல் முகமதியமத நீதிமன்றங்களும் இருக்கின்றன. இந்நீதிமன்றங்கள் சமயக்கொள்கைகள் பின்பற்றப்படும்

முறைகள், முகமதியர்களின் வாழ்க்கை, திருமணம் சம்பந்தப் பட்ட அலுவல்களைக் கவனிக்கின்றன. இவைகள்மேற் சொல்லப்பட்ட நீதிமன்றங்களைப்போல கூட்டாட்சி அரசாங்கச் சட்ட அடிப்படையில் அமைக்கப்படாமல், இராச்சிய சட்டமன்றங்கள் இயற்றும் சட்டங்களின் ஆதாரத்தில் அமைக்கப்படுகின்றன. எனவே, இவைகள் தனிமுறையைச் சேர்ந்தவைகளாகும். பொதுப் பணிகளைக் கொண்ட இராச்சிய நீதித்துறை மலாயாவில் கிடையாது.

மலேசியா ஏற்படுத்தப்பட்டபோது சிங்கப்பூரிலும் போர்னியோ பகுதிகளிலும் இருந்த நீதித்துறையையும் மலாயாவிலிருந்த நீதித்துறையையும் இணைக்கவேண்டிய அவசியமேற்பட்டது. ஆனால்,அத்தகைய இணைப்பு கடினமாக இல்லாமல் அதற்குமாறாக எளிதாகவே இருந்தது. அதற்கு முக்கிய காரணம் இந்தப் பகுதிகளெல்லாம் ஆங்கில நாட்டு முறைப்படி அமைக்கப்பட்டிருந்ததேயாகும். மலேசியாவின் புதிய கூட்டாட்சி நீதிமன்றத்தில் (Federal Court) தலைவரையும் சேர்த்து ஆறு நீதிபதிகள் இருக்கிறார்கள். மலேசியாவில் அதுதான் இறுதியான நீதிமன்றமாகும். அது அரசிய லமைப்பை விளக்குவதற்கும், இராச்சியங்களுக்கிடையிலோ அல்லது ஏதேனுமொரு இராச்சியத்திற்கும் கூட்டாட்சி அரசாங்கத்திற்கிடையிலுமோ ஏற்படும் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிப்பதற்கும் அதிகாரம் தரப்பட்டிருக் கிறது. மலேசியா முழுவதற்கும் அதுதான் மேல்-முறையீட்டு நீதிமன்றமாகும். அதன் கீழ் மலாயா, போர்னியோ, சிங்கப்பூர் ஆகிய ஒவ்வொன்றிற்கும் ஒன்று வீதம் மூன்று உயர்நீதி மன்றங்கள் இருக்கின்றன. இந்த நீதிமன்றங்கள் அவை எப்பகுதியில் இருக்கின்றனவோ அப்பகுதியைப் பொருத்தவரை மூல அதிகாரம் உடையவை. இவை ஒவ்வொன்றிலுமிருந்து மேல் முறையீடடிப்படையில் கூட்டாட்சி நீதிமன்றத்திற்கு வழக்குகள் எடுத்துச் செல்லப் படலாம். கூட்டாட்சி நீதிமன்றத்தின் ஒரே நிரந்தரமான உறுப்பினர் அதன் தலைவராவார் (Lord President). உயர்நீதி மன்றங்களின் தலைமை நீதிபதிகளும் வேறு இருவரும் அதன் மற்ற உறுப்பினர்களாவர். ஆனால், 1966ஆம் ஆண்டு அரசிய லமைப்பின் 122ஆம் விதிக்குக் கொண்டு வரப்பட்ட திருத்தத்தின்படி உயர்நீதிமன்ற நீதிபதியொருவர் கூட்டாட்சி நீதிமன்றத்திற்கு நியமிக்கப்படுவாரானால் அவர் தொடர்ந்து உயர்நீதிமன்ற நீதிபதியாக இருக்க முடியாது. மலேசியாவி

லிருந்து 1965ஆம் ஆண்டு சிங்கப்பூர் தனியாகப் பிரிந்த பிறகும் சிங்கப்பூர் சட்டசபை நீதித்துறைபற்றிய சட்ட மொன்றை இயற்றும்வரை இவ்வேற்பாடுகள் தொடர்ந் திருந்து வருமென்று விளக்கப்பட்டது.

அரசியலமைப்பை விளக்கும்போது, அரசாங்க அதிகாரி கள் அதிகாரத்தைத் தவருகப் பயன்படுத்துவதால் குடிமக்கள் பாதிக்கப்படாதவாறும், பல்வேறு வகைப்பட்ட அரசாங்கங் களுக்கிடையே ஏற்படும் வழக்குகளில் நடுநிலை தவருத நடுவர் போல செயலாற்றுவதும் நீதிபதிகளின் பணியென்று கூறப் படுகிறது. எனவே, இதற்கு நீதிபதிகளின் சுதந்திரம் நிலை நாட்டப்படுவது அவசியமாகுமென்று சொல்லத் தேவை யில்லை. ஆதலின், நீதிபதிகள் அறுபத்தைந்து ஆண்டுகள் வரை பணியாற்றுவார்கள் என்றும் அவர்களுடைய ஊதியம் குவிக்கப்பட்ட அல்லது வைப்பு நிதியிலிருந்து (Consolidated Fund) தரப்படுமென்றும் அரசியலமைப்பு கூறுகிறது. இதனுல், நீதிபதிகளின் ஊதியத்தைக் குறைக்கும் முயற்சிகள் பாராளுமன்றத்தில் எடுத்துக்கொள்ளப்படுவது தடுக்கப் படுகிறது. நீதிப்பணிகளைச் சரிவர நிறைவேற்ருதபோது அல்லது தவருன நடத்தை நிரூபிக்கப்படும்போது நீதிபதி யொருவர் பதவியிலிருந்து நீக்கப்படலாம். ஆனுல், நீக்கலுக்குப் பின்பற்றப்படும் நடைமுறைகள் கடுமையான வைகளாக இருப்பதால் நீதித்துறைச் சுதந்திரம் பாதுகாக்கப் படுகிறது. பிரதமமந்திரி அல்லது நீதித்துறைத் தலைவர் சிபாரிசின் பேரில் யாங் தி-பர்த்துவான் அகாங் பதவியிலுள்ள அல்லது ஓய்வு பெற்ற குறைந்தது ஐந்து நீதிபதிகளைக் கொண்ட விசாரணை மன்றமொன்றை நியமிப்பார். விசாரணை மன்றத்தின் சிபாரிசின்பேரில் யாங் தி-பர்த்துவான் அகாங் நீதிபதியை பதவியிலிருந்து விலக்குவார் [அ சட்டவிதி 125 (3)-(5)] 1960-லிருந்து நீதிபதிகள் அனைவரும் பிரதம மந்திரியின் பரிந்துரையின் பேரில் யாங்தி-பர்த்துவான் அகாங்கினுல் நியமிக்கப்படுகின்றனர். இதற்கு முன்பு அவர்கள், நீதி, சட்டப்பணியாளர் தேர்வுக்கழக (Judicial and Legal Service Commission) சிபாரிசு அடிப்படையில் நியமிக்கப் பட்டனர். இங்ஙனம் நீதிபதிகள் நியமனம் செய்யப்படு வதால், அரசியல் காரணங்கள் அங்கு குறுக்கிடுவதற்கு வாய்ப்பிருந்தாலும், இதுவரை செய்யப்பட்ட நியமனங்களில் அரசியல் தலையீடு கிடையாதென்று தெரிய வருகிறது. நீதிபதிகள் நியமனத்தில் அரசியல் அல்லது ஆதாய நோக்கு

மேலோங்குமானுல் அமைதி, ஒழுங்கு பராமரிப்பு சீர்குலையக் கூடுமென்பதையும், அதனுல் குழப்பம் ஏற்படக் கூடுமென் பதையும் மலாயாவிலுள்ள தலைவர்கள் உணர்ந்திருப்பதால் அத்தகைய நோக்கம் பின்பற்றப்படமாட்டாது என்று கூறுவதில் நியாயமிருக்கிறது.

# 8. அரசியல் கட்சிகளும் செல்வாக்குக் குழுக்களும்

இரண்டாம் உலகப்பெரும்போரின் போதும் அதற்குப் பிறகும் மலாயாவிலிருந்த கட்சிகளனைத்தும் 1955ஆம் ஆண்டு சமயத்தில் மறைந்து, கூட்டணிக் கட்சியும் (Alliance Party) நீகாராக் கட்சியும் (Party Negara) தலைமைக் கட்சிகளாக ஏற்பட்டன. எனினும், அதன் பிறகு நீகாராக்கட்சி படிப்படியாக அதன் சிறப்பை இழந்து செல்வாக்கற்றதாகிவிட்டது. இப்போது மலாயக் கூட்டாட்சிப் பாராளுமன்றத்தில், கூட்டணிக்கட்சி, தொழிற்கட்சி (முன்பு இக்கட்சி சோஷலிச முன்னணியின் ஒரு பகுதியாக இருந்தது), ஐக்கிய மலாயு முகமதியக்கட்சி (The Pan-Malayan Islamic Party), மக்கள் முன்னேற்றக் கட்சி ( The People's Progressive Party), ஐக்கிய ஜனநாயகக்கட்சி (The United Democratic Party), மக்கள் நடவடிக்கைக் கட்சி (The Democratic Action Party) ஆகியவைகளே இடங்களைப் பெற்றிருக்கின்றன.

மலாயாவில் அரசியல், வகுப்புவாதத்தை அடிப்படையாகக் கொண்டது. அதனால் அங்குள்ள கட்சிகள் இருதலைக் கொள்ளி என்னும் நிலைமையில் சிக்கித் தவித்துக் கொண்டிருக்கின்றனவென்று சொல்லலாம். வகுப்புவாத உணர்ச்சியைத் தூண்டாத கட்சிகள் ஆதரவிழந்து, அதைத் தூண்டும் கட்சிகளுக்கு இரையாகிவிடுகின்றன. இதற்கு எடுத்துக் காட்டாக, டாட்டோ ஆன் (Dato Onn) என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட மலாயா சுதந்திரக் கட்சியின் (Malaya Independence Party) விரைவான மறைவைக் குறிப்பிடலாம் இது வகுப்புவாதமற்ற கட்சிகளுக்கு ஏற்படக்கூடிய கதியை குறிப்பிட்டுக்காட்டி எச்சரிக்கை செய்வதாகவிருக்கிறது.

ஆ—30

ஆனால், அதே சமயத்தில், பல இனங்களைச் சேர்ந்த வாக்காளர்களுள்ள அந்நாட்டில் ஒரேயொரு இனமக்களின் ஆதரவை மட்டும் கொண்டு எந்தக் கட்சியும் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை பலத்தைப் பெறுவதென்பது குதிரைக்கொம்பேயாகும். 1955ஆம் ஆண்டின்போதும் அதற்கு முன்பும் மலாய் இனத்தைச் சேராத வாக்காளர்களின் எண்ணிக்கை அப்போதிருந்த திட்டப்படி குறைவாக இருந்ததால், மலாய்க்காரர்கள் இதர இனமக்களின் ஆதரவில்லாமல் பெரும்பான்மைப் பலத்தைப் பெற்றிருக்கக்கூடும். இது எல்லா இனமக்களின் நம்பிக்கைக்கும் பாத்திரமாகவுள்ள அரசாங்கமொன்றினிடம் அதிகாரத்தை மாற்றுவதற்குத் திட்டமிட்டிருந்த ஆங்கிலேயர்களின் எண்ணத்திற்கு முற்றிலும் மாறானதாக இருந்திருக்கக்கூடும். ஆனால், தற்போது மலாய் இன வாக்காளர்களின் எண்ணிக்கை முன்பிருந்ததைவிடக் குறைவாக இருப்பினும் அக்குறை மலாய் இனத்தைச் சேராத போர்னியோப் பகுதிகளைச் சேர்ந்த பூர்வீகக் குடிகளின் அதிகமான எண்ணிக்கையினால் சமன் செய்யப்படுகிறது. இவ்விடத்தில் 1964ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத் தேர்தல்களின்போது மலாய் இனத்தவர் 54 விழுக்காட்டினராகவும், மலாய் இனத்தவரல்லாதவர் 46 விழுக்காட்டினராகவுமிருந்ததைக் கவனத்தில் கொள்வது அவசியமாகும். மற்றுமொரு அம்சம், நாட்டுப்புறத் தேர்தல் தொகுதிகள் மலாய் இனத்தவர்களுக்குச் சாதகமாக இருக்கும் வகையில் அமைக்கப்பட்டிருப்பதாகும். சிங்கப்பூர் இப்போது மலேசியாவிலிருந்து பிரிந்து சென்றுவிட்டதால், சாரவாக், சபா ஆகிய பகுதிகளிலுள்ள முகமதியர்களோடு கூட்டுசேர்ந்து, பாராளுமன்றத்தில் மலாய் இனத்தவர் பெரும்பான்மை பலம் பெறுவது சாத்தியமாகலாம். மலாய் இனத்தவரல்லாதவர்களுக்கு எதிரான முகமதியர்களின் அத்தகைய கூட்டு, மலாயாவில் பல இனமக்களைக் கொண்ட கட்சிகளுக்கு வெற்றி கிட்டவில்லை அல்லது வாய்ப்பில்லை என்று பறைசாற்றுவதாக அமையும்.

எனவே, வகுப்புவாத அடிப்படையில்லாத கட்சிகள் இயங்க முடியாதென்பதும் அத்தகைய தன்மையுடைய கட்சிகள் பெரும்பான்மை பலம் பெருவதில் இடர்ப்பாடிருக்கிறதென்பதும் தெரியவரும். இதற்கான பரிகாரம் கூட்டணியினால் தற்செயலாக ஏற்பட்டது. கூட்டணி முறையென்பது, பல வகுப்புவாதக் கட்சிகள் 'மேல் மட்டத்தில்' (At the Top) பல வகுப்புகளுக்கிடையே கூட்டணியொன்றை ஏற்படுத்திக்

கொள்வதென்பதாகப் பொருள்படும். எனினும், 1965ஆம் வருடம், கூட்டணியில் சேர்ந்த கட்சிகள் மூலமாக அல்லாமல் கூட்டணியில் நேரிடையாக உறுப்பினராகும் முறைக்கு ஏற்பாடு செய்யப்பட்டதென்று 'ஸ்டெரெய்ட்ஸ்டைம்ஸ்' என்ற செய்தித்தாள் குறிப்பிட்டது.[1] கூட்டணியிலிருந்த ஐக்கிய மலாய்கள் தேசிய நிறுவனம் (The United Malay's National Organization), மலாய சீனர் கழகம் (The Malayan Chinese Association), மலாய இந்தியர் காங்கிரஸ் (Malayan Indian Congress) ஆகிய மூன்று வகுப்புவாதக் கட்சிகளில் முதலாவதாகச் சொல்லப்பட்ட கட்சி மிக அதிக பலமுடையதாக இருக்கிறது. ஆனால், மூன்றாவதாகச் சொல்லப்பட்ட மலாய இந்தியர் காங்கிரஸ் மிகக்குறைவான பலமுடையதாக இருக்கிறது. இக் கூட்டணியின் பலமும் செல்வாக்கும் அதன் விதிகள் அல்லது நடைமுறைகளை ஆதாரமாகக் கொண்டிராமல், அதன் தலைவரின் தனிப்பட்ட செல்வாக்கு, புகழ் ஆகியவற்றைக் கொண்டதென்றால் அது மிகையாகாது. இந்நிலைமை துங்கு அப்துல் ரஹ்மான் தலைவராக இருந்தபோது ஐயத்திற்கிடமில்லாமல் வெளிப்படையாகப் பலருக்கும் தெரிந்திருந்தது.

கூட்டணிக் கட்சித் தலைவராக இருந்த துங்கு அப்துல் ரஹ்மான் கேடா (Kedah) சுல்தானின் புதல்வராவார். இவர் மலாய், மேற்கத்திய மரபுகளின் பிரதிநிதியாகக் கருதப்படுகிறார். நாட்டிலுள்ள தலைவர்களில் இவர் ஒருவர்தான் அதிகாரப் பித்தற்றவராக இருக்கிறாரென்று கருதப்படுகிறது. இவர் மக்களின் முன்னேற்றத்திலும் நல்வாழ்விலுமே அக்கறையுடையவராக இருக்கிறார். இவரைப்பற்றிய சுவை மிக்க செய்திகள் ஹாரிமில்லர் என்பவரால் அழகாக எழுதப்பட்டிருக்கின்றன.[2]

இக்கூட்டணிக் கட்சிக்குக் கொள்கைகளோ அல்லது குறிக்கோள்களோ கிடையாதென்று பொதுவாகக் கருதப்பட்டாலும், அதன் நோக்கம் 'முன்னேற்ற'மாகும். இதன் பொதுநலத் திட்டங்கள் பொதுவுடைமைத் தன்மையனவாக இருக்கிறதெனக் கூறப்படுகிறது.

---

[1] However, direct membership in the Alliance, not Via UMNO, MCA, or MIC was Provided for in 1965 (Straits Times, December 20, (1965).

[2] The Tengu's Origins and Charecter are described in Hary Miller. Prince and the Premier (London : Harrap, 1959).

கூட்டணிக்குள் மனத்தாங்கல்களும் கருத்துவேறுபாடு களும் கணிசமாக இருக்கின்றன. அதிலுள்ள ஐக்கிய மலாய தேசிய நிறுவனமும், மலாய சீனர்கள் கழகமும் தத்தம் வகுப்பு மக்களின் கவனத்தை ஈர்க்கச் செய்யும் முயற்சிகளால் கூட்டணி பாதிக்கப்படுகிறது. மலாய தேசிய நிறுவனத்தினுள் பிளவு அவ்வளவாக இல்லை. ஆனால், மலாய சீனர்கள் கழகத்தி லுள்ளவர்கள் தங்கள் கட்சி அமைப்பு சீனர்களின் சில நன்மைகளைப் புறக்கணித்து கூட்டணியோடு சேர்ந்துவிட்ட தென்று அவ்வப்போது குறைபட்டுக் கொள்வதோடு, குற்றஞ் சாட்டியும் வருகின்றனர். குறிப்பாக, மொழி, கல்வி ஆகிய வற்றில் சீனர்களின் நன்மைகள் புறக்கணிக்கப்பட்டுவிட்டன என்ற கருத்து பொதுவாக மேலோங்கியிருக்கிறது. எனவே, 1959லும் 1965லும் கூட்டணியில் பதட்ட நிலைமை ஏற்பட்ட தெனினும், அது கூட்டணியை முறித்துவிடவில்லை. இவ்விடத் தில் 1967ஆம் ஆண்டு வரையிலும் மலாய், ஆங்கிலமொழி களும், அதுமுதல் மலாய் மொழியும் அரசாங்க மொழியாக ஆக்கப்பட்டதை அறிதல் அவசியமாகும். எனினும், சீன மொழியும் தமிழ்மொழியும் வளர்வதற்கு அவசியமான உதவி களும், பாதுகாப்புகளும் அரசாங்கத்தினால் அளிக்கப்படு கின்றன.

கூட்டணிக் கட்சியைத் தவிர இதர பல கட்சிகளும் அந் நாட்டிலுள்ளனவென்றாலும். அவைகளின் செல்வாக்கு மிக மிகக் குறைவேயாகும். அத்தகையக் கட்சிகளுள் பொது வுடைமை முன்னணி (Socialist Front), ரயாத் கட்சி (Ra'ayat Party), தொழிற்கட்சி (Labour Party) ஆகியவைகளைக் குறிப் பாகச் சொல்லலாம். பொதுவுடைமைக் கட்சி கூட்டணிக் கட்சியைப்போல பல இனமக்களின் கட்சியாக அமைக்கப் பட்டு 1957 முதல் 1965 வரையிலும் இயங்கி வந்தது. ரயாத் கட்சி நாட்டுப்புறங்களில் மலாய் இனத்தவரால் ஆதரிக்கப் படுவதாகும். தொழிற்கட்சி நகர்ப்புறங்களிலுள்ள சீனர்களைக் கொண்டதாக இருக்கிறது.

மலாயாவில் மேற்குறிப்பிட்டவாறு பல கட்சிகள் இருந் தாலும் கூட்டணிக் கட்சிதான் 1955, 1959, 1964, 1968 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற தேசியப் பொதுத் தேர்தல்களில் தொடர்ந்து வெற்றிபெற்று அரசாங்கம் அமைத்து வருகிறது. இதற்கு முக்கியக்காரணம் பல எதிர்க்கட்சித் தலைவர்கள் நாச வேலைகளில் ஈடுபட்டார்கள் என்று குற்றஞ்சாட்டப்பட்டு சிறையிலடைக்கப்பட்டதெனச் சொல்லப்படுகிறது. அடுத்த

தாக அரசாங்கத்திற்குச் செய்தித்தாட்கள் அளித்துவரும் ஆதரவாகும். மலாயாவில் செய்தித்தாட்கள் அரசாங்க அனுமதியின் பேரில்தான் வெளியிடப்படலாம். அரசாங்கத்தை எதிர்க்கும் செய்தித்தாட்களுக்குத் தரப்பட்ட அனுமதி அரசாங்கத்தினால் எப்போது வேண்டுமானாலும் திரும்பப் பெற்றுக்கொள்ளப்படலாம். இவ்வாறு பேச்சுச் சுதந்திரமும் எழுத்துச் சுதந்திரமும் இல்லாததால் கூட்டணிக்கட்சி வெற்றி பெறும் நிலைமை இருப்பதாகக் குறை கூறப்படுகிறது.

இத்தகைய நிலைமை தொடர்ந்து நீடிக்குமானால் எதிர்க் கட்சிகள் நசித்துப்போகுமென்றும், அதனால் மக்களாட்சி முறை அரசாங்கம் குறைபாடுடையதாகிவிடும் என்றும் சிலர் பயந்தனர். அவர்களில், டாக்டர் லிம் சாங் யூ (Dr. Lim Chong Eu) என்பவர் குறிப்பிடத்தக்கவர். அவர் 1962ஆம் ஆண்டு துங்கு அப்துல் ரஹ்மானுக்குப் பின்வருமாறு விண்ணப்பித்துக் கொண்டார். "பாராளுமன்றமுறை ஜனநாயகத்திற்காகவாவது நாசவேலையில் ஈடுபட்டதாக, வகுப்புவாதத்தைத் தூண்டியதாக, இனவேற்றுமைகளை எடுத்துக்காட்டியதாக, கம்யூனிஸ்டுகளை சேர்த்துக்கொண்டதாக இதர கட்சிகளைத் தாக்குவதைவிடுத்து நல்ல எதிர்க் கட்சி ஏற்படுவதற்கு பெருந்தன்மையுடன் ஊக்கம் அளிக்கும் கொள்கையைப் பின்பற்றவேண்டும்."[1]

எனினும் கூட்டணிக்கட்சி மேற்கூறிய முறைகளைப் பின்பற்றி வெற்றிபெறுகிறதென்பது ஓரளவிற்குத்தான் உண்மையாகும். அதன் வெற்றிக்கான காரணங்கள் வேறு சிலவுமிருக்கின்றன. அவைகளில், நாட்டிற்குச் சுதந்திரம் வாங்கித்தந்ததால் அதற்குள்ள செல்வாக்கு; இரண்டாவதாக, அதன் தலைவராக இருந்த துங்கு அப்துல் ரஹ்மானின் ஆளுமைச்சிறப்பு; மூன்றாவதாக, மலாய்-சீனர் ஆகியோரிடையே காணப்படும் உறவுப் பராமரிப்பு; நான்காவதாக, அதனுடைய நாட்டுப்புற முன்னேற்றத்திட்டம்; கடைசியாக, எதிர்க்கட்சிகளிடையே ஒற்றுமையின்மை ஆகிய சில முக்கியமானவையாகும். இவையெல்லாவற்றையும்விட, மலேசியாவை நெருக்கிப் பணியவைத்து தன்னோடு சேர்த்துக் கொள்ளவேண்டுமென்னும் இந்தோனேசியாவின் முயற்சியை எதிர்த்த மக்களிடம் காணப்பட்ட தேசிய உணர்ச்சியின்

[1] Speech by Dr. Lim Chong Eu: Straits Times, May 1, 1962.

காரணமாக கூட்டணிக்குக் கிடைத்த மக்கள் ஆதரவு மிக முக்கியமானதென்பதைக் குறிப்பிடுதல் அவசியமாகும்.

இந்தியாவில் 1967ஆம் ஆண்டுக்கு முன்பு வரையிலும் ஒரு கட்சிமுறை இருந்ததைப்போல மலாயாவிலும் ஒரு கட்சி ஆதிக்கம் மேலோங்கியிருக்கிறதென்ருல் மிகையாகாது. ஆதிக்கஞ் செலுத்தும் கட்சியில் பல குழுக்கள் இருந்த போதிலும், கட்சிக்கு வெளியிலுள்ள சக்திகளால் குந்தகம் ஏற்படும் என்ற நிலைமை வரும்போதெல்லாம் அவைகள் தங்களுக்குள் ஒற்றுமையை ஏற்படுத்திக் கொள்வதால் அதன் பலம் குன்ருமல் காப்பாற்றப்பட்டு வருகிறது. இதர கட்சி களெல்லாம் ஆளுங்கட்சிக்குத் தகுந்த மாற்றுக் கட்சிகளாக இல்லை. அவைகளினுடைய பணி அடிக்கடி ஆளுங்கட்சியின் பணிகளில் குற்றங்காணுவதும், கடிந்துகொள்வதும், பொது மக்களின் விருப்பத்திற்கு மாருக நடந்து கொள்ளும்போது அதை ஆட்சியிலிருந்து அகற்றி மாற்றரசாங்கம் அமைப்போம் என்று பயமுறுத்துவதுமேயாகுமெனப்படுகிறது.

**செல்வாக்குக் குழுக்கள்** (Interest Groups)

சமீபகாலம் வரையிலும், குறிப்பிட்ட அல்லது தனிப்பட்ட நலங்களைப் பாதுகாக்கும் வகையில் குழுக்கள் அமைக்கப் படுவதும் அவை அதற்காகப் பாடுபடுவதும் மலாயாவில் ஏற்படாததொன்ருகும். ஏனெனில், மலாய்களைப் பொறுத்த வரை, தற்போது ஜனநாயக-அதிகாரவர்க்க அமைப்பிற்கு ஆதாரமாக அமைந்துள்ள மரபு சார்புடைய சமூக அமைப்பினுல் அந்நலன்கள் பெற்றுப் பாதுகாக்கப்பட்டு வந்தன. சீனர்கள் குழுக்கள், கழகங்கள், வணிக அமைப்புகள் மூலமாகத் தங்கள் நன்மைகளைப் பெற்று அனுபவித்தனர். ஆனுல், இக்காலத்தில் பழைய முறைகள் விரும்பிய பலன்களை விரைவாகப் பெறுவதற்குப் பயனற்றவைகளாகி விட்டதால் செல்வாக்குக் குழுக்கள் பல தோன்றியிருக் கின்றன.

மலாயாவில் இத்தகைய செல்வாக்குக் குழுக்கள் ஆங்காங்கு பல இன மக்களாலும் ஏற்படுத்தப்பட்டிருக்கும் தொழிற்சங்கங்களாகும். இவைகளும் அரசியல் கட்சிகளைப் போல வகுப்புவாத அடிப்படையையே கொண்டிருக் கின்றன. நகரங்களிலுள்ள தொழிலாளர்களில் மிகப் பெரும்பாலோர் சீனர்களும் இந்தியர்களுமாவார்கள்.

இந்தியர்கள் பல தொழிற்சங்கங்களை அமைத்துப் பல தலைவர்களைச் சார்ந்து செயல்படும்போது, சீனர்கள் தயக்கமுடையவர்களாகக் காணப்படுகிறார்கள். இதற்கு முக்கியக் காரணம் இரண்டாம் உலகப் பெரும் போருக்குப் பிறகு கம்யூனிச அனுதாபிகள் தொழிலாளர்களைப் பயன்படுத்திக் கொண்ட முறையாகும். தொழிற்சங்கங்களில் காணப்பட்ட கம்யூனிஸ்டுகளின் ஊடுருவலை அகற்றுவதற்கு அரசாங்கம் கடுமையான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டதன் விளைவாக அவர்களுடைய அமைப்புகள் மாற்றியமைக்கப்பட வேண்டியதாயிற்று.[1] இத்தருணத்தில் சில சீனத் தொழிலாளர்கள் கம்யூனிஸ்டுகளின் வற்புறுத்தல்களுக்கும் கெடுபிடிகளுக்கும் ஆளானார்கள். எனவே, கம்யூனிஸ்டு அல்லது கம்யூனிஸ்டு அல்லாத சங்கங்கள் எதுவாக இருந்தாலும் அரசாங்கம் அதற்கு எதிராக இருக்கிறதென்னுமெண்ணம் மற்றவர்களிடம் ஏற்பட்டது. 1961ஆம் ஆண்டிலும் கூட தொழிற்சங்க உறுப்பினர்களின் எண்ணிக்கையில் இந்தியர்கள் 50 விழுக்காட்டினராக இருந்தபோது சீனர்கள் 17 விழுக்காட்டினராகத்தான் இருந்தனர். சமீப ஆண்டுகளில் இச்சங்கங்கள் திருத்தியமைக்கப்பட்டிருக்கின்றன. 1962ஆம் ஆண்டில் தொழிற்சங்கங்களின் எண்ணிக்கை 300 ஆகவும், சந்தா செலுத்திய உறுப்பினர்களின் எண்ணிக்கை 2,60,000 ஆகவுமிருந்தது. பெரும்பாலான சங்கங்கள் மிகச் சிறியவைகளாக இருந்ததால் அவைகள் 'சுண்டைக்காய்ச்' சங்கங்கள் என்றழைக்கப்பட்டன. இவைகளில் மிகப் பெரிய சங்கம் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கமாகும் (National Union of Plantation Workers). சங்கங்களின் கூட்டுகளில் மிகப் பெரியதாக இருப்பது மலேசியத் தொழிற்சங்கக் காங்கிரஸ் (Malaysian Trade Union Congress) ஆகும். இக்கூட்டுச் சங்கத்தோடுதான் அரசாங்க, தனியார் சார்புடைய சங்கங்கள் பலவும் இணைந்திருக்கின்றன. பொது, சிவில் பணிகளிலுள்ள ஊழியர்களின் சங்கங்கள் காங்கிரஸ் (Congress of Unions of Employees) அரசாங்க சங்கங்களைத் தான் சேர்த்துக் கொள்கிறது.

இந்தச் சங்கங்கள் யாவும் இதுவரையிலும் அரசியல் சார்பற்றவைகளாகவே இருந்து வந்திருக்கின்றன. அதாவது

[1] S. S. Awberry and F. W. Dalley, Labour and Trade Union Organization in the Federation of Malaya and Singapore (Kuala Lumpur: Government Press, 1948).

இவைகள் எந்தவொரு அரசியல் கட்சியோடும் சேராமல் குறிப்பிட்ட எந்த அரசியல் கட்சியையும் ஆதரிக்காமல் இருந்திருக்கின்றன. எனினும், இச்சங்கங்களின் தலைவர்களில் பலர் பொதுவுடைமைக் கூட்டணி போன்ற கட்சிகளில் தீவிர பங்கெடுத்துக்கொண்டு வருகிறார்கள். மற்றொரு வகையில் பார்த்தால் இச்சங்கங்கள் அரசியல் தன்மையுடையவை என்றும் சொல்லலாம். ஏனெனில் இவைகள் அரசியல் வளர்ச்சியில் தங்களின் பங்கைத் தவறாது செய்து வருகின்றன. பல சந்தர்ப்பங்களில் இவைகளின் வேண்டுகோள்கள் ஆச்சரியப்படத்தக்கவாறு வெற்றி பெற்றிருக்கின்றன. சான்றாக, 1964ஆம் ஆண்டில் மலாயாவில் பணியாற்றிவரும், ஆனால், தடைசெய்யப்பட்ட அலுவலர்களின் (Expatriate Officials) ஊதியங்களை உயர்த்தும் அரசாங்கத்தின் பிரேரணைகளை அரசாங்கம் திரும்பப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்று இச்சங்கங்கள் கேட்டுக் கொண்டதன்பேரில் அவை திரும்பப் பெற்றுக்கொள்ளப் பட்டதைக் கூறலாம்.[1] தொழிலாளர்கள் சங்கங்களைப் போலவே, வேலைக்கு அமர்த்துபவர்களின் சங்கங்களும் இருக்கின்றன. அவைகளில், மலாய சுரங்கவேலைக்கு ஆள் அமர்த்துவோர் கழகமும் (Malayan Mining Employers' Association), மலாயா தோட்டத் தொழில்களுக்கு ஆள் அமர்த்துவோர் கழகமும் (Malayan Planting Industries Employers' Association) சக்திமிக்க நிறுவனங்களாகும்.

வர்த்தகக் கழகங்களும் முக்கியமான செல்வாக்குக் குழுக்களாகும். வகுப்படையிலான பல வர்த்தகக் கழகங்கள் ஒன்று சேர்ந்த பல நிறுவனங்களும் இருக்கின்றன. அவைகளில் சிறப்பானது ஐக்கிய வர்த்தகக் கழகம் (United Chamber of Commrece). வர்த்தகத்துறையில் பெருமளவில் ஈடுபட்டிருக்கும் சீனர்கள் அரசியலிலும் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்துகிறார்கள். சீனர்களின் வணிகக் கழகங்கள், மலாய சீனக் கழகத்தோடு நெருங்கிய தொடர்புடையவைகளாக இருக்கின்றன. இருப்பினும் ஒரு சில இராச்சியங்களில் மலாய சீனக்கழகம் சீன வர்த்தகக் கழகங்களோடு அதிகத் தொடர்பு வைத்துக்கொள்வதில்லை. அதற்கு, அவைகள் நிலப்பிரபுத்துவத் தன்மையையுடையவைகளாக இருப்பதால், அவைகளுடனான உறவு சாதாரண மக்களின் வாக்குகளைப்பெற உதவாதென்பதே காரணமாகும்.

---

[1] Straits Times, June 11, 1964.

முகமதிய நாடுகள் எவையாக இருந்தாலும், அங்கு சமயமும் அரசியலோடு தொடர்புடையதாக இருக்கிறதென்பதைப் பொதுவாக அறியலாம். இந்த அடிப்படையில் மலாயாவில் தேசிய நிலையில் சமயம் பெரிய விளைவுகளை ஏற்படுத்தவல்லதாக இல்லையெனினும், மலாயக் கட்சியெதுவும் முகமதிய மதத்தை ஆதரிக்காதிருக்க முடியாது. எனினும், வடகிழக்கு இராச்சியங்களான கெலாண்டன், டிரெங்கானுவிலும் மதத்தலைவர்களின் ஆதரவுடன் ஐக்கிய மலாய முகமதியக்கட்சி பொதுமக்கள் ஆதரவைப் பெறுவது சற்று எளிதாக இருக்கிறது.

மேற்சொல்லப்பட்ட செல்வாக்குக் குழுக்களோடு சில குடியானவர்கள் நிறுவனங்களும், இளைஞர்கள் கழகங்களுமிருக்கின்றன.

# மேலும் படிக்க வேண்டிய நூல்கள்


S. S. Awberry and F. W. Dalley : Labour and Trade Union Organization in the Federation of Malaya and Singapore

J. M. Gullick : Indigenous Political Systems of Western Malaya

Hary Miller : Prince and the Premier

R. S. Milne : Government and Politics in Malaysia

# கலைச்சொற்கள்

A

Asbolutism — முழுமைவாதம், சர்வாதிகாரத்துவம்
Ad-hoc — தற்காலிக
Administration — ஆட்சித்துறை
Administrative — ஆட்சித்துறை சம்பந்தப் பட்ட
Amnesty — பொது மன்னிப்பு
Appropriation — பணப் பங்கீடு
Army, Liberation — விடுதலைப்படை
Assembly, Constituent — அரசியல் நிர்ணய சபை
Attorney — வழக்குரைஞர்
Auditor-General — கணக்காய்வுத் துறை தலைவர்
Autonomy — தன்னாட்சி, சுயஆட்சி
Axis-Powers — எதிர்க்கூட்டணி நாடுகள்

B

Barbarian — மிலேச்சர், நாகரிகமற்றவர்
Bargain, Political — அரசியல் பேரம்
Baron — நிலப்பிரபு
Barrio — சிற்றூர்
Behaviour, Political — அரசியல் நடத்தை
Behaviour, Social — சமூக நடத்தை
Bridge, Marcopolo — மார்க்கோபோலோ பாலம்
Briton — பிரிட்டானியர்
Buddhism — பௌத்தமதம்
Bureau — கழகம்
Bureau of Legislation — சட்டக்கழகம்

## C

Cabinet, Inner — உள்ளமைச்சரவை
Cadre — குழு
Calender — நாட்காட்டி
Candidate — வேட்பாளர்
Capitalist — முதலாளி
Catholicism — கத்தோலிக்கமதச் சார்புடைய, பழந்தன்மையுடைய
Character — பண்பு, தன்மை
Church — திருச்சபை
Class, Low — கடை வகுப்பு
Class, Middle — நடுத்தர வகுப்பு
Class, Privilege — வகுப்புரிமை
Class, Upper — மேல் வகுப்பு
Coalition — கூட்டு
Commissioner — ஆணையாளர்
Commission, Control — கட்டுப்பாட்டுக்கழகம்
Commissioner, High — உயர் ஆணையாளர்
Commission, Election — தேர்தல் கழகம்
Commission, Finance — நிதிக்கழகம்
ommission, Public — பணியாளர் தேர்வுக்கழகம்
mmitte Blue ribbon — நீலநாடாக் குழு
mmitte, Drafting — வரைவுக் குழு
mmitte, Steering — செலுத்தும்குழு, செலுத்துக் குழு
mpaign, Political — அரசியல் பிரச்சாரம்
nciliation — சமரசம்
nstitutional — அரசியல் சட்ட சம்பந்தமான
nstitution, Party — கட்சி அமைப்புச் சட்டம்
nsultative System — ஆலோசனைக் கலப்புமுறை
nvertion, Constitutional — அரசியலமைப்பு மாநாடு
-Ordination — கூட்டிணைப்பு, ஒருங்கிணைப்பு
llobaration — உடந்தையாயிருத்தல்
ouncil, Local — வட்டாரக் கழகம்
ouncil of Ministers — அமைச்சர்கள் குழு
Council of State — அரசுக்கழகம்
Council, State — அரசுக்கழகம்
Council, Zonal — பிராந்திய மன்றம்

Court, First Instance — முதல்நிலை நீதிமன்றம்
Crown — முடி
Culture — பண்பாடு
Cycle — தொடர்ந்த, தொடர்

D

Datus — தாதுக்கள்
Decentralization — அதிகாரப் பகுப்பு
Democratic-centralism — குடியாட்சிக் குவிப்பு கொள்கை
Dictatorship, proletariat — உழைப்பாளர்வர்க்க யதேச்சாதிகாரம்
Diet — டயட், சட்டமன்றம்
Directive Principles — வழிகாட்டி நெறிகள், நெறி செய் நியதிகள்
Discretion — உசிதம்
Draft — நகல், தயார் நிலையில் உள்ள
Dynasty — அரச பரம்பரை

E

Elder Statesman — அரசியல் மூதறிஞர்
Emperor — பேரரசர்
Empire — பேரரசு
Executive — நிர்வாகி, நிர்வாகத்துறை
Ex-Officio — பதவி காரணமான

F

Face-to-Face — நேருக்கு நேர்
Feautre — அம்சம்
Flag, Red — செங்கொடி
Far East — தூரக்கிழக்கு

G

Gazette — அரசிதழ்
Government, Local — வட்டார அரசாங்கம்

H

Home Rule — சுயஆட்சி, தன்னாட்சி

I

Immigration — குடியிறக்கம்
Imperial Diet — பேரரசுச் சட்டமன்றம்
Initiative — மக்கள் துவக்கம்
Intensive farming — தீவிரச் சாகுபடி
Item — இனம்

J

Jurisprudence — நீதி இயல்

K

Kingdom, Middle — நடு அரசு

L

Land Lordism — நிலப்பிரபுத்துவம்
Level — மட்டம், நிலை
Liberal — லிபரல், மிதவாதம்

M

Magna Carta — பெருஞ்சாசனம்
Maoism — மோவின் தத்துவம்
March, Long — நீண்ட பயணம்
Meiji — மெய்ஜி அரசவம்சம்
Ministry — மந்திராலயம், அமைச்சரகம்
Minister of State — அரசு, அமைச்சர்
Moral Power — தார்மீக அதிகாரம், தார்மீக சக்தி
Movement, May — மே இயக்கம்

N

Nations, Emerging — வளரும் நாடுகள்
National, State — தேசிய அரசு

O

Occupation — அடைப்பு, ஆக்கிரமிப்பு
Ordinance — அவசரச்சட்டம்
Organ — அங்கம், உறுப்பு
Organic Law — அமைப்புச்சட்டம்

## P

Parliamentary System — பாராளுமன்ற அரசாங்க முறை
Participation, Political — அரசியல் ஈடுபாடு
Party, Federa — கூட்டாட்சிக் கட்சி
Peer — பிரபு
Pioneer, Young — இளம் முன்னோடிகள்
Police — காவல்துறையினர், காவலர்
Police Man — காவலர்
Polit Buro — போலிட்பீரோ
Political System — அரசியல்முறை
Power, Bargaining — பேரச்சக்தி
Power, Discretionary — உசித அதிகாரம்
Power, Division of — அதிகாரப் பங்கீடு
Preamble — முகவுரை
President, Protempore — தற்காலிகத் தலைவர்
problem — பிரச்சினை
Procedure — பின்பற்றவேண்டிய முறை
Procurator — வழக்குப் பதிவாளர்
Proletariat — உழைப்பாளர் வர்க்கம்
Public — பொது, அரசாங்க சம்பந்த முடைய
Public Works Department — பொதுப் பணித்துறை

## R

Rebellion Taiping — தைப்பிங் கலகம்
Recall — திரும்ப அழை
Religion — சமயம்
Renunciation — புறக்கணித்தல், துறத்தல்
Report, Political — அரசியலறிக்கை
Rescript — குறிப்பு
Restoration — மீட்சி
Revolution, Cultural — பண்பாட்டுப்புரட்சி
Revolution, Republic — குடியரசுப் புரட்சி
Rights Fundamental — ஆதார உரிமைகள், அடிப்படை உரிமைகள்
Rule Making — விதி செய்யும்

## S

Secretariat — செயலகம்

| | |
|---|---|
| Session | — தொடர், கூட்டத்தொடர் |
| Settlement, Straits | — நீரிப்பாங்குப் பிரதேசங்கள் |
| Shintoyism | — ஷிண்டோயிஸம் |
| Society, Traditional | — மரபுவழிச்சமூகம் |
| Soviet | — தொழிலாளர் குழு |
| State Power | — அரசு அதிகாரம் |
| Sub-Ordinate | — கீழ்மட்டம் |
| Supreme | — மேலான, உச்சம் |
| Symbol | — சின்னம் |
| System, Governmental | — அரசாங்கமுறை |
| System, Political | — அரசியல் முறை |

T

| | |
|---|---|
| Thought | — சிந்தனை |
| Tradition | — மரபு |
| Tribunal | — நீதிமன்றம் |
| Tribute | — கப்பம் |

U

| | |
|---|---|
| United States of America | — அமெரிக்கா, அமெரிக்க ஐக்கியநாடுகள் |
| Unity, Political | — அரசியல் ஒற்றுமை |
| Uprising | — கிளர்ச்சி, எழுச்சி |

V

| | |
|---|---|
| Veto | — தடுப்பாணை, மறுப்பாணை |

W

| | |
|---|---|
| War-Lordism | — போர் பிரப்புத்துவம் |
| War, Opium | — அபின் சண்டை |
| Ways and Means | — வழிவகைகள் |
| Westernization | — மேற்கத்தியமயம் |
| Work, Report | — செயலறிக்கை |